# முருக இலக்கிய ஆய்வுக்கோவை

## தொகுதி – II

பதிப்பாசிரியர்கள்

முனைவர் மோ. கோ. கோவைமணி

பெரும்புலவர் ப. வெ. நாகராஜன்





தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர்

# முருக இலக்கிய ஆய்வுக்கோவை

## தொகுதி 2

பதிப்பாசிரியர்கள்
முனைவர் மோ.கோ. கோவைமணி
பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்



தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 010.

மே 2018

(தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும் சிரவையாதீனத் தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து நடத்திய அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கக் கட்டுரைகள்)

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு எண்: 442
திருவள்ளுவராண்டு 2049, சித்திரை - மே 2018.

நூல் : முருக இலக்கிய ஆய்வுக்கோவை - தொகுதி 2

பதிப்பாசிரியர்கள்: முனைவர் மோ.கோ. கோவைமணி
பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்

ISBN : 978-81-936876-4-2

மொழி : தமிழ்

பொருள் : இலக்கியம்

பதிப்பு : முதற்பதிப்பு மே 2018

பக்கம் : xx+564=584

தாள் : டி.என்.பி.எல். 18.6

அளவு : 1/8 டெம்மி

நூல் கட்டுமானம்: சாதாரண கட்டுமானம்

படிகள் : 450

விலை : ரூ.500/-

கணினியச்சு : பாமொழி கணிப்பொறி வடிவமைப்பகம்
1421, பாரதி நகர்,
தமிழ்ப் பல்கலைக்கழக அஞ்சல்
தஞ்சாவூர் - 613 010.
அலைபேசி : 8903447547

அச்சு : திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ், தஞ்சாவூர்.
அலைபேசி : 9892491204

வெளியீடு : தமிழ்ப் பல்கலைக்கழக மறுதோன்றி அச்சகம்,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.





முனைவர் க. பாஸ்கரன்
துணைவேந்தர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

## அணிந்துரை

சங்க கால மக்கள் நிலங்களைப் பிரித்து ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு தெய்வம் என்று நெறிப்படுத்தி வைத்திருந்தனர். தொல்காப்பியர் இதனை,

*மாயோன் மேய காடுரை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தலெனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே*

என்கின்றார். இந்த நிலப்பரப்பு முறையில் மைவரை உலகம் என்பது மலையையும் மலையைச் சார்ந்த இடத்தையும் குறிக்கும். இந்தக் குறிஞ்சி நில மக்கள் கொண்டாடிய தெய்வமே முருகன்.

உலகில் மதங்கள் எவ்வளவோ இருந்தாலும் இந்தியாவில் இந்து மதம் தழைத்தோங்கியது. இந்த இந்து மதம் ஆறு பிரிவுகளைக் கொண்டது. இவ்வகையில் சிவனை வணங்குபவர்கள் சைவர்கள் எனவும், விஷ்ணுவை வணங்குபவர்கள் வைணவர்கள் எனவும், சூரியனை வணங்குபவர்கள் சௌரர் எனவும், சக்தியை வணங்குபவர்கள் சாக்தர்கள் எனவும், கணபதியை வணங்குபவர்கள் காணாபத்தியர்கள் எனவும், முருகனை வணங்குபவர்கள் கௌமாரர்கள் எனவும் அழைக்கப்பட்டனர்.

குறிஞ்சி நிலத்தில் வாழும் மக்கள் தங்களைக் கொடும் விலங்குகளிடமிருந்தும் இயற்கையின் சீற்றங்களிலிருந்தும் தங்களைக் காக்க வல்லவன் வேலனே என்ற உணர்வில் முருகனைக் காவல் தெய்வமாகவே வழிபட்டு, அவன் கையில் கொண்டிருந்த வேலையும் போற்றி வழிபடலாயினர். எனவே, மலைகளில் வேல்களை நட்டும், மலர் சூட்டி வழிபட்டு வேட்டை ஆடுவதற்கும் அந்த வடிவேலையே பயன்படுத்தி வந்துள்ளனர். இதன்வழி தமிழர்களின் போர் ஆயுதங்களில் வேல் ஓர் சிறப்புமிக்க இடத்தைப் பெற்றுள்ளது.

*தாமரை புரையும் காமர் சேவடி*
*பவளத் தன்ன மேனி திகழொளி*
*குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்*
*தெரிந்த பகஎறிந்த அந்தசுடர் நெடுவேல்*
*சேவலன் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகே*

என்று குறுந்தொகையில் குறிப்பிட்டுள்ளதால் அறியலாம்.

அடியார்கள் தூய்மையான மனத்துடன் ஒருமுறை முருகா என்று நினைக்கினும் அவ்வடியாரது துன்பமாகிய இருமுறை விரைவில் நீங்கும் விரிசுடர் ஞானபானுவாக முருகப் பெருமான் விளங்குகின்றான். முருகனின் பெயரை அன்புடன் ஓதுகின்ற அடியார்களுக்கு அஞ்சுந்தன்மை உண்டான காலத்திலே அப்பெருமானுடைய ஆறுதலையளிக்கும் ஆறுமுகந் தோன்றும், பகைவர்களாலே கடும்போர் தோன்றினால் உடனே அவனது பண்ணவர் பயங்கெடுத்த படைக்கல நாயகமாகிய வேலாயுதந் தோன்றும், அக்குமர நாயகனை மனத்தில் ஒருமுறை நினைத்தவுடன் அப்பரம பிதாவினது அரவிந்தத் தாள்களிரண்டுந் தோன்றும். இதனை நக்கீரர்,

*அஞ்சு முகந்தோன்றில் ஆறு முகந்தோன்றும்*
*வெஞ்ச மரந்தோன்றில் வேல்தோன்றும் - நெஞ்சில்*
*ஒருகால் நினைக்கில் இருகாலுந் தோன்றும்*
*முருகா வென்றோதுவார் முன்*

என்கின்றார். இவ்வாறான முருகப் பெருமானுக்குச் சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, அமெரிக்கா, கனடா, ஸ்விட்சர்லாந்து, இங்கிலாந்து, டென்மார்க், ஸ்வீடன், ஸ்பெயின், ரஷ்யா, சூரிநாம், பிரான்சு, ஹாலந்து, பெல்ஜியம், ஆஸ்திரேலியா, ஜெர்மனி, தாய்லாந்து, வியட்நாம், நேபாளம், பர்மா, ஜப்பான், இந்தோனேசியா, மஸ்கட், கம்போடியா, ஜாம்பியா, தென்னாப்பிரிக்கா, மொரிஷியஸ், போட்ஸ்வானா, கென்யா போன்ற அயலகங்களில் அவனுக்கான கோயில்கள் தோன்றி வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன் தோன்றிய இலக்கியங்கள் முதல் நடைமுறைக் கால இலக்கியங்கள், பழக்கவழக்கங்கள், வழிபாட்டு முறைகள் ஆகியவற்றில் முருகன் புகழ் பலவாறாகப் பேசப்படுகிறது. இவற்றை ஒருங்கே ஆவணப்படுத்த வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு இத்தகைய மாநாடுகளும் கருத்தரங்களும் நிகழ்த்தப்படுகின்றன. இந்நிலையில் தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும் கோவை சிரவணபுரம் கௌமார மடாலய தவத்திரு கஜபூசைச் சுந்தரசுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கை 04, 05, 06.05.2018 ஆகிய

மூன்று நாள்களில் கோவையில் நடத்துகின்றனர். இதில் பல்வேறு நாட்டுத் தமிழறிஞர்களும், தமிழகத் தமிழறிஞர்களும், பேராசிரியர்களும், ஆய்வு மாணாக்கர்களும் வழங்கும் இருநூற்று நாற்பத்திரண்டு ஆய்வுரைகளைத் தொகுத்து முருக இலக்கிய ஆய்வுக் கோவை என்ற தலைப்பில் வெளிவந்துள்ள இரண்டு தொகுதிகளும் ஆய்வாளர்களுக்கு முருகனைப் பற்றித் தெரிந்து கொள்ள சிறந்ததொரு ஆவணமாகத் திகழும் என்று உறுதியாக நம்புகிறேன். இந்த இரண்டாம் தொகுதியில் 121 ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன.

இம்மாநாட்டுக் கருத்தரங்கை கோவைக் கௌமார மடாலய வளாகத்தில் மிகச் சிறப்பாக நடத்துவதற்கு உதவிகள் பல நல்கிய சிரவையாதீன முதல்வர் **தவத்திரு குமரகுருபர சுவாமிகள்** அவர்களுக்கு மனமுவந்து நன்றியறிதலைத் தெரிவிப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

கருத்தரங்க நிகழ்வுகளை நன்கு திட்டமிட்டு உருவாக்கி ஆய்வுக் கட்டுரைகளைச் சிறப்பாகப் பதிப்பித்து அளித்துள்ள ஓலைச்சுவடித்துறைத் தலைவர் **முனைவர் மோ.கோ. கோவைமணி** அவர்கள் நம் அனைவரின் பாராட்டுக்குரியவர் ஆவார். இவ்வரிய பணிகளில் உடனிருந்து உதவிகள் நல்கியுள்ள **பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்** அவர்களுக்கும், பல்கலைக்கழகப் பணியாளர்களுக்கும், மடாலய அன்பர்களுக்கும் என்னுடைய பாராட்டுதல்களையும் வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

20.04.2018

20/4/18

**(முனைவர் க. பாஸ்கரன்)**
துணைவேந்தர்





முனைவர் தவத்திரு
குமரகுருபர சுவாமிகள்
சிரவையாதீனம்
கௌமார மடாலயம்
கோவை - 641 049.

## ஆசியுரை

*திருவிளங்கு முகமதியும் கருணைபொழி விழியும்*
*செங்குமுத மலர்முறுவல் சிறந்தகனி வாயும்*
*மருவிளங்கும் கடப்பமலர்த் தொடைப்புயமும் அபய*
*வரதம்அயிற் படைசூலம் வச்சிரம்சேர் கரமும்*
*உருவிளங்கும் துவர்வடிவம் கமலபதத் துணையும்*
*ஒளிர்தரஅன் னைவர்நாப்பண் ஓங்கும் மயில்பரிமேல்*
*குருவிளங்கும் காட்சிநல்காய் சிரவணமா புரத்தில்*
*குஞ்சரிவள் ளிக்கொடிதோய் குமரகுரு பரனே*

எனத் தமிழர்தம் தனிப்பெருங் கடவுளான முருகப் பெருமானின் வடிவழகையும், கருணையையும் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் குமரகுருபரக் கடவுள் தோத்திரப் பதிகத்தில் பாடியுள்ளார்.

"மும்மணிக் கோவைபல மாலைபல அந்தாதி மூவகைப்பல, இன்னவா முதுநெறிப் பனுவல்பல, புதுநெறிப் பனுவல்பல முத்தமிழ் சுவை வழாமல்" வழங்கியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் ஆவார்.

சுவாமிகளை ஞானகுருவாக ஏற்றுக்கொண்டு கோவையில் கௌமார மடாலயத்தைத் தோற்றுவித்தவர் தவக்கடல், தவத்திரு இராமானந்த சுவாமிகள்.

கொலைபுலை தவிர்த்து கௌமார நெறியைப் பரப்பியவர் தவத்திரு இராமானந்த சுவாமிகள். அதில் சதுர்வேத சித்தாந்த சண்மத சமயாதீத அத்துவித கௌமார சபையைத் தோற்றுவித்தர்.

*"சேயைச் சந்ததம் சிந்தனை செய்பவர்*
*வாயை மீறியும் வண்டமிழ் வருமே"*

என்பதற்கேற்பக் கவிக்கடல் கொங்கு நாட்டுக் கச்சியப்பர் எனப் போற்றப்படும் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் இரண்டாம் சந்நிதானங்களாக அருளாட்சி நடத்தியவர்.

முருகப் பெருமானிடம் முறையிடுவோருக்குத் "திருஅளிக்கும்; பெரும் கல்வியும் நல்கிடும்". அதுமட்டுமல்லாமல் "தொண்டர் எண்ணிய யாவும் உடன் அளிக்கும்" என மருதமலை அலங்காரத்தில் முருகனின் கருணையைக் குறிப்பிடுவார்.

உலகப் பெருவேள்வி கண்ட நாயகர் தவத்திரு. கஜபூசைச் சுந்தர சுவாமிகள் ஆவார்.

"வேண்டுநர் வேண்டியாங்கு எய்தருளும் வள்ளல்" எனத் திருமுருகாற்றுப்படையிலும், முன்னியது முடிக்கும் முருகனின் திருவருள்" எனப் பரிபாடல் கூறுகதைப்போல் நம் சுவாமிகள் "எண்ணம் முற்றவும், நிறைவெய்திடப் புரிவான்" எனவும், "எண்ணிய எண்ணியாங்கு செய்திடப் புரிவான்" எனவும் தண்டபாணிக் கடவுள் திருப்பள்ளியெழுச்சியில் கூறுவதைப்போல சந்நிதானங்களை நினைத்துச் செயலைத் தொடங்கும் பொழுது எடுத்துக்கொண்ட செயல் இனிதே நிறைவடையும்.

குருவருளால் சிரவையாதீனமும் தஞ்சை தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் ஓலைச்சுவடித்துறையும் இணைந்து இதுவரை மூன்று கருத்தரங்குகளை நடத்தியுள்ளோம்.

1998 சூன் திங்களில் தண்டபாணி சுவாமிகள் ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் 171 ஆய்வாளர்கள் தங்கள் ஆய்வுக் கட்டுரைகளை வழங்கினார்கள். அவை இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டன.

2007 திசம்பர் திங்களில் முருகன் இலக்கிய ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. 170 ஆய்வுக் கட்டுரைகள் இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டன.

2013இல் திருக்குறள் ஆய்வுக் கருத்தரங்கம் நடைபெற்றது. அதில் 144 ஆய்வுக் கட்டுரைகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிடப்பட்டது. அடுத்ததாக தற்போது 4,5,6.5.2018இல் நான்காவதாக அனைத்துலக முருக இலக்கியக் கருத்தரங்கம் நடைபெறவுள்ளது. 242 ஆய்வுக் கட்டுரைகள் இரு தொகுதிகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகளாக வெளியிடப்பட்டுள்ளன.

இவை தவிர 1999இல் தவத்திரு கந்தசாமி சுவாமிகள் நினைவுப் பொன்விழாக் கருத்தரங்கமும், 2003இல் தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் 75ஆவது அவதார விழாக் கருத்தரங்கமும் நடைபெற்றது.

2001இல் சுவடியியல் பயிலரங்கம் ஒன்று நடத்தப்பட்டது. பல்வேறு கல்லூரிகளில் இருந்து ஆசிரியப் பெருமக்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட்டது. 2007ஆம் ஆண்டு தேசியச் சுவடிகள் பாதுகாப்பு இயக்ககம், தஞ்சாவூர் சரசுவதிமகால் நூலகம் ஆகியவற்றுடன் இணைந்து சுவடியியல் பயிலரங்கம் நடத்தப்பட்டது.

தமிழக வரலாற்றில் தமிழ்ப் பல்கலைக்கழகத்துடன் ஆதீனம் இணைந்து முதல் முதலில் கருத்தரங்கம் நடத்திய பெருமை சிரவையாதீனத்திற்கு உண்டு என்பதில் மகிழ்வடைகிறோம்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் க. பாஸ்கரன் அவர்கள் இக்கருத்தரங்கம் செம்மையாக நடைபெறுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

அனைத்துலக முருக இலக்கிய மாநாட்டில் கலந்துகொண்டு ஆய்வுக் கட்டுரைகளை வழங்கிய ஆய்வாளர்களுக்கும், இந்த நற்பணியில் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு சிறப்பாகப் பணியாற்றிய கருத்தரங்கக் குழுவினர் அனைவரையும் பாராட்டுவதோடு அவர்கள் அனைவரும் வாழ்வில் எல்லா நலன்களும் நிறைவாகப்பெற்று நீடு இனிது வாழ எல்லாம் வல்ல முருகப்பெருமானின் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறோம்.

20.04.2018

தவ. குமரகுருபர சுவாமிகள்
ஆதீன முதல்வர்

முனைவர் **க. இரவீந்திரன்** பதிப்புத்துறை
இயக்குநர் தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010.

# பதிப்புரை

தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை அரிய நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகிறது. இதுவரை 500க்கும் மேற்பட்ட நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. தமிழ்மொழி, இலக்கியம், இலக்கணம், சுவடிப் பதிப்புகள், கலைகள், அறிவியல், தொழில்நுட்பம், மொழிபெயர்ப்புகள், அகராதிகள், களஞ்சியங்கள், சுவடி விளக்க அட்டவணைகள் எனத் துறை சார்ந்த இந்நூல்கள் அனைத்தும் அரிய கருவூலங்களாகத் திகழ்கின்றன. இவ்வகையில் தற்போது முருக இலக்கிய ஆய்வுக்கோவை - தொகுதி 2 எனும் இவ்வரிய நூல் உங்கள் கைகளில் தவழ்கிறது. தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையும், கோவை கௌமார மடாலய தவத்திரு கஜபூசைச் சுந்தர சுவாமிகள் தமிழாய்வு மையமும் இணைந்து நடத்திய அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கில் படிக்கப்பட்ட தமிழ்க் கடவுளாம் முருகனைப் பன்முக நோக்கில் ஆராய்ந்து எழுதப்பட்ட 121 ஆய்வுக் கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.

இந்நூல் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வருதல் வேண்டும் என அறிவுறுத்தியதோடு நூல் சிறந்த முறையில் வெளிவருவதற்கு அனைத்து ஒத்துழைப்பையும் நல்கி ஆற்றுப்படுத்தி உதவிய தமிழ்ப் பல்கலைக்கழக மாண்பமை துணைவேந்தர் **முனைவர் க. பாஸ்கரன்** அவர்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். இப்பணிக்கு ஆக்கமளித்த பதிவாளர் **முனைவர் ச. முத்துக்குமார்** அவர்களுக்கும், அனைத்துலகக் கருத்தரங்கினை நடத்தித் முருகனுக்கு மேலும் பெருமை சேர்த்துள்ள கோவை கௌமார மடாலயத் தலைவர் **தவத்திரு முனைவர் குமரகுருபர சுவாமிகள்** அவர்களுக்கும், கட்டுரைகளைப் பெற்று, வல்லுநர்கள் வாயிலாக நுண்ணாய்வு செய்து, வடிவமைத்து, நூல் உருவில் அளித்த பதிப்பாசிரியர்கள் **முனைவர் மோ.கோ. கோவைமணி** மற்றும் **பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்** ஆகியோர்களுக்கும், அச்சுக்கோப்புப் பணியை முடித்தளித்த தஞ்சாவூர் பாமொழி கணிப்பொறி வடிவமைப்பகத்தினர் மற்றும் நூலினை நன்முறையில் குறுகிய காலத்தில் அச்சிட்டளித்த தஞ்சாவூர் திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனத்தார் ஆகியோர்க்கும் என் நன்றி உரியதாகும்.

முருகனைப் பற்பல கோணங்களில் ஆய்ந்துரைக்கும் இந்நூல் தமிழ் ஆய்விற்கும் முருகனின் சிறப்பை மேலும் நன்கறிந்து கொள்ளுவதற்கும் பெரிதும் உதவும். தமிழுலகம் இதனை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் என நம்புகிறேன்.

# பதிப்பாசிரியருரை

முருகன் தமிழரின் தனிப்பெரும் கடவுள், கொற்றவையும் கொற்றவை சேயான முருகனும் தமிழர் பண்பாட்டு வாழ்வியலில் நீங்கா இடம்பெற்றவர்கள். தமிழில் முருகன் பற்றிய இலக்கியங்கள் ஏராளமாக உள்ளன. அவை அனைத்தும் பன்முக ஆய்வுகளுக்குக் களமாக அமைவன.

தமிழகத்திலுள்ள சமய மடங்களில் சிரவை ஆதீனம் மட்டுமே கௌமாரத்தை - முருக வழிபாட்டை - முழுமுதற் பொருளாகக் கொண்டு துலங்குகிறது. இங்கே அறு சமயங்களுக்கும் திருக்கோயில்கள் உள்ளன. இம்மடாலயத்தின் தலைவர்கள் தமிழும், சமயமும், திருக்கோயில்களும் செழித்து வளர அயராது அரும்பாடுபட்டு வருகிறார்கள்.

சிரவை ஆதீன ஆதி குருமுதல்வர் தவத்திரு இராமானந்த அடிகளார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வகுத்த கௌமார இலக்கணத்திற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர்; தமிழறிவு மிக்கவர். இவ்வாதீனத்தின் இரண்டாவது குரு முதல்வராக விளங்கியவர் தவத்திரு கந்தசாமி சுவாமிகள். தமிழ்ப் பெருங்கவிஞராக விளங்கியவர் இவர். இவருடைய தலைமாணாக்கர் தவத்திரு சுந்தர சுவாமிகள் மூன்றாவது குரு முதல்வராகப் பெரும்புகழோடு விளங்கியவர். மிகச் சிறப்பான உலகப்பெரு வேள்வியாகிய 108 கஜபூசையைச் சிரவைக் கௌமார மடாலயத்தில் செய்ததால் கஜபூசைச் சுந்தர சுவாமிகள் என அன்பர்களால் கொண்டாடப் பெற்றவர். சிறந்த இலக்கியச் சொற்பொழிவாளராகவும் கவிஞராகவும் திகழ்ந்தவர். தமிழ்ப் பல்கலைக்கழக ஓலைச்சுவடித்துறையுடன் நெருங்கிய அன்பு கொண்டவர்.

இவர்கள் காட்டிய அருள்நெறியில் இப்பொழுது இந்த ஆதீனத்தின் நான்காவது குரு முதல்வராகத் திகழ்பவர் முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள். திருமுருகனின் திருநாமம் கொண்ட இவர் தலைசிறந்த தமிழ்ப் பற்றாளர். தஞ்சாவூர்த் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் 1997ஆம் ஆண்டு நடைபெற்ற ஆறாவது உலகச் சைவ மாநாட்டிற்கு இவர்கள் வருகை புரிந்த பொழுது ஓலைச்சுவடித்துறைக்கும் வருகை தந்து சிறப்பித்தார்கள். அதன் தொடர்ச்சியாக இதுவரை மூன்று மாநாடுகள் நடத்தப்பெற்றுள்ளன.

முதலாவதாக, வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இலக்கிய ஆய்வு மாநாடு மற்றும் கருத்தரங்கினை 19,20,21.06.1998 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 171 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய தண்டபாணி சுவாமிகள் ஆய்வுமாலை இரண்டு தொகுதிகள் தண்டபாணி சுவாமிகளின் நினைவு நூற்றாண்டு விழா வெளியீடாக வெளியிடப்பெற்றன. இரண்டாவதாக, தமிழ்க்

கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு மாநாடு மற்றும் கருத்தரங்கினை 27,28,29.12.2007 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 170 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய முருகன் இலக்கிய ஆய்வுமாலை இரண்டு தொகுதிகள் தமிழ்க் கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு மாநாட்டு வெளியீடாக வெளியிடப்பெற்றன. மூன்றாவதாக, திருக்குறள் பதிப்பின் 200ஆம் ஆண்டு ஆய்வுத் தேசியக் கருத்தரங்கை 26,27,28.04.2013 ஆகிய மூன்று நாள்கள் நிகழ்த்தி 144 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய திருக்குறள் ஆய்வுமாலை தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக (வெளியீட்டு எண்:392) வெளியிடப்பெற்றன.

தற்போது அனைத்துலக முருக இலக்கிய மாநாடு மற்றும் கருத்தரங்கை 04,05,06.05.2018 ஆகிய மூன்று நாள்கள் நடத்திட சிரவையாதீனக் குருமுதல்வர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் பேருதவி அருளியிருக்கிறார்கள். இம்மாநாட்டில் 242 ஆய்வுக் கட்டுரைகள் அடங்கிய முருக இலக்கிய ஆய்வுக்கோவை இரண்டு தொகுதிகள் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடாக வெளியிடப்பெறுகின்றன (வெளியீட்டு எண்:441 மற்றும் 442). இரண்டாம் தொகுதியான இந்நூலில் 121 ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றிருக்கின்றன. நூற்றுக்கணக்கான பேராளர்களும், பார்வையாளர்களும் கலந்து கொள்ளும் இம்மாநாட்டுக் கருத்தரங்கை அனைத்து நிலைகளிலும் போற்றத்தக்கதாகும்.

தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் மட்டுமே உள்ள சிறப்பான புலங்களுள் ஒன்று சுவடிப்புலம். இதில் அடிப்படையாக உள்ளது ஓலைச்சுவடித்துறை. பழந்தமிலுள்ள இலக்கியங்களைப் பாதுகாத்தும் பதிப்பித்தும் வெளியிடுவது இத்துறையின் தலையாய நோக்கமாகும். வெளிவராத நூல்களையும் ஆவணங்களையும் தேடித் தொகுப்பதும் இத்துறையின் பணியாகவுள்ளது. இவ்வகையில் பல்துறை சார்ந்த மாநாடுகளையும் கருத்தரங்குகளையும் இத்துறை தொடர்ந்து நடத்தி வருகிறது. தமிழ்க் கடவுள் முருகன் தொடர்பான இலக்கியங்களைத் தொகுத்து ஆய்வது என்பது ஒரு பெரும் பணியாகும். அதன் தொடக்க நிகழ்வாக இம்மாநாட்டுக் கருத்தரங்கு அமைந்துள்ளது.

சங்க இலக்கியங்களில் முருகன், காப்பியங்களில் முருகன், பன்னிரு திருமுறைகளில் முருகன், வைணவ இலக்கியங்களில் முருகன், முருகனைப் போற்றும் சிற்றிலக்கியங்கள், புராணங்களில் முருகன், முருகன் தலபுராணங்கள், இலக்கணங்களில் முருகன், கௌமாரத் தத்துவம், இசைத்தமிழில் முருகன், நாடகத் தமிழில் முருகன், நாட்டுப்புறப் பாடல்களில் முருகன், குமரகுருபரர், அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள், தண்டபாணி சுவாமிகள், கந்தசாமி சுவாமிகள், வாரியார் சுவாமிகள் போன்றோர் பற்றிய முருகன், முருகன் வழிபாட்டு முறைகள், திருமுருகன் திருவிழாக்கள், பழமொழிகளில் பாலமுருகன், அச்சில் வராத ஆறுமுகன் பாடல்கள், அயல்நாடுகளில் அறுமுகன் வழிபாடுகள், செவ்வேளின் சிற்ப வடிவங்கள், நெஞ்சையள்ளும் முருகன் ஆலயங்கள்,

சைவமும் முருக வழிபாடும், முருக வழிபாட்டில் ஆதீனங்கள், முருகன் அடியார்கள் போன்ற பல அமர்வுத் தலைப்புகளின் அடிப்படையில் 242 கட்டுரைகள் அமைந்துள்ளன. இக்கட்டுரைகளை வழங்கியுள்ள பேராளர்கள் அனைவரும் மிகவும் பாராட்டுக்குரியவர் ஆவர். பலரும் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டு மிகச் சிறப்பாக எழுதியுள்ளனர். கட்டுரைகள் ஆசிரியர் வரிசையில் அகரவரிசைப்படி இரண்டு தொகுதிகளிலும் தனித்தனியாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றை அமர்வு வாரியாகவோ பொருள் வாரியாகவோ பிரிக்க இயலாத சூழல். இயன்றவரையில் பிழைகளில்லாமல் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

இவ்வாய்வுக் கோவையில் இடம்பெற்றிருக்கும் கட்டுரைக் கருத்துகட்குக் கட்டுரையாசிரியர்களே பொறுப்பாவர். குறையும் நிறையும் அவர்களைச் சார்ந்தனவே. பல கட்டுரைகள் மேலாய்விற்குரியன. பல செய்திகள் ஆழமான சிந்தனைக்குரியன. தமிழ்க் கடவுள் முருகன் இலக்கிய ஆய்வுக் களஞ்சியமாக உருவாக இவை பெருந்துணை புரிவன.

இம்மாநாட்டுக் கருத்தரங்கின் புரவலர்களாக விளங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் மாண்புநிறை பேராசிரியர் முனைவர் க. பாஸ்கரன் அவர்களுக்கும், சிரவை ஆதீன முதல்வர் முனைவர் தவத்திரு குமரகுருபர சுவாமிகள் அவர்களுக்கும் எங்கள் பணிவான வணக்கங்களை உரித்தாக்கி மகிழ்கின்றோம். இம்மாநாட்டின் ஒருங்கிணைப்பாளராக விளங்கும் தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிவாளர் முனைவர் ச. முத்துக்குமார் அவர்களுக்கும் எங்கள் அன்பும் பாராட்டும் என்றும் உரித்தாகும். சுவடிப்புல ஆசிரியர்கள், ஆதீன ஆய்வு மையத்தின் ஆய்வாளர்கள், பல்கலைக்கழக அலுவலக அன்பர்கள், ஆதீன அலுவலர்கள் ஆகிய அனைவருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். தனித்தனியாக மலர்ந்த கட்டுரை மலர்கள் எழிலும் மணமும் பெற்றதொரு கோவையாக உருப்பெறுவதற்கு எல்லா நிலைகளிலும் உழைத்த அனைத்து அன்புள்ளங்களுக்கும் எங்கள் நன்றியை உரித்தாக்கி மகிழ்கிறோம். முருக இலக்கிய ஆய்வுக்கோவைக்கு இறுதி வடிவம் கொடுத்துப் பொலிவூட்டிய தமிழ்ப் பல்கலைக்கழகப் பதிப்புத்துறை இயக்குநர் முனைவர் க. இரவீந்திரன் அவர்களுக்கும், இவ்ஆய்வுக்கோவைத் தொகுதியை மிகக் குறுகிய காலத்தில் அழகுற அச்சிட்டு வழங்கித் துணைபுரிந்த தஞ்சாவூர் திருவள்ளுவர் ஆப்செட் பிரிண்டர்ஸ் நிறுவனதினருக்கும் எங்கள் மனம் நிறைந்த பாராட்டினையும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இம்மாநாடும் கருத்தரங்கமும் நூல் வெளியீடும் வெற்றி பெறப் பல்வேறு நிலைகளில் உடனிருந்து ஒத்துழைப்பு நல்கிய அனைத்து அன்புள்ளங்களுக்கும் எங்கள் நன்றி உரித்தாகும்.

- பதிப்பாசிரியர்கள்.

# பொருளடக்கம்

# முருகனும் ஆறு என்னும் எண்ணும்

து. அகத்தியா
முனைவர் பட்ட ஆய்வாளர்
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

தமிழ்நாட்டில் முருகன் குறிஞ்சி நிலத்துக்கு உரிய கடவுளாக விளங்குவதை "சேயோன் மேய மைவரை உலகு" என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். முருகன் சங்கப் புலவராகவே அமர்ந்து தமிழ்மாய்ந்தவன் என்றும் குறிப்பிடுவர். முருகனைக் குலதெய்வமாகக் கொண்ட வேடர் குலத்தில் தோன்றிய வால்மீகி. அவன் ஆறுமுகங்களோடு சரவணத்தில் தோன்றி வளர்ந்த செய்திகளை உள்ளடக்கி ஒரு படலம் (ஸர்க்கம்) பாடியுள்ளார். அத்துடன் அந்தப் படலத்திற்குத் தனியே நூற்பயன் கூறியுள்ளார். தமிழ்க்கடவுள், குறிஞ்சிக்கிழவன் முருகப்பெருமானின் சிறப்புகளைக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## முருகனின் சிறப்பு

நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படையே பத்துப்பாட்டு நூல்களில் முதற்பாட்டாக விளங்குகிறது. அதுவே, சைவத் திருமுறைகளிலும் இடம்பெற்ற சிறப்புடையது. முருகன் விழாவுக்கான பந்தக்கால் (கால்கோள்) சிறப்பாக நடைபெற்ற செய்தியை மருதக்கலி "ஆலமர்ச்செல்வன் அணிகால் மகன் விழாக்கால்கோள்" என்று குறிப்பிடுகிறது.

*"சேவலம் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகு"*

இது குறுந்தொகையில் உள்ள கடவுள் வாழ்த்துச் செய்யுள். சேவற்கொடியை ஏந்தும் முருகப்பெருமான் காப்பதால் இந்த உலகம் அன்றாடம் பாதுகாப்புடன் உள்ளது என்று இப்பாடல் முருகனைப் புகழ்கிறது. முருக வழிபாட்டுச் சின்னங்கள் சிந்துசமவெளி நாகரிக காலத்திலேயே இருந்ததாக அகழ்வாராய்ச்சி வல்லுநர்கள் கூறுகின்றனர்.

## ஆறு என்னும் எண்

முருகனுடைய திருமேனி என்பது உருவ வழிபாட்டிற்கு ஏற்றமுறையில் அமைக்கப்பட்டிருப்பினும், அவ்வுறுப்புக்களில் அமைந்த நுட்பமான உண்மைகள் உணரத்தகுவனவாகும். ஆறு என்னும் எண் முருகனோடு பெரிதும் தொடர்புடையதாகக் காணப்படுகிறது. ஆறு தீப்பொறிகளாகத் தோன்றியது; ஆறு பெண்களால் வளர்க்கப்பெற்றது. ஆறு புள்ளியாக இருக்கின்ற கார்த்திகை விண்மீன் அவனுக்கு உரியது எனல்; சரவணபவ என்னும் ஆறெழுத்து மந்திரம்; அறுகோண வடிவமாக உள்ள யந்திரம்; ஆறாம் நாளாகிய சட்டிநாள்,

ஆறு குணங்களுடைமை என்னும் நிலையில் ஆறு என்னும் எண் பெரிதும் போற்றப்படுவதாகக் காணலாம்.

மந்திரங்களில் எட்டெழுத்து மந்திரம் நாராயணனுக்கு உரியதாகவும், ஆறெழுத்து மந்திரம் முருகனுக்குரியதாகவும், ஐந்தெழுத்து மந்திரம் சிவனக்குரியதாகவும் விளங்குகின்றன. 'சரவணபவ' என்பது ஆறெழுத்து மந்திரமாக இக்காலத்துக் கொள்ளப்படினும் 'முருகாயநம' என்னும் மந்திரமே ஒரு காலகட்டத்தில் ஓதப்பட்டு வந்துள்ளமை கருத்திற்கொள்ளத்தக்கது. ஆறெழுத்து மந்திரமே ஆறு முகங்களாக வடிவு கொள்வதற்குக் காரணமாகவும் ஆகியிருத்தல் கூடும். சிவபெருமானை எண்குணத்தான் எனவும் அறுகுணத்தான் எனவும் நூல்கள் குறிப்பிடுகின்றன. சிவபெருமானுடைய ஆறு குணங்களே முருகனின் ஆறு முகங்களாக வடிவெடுத்தன என்னும் இறைவனுக்குரிய ஆறுமுகங்களே முருகனுக்கும் ஆறுமுகங்களாக ஆவதற்குக் காரணமாயின என்றும் கூறுகின்ற புராணக் கருத்துக்களும் இங்கு நோக்கத்தக்கது. பராசக்தி, ஆதிசக்தி, இச்சாசக்தி, கிரியாசக்தி, ஞானசக்தி, குடிலாசக்தி என்னும் ஆறு சக்திகளும் ஆறு முகங்களாக உருக்கொண்டன என்று கூறுகின்ற கருத்தும் உள்ளன. இறைவனிலிருந்து தோன்றியவன் முருகன் என்று கூறுவோர் இறைவனுடைய குணங்களையும், முகங்களையும் இணைத்து அவனுக்கு வடிவு கற்பிக்கலாயினர். முருகனை இறைவியின்பத்தில் தோன்றியவனாக கூறியவர்கள் ஆறுவகையான ஆற்றல்களைக் குறிப்பிட்டு பராசக்தி முதல் குடிலாசக்தி ஈறாக உள்ளமை அவன் முகங்கள் எனக் கூறியுள்ளனர்.

ஓம் என்பது பிரணவம் எனக் கூறப்பெறும், பிரணவப் பொருளாக இருக்கின்றவன் முருகன் எனக் கூறினும் ஓம் என்னும் சொல்லிலுள்ள நுண்மையான எழுத்து வடிவங்களை முருகனின் ஆறு முகங்களாகக் கூறுகின்றனர். ஓம் என்னும் சொல்லில் அகரம், உகரம், மகரம், விந்து, நாதம், கலை என்னும் ஆறும் அடங்கியுள்ளன என்பர். கால வளர்ச்சிக்கு ஏற்ப தத்துவ வளர்ச்சியும் வளர்ந்துள்ளமையை இக்கருத்துக்கள் காட்டுகின்றன. இறைவனை நிறுத்தி வழிபடுமிடங்காக ஆறு இடங்கள் மனித உடம்பில் அமைந்துள்ளன. இந்த ஆறு இடங்களும் தாமரை வடிவில் அமைந்து விளங்குவதாகக் கூறுவர். இத்தகைய ஆறு இடங்களையும் ஆறு ஆதாரங்கள் என்பர்.

**மூலாதாரம்**

கொப்பூழுக்குக் கீழே நாலிதழ்த் தாமரை வடிவில் அமைந்துள்ளது. இது முக்கோண வடிவத்தில் அமைந்துள்ளது என்பர். இங்கே நிறுத்தி வழிபடப்படும் கடவுள் கணபதி ஆகும்.

**சுவாதிட்டானம்**

மூலதாரத்திற்கு மேலே கொப்பூழுக்குக் கீழே அமைந்துள்ள இடம் சுவாதிட்டானம் எனப்படும். சதுரவடிவாய் ஆறு இதழ்த் தாமரை வடிவில் அமைந்துள்ள இதற்குப் பிரம்மன் அதிதெய்வம் என்பர்.

**மணிபூரகம்**

சுவாதிட்டானத்திற்கு எட்டு விரல்மேலே உந்திக் கமலத்திற்கு நேராக அமைந்திருப்பது. பத்து இதழ்த் தாமரை வடிவில் அமைந்துள்ள இதற்குத் திருமால் அதிதெய்வம் என்பர்.

**அநாகதம்**

மணிபூரகத்திற்கு மேல் பத்து விரற்கிடைக்குமேல் அமைந்துள்ளது. இருதயத்திற்கு நேராக அமைந்துள்ள இது முக்கோண வடிவில் பன்னிரண்டு இதழ்களை உடையதாக இருக்கும் உருத்திரன் இதற்கு அதிதெய்வம் என்பர்.

**விசுத்தி**

அநாகதத்திற்குப் பத்து விரற்கிடைமேல் உள்ள கழுத்தே விசுத்தி எனப்படும். பதினான்கு இதழ்த்தாமரை வடிவமாய் அறுகோணமாய் இருக்கும். மகேஸ்வரன் இதற்கு அதிதெய்வம் என்பர்.

**ஆக்ஞை**

புருவமத்தியில் அமைந்துள்ள ஆக்ஞை ஈரிதழ் கொண்டதாகும். இதற்கு அதிதெய்வம் சதாசிவர் ஆகும். அத்துவாக்கள் ஆறு என்பர். அத்துவா என்பது இறைவனுடைய வடிவங்கள் அமைந்துள்ள நிலையைக் குறிப்பதாகும். அவை மந்திரம், வண்ணம், பதம், கலை, தத்துவம், புவனம் என்பன. சமயங்கள் ஆறு என்பர். ஆறு சமயங்கள் ஆறு ஆதாரங்கள் ஆறு அத்துவாக்கள் என ஆறு ஆறாகக் கூறப்படுகின்ற மூன்றினுக்கும் முதல்வன் என்பதைப் புலப்படுத்த ஆறு முகங்களோடு திகழ்வதாகக் கூறப்படும் கருத்தும் ஈண்டு கருதத்தக்கது.

குருவும், கணபதியும், சிவபெருமானும், திருமாலும், இருசுடரும், சிந்சித்தியும், முருகனுடைய ஆறுமுகங்களாக உருவகிக்கப்பட்டுள்ள நிலையும் கருத்திற் கொள்ளத்தக்கது. ஓம் என்னும் எழுத்தும், திருவைந்தெழுத்தும் சேர்ந்து யானைமுகன், பிரமன், திருமால், உருத்திரன், மகேஸ்வரன், சதாசிவன் என்னும் ஆறுமுகங்களாக உருவகிக்கப்பட்டதே ஆறுமுகமாகும் என்னும் கருத்தும் ஈண்டு சிந்திக்கத்தக்கது.

முருகனைப் பற்றிக் கூறப்படுகின்ற நுண் கருத்துக்களில் வேறுபாடுகள் உள்ளன. ஆறு என்னும் எண் பெரிதும் தொடர்புடையதாகக் காணப்படுகின்ற நிலை ஒன்று. சிவனுடைய ஆறு முகங்களே முருகனுக்கு ஆறு முகங்களாயின என்பது ஒரு கருத்து. பராசக்தி முதலாக உள்ள சக்தி வேறுபாடுகள் ஆறு முகங்களாய், ஓம் என்னும் பிராணவத்தினுடைய விளக்கமாக ஆறு முகங்கள் அமைந்தன. சமயங்கள் ஆறு, அத்துவாக்கள் ஆறு, ஆதாரங்கள் ஆறு என்பனவற்றின் தலைவன் பல்வேறு பெயர்களில் அமைந்த இறைவர்களெல்லாம் ஒருரு கொண்டு ஆறு முகங்களாயின. ஓம் என்னும் பிரணவமும் திருவைந்தெழுத்தும் ஆறு முகங்களாயின என்று கூறப்படுகின்ற பல்வேறு கருத்துக்களும் ஒப்புநோக்கத்தக்கவை.

சங்க இலக்கியங்களில், சற்று முற்பட்ட இலக்கியங்களில் ஒரு முகமும், இருகைகளுமுடைய வடிவமே காணப்படுகிறது. ஆறு முகங்கொண்ட வடிவுடைய முருகனைச் சங்ககால இலக்கியங்களில் சற்றுப் பிற்பட்டதாக எண்ணப்படுகின்ற பரிபாடலும், முருகாற்றுப்படையும் கூறியுள்ளன. எனவே, தமிழ்நாட்டில் முருகனுடைய வடிவம் குமாரதந்திரத்தில் கூறப்பட்ட வடிவு அன்று என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நிறைவாக

இறை உணர்வு என்பது மக்களுடைய வாழ்வில் இயைந்துவிட்ட ஒன்று. நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே மக்கள் தெய்வ வழிபாட்டை மேற்கொண்டுள்ளனர். தமிழோடும், தமிழ் வாழ்வோடும் ஒன்றிவிட்ட தெய்வமாக முருகன் கருதப்படுகின்றார். முருகு என்பதற்கு இளமை, அழகு, ஆற்றல் என்று பல்வேறு பொருள்களில் கூறப்படுகின்றன. சங்க காலத்திலேயே முருகனுக்குத் தனி இலக்கியம் தோன்றியது என்று கூறினால் முருக வழிபாட்டின் தொன்மையை உணரலாம்.

# திருமுருகாற்றுப்படைலில் முருகனின் வடிவழகு

முனைவர் சு. அட்சயா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
சங்கரா அறிவியல் மற்றும் வணிகவியல் கல்லூரி
சரவணம்பட்டி, கோயம்புத்தூர் - 641 035

சங்கத் தொகை நூல்களுள் முதன்மையாக வைத்துப் போற்றப்படும் சிறப்பு வாய்ந்தது பத்துப்பாட்டு ஆகும். இதில் பழமையும் பெருமையும் தெய்வத்தொடர்பும் கொண்ட தமிழின் தொன்மையான இலக்கியங்களுள் ஒன்று திருமுருகாற்றுப் படையாகும். குன்று தோறும் ஆடல் கொண்டவன் குமரன் என்றாலும் அவன் குடிகொண்ட கோவில் தலங்கள் ஆறு. திருமுருகாற்றுப்படை, அழிந்து போகும் உலகியல் செல்வங்களைப் பெறுவதற்காக ஒருவரை ஆற்றுப்படுத்துவதை விட அழியாத செல்வமாகிய முத்தித் திருவைப் பெறுவதற்காக அதனை அளிக்கவல்ல முருகனிடம் மக்களை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. ஏனைய ஆற்றுப்படைகள் யார் ஆற்றுப்படுத்தப்படுகிறாறோ அவர் பெயரால் அமைந்துள்ளது. மாறாக பாட்டுடைத் தலைவனாகிய முருகன் பெயரால் திருமுருகாற்றுப்படை என அமைந்திருப்பது இதன் சிறப்பு. இத்தகைய சிறப்புக்களைக் கொண்ட இந்த நூலில் முருகனே அழகின் வடிவமானவன் அதனால் தான் அவனை வடிவேலன் என்று அழைத்தனர். திருமுருகாற்றுப்படையில் இடம் பெறுகின்ற முருகனின் வடிவழகினை எடுத்துரைப்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## இயற்கை அழகும் முருகனின் வடிவழகும்

அழகு தெய்வம் முருகன். மலையும் மலை சார்ந்த இடங்களிலும் இயற்கை அழகுடன் சேர்ந்து முருகனை வழிபடுகின்றோம். 'குறிஞ்சிக் கிழவன்' என்று மலைமீது வைத்து வணங்குகின்றோம். நக்கீரர் முருகனது அழகின் இயல்பினைப் பற்றிக் குறிப்பிடுவதை,

*"கைபுனைந் தியற்றாக்கவின் பெறு வனப்பு"* (திருமுருக., 17)

இப்பாடல் வரியினால் அறியமுடிகின்றது. இயற்கை அழகில் அவர் தெய்வத்தைக் காணுகின்றார். பண்டை காலத் தமிழ் மக்கள் இயற்கை வழி வாழ்வு நடத்தி அதற்கு அடிப்படையாக உள்ள அழகுண்மையை உணர்ந்து முழுமுதற்கடவுளுக்கு 'அழகு' என்றும் பொருள்பட முருகன் என்ற பெயரை வைத்துள்ளனர் என்பதை அறிய முடிகின்றது.

## திருப்பரங்குன்றம் (குமரவேளின் பெருமை)

உலகில் வாழும் உயிர்கள் எல்லாம் மகிழும்படி, மேருவை வலமாக எழுந்து, பற்பல சமயத்தவரும் புகழ்கின்ற ஞாயிறு கீழ்க்கடலிடத்தே எடிக் கண்டாற்போன்று, இடையீடு இன்றி எக்காலத்தும் விளங்குவதும் மிக நெடுந்

தூரத்தில் விளங்கிப் பிரகாசிப்பதுமாகிய ஒளியினையும், தன்னை வந்து அடைந்த மெய்யடியார்களின் அறியாமையை உடைத்து, அவரை ஆட்கொள்ளும் வலிய திருவடியினையும், பகைவர்களாகிய அசுரர்களை அழித்த இடியினைப் போன்ற ஆற்றல் பெற்ற கையினையும் உடைய, குற்றமற்ற கற்பு வாய்ந்த தெய்வயானையின் தலைவன் ஆகிய முருகன் என்பதைப் பின்வரும் திருமுருகாற்றுப்படை வரிகளின் வாயிலாக நக்கீரர் குறிப்பிடுவதை,

*"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண் பாசுங்கு,*
*ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி,*
*உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்,*
*செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை,*
*மறுஇல் கற்பின் வாணுதல் கணவன்"* (திருமுருக., பா.1-6)

என்ற செய்யுள் வரிகளின் வாயிலாக புற இருளைப் போக்கும் ஞாயிற்று ஒளிமண்டலம், அக இருளைப் போக்கி, மெய்ப்பொருளைத் தெரிந்துணர்த்தும் அறிவுப் பேரொளியாகிய இறைவனுக்கு உவமையாக நின்றது என்பதை அறியமுடிகின்றது.

விடியற்காலையில், நெடுந்தொலைவில் அடிவானத்தில் கீழ்க்கடற்பரப்பின் மேல் பகலவன் ஆன ஒளிப்பிழம்பு காணப்படுவது போன்று, நெடுந்தொலைவில் மயில் மீது பேரொளிப்பிழம்பாக முருகன் அன்பர்களுக்குக் காணப்படுவான் என்பதை அறியமுடிகின்றது. அன்பர்கள் இருக்கும் இடம் நாடி அவன் நெருங்கி வருவான் என்றும் அவ்வாறு வருகின்றபோது அறியாமையைத் தகர்த்தெரியும் அவனுடைய வலிமை மிக்க தாள்கள் அன்பர்கள் கண்ணுக்குப் புலப்படுவதையும், அவர்களுக்குத் தீங்கு செய்ய நினைப்பவரைத் தேய்த்தொழிக்கும் அவனுடைய இடியை ஒத்த கைகள் புலப்படுவதையும் அறியமுடிகின்றது. அப்போது குற்றமற்ற கற்பினையுடைய தேவியான தெய்வயானையை ஒரு பக்கத்தே கொண்டு அவளுடைய கணவனாய் முருகன் காட்சியளிப்பதின் வாயிலாக முருகனின் வடிவழகு சிறப்பினையும் குமரவேளின் பெருமையையும் அறியமுடிகின்றது.

2. திருச்சீர் அலைவாய் ஆறுமுகங்களின் இயல்புகள் (வடிவழகு)

ஐந்தாகிய வேறுபட்ட வடிவினையுடைய முடிக்குச் செய்யும் தொழிலெல்லாம் முற்றுப் பெற்ற கிரீடத்தோடு கூடி, விளங்கிய ஒன்றற்கொன்று மாறுபாடு மிகும் மணிகள், மின்னலொடு மாறுபடுவதைப் போன்று முருகப் பெருமானின் முடியில் பொலிந்து விளங்குகின்றன; பலவகையான தொழிற் கூறுபாடுகள் அமைந்த பொன்னாலானா மகரக்குழைகள், நெடுந்தொலைவிலே விளங்கித் தோன்றும் ஒளி மிக்க மதியைச் சூழ்ந்து விளங்கும் விண்மீன்கள் போல ஒளி வீசி அலைகின்றன; குற்றமற்ற தவத்தொழில் முடித்தோருடைய தூய உள்ளத்தே பொருந்தித் தோன்றுகின்ற ஒளியும் நிறமும் உடைய ஆறு திருமுகங்களில், ஒரு முகம், பேரிருளால் மறைக்கப்பட்ட உலகம்,

அவ்விருட்குற்றம் அகன்று விளங்கும் பொருட்டுப் பல சுடர்களையும், தோன்றச் செய்தது; ஒரு முகம், தன் அன்பர்கள் தன்னை வாழ்த்துங்கால் அதற்குப் பொருந்தி அவர்க்கு இனிமையாக ஒழுகி, அவர்பால் வைத்த காதலால் மகிழ்ந்து, அவர் வேண்டும் வரங்களைக் கொடுத்தது; ஒரு முகம், மந்திரத்தினால் மெய்ந்நூல் உரைத்த முறைமையிடத்துத் தப்பாத அந்தணருடைய வேள்விகட்கு இடையூறு நேராதபடி காக்கின்றது; நான்காவது முகம், வேத நூல்களாக காட்ட முடியாது. எஞ்சிய பொருள்களைத் தம் அன்பர்கள் பாதுகாப்பெய்தும் வண்ணம் ஆய்ந்துணர்த்தித் திங்கள் போலத் திசை விளக்கும்; மற்றொரு முகம், அசுரரை அழிந்து மறக்கள வேள்வியை விரும்பி நிற்கும்; ஆறாவது முகம், குறவருடைய மேன்மை பொருந்திய மகளும், பூங்கொடி போன்ற இடையினையுடைய இளம்பெண்ணாகிய வள்ளியம்மையுடன் சிரித்து மகிழ்தலை விரும்பிற்று என்று நக்கீரர் குறிப்பிடுவதைப் பின்வரும் ஆற்றுப்படை வரிகள் மெய்ப்பித்துக் காட்டுவதை,

*"ஐவேறு உருவின் செய்வினை முற்றிய*
*முடியோடு விளங்கிய முரண்மிகு திருமணி*
*மின்உறழ் இமைப்பின் சென்னிப் பொற்ப*
*நகைதாழ்பு துயல்வருஉம் வகைஅமை பொலங்குழை*
*சேண்விளங்கு இயற்கை வாள்மதி கவைஇ*
*ஆகலா மீனின் அவிர்வன இமைப்ப,*
*தாஇல் கொள்கைத் தம்தொழில் முடிமார்*
*மனன்தேர்பு எழுதகு வாள்திற முகனே*
*மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்க*
*பல்கதிர் விரிந்தன்று ஒருமுகம்; ஒருமுகம்*
*மந்திர விதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே, ஒருமுகம்*
*செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கி,*
*கறுவுகொள் நெஞ்மொடு களம்வேட்டன்றே; ஒருமுகம்*
*குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்*
*மடவரல், வள்ளியொடு நகைஅமர்ந் தன்றே*
*ஆங்கு, அம்முகரு முகனும் முறைதவின்று ஒழுகலின்"*

(திருமுக., பா.83-103)

என்ற திருமுருகாற்றுப்படை வரிகளின் வாயிலாக முருகப்பெருமானின் ஆறு முகங்களின் இயல்புகளையும் சிறப்புக்களையும் அறியமுடிகின்றது. ஆறாவது முகம் குறவர் மடமகள் வள்ளியுடன் மகிழ்வோடு பொருந்தி நகைபுரியும் முகம். வள்ளி முருகக் கடவுளின் இச்சா சக்தி என்று கூறுவர். காம நுகர்ச்சியில்லாத கடவுள் இவ்வாறு நகையமர்தல் உலகில் அன்பு கெழீஇய இல்வாழ்க்கை உயிர்கள் அமர்ந்து இன்புறற்றொருட்டு எனக் கூறுவர் அறிஞர். இதனைத்,

*"தென்பால் உகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்*
*பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடி*
*பெண்பால் உகந்திலனேற் பேதாய் இருநிலத்தோர்*
*விண்பாலியோகெய்தி வீடுவர் காண் சாழலோ"* (திருச்சாழல் - 9)

என்ற திருச்சாழல் பாடலின் வாயிலாக அறியமுடிகின்றது. ஆறுமுகத்தின் சிறப்பைக் கூறும் திருமுருகாற்றுப்படை பாடலைப் பின்பற்றி அருணகிரி நாதர் குறிப்பிடும் திருப்புகழ் பாடல் வரிகளும் முருகனின் ஆறுமுக வடிவழகை எடுத்தியம்புவதை,

*"ஏறுமயில் ஏறிவிளையாடும் முகம் ஒன்று*
*ஈசருடன் ஞான மொழிபேசும் முகம் ஒன்று*
*கூறும் அடியார்கள் வினை தீர்த்த முகம் ஒன்று*
*குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்று*
*மாறுபடு சூரரை வைத்த முகம் ஒன்று*
*வள்ளியை மணம்புரிய வந்த முகம் ஒன்று*
*ஆறுமுகமான பொருள்நீ அருளல் வேண்டும்*
*ஆதி அருணாச்சலம் அமர்ந்த பெருமானே"*

என்ற திருப்புகழ் பாடல் வரிகள் திருமுருகாற்றுப் பாடல் வரிகளுக்கு ஒப்பாக அமைந்துள்ளதை அறிய முடிகின்றது. இப்பாடல் வரிகளின் வாயிலாக முருகன் அல்லது அழகு என்பார்கள். அழகென்றால் முருகனே என்பார்கள், அழகென்ற சொல்லுக்கு முருகா, உந்தன் அருளின்றி உலகுக்குப் பொருளேது முருகா என்ற சொற்சுவைகளுக்கேற்ப முருகனின் ஆறுமுகங்களின் வடிவழகினை அறிய முடிகின்றது.

திருமுருகாற்றுப்படை சித்திரித்துக் காட்டும் ஆறுபடை வீடுகளில் திருப்பரங்குன்றத்தில் கோயில் கொண்டுள்ள இறைவனின் வடிவழகும், திருச்சீரலைவாயிலில் அருள்மாலிக்கும் ஆண்டவனின் திருமுகங்களின் தனிச்சிறப்புகள் உயிர்கள் உய்வதாக அமைந்துள்ளது.

**முடிமணிகளும், மகரக்குழையும்**

ஆறுமுகங்களின் முடியில் பொருந்திய மணிகள் மின்னலொடு மாறுபடுவதைப் போன்று பொலிவுடன் திகழ்கின்றது. மகரக் குழைகள் மதியைச் சூழ்ந்த விண்மீனைப் போல ஒளி வீசுகின்றன என்பதை,

*"ஆகலா மீனின் அவிர்வன இமைப்ப"* (திருமுருக., பா.88)

என்ற பாடல்வரியினால் அறிய முடிகின்றது. இதைக் குமரகுருபரர் சுவாமிகளும்,

*" . . . . . பருதி*
*பலவும் எழுந்து சுடர் பாலித்தாற் போலக்*
*குலவும் மகரக் குழையும்"* (கந்தர் கலிவெண்பா., பா.40)

என்று கதிரவர் பன்னிருவர் தோன்ற ஒளிர்வது போல் விளங்கும் பன்னிரண்டு மகரக்குண்டங்களும் என்று வர்ணிப்பது குறிப்பிடத்தக்கது.

**அலைவாயில் ஆறுமுகன் வந்தருளியிருக்கும் காட்சி (திருச்சீரலைவாய் திருச்செந்தூர்)**

தேவதும்பி முழங்கவும், கொம்புகள் மிக்கொலிப்பவும் வெள்ளிய சங்குகள் முழங்கவும், இடியை ஒப்ப முடிக்கும் முரசோடு, வெல்கொடியில் இருந்து மயில் அகவவும்; சான்றோர்களாலே புகழப்பட்ட மிக உயர்ந்த புகழினையுடைய நாமனுரலைவாய் என்னும் திருப்பதியில் ஏற எழுந்தருளுதலும் அவ் இறைவனுக்கு நிலைபெற்ற தன்மை என்பதை,

*“அந்தரப் பல்லியம் கறங்க, திண்காழ்*
*வயிர்எழுந்து இசைப்ப, வால்வளை ஞரல,*
*உரம்தலைக் கொண்ட உரும்இடி முரசமொடு*
*பல்பொறி மஞ்ஞை வெல்கொடி அகல,*
*விசும்பு ஆறுஆக விரைசெலல் முன்னி,*
*உலகம் புகழ்ந்த ஓங்குஉயர் விழுச்சீர்*
*அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே அதாஅன்று”*

(திருமுருக., பா.119-125)

என்ற பாடல்வரிகளின் வாயிலாக முரசு முழங்கும் ஓசைக்கு இடியின் ஓசையை உவமையாகக் கூறியிருப்பதை அறிய முடிகின்றது. அந்தப் பல்லியம் என்றது வானத்தின் கண் வாழும் தேவர்களுடைய இசைக்கருவியைக் குறிக்கிறது. முருகப் பெருமான் எழுந்தருளுங்கால் தேவர்கள் துந்துபி முழக்கிக் கண்டு மகிழ்வார்கள் என்பதை அறியமுடிகின்றது.

**முருகன் மடந்தையொடு வீற்றிருத்தல்**

குற்றமற்ற அறக் கற்பினையுடைய தெய்வானையருடே சிலநாள் திருவாவின்குடி என்னும் ஊரில் இருத்தலும் உரியன் முருகன் என்பதை,

*“தாஇல் கொள்கை மடந்தையொடு சிலநாள்*
*ஆவினன்குடி அசைதலும் உரியன், அதாஅன்று”*

இப்பாடல் வரிகளின் வாயிலாக முருகன் தெய்வானையுடன் வீற்றிருக்கின்ற வடிவழகினை அறியமுடிகின்றது.

**குன்றுதோறும் ஆடல்புரியும் தன்மை**

விரலாலே வலிந்து அலர்த்தப்ப உடமையான் மணம் வேறுபடுகின்ற, சுனையிற் பூத்த மலராலே புனையப்பட்ட வண்டுகள் மொய்க்கும் கண்ணினையும், பிணைக்கப்பட்ட பிறமாலைகளையும் சேர்த்தினயினை கூந்தலையும் உடையராய், கஞ்சங்குல்லையும், நறிய பூங்கொத்துக்களையும் மராமரத்துக் மலர்கொத்துக்களையும் இடையே இட்டுத் தொகுக்கப்பட்ட பெரிய குளிர்ந்த அழகிய தழையை வடங்கள் திருந்திய அல்குலிடத்தே ஆடையாக

உடுத்தி, மயிலைக் கண்டாற் போன்ற சாயலையுடைய மகளிரோடு (குன்றக் குரவை ஆடும், குறவர்களிடம்) எழுந்தருளி வருகின்றான் முருகன் என்பதை,

*"விரல் வளர்ப்பு அவிழ்ந்த அணிந்த வேறுபடு நறுங்காள்,*
*குண்டு கனைபூத்த வண்டுபடு கண்ணி,*
*இணைத்த கோதை,, அணைந்த கூந்தல்,*
*முடித்த குல்லை, இலையுடை நறும்ப,*
*சேங்கால் மராமத்து, வால்இணர், இடை இடுபு,*
*கரும்புஉடணத் தொடுத்த பெருந்தண் மாத்தழை*
*திருந்துகாழ் அல்குல் திளைப்ப உட்கு,*
*மயில்கண் டன்ன மடநடை மகளிரொடு"*

(திருமுருக., பா.198-205)

இப்பாடல் வரிகளின் வாயிலாக மயிலைக் கண்டாற் போன்ற சாயலையுடை மகளிரொடு (குன்றக் குரவை ஆடும் குறவர்களிடம்) எழுந்தருளி வருகின்ற முருகனின் வடிவழகினை அறியமுடிகின்றது. மேலும் 206 முதல் 217 வரையுள்ள பாடல் வரிகளில் அவ்வாறு வரும் முருகன் சிவந்த திருமேனியன், சிவந்த ஆடையை உடையவன், அசோகினது குளிர்ந்த தளிர்கள் அசைகின்ற காதுகளை உடையவன், அரைக் கச்சையை அணிந்தவன், வீரக்கழல் தரித்தவன்; வெகுசி மாலையைச் சூடியவன், புல்லாங்குழலை வாசிப்பவன், பெரிய கொம்பை ஊதுபவன், வேறுபல சிறு வாத்தியங்களை ஒலிப்பவன். ஆட்டுக்கிடாவை வாகனமாக உடையவள், 'நெடிய உருவம் படைத்தவன்; தொடி' என்னும் அணியைத் தோளில் அணிந்தவன். இடுப்பில் இறுகக் கட்டிய அரைக்கச்சையின் மேல் உடுப்பதாகக் கொண்ட நறிய குளிர்ந்தமென்மை மிக்கதாகிய ஆடை நிலத்தளவும் தொங்கிப்புரளும் வண்ணம் தரித்தவன். முடிவை ஒத்த பெரிய கைகளால் பொருந்த ஏந்தி, மெல்லிய தோளையுடைய மான்பினை போலும் பல மகளிரைத் தழுவிக் கொண்டு அவர்க்கு முதற்கை கொடுத்து மலைகள்தோறும் சென்று விளையாடுதல் முருகக் கடவுளின் நிலைத்த குணம் என்ற அழகினை அறிய முடிகின்றது.

திருஆவினன் குடியில் முருகன் தெய்வானையுடன் வீற்றிருக்கின்ற வடிவழகினையும், திருஏரகம் என்னும் படைவீட்டில் முனிவர்களுக்கு அருள் பாலிக்கும் வடிவழகினையும், குன்றுதொறும் ஆடல் என்ற இடத்தில் குரவைக் கூத்தினைக் காணும் முருகனின் வடிவழகினையும், பழமுதிர்ச்சோலையாகிய படை வீட்டில் முருகனின் இருப்பிடங்களின் அழகினையும் அறிய முடிகின்றது. இவ்வாறாக அறுபடை வீடுகளின் வடிவழகினைத் திருமுருகாற்றுப்படையின் வாயிலாக நக்கீரர் எடுத்துரைத்திருப்பதை அறியமுடிகின்றது.

# அருணகிரிநாதர் பாடல் வழி அடியார் நலன்கள்

வே. அமிர்தம்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தந்தை ஹேன்ஸ் ரோவர் கலை
(ம) அறிவியல் கல்லூரி,
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி

'முருகு' எனும் அழகிய வடிவினனாய், 'வேல்' எனும் அருவ உருவாய், எங்கும் நிறைந்த சோதியாய், தம்அடியார்க்கு இடர் என்பதே இல்லாதவனாய் மற்றும் பலவடிவங்களில் விளங்கும் எம் இறையே முருகா என்குருவே பகைவற்கு அங்குசம் போன்றவனே (குகன்) வந்தருள் தருவாயாக! என அருணகிரிநாதர் தம் கந்தர் அநுபூதியில் முருகனை மன்றாடி அழைக்கிறார் நாளும் கோளும் அடியார்க்கு நன்மையே செய்யும் அருணகிரிநாதர் பாடல் வழியே காணலாம்.

சைவத்தில் நாயன்மார்கள் பதிகங்களையும், வைணவத்தில் ஆழ்வார்கள் மங்களா சாசனங்களையும், தலங்கள் தோறும் சென்று பாடி தமது சமயவளர்ச்சிக்கு வித்திட்டனர். இதுபோன்று முருகவழிப்பாட்டில் புரட்சியினையும், அதன் வளர்ச்சி நிலைகளில் புதிய மாற்றத்தினையும் ஏற்படுத்தியவர் அருணகிரிநாதர் எனலாம். அருணகிரிநாதரது காலம் கி.பி14ஆம் நூற்றாண்டு என்பது இலக்கிய வரலாற்று ஆசிரியர்கள் நூல் வழிகாணமுடிகிறது. சான்றாக, தமிழ்விடுதூது சுட்டும் செவியறுப்பவன் வில்லிப்புத்தூரனது கொட்டம் 'அனுபூதி' மூலம் அடக்கியவர் அருணகிரியார். அருணகிரியார் திருவாவினன்குடி, திருவேரகம் முதலான அறுபடைவீடுகள் வயலூர், விராலிமலை, கதிர்காமம் உள்ளிட்ட முருகத்தலங்களுக்குச் சென்று இறைவன் மீது பாடல்களைப்பாடி முருக வழிப்பாட்டின் வளர்ச்சிக்குப் பெரும் பங்காற்றியுள்ளார். அருணகிரியாருக்குப்பின் முருகவணக்கம், பெரும் வளர்ச்சியுற்றுத் தமிழகத்தில் மட்டுமின்றி இலங்கை; சிங்கப்பூர்; மலேசியா; மொரிஷியஸ் போன்ற நாடுகளில் பரவியுள்ளது. அருணகிரிநாதர் பாடல்கள் மூலம் நாள், கோள் தாக்கத்தையும் தடுத்தருள் முருகன் புரியும் தன்மை விளக்குவது இக்கட்டுரை நோக்கமாகும்.

## அருணகிரிநாதர் தம் படைப்பும் சிந்தனையும்

"கந்தர் அனுபூதி சொன்ன எந்தை" என வள்ளலார் அவர்களால் பாராட்டப்பட்டவர் அருணகிரிநாதர். அருணகிரியார் தம் பாடல்களில் நேரடி; நெடிலடி முதலான அடிவகைகளும், வெண்பா; ஆசிரியப்பா; கலிவிருத்தம் முதலான பாவகைகளும், எதுகை; மோனை; இயைபு முதலான தொடைகளும், நேரொன்றாசிரியத்தளை, நிரையொன்று ஆசிரியத்தளை, இயற்சீர் வெண்டளை முதலான தளைகள் பயன்படுத்தி சந்த நயமிக்க பாடல்களைப் பாடியுள்ளார். அருணகிரியாரது இறை கருத்துக்களை எடுத்துரைக்கும் திருப்புகழ்,

கந்தரலங்காரம், கந்தர்அந்தாதி, கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல்விருத்தம், மயில் விருத்தம், சேவல் விருத்தங்கள் உள்ளிட்ட பல நூல்களைப் படைத்து முருகனின் இறையருள் ஞானத்தின் தன்மைகளையும், இறைவனின் சிறப்புக்களையும் உணர்த்தியுள்ளார்.

அருணகிரிநாதரின் முருகன்

திருக்கை, திருவேல், திருவடி என உடல் முழுதும் செந்நிறத்துடன் சிவந்த மேனியனாய் விளங்குபவன் முருகன் என்றும், சிவப்பு நிற ஆடையினை அணிந்தவன் இறைவன் என்பதையும்,

*“முழுதும் செய்யோய் மயிலேறிய சேவகனே”* என்றும்,

*“அலகில் திருப்பதியிற் பயில் கற்பகாடவி*
*அநுபவன் அத்தன்நிருத்தன், அரத்த ஆடையன்”*

எனவும் தம் பாடல் வழி முருகனைச் சுட்டுகிறார்.

முருகக் கடவுளும் - நவ கோள்களும்

சிவனுக்கு சூரியன் வலது கண் என்றும், இடது கண் சந்திரன் என்றும், நெற்றிக்கண் முருகன் என்றும் கந்தபுராணத்தில் கச்சியப்ப சிவாச்சாரியார் குறிப்பிடுகின்றார். ‘ஓம்’ எனும் பிரணவப் பொருளைத் திருவேரகத்தில் முருகனுக்கு உரைத்து தந்தையை மிஞ்சிய தனயனாக ‘குருபரன்’ எனப்பெயர் பெற்றமையால் “சிவனும் முருகனும் ஒருவரே!” என்பார் அடியார்கள்.

பதினான்கு உலகங்கள், முப்பத்துமுக்கோடி தேவர்கள் அனைத்தும் உமையொரு பாகனுள் அடக்கம். இதில் நவகோள்கள் அடங்கி விட்டமையை அறியமுடிகிறது. நவக்கிரங்களில் அதிக வல்லமை பெற்ற கிரகம் சூரியன் அவருக்கு உகந்த நட்சத்திரம் உத்திரம். சிவன்; பார்வதிக்கும், முருகன்; வள்ளி; தெய்வானை சமேத திருமணங்கள் நடத்தப்படும் நாளும் அதுவே.

அடுத்த வல்லண்மை மிக்க கிரகமாகச் சுட்டப்படுவது செவ்வாய் இவருக்குச் சகோதரக்காரகன் என்று ஒரு பெயரும் உண்டு. சாதகத்தில் செவ்வாய் கோளினால் ஏற்படும் பாதிப்புகளை நீக்கும் அதிபதியாக விளங்குபவர் முருகன். செவ்வாய்க்கும் முருகனுக்கு உரிய மலராக சிவந்த செண்பகம் மற்றும் செவ்வரளி சுட்டப்படுகிறது. செவ்வாய்க்கு உரிய பாகம் (இரத்தம்) தலை.

அதனால் தான் தலைசிறந்த நமது உயிர் கொடுத்து காக்கும் முருகக்கடவுளுள் முதன்முதலில் மொட்டையடித்தல் (முடியிறக்குதல்) என்னும் வழக்கம் தொன்றுதொட்டு நம் முன்னோர் கொண்டு வந்துள்ளனர். அறுபடை வீடுகளுமே செவ்வாய் கோளால் ஏற்படும் குறைகளை நீக்கும். நவகோள்களில் செவ்வாய் (அங்காரன்) தனிச்சந்நதி கொண்டு உறையும் வைத்தீஸ்வரன் கோவில் இங்கு முத்துக்குமாரசுவாமி (முருகன்)யை வணங்க வேண்டும்.

சிவப்புநிறக் கதிர்கள் அதிகம் படுமிடமாய்த்திகழும் பழனியும் செவ்வாய் கோளின் தாக்கம் நமக்கு நன்மை தருவதாய் மாற்றித் தரவல்லது.

நவகோள்களில் ஒன்றான வியாழனோடு முருகனைத் தொடர்புபடுத்தும் சோதிடம். "குருபார்க்க கோடி நன்மை" என்பது ஒரு பழமொழி. அவ்வியாழன் தேவர்களில் குரு 'பிரகஸ்பதி' எனவும் வழங்கப்படுபவர். முருகன் கயிலையில் வளர்ந்த சமயம் இந்திரன் உள்ளிட்ட தேவர்கள் முருகனோடு சண்டையிட்டு தங்கள் குருவிடம் தஞ்சம் புக, தேவர்களைக் காக்கவேண்டி முருகன் எப்போது எது சொன்னாலும் அதற்குதான் கட்டுப்படுவதாய் வாக்களித்து அவர்களை விடுத்தார். அதுமுதல் முருகன் அடியார்களுக்குக் குருவால் ஏற்படும் கோளாறுகள் நீங்க பெறுவது செந்திலம்பதி. எனவே அறுபடை வீடுகளில் ஒன்றாக திருச்செந்தூர் குறிப்பிடுகிறது. வருடந்தோறும் நடைபெறும் 'குருப்பெயர்ச்சி விழா' இங்கு மிகச்சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது என்பது குறிப்பிடத்தக்கது.

நாளும் கோளும்

*"நாளும் கோளும் உதவுவது போல்*
*நண்பன் கூட உதவ மாட்டான்"*

என்பது பழமொழி. எந்தெந்த கிழமைகளில், எந்தத் திதிகளில் (வளர், தேய் பிறை) எச்செயல்களைச் செய்தல் நன்மை பயக்கும் என நம் முன்னோரான சித்தர்கள் வகுத்து வைத்துள்ளனர். ஒவ்வொருவர் பிறக்கும் நேரத்திற்கு ஏற்றார் போலத்தான் அவர்கட்கு உடல்நலம் அமைந்திருக்கும் எனப் பொதுவாகக் கருதப்படுகிறது. செவ்விலக்கியங்களில் ஒன்றாகிய முத்தொள்ளாயிரத்தில், "பிணி கிடந்தார்க்குப் பிறந்தநாள் போல" என்ற செய்தி பலகாலமாய் நம்பப்படுகிறது. சமயக்குரவர்களில் ஒருவராகவும் முருகனது அவதாரமாகவும் கருதப்படும் திருஞானசம்பந்தரின் கோளறு பதிகத்தில்,

*"வேயுறு தோளிப்பங்கன் விடம் உண்ட கண்டன்*
*மிக நல்ல வீணை தடவி*
*மாசறு திங்கள் கங்கை முடிமேல் அணிந்து*
*என் உளமே புகுந்த அதனால்*
*ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி,*
*சனி பாம்பிரண்டும் உடனே*
*ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல*
*அடியாரவர்க்கு மிகவே"*

உமையொரு பாகனாம் சிவனது திருவடியினை அடைந்தார்க்கு ஞாயிறு உள்ளிட்ட நவகோள்களால் உண்டாகும் தீமைகள் அகன்று நல்லநிலை பெறுவர் என்பதனைத் தம் திருக்கடைக்காப்பில் திருஞானசம்பந்தர் குறிப்பிடுகிறார்.

**கோளறுக்கும் குமரன் - அருணகிரியார் பாடல் வழி**

தேவாரத்தினைப் போன்று அருணகிரியார் தம் பாடல்களில் நவகோள்கள் குறித்தும், அவற்றின் தீமைகளில் இருந்து விலகும் வழிகளையும் பாடல் ஊடே அடியார்கட்குச் சுட்டுகிறார். இதனை,

*"நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த*
*கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு*
*தாளும் சிலம்புஞ் சதங்கையுங் தண்டையுஞ் சண்முகமுந்*
*தோளும் கடம்பு மெனக்கு முன்னேவந்து தோன்றிடினே"*

குமரனது இரு திருவடிகளும், அதில் விளங்கும் சிலம்பும், சதங்கையும், அவரது ஆறு திருமுகங்களும் பன்னிரு தோள்களும், கடம்ப மாலையும் முன்னே வந்து காட்சி கொடுக்குமானால் கெட்ட நட்சத்திரங்கள் என்ன செய்யும், கெட்ட கோள்கள் என்ன செய்யும், கொடிய எமன்தான் என்ன செய்ய முடியும்? அமுதம் போல் ஒளிசிந்து முருகனது பார்வை கிடைக்கப்பெறும்போது நாள் மற்றும் கோள் ஏற்படுத்தும் தாக்கங்கள் தகர்த்து எறியப்படும் என அருணகிரியார் அறிவிக்கின்றார்.

ஒருவரது பிறந்தநாள், நேரம் முதலானவற்றைக் கணக்கிட்டு அத்தருணத்தில் காணப்படும் கோள்களின் நிலையினைக்கொண்டு அவருடைய விதி, தொழில் முதலானவை கணக்கிடப்படுகின்றன. இத்தாக்கத்தினைத் தம் பாடல்களில் பயன்படுத்தும் அருணகிரியார் தமக்குப் பிறவி ஏற்பட்டபோது படைப்புக் கடவுள் நான்முகன் எழுதிய தம் தலையெழுத்து இறைவன் முருகனது திருவடி பட்டு அழிந்தது என்றும் விதியினை மாற்றும் ஆற்றலுடையவன் இறைவன் கந்தரலங்காரப் பாடல்வழி உணர்த்த முனைகிறார்.

*"சேல்பட்டழிந்தது செந்தூர் வயற்பொழில் தேங்கடம்பின்*
*மால்பட்டழிந்தது பூங்கொடி யார்மனம் மாமயிலோன்*
*வேல் வேலையுஞ் சூரனும் வெற்புமவன்*
*கால் இங்கென்றலை மேலயன் கையழுத்தே"*

செந்தூரில் வாழும் முருகனின் வேல்பட்டுக் கிரவுஞ்சமலை பொடிப் பொடியானது. சூரனது சம்ஹாரம் நிகழ்ந்து அசுரகுலம் அழிந்தது. இறைவனது திருவடி தம் தலைமேல் பட்டதால் பிரமன் எழுதிய தமது தலையெழுத்து அழிந்ததாய் அருணகிரியார் இயம்புகின்றார்.

*"கெடுவாய் மன்னே கதிகேள்கரவா*
*திருவாய் வடிவேல் இறைதாள் நினைவாய்*
*சுடுவாய் நெடுவே தனைதூள் படவே*
*விடுவாய் விடுவாய் வினையா வையுமே"* (அனுபூதி)

முன்னைய வினைப்பயன் வழி இப்பிறவியானது அமையும் என்பது சோதிடம். ஆயினும் அருணகிரியார் தம் அனுபூதிப் பாடலில் இறைவன் திருவடியினை மனதில் இருத்தி தியானிப்பதன் மூலம் இம்மை, மறுமை வினைகள் யாவும்

ஒழிந்து பிறப்பை அறுத்துப் பேரின்ப மெஞ்ஞான வீடு பேற்றினை அடையலாம் என எடுத்து இயம்புகின்றார்.

இறைவனை மனதிலிருத்தி வணங்குவதன் மூலம் உடலில் தோன்றும் பல பிணிகளையும் விலக்கி, மனத்துயர் ஏற்படுத்தும் எண்ணம் களைந்து, பிறவிக்குக் காரணமான வினைகளை அறுத்து, வீடுபேற்றினை அடையலாம் என்றும், பிணிகளைபவன் இறைவனே என்றும் இங்குச் சுட்டிக்காட்டுகின்றார். மேற்கண்ட பாடலை பாரயணம் செய்வதன் மூலம் தீராத உடல்பிணி தீரும் என்றும், தீய எண்ணங்கள் விட்டு அகலும் என்றும், பிறருக்குத் தெரியாமல் செய்த பாவங்கள் அகலும் என்றும் அனுபவப்பட்ட அடியார்கள் கூறுகின்றனர்.

**கல்வி, ஞானம் தரும் கந்தரனுபூதி**

கந்தர் அனுபூதிப் பாடல்களைப் பொருள் உணர்ந்து நித்தமும் ஓதுவார்களானால், அப்பக்தர்களது சித்தமே வீடாக நிருத்த மாடுவான் முருகப்பெருமான். அவனது சரண கமலாயத்தை அறியாதவர்களுக்கும் அருளனுபவம் பெருக்குவது அனுபூதியாகும்.

*"வானோ புனல் பார் கனல்மா ருதமோ*
*ஞானோ தயமோ நவில்நான் மறையோ*
*யானோ மனமோ எனையாண்ட இடம்*
*தானோ பொருளாவது சண்முகனே"*

என்ற அனுபூதிப் பாடலைத் தினமும் மனதினை ஒருநிலைப்படுத்தி ஓதுவதின் மூலம் கல்வியினையும், மேம்பட்ட அறிவினையும் பெற்றும் அவர்களது ஆசிரியர் மதிக்கத்தக்க நிலையினை அடைந்து மேன்மையுறலாம் என்கிறார். அருணகிரியார் இறையருளால் தாம் பெற்ற நல்லொழுக்கத்தினையும், தெளிந்த அறிவினையும் பெற்றதாக உலகோர்க்கு உபதேசிக்கிறார். இதனை,

*"யாமோதிய கல்வியு மெய்யறிவுந்*
*தாமே பெற வேலவர் தந்ததனாற்*
*பூமேல் மயல் போயற மெய்ப் புணர்வீர்*
*நாமேல் நடவீர் நடவீரினியே"*

எனும் இப்பாடல் ஓதுவது மூலம் கல்வியறிவும், அதன் கண் பெறும் மெய்யறிவும் ஆகாமிய விளைவுக்கு ஏதுவாகாமல் பிறவாநெறியில் மேன்மையுறலாம். முருகனை வணங்கும் அடியவர்களுக்குக் கூற்றுவனால் யாதொரு தீங்கும் நேராதென்றும் விதியினை மாற்றும் ஆற்றல் பெற்றவன் இறைவன் என்பதனைக்,

*"கார்மாமிசைக் காலன் வரிற் கலபத்*
*தேர் மாமிசை வந்தெதிரப் படுவாய்*
*தார் மார்ப வலாரி தலாரி யெனுஞ்*
*சூர் மாமடியத் தொடு வேலவனே"*

எனும் அனுபூதி பாடல்வழி புலப்படுத்துகிறார் அருணகிரியார். இப்பாடல் மரணம் நேரிட்டால் நம் உயிர் முருகன் அடியார்களால் கொண்டு

போகப்படுமேயொழிய, எமதூதர்களால் பற்றப்பட மாட்டாது என்பதைப் பொருளாகப் பெற்றுள்ளது. அஞ்ஞானியாகிய தமக்கு மெய்பொருள் ஞானத்தினை இறைவன் உபதேசித்ததாக வியந்து தம் பாடலில் அருணகிரியார் உணர்த்துகிறார்.

*"அரிதாகிய மெய்ப் பொருளுக் கடியேன்*
*உரிதா உபதேச முணர்த்தி யவா*
*விரிதாரண விக்ரம வேளி மையோர்*
*புரி தாரக நாக புரந்தரனே"*

இவ்வனுபூதி பாடலினை ஓதுவதன் மூலம் இறையனுக்கிரகம் பெற்று அனைத்துச் செல்வங்களையும் அடையலாம் என்பதும் குறிப்பிடத்தக்க செய்தியாக அருணகிரியார் கூறுகிறார்.

முடிவுரை

இப்புவியில் வாழும் உயிர்களுக்கு நிகழும் அனைத்துச் செயல்களுக்கும் காரணகர்த்தாவாகத் திகழ்பவை நவகோள்களே என்பதை அறிவியலும் ஒத்துக்கொள்கிறது. எனினும் அதன் அனைத்தும் செயல்களையும் நல்வினையாக மாற்றும் அதிகாரம் "முழுமுதற்கடவுளாம் முருகன்" ஒருவனாலேயே முடியும். இழிநிலையிலிருந்த தன்னை நன்னெறிப் படுத்தியவன் முருகனே என்பதையும், தான்பெற்ற அனுபவப்பாடத்தைக் கொண்டு அடியார் நல்வழி வாழ்ந்து வீடுபேறு பெற சந்த நயமிக்க பாடல்களைத் தந்து நம்மைக் காப்பவர் அருணகிரியார்.

# தமிழர்களின் துணைவன் முருகன்

முனைவர் த. அருள்ஜோதி.
D4. நடேசன் 2வது தெரு,
நல்லதம்பி நகர், ரெங்கநாதபுரம்,
மேடவாக்கம், சென்னை -100.

மனித இனம் முதன்முதலில் தோன்றியதாகக் கருதப்படுவது லெமூரியா, அந்தப்பகுதியாகப் பின்னாளில் ஆய்வுகள் மூலம் உறுதிசெய்யப்பட்ட இடம் குமரிக்கண்டம். அங்குத்தோன்றிய மனிதன் பேசிய மொழி, 'தமிழ்' .அம்மொழியோடும், அம்மொழிபேசும் மாந்தர்களோடும் ஆதிதொடர்புடைய தெய்வம் முருகன்.

மக்களின் நீங்காத் துன்பம் களைந்து, மனித உயிரினம் வாழ்ந்து கொண்டிருக்க நம்பிக்கைத் தெய்வமாக விளங்குவது முருகப்பெருமனே!. ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய உயர்ச்சிக்கும், முயற்சிக்கும் முருகப்பெருமானின் அருளே! காரணம் என எண்ணிப் போற்றுகின்றான்.

## பண்டைய தமிழரும் முருகனும்

தமிழினத்தார் சங்க இலக்கியங்கள், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், சித்தர் இலக்கியங்கள், குறவஞ்சி, உலா, மாலை, கலம்பகம், புராணம் முதலான சிற்றிலக்கியங்கள், தற்கால இலக்கியங்கள் போன்றவற்றில் முருகனின் தோற்றம், சிறப்பு, அவரைப் போற்றி வழிபடும் முறை போன்றவற்றை எடுத்துரைத்துக் கௌமாரச் சமயத்தை வளர்த்து வந்துள்ளனர்.

பண்டைய தமிழர்களைப் பற்றியச் செய்திகளை அறிந்து கொள்ளக் காரணமான நூல்கள் சங்க இலக்கியங்கள். திருமுருகாற்றுப்படை, பரிபாடல் இரண்டுமே முருகனைப் பற்றி அதிகம் பேசும் நூலாயினும்; மற்ற நூல்களில் குறிஞ்சித் திணையிடத்தும், வீரச்சுவையிடத்தும் முருகன் பற்றிய கருத்துக்கள் இடம்பெறுகின்றன. முருகன் தோற்றமும், மனிதர்களுக்கு அறுபடைகளில் அருள் பாலித்தமையும், வெறியாடலில் தோன்றியமையும், போர்க்களத்தில் வெற்றியை ஈட்டித் தந்தமையும் பாடப்பட்டுள்ளன. சேர, சோழ, பாண்டிய மன்னர்களின் கோவில்களும், சிற்பங்களும், ஓவியங்களும், கல்வெட்டுகளும், செப்பேடுகளும் முருகனைச் செவ்வேள் எனப் போர்க்குரிய தெய்வமாகக் கண்டு, பரணியைப் போற்றி, தரணியை ஆளக் கருதினர் என்பதை உணர்த்துகின்றன.

முருகு, செவ்வேள் அழகான தமிழ்பெயர்களைத் தங்கள் குழந்தைகளுக்குச் சூட்டி மகிழ்ந்துள்ளனர். மனித உயிர் தோன்றிய காலத்து மனிதனின் தேடலாக விளங்கிய முருகு, கண்கண்ட கலியுக வரதனாக முகிழ்ந்து, கௌமாரச் சமயமாக நிலைகொண்டது, இந்நெறி தமிழர்களின்

இறையுணர்வின் மேன்மையையும், முருகப்பெருமானின் அருள் தன்மையையும் எடுத்துரைக்கிறது.

தமிழர்களுடைய சிறுதெய்வ வழிபாட்டில் அவர்களின் முன்னோர் வழிபாடு முக்கியத்துவம் பெறும். பெருந்தெய்வங்களை வழிபடும்பொழுது அவற்றோடு சிறுதெய்வங்களை வழிபாடு செய்யும் நிலை தமிழர் பண்பாட்டில் இடம்பெறுகிறது. முருகப் பெருமான் அறுவகைச் சமயத்தில் கௌமாரத்தின் தலைவனாக விளங்கினாலும் ஆதிகாலம் முதலே நாட்டுப்புறத்தில் போற்றி வழிபட்ட தெய்வமாவார்.

**சித்தர்களால் உணரப்பட்ட தெய்வம்**

சித்தர்களின் சித்தாந்தமே ஓரே ஜீவன் எல்லோரிடமும் நிறைந்திருக்கிறது. அந்த ஜீவனைப்பற்றிய அறிவுபூர்வமான ஆய்வுகளை எடுத்துரைத்தவையாக அவர்களின் கருத்துக்கள் அடங்கியிருந்தன. மனிதர்கள் இருவகையில் இறைவனை அடைய வழிகளைக் கைக்கொண்டனர். ஒன்று சிலைகளை உருவாக்கி வடிவம் தந்ததும், மற்றொன்று தனக்குள் தேடி மனிதன் என்பவன் தெய்வமாகலாம் என மெய்ஞானம் கண்டதும் ஆகும்.

மனிதன் ஐம்பூதங்களையும், முக்குணங்களையும் உணர்ந்து, அவற்றை ஒடுக்கக் கற்றுக் கொண்டான். தன் மண்ணுலக வாழ்வின் நிலையின்மையை உணர்ந்து தன்னுள் தேடிய தேடலாகத்தான் கடவுளைக் கண்டான். அதற்கு உருவமும், அருவமும், அருஉருவமும் தந்து தான் தோன்றிய நாள் முதல் போற்றி வருகிறான்.

**கௌமாரம் பரவல்**

கௌமாரம் என்ற சமயமானது உலகெங்கும் பரவக் காரணமாக அமைந்தவர்கள் தமிழர்கள். ஜாவா தீவு, பிஜித் தீவு, இலங்கைத் தீவு, மலேசியா, தென்ஆப்பிரிக்கா, ஆஸ்திரேலியா, மொரீஷியஸ், சிங்கப்பூர், போன்ற இடங்களில் முருகனுடைய விழாக்கள் கொண்டாடப்பட்டு வருகின்றன. பலநாடுகளுக்கு வாணிப நோக்கோடு, பணி வாய்ப்போடு பரந்து சென்றதால் அவர்கள் சென்ற நாடுகளில் தமிழ் மொழி அழியாது காக்கவும்; தமிழ்த்தெய்வமாம் முருகப்பெருமானின் வழிபாட்டு முறை மறையாது சிறந்து வளரவும்; திருவிழாக்கள், மாநாடுகள், கருத்தரங்குகள், இலக்கியங்கள், பாடல்கள், சொற்பொழிவுகள், இணைய வலைதளங்கள் என உருவாக்கி கௌமாரத்தைப் போற்றி வளர்த்து வருகின்றனர்.

**விழாக்கள்**

கார்த்திகை மாத 'கார்த்திகைத் திருநாள்' முருகப்பெருமானின் விசேட தினமாகக் கொண்டாடப்படுகிறது. 'வைகாசி விசாகம்' ஜென்ம நட்சத்திரத் தினமாகவும், சூரபதுமன் என்ற அரக்கனை அழித்தது 'சஷ்டியாகக்' கொண்டாடப்படுவதோடு தைப்பூசமும், பங்குனி உத்திரமும் மிக முக்கியமான திருநாள்களாகக் கொண்டாடப்படும். இவ்விழாக்களின் போது காவடி எடுத்தல்,

அலகு குத்தல், பால்குடம் எடுத்தல், முடி இறக்குதல், பாதயாத்திரை போன்ற நேர்த்திக் கடன்களைச் செலுத்துகின்றனர்.

தைப்பூசம், பங்குனி உத்திரம், மாத கார்த்திகை, ஆடிக் கிருத்திகை, கார்த்திகை தீபம், கந்தர்சஷ்டி போன்றவற்றில் முக்கியத்துவம் கொடுத்ததோடு சிவன், சக்தி, கணபதி விழாக்களின் போதும் முருக வழிபாட்டை மேற்கொண்டனர்.

**விரதங்கள்**

முருக வழிபாட்டில் இருபாலருக்கும் 'விரதங்கள்' மனவலிமையைப் பெருக்கி, நம்பிக்கையுணர்வை ஊட்டியதோடு; விரதம் மேற்கொள்ளும் அனைத்து நாட்களிலும் விழிப்போடு செய்ய வேண்டிய கடமைகள் மூலம் அவர்களை முறைப்படுத்தியது. பாக்கு, புகைப்பிடித்தல், மது, மாது, சூது , திருட்டு, பொய் போன்ற தேவையற்ற செயல்களில் இருந்து காப்பாற்றி வைராக்கியத்தோடு வாழ வைத்துள்ளது. வாழ்வின் தத்துவம் உணர்ந்த மனிதன் முருகன் திருவருள் பெற,

*"யா அம் இரப்பவை*
*பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின் பால்;*
*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளினர்க் கடம்பின் ஒலிதா ரோயே!* (பரிபாடல் செவ்வேள் 5)

என்று போற்றி, புராதனக் காலம் முதலே சமயச் சடங்குகளும், விரதங்களும், விழாக்களும் கண்டான். முருகனுக்கு மக்கள் இருந்த விரதங்கள், மனம், மொழி, மெய்களால் இறைச்சிந்தனையை வளர்த்ததோடு, குடும்ப நலம், உடல்நலம், குலம் தழைத்தல் ஆகிய நீண்ட பயனையும் காத்ததை அறியமுடிகிறது. மேலும் இரக்க குணம், தருமச் சிந்தனை, மனஉறுதி, ஒளி வழிபாடு, வீட்டின் தூய்மை போன்றவை வளரக் காரணமாக அமைந்துள்ளன. ஒரு மாதம், மூன்று மாதம், ஒரு வாரம், ஒருநாள் போன்ற கணக்குகளில் முருகன் சிந்தனையில் இருந்து, சிவச் சின்னங்களோடும்; முருக ஓங்கார மந்திரத்தோடும்; மற்ற மந்திரங்களையும் ஓதி, முடிவில் முருகனுடைய தலங்களுக்குச் சென்று முடித்துக்கொள்வதுமாகக் கடைப்பிடிக்கின்றனர்.

**அறுபடை வீடு**

நக்கீரரின் திருமுருகாற்றுப்படை, கச்சியப்ப சிவாச்சாரியரின் கந்தபுராணம் ஆகிய நூல்களில் முருகப்பெருமானின் அறுபடைகள் சிறப்பிக்கப்படுகின்றன. மாங்கனிக்காகத் தமையன் விநாயகரோடு போட்டியிட்டுத் தோற்ற கோபத்தில் தண்டாயுதபாணியாக நின்றது பழநி. மகனின் அறிவை அறிய எண்ணிய தந்தைக்குப் பிரணவ மந்திரத்தை ஓதித் தகப்பன் சுவாமியாக காட்சி தந்தது சுவாமிமலை.

அசுரன் சூரபத்மனோடு முருகன் போரிட்டு வென்று வெற்றி வாகை சூடிய திருத்தலம் திருச்செந்தூர். சூரபத்மனைப் போரில் வென்று, இந்திரன்

மகளான தெய்வானையை மணந்தது திருப்பரங் குன்றம். மலைப்பெண் குறத்தி வள்ளியை விரும்பி திருமணம் செய்து அமர்ந்த கோலம் திருத்தணி, முருகன் வள்ளி, தெய்வானையோடு அமர்ந்து மக்களுக்கு அருள்பாலிக்கும் தலமாகவும், அவ்வைப் பாட்டிக்கு சுட்டபழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா எனக் கேட்டு சோதித்து தன் வடிவைக் காட்டி மெஞ்ஞானத்தை உணர்த்திய திருத்தலம் பழமுதிர்ச்சோலை ஆகும்.

தென்னிந்தியாவில் வாழும் தமிழர்கள் தாம் தோன்றிய காலம் முதலே முருகைப் போற்றினர்.அதனால்தான் குன்று இருக்கும் இடங்களைக் குமரனுக்குரிய இடமாக எண்ணியதோடு, உறவுமுறையோடும் மற்றதெய்வ வழிபாட்டோடும், இணைத்து வழிபட்டனர்.

முடிவுரை

முருகப்பெருமானின் தோற்றமும், சிறப்பும் பெருந்தெய்வ வழிபாடுகளான சைவம், சாக்தம், சௌரம், காணாபத்தியம், வைணவம் போன்ற சமயத்தினராலும் எடுத்துரைக்கப்படுகின்றன.

முருகனுக்கு மக்கள் இருந்த விரதங்களை ஆராய்ந்தால், மனித உடல்பேணலோடு , நீண்ட வாழ் நாள் பயனையும் தருபவையாக உள்ளன என்பது அறிவியல் உண்மையாகும்.

முருக வழிபாட்டுக்குப் பயன்படுத்திய பொருள், மந்திரம், பாடல், நாட்கள் என ஆராயுமிடத்து அவை அறிவியல் பூர்வமான காரணமாக விளங்குகிறது.

தன்னைக் கடவுள் நிலைக்கு உயர்த்த எண்ணிய மனிதன் தன்அருகில் இருப்பவராக, தன் துன்பம் களைபவராக, தூணிலும் துரும்பிலும் இருப்பவராக, உளவியல் ரீதியான நம்பிக்கையாக உணர்ந்துள்ளான்.

பார்வை நூல்கள்

1. பரிபாடல் மூலமும் தெளிவுரையும் (1971) - புலியூர்க்கேசிகன் உரை.
2. குறுந்தொகை மூலமும் உரையும் (1985) - தமிழ்ப் பல்கலைக் கழகம்- தஞ்சாவூர்.
3. பதிற்றுப்பத்து (1974) - புலியூர்க்கேசிகன் உரை.
4. புறநானூறு (1958) - புலியூர்க்கேசிகன் உரை.

# MURUGAN TEMPLES IN UNITED KINGDOM

**Muthu. Alagappan,**
(London, UK)
28, Gandhi St., Janatha Nagar,
Saravanampatti,
Coimabatore - 641 035.

Religion is nothing but a belief in an eternal being which is the cause of creating, sustenance and destroyer and the one which determines our life and other activities. This is the meaning about God in Hindu religion. According to Tamils, Kotravai and the son Lord Muruga are the Prime Gods. Tamils have migrated to many countries, however, wherever they live they wouldn't forget the worship of Lord Muruga. Having said that, in the United Kingdom(which includes England, Scotland and Wales) also, there are many temples dedicated for Lord Muruga.

**London Murugan Temple**

London Murugan Temple is situated in East London, Manor Park. The seed for this temple was first sown in 1975 by a group of people who realised the religious and cultural needs of the Tamil-speaking Hindu community. The temple at the present location in Manor Park/East Ham was open in August 2006 and Kumbabishekam was performed as per Saiva Agamic rites. Sivacharyar from Tamilnadu are performing poojas in the temple. Temple Religious songs are also sung here.

This temple has been built with a South Indian architectural style. It has three main inner temples for Sri Ganapathi, Sri Murugan and Lord Shiva. Other deities in the temple are Goddess Sakthi, Hanuman, Lord Ayyappan, Bhairavar, Lord Perumal, Mahalakshmi, Dhakshinamoorthy, Natarajar, Arunagiri nathar, Idumban, Suriyan, Chandran and Navagrahas.

The gopuram (temple tower) is a 52 foot tower with a large main entrance. Polished granite tiles from India cover the floor and reflect the light carefully designed to fall delicately around the deities adorned with glowing lamps, fruits and flower, The shrines are carved from black granite shipped from India, the intricate designs crafted by traditional Hindu stonemasons who have beautifully sculpted the

many forms of each deity on the outer walls of the shrines which tower through the ceiling to represent the meeting of mortal and divine.

Daily Opening Time London Sri Murugan Temple:

800 To 1300 And 1700 To 2130

Main Aarthi (Pooja) : 900am 1200pm & 730pm

Address: 78-90 Church Road, Manor Park, London, E12 6AF, United Kingdom

**Highgatehill Murugan Temple**

Highgatehill Murugan Temple is also known as Archway Murugan Temple is located in North London. The main objective of the temple is to propagate Hindu religion and to perform Hindu rituals.

The temple was built according to the ancient Saiva scriptures and architecture.It was opened on the December 1979 with a grand ceremony attending more than 700 people. "The Maha Kumbabhishegam" - "Consecration Ceremony" was held in June 1986,attended by over a thousand devotees. It was the culmination of 20 years of single-minded dedication and hard work of Late Sri Sabapathipillai.

The Highgatehill Murugan Temple was chosen by the Queen Elizabeth II as part of her wish to recognize each of Britain's many faiths. Queen Elizabeth II visited the Highgatehill Murugan temple on the 6th of June 2002, in her first major engagement after the "Golden Jubilee" celebration. Highgatehill Murugan Temple is the first Hindu temple to be visited by the British monarch in the British history.

The temple is open 7 days a week from 8 am to 2 pm and 5 pm to 9 pm. Pooja times are at 8am, 11.30am, 5pm and 8pm. Extended timings will be followed on Festival & Special Auspicious days. Address: 200A Archway Road, London N6 5BA

**Skanda Vale**

Skanda Vale is a Hindu and Multi Faith ashram and monastery founded by Guru Sri Subramanium in the year 1973 at Carmarthenshire, south-west Wales. The ashram houses 3 temples one each dedicated to Lord Subramanium, Divine Mother and Lord

Vishnu. Skanda Vale is set in over 300 acres of beautiful woodland and pasture, in a secluded valley in South West Wales, UK.

**Daily pujas**

There are 6 Pujas performed in each of the temples everyday : 5:00 - Murugan Temple 6:30 - Maha Shakti Temple 9:30 - Ranganatha Temple 13:30 - Murugan Temple 18:00 - Maha Shakti Temple 21:00 - Murugan Temple

**Weekly pujas**

Lord Murugan Temple: Mahabishekam on Sundays at 13:30

Lord Murugan Temple: Christian Mass on Sundays at 21:00

Maha Shakti Temple: Mahabishekam on Saturdays at 18:00

Sri Ranganatha Temple: Mahabishekam on Tuesdays & Fridays at 09:30

**Visiting the temple**

There are about 25 monks, nuns and three lay community members who live here full time. The temple is open for pujas every day at 05:00, 13:30 and 21:00. It is closed to the public at all other times. Every Sunday at 1:30pm they perform a mahabishekam to Lord Murugan, and the highlight of the month is a full moon mahabishekam to Lord Shanmukha.

If anybody has eaten meat, poultry or fish three days before coming to Skanda Vale, they have to remain at the back of the Murugan Temple – the monks will bring aarthi, vibhuti and prasadam to them. If the young children who are noisy or restless, they have to be remain at the back of the Temple, so as not to disturb the devotions.

Address: SKANDA VALE, Llanpumsaint, Carmarthen, WALES, UK SA33 6JT

There are many other hindu temple across UK and the following are some of them:

1. London Sri Mahalakshmi Temple
2. London Ilford Sri Selva Vinayagar Temple
3. Shree Ghanpathy Temple, Wembley
4. Sri Thiruthanigai Vale Murugan Temple, New Malden

5. Ealing Shri Kanaga Thurkkai Amman Temple
6. Sri Karpaga Vinayagar Kovil, Walthamstow
7. Eala patheswara temple, wembley
8. London Sivan Kovil
9. Leicester Shri Siva Murugan Temple
10. Miltonkeynes Murugan Temple
11. Liverpool Ganesh Temple
12. Coventry Eellakkanthan Thirukkovil, (Murugan temple)
13. Shri Sithi Vinayagar Thevasthanam, Harrow
14. North England Sri Murugan Temple, Leeds
15. Sri Vel Murugan Temple, Lewisham
16. Sri Sakthi Ganapathy Temple, Croydon
17. Sivaskanthagiri Arulmigu Murugan Temple, Croydon
18. Shri Venkateswara Balaji Temple of UK, Tividale, West Midlands, Birmingham
19. Wales Murugan Temple

The above Hindu Temples are the creations of hard and dedicated efforts of Hindu Tamils including Srilankan Tamils. It is noteworthy that poojas are being performed according to Agamic rites and our Sivacharyas and Pattacharyas are performing the poojas. Tamils perform Archanas, ear boring and even marriage are conducted in these Temples.

# பரிபாடலில் முருகன் வரலாறு

முனைவர் பூ.மு. அன்புசிவா
தமிழ்த்துறைத்தலைவர்
சங்கரா அறிவியல் மற்றும் வணிகவியல் கல்லூரி
கோயம்புத்தூர்- 641 035

"பரிபாடல் என்பது மிகவும் முக்கியமான அதேவேளையில் ஓர் அசாதாரணமான தொகுதியாகவும் காணப்படுகிறது. முதலாவது, இது ஒரு இசைப்பாடல் இலக்கிய வகை அல்ல. இது முற்றிலும் நிகழ்த்துகை, ஆற்றுகை சார்ந்த ஒரு வடிவம். அதிலே யார் பாட்டு இயற்றினார்கள்? யார் இசையமைத்தார்கள்? என்கின்ற தரவுகள் தரப்பட்டுள்ளன. இசைத்தமிழ் நூல் ஒன்று இங்கு இலக்கியமாகக் கொள்ளப்படுகிறது." எட்டுத்தொகை இலக்கியங்களுள் 'ஓங்கு பரிபாடல்' என அடைமொழியால் சிறப்பிக்கப்படும் இலக்கியமாகப் பரிபாடல் விளங்குகிறது, பரிபாடல் என்னும் ஒருவகைப் பாவால் இயன்ற நூலாதலால் இது பரிபாடல் எனப்பெயர் பெற்றது. பரிபாடல் பாடிய புலவர்கள் பதின்மூவர். அவற்றிற்கு இசை வகுத்தோர் பதின்மர் ஆவர். "பரிபாடல் மதுரை மாநகரையும் மதுரை நகருக்கு வளமும் வனப்பும் காப்பும் தந்த வையை ஆற்றையும் மதுரையைச் சார்ந்த திருப்பரங்குன்றத்துச் செவ்வேளாகிய திருமுருகனையும் மதுரையை அடுத்துள்ள திருமாலிருங்குன்றத்து நெடுவேளாகிய மாயோனையும் கொற்றவைத் தெய்வத்தையும் பாடுவதாக அமைந்துள்ளது. பிறதொகை நூற்களைப் போலன்றித் தமிழ்நாட்டின் பகுதிகளையெல்லாம் கொண்டு எழுந்த செய்யுளாக இல்லாமல் மதுரை நகரையும் மதுரையையொட்டி ஓடுகின்ற வையை ஆற்றையும், திருப்பரங்குன்றத்தையும், திருமாலிருங்குன்றத்தையும் பாடுபொருளாகக் கொண்டு பரிபாடல் எழுந்துள்ளது என்பதால் இந்நூலினை மதுரையைப் பற்றி எழுந்த நூல் எனக் கூறுவர். செவ்வேளைப் பற்றிய எட்டுப்பாடல்கள் 612 அடிகளைக் கொண்டவையாக அமைந்துள்ளன.

## கந்தவேளின் பெயர்கள்

முருகன் என்னும் பெயர் பரிபாடல் உள்ளிட்ட எல்லாச் சங்க இலக்கியங்களிலும் பயின்றுவந்துள்ளது. (முருகு:269, அகம்.158, பரி., 550, புறம்.,53, ஐங்குறு., 249) 'விழைவு' எனப் பொருள்படும். 'வேள்' (8:61), என்னும் சொல் அடைமொழி சேர்ந்து நெடுவேள்(3:37) வெல்வேள்(18:36), செவ்வேள்(5:13) எனப் பரிபாடலில் காணப்படுகிறது. கந்தவேளைக் குறிக்கும் செவ்வேள் எனும் பெயர் பரிபாடலில் மட்டும்தான் இடம்பெற்றுள்ளது. அதனால்தான் முருகனைப் பற்றிய பாடல்களைச் 'செவ்வேள்' எனும் தலைப்பில் பரிபாடலில் அமைத்தனர் எனலாம்.

## வையை வரவும் வளமும்

*"வளி பொரு மின்னொடு வான் இருள் பரப்பி*
*விளிவு இன்று, கிளையொடு மேல் மலை முற்றி,*

*தளி பொழி சாரல் ததர் மலர் தாஅய்*
*ஒளி திகழ் உத்தி உருகெழு நாகம்,*
*அகரு வழை, ஞெமை, ஆரம், இனைய,*
*தகரமும் ஞாழலும் தாரமும் தாங்கி*
*நளி கடல் முன்னியது போலும், தீம் நீர்*
*வளி வரல் வையை வரவு"* (பரி. 12: 1-8)

என்று வையையில் கடல்போல் நீர் பெருகி வந்த காட்சி சொல்லப்படுகிறது. மண்ணிலுள்ள நீர் ஆவியாகி மேகமாகத் திரண்டு மழையாகப் பொழிகிறது. மின்னலும் இருளுமாக மாறிமாறித் தோன்றி சைய மலையில் பெய்த மழை வையை ஆற்றில் காற்றினால் உதிர்ந்த மலர்களைப் பரப்பியும் நாகம், அகில், சுரபுன்னை, ஞெமை, சந்தனம் ஆகிய மரங்கள் வருந்துமாறும் தகரம், ஞாழல், தேவதாரம் ஆகிய மரங்களைச் சாய்த்து அடித்துக்கொண்டு வந்தது. இவ்வாறு வருகின்ற வையையானது பெரிய கடல் பொங்கி வருவதைப்போல இருந்தது எனப் புலவர் வையையின் வரவைக் குறிக்கின்றார்.

கந்தவேளைக் குறிக்கும் பழைய சொல்லான 'சேயோன்' என்பதனைத் தொல்காப்பியத்தில் காணலாம். இச்சொல் விகுதியின்றி, 'சேய்' எனப் பரிபாடலில்(6:69, 5:54) வந்துள்ளது. நச்சினார்க்கினியர், 'செய்யவன்' என்பதே 'சேயோன்' என நீண்டிருக்கவேண்டும் எனக் கருதுவர். (முருகு. 61, நச்சர்.,உரை), 'சேஎய்' என்பது, 'காஅய் கடவுட்சேய்'(5:13) என, 'மகன்' என்ற பொருளிலும் 'சேஎய்குன்றம்' (6:69) என, 'செம்மை' என்ற பொருளிலும் வந்து வழங்குகின்றது.

'வேள்' என்னும் சொல், 'மன்மதன்', 'முருகன்' இருவருக்கும் பொருவாக இருந்ததால் முறையே 'கருவேள்'(மன்மதன்), 'செவ்வேள்"(முருகன்) என்றும் அடைமொழி கொடுத்துக் குறிப்பிட்டனர். இளமையாய் இருத்தலின், 'குமரன்' என்றும்(9:82) திருமாலுக்கு மருமகனாய் இருத்தலின், 'மாஅல்மருகன்" (19:57) முருகனுக்குப் பல பெயர்கள் உண்டு. 'வெறிகொண்டான்" (9:44) என்றும் முருகன் அழைக்கப்பெற்றார்.

கந்தவேள் பிறப்பு

செவ்வேளைப் பற்றிப் பாடிய புலவர்களுள் கடுவனிளவெயினனாரே கந்தவேளின் பிறப்பை விரிவாகக் கூறியுள்ளார். திரிபுரத்தை அழலால் எரித்தபின்பு சிவபெருமான் உமையோடு சேர்ந்திருந்தான். இந்திரன் சிவபெருமானிடத்து ஒரு வரம் பெற்று இச்சேர்க்கையால் தோன்றிய கருவை அழிப்பாயாக என வேண்டினான். சிவபெருமான் இந்திரனுக்குக் கொடுத்த வரத்தின்படி அக்கருவினைச் சிதைத்தான். சிதைக்கப்பட்டகரு அமரர் சேனைக்குத் தலைவனாகும் என ஞானத்தால் உணர்ந்த தெய்வ முனிவர்கள் எழுவரும் இந்திரனுக்கு ஊறு வாராதென உறுதி கூறி அவனிடமிருந்து அச்சிதைந்த கருவை ஏற்றுச் சென்றனர். அதனை அம்மாதவர் வேள்வியின்கண் இட்டனர். பின்னர் அதனை அருந்ததி நீங்கலாக, கார்த்திகை மகளிர் அறுவர்க்கும் வழங்கினர். இவ்வறுவரும் அதனை உண்டு சூலுற்றுப் பின்

இமயமலையிலுள்ள சரவணப் பொய்கையில் தாமரைப் பூவாகிய பாயலில் குழந்தையை ஈன்றனர். ஈன்ற அப்பொழுதே இந்திரன் இகல்கொண்டு முனிவர்களுக்குத் தான் கொடுத்த வரத்தை மீறி வச்சிரப்படையால் அவற்றை வெட்டினான். அவை ஆறு துண்டமாகச் சிதைந்தன. ஆறு துண்டமும் ஆறு குழந்தைகளாகிப் பின் ஒன்றாயின. குழந்தைப் பருவத்திலேயே முருகனிடம் இந்திரன் தோல்வியுற்றதால், முருகனுடைய இவ்வாற்றலைக் கண்ட அக்னிதேவன் (அனலன்) தன்மெய்யிற் பரித்துக் கோழியை முருகனுக்குப் பரிசாகக் கொடுத்தான். இந்திரன் மயிலை அளித்தான். எமன் வெள்ளாடு நல்கினான் (5:12, 14:25-26). முருகனைக் கார்த்திகை மகளிர் உமையம்மை இருவருக்கும் மகனெனப் பரிபாடல் கூறுகிறது (8:127,128) வசிட்டன் மனைவியான அருந்ததி, சிவன், முருகன் என்னும் கடவுளரைவிடப் பெருமை வாய்ந்தவள் என்பதை நிறுவவே முருகன் பிறப்புப் பற்றிக் கதைகட்டிவிடப்பட்டுள்ளது என மறைமலையடிகளார் கருதுவர் (மறைமலையடிகளார், தமிழர் மதம், ப.,207).

முருகனின் திருவிளையாடல்

முருகப்பெருமானின் திருவிளையாடல்கள் பல பரிபாடலில் காணக்கிடக்கின்றன. பல பரிபாடல்கள் முருகன் சூரபதுமனை மாய்த்ததைக் குறிப்பிட்டுள்ளன. புராணக் கதைகளை விரித்துரைக்கும் கடுவனிளவெயினனார் சூரபதுமன் அழிவினையும் விரிவாகப் பாடியுள்ளார். முருகன் தன் 'பிணிமுகம்'என்னும் யானை மீதமர்ந்து சூரன்தங்கி வாழும் கடலுக்குச் சென்றார் அவன் மா மரமாவும் மலையாகவும் மாற்றுருக் கொண்டு மறைந்தனன். கந்தவேள் தன்னுடைய வேலை எறிந்து மாவினை அழித்தார். மலையினையும் அழித்தார்; சூரனின் சுற்றத்தாரையும் அழித்தார் (பரி. 5:12-14, 5:7, 9:70, 14:18, 18:4, 19:10-103, 21:8-9).

பரிபாடலில் மொத்தமாக ஒன்பது வையைப் பாடல்கள் உள்ளன. அவற்றில் ஏழு பாடல்கள் முழுமையாகவும் ஒருபாடல் சிதைவடைந்த நிலையிலும் மற்றையது திரட்டுக்களில் இருந்து பெற்றுக்கொண்ட தனிப்பாடல்களுமாகும். இவற்றில் அகத்திணைச் செய்திகளே பெரிதும் பயின்றுள்ளன. இவற்றை அகப்பாடல்களாகக் கருதியே துறை வகுக்கப்பட்டுள்ளது. ஆனால், பாண்டியனின் ஆட்சிச்சிறப்பு, கொடைச்சிறப்பு, மதுரையின் சிறப்புக்கள் கூறப்படும் பகுதிகளில் புறத்திணைக்குரிய பண்புகள் உள்ளன. வையையின் வரவும் வளமும், நீராடுவோர் இயல்புகள், நீர்ப்பண்பாடுகள், அகப்பொருள் - புறப்பொருள் தழுவிய செய்திகள், வையையை வாழ்த்துதல் ஆகியன வையைப் பாடல்களின் பொதுவான அமைப்பாக அமைந்துள்ளன. அப்பாடல்களை இயற்றிய புலவர், இசை வகுத்தவர், பண் ஆகிய குறிப்புக்களை நோக்குவோம். கிரௌஞ்கிரி என்ற வடமொழிப் பெயர் பரிபாடலில் இடம்பெறவில்லை. கிரௌஞ்சம் என்பது அன்றிற்பறவையினைக் குறிக்குமாதலால் அம்மலையை பறவையின் பெயர்பெற்ற மலை, "புள்ளொடு பெயரிய பொருப்பு"(பரி. 21:9, 5:9) எனத் தமிழுணர்வுடன் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும். கந்தவேள் விண்ணக மடந்தை தேவசேனையை மணந்தது போலவே, மண்ணக மடந்தை வள்ளியையும் மணந்தமையால் விண்ணுலகும் மண்ணுலகும் முருகனால் இன்புற்றன (பரி-19:171,14:21-22).

**தலை, கைகள்**

ஆறு தலைகளையும் இளங்கதிர் மண்டிலம் போன்ற முகத்தினையும் உடையவர் கந்தவேள்(பரி.5:10) கந்தவேள் தன் பன்னிருகைகளிலும் பன்னிருபடைகளைக் கொண்டுள்ளார் (பரி.5:63-68) அவர்தம் முந்நான்கு தோளும் முழவினை ஒக்கும் (பரி.,5:11) முருகனது பேரறிவையும், பேராற்றலையும் புலப்படுத்தவே அறுதலைகளையும், பன்னிரு கைகளையும் உடையவராக அவரை உருவகஞ் செய்துள்ளனர் என்பர். (மாணிக்கவாசகர் வரலாறும் காலமும் தொகுதி, 2,ப.,487).

**மார்பும் அடியும்**

மலைபோன்ற ஆற்றலும் அகலமும் கொண்டது செவ்வேளின் மார்பு. அதன்கண் வாளால் வெட்டப்பட்ட வெற்றித் தழும்புகள் நிறைய உள்ளன (பரி., 9:27-28). சந்தனம் முதலிய நறுமணப் புகைகமழ மலர்மாலையும் முத்துமாலையும் கந்தவேள் மார்பினை அணிசெய்கின்றன (பரி.,9:28-29) தன் திருவடியில் தோலாலாகிய செருப்பினைக் கந்தவேள் அணிந்துள்ளான் (பரி. 21:3-7) மிதியடியைப் புனைந்துரைத்தல் நல்லச்சுதனார் பாடல் ஒன்றிலேதான் காணப்படுகின்றது.

**ஆடையும் மாலையும்**

முருகனது ஆடை செந்நிறமானது. பசும் பூணினையும், முத்தாரத்தினையும் அவர் அணிந்துள்ளார். கடப்பந்தாரும் முத்துமாலையும் அவர்தம் மார்பினுக்கு அழகு செய்கின்றன (பரி:19:97). கந்தவேளுக்கு உரியது கடம்பு ஆதலின், பெரும்பாலான புலவர்கள் அவரைக் கடப்பந்தார் சூடியவராகவே பாடியுள்ளனர் (பரி., 5:81, 21:10-11).

**படைகள், கொடி, ஊர்தி**

செவ்வேளைப் பற்றிப் பாடிய புலவர்கள் அனைவரும் முருகனது படைகள், கொடிடு ஊர்தி பற்றிய சிறப்புகளை அழகுற எடுத்தியம்புகின்றனர். கந்தவேளைப் பாடிய புலவரெல்லாம் அவர்தம் வேற்படையினையும், சூரபதுமனை அழித்ததையும் தவறாது குறிப்பிட்டுள்ளனர். வேல் பரிபாடலில், "சுடர்ப் படை (14-18) ஏந்திலை(17-2), எ·கு(9-79) எனப் பலபெயரால் வழங்கப்பெறுகிறது. தேவர்கள் வழங்கிய பதினோரு படைகளும் முருகனிடம் இருந்தன (பரி., 5:63-68) சேவலும் மயிலும் எழுதிய கொடிகளே முருகனுக்குரியன (பரி.,17-48). யானையையும், மயிலையும் ஊர்தியாக உடையவர் செவ்வேள்(பரி., 19:28, 8-67). கடுவனிளவெயினனாரும், நல்லழிசியாரும் பாடிய பாடல்களால் முருகனுடைய யானை ஊர்தியின் பெயர், 'பிணிமுகம்' என்பதனை அறியலாம்.

**வெறியாட்டு**

வெறியாட்டத்தைப் பரிபாடல் விரிவாகக் கூறவில்லை. கந்தவேளைப் பாடிப் பரவும் வேலனைப் பற்றிக் கூறும்போது சொல்லளவில், 'வெறியாட்டம்' பற்றிய குறிப்பு காணப்படுகிறது (பரி., 5:13-15, 9:44).

### பரிபாடலும் முருகாற்றுப்படையும்

பரிபாடல் பாண்டிய நாட்டை மட்டும் சிறப்பித்துக் கூறுகிறது. ஆனால் முருகாற்றுப்படை தமிழகத்திலுள்ள முருகனுடைய ஆறுபடைவீகளையும் பாடிப் புகழ்ந்துள்ளது. முருகாற்றுப்படை பழமுதிர்ச்சோலையை முருகனுக்குரியது என்று விளம்பும். பரிபாடலோ அதனைத் திருமாலுக்குரியதாகக் கூறும். முருகனது பிறப்பு அவனது சிறப்புகள் முதலியவற்றை இருநூல்களும் கருத்தொப்புமையுடன் எடுத்தியம்புகின்றன. வெறியாட்டு பற்றிய செய்திகளை முருகாற்றுப்படையில் (முருகு.,218-244) விரிவாகக் காணலாம். முருகாற்றுப்படையை விடப் பரிபாடலே கந்தவேளினது பிறப்பை விரிவாகக் கூறியுள்ளது. முருகனின் ஊர்திகளுள் ஆடும் ஒன்றென முருகாற்றுப்படை கூறுகிறது (முருகு-210).

திருமால், சிவன், அயன் முதலிய கடவுளர்கள் பரங்குன்றத்திற்கு முருகனை வணங்கச்சென்றனர் என்று பரிபாடல் கூறும். முருகனால் சிறைப்படுத்தப்பட்ட நான்முகனைச் சிறைவீடு செய்யவே சிவன் மால், இந்திரன் முதலிய தேவர்கள் சென்றனர் என்று முருகாற்றுப்படை கூறுகிறது. முருகாற்றுப்படை மட்டுமே முருகனின் ஆறு தலைகளும், பன்னிருகைகளும் புரியும் பணிகளை விரிவாகக் கூறுகிறது. பரிபாடலுக்குப் பண் வகுக்கப்பட்டுள்ளது. முருகாற்றுப்படைக்குப் பண் வகுக்கப்படவில்லை.

### பரிபாடலும் கந்தபுராணமும்

பரிபாடலும் கந்தபுராணமும் முருகனைச் சிவபெருமானின் மகன் எனக் கூறினும் முருகன் பிறந்த கதையைக் கூறுவதில் கந்தபுராணம் பரிபாடலிலிருந்து வேறுபடுகிறது. பிரமனும் தேவர்களும் கைலாயம் சென்று சிவனைக் கண்டு தம்மைச் சூரபதுமனின் கொடுமைகளினின்றும் விடுவிக்க வேண்டுமென வேண்டினர். ஐம்முகமுடைய சிவபெருமான், மேலும் ஒருமுகத்தைப் படைத்துக்கொண்டு தம் ஆறுமுகங்களிலிருந்தும் ஆறு தீப்பொறிகளை உண்டாக்கினார். பின்னர் தீக்கடவுளையும், வாயுதேவனையும் நோக்கி இப்பொறிகளைக் கங்கையிற் கொண்டு சேர்க்குமாறு கூறினார். அவர்கள் சேர்க்கவே கங்கை அவற்றைச் சரவணப் பொய்கையில் சேர்த்தது. அங்கு அவ்வாறு தீப்பொறியும் ஆறுகுழந்தைகளாக மாறின.

திருமால் உள்ளிட்ட தேவர்கள் வேண்டுகோளுக்கிணங்கக் கார்த்திகை மகளிர் அறுவரும் அக்குழந்தைகளை வளர்த்தனர், உமையம்மை சரவணப் பொய்கை சென்று ஆறு குழந்தைகளையும் ஒருசேரத் தழுவியவுடன் அவை ஆறுதலையும் பன்னிரு கைகளுமுடைய ஒரு குழந்தையாயின. இதுவே முருகன் பிறப்புப் பற்றிய கந்தபுராணக் கதையாகும்.

### தொகுப்புரை

❖ சங்க இலக்கியங்களில் தனித்துவமாக விளங்கும் பரிபாடலின் வையைப் பாடல்களின் ஊடாகத் தனியே 'புனலாடல்' மட்டுமல்லாமல் அக்கால

சமுதாயத்தின் வாழ்க்கைக் கோலங்களும் பதிவு செய்யப்பட்டுள்ளன. எல்லாவற்றுக்கும் மேலாகப் பரிபாடல் என்ற இலக்கியமும் அதன் தோற்றத்துக்கான பிரதான காரணியும் தமிழ்நாட்டின் தொன்மையான வாழ்க்கையினையும் வரலாற்றையும் பதிவுசெய்யப்படுவதை நோக்கமாகக் கொண்டிருக்கிறது. நான்முகனைச் சிறைப்படுத்திய குறிப்பு பரிபாடலில் இல்லை. ஆனால் பிரணவப் பொருளை நான்முகன் அறியாததால் முருகன் அவரைச் சிறை வைத்ததாகக் கந்தபுராணம் கூறுகிறது.

❖ சூரபதுமனைக் கொன்ற வரலாறு பரிபாடலில் காணப்படுவது போன்று கந்தபுராணத்தில் காணப்படவில்லை. முருகனது வேல் சூரனது மார்பை இருகூறாக்கியதெனவும், ஒரு கூறு மயிலாகவும், மற்றொன்று சேவலாகவும் மாறின என்றும் அவற்றை முருகன் ஊர்தியாகவும், கொடியாகவும் கொண்டான் எனவும் கந்தபுராணம் கூறுகிறது. இச்செய்தி பரிபாடலுள் வேறாகக் காணப்படுகிறது. கந்தவேளின் ஊர்தியாக ஆடு நாரதர் செய்த வேள்வியினின்றும் வந்தது எனக் கந்தபுராணம் கூறுகிறது. யமன் ஆட்டினை முருகப்பெருமானுக்குப் பரிசளித்ததாகப் பரிபாடல் கூறுகிறது. கந்தபுராணம் மிகப்பெரிய நூலாகும். அது வீரவாகுவின் வரலாறு, சூரபதுமனின் தம்பி தராசுரன் பற்றிய கதை சூரனின் பிறப்பு அவன் வேள்வியில் மறைந்தது பின்னர் உடனே தோன்றியது, சுவர்க்கம், சத்தியவுலகம், வைகுந்தம் என்னும் உலகங்களுக்குச் சென்றது முருகனுக்கும், சூரனுக்கும் நிகழ்ந்த பெரும் போர் முருகன், வள்ளி, தேவசேனையாரை மணந்தது முதலியவற்றை விரித்துரைக்கும்.

❖ சங்க இலக்கியங்களில் மற்ற நூல்களைக் காட்டிலும் பரிபாடலிலேயே கந்தவேளைப் பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. பரிபாடலில் கந்தவேள் அனைவருக்கும் அருளும் தெய்வமாகவும், சூரனையழித்த தேவசேனாபதியாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. பரிபாடலில் பரங்குன்றம் மட்டும் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளது. கந்தபுராணம் கூறும் முருகனது பிறப்பு வரலாறு பரிபாடலிலிருந்து முற்றிலும் வேறுபட்டதாகக் காணப்படுகிறது.

## ஆறுபடை வீடுகளில் முருகன்

மு. இராதா தியாகராஜன்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி,
கோயம்புத்தூர்.

முருகனை விரும்பாதவர்கள் இல்லை, அவனுடைய புகழ், வீரம், அழகு, மன வலிமை, தேவர்களே கண்டு அஞ்சினர், தன் தந்தை சிவ பெருமானுக்கே பாடம் கற்பித்தவர், சரவணபவ மந்திரத்தைத் தன்னகத்தே கொண்டவர், பிரமனையே சிறையில் அடைத்தவர், நாவல் பழங்களைப் பறித்து ஔவையிடம் விளையாடியவர், ஆறு கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப் பட்டிருந்தாலும் அகிலமெங்கும் அவருக்குத் திருத்தலங்கள் இருக்கின்றன, குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பார் என்பார்கள், முருகனின் சமயம் கௌமாரம், சித்தர்கள், சைவ சமய அன்பர்கள் பலரும் முருகனை விருப்பக் கடவுளாக ஏற்றுக் கொண்டுள்ளனர், திருவிளையாடலில் ஒன்றாக மாம்பழம் கிடைக்காது கோபித்துச் சென்று ஔவை போற்றிய ஞானப் பழமாக வீற்றிருக்கிறார், வள்ளி, தெய்வானை இரு மனைவியர்களை மணந்தவன், கையில் அழகிய வேலை தாங்கி நின்றவன், பாம்பு, மயில், சேவல் போன்றவற்றைத் தன் துணைப் பொருள்களாக வைத்தவன், பாம்பும் மயிலும் பகை, ஆனால் அவை முருகனிடத்தில் வரும்போது ஒற்றுமையாக இருக்கின்றன, திருமாலின் மருமகனாகத் திகழ்பவர் முருகன், செவ்வாய் தோஷம் இருப்பவர்கள் முருகனை வழிபட்டால் அவர்கள் வாழ்வில் துன்பம் நீங்கி இன்பம் பிறக்கும் என்பர்,

### திருப்பரங்குன்றம்

திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் முருகனின் ஆறுபடை வீடுகளையும் குறிப்பிடுகிறார், "உலகம் உவப்ப வலன் ஏர்பு திரிதரு பலர்புகழ் ஞாயிறு கடல் கண்டாங்கு" என்ற பாடலில் நக்கீரர் உலகம் விரும்பி வரவேற்க, உயிரினங்கள் மகிழ, மேருமலையை வலமாகச் சுற்றி வரப் பலரும் போற்றிப் பரவும், சூரியன் உதித்தெழுகிறான், நீலக்கடல் மேல் கதிரவன் உதிப்பது ஐம்புலன்களும் செயல் மறந்து உள்ளத்துள்ளே ஒளிச்சுடராய் முருகப் பெருமான் எழுந்தருளியது உள்ளதாகக் குறிப்பிடுகிறார், திருப்பரங்குன்றம் நீலக் கடல் பரப்பு கொண்டது, நீண்ட தோகை விரித்த மயில் மீதமர்ந்து முருகப் பெருமான் பவனி வருகிறார், அவர் அடியவர்களைக் காக்கிறார், மன மாசுகளைப் போக்குகிறார், கற்பில் சிறந்த அழகிய தெய்வானையின் கணவர் அவர் என்பதாகும், தேர் உருளை போல் வட்ட வடிவில் கடம்ப மலர்கள் பூத்திருக்கும், இந்த மலர்களாலான குளிர்ந்த மாலைகளைச் சூடியவன் முருகப் பெருமான், அங்குப் பூ எறிந்து விளையாடும் பூவையர்கள் "பகைவரை

வென்றழிக்கும் வீர வேலேந்திய, சேவல் கொடி நீடு வாழ்க" என்று வாழ்த்திப் பாடினர், இந்தப் பேரொலியானது பக்க மலையெல்லாம் மோதி எதிரொலிக்கும், திருப்பரங்குன்றத்தில் வீற்றிருக்கும் முருகன் குன்று தோறாடல் கொண்டவர். திருப்பரங்குன்றத்தில் உள்ள சுனை முருகப் பெருமானை ஈன்ற சரவணப் பொய்கையைப் போன்றும் அக்குன்றிலுள்ள முகில் முழக்கம் நின் யானையினது முழக்கத்தைப் போன்றும், அம்முழக்கத்திற்கு ஏற்ப முருகனது கோழிச்சேவல் கூவியதாகவும், அதனால் அம்மலை முழையின் கண் எதிரொலி எழுந்தது என்றும், திருப்பரங்குன்றத்திற்கும் மதுரைக்கும் இடையேயுள்ள வழியில் குழலும், யாழும் போல வண்டுகள் இசை பாடியதாகவும், சுனைப் பூக்களும், கொன்றை மலரும், கொடிப் பூக்களும், காந்தட் பூக்களும் மணம் வீசின என்றும், மதுரையில் முரசம் கடல் போன்றும், முகில் போன்றும், இடி போன்றும் முழங்கும்போது பரங்குன்றில் எதிரொலித்தது என இயற்கையை வர்ணிக்கின்றார் நல்லந்துவனார். திருப்பரங்குன்றத்தில் முருகன் தெய்வானையை மணந்த கோலத்தில் நிற்கிறார்,

**திருச்செந்தூர்**

இது திருச்சீரலைவாய் என்னும் பெயர் பெற்றுள்ளது, ஆறு முகங்களும் பன்னிரு திருக்கைகளை உடைய முருகப் பெருமானின் அருள் பெறுவது புண்ணியமாகும், கடற்கரையில் செந்திலாய் வீற்றிருக்கும் முருகனின் பெருமைகளை நக்கீரர் இதில் குறிப்பிடுகிறார்.

**முருகனின் ஆறு திருமுகங்கள்**

முதலாவது திருமுகம் இருள் சூழ்ந்த இவ்வுலகின் துன்பங்களை, துயரங்களைப் போக்கி அன்பர்களுக்கு அருள் ஒளி வீசி வழிகாட்டி அருளும், இன்னொரு திருமுகம் அவனை வாழ்த்தி வழிபடும் பக்தர்களுக்கு வேண்டும் வரம் தர மகிழ்ந்திருக்கும், மூன்றாவது திருமுகம் வேத விதிகளின்படி வேள்விகள் செய்யும் அந்தணர்களுக்கு உதவும், நான்காவது திருமுகம் கருணை பொழியும் திருமுகமாகக் கற்றவர் மனதின் இருள் போக்கி, அவர்கள் மதிநலம் நிலவொளி போலப் பரவி நேர்படச் செய்யும், ஐந்தாவது திருமுகம் பகைவரை அழித்துப் பக்தரைக் காக்கும் பரசிவமுகம், ஆறாவது திருமுகம் கொடி போன்ற இடை உடைய, குறமகள் வள்ளியோடிருந்து மகிழும் அன்பு முகம். இவ்வாறாக ஆறு திருமுகங்களைப் பற்றி நக்கீரர் குறிப்பிடுகிறார். முருகன் சூரபத்மனை அழித்த இடம் திருச்செந்தூர் என்று கந்த புராணம் கூறுகிறது.

**திரு ஆவினன் குடி (பழனி)**

பிரம்மன், திருமால், சிவன், தேவேந்திரன் ஆகிய நான்கு பெரும் கடவுளர்கள் பூலோகத்திற்கு வருகை புரிந்த இடம், பிரம்ம தேவனின் பழைய நிலையை மீட்டுத்தர உருத்திரர் 12 பேர், 8 வகையான வசுக்கள், 2 வகையான மருத்துவர் ஆகியவர்களைப் பற்றிக் குறிப்பிடுகிறார், அவர்கள் முருகப் பெருமானை வணங்கி அருள் பெற்றதாகவும் நக்கீரர் குறிப்பிடுகிறார், பேகன் மயிலுக்குப் போர்வை போத்திய இடம் பழனிமலை தான், இடும்பன்

இம்மலையைச் சுமந்து வந்த போது இம்மலையில் முருகன் ஏறி அமர்ந்து விடுகிறார், பின்பு இடும்பனுக்கு அருள்கிறார். பல நாட்கள் உண்ணாதிருந்த முனிவர்கள் ஆவினன் குடி முருகனை வழிபட வருகின்றனர், இவர்கள் செற்றம் நீக்கிய மனத்தினர், கற்றோருக்கு வரம்பாகிய தலைமையர், குற்றமற்றவர்கள் என்று முனிவர்களின் இயல்பு குறித்து நக்கீரர் குறிப்பிடுகிறார், "தாவில் கொள்கை மடந்தையோடு சின்னாள் ஆவினன்குடி அசைதலும் உரியன் அதாஅன்று" என்று முருகன் காட்சி தருவதைக் குறிப்பிடுகிறார்,

**திருவேரகம் (சுவாமிமலை)**

அந்தணர்கள் தாங்கள் வழிபடுவதற்குரிய காலமறிந்து பூணூலையும், புலராத ஆடையையும் அணிந்து கொண்டு தலைமேலே குவித்த கையினராய் மந்திரங்களை ஓதிக் கொண்டு, மணமிக்க மலர்களைத் தூவி, முருகப் பெருமானுக்கு வாழ்த்துக்கூறி வழிபடுகின்றனர், முருகப் பெருமான் உவந்து உறைகின்ற தலம் "திரு ஏரகம்" என்று நக்கீரர் குறிப்பிடுகிறார், அந்தணர்கள் மந்திரம் சொல்லி வழிபட்ட "முருக வழிபாட்டு நெறி" பற்றி நக்கீரர் இங்குக் குறிப்பிடுகின்றார், முருக வழிபாட்டில் மந்திரங்கள் இடம் பெற்ற போக்கு பற்றி நக்கீரர் குறிப்பிட்ட சான்றின் மூலம் அறியலாம், "உச்சிக் கூப்பிய கையினர் தற்புகழ்ந்து ஆறெழுத் தடக்கிய அருமறைக் கேள்வி நாவியல் மருங்கின் நவிலப் பாடி" என்பதாகும், முருகன் தன் தந்தை சிவனுக்குப் பிரணவ மந்திரத்தைக் கற்பித்த இடம் ஆகும்.

**குன்றுதோறாடல் (திருத்தணி)**

குன்றுதோறாடலில் குறிஞ்சி நில மக்கள் முருகனை வழிபட்ட விதம் பற்றி நக்கீரர் குறிப்பிடுகிறார், வேலன் என்பவன் கையில் வேலை ஏந்திக் கொண்டு முருகனுடைய ஆவேசம் பெற்று ஆடிக்குறி முதலியன சொல்வதாக சங்க நூல்கள் குறிப்பிடுகின்றன, வேலன் பச்சிலைக் கொடியை சக்திக்காயை இடையிடையே நடுவிட்டு, தக்கோலக் காயையும் கலந்து, காட்டு மல்லிகையுடன் வெண் கூதாள மலரையும் சேர்த்து கட்டிய கண்ணியை அணிந்து கொண்டு, சந்தனம் பூசிய மார்பினையுடையவராய்க் கொடிய தொழில் செய்யும் மலை வாழ் வேடர்கள் தொண்டகம் என்னும் பறையை முழக்கிக் குரவைக் கூத்தாடி மகிழ அக்கூத்தைக் கண்டு முருகப் பெருமான் எழுந்தருளினான் என்று நக்கீரர் குறிப்பிடுகிறார், குறிஞ்சிப் பறை இசைத்தது, நாட்டுப்புற வழிபாட்டு முறைகளை மலை வாழ் மக்கள் பின்பற்றியதை நக்கீரர் குறிப்பிடுகிறார், முருகன் வள்ளியை மணந்த இடமாகும், திருத்தணியில் சந்தனம் பிரசாதமாகத் தரப்படுகிறது,

**பழமுதிர்ச்சோலை**

இயற்கையழகும், இறையழகும் இணைந்த இடம் பழமுதிர்ச்சோலை, முருகன் தோன்றிய இடங்களைப் பற்றி நக்கீரர் குறிப்பிடுகிறார், நறும்புகை எடுத்தும், குறிஞ்சி பாடியும், இன்னியம் முழங்கியும் முருகனை வழிபட்டுள்ளனர்,

சிறிய தினை அரிசியைப் பூக்களோடு கலந்து தூவி, ஆடு அறுத்து பலியிட்டு, சேவல் கொடியைப் பக்கத்திலே நிறுத்தி ஊர்கள்தோறும் கொண்டாடும் பெரிய திருவிழாக்கள் நடக்கும் இடங்களிலும், அடியவர்கள் பாடிப் பரவுவது கேட்டு மகிழ்ந்து அவர்களுக்கு அருள் புரியத் தோன்றும் இடங்களிலும், வேலேந்திய படி பூசாரி சாமி வந்து ஆடும் வெறியாட்டுதல் இடங்களிலும், காட்டிலும், சோலையிலும், ஆற்றோரங்களிலும், அதன் நடுவில் அமைந்த அழகிய திட்டுகளிலும், குளக்கரைகளிலும், வேறு பல கோயில் அமைந்த இடங்களிலும், முச்சந்தியிலும், நாற்சந்தி கூடுமிடங்களிலும், புதுமையான பூக்கள் மலரும் கடம்பமர நிழலிலும், ஊர் நடுவில் உள்ள பொது இடத்திலும், மரத்தடியிலும், ஊர் அம்பலத்திலும், யானை கட்டுத் தறி நிறுத்திய இடங்களிலும், உயர்ந்த கொண்டையுடன் கூடிய, சேவல் கொடி ஏந்திய செவ்வேள் முருகன் எழுந்தருளியிருப்பான், முருகன் ஔவையிடம் சுட்ட பழம் வேண்டுமா, சுடாத பழம் வேண்டுமா என்று கேட்டது பழமுதிர்சோலையில் தான், இந்த தலத்தின் தல மரம் நாவல் மரம் ஆகும், இங்கு முருகன் வள்ளி, தெய்வானையுடன் காட்சி தருகிறார்,

**தொகுப்புரை**

முருகனின் ஆறு படை வீடுகளை தரிசனம் செய்தால் முற்பிறவி பாவங்கள் நீங்கும், புண்ணியம் பெறலாம், முருகனின் திருவடிகளை வணங்கினால் பிறவிப் பெருங்கடலைக் கடக்கலாம், திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருஆவினன் குடி, திருவேரகம், திருத்தணி, சுவாமிமலை ஆகிய திருமுருகனின் திருத்தலங்களை, ஆறுபடை வீடுகளை அறிந்து கொண்டோம்.

# திருப்போரூர் முருகன்

டாக்டர் கு.மு. இராமு
எண்-5, 16ஆவது தெரு
பெரியார் நகர், சென்னை - 600 082.

திருப்போரூர் செங்கை மாவட்டத்திலுள்ள முக்கிய திருத்தலமாக விளங்குகின்றது. இது சென்னையிலிருந்து மகாபலிபுரம் செல்லும் பாதையின் மத்தியில் சுமார் 45 கி.மீ. தூரத்திலுள்ளது. குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருக்கும் இடமாகக் குவலயத்தோர் வழிபட்டும் என்று கூறியிருந்தாலும் அதற்கு மாறாக இங்கு மலைமீது சிவனும் பார்வதியும் உள்ளனர். வெளிப்பகுதியில் வற்றாத பொய்கை வனநாடு கண்ட வடிவேலே - என்பதற்கு ஏற்ப இங்குள்ள திருக்குளம் எப்போதும் வற்றியதில்லை. இக்கோவில் இந்து அறநிலையத்துறையின் மேற்பார்வையோடு ஸ்ரீலஸ்ரீ சிதம்பரசுவாமிகள் பரம்பரை தர்மகர்த்தாவின் அருளாசியோடும் சீரும் சிறப்போடும் செயல்பட்டு வருகிறது. இக்கோவில் சிதம்பர சுவாமிகள் காலத்தில் கட்டப்பட்டது. இவர் மீனாட்சிக் கலிவெண்பா பாடி முடித்ததும் மிகப்பெரிய ஸ்ரீசக்கரத்தை உருவாக்கியுள்ளார். இதனை செவ்வாய், வியாழனில் முறையாக வழிபாடு செய்தால் எல்லா நலமும் உண்டாகும் என்பது உண்மை.

இவ்வூர் எல்லையை நெருங்கும் போதே வேம்படி விநாயகர் ஆலயமும், சிதம்பரசுவாமி மடமும் தென்படும். அவைகளைத் தரிசனம் செய்துக் கொண்டு உள்ளே சென்றால் வற்றாத பொய்கை நீராழி மண்டபமும் தெரியும். பக்தர்கள் பலரும் நீராடி மகிழ்வர். முகப்பில் வினைதீர்த்த விநாயகர் ஆலயம், காவடி எடுத்துவருபவர்கள் வேம்படி விநாயகரைத் தரிசித்துப் பின்னர் வினைதீர்த்த விநாயகர் ஆலயகுளத்தைச் சுற்றியபடி முகப்பு மண்டபம் வழியாக உள்ளே சென்றால் வட்ட வடிவமான தோற்றத்துடன் நடுவே கொடி மரம் அழகிய உயர்ந்த கலைநயத்துடனும் சுகாதார முறையில் சிறந்தோங்கிய காற்றோட்டம் நிறைந்த இத்தலத்தில் கோபுரம் வனப்பு மிக்கதாகவும் சிற்ப சாஸ்திர முறைப்படியும் பல வண்ணமுடன் பல புராண வரலாறு நிகழ்ச்சிகளைப் படம் பிடித்துக் காட்டி வருகின்றது.

நம்மை அன்புடன் வரவேற்கும் விநாயகர் அதையடுத்து இடும்பன் கடம்பன் ஆலயம் அதனைத் தொடர்ந்து சிதம்பர சுவாமியின் சிறிய கோவில். கருவறையில் அருள் உருவான சுதை வடிவ வள்ளி தெய்வானையுடனான கந்தப்பெருமான் ஓங்கி நிற்கின்ற கோலம் அதற்கு நீராட்டல் கிடையாது. வாசனை திரவியம் சாற்றி மெல்லிய வாச மலர்களையே சாற்றி வணங்கி வருகின்றனர். கீழே சிறிய உருகொண்ட இறைவனுக்குப் பால், இளநீர், சந்தனம், திருநீற்றுக்காப்பு, பின்னர் சொர்ண முழுக்கு செய்து தூபதீப ஆராதனைகள் சிறப்பாக நடைபெறும் உட்புறத்திலும் பல தெய்வத் திருவுருவங்கள் வைத்து வழிபடுகின்றனர்.

அதைத்தவிர பெரிய அளவிலான பரணிபால் முழுக்கு, மற்றும் சிறப்பு முழுக்குகள் ஆயிரங்கால் மண்டபத்திலுள்ள உற்சவ மூர்த்திக்கு முழுக்கு சிறப்பு வழிபாடுகள் நடைபெறும். ஆலய சுவர்களில் சன்னதிமுறை திருப்புகழ் போன்றவை கல்வெட்டாக அமையப்பெற்றுள்ளது சிறப்பம்சமாகும். உள்ளே அருள்மிகு வான்மீகநாதர் சன்னதியும், தாயார் புண்ணிய காரணியம்மன் சன்னதியும் உள்ளன. மேலும் சிதம்பரசுவாமி, காசிவிசுவநாதர் பைரவர், சனீசுவரர் மற்றும் சில சிறிய கோயில்களும் உள்ளன. இங்குள்ள கிணற்றருகில் வன்னிமர விநாயகர் உள்ளார். இவருக்கு அம்மரத்தின் இலைகளை முள்ளின்றிப் பறித்துப் போட்டு வழிபாடு செய்து தங்களுடைய வேண்டுதலைக் கூறிப் பெற்று மகிழ்கின்றனர். இங்குத் துலாபாரமும் உள்ளது. இங்குள்ள மடப்பள்ளியில் சுவையான பிரசாதங்கள் தயாரித்து வழங்குகின்றனர். ஆலயத்தைச் சுற்றிலும் அனேக சத்திரங்கள் உள்ளன. அங்குக் காவடி எடுப்போர் தங்கி வருகின்றனர். இங்குச் சென்னையைச் சேர்ந்த திருமுருகன் அடியார் திருக்கூட்டத்தின் சார்பாக ஆடிக்கிருத்திகையில் நான்கு நாட்கள் விழா எடுக்கப்பட்டு வருகிறது.

இயல், இசை, நாடகம் என்பது போல் திருமுருகன் அடியார் திருக்கூட்டத்தினர் நிர்மாணித்த கலையரங்கில் திருப்புகழ், சொற்பெருக்கு, பட்டிமன்றம், வில்லுப்பாட்டு இசைக்கச்சேரி தொடர்ந்து நடைபெறும். கடைசியாக பரத நாட்டியம் நிகழ்ச்சிக்குப் பிறகு நான்காம் நாள் விடையாற்றிவிழா முழுக்குடன் நிறைவடையும். முதலில் வேம்படி விநாயகர் முழுக்கு மற்றும் சிதம்பரசுவாமி வழிபாடும் முறைப்படி அங்குள்ள ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகளுடைய நல்லாசியுடன் நடைபெறும்.

நான்கு நாட்களுக்கும் வருவோர்க்கும் விழாவில் பங்கேற்போர்க்கும் அன்னம் பாலிப்பும் நடைபெறும். இந்த நிகழ்ச்சிகளை ஆயிரக்கணக்கான மக்கள் கண்டு களிப்பர். முருகன் அலங்காரம் செய்து பவனி வரும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும். மங்கள இசையுடன் பல்வேறு வாத்தியங்கள் முழங்க வாண வேடிக்கையுடன் ஒலி ஒளி அலங்காரத்துடன் அழகிய சாத்துப் படியோடு நிறைய விலையுயர்ந்த நகைகளை அணிவித்து கந்தப் பெருமான் மாடவீதி வழியாக வலம் வருதல் சிறப்பானதாகும்.

**ஆண்டு முழுவதும் விழாக்கள்**

கிருத்திகை முழுக்கு ஆடியிலும், மாசியில் கிராமத்தார் விழாவாக நடைபெறும்படி விழாக்களும் சிறப்புடன் நடப்பதும் உண்டு. எல்லா விழாக்களும் பக்திப் பெருக்குடன் நடைபெறுவது உண்டு. பிரணவ மலையில் உள்ள அருள்மிகு பாலாம்பிகை சமேத கைலாசநாதரெனும் சிவனுக்கும் அபிசேகம் செய்து படிகளில் பாட்டுப் பாடியேறிப் பரமசிவனைத் தரிசிப்பது இங்குப் பிரசித்தி பெற்றதாகும். மகாபலிபுர கலங்கரை விளக்கம் கடல் பகுதியாகும் நன்கு புலப்படும். மலையைச் சுற்றிலும் முந்திரி காடுகளும் இருந்தன.

இன்னும் தொடர்ந்து நடைபெற்று வருகின்ற விழாக்கள் தவறுவதில்லை. ஒவ்வொரு கிருத்திகைக்கும் சென்னையிலிருந்து ஒரு குழுவினர் பாடல்கள் பாடி வருகின்றனர். மலையில் ஒரு இடத்தில் அம்மன் கிராமதேவதை காவல் தெய்வமும் உள்ளது. இங்கு ஒரு சமயம் சென்னை கந்தகோட்டத்தில் உள்ள மூலவர் அங்கிருந்து எடுத்து வரப்பட்டு கூவத்தினைக் கடந்து மயிலை வழியாக வந்து அயர்ந்த நேரத்தில் கபாலீசுவரர் கனவில் தோன்றி அந்தச் சிலையைப் பார்க்டவுனில் உள்ள பூங்காவனத்தில் வைத்து பூசிக்கக் கட்டளையிட்டதாகவும், அதே பெயரோடு இன்றும் சென்னையிலுள்ள தருமமிகு சென்னை கந்தகோட்டம் தான் என்றால் மகிழ்வடைகின்றோம். அங்கும் வள்ளிதெய்வானை சமேதக் கந்தப்பெருமான் காட்சி தருகின்றார்.

ஆடியிலும் மாசியிலும் வைகாசி விசாகம், தைப்பூசம், சித்திரைக் கிருத்திகைகளிலும் விசேட காலங்கள் ஆகிய நேரங்களில் பல்லாயிரக்கணக்கான காவடிகள் விதவிதமாகவும் வேல் அலகு குத்தியும் வேண்டுதலைச் செலுத்தியும், மொட்டையடித்தும் வேண்டுதல் செலுத்துகின்றனர்.

ஆலயம் நன்கு பராமரிக்கப்பட்டு வருகிறது. எங்கும் ஒளிவெள்ளம் தேவையான காவல் துறையின் பாதுகாப்பு. குளிப்போருக்கு எச்சரிக்கை போன்ற சிறப்பான பணியைச் செய்து வருகின்றனர். இந்து அறநிலையத்துறை அலுவலர் மற்றும் சிப்பந்திகள் யாவரும் சிறப்பு ஏற்பாடுகளும் நன்றாக செய்து வருகின்றனர். ஆஸ்தான மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகளைக் கண்டு தரிசித்தால் மன அமைதியேற்படும். அவர் நல்லாசியுடன் திருநீறும் அருட்பிரசாதமும் வழங்கிடுவார். ஆலய அறங்காவலர் மற்றும் அனைத்துப் பணியாளர்களும் அன்புடன் நடந்து கொள்கின்றனர். பார்வையாளர்கள் சிரமமின்றி தரிசிக்க ஏதுவாக அனைத்து வசதிகளையும் செய்கின்றனர்.

## முருகனின் பெருமையும் குடிலை மந்திரத்தின் சிறப்பும்

முனைவர் ப. இராசமாணிக்கம்
தமிழ் உதவிப் பேராசிரியர்
சரபோசி அரசுக் கல்லூரி
தஞ்சாவூர் - 5

உலகத்தில் நன்மைகள் பெருகுவதற்காகத் தீயசக்தியை அழித்தொழிக்கும் வண்ணம் எத்தனையோ அவதாரங்கள் கடவுளின் உருவாய் தோன்றியதை அருளாளர்கள் படைத்த புராணங்கள் வழி அறிகின்றோம். புராணங்கள் பலவகையானவை. குறிப்பாக சிவபுராணம் பத்து, விஷ்ணு புராணம் நாலு, பிரம்மபுராணம் இரண்டு, ஆரிய புராணம் ஒன்று, அக்கினி புராணம் ஒன்று ஆக மொத்தம் புராணங்கள் பதினெட்டாகும். இந்தப் புராணங்கள் பதினெட்டும் சேர்த்து கிரந்த எண் நாலு இலட்சம். இதில் கந்தபுராணம் ஒரு இலட்சம். மற்ற பதினேழு புராணங்களின் கிரந்த எண் மூன்று இலட்சம். இதனால் மற்ற புராணங்களைக் காட்டிலும் கந்தபுராணத்தின் பெருமை எவ்வளவு உயர்ந்தது என்பது தெற்றென விளங்கும்.

கந்தபுராணத்தை வேதவியாசர் வடமொழியில் செய்ததைத் தமிழில் கச்சியப்ப சிவாசாரியார் முதல் ஆறு காண்டங்களை மட்டும் செய்தருளினார். ஏழாவது காண்டத்தைக் குகனேரியப்ப முதலியார; தமிழில் செய்தார். உலகம் உய்ய கந்தபுராணத்தைத் தமிழில் பாடுமாறு முருகப் பெருமான் கட்டளையிட அதனை ஏற்றுப் பாடியருளிய கச்சியப்ப சிவாசாரியாரின் வழிநின்று முருகப் பெருமானின் பெருமையைத் தந்தைக்கு உபதேசம் செய்த நிகழ்வின் மூலம் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### முருகனின் பெருமை

சிவபெருமான் வேறு முருகப் பெருமான் வேறு அன்று, மணியும் ஒலியும் போல் சிவனும் முருகனும் ஒன்று என்பதை முருகப் பெருமான் பிரமன் வாயிலாக உணர்த்தினான் என்பதைக் கச்சியப்ப சிவாசாரியார் மிகுந்த பயபக்தியுடன் விளக்குகிறார். ஏனெனில் முருகப் பெருமான் மும்மலத்தை அடக்கியவர். அதனாலேயே அவருக்கு மயில், ஆடு, யானை என மூன்று வகையான வாகனங்கள் உண்டு.

'நான் எனது' என்ற இரு கூறு கொண்டது ஆணவ மலம். நாம் செய்யக் கூடிய செயல்கள் வாயிலாக வந்து சேருவது கன்ம மலம். நாம் பரம்பொருளாகிய இறைவனிடமிருந்து பிரிந்து பேதமாய் அஞ்ஞான வயப்பட்டு நிற்பது மாயா மலம்.

வெள்ளி மலையில் வீற்றிருக்கும் சிவபெருமான் பிரமதேவர் உள்ளிட்ட கின்னரர், கிம்புருடர், சித்தர், வித்தியாதரர் முதலிய சிவகணங்கள் வழிபாடு

செய்யுமுன் கயிலாயத்தின் முதல் கோபுரவாயிலின் வடபால் வீற்றிருக்கும் முருகப் பெருமானை அனைவரும் பணிந்து வணங்கிச் செல்ல, பிரமன் மட்டும் சிறுவர்தானே என்று அலட்சியம் செய்யவே இத்தகைய திருவிளையாடல் நிகழ்ந்தது.

**பிரமனின் மயக்கமும் குடிலையின் பெருமையும்**

ஓம் என்ற குடிலை மந்திரத்தின் பொருள் விளங்க தெரியாமற் நின்ற பிரமனின் நிலையைக் கச்சியப்ப சிவாசாரியார்,

*முகத்தில் ஒன்றதா அவ்வெழுத் துடையதோர் முருகன்*
*நகைத்து முன்னெழுத்தினுக் குரை பொருளென நவில*
*மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்*
*திகைத் திருந்தனன் கண்டிலன் அப்பொருள் திறனே* (கந்தபுராணம்)

என்று விளக்குகிறார். சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பீடமாயும், எல்லா மந்திரங்களுக்கும், வேதங்களுக்கும் மூலமாயும் மற்றைத் தேவர்களுக்கெல்லாம் பிறப்பிடமாயும் உபதேசித்தருளும் தாரகப்பிரம்மாவாயும் விளங்குவது பிரணவ மந்திரம்.

தாரகம் என்ற சொல்லுக்குத் தாண்டச் செய்வது என்று பொருள். எதனைத் தாண்டச் செய்வது? எனில் பிறவிப் பெருங் கடலைத் தாண்டச் செய்வது. பிறவிக் கடலைக் கடக்க உதவுவதால் ஓம் என்பது தாரகம் மந்திரம் எனப் பெற்றது.

பிரணவத்தின் பொருள் தெரியாமல் படைப்புத் தொழில் எங்ஙனம் புரிவாய் என்று முருகப் பெருமான் பிரமனின் நான்கு தலைகளும் குலுங்குமாறு குட்டினார் என்பதை,

*எட்டொணாதவக் குடிலையிற் பயன் இணைத் தென்றே*
*கட்டுரைத் திலன் மயங்கலும் இதன் பொருள் கருதாய்*
*சிட்டி செய்வதித் தன்மைய தோவெனிச் செவ்வேள்*
*குட்டினான் அயன் நான்குமா முடிகளும் குலுங்க* (கந்தபுராணம்)

என்று கச்சியப்பச் சிவாசாரியார் மிகத் தெளிவான முறையில் உலகோர் உய்யும் வண்ணம் விளக்குகிறார். அதோடு மட்டுமல்லாமல் பிரமதேவனின் அகங்காரம் ஒழியும்படி தமது திருவடியால் ஏற்றுத் தள்ளி பாத தீட்சை தந்தருளினார். பின்னர் பிரமதேவனை சிறையிட்ட பிறகு படைப்புத் தொழிலையும் முருகப் பெருமானே என்பதைக் கச்சியப்பர்,

*ஒருகரந் தனில் கண்டிகை வடம்பரித்(து) ஒருதன்*
*கரதலந் தனில் குண்டிகை தரித்திரு கரங்கள்*
*வரதமோ டபயந்தரப் பரம்பொருள் மகனோர்*
*திருமுகங்கொடு சதுர்முகன் போல்வீதி செய்தாள்.*

என்ற பாடல் மூலம் விளக்குகிறார்.

**தகப்பன் சுவாமி**

உலகம் உய்ய பிரமனை விடுவிக்கும் பொருட்டு சிவபெருமானே தன் மகனாகிய முருகப் பெருமானிடம் பணிந்து வணங்கி விருப்பதோடு தமக்கு உபதேசிக்குமாறு கேட்பதைக் கச்சியப்ப சிவாசாரியார்,

*காமரு குமரன் சென்னி கதுமென வுயிர்த்துச் செக்கர்த்*
*தாமரை புரையுங் கையாற் றழுவியே அயனந் தேற்றா*
*ஓமென வுரைக்கும் சொல்லின் உறுபொருள் உனக்குப் போமோ*
*போமெனில் அதனை யின்னே புகலென இறைவன் சொற்றான்*

என்று பக்தி சிரத்தையுடன் விளக்குகிறார். இதனை அருணகிரிநாதர் தமது திருப்புகழில்,

*நாதபோற்றி யென முது தாதைகேட்க அனுபவ*
*ஞான வார்த்தை யருளிய பெருமாளே”*

என்று சிவபெருமான் உபதேசம் கேட்டதை விளக்குகிறார;.

திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் பக்தியுடன் வழிபட்டு கீழ்நிற்க, முருகப் பெருமான் தவிசின்கண் வீற்றிருந்து, கல்லால மரத்தின் கீழ் தெஷிணாமூர்த்தியாய் எழுந்தருளி சனகாதி முனிவர்களுக்கு மோன நிலை மூலம் உபதேசித்த குருவுக்கும் குருவாய் விளங்கி குடிலை மந்திரத்தின் பொருளை, அமிழ்து போன்ற மழலை மொழியால் அற்புதமாய் உபதேசித்தருளினார். இதனை,

*அரவு புனைதரும் புனி தரும் வழிபட*
*மழலை மொழிகொடு தெளிதர - வொளிதிகழ்*
*அறிவை யறிவது பொருளென அருளிய பெருமானே*

என்று சுவைபட கச்சியப்ப சிவாசியார் கூறுகிறார். இந்த மகனைப் பெற இவன் தந்தை என்னதவம் செய்தானோ என்று உலகோர்க்குத் திருவள்ளுவர் கூறியதைப்போல தேவகணங்கள் உள்ளிட்ட ஏனைய முனிவர்கள் வசுக்கள், நிருதர்கள் ஆகியோர் வியக்கும் வண்ணம் அதிஅற்புதமாக தந்தைக்கு உபதேசம் செய்து முருகப் பெருமான் தகப்பன் சாமியானான்.

**பிரணவ மந்திரத்தின் தனிச் சிறப்பு**

பிரணவம் பிர - விசேஷம் நவம் - புதுமை அனுபவிக்க அனுபவிக்கப் புத்தம் புது விசேஷ உண்மைகளை உணர்த்துவது பிரணவம். வாடாமல் காலத்தால் தேயாமல் எப்போதும் புதுமையாகவே இருக்கும் ஆன்ம தத்துவம்தான் பிரணவம். முருகப் பெருமான் ஓங்காரத்துட் பொருளாகவும் அதேபோதில் அதற்கு அப்பாலும் நிலவுகிறான். அவனது வேலே ஞானசக்தி. மயில் விந்தின் வடிவம் சேவல் கொடியே நாதம். அதனால்தான் அருணகிரிநாதர்,

*நாத விந்துக லாதீ நமோநம*
*வேத மந்த்ரசொ ருபா நமோநம*

என்று பாடிப் பரவுகின்றார். மயில் தோகையை விரித்து ஓம் என்ற பிரணவ வடிவத்தைக் காட்டி ஆடுகின்றது. மயிலின் கழுத்திலிருந்து தொடங்கி விரிந்த தோகையைச் சுற்றிக் கீழே அதன் காலடிகள் வரை கொணர்ந்து முடித்து எழுதினால் அது 'ஓ' என்ற உருவமாகவே அமையும். இதனையும், அருணகிரிநாதர்.

*ஆனதனி மந்த்ர ரூபநிலை கொண்ட*
*நாடு மயிலென்ப தறியேனே*

என்று திருப்புகழில் குறிப்பிடுகின்றார;.

முடிவுரை

முருகப்பெருமான் தன்னிரு பக்கத்தில் இருக்கக் கூடிய மனைவியர்களான வள்ளியும் தெய்வானையும், இச்சா சக்தியும், கிரியா சக்தியுமாவர். முருகப்பெருமானின் வலக்கரம் மேல் நோக்கிய நிலையில் அபய முத்திரை கொண்டும், இடக்கரம் கீழ்நோக்கிய நிலையில் வரதமுத்திரை கொண்டும் காணப்படும். முருகனுக்கு வலப்பக்கம் வள்ளியும் இடப்பக்கம் தெய்வயானையும் வீற்றிருப்பார். வள்ளியின் கையில் தாமரையும், தெய்வயானையின் கையில் குமுதமும் மலர;ந்து நிற்கும். முருகப் பெருமானுக்கு வலக்கண் சூரியனாகவும் இடக்கண் சந்திரனாகவும் அமைந்திருப்பதால் சூரியஒளி படும் தாமரை மலருமேயன்றி குவிவதில்லை. சந்திர ஒளிபடும் குமுதமும் குவிவதில்லை. முருகப் பெருமானின் ஆறுமுகங்களிலும் ஆறு மகத்துவங்கள் அடங்கியிருக்கின்றன. ஓம் என்ற எழுத்தில் அகரம், உகரம், மகரம், விந்து, நாதம், கலை, இந்த ஆறும் அடங்கியுள்ளன என்பதை ஆறுமுகம் தரித்த ஐயன் உணர்த்துகின்றார். இந்தத் தத்துவங்களைப் பரமனுக்குக் குமரன் ஓதியதையே *ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்த பெருமானே* என்று அருணகிரிநாதர் பாடுகின்றார்.

ஞானாகிரியராகிய சிவபெருமானுக்கே உபதேசித்த முருகக் கடவுள் சாட்சாத் ஞானபண்டிதன் என்பதை உணர்ந்து குடிலை மந்திரத்தின் பெருமையை அறிவோமாக!

## கந்தரலங்காரம் பதிப்பில் முருகப்பெருமானின் பெருமைகளும் சிறப்புகளும்

முனைவர் ப. இராஜேஷ்
இணைப்பேராசிரியர், தலைவர்
மொழிபெயர்ப்புத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.10

சைவசமயத்தின் தலைவான சிவபெருமானைப் பற்றி அருணகிரியார் பல்வேறு நூல்களை இயற்றியுள்ளார். அருணகிரிநாதரின் கந்தரலங்காரம் என்ற படைப்பை 1802இல் திரு.சம்பந்த முதலியாரால் பதிப்பிக்கப்பட்டது. இப்படைப்பானது சென்னை, அமெரிக்க அச்சுக்கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது. இப்படைப்பு கடவுள் வாழ்த்து எனும் காப்புச் செய்யுளோடு 101 செய்யுள்களை உள்ளடக்கியுள்ளது. கந்தர் அலங்காரம் என்னும் இரு சொல்லில் கந்தரின் (முருகன்) அலங்காரத்தைக் கூறும் நூல் என்பது பொருளாகும். இங்குக் கந்தன், முருகன் அலங்காரம் என்பது அழகு என்பதும், இங்கு மேனி அழகு மட்டுமின்றிக் குண அழகு, பாலனின் லீலை அழகு, வீர அழகு என்பனவற்றைக் கூறுவதாக அமைகின்றது. மேலும், கந்தர் அலங்காரத்தைப் படிப்போருக்கு இம்மை எனும் வாழ்வில் பல்வேறு வளங்களும் மகிழ்ச்சிகளும் வந்து சேரும் என்பதைச் சுட்டிக்காட்டுவதாக அமைகிறது. மேலும், நோயில்லாமல் இருத்தல், கவலை இல்லாமை , பகைமை இல்லாமை, புகழ் உண்டாகுதல் போன்றன ஏற்படுவதாக அருணகிரியார் கூறுகின்றார். இவ்வகை சிறப்பும் பெருமையும் பெற்றுள்ள கந்தர் அலங்காரத்தில் இடம்பெறும் முருகப்பெருமானின் வீரமும் பெருமையும் எடுத்தியம்புவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முருகக் கடவுளைப் பற்றி ஸ்ரீகுமரகுருபர சுவாமிகள் கூறும்போது,

*“வேலு மயிலு நினைந்தவர் தந்துயர்*
*தீர அருள்தரு கந்த நிரந்தர*
*மேலை வயலி யுகந்து நின்றருள் பெருமானே”*

என்றும், தேனூறு கிளவிக்கு வாயூறி நின்றவர் எனக் கந்தவேளைக் கூறுவதும் குறிப்பிடத்தக்கது. மேலும், அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் அந்தணர் குலத்தில் அவதரித்தவர். தமிழ்ப் புலமையும் முருகன் அருளையும் பெற்றவர். அருணகிரிநாதர் முருகப்பெருமான் என்னை வீடுபேறு அடைவதற்காக உலகம் எனும் பிரபஞ்சத்தைக் கடக்க வைத்தவர் என்று கூறுவதைப்,

*“பேற்றைத் தவஞ்சற்று மில்லாத வென்னைச் ப்ரபஞ்சமென்னுஞ்*
*சேற்றைக்கழிய வழிவிட்டவா செஞ்சுடர்வேலா”* (க.அ. 1.1-2)

என்ற வரிகளில் சிவபெருமானின் பெருமைகள் மற்றும் சிறப்புகள் பற்றியும் விளக்கப்படுகின்றன. சான்றாக, தன்னுடைய தலையில் கங்கையையும்,

பாம்பையும் கொன்றை மலரையும், தும்பை மலரையும் அணிந்துள்ள சிவபெருமானின் குமாரனாகிய முருகப்பெருமான் வீடுபேற்றையடையச் செய்து, சிறப்படையச் செய்தான். கிரௌஞ்ச மலையில் கிரௌஞ்சன் என்ற அரக்கன் தன் மாய சக்தியால் சாதுக்களையும் தேவர்களையும் வருத்திக் கொண்டிருந்தான். இதனையறிந்த முருகப்பெருமான் தன்னுடைய கூர்மையான வேலினைக் கொண்டு கிரௌஞ்சனை அழித்தார். மேலும், தேவலோகத்தைக் காத்த செய்தியினை அறியலாம். மேலும், சூரனைப் போன்று இவனையும் கூறு செய்ததை அறியமுடிகிறது. இதனைப்,

*"பேரணி கெட்டது தேவேந்தலோகம் பிழைத்ததுவே"* (க.அ.3.4)

என்ற பாடலடி மூலம் அறியலாம். இதனைத் தவிர முருகப்பெருமான் அவுணர்களை அழிப்பதற்காகத் தன்னுடைய வாகனமான மயிலில் செல்லும் போது, மயிலின் வேகத்தினாலும், காற்றின் அசைவினாலும் மேரு மலைகள் சிதைந்தன என்பதும், எட்டுத் திசையிலும் உள்ள பர்வதம் எனும் மலைகளும் சிதைந்து போயின என்பதையும்,

*"தசைபடுகால் பட்டசைந்தது மேரு வடியிடவெண்*
*டிசைவரை தூள்பட்டவத் தூளின் வாரி திடர்பட்டவே"*(க.அ.11.3-4)

என்னும் பாடலடிகளால் அறியலாம்.

முருகக் கடவுளின் திருவடியை வணங்காமல் உலக வாழ்க்கையில் மயங்கிக் கிடக்கின்ற அறிவில்லாத மனிதர்களே, உங்களுடைய கைப்பொருள் முதலியவற்றை உங்கள் வினையானது அனுபவித்து வாழமுடியாது என்றும், மேலும், வினைகளை இவ்வுலகத்தில் புதைத்து வைத்தவை உங்கள் கூட வராது என்றும், முருகப்பெருமான் நினைத்தால் ஒவ்வொரு மனிதர்களின் வினைகளை அறுத்து வீடு பேறு அடையச் செய்வான் என்றும், முருகப் பெருமான் தன்னை இகழ்ந்தவனையும் வாழ வைப்பான் என்பதையும்,

*"மொய்தாரணி குழல் வள்ளியை வேட்டவன் முத்தமிழால்*
*வைதாரையும் அங்கு வாழ வைப்போன் வெய்ய வாரணம் போல்"*
(க.அ.22.1-2)

என்பதின் வாயிலாக முருகப்பெருமான் பொறுமையைக் கடைப்பிடிப்பான் என்றும் கூறுவதைக் காணலாம். திருவள்ளுவர்,

*"அடக்கம் அமரருள் உய்க்கும் அடங்காமை*
*ஆரிருள் உய்த்து விடும்.* (குறள்.)

என்று கூறுவதும் குறிப்பிடத்தக்கது. இவ்வுலகத்தில் பொறுமையானது கடலை விட மிகப் பெரியது என்று கூறுவதும் குறிப்பிடத்தக்கது. மேலும், நாமக்கல் மாவட்டம் திருச்செங்கோட்டில் உள்ள செங்கோட்டு வேலவராகிய முருகப் பெருமானை மறக்க மாட்டேன் என்றும், இரட்டைத்தூண் போன்று பாதுகாக்க வேண்டும் என்பதை அருணகிரியார் சுட்டிக் காட்டுகின்றார். இதனை,

*"தெய்வத் திருமலைச் செங்கோட்டில் வாழுஞ்சுடரே*
*வைத்த வேற்படை வானவே மறவேனுனை நான்*
*ஐவர்க்கிடம் பெறக் காலிரண்டோட்டிய திவரண்*
*ஐக வைத்த வீடு குலையுமுன்னே வந்து காத்தருளே"*

(க.அ.23.1-4)

என்னும் பாடலடிகளால் அருணகிரிநாதர் திருச்செங்கோட்டு வேலவரையும் வழிபட்டு வருவதை உணரமுடிகிறது.

முருகப்பெருமான் அரக்கருடைய உதிரப் பொய்கையில் குளித்தாடும்படி வேல் விடுத்த குமரன் என்றும், உடல் நோயால் கட்டுப்பட்டுத் தவித்து வந்த தன்னை மற்றும் தன் உள்ளத்தின் தன்மையினை நீக்கினார் என்றும் கூறுகின்றார். மேலும், வள்ளிமணாளனாகிய முருகப்பெருமான் தனக்கு உபதேசித்த பொருளன்று, அதாவது, ஆகாயம், காற்று, தீ, நீர், மண் ஆகியன இல்லை என்றும், மேலுலகமான வீடு பேறு அடைகின்ற தத்துவப் பொருள் என்றும் கூறுகின்றார் அருணகிரியார்.

அருணகிரியார் முருகப்பெருமானை நினைக்கும் போது, தனது பிறப்பாளராகிய துன்பங்களை நீக்கி தன் செவியில் உபதேசித்த மெஞ்ஞானம் தன்னை ஒளி உருவாக உருவாக்கி விட்டது என்பதும், தன்னையும் மெஞ்ஞானியாக உருவாக்கி விட்டார் என்றும் கூறுவதை உணரமுடிகிறது. மேலும், முருகன் தன்னை மாதர் மயக்கமாகிய மரக்கலத்தைக் கொண்டு கடந்து முந்திக்கரையேறினேன் என்பதும், கிரௌஞ்சனின் மலையும் கீழே விழும்படி வேல் விடுத்ததை அறியலாம். இதனை,

*"கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்புடன் கிரியூடுருவத்*
*துளைத்துப் புறப்பட்ட வேற்கந்தனே துறந்தோருளத்தை"*

(க.அ.32.1-2)

என்னும் பாடலடிகளால் உணரலாம். மேலும், முருகப்பெருமானை அருணகிரிநாதர் உரைக்கும் போது, தன்னடியார்க்கு வேண்டியதெல்லாம் வரையாது அருள் செய்தலால் அடியார்க்கு நல்லபெருமாள் என்றும், வெற்றிவேலைக் கொண்டு தம்மையடைந்தவர்க்கு எல்லாக் காரியங்களையும் முற்றுவித்தான் என்பது வெற்றி பெருமாள் என்றும் உரைப்பதை,

*"வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை மெய்யன்பினாற்*
*பாடிக்கசிந்துள்ள போதே கொடாதவர் பாதகத்தாற்"* (க.அ.53.1-2)

என்னும் பாடலடிகளின் வாயிலாக முருகனை நினைத்துச் செய்ததை தானம் பயன்படாததால் குமரன் மெய்யன்பிற்கு உதவுவான் என்பதை அருணகிரியார் முருகப்பெருமானிடம் கூறும்போது, தன்னைப் பிறக்கவும் இறக்கவும் படைத்தானன்றி வறுமையால் தளர்ந்து வந்தவர்க்கு பொருளைக் கொடுக்க தன்னைப் படைக்க வேண்டும் என்று கூறுவதை உணரலாம். மேலும், அருணகிரியார் முருகனின் பெருமைகளைக் குறிப்பிடும் போது, அமராவதிக்குக்

காவலன் இந்திரனேயாயினும், அவன் அவ்விடத்து நிலைபெறச் செய்தவர் அமராவதி காவலனே என்றும், நிறத்தாலும் மீனை ஒத்திருப்பதால் செங்கயற் பார்வை என்றும் கூறுவதை அறியலாம்.

### முடிவுரை

கந்தரலங்காரத்தினுள் தேவர்களுக்கும் அவுணர்களுக்கும் உள்ள முரண்பாடுகள் மற்றும் பெருமைச் சார்ந்த சிறப்புகள், பக்தர்களுக்கு அருள் பாலிக்கும் தன்மையும், தீமையான செய்திகளைச் செய்தாலும், இறைவனாகிய முருகன் வீடுபேறு என்னும் மோட்சம் தருவார் என்பதையும் அருணகிரியார் சுட்டிக் காட்டுகின்றார். மேலும், இறைசார்ந்த செய்திகளையும் அறியமுடிகிறது.

### துணைநின்ற நூல்கள்

1. சம்மந்த முதலியார்.திரு, கந்தரலங்காரம், அமெரிக்கன் அச்சுக் கூடம், சென்னை. 1802
2. திருமுருகானந்தவாரியார், கந்தன் கருணை, சுவாமி பதிப்பகம், சென்னை, 1966.
3. தமிழண்ணல், புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு, மீனாட்சி புத்தக நிலையம், மதுரை.

## பாரதிதாசனின் மயிலம் ஸ்ரீசிவசண்முகக் கடவுள் பஞ்சரத்நம்

முனைவர் கா. இலட்சுமி
தமிழ் உதவிப் பேராசிரியர்,
மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி,
தஞ்சாவூர் - 613005

"பெரியார் ஈ.வெ.ரா சுப்புரத்தினம் பாரதிதாசனாக ஆவதற்குமுன் சுப்பிரமணியதாசனாக இருந்திருக்கிறார்" என்று 1.5.1967 அன்று வேலூர் நகரமன்றத்தில் பாரதிதாசன் படத்தைத் திறந்துவைத்துப் பெரியார் ஆற்றிய உரை விடுதலை நாளிதழில் வெளிவந்துள்ளது. 'உன் தாஸன் சுப்புரத்நம்' என மயிலம் சுப்பிரமணியர் துதியமுதுப் பாடல்களில் தொடர்கள் இடம் பெற்றுள்ளன. பாரதிதாசன் பழுத்த சைவக் குடும்பத்தைச் சார்ந்தவர், தம் இளமைக் காலத்தில் சமயச் சடங்குகளில் திளைத்தவர், அமாவாசை, கிருத்திகை போன்ற நாட்களிலும் சடங்கு முறையோடு நடந்து வந்தார். தம் குடும்பத்தினரும் தம்மைப் போலவே அணுபிசகாமல் பின்பற்ற வற்புறுத்தினார். தொடக்க காலத்தில் இறைமைப் பாடல்களை இயற்றிய இவர்,

*'முப்பதாண்டு முடியும் வரைக்கும் நான்*
*எழுதிய அனைத்தும் என்ன சொல்லும்?*
*கடவுள் இதோ என்று மக்கட்குக் காட்டிச்*
*சுடச்சுட அவன் அருள் துய்ப்பீர் - என்னும்'*

என்று '1960'-ல் தஞ்சை புலவர் ந.இராமநாதனின் 'கவிஞரும் காதலும்' எனும் நூலுக்கு விடுத்த வாழ்த்துகளில் தெரிவித்துள்ளார். புதுச்சேரியிலிருந்து வடமேற்கில் இருபது கல்தொலைவில் கடலூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது தென் மயிலம் எனப்படும் மயிலம். அவ்வூரிலுள்ள மலைக்கோவிலின் தெய்வமான சுப்பிரமணியர் ஆண்டுதோறும் மாசி மகத்தன்று புதுவைக் கடற்கரைக்கு எழுந்தருளுவார். அப்போது நிகழும் மாசிமக விழாவின் பொருட்டுப் பாரதிதாசன் இயற்றிய பாக்கள் அவராலும் பிறராலும் பண்ணுடன் பாடப்பெறும். 1935-இல் தியாகராசரின் தெலுங்குக் கீர்த்தனைகளைத் தம் ஸ்ரீசுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம் என்னும் இதழில் தமிழாக்கி, வெளியிட்டவர் பாரதிதாசன். இதற்கு முன் 1925-இல் மயிலம் ஸ்ரீசண்முகக் கடவுள் பஞ்சரத்நம் எழுதினார். 1925-இல் கீர்த்தனைகள் மீது கொண்ட ஈடுபாட்டால் இந்நூலை இயற்றியவர் 1935-களில் தியாகராசரின் கீர்த்தனைகளைத் தமிழாக்கம் செய்யவும் முனைந்தார்.

'பஞ்சரத்ந கீர்த்தனைகள்' என்பது காப்பு செய்யுள், வெண்பா தவிர்த்து ஐந்து விலையுயர்ந்த இரத்தினம் போன்ற பாடல்களால் இறைவனைத் துதித்துப் பாடப்பெறுவதாகும். இவ்வகையில் மயிலம் ஸ்ரீ சிவசண்முகக் கடவுள் பஞ்சரத்நம் எனும் முருகனை குறித்துப் பாடப்பெற்ற பாரதிதாசனின் பாடற் சிறப்பைப் காணலாம்.

*'பொன்னார் புதுவை நகர்செய்த புண்ணியத்தால்*
*இன்னே மயில மலைவேலன் - தன்பாத*
*சேவை தருகின்றான் செந்தமிழாற் பாடுகின்றேன்*
*காவலனாம் ஐந்துகரன் காப்பு'*

என்று விநாயகர் மீது அமைந்த காப்பு வெண்பா ஒன்றும் நூற்பகுதியாக ஐந்து பாடல்களும் முடிவில் முருகனை வாழ்த்தும் தனித்த 'வாழி வெண்பா' ஒன்றும் என 'மயிலம் ஸ்ரீசிவசண்முகக் கடவுள் பஞ்சரத்நம்' அமைந்துள்ளது. 'பன்னிரு சீர் விருத்தமாக' அமைந்துள்ள ஐந்து பாடல்களிலும் இடம் பெறும் பொருள் அமைப்பினை ஒரு சேர ஆய்ந்து காணலாம்.

**கந்தனின் அழகைக் கூறல்**

*'கலகலென மயிலினொடு விளையாடி வருகோலம்*
*காண்பனேற் கவலையுண்டா*
*கன்னலென வயலெலாம் செந்நெல்வளர் மயிலம்வாழ்*
*கந்தா குழந்தை வேலா'* (1-4)

இதில், கந்தனைக் குழந்தையாக நேரில் காண்பது போல், பாரதிதாசன் பாடியுள்ள பாங்கினைக் காணலாம். 'வடிகின்ற குவிவாயும் எழிலாடு தளர் நடையும், வாய்ப்பஎன் அகமீதிலே' (1-3;3-4) வேல் தூக்கி வருகோலம் காணிலென் வறுமையுண்டோ (2-4:1-2) கம்பிமயில் மீது நீட்டி எனதகம் வரல் காணில், கனமையல் எனையண்டுமோ? (4-5:1-2) என முருகனின் நடை, வேலேந்திய கோலம், மயில் மீதுள்ள கோலம் ஆகியவற்றைக் கண்டு சுவைத்தாற் போன்று எழுதிய முறை பாரதிதாசன் முருகன் மீது கொண்ட பக்தியை விளக்குகின்றது.

**நிலையாமையை நினைந்து கந்தனிடம் கூறல்**

இவ்வுலக நிலையாமையை உணர்ந்த பாரதிதாசன் பெண்ணின்பத்தை வெறுத்துப் பாடுகையில் மற்ற கவிஞர்கள் போலன்றி இல்லற வெறுப்பாகக் குறித்து கூறுவது நோக்கற்பாலது,

*உலகிற் பிறந்துநான் கண்டபயன் ஒன்றில்லை*
*உற்றஇள வயதுதாண்ட*
*ஒருத்தியை மணந்தவுடன் அவளொடு தொடர்ந்தவைகள்*
*ஒருகோடி யாம்விசாரம்*
*சிலகணம் இருந்தகளி மறுகணம் கண்ணிலே*
*தின்னவரு விவகாரமிச்*
*சென்மமேன் மனைவியேன் உறவுசொல் தீமையோன்*
*எனநைந்து வாடுநேரம்* (1:1,2)

மேலும், வாதம், பித்தம், சிலேட்டுமம் பிறழ்ந்த தன்மையால் வரும் முதுமையும், நோயும், உளறல்களும் வந்த வேளையிலாவது குழந்தையாக கையில் வேலேந்திய கந்தனை நினைக்க வேண்டும் என்கிறார்.

**கந்தனிடம் வேண்டுதல்**

கந்தனே நான் உன்னிடம் பொருளாசையால் முறையிட்டு நிற்க, என்னை ஏசுமாறு செய்து, நீ அன்னை உன்னை அழைப்பதாக விடைபெற்று சென்றனையோ? எனக் கூறும் பாரதிதாசன், பொருட் பற்றினை இப்பாடலில் கூறுகிறார்.

*வரிசைமா மணிவீடு மண்டுசெந் நெற்குவியல்*
*வளம் வேண்டி வேண்டி என்கை*
*வைத்ததலை வைத்தபடி வசையிட்டு நின்னைநான்*
*வாய்சோர ஏசுநேரம்* (2-1)

மேலும், கந்தனைக் கொண்டாடுபவர்களாகக் கங்கை, உமை, விநாயகர் ஆகியோரைக் கூறுவதுடன் முருக பக்தராகவும் முருக இலக்கியப் படைப்பாளியுமான அருணகிரிநாதரின் தமிழ் குறித்தும் கூறியுள்ளார். அப்பாடல் வருமாறு.

*அன்பிலுரை அருணகிரி யின்தமிழின் நவநீதம்*
*அள்ளிஆறு வாய்மலர்மேல்*
*அப்பிநற் கரிமுகன் தம்பிவா, என்னவும்*
*அம்மான் அணைக்கவரவும்* (3-3)

என, இப்பாடலுடன் முருகனின் அண்ணன் விநாயகர், தாய் என அவர்களுடன் 'அருணகிரியாரின் தமிழை' இணைத்துப் பாடி வேண்டியதைக் காணும் பொழுது அருணகிரியார் மீது பாரதிதாசன் கொண்ட பற்று, பக்தி, மதிப்பு புலனாகிறது.

**நாட்டு நலன் வேண்டல்**

பாரதிதாசன் நாட்டு நலன் கருதித் தான் நினைக்கும் நினைவுகளுக்கும் செயல்களுக்கும் காரணமாக விளங்கும் கந்தனிடம் தம் நாட்டுப்பற்றைப் பகர்வதைக் காணலாம்.

*'மனிதர்மனி தர்க்கடிமை ஆகுமொரு தீக்கனவு*
*மண்ணிடை யிருப்பதில்லா*
*வகைக்கெனது நாட்டினர் அறப்போர் நடத்திடுவர்*
*வாய்மையிற் பண்டை நாளில்;*
*எனினுமென தன்பான "நாடின்று மற்றோர்*
*இனத்தவர்க் கடிமையாதல்"*
*என்னுமிக் கோலத்தை எண்ணியென் தோள்பார்த்து*
*நான் பார்த் திருக்கு நேரம்'* (5-1,2)

எனக் கூறுவார். மேலும் தனக்கு ஒய்யாரமாக நடந்து வந்து வழிகாட்டும் கந்தனை, குழந்தையாக வரும் அவனை மெய்சிலிர்க்க உள்ளத்தால் கண்டு பாரதிதாசன் பாடிய பாடல்கள் வழியாக அவர் முன்பு கொண்டிருந்த பக்திச் சிறப்பு புலப்படுகிறது.

## திருச்செந்தில் முருகன் திருப்பள்ளியெழுச்சி

மு. இளங்கோ
ஆய்வாளர், நிலஅளவைத்துறை
(பணி நிறைவு)
விக்கிரமசிங்கபுரம்

பள்ளியெழுச்சி என்பதற்குத் துயில் நீங்குகை என்றும் தினமும் தெய்வத்தைத் துயில் எழுபபிப் போற்றிப் புகழ்ந்து பாடும் பாட்டு எனவும் அரசரையோ அல்லது அவரை விடச் சிறந்த மனிதரையோ துயிலெழுப்பும் பாடல் எனவும் பொருள்படும் எனத் தமிழ்ப் பேரகராதி கூறுகின்றது. கிடந்தோர்க்குக் கேடு இல்லாத நற்புகழைப் பொருந்த வேண்டிச் சூதர் ஏத்திய துயிலெடை நிலை என்பது இளம்பூரணர் உரை. புறப்பொருள் வெண்பாமாலை நூற்பா 9, பன்னிரு பாட்டியல் (நூற்பா 206), பிரபந்ததீபம் (நூற்பா 6) பிரபந்த தீபிகை (பாடல் 22) போன்ற அனைத்து இலக்கண நூல்களும் அரசரைத் துயிலெழுப்புதல் பற்றி கூறுகின்றது.

தொல்காப்பியம் 'பூவை நிலை" என்ற துறையைத் தந்தது (தொல் 1006-10) அரசனைத் தேவரோடு ஒப்பக் கூறும் புறத்துறை எனத் தமிழ் பேரகராதியில் விளக்கம் பெறுகின்றது (தொகுதி 5 பக்கம் 2852) இந்நிலையில் மன்னனும் இறைவனும் ஒப்ப வைக்கப்பெற்றுத் துயிலெடையும் இணைமையுறுவது கருதலாம் என்பது டாக்டர் அன்னிதாமசு (சிவப்பிரகாசர் ஆய்வு மாலை பக்கம் 59) கருத்தாகும்.

### முருகன் திருப்பள்ளியெழுச்சிகள்

தமிழில் தெய்வத்தின் மீதும் ஞானசாரியர்கள் மீதும் மொழி மீதும் நாட்டின் மீதும் திருப்பள்ளி எழுச்சி தோன்றியுள்ளது.

1. தணிகேசன் திருப்பள்ளி எழுச்சி - வ.சு.செங்கலவராய பிள்ளை 19 நூற்றாண்டு
2. முருகன் திருப்பள்ளியெழுச்சி - கந்தப்பையர் - 18 நூற்றாண்டு
3. திருப்பள்ளியெழுச்சி (திருப்போரூர் முருகன் சந்நிதிமுறை) - சிதம்பரசுவாமிகள் 17 நூற்றாண்டு
4. திருப்பள்ளியெழுச்சி - முருகைய பங்கஜாட்சி - 19 நூற்றாண்டு
5. திருப்பள்ளியெழுச்சி - சிங்காரவேலு முதலியார் - 10 நூற்றாண்டு
6. முருகன் திருப்பள்ளியெழுச்சி - முருகனடிமை வித்யா – 30-1954
7. முருகன் திருப்பள்ளியெழுச்சி - வேல்முருகன் வழிப்பாட்டுக்குழு, பாளையங்கோட்டை - 10 1977, 1994
8. திருவுருமாலை திருமுருகன் திருப்பள்ளியெழுச்சி – தி.சு.ஆறுமுகம் - 10-1971

9. திருச்செந்தூர் ஆறுமுகன் திருப்பள்ளியெழுச்சி - யு.எம்.நடராஜசர்மா – 10-1977

10. திருச்செந்தில் தீரவேல் முருகன் தவசுப்ரபாதம் - யு.எம்.நடராஜசர்மா - 51 1977

முருகன் மீதுதான் அதிகமான திருப்பள்ளியெழுச்சிகள் பாடப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

**திருப்பள்ளியெழுச்சி இலக்கணம்**

*கண்படை மன்னவர் முன்னர் தண்பத*
*விடியல் எல்லை இயல்புறச் சொல்லித்*
*தந்த திரையரும் தாராத் திரையரும்*
*ஏத்தி நின்மொழி கேட்டு இனிதுஇயங்க*
*வேண்டினர் இத்துயில் எழுகென விளம்பின்*
*அதுவே மன்னன் துயிலெடை நிலையே* (பன்னிரு.நூ.206)

தூங்கின்ற மன்னவர் முன்பு பொழுந்து விடிந்ததை இயல்பாகச் சொல்லியும், அரசனுக்குத் திறைகொண்டு வந்தவர்களையும், திறை கொண்டுவராதவர்களையும், சொல்லி, அரசனைப் போற்றி, அரசன் வாய் மொழியைக் கேட்டு நடக்க வேண்டி நிற்போரையும் கூறித் துயிலை நீக்கி எழுக என்ற கருத்துகள் உடையதாக இருந்தால் அது துயிலெடை நிலையாகும் என்பது பன்னிரு பாட்டியல் கருத்தாகும்.

**திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் உள்ள பொதுமைக் கூறுகள்**

அ) பாடல்களின் யாப்பு ஒரே வகையானது

ஆ) இருவர் தம்பாடல்களிலும் காலைப்பொழுதின் இயற்கை வருணனை அமைந்துள்ளது.

இ) தலைவனை இறைவனைப் புகழ்ந்து அருட்சிறப்பை எடுத்தியம்பிப் போற்றும் முறை பொதுவாகப் காணப்படுகின்றது.

ஈ) அடியார் கூட்டம் வந்து கூடியுள்ளது அனைவரும் காணவும் வணங்கவும் ஆசைப்படுகின்றனர் என்று தலைவனுக்கு அறிவிக்கும் முறை உள்ளது.

உ) பள்ளியெழுந்தருளாயே என ஒவ்வொரு பாட்டும் முடியும் முடிவு (மகுடம்) பொதுவாக உள்ளது. அதற்கு முன் தலைவன் பெயரும் பிறவும் விளித்தல் பொதுவாக உள்ளது என்று டாக்டர் மு.வரதராசன் திருப்பள்ளியெழுச்சி என்ற கட்டுரையில் கூறுகின்றார். (திருப்பள்ளியெழுச்சி 2ஆம் உலகத்தமிழ்க் கருந்தரங்கு நிகழ்ச்சிகள் 3ம் தொகுதி பக்கம் 75).

**திருச்செந்தில்முருகன் திருப்பள்ளியெழுச்சி**

திருச்செந்தில்முருகன் திருப்பள்ளியெழுச்சி ஆசிரியர் பெயர் தெரியவில்லை. வேல்முருகன் வழிபாட்டுக்குழுவினர் (பாளையங்கோட்டை)

முதற்பதிப்பு 1985; மறுபதிப்பு 1994ல் பதிப்பதிக்கபட்டுள்ளது. இதில் 10 பாடல்கள் அமைந்துள்ளன.

**காலை வருணனை, இயற்கை வருணனை**

*தெற்றிய கமலங்கள் அலரும் தண்வயல் சூழ்* (பாடல் 1)

*கீழ்த்திசை அருணனும் கிளரொளி வீச*
*கிளிமயில் குயில் காகம் சேவல்கள் கூவ*
*காரிருள் நீக்கிடும் கதிரவன் வரவும்*
*கடிமா மலருடன் ஏந்திய கையார்* (பாடல் 2)

ஆகிய பாடல்களில் இயற்கை வருணனை, காலை வருணனை அமைந்துள்ளது.

**முருகனைப்போற்றும் தன்மை**

*வெற்றி வேற்கரமுடையாய், எமையுடையாய்*
*விடிந்ததுன் பூங்கழற்கிணை மலர்கொண்டு*
*சுற்றிய அடியேங்கள் தூய்மனத்துடனே*
*சொல் மகிழ்வுடன் நின் திருவடி தொழுவோம்*
*தெற்றிய கமலங்கள் அலரும் தண் வயல் சூழ்*
*திருச்செந்திலம்பதி வாழ் முருகோனே*
*எற்றுயர் சேவற் பதாகையையுடையாய்*
*எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே* (பாடல் 1)

*ஆதி நடுவும் அந்தமாகியும் நின்றாய்*
*அரி அயன் அறியார் யாருனை அறிவார்*
*ஜோதி வடிவாம் இரு தேவியும் நீயும்*
*தொல் புகழ் அடியார்க் கருள் செயும் பரனே*
*ஓதிய மறை புகழ் உருவினைக் காட்டி*
*உயர் திருச்சீரலைவாய் நகர் காட்டி*
*வேதியராவதும் காட்டி வந்தாண்டாய்*
*விமலனே திருப்பள்ளி எழுந்தருளாயே-* (பாடல் 8 )

*தேனினி தெனக்கண்டு பால் இனிதெனவே*
*செப்புகின்ற அமுதம் இனிதென உணரார்*
*மாணமர் திருவடி படிமிசை உறவே*
*வந்தெமை ஆண்டிட இங்கெழுந்தருளும்*
*மேல் நிமிர் சோலை சூழ்செந்திலம்பதிவாழ்*
*வேலனே சீலனே விஞ்சையர் கோனே*
*ஞானவடிவே எமை ஆட்கொண்ட கோவே*
*நாதாந்தனே பள்ளி எழுந்தருளாயே-* (பாடல் 7 )

ஆகிய பாடல்களிலும் பாடல் ஒன்பதிலும் முருகனைப் போற்றும் தன்மை காணப்படுகின்றது.

வணங்க வந்தோர்

*கடிமா மலருடன் ஏந்திய கையார்*
*தாழ்ந்திடு சென்னியர் தவமுடை பெரியோர்*
*தனித்தனி நாமங்கள் புகலுவார் நாவில்* (பாடல் 2)

*பாற்குடம் காவடி பக்தர்கள் ஒருபால்*
*பரிவுடன் வழிபடும் அன்பர்கள் ஒருபால்*
*நாற்றிசையோர் திரை கொணர்ந்தனர் ஒருபால்*
*நலமுடன் தமிழ் மறை ஒலிப்பவர் ஒருபால்*
*பாற்கடல் துயின்றோனும் பிரமனும் ஒருபால்*
*பண்புடன் ஊர்வசி அரம்பையர் ஒருபால்*
*ஏற்கும் ஒளிதிகழ் செந்திலமர்ந்தோய்*
*எம்பெருமான் பள்ளி எழுந்தருளாயே* (பாடல் 4)

*செப்பரும் அடியவர் தனியிருந்துணர்வார்*
*செய்வினை யகற்றிடுவார் அவர் பலரும்*
*ஒப்பரும் இருடிகள் தம்மனையோடும்*
*உவமையில் ஜெயத்தோடு ஒன்றியே அமர்ந்தார்* (பாடல் 6)

மேற்குறித்த பாடல்கள் திருச்செந்தூர் முருகனை வழிபட வந்தோரைக் குறிக்கின்றது.

முடிவு அல்லது மகுடம்

பாடல்கள் 1,2,3,4,5,6 ஆகியவை "எம்பெருமான் பள்ளியெழுந்தருளாயே" என்ற ஈற்றடி கொண்டு இலங்குகின்றன. ஏழாவது பாடல் 'நாதாந்தனே பள்ளி எழுந்தருளாயே என்றும், எட்டாவது பாடல் "விமலனே பள்ளியெழுந்தருளாயே" என்றும் ஒன்பதாவது பாடல் நல்லமுதே பள்ளியெழுந்தருளாயே என்றும் பத்தாவது பாடல் "தயாபரனே பள்ளியெழுந்தருளாயே" என்றும் ஈற்றடி கொண்டு விளங்குகின்றன. 'மன்னு செந்தூரா வழிவழியடிவோம்' (பாடல் 9) என்று பக்தர்கள் பாடிப் பரவசம் கொள்ளும் இலக்கியமாக திருச்செந்தூர் முருகன் திருப்பள்ளியெழுச்சி இலங்குகிறது. பாடல் 3 மங்கள ஒலிகளைப் பட்டியலிடுகின்றது. பனிமலர் தூவியும் திருச்செந்தூர் முருகனைப் பள்ளியெழுச்சி பாடி நாமும் பரவுவோம்.

## அறுபடைவீட்டில் முருகனின் சிறப்பு

தி. ஈஸ்வரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 10

சங்க இலக்கியங்களில் முருகன் கோயில் கொண்ட இடங்கள் பல காணப்படுகின்றன. அவற்றுள் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை, திருத்தணி என்பனவாகும். இங்குக் குறிஞ்சிக் கடவுள் முருகன் என்பதால் குன்றுகள் தோறும் அவன் இருப்பிடமாகக் கொண்டுள்ளான். இவ்விடங்கள் அறுபடை வீடுகள் எனப்படும். இவ்வீட்டில் இடம்பெற்றுள்ள முருகனின் சிறப்பைப் பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

**முருகனின் படைவீடு**

படைவீடு என்னும் வழக்கு காலத்தால் பிற்பட்டதாகத் தோன்றுகிறது. நக்கீரர், அருணகிரிநர், குமரகுருபரர் ஆகிய மூவரும் முருகன் குடிகொண்ட இடங்களாக ஆறினைக் குறிப்பிடுகின்றனர். இவற்றைத் திருப்பதி என்று அழைக்கின்றனர். வீடு என்பது கோயில் கொண்ட இடம் (அ) ஆன்மாக்களுக்கு வீடு பெற்றைத் தரும் இடம் என்றுக் கூறுகின்றனர். பின்னர், ஆற்றுப்படை வீடு என்பது ஆறுபடை வீடு என எண்ணுப்பெயரால் குறிக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம் என்பர். மேலும், படை என்ற சொல் போர் செய்யும் படையைக் குறிப்பதாகக் கொண்டு முருகன் வீரம் விளைவித்த இடங்களைச் சுட்டுகின்றனர். நக்கீரர் முருகன் வாழும் இடங்களாக காடு, சோலை, ஆறு, குளம், நடுத்திட்டு, நாற்சந்தி, முச்சந்தி, கடம்ப மரத்தடி, மன்றம் மற்றும் பொதுவிடங்களெல்லாம் குறிப்பிட்டுக் கூறும் பாங்கில் இயற்கையே தெய்வம் என்ற கொள்கையை நிலைநாட்டியுள்ளமை கருதத்தக்கது. மேலும் இயற்கைச் சூழல்களில் அமைக்கப்பட்டு வழிபடப்பட்டு வந்த முருகப் பெருமானுக்குக் காலப்போக்கில் அவ்விடங்களிலேயே செயற்கைக் கோயில்கள் அமைக்கப்பெற்று வந்துள்ளன என்பது அறியத்தக்கவையாகும்.

**திருப்பரங்குன்றம்**

திருப்பரங்குன்றம் மதுரைக்குத் தென்மேற்கே ஐந்து மைல் தூரத்தில் அமைந்துள்ளது. இத்தலம் காலப்பழைமையுடையக் கோயிலாகும். இக்குன்றம் முருகனுக்குரியத் தனிநிலைக் கோயிலாகப் பண்டுதொட்டுப் போற்றப்பட்டு வருகின்றது. இதனைக்,

*“கொடி னுடங்கு மறுகிற் கூடற்குடாஅது*
*பல்கொடி மஞ்ஞை வெல்கொடி உயரிய*
*ஓடியா விழவின் நெடியோன் குன்றம்”* (அகம்.149)

என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. தலபுராணத்தில் முருகன் சிவபெருமானை வழிபட்ட தலமாக இக்குன்றம் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் முருகனின் வழிபாடாக வேலை மட்டுமே வைத்து வழிபட்ட நிலை சங்ககால நூல்களில் இடம்பெற்ற நிலையிலும் இன்றும்கூட திருமஞ்சனம் ஆட்டுகின்ற வழிபாடு வேலுக்கே நடைபெறுகிறது என்பது சான்றாக அமைகிறது.

சங்க இலக்கியங்களில் முருகன் சூரனை வென்ற நிகழ்ச்சி சுட்டப்படும் இடங்களில் பரங்குன்றத்து முருகன் கூறப்பட்டுள்ளமை கருதத்தக்கது. மேலும், முருகன் பிணி முகம் என்னும் யானை மீதேறி சூரனையும் அவுணர்களையும் அழித்த செய்தியும் அரி, அரன், அயன் என்னும் மூவரும் மற்றைய தேவர்களும் வந்து வழிபடும் தெய்வமாக முருகன் திருப்பரங்குன்றத்தில் வீற்றிருந்தருளிய காட்சியும், வள்ளியை முருகன் மணந்த இடமாகத் திருப்பரங்குன்றம் குறிக்கப்பட்டு இருப்பதும் முருகன் ஒப்புயர்வுற்ற கடவுளாகவும் பரிபாடலில் கூறப்பட்டுள்ளன. முருகன் மயிலை ஊர்தியாகக் கொண்டு விளங்குவதையும் அடியவர்களைக் காத்தும் பகைத்தோரை அழித்தும் அருள் செய்யும் திருவடிகளையும், கைகளையும் உடையவனாக விளங்குவதையும், தெய்வ யானைக்குக் கணவனாக விளங்குவதையும் நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிட்டுள்ளார்.

திருச்செந்தூர்

இது வ.உ.சிதம்பரனார் மாவட்டத்தில் கடற்கரையில் அமைந்துள்ள ஒரு தலமாகும். இத்தலம் திருமுருகாற்றுப்படையில் குறிக்கப்பெற்ற தலங்களுள் இரண்டாவதாகும். இது அலைவாய் என்னும் பெயரோடு திரு.சீர் என்னும் இரு சொற்கள் அடையாக அமைத்து திருச்சீர் அலைவாய் என்னும் பெயர் வழங்கப்பட்டு வந்துள்ளது. அலைவாய் என்பது அலைகள் வந்து போகும் இடமாகவும், முருகன் சூரனை வெற்றி கொண்டான் என்பதால் இது செயந்திபுரம் எனவும், செந்தி, செந்தில், செந்தூர் என வழங்கப்பெற்றது எனவும் குறிப்பிடுகின்றனர். முருகன் சிவந்த நிறமுடையவன். அதனால் அவனுக்குச் சேந்தன் என்ற பெயர் உண்டாயிற்று என்பர். முருகன் இத்தலத்தில் ஆறுமுகங்களுடனும் பன்னிரண்டு கைகளுடனும் கையில் வேல் தாங்கி யானை மீது அமர்ந்து செல்வதாகத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

முருகனுடைய ஆற்றலைக் கண்டு ஏழு கடலும், எட்டு மலைகளும் அரக்கர்களும் அஞ்சுகின்றனர் என்ற குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. இது முருகனின் வேலினுடைய ஆற்றலைப் புலப்படுத்துவதாக அமைந்துள்ளது. மேலும் திருச்செந்திற்பதியைப் பற்றிய பாடல்களையெல்லாம் தொகுத்து நோக்கினால் முருகனுடைய பிறப்பு முதலாக சூரனை வெற்றி கொண்டது ஈறாக உள்ள முருகனைப் பற்றிய செய்திகளை அருணகிரிநாதர் தொகுத்துக் கூறியுள்ளார். மேலும், முருகன் சூரபன்மனை வெல்வதற்காக வரும்பொழுது தாரகனையும் அவனது இரவுஞ்ச மலையையும் அழித்தபின் விசுவகர்மாவினால் செய்யப்பெற்ற ஆலயத்தில் வந்து தங்கினார்.

முருகன் வியாழனால் வழிபடப்பெற்றவர். வீரவாகுவைச் சூரனிடத்தில் தூதாக அனுப்பினார். கடலில் மாமரமான நின்ற சூரனை வேலால் பிளந்து அவனை ஆட்கொண்டார். தேவர்களைச் சிறை மீட்டார். தேவர்களின் வழிபாட்டினையும் ஏற்றுக்கொண்டார் என்ற குறிப்புகள் திருச்செந்தூர் தலபுராணத்தில் இடம்பெற்றுள்ளன. மேலும் வள்ளி வேடர்களுடைய மகளாகப் பிறந்தவள். அவ்வேடர்கள் முற்பிறவியில் கந்தர்வர்களாக இருந்தவர்கள், ஹேமமுனி என்பவருடைய கோபத்தால் வேடர்களாகப் பிறந்தார்கள். முருகன் வள்ளியை மணந்த பின்னர் அவர்கள் சாபத்தினின்றும் விடுவிக்கப் பெற்றனர் என்றும் செய்திகள் தலபுராணத்தில் கூறப்பட்டுள்ளன.

**திருவாவின்குடி**

திருவாவினன்குடி படைவீடுகளில் மூன்றாவது தலமாக விளங்குகிறது. இத்தலம் இன்று பழனி என அழைக்கப்படுகிறது. அருணகிரிநாதர் திருப்புகழில் தொண்ணூற்று ஆறு பாடல்களால் திருவாவினன்குடி முருகனைப் போற்றியுள்ளார். வேறு எந்த தலத்திற்கும் இல்லாத ஒரு பாடல் தொகையைத் திருப்புகழில் காண்பது குறிப்பிடத்தக்கது. திருவாவினன்குடி, சிவமலை, பழனி சிவகிரி போன்ற பெயர்களால் இத்தலம் அழைக்கப்பட்டுள்ளன.

இறைவன் ஒரு மாம்பழத்தைத் தன் இரண்டு பிள்ளைகளாகிய மூத்த பிள்ளையார் இளைய பிள்ளையார் ஆகியோரிடம் அளிக்க இயலாமையில் ஒரு போட்டியை ஏற்படுத்தியதாக ஒரு கதை கூறப்படுகிறது. அப்போட்டியில் வெல்லுவதற்கு இளைய பிள்ளையராகிய முருகப்பெருமான் உலகம் முழுமையும் சுற்றியதாகவும் மூத்தபிள்ளையாராகிய விநாயகர் இவ்வுலகமே தன் தாய் தந்தையர் எனக் கருதி அவர்களைச் சுற்றி வந்து கனியைப் பெற்றுக் கொண்டதாகவும் முருகன் சினங்கொண்டு பழனிமலையை அடைந்ததாகவும் திருப்புகழ் கூறுகின்றது.

மேலும், ஆறுமுகமுடைய முருகன் ஒரு முகத்துடன் திருவாவினன் குடி உலகமாகவும், தேவ உலகமாகவும் சொர்க்கமாகவும் விளங்குகின்ற தன்மையுடையது. தேவராயினும் மனிதராயினும் அங்கு வந்து கேட்டால் கேட்கும் வரங்களைக் கொடுக்கும் வள்ளலாக முருகன் விளங்குகிறார். பல்வேறு அண்டங்களையும் காக்கின்ற ஒருவனாகவும் விளங்குவது குறிப்பிடத்தக்கது.

**திருவேரகம்**

அறுபடை வீட்டில் நான்காவதாக அமைந்துள்ளது திருவேரகம் ஆகும். முருகனுக்குரிய பழம்பெரும் பதிகளுள் ஏரகத்தைப் பற்றி,

*“சீர்கெபு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்”* (சிலம்பு. கு.குரவை – 7)

என்று சிலப்பதிகாரம் உணர்த்துகிறது. திருவேரகம் தஞ்சை மாவட்டத்தில் குடந்தைக்கு மேற்கில் 12 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இப்பொழுது சுவாமிமலை என்ற பெயரில் அழைக்கப்பட்டு வருகிறது. மேலும்

பிரணவப்பொருளைப் பிரமனுக்குக் கூறியதோடு மட்டுமின்றி தந்தைக்கும் அதனைக் கூறியவன் முருகன் என்பதைப் பல புராணங்களும் கூறுகின்றன. அவ்வகைகளில் இறைவனுக்கே குருநாதனாக இருந்தவன் முருகன் என்ற குறிப்பில் சுவாமிநாதன் என்னும் பெயரை இத்தலமுருகன் பெற்றுள்ளமை கருத்தில் கொள்ளத்தக்கது. மேலும் முருகனுடைய பெயரை வைத்து இத்தலம் சுவாமிமலை என்று அழைக்கப்பெற்றுள்ளது. இது குருமலை, ஏரகம், சுவாமிமலை, குருவெற்பு என்றெல்லாம் திருப்புகழில் இடம்பெற்றுள்ளன. மேலும் பிரகதசுவரர் என்னும் அந்தணர் சுவாமிமலை வந்தபோது முருகன் காட்சி தந்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. பின்னர் அவர் அங்கேயே மடம் அமைத்து தங்கியதாகவும் பிரமகத்தி பாவம் பிடிக்கப்பட்ட ஓர் அந்தணன் அங்கு வந்து பிரகதசுவரர் கூறியபடி வச்சிதத் தீர்த்தத்தில் நீராடி தனது பாவம் நீங்கியதாகவும் இத்தலத்தின் பெருமையை எடுத்துரைத்துள்ளார்.

**குன்றுதோறாடல்**

குன்றுதோறாடல் என்ற சொல் குன்றுதோறும் ஆடுகின்றவன் என்னும் பொருளைத் தருகிறது. அதாவது முருகன் குறிஞ்சிக் கடவுள் என்பதால் அவன் எல்லா மலைகளிலும் அருளாட்சி செய்கின்றான் என்ற குறிப்பே குன்றுதோறாடல் என்பதாக அமைகிறது. குன்றுதோறாடல் என்பது தணிகைமலை, அருளிமலை, சென்னிமலை, விராலிமலை என்ற பெயரில் அழைக்கப்படுகின்றது. மேலும் முருகன் கோயில் கொண்டதாகக் கந்தபுராண ஆசிரியர் ஐந்து இடங்களைத் தலைமை வாய்ந்ததாகக் கூறியுள்ளார். அதனை,

*“மேவருங் கூடல் மேலைவெற்பினில் அலைவாய் தன்னில்*
*ஆவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிக்கை யாதிப்*
*பூவுலருகுள்ள வெற்பில் பொற்புறும் ஏனை வைப்பிற் கந்த – திரு*
*கோயில் கொண் டருளி வைகுங் குமரகோட்டத்த மேயோன்”*

(நக.ப.106)

என்னும் கந்தபுராணப் பாடலில் இடம்பெற்றுள்ளதை அறியலாம். முருகன் தலங்களில் மிகுதியாக இலக்கியம் பெற்ற தலமாகத் திருத்தணிகை விளங்குகிறது. மேலும் வள்ளியம்மையை முருகன் திருமணம் செய்து கொண்ட தலமாக இருப்பதால் அவற்றைப் பெருமக்களும் அடியவர்களும் ஈடுபாடு கொண்டு போற்றியுள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கதாகும். திருத்தணிகை முருகன் தந்தையாகவும், அன்னையாகவும், குருவுமாகவும் விளங்குகின்றார்.

**பழமுதிர்ச்சோலை**

ஆற்றுப்படைகளில் ஆறாவது தலமாகப் பழமுதிர்ச்சோலை இடம்பெற்றுள்ளது. இதனை நக்கீரர் இழுமென இழிதரும் அருவிப் பழமுதிர் சோலை மலைகிழவோனே எனக் குறிப்பிடுகின்றார். இம்மலையின் மீது சரவணப் பொய்கை என்ற பெயரில் பொய்கை இருப்பது குறிப்பிடத்தக்கது. பழமுதிர்ச்சோலை மலையில் ஒரு சிறு கோயிலும் அதன்கண் முருகப்பெருமானின் திருமேனியும் அமைக்கப்பட்டுள்ளது. மேலும் ஒரு முகமும்

நான்கு திருக்கைகளும் அமைந்த நிலயில் இரு பக்கமும் வள்ளி தெய்வயானை அமர்ந்த நிலையில் திருமேனி அமைப்புகள் காணப்படுகின்றன. இத்தலத்தில் நூபுரகங்கை என்று கூறப்படுகின்ற ஒரு சிற்றருவி காணப்படுகின்றது. அவற்றில் தலமரம் நாவல் மரமாக அமைந்துள்ளது. தலமரம் நாவல் மரமாக இருப்பதாலும் பழ முதிர்சோலை எனப் பிரிக்கும் நிலையில் பெயர் அமைந்துள்ளமையாலும் அவ்வைக்கு நாவல்கனி ஈந்த தலமாக இது பிற்காலத்தில் கொள்ளப்பட்டு இருக்க வேண்டும் என்பர்.

முடிவுரை

திருப்பரங்குன்றம் முருகனை வழிபடும் தலமாகச் சங்க காலம் தொட்டே இருந்து வந்திருக்கிறது. சூரபன்மாவை அழித்தது, முருகன், வீரவாகு தேவருக்குத் தன் உருவத்தைக் காட்டியது, மாங்கனி கிடைக்காமையால் சினந்து வந்தது. வள்ளியை மணம் செய்த நிகழ்ச்சி போன்றவைகள் இங்கு எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலும் மலைகளில் சிறந்தமலை திருத்தணிகை மலை என்றும், முருகனின் பல்வேறு சிறப்புக்கள் அறுபடை வீட்டில் அமைந்திருக்கின்றன என்பது புலனாகிறது.

## பரிபாடல் கூறும் 'செவ்வேள்'

முனைவர் வெ. உமா,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை
இந்திராகாந்தி கலை மற்றும் அறிவியல் கல்லூரி
கதிர்காமம், புதுச்சேரி-605 009

தமிழின் தொன்மையான இலக்கியங்களான சங்க இலக்கியங்களில் முருகன் குறித்த பதிவுகள் ஆங்காங்கே இருந்த போதிலும் பரிபாடலிலும் திருமுருகாற்றுப்படையிலும் மட்டுமே அதிகப் பதிவுகள் இடம் பெற்றுள்ளன. அதிலும் தொல்காப்பியக் காலத்தில் வழக்கில் இருந்த பரிபாடல் என்னும் யாப்பு வகையில் அமைந்த 'பரிபாடல்' முற்றிலும் புதியதாகச் 'செவ்வேள்' என்னும் பெயரில் மிக விரிவாகவே முருகனைக் குறித்துப் பேசுகிறது. மற்ற இலக்கியங்களில் இருந்து பரிபாடல் எவ்வாறு மாறுபட்டு அமைந்து செவ்வேளை விவரிக்கிறது என்பதை ஆராய்வதே இக்கட்டுரை.

### பரிபாடலில் செவ்வேள் குறித்த பாடல்கள்

தொல்காப்பியர் காலத்தில் வழக்கில் இருந்த யாப்பு வகையே பரிபாடல். வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா ஆகிய நால்வகைப் பாக்களும் கொண்டு அகப்பொருளிலே, பாடுவதற்கேற்ற இசை வடிவத்தோடு, பரிந்து வரும் ஓசையைக் கொண்டு பாடப்பெற்று அதனாலேயே 'பரிபாடல்' எனும் பெயர் பெற்று விளங்குவது என விவரிக்கப்படும் இந்த யாப்பு வகையில் அமைந்து நமக்குக் கிடைக்கப்பெறும் ஒரே நூல் சங்க இலக்கிய எட்டுத் தொகையில் ஒன்றாகிய 'பரிபாடல்' மட்டுமே என்பது இங்குக் குறிப்பிடத்தகுந்தது.

இசையோடு பாடுவதற்கேற்ற வடிவமாக இருந்தும் கூட பரிபாடல் நூலுக்கு முன்பும் பின்பும் இவ்வகை யாப்பில் இலக்கியங்கள் உருவாகவில்லை. அதிலும் தொல்காப்பியக் காலத்தில் அகத்திற்கு மட்டுமே உரியதாக இருந்த இந்த யாப்பு முறை இந்நூலில் புறத்திற்கும் உரியதாகி, அகப்புறப் பொருள் நூலாக விளங்குகிறது.

சிற்றெல்லையாக 20 அடிகளும் பேரெல்லையாக 400 அடிகளும் கொண்டு விளங்கும் இந்நூலில் உள்ள பாடல்களை இயற்றியவர்கள் பதின்மூன்று பேர். இப்பாக்களுக்கு இசையமைத்தவர்களோ பதின்மர், தொகுத்தவரும் தொகுப்பித்தவரும் தெரியாத இந்நூலில் இடம் பெற்றுள்ள பாடல்கள் குறித்துப் பேசும் பழம்பாடல் ஒன்று,

| | | |
|---|---|---|
| திருமால் | - | 8 |
| செவ்வேள் | - | 31 |

| | | |
|---|---|---|
| காடுகிழான் | - | 1 |
| வையை | - | 26 |
| மதுரை | - | 4 |

என 70 பாடல்கள் இருப்பதாகக் குறிப்பிட்டாலும் தற்போது கிடைக்கும் பாடல்கள் திருமால் - 6, செவ்வேள் - 8, வையை-8 என 22 - பாடல்களேயாகும். கடவுள் வாழ்த்தில் இடம் பெற்று முதல் நிலையில் திருமால் இருந்தபோதும் செவ்வேளைக் குறித்த பாடல்களே முற்கூறிய இரு கணக்கிலும் மிகுதியாக இருப்பது தெளிவு.

**பரிபாடல் கூறும் செவ்வேள்**

முருகன் என்னும் சொல்லும் முருகன் குறித்த செய்திகளும் சங்க இலக்கியங்களில் பல்வேறு இடங்களில் சொல்லப்பட்டிருந்த போதும் ‘செவ்வேள்’ என்னும் பெயர் பரிபாடலில் மட்டுமே வழங்குகிறது. சிவந்த நிறத்தினை உடையவன், சிவனை ஒத்த சிவந்த நிறத்தை உடையவன் என்னும் பொருள்களில் இப்பெயர் வைக்கப்பட்டிருக்கலாம், மேலும் இச்சிறப்பின் காரணமாகவே பரிபாடலில் முருகன் குறித்த பாடல்களுக்குச் செவ்வேள் என்னும் பெயர் என்பதையும் உரைகளின் வழி உணரமுடிகிறது.

பரிபாடலில் 5,8,9,10,14,17,18,19,21 எண் வரிசையில் அமைந்த பாடல்கள் செவ்வேளைக் குறித்துப் பேசுகின்றன. இப்பாடல்களை முறையே கடுவன் இளவெயினனார், ஆசிரியன் நல்லந்துவனார், குன்றம் பூதனார் (9,18), கரும்பிள்ளைப் பூதனார், கேசவனார், நல்லழிசியார், நப்பண்ணனார், நல்லச்சுதனார் ஆகியோர் பாடியுள்ளனர். கண்ணனாகனார் (15) மருத்துவன் நல்லச்சுதனார் (8,9,10,19) கேசவனார், நல்லச்சுதனார் (17,18) கண்ணகனார் (21) என ஐவர் இசையமைத்துள்ளனர்.

பரிபாடலில் அமைந்துள்ள இவ்வெட்டு பாடல்களும் முருகன் துதியினைச் செவ்வனே செய்துள்ளன. சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே தென்படும் முருக வழிப்பாட்டினை முழுமையான அளவில் வெளிப்படுத்தும் முதல் நூலாகப் பரிபாடல் விளங்குகிறது. அதிலும் குறிப்பாக முருகனின் பிறப்பு குறித்துப் பேசும் கடுவன் இளவெயினனார் (பரி.பா.எண்.5) பாடல் முற்றிலும் புதிய பதிவாக அமைந்துள்ளது. இந்திரன் சிவனிடம் கருவினைச் சிதைக்க வேண்ட, சிவன் ஆறு துண்டங்களாகக் கருவினைச் சிதைக்க, அருந்ததி நீங்கலாக ஆறு கார்த்திகைப் பெண்களும் ஆறு துண்டங்களையும் ஏற்க, இமயமலையில் சரவணப் பொய்கையில் ஆறு தாமரை மலர்களில் முருகன் பிறந்தான் எனக் கூறும் கடுவன் இளவெயினனார் கூற்று முருகன் பிறப்பு குறித்துப் பேசும் பிற்கால நூல்களுக்கு முன்மாதிரியாக அமைந்துள்ளது.

எட்டாவது பாடலோ கற்புடைத் தலைவியர் திருப்பரங்குன்றத்தில் வழிபாடு செய்யும் செயலினை விவரிக்கிறது. கனவினில் கண்டு பழகிய தம் காதலரை நனவினிலும் சேர்த்தல் வேண்டும் என்றும் கருவுற்றால் இன்ன இன்ன பொருள்களை உனக்குத் தருவோம் என்றும் பொருள் கேடீச் சென்ற

தலைவர் தொழில் சிறப்பாக முடிவதோடு நிறைய பொருளினை அவர்களுக்கு அருள வேண்டும் என்றும் போர்த்தொழில் மேற்கொண்ட தலைவர் வெற்றி வாகை சூடி வருதல் வேண்டும் என்றும் வேண்டிக்கொள்ளும் பாங்கினைக் காணமுடிகிறது. முருகனின் செவிகளில் தம் கோரிக்கைகளை வைக்கும் தலைவியரின் செயல், முருக வழிபாடு பண்டைய சமுதாயத்தில் ஆழ்ந்து வேரூன்றி மக்கள்தம் வாழ்வில் முற்றிலும் நிறைந்திருப்பதைக் காண முடிகிறது.

பரிபாடலில் 19-வது பாடல் பல்வேறு செய்திகளை விவரித்தாலும் தனக்கெனத் தனித்த சில செய்திகளைக் கொண்டு இலங்குகிறது. மக்கள் கூடலில் இருந்து திருப்பரங்குன்றத்திற்கு வைகறையில் யாத்திரை வருவது, பாண்டியன் தன் படை, பரிவாரங்களோடு குன்றத்தினை வலம் வருவது, யானையினை அலங்கரித்தல், அதன் மத்தகத்தின் மேல் கொடி உயர்த்துதல், செவிக்குக் கவரியணிதல், யானை உண்ட மிச்சிலை முருகன் பிரசாதமாக எண்ணி 'உண்ணுதல்' என இச்செய்திகள் அனைத்தும் சங்க கால மக்கள் வாழ்வில் முருக வழிபாடும், முருகனுக்கான விழாக்களும் பின்னிப் பிணைந்திருத்தலைக் கொண்டு, தமிழ்ச் சமுதாயத்தில் இடம் பெற்றிருக்கும் முருக வழிபாட்டின் தொன்மையினை உணர முடிகிறது.

பரிபாடல் நெடுகிலுமே, முருகனின் தோற்றச் சிறப்பு விவரிக்கப்படுகிறது. 'மூ - இரு கயந்தலை', 'முந்நான்கு முழவுத்தோள்', ஞாயிற்று ஏர்நிறத்தகை' (பரி.பா.எண்.5) எனத் தொடங்கி செவ்வேளின் சிவந்த நிறமும் பன்னிரு கைகளும் முகத்தோற்றமும் பரிபாடலின் பல இடங்களில் வர்ணிக்கப்படுகின்றன. செவ்வேளின் யானை வாகனமும் சேவற்கொடியும் மயிற்கொடியும் வேல் சிறப்பும் அவன் காலணிகளின் சிறப்பும் என இயன்ற இடங்களிலெல்லாம் முருகனின் தோற்றச் சிறப்பும் படைக்கலன்களின் பெருமையும் பேசப்படுகின்றன.

சூரனை அழித்த செவ்வேளின் செயல் எட்டு பாடல்களிலுமே விரிவாகவோ சுருக்கமாகவோ பேசப்பட்டுள்ளது. மாமரவடிவில் நின்ற சூரனை அழித்து தன் கொடியாகவும் வாகனமாகவும் மாற்றிக்கொள்ளும் முருகனின் செயல், கிரௌஞ்ச மலையினை வேல் கொண்டு பிளக்கும் வேலனின் செயல், அவுணரைப் பிணிமுகம் ஏறி அழித்தல், தேவர் சேனைக்குத் தலைவனாதல் என முருகனின் வெற்றிச் சிறப்புகள் பேசப்படுவதோடு பக்தர்களுக்கு அருளும் அருட்சிறப்பும் பேசப்படுகிறது. தன்னைச் சரணடைந்தோரை முழுமையாக ஏற்றுக்கொண்டும் சரணடையாதோரையும் அழிக்காமல் அவர்தம் தீமையை அழித்து, அவரை முற்றிலுமாக வறொன்றாக மாற்றி ஏற்றுக்கொள்ளும் முருகனின் அருட்திறமும் விரிவாகப் பேசப்படும் முதல் நூலாக விளங்குகிறது பரிபாடல்.

திருப்பரங்குன்றத்தின் சிறப்புகள், அம்மலையில் கேட்கும் பல்வகை ஓசைகள், மதுரைக்கும் திருப்பரங்குன்றத்திற்கும் இடையிலான வழி, குன்றம் நோக்கி வரும் மக்கள், அவர்தம் செயல்கள், குன்றத்தினில் இருக்கும் மரங்கள், மலர்கள், விலங்குகள் அவற்றோடு பழகும் மக்கள் செயல், முருகனின் அருள்வேண்டி குன்றில் இருக்கும் மக்கள், தெய்வங்கள், தேவர்கள், பசுக்கள் உள்ளிட்டோர் பட்டியல் சரவணப் பொய்கையின் சிறப்புகள், குன்றினைக்

கைலாயத்தோடு ஒப்பிடும் பாங்கு, குன்றில் விழா செய்தலும் விருந்தயர்தலும், இசைக்கருவிகளின் பெயர்கள், இசைத்துக்கொண்டே ஆடும் மானுடரின் செயல்கள் எனப் பரிபாடலின் எட்டு பாடல்களும் செவ்வேள் வணக்கத்திற்குச் செழுமை சேர்க்கின்றன.

பிணிமுகம் ஏறி அவுணரை அழித்த செவ்வேள் தேவசேனையை மணக்க, மனிதரை மதித்து, அவர்களின் அன்பை மதிக்கும் வண்ணம், வள்ளியை மணத்தல் (பா.பா.எண்.9) எனும் செயல் பிற்கால முருக இலக்கியங்களுக்கு முன்னோடியாகப் பரிபாடலை மாற்றுகிறது.

*யாம் இரப்பவை*
*பொருளும் பொன்னும் போகமும் அல்ல் நின்பால்*
*அருளும், அன்பும், அறனும் மூன்றும் -*
*உருள் இணர்க் கடம்பின் ஒலி தாராயோ!"* (பரி.பா.எண்.5)

என வேண்டி பிற்கால பக்தி இலக்கியங்களுக்கும் முன்னோடியாக இலங்குகிறது பரிபாடல்.

முடிவுரை

தொன்மையான இலக்கண வடிவில் அமைந்து இசை வடிவத்தோடு முருகனை, அவன் பிறப்பினை, அவன் வென்றிச் சிறப்புகளை அருட்திறத்தை, முருக வழிபாட்டின் தொன்மையை விவரிக்கும் ஆதி நூல் பரிபாடல் என்பது திண்ணம்.

## முருகியற் முழுமுதற் பரம்பொருள்

முனைவர் அரு. உமாதேவராஜன்,
தலைவர்
Dr. A.P.J. அப்துல்கலாம் தமிழ்ப்
பண்பாட்டு ஆய்வு மையம், சேலம்.

தொல்பழங் காலந் தொட்டு முருகன் வழிபாடு தமிழர் இனத்தில் வேர் கொண்டுள்ளது. முருக வழிபாடு மூத்த வழிபாடு முதன்மையான வழிபாடு நக்கீரர் முதல் பாரதியார் வரை முருக வழிபாடு வளர்ந்துள்ளது. ஆறுபடைவீடு என்னும் அமைப்பு பழமையானது. படை வீடு தோறும் அடியார்கள் வலம் வந்த வணங்கி மகிழ்வது தமிழகத்தின் தனிச்சிறப்பு மயிலம், வயலூர், குன்றக்குடி, கழுகுமலை, வள்ளியூர், கந்தகோட்டம், வடபழனி குறிப்பிடத்தக்கவை. அருணகிரிநாதரால் பாடல் பெற்ற முருகன் சிறப்பே தனி! வள்ளலாரால் இந்த கோட்டப் புகழ் வானளாவியது. வாரியார் சுவாமிகளின் வளமான தொண்டால் வயலூர் வளம் பெற்றது. ஆறு, கடல், மலைகளில் கடவுள் வழிபாடு செய்வது தமிழர் மரபு. முருக வழிபாடு தமிழ் நிலத்தின் ஐந்திணையிலும் விழுது விட்டுள்ளது. முருகன் முழு முதற் பரம் பொருளாய் நம் தமிழ் இலக்கியம் போற்றுகிறது. பாரத இதிகாசமும், காளிதாசரின் குமார சம்பவமும் முருகனின் பிறப்பு வீரம் பேசுகிறது. முருகனின் ஆகமம் குமார தந்திரம் ஆகும். முருக வழிபாடு தமிழரின் பழம் பண்பாடு தமிழ் மறையான திருமுறைகளில்

*"கருகு குழல் மடவார்கடி குறிஞ்சியடி பாடி*
*முருகனது பெருமை பகர் முதுகுன்றடைவோமே"* (சம்பந்தர்)

*"முருகவேள் தனைப் பயந்தாய் போற்றி*
*நம் செந்தின் மேய வள்ளி மணாளர்க்குத் தாதை கண்டாய்"*
(நாவுக்கரசர்)

*"கடற்சூர் தடிந்திட்ட சேந்தர் தாதை"*
*"மயிலூர்தி முருகவேள் தாதை"* (சுந்தரர்)

*"குமரன் தன் தாதைக்கு உந்தீபற்"* (மாணிக்கவாசகர்)

எனப் பாடிப் பரவியுள்ளனர். தமிழும் முருகனும் ஒன்றே! ஏனெனில் தமிழ் அருளின் மொழி! தமிழறிஞர்கள் பக்தியின் மொழி தமிழ் எனப் பாடி ஏத்துகின்றனர். பக்தியின் மொழியாக நின்று சிறப்புறும் மொழியே தெய்வ மொழியாகும். இறைவனுக்கும் இனிய உயிர்கட்கும் இடையே அன்பை அரும்பச் செய்து, உயிர்கட்கு அருள் கிட்டச் செய்யும் மொழியே தெய்வ மொழியாம். தெய்வத் திருவுற்ற செம்மொழித் தமிழைச் சேக்கிழார், *"ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழ்"* என்கிறார். பழமையும், புதுமையும் தெய்வ நலமும் தனிப்பெருமையும் தமிழ் கொண்டு விளக்க காரணம் முருகியற் முழுமுதற்

பரம்பொருள் முருகனே! தமிழ்க் கடவுள். *"தமிழ் மொழியின் தனிப் பெரும் தலைவன் முருகப் பெருமானே!"* உலகில் முதன் முதலில் தோன்றிய நிலம் தமிழகம், முதன் முதலில் தோன்றிய மனித இனம் தமிழ் இனம், முதன் முதலில் தோன்றிய மொழி தமிழ்! பண்டைத் தமிழர் நிலத்தை நானிலமாய் பகுத்து அதில் மலையை முதன்மையாக்கினர். 'மலை' கடவுளின் இயற்கை வடிவாயிருப்பது. இயற்கையின் இறைவனின் படைப்பில் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் பேரழகைத் தன்னகத்தே கொண்டு அருவியும், ஆறும் சுனைகளும், ஊற்றும் உள் பொருளும் வாழும் உயிர்களும் பிறவும் கடவுள் வடிவான இயற்கை வண்ணமாய் திகழ்வன.

மலையானது, நிலத்தினின்று ஓங்கலாக மக்கள் வாழ்வுக்கென்று இறைவனால் அமைக்கப் பெற்ற இயற்கை மாளிகை. அம்மாளிகையில் மனித வாழ்விற்கான பொருள்களனைத்தும் இயற்கையாய் அமைந்துள்ளன. எனவே தான் மலையிடத்து வாழ்ந்த பண்டைத் தமிழர் எவ்விதக் குறையுமின்றி இயற்கையோடியைந்து நாகரிக இன்ப அன்பு வாழ்வினை நடத்தலாயினர். இவ் விழுமிய வாழ்வினைத் தணிகைப் புராணத்துள் கச்சியப்பர்,

*"தேனும் செந்தினை இடிகாடும் தீஞ்சுவைக் கனியும்*
*எனும் துய்ப்பன உடுப்பன மரவுரி தழைகள்*
*வானும் தோய் சுனை ஆடுவ மணிவரை இருப்ப*
*ஏனஞ் சூழ்ந்த குன்றவர்க்கொரு நல்குர வின்றே"*

எனப் பாடியுள்ளார். இயற்கை எங்கெல்லாம் எழில் களிநடம் புரிகின்றதோ, அங்கெல்லாம் இறைவனின் அருட்பொலிவைக் கண்டு அகங்குளிர்ந்தனர். காலை இளம் பரிதியிலும், கடற் பரப்பிலும், ஒளிப்புனலிலும் எழிற் பெருக்கைக் கண்டனர், களிப்புற்றனர். இவ்வெழிலை, பொலிவை இறைவனாகக் கண்டுணர்ந்த பண்டைத் தமிழர் அவ்விறைவனுக்கு முருகு எனத் திருப்பெயர் சூட்டிப் போற்றினர்.

'முருகு' என்னும் பெயர்ச்சொல் பல பொருள் குறித்த ஒரு சொல்லாகும். அந்த ஒரு சொல் 'முழு முதற் பரம் பொருள்' ஆகும். குறிஞ்சிநிலத் தெய்வமாகிய குமரப் பெருமானை அழகின் வடிவமாக, முருகாக, முருகியலின் முழுப் பிழம்பாகக் கண்டு போற்றினர். இவ்வுலகின் தோற்றத்தையும், இயக்கத்தையும் கூர்ந்து நோக்கிய பண்டைத் தமிழர் இவ்வுலகம் இடையறாது இயங்க ஏதோ ஒரு பரம்பொருள், ஒரு முழு முதற் பொருள் இருத்தல் வேண்டும் எனத் துணிந்து அம்முழு முதற்பொருளை இவ்வுலகின் கண் காணப்பெறும் ஒவ்வொர் அணுவிலும் உள்ளீடாய் நீக்கமற நிறைந்திருக்கும் அழகின் தோற்றத்தில் முருகியலின் வெளிப்பாட்டில் கண்டுணரலாயினர்.

அம் முழு முதற் பொருளைத் தொல்காப்பியர் 'கந்தழி' எனக் குறித்தார். (கந்து-பற்று, அழி-அழிப்பது) இயற்கையோடு இயைந்து, இயற்கையோடு வாழ்ந்து, இயற்கையை ஆய்ந்து, இயற்கையில் உறையும் அழகு என்னும் முருகியற் பிழம்பைக் கண்டனர் தமிழர். நக்கீரனார்

முருகியல்பை விரிந்துரைக்குங்கால், “கைப்புனைந்தியற்றாக் கவின் பெறு வனப்பு” என்கிறார். முதற்கண் தோன்றிய நிலமாகிய மலை நிலத்தின் முதல் தெய்வமாக முருகப் பெருமான் என்பதைத் தொல்காப்பியனார் “சேயோன் மேய மைவரை யுலகமும்” என்றார். இளஞ்ஞாயிற்றின் எழுச்சிக் கோலம் இன்பம் சுரக்கும். எனவே சேய், சேயோன் செவ்வேள் என முருகனைச் சிவந்த இயஞ்ஞாயிற்றின் ஒளி மிக்கான் எனப் போற்றினார். போர் புரிவதில் சிறந்த பறவையாம் சேவலைக் கொடியாக, குறிஞ்சி நில மலராம் கடம்ப மலரை மாலையாக அந்நிலப் பறவையாம் மயிலை ஊர்த்தியாக்கினர். இதனைச் சங்கத் தமிழில் பெருந்தேவனார்,

*“தாமரைப் புரையும் காமர் சேவடிப்*
*பவழத்தன்ன மேனித் திகழொளிக்*
*குன்றியேய்க்கு முடுக்கைக் குன்றின்*
*நெஞ்சு பகவெறிந்த வெஞ்சுடர் நெடுவேற்*
*சேவலங் கொடியோன் காப்ப*
*ஏமவைகல் எய்தின் றானுலகே”*

என்றார். முருகனே! தமிழர் கண்ட முதல் தெய்வமும், தமிழின் தனித் தெய்வமும் ஆகும். அம்முதல் தெய்வமே தமிழர் உணர்ந்த முருகியற் முழு முதற் பரம் பொருள். அம்முருகியற் முழு முதல் பரம் பொருளே முருகன்! தமிழால் முதற்கண் உணரப்பட்டவன், உணர்ந்து உணர்த்தப்பட்டவன். தன்னை உணர்ந்த மொழியைத் தன் மொழியாகக் கொண்ட தன் உருவாகக் கொண்டு முருகன் என்னும் திருப் பெயரால் அமைந்தான். தானே தமிழ் வடிவாக, புலமையாக, புலவனாகத் திகழ்ந்தான்.

*“நூலறி புலவ”* (முருகாற்றுப்படை)
*“வேதமுங் கலைகள் யாவும்*
*விளம்பிய புலவ போற்றி”* (திருவருட்பா)
*“பலர் புகழ் ஒன்மொழிப் புலவர் ஏறே”* (முருகாற்றுப்படை)
*“வாலறிவன்”* (திருக்குறள்)
*“ஞானச் செஞ்சுடரே”* (திருவருட்பா)
*“மெய்ஞ்ஞானக் குருவே”* (குமரேச சதகம்)
*“சீராரும் தணிகை வரை அமுதே”* (திருவருட்பா)
*“என்றும் அழியாத இளமைக் கார”* (திருப்புகழ்)
*“மணம் கமழ் தெய்வத்து இளமை நலங்காட்டி”* (முருகு)

தமிழ் என்று தோன்றியதோ அன்றே தோன்றி தமிழாய் நிறைந்தவன் முருகன். பிரணவ வடிவை தனதாக்கியவன் முருகன் “ஓம்” பிரணவம் அ,உ,ம முன்றெழுத்தின் சேர்க்கையால் உண்டானது “ஓம்”. அ-படைத்தல், உ-காத்தல், ம-ஒடுக்கல், அ, உ, ம மூன்றெழுத்திலும் குடிக் கொண்டதால் முருகன் காத்தற் பண்புருவாய் நிறைந்துள்ளான். முருகப் பெருமானைக் குறிக்க வழங்கப் பெறும் திருப்பெயர்கள் பலவாகும். இவையனைத்தும் பெருமானது பெருமையை உணர்த்தும் சீராமையினவாகும்.

| | |
|---|---|
| வேலாயுதம் | - வேல் ஏந்துபவன் |
| மயில்வாகனன் | - மயில் மீது ஊர்பவன் |
| புலவன் | - தமிழ்க்கடவுள் |
| கடம்பன் | - கடம்ப மலர் மாலையணிந்தவன் |
| குமரன் | - இளைஞன் |
| ஆறுமுகன் | - ஆறுமுகமுடையான் |
| பன்னிரு தோளன் | - பன்னிரு கரமுடையான் |
| சேவற் கொடியேன் | - சேவலைக் கொடியாக கொண்டவன் |
| கந்தன் | - பற்று கோடானாவன் |
| வள்ளிமணாளன் | - வள்ளி கணவன் |

தமிழர் தம் முழுமுதற் பரம் பொருளைக் குழந்தையாக, சிறுவனாக, இளைஞனாக, புதுமணச் செல்வனாக பற்றற்ற யோகியாகக் கண்டுக் கனிந்தனர். முருகப் பெருமானை அவிர் ஒளிர் பிழம்பாக நின்று பொலிவுறும் பாங்கினை நக்கீரனார்,

*"உலகம் உவப்ப வலனேர்பு திரிதிரு*
*பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு*
*ஓவற இமைக்கும் சேண் விளங்கவிரொளி"*

எனப் போற்றுகிறார். மாயையாகிய இருளால் அவதிப்படுகின்ற உயிர்கள் முருகனது அன்பு ஒளியால் உய்வு பெற்று உவகை கொண்டு பேரின்ப பெருநிலையை எய்துகின்றன என்பதால் தான் நக்கீரனார் 'உலகம் உவப்ப' என்றார். முருகக் கடவுள் அழகுக் குழந்தையாக விளங்குகின்றார். கார்த்திகை மகளிர் அறுவரால் சீராட்டிப் பாலூட்டி சரவணப் பொய்கையில் தாமரை மலரில் தவழும் காட்சியினைச் சங்க இலக்கியமான பரிபாடல்;

*"மறுவறு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயில் வழா அது நிற் சூலினரே*
*நிலந் தோங்கி மையத்து நீலப் பைஞ்சுனைப்*
*பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்*
*பெரும் பெயர் முருக" என்று போற்றுகிறது".* என்றும்,

*"சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்*
*திருமலைப்பால் உண்டான் திருக்கை வேலன்றே"*

என்று சிலப்பதிகாரமும் கூறுகின்றது. முருகப் பெருமான் வரும் காட்சியினைக் குமரகுருபரர்,

*"பைம் பொற் சுடர்ச் சுட்டிக் கட்டு சூழியமுடன்*
*பட்டமொளி விட்டெரிப்ப*
*பங்கய மலர்ந்த திரு முக மண்டலந் தொறும்*
*பனி முறுவல் நில வரும்பக்*

*கும்பப் படாமுலை மலைப் புதல்வி செல்வக்*
*குமார நாயகன் வருகவே*
*குரவு கமழ் தரு கந்த புரியிலருள் குடி கொண்டே*
*குமரகுரு பரன் வருகவே!*
(முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ்)

என்று ஒளியின் வடிவாய், பிழம்பாய் முழுமுதற் பொருளாய் கண்டு வணங்கியப் பெற்றி இதற்கண் புலப்படும்.

**ஆறுமுகம் அருட் செயல்கள்**

முருகப் பெருமானின் ஆறுமுகப் பெருக்காட்சியினைக் கந்தர் கலிவெண்பாவில்,

*"பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்*
*அச்சம் அகற்றும் அயில் வேலும் - கச்சைத்*
*திருவரையும் சீறடியும் செங்கையும் ஈராறு*
*அருள் விழியும் மாமுகங்கள் ஆறும் விரிகிரணம்*
*சிந்தப் புனைந்த திரு முடிகள் ஓராறும்*
*எந்தத் திசையும் எதிர் தோன்ற வந்து*
*இடுக்கண் எல்லாம் பொடிபடுத்தி எவ்வரவம்*
*தந்து புகுந்து உல்லாசமாக உளத்திருந்து"*

எனக் குமரகுருபரர் அழகாகக் கூறுகின்றார். கந்தரலங்காரத்தில் அருணகிரிநாதர்,

*"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு*
*மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியிற்*
*சேலார் வயற்பொழிள் செங்கோடனைச் சென்று கண்டு தொழ*
*நாலாயிரங்கண் படைத்திலனே யந்த நான்முகனே"*

கந்தன் அழகு காண நாலாயிரம் கண் வேண்டும் என்கின்றார். கைப்புனைந்தியற்றாக் கவின் பெறு வனப்பின் வடிவாயமைந்த முருகப் பெருமான். கவினார் பொருட்கள் அனைத்தின் மாட்டும் நீக்கமற நிறைந்து பொலிவுறுகின்றார்.

இயற்கைத் தெய்வமாகிய முருகப் பெருமான், இயற்கையுலகில் இயற்கையாலயங்களில் நிறைந்து விளங்கி உலகை உவப்புறச் செய்கின்றார். உலகையும், உலகப் பெயர்களையும், உலகப் பொருட்களையும் முருகப் பெருமான் தன் உறைவிடங்களாகக் கொண்டு திகழ்கின்றார். அன்பர்கள் எண்ணம் போல், அன்பர்கள் இடம் நாடி வந்து அன்புப் பெருக்கால் அருள்புரியும் முருகக்கடவுள் "முருகியற் முழு முதற் பரம் பொருளாய்" அன்பர்களின் நெஞ்சக் கோயிலில் நீங்காது உறைகின்றார். தமிழ் கூறு நல்லுலகின் தமிழரின் தமிழ் மொழியின், தமிழ் இனத்தின் 'முருகியற் முழு முதற் பரம் பொருள் முருகனே!" எஞ்ஞான்றும் என்பது தமிழாய்ந்த தமிழ்அறிஞர்களின் முடிபாகும்.

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் அண்ணாமலை ஏழிளையனார் திருப்புகழ்

பெ. உமாமகேஸ்வரி,
துணைப்பேராசிரியர்,
வைஷ்ணவா கல்லூரி,
சென்னை.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் அவதரித்து அருந்தமிழ் சமயப் பொதுமை, சமூக சிந்தனை, மனித நேயம், ஆகிய மாண்புகளை பேணி மாபெரும் கொடையாற்றிய பெருமைக்குரியவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். சிரவையாதீனப் பரமகுருநாதரான இவர் உயர்நிலைக் கௌமார நெறியை வகுத்தவர். திருநெல்வேலியில் சைவவேளாள மரபினராகிய செந்தினாயகம் பிள்ளை - பேச்சிமுத்து அம்மையாருக்குத் தலைமகனாக 28.11.1839 அன்று பிறந்தவர். அறுசமய நெறிகள் காட்டும் பரம்பொருள் ஒன்றே என்பதை வலியுறுத்திய வண்ணச்சரபம் சுவாமிகள் தாமே அதற்கொரு முன்னுதாரணமாகத் திகழ்ந்து பல்வேறு தலப் பயணங்கள் மேற்கொண்டார். அறுசமயக் கடவுளரையும் வழிபட்டு பாடல்கள் இயற்றினார். இவர் ஏறத்தாழ ஒரு இலட்சம் பாடல்கள் பாடினார் என்பது வரலாறு. இவற்றுள் எஞ்சியுள்ளவை சுமார் 50,000 பாடல்கள். அரிய வகை வண்ணம் பாடியதால் வண்ணச்சரபர் ஆனார். தமது உருவத்தின் மூலமே சமயப் பொதுமையை உணர்த்தினார். பாதாதி கேசமாகத் திருநீறணிந்து இரு தோள்களிலும் தென்கலை, வடகலை திருநாமம் அணிந்து கண்டத்தில் உருத்திராக்க மாலையுடன் துளசி மாலையையும் தாமரை மணிமாலையையும் அணியும் நியமம் உடையவராய் வாழ்ந்தார். கைகளில் ஒரு தண்டினைத் தாங்கியிருந்ததால் தண்டபாணி சுவாமிகள் என்றழைக்கப்பட்டார். எல்லா மொழிகளுக்கும் தந்தை மொழி தமிழே எனத் தமிழலங்காரத்தில் குறிப்பிட்டுள்ள வண்ணச்சரபம் சுவாமிகள் தமிழைத் தெரியாதவர் தெய்வமே ஆனாலும் இகழும் நெஞ்சுரம் பெற்றிருந்தார். ஆங்கில ஆட்சியை எதிர்த்து ஆங்கிலியர் அந்தாதியைப் பாடினார். சமகாலப் புலவரைப் போற்றும் பெருந்தன்மை மிக்கவராய்த் திகழ்ந்தார். திருவருட் பிரகாச வள்ளலார், மாம்பழச் சிங்கக் கவிராயர் போன்றரைப் போற்றியதன் மூலம் நாம் இதனை அறியலாம்.

பார்புகழும் அண்ணாமலை தலத்தில் (திருவண்ணாமலை) எழுந்தருளியுள்ள ஏழு முருகக்கடவுள் கோயில்களைப் பற்றிப் பாடியுள்ளார் வண்ணச்சரபம் சுவாமிகள் *அண்ணாமலை ஏழிளையனார் திருப்புகழ்* என்கிற பெயரில் சுவாமிகள் பாடியுள்ள ஏழு பாடல்களையும் குறித்து இவ்வாராய்ச்சிக் கட்டுரையை இனிதே சமர்ப்பிக்கிறேன். இந்நூல் கோவை மாநில முருக பக்தர்கள் பேரவை அறக்கட்டளையால் வெளியிடப்பட்டது கோபுரத்திளையவர், கம்பத்திளையவர், வடக்கு வீதி இளையவர், வடமேற்கு இளையவர், பவளமலை

இளையவர், வேளாளர் தெரு இளையவர், எண்இல் வடிவ இளையவர் ஆகிய ஏழு முருகப் பெருமான் ஆலயங்களைக் குறித்துப் பாடியுள்ளார்.

**ஏழிளையனார் திருப்புகழில் சமயப் பொதுமை**

வேதாந்த சித்தாந்த சமரசம் கண்ட தாயுமானவர் சமரச சுத்த சன்மார்க்க நெறி கண்ட இராமலிங்கருக்குப் பின் தெய்வம் ஒன்றே என்னும் புது நெறி வகுக்க முயன்றவர் வண்ணச்சரபம் சுவாமிகளே. அறுசமயக் கடவுளரையும் பல நிலைகளில் ஒருங்கிணைத்துக் காட்டிய பெருமை இவருக்கு உண்டு. சிவன், திருமால், சக்தி, சூரியன், கணபதி, முருகன், பரம்பொருள் என அனைத்துக் கடவுள்களையும் பற்றி பல்லாயிரக்கணக்கான பாடல்களைப் பாடி ஏக நெறியில் வாழ்ந்த பெருமை இவருக்கே உரித்தானது. கோபுரத்திளையவர் குறித்த முதற்பாடலில்,

*"சிவ சமயத் தோர் முதற்பலரும்*
*வழிபடும் நற்சோணை வெற்பு இலகு*
*திருவருணைக் கோபுரத்து இளைய பெருமாளே"*

என்னும் பாடலில் சிவனைக் குறித்துக் குறிப்பிடும் இவர்,

*"பமர நிரைகள் மொரேல் என நுகர*
*ஒழுகும் மதம் உடையானொடு சிறிது*
*பகை செய்து ஒரு பரதேசியில் வடிவு கொளும் வேளே"*

என்னும் பவளமலை இளையவர் குறித்த பாடலில் முதற்கடவுளான விநாயகரையும் குறிப்பிடுகிறார். வேளாளர் தெரு இளையவர். பாடலில் திருமாலின் பெருமையையும் பின்வருமாறு பாடுகிறார்.

*"முதலையால் வாடும் மதகரிக்கு அருளும்*
*நெடியமால் ஆழி கொடு, பகற்பொழுதை*
*முதிர் இராவாக முனம் இயற்றியவன் மருகோனே"*

வடக்குவீதி இளையவர் குறித்த பாடலில்,

*"துளவம் அணி நெடியோன், மலர் வனிதை*
*மருவும் அழகிய மால்புகழ் பெருமை"*

என்ற அடிகளும் மாலின் உயர்வினைக் காண்பிப்பதாக அமைகின்றன.

**கொல்லாமை என்னும் உயர்நெறி**

தம் மனுநெறித் திருநூலில் கொல்லாமை என்ற அதிகாரத்தில் இறைவனே ஏவினும் கொல்லக்கூடாது என்பதனை,

*"ஈசனெதிர் வந்து மற்றோர் இன்னுயிரைக் கொல் எனினும்*
*ஆசகன்ற சீரியரொப்பார்"*

என்னும் அடிகளால் வலியுறுத்திய வண்ணச்சரபம் சுவாமிகள் ஏழிளையார் திருப்புகழிலும் இதனைப் பவளமலை இளையவர் குறித்த பாடலில் பின் வருமாறு கொல்லாமையைக் குறிப்பிடுகிறார்.

*"கதற உயிர்வதையே புரிபவர்கள்*
*சமயம் நலம் என ஓதிடும் மடையர்கள்*
*களி கொடு உலவுதலால் முகில் வெருவி ஒளியாதே"*

உயிர்வதை புரிந்து சமய நலம் ஓதுபவர்கள் மகிழ்வோடு உலவுதல் கண்டு மேகங்கள் அஞ்சி ஒளியாது என்னும் பொருள் படக் கூறுகிறார். தெய்வத்தின் பெயரால் நடக்கும் உயிர்பலியைப் பல இடங்களில் தடுத்து நிறுத்தி,

*"சுத்த பூசை நோய் தருமாயிற்*
*பேயும் தெய்வமாம் பிணப்பலி யேற்கிற்*
*தெய்வமும் பேயாம் எனுமீது திறமே"*

எனப் பாடியவர் வண்ணச்சரபம் சுவாமிகள் என்பதனை நாம் நினைவு கூர வேண்டும்.

**சமூக அவலங்களின் பதிவு**

ஒரு படைப்பாளியின் படைப்பு என்பது அவர் வாழும் சமூகத்திற்குத் துளியேனும் உதவ வேண்டும் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் காலத்தில் தமிழ் மொழிக்கும், இனத்திற்கும், இறைநெறிக்கும் பயனில்லாத வெற்றிலக்கியங்கள் மிகுந்திருந்தன.

முழுப்புலமை பெற்றவரே புலவர். அவரே நன்னூல் செய்பவர் எனக் கருதி புலமைக்கு ஓர் இலக்கணம் வகுத்து அதனை ஐந்திலக்கணத்திற்குப் பின்னே ஆறாவது இலக்கணமாக்கி அறுவகை இலக்கணம் என ஆவணமாக்கி நீடித்த புகழுக்குரியவர் சுவாமிகள். இறை சார்ந்த பாடல்களே ஆனாலும் சமூக அவலங்கள் குறித்த ஒரு படைப்பாளியின் உள்ளக்கிடக்கை ஏதேனும் ஒரு இடத்தில் வெளிப்பட்டே தீரும்.

*"காமக் கடலே கதி எனக் கருதிப்*
*போலார் புலமைப் புண்ணியம் இன்றே"*

எனப் புலமை இலக்கணத்தில் பாடிய சுவாமிகள் ஏழிளையனார் திருப்புகழிலும் சிற்றின்பம் குறித்த இக்கருத்துகளைப் பதிக்கிறார்.

*"களபம் அணிதரு பூரண கலசம்*
*அனைய துணை முலை வேசியர் தமது*
*கபட மதில் வசமாகி என் அருமை குலையாதே"*

என்று வடக்குவீதி இளையவர் குறித்த பாடலிலும்,

*"கலகம் இடும் வாள்கண் வனிதையர் களப*
*முலையில் அதிவேட்கை யுறும்அவர் தமது"*

கடைகள் தொறும் ஏற்று மெலிவுறு துயரம் நழுவாதோ என்று வடமேற்கு இளையவர் பாடலிலும்,

*"மதனவேல் ஏவு பனிமலர்க் கணைகள்*
*சுடுவதால் ஆவி மறுகி எப்பொழுதும்*
*மகளிர் மாய்மாலம் அதை மிகக் கருதி அழியாதே*
*மடமை சேர் மூடர் மனைகளில் தினமும்*
*அலைவதே யோகம் என நினைத்து அருளில்*
*மறதியாம் வீணர் உறவினைச் சிறிதும் மதியாதே"*

என வேளாளர் தெரு இளையவர் பாடலிலும் பெண்ணாசையின் அவலம் குறித்து உணர்த்துகிறார். அதேபோல் கொடியவர்களின் சிறுமை வார்த்தைகளால் அடையும் மனக்கவலை எப்போது நீங்கும் என்கிற ஏக்கத்தைப் பின்வருமாறு வெளிப்படுத்துகிறார்.

*"கபடம்மிகு தூர்த்த நினைவு உறு கொடியர்*
*இகழ்சிறுமை வார்த்தை எனும் அழல் சுடுதல்*
*கருதி மனவாட்டம் அடைவது முழுவதும் ஒழியாதோ"*
(வடமேற்கு இளையவர் பாடல்)

பவளமலை இளையவர் பாடலில்,

*"விமல மவுனமனோலய புனித*
*பரம ரகசியம் மேவிய முனிவர்*
*வெருளும் நடைஉறு பாதகர் பெருமை அடையாதே"*

எனப் பாதகர் குறித்துப் பாடுகிறார். மேலும் சமய மூர்க்கம் குறித்தும் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.

*"சபலம் அறமாற்றி உறுதிகள் முழுதும்*
*உதவுதிரு நீற்றை இகழ்பவர் மருவு*
*சமயமதன் மூர்க்கம் முழுமையும் நொடியில் அழியாதோ"*

என வடமேற்கு இளையவர் பாடலில் வினவுகிறார்.

**முடிவுரை**

ஏழு சிறிய பாடல்களைக் கொண்ட அண்ணாமலை ஏழிளையனார் திருப்புகழ் முருகனருளோடு சமூக உணர்வுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகவும் விளங்குகிறது. சுருங்கக்கூறின் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் புலமை இலக்கணத்தில் விளக்கியபடி,

*"தமிழ்க்கும், தனக்கும் சார்தரு நெறிக்கும்*
*தன் இனத்தினர்க்கும் தவறு உறா வண்ணம்*
*முயல்வோன் புலமை முதன்மைத்து ஆமே"*

என்னும் இவ்வரிகளுக்குச் சான்றாகவே அவரது இப்படைப்பும் அமைந்திருக்கிறது. வண்ணச்சரபம் சுவாமிகளின் சீரிய படைப்புகள் திக்கெட்டும் பரவ வழி சமைப்போம்.

**பயன்பட்ட நூல்கள்**

1. அறுவகை இலக்கணம், வண்ணச்சரபம் சுவாமிகள், ப.வெ.நாகராஜன் (உரை), தமிழ்ப்பல்கலைக்கழகம் வெளியீடு.

2. தண்டபாணி சுவாமிகள் ஆய்வுமாலை தொகுதி ஒன்று, தண்டபாணி சுவாமிகள் நினைவு நூற்றாண்டு விழா வெளியீடு, கோவை 1998.

## முருகர் ஒயில்(க்) கும்மி ஓலைச்சுவடி

முனைவர் வே. கட்டளை கைலாசம்,
மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
ம.தி.தா.இந்துக் கல்லூரி, திருநெல்வேலி.

இந்தியா ஓர் ஆன்மீக நாடு. பக்தி என்பது மக்களின் அன்றாட வாழ்வோடு கலந்த ஒன்று. தமிழர் பண்பாட்டில் முருகன் வழிபாடு பழங்காலந் தொட்டே இருந்து வருகின்றது. வேலன் வெறியாட்டு சங்க இலக்கியங்களில் காணக்கூடி ஒன்று. முருகன் வழிபாட்டில் நாட்டார் வழக்காற்றியல் கூறுகள் தொடர்ந்து வருகின்றன. நாட்டார் கலைகளும் முருகன் வழிபாட்டில் இணைந்துள்ளன. ஒயில் கும்மி என்னும் நாட்டார் ஆட்டக் கலையினை நிகழ்த்தும் அண்ணாவிகள் என்னும் ஆசான்கள் "முருகர் ஒயில்(க்)கும்மி" ஓலைச்சுவடியைப் பாதுகாத்து வந்துள்ளனர். இக்கட்டுரை, "முருகன் ஒயில் கும்மி" ஓலைச்சுவடியினை ஆய்வதாய் அமைகிறது.

### முருகன் வழிபாடு

குறிஞ்சி நிலத்தெய்வமான முருகனைச் "சேயோன் மேய மைவரை உலகமும்" எனத் தொல்காப்பியம் சுட்டும். திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை, கலித்தொகை ஆகிய நூல்கள் முருக வழிபாட்டின் சிறப்புகளை விளக்குகின்றன. கச்சியப்ப முனிவரால் எழுதப்பட்ட கந்தபுராணம் முருகனின் திருவிளையாடல்களைத் தொகுத்துக் கூறுகிறது. முருகனைப் போற்றிப் பல சிற்றிலக்கியங்கள் பாடப்பட்டுள்ளன. காவடிச் சிந்து, வழிநடைச் சிந்து எனக் கவிஞர்கள் முருகனை வேண்டிக் கவிபடைத்துள்ளனர். திருச்செந்தூர் முருகனை நக்கீரர் காலம் தொடங்கி இன்றுவரை, கவிஞர்கள் பாடிப்பரவி வருகின்றனர். திருச்செந்தூர் முருக பக்தர்கள் முருகன் ஒயில் கும்மியடித்து முருகன் அருள் வேண்டுகின்றனர்.

### வள்ளி திருமணம்

கச்சியப்ப சிவாசாரியர் சுவாமிகள் அருளிச் செய்த கந்தபுராணத்தில் உள்ள "வள்ளியம்மை திருமணப்படலம்" முருகப்பெருமான் வள்ளியை மணந்த கதையைக் கூறுகிறது. வள்ளிமலையில் சிவன் என்ற முனிவன் தவம் புரிந்தான். அங்கு வந்த அழகான மானைக் கண்ட முனிவன் அதன் மீது இச்சை கொண்டான். மான் கருவுற்று வள்ளிக்கொடியின் அருகில் அழகான பெண்குழந்தையை ஈன்றது. பெண் குழந்தை இல்லா வேடர் குலத்தலைவன் நம்பி என்பான். அக்குழந்தையை எடுத்து வள்ளி எனப் பெயரிட்டு வளர்த்தான். தினைப்புலக் காவலுக்குச் சென்ற வள்ளியை நாரதர் கண்டார். முருகனை அழைத்து வந்து காட்டினார். வள்ளியின் அழகில் மயங்கிய முருகன் அவள் மீது காதல் கொண்டான். வேடனாக வந்த முருகன், வள்ளியின் தந்தை நம்பி வருவதைக் கண்டு மரமாக மாறினான்.

தேனும் தினைமாவும் வள்ளியிடம் பெற்று உண்டான். முருகன் வள்ளியின் முன் கிழவனாகத் தோன்றினான். விநாயகரை யானையாக வரவேண்டி வள்ளியை அச்சம் கொள்ள, செய்து அடைந்தான். வள்ளி முருகன் காதல் திருமணமாக நிறைவுறுகிறது. தமிழர்கள், வள்ளி திருமணத்தையே சிறப்பாகக் கருதிப் பல பாடல்கள் பாடியுள்ளனர். வள்ளித் திருமணக் கதையானது தெருக்கூத்து, நாடகம், ஒயிலாட்டம், கழியல் ஆட்டம் போன்ற பல நாட்டார் கலைகளில் இடம் பெற்றுள்ளது.

### கும்மி

நாட்டுப்புற ஆடல் என்பது ஒரு குறிப்பிட்ட சமூகத்தில் பெருமரபிற்குள் (Great tradition) நிகழ்த்தப்படும் சிறு மரபின் (Little tradition) வட்டார நடனம் ஒரு நடனம் என்பது காலம் மற்றும் வெளியில் செயல்படும் வெளிப்பாட்டின் முறையென்றே புரிந்து கொள்ள வேண்டும். இ்.து இசையின் வரையறுக்கப்பட்ட கூறுகளுடன் நெருங்கிய தொடர்புடைய அதிகபட்ச உடலசைவுகளைக் கொண்டது என்பார் ஜோஹறன் வீலர் (Richard M.Dorson (Editor) 1972:385). கும்மி என்பது குழுமி என்ற சொல்லின்று உருவானதாக அ.கி. பரந்தாமனார் குறிப்பிடுகின்றார். (வாழ்வியல் களஞ்சியம் தொகுதி -7, ப.644). கும்மியடித்தல், கொம்மி கொட்டுதல், கொப்பி கொட்டுதல், கொம்பை, தட்டியாங் கொட்டுதல், கொண்டான் கொட்டுதல் என பல வழக்குச் சொற்கள் கும்மி ஆட்டத்தைச் சுட்டுகின்றன.

### ஒயில் கும்மி

"ஒயில்" என்ற சொல்லுக்கு "ஒய்யாரம்", சாயல், அலங்காரம், உல்லாசநிலை, ஒருவகைக் கூத்து, அழகு என அகராதிகள் பொருள் கூறுகின்றன. ஒயிலாட்டம் என்பது ஆண்கள் குழுவாக இணைந்து ஆடும் ஆட்டமாகும். குழுவினர் எல்லோரும் ஒரே நிறத்தில் தலை கட்டும் கைக்குட்டையும் கொண்டு இக்கலையை நிகழ்த்துவர். அண்ணாவி, பக்கப்பாட்டுக்காரர்கள், இசைக்கருவிகள் ஓர் ஓரத்தில் நிற்க ஆட்டக்காரர்கள் ஓர் ஓரத்தில் நிற்க, ஆட்டாக்காரர்கள் மையப்பகுதியில் நின்று ஆடுவர். ஒயில் கும்மி என்பது குறைந்த வகை அளவிலான அசைவுகளைக் கொண்ட ஒருவகை ஆடவர் கும்மி என்பர். ஒயில் கும்மியில் பாடப்படும் வள்ளித் திருமணக் கதைப்பாடலின் சில பகுதிகள் ஆண்கள் கோலாட்டமான கழியில் ஆட்டத்திலும் பாடப்படுகின்றன. கழியல் ஆட்டத்தில் கழியில் கும்மி இடம் பெறுகிறது.

### முருகர் ஒயில் கும்மி ஓலைச்சுவடி

திருச்செந்தூர் தாலுகா சாத்தான் குளத்திற்கு அருகில் உள்ள சிற்றூர் விஜயராமபுரம். இவ்வூரில் 20ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆத்திக்கண்ணு வாத்தியார் திண்ணைப்பள்ளிக்கூடம் நடத்தி வந்துள்ளார். அவரிடம் பயின்ற மாணவர்கள் பல ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து வந்துள்ளனர். அப்பகுதியில் கழியில் ஆட்டம் குறித்து கள ஆய்வு செய்தபொழுது ஆய்வாளருக்கு "முருகர் ஒயில் கும்மி மேலப்பாடல் சுவடி" கிடைத்தது. ஆ.ச. ஆத்திக்கண்ணு

உபாத்தியருடைய ஓலைச்சுவடி என்பதை சுவடியின் முதல் ஓலைக்குறிப்பால் அறியமுடிகிறது. இவ்வோலைச்சுவடியின் நீளம் 27.5 செ.மீ., அகலம் 3 செ.மீ., முன்பக்க ஓலை ஒன்று பின்பக்க ஓலை ஒன்று நீங்கலாக 35 ஓலைகளில் முருகன் வள்ளியைத் திருமணம் செய்த நிகழ்ச்சி கும்மிமெட்டில் பாடப்பட்டுள்ளது.

**முருகர் ஒயில் கும்மி கட்டமைப்பு**

கலைகள் எல்லாம் தமக்கென ஒரு கட்டமைப்பைக் கொண்டு தனது தனித்தன்மையைக் காட்டுகின்றன. ஆட்டக்கலைகளும் அவற்றுக்கான பாடல்களும் ஒரு கட்டமைப்பைக் கொண்டு விளங்குவது இயல்பு. ஓலைச்சுவடியில் எழுதப்பட்டுள்ள, முருகர் ஒயில் கும்மிப்பாடலும் ஒரு ஒழுங்கு முறையினைக் கொண்டுள்ளது.

**முதல் ஓலை**

முதல் ஓலையின் இடது ஓரத்தில் "உ" என்று குறிப்பிட்டு கடவுள் துணை "ஸ்ரீ ஸ ஜெயம்" என்று எழுதப்பட்டுள்ளது. அதனை அடுத்து "ஆ.ச.ஆத்திக்கண்ணு உபாத்தியாயர் முருகர் ஒயிலக்கும்மி மேலப்பாடச்சுவடி" என உள்ளது. மறுபக்கம் ஒன்றும் எழுதப்படவில்லை.

**இரண்டாம் ஓலை**

"உ" , "க" (பக்க எண்) அத்துடன் "ஹரி ஓம் நன்றாக குருவே துணை" என்று ஓரத்தில் பதிவு செய்யப்பட்டுள்ளது. "மந்திர சடாட்சர சண்முகவிலாச மணந்த வள்ளி சரிதையெனும் வன்மைதனை விந்தை தருமொயிற்கும்மி சங்கீதமாக மேதினியோர் படித்தெழுதி மிகக் கொண்டார்" என ஓலைச்சுவடியின் பொருளும் எவ்வகை இலக்கியம் என்பதும் சுட்டப்பட்டுள்ளது. கணபதியின் துணையும் வேண்டப்படுகிறது. மறுபக்கம் எழுதப்படவில்லை.

**மூன்றாம் ஓலை**

மூன்றாம் ஓலையில் "உ" நன்றாக என எழுதப்பட்டுள்ளது. கும்மிப் பாடல் இந்த ஓலையில் இருந்துதான் தொடங்குகிறது.

*"தனன நானன நனனன நானன*
*நனனன நானன நன்னானே*
*தானநதனை தானநதனை தானநதனை*
*தானநதனை தன்னை நானை நன்னானே"*

என ஒயில் கும்மியின் சந்தக்கட்டு பாடிக் கும்மிப்பாடல் தொடங்குகிறது. விநாயகர் காப்பு, சரஸ்வதி அருள் வேண்டப்படுகிறது. அவையடக்கமாக "குயின் மொழியைக் கண்டு காகந்தொனி செய்த வாரது போல" என்றுரைக்கின்றார்.

**கும்மிப்பாடல் ஆசிரியர்**

அடுத்த ஓலையில் "விஸ்வ குலத்திலுதித் தெழுந்த வெங்கடாசல மைந்தனுரைத்த கவி" என நூல் ஆசிரியனின் பெயரைக் கூறுகின்றார். அவரை வணங்கித் துணை வேண்டுகின்றார் ஆத்திக்கண்ணு வாத்தியார்.

**ஒயில் கும்மி பாடலின் கருத்து**

கானகத்தில் தவம் செய்த கலைக்கோட்டுமா முனிவன் தன்முன் தோன்றிய மானுடன் கலந்தார். வள்ளி பிறக்கின்றாள். வேடர் தலைவன் நம்பி வள்ளியை எடுத்து வளர்க்கின்றான். நாரத முனிவர் தினைப்புனம் காத்த வள்ளியின் உருவை வரைந்து முருகனிடம் காட்டுகின்றான். முருகன் வேடனாக வந்து வள்ளியைக் காதலிக்கின்றான்.

கந்தபுராணக் கதையைப் போலவே முருகன் மரமாகவும், கிழவனாகவும் தோன்றி இறுதியில் வள்ளியை மணக்கின்றான்.

**பயன் உரைத்தல்**

*"வள்ளியைக் கந்தன் மருவிய கதை*
*வாசித்துங் கேட்டு மெழுதினோர்கள்*
*வேலவனளாலே மிகபெரும்பேறு சீராகவே*
*வாழ்ந்திருப்பார்கள் மன மகிழ்தே"*

என "முருகர் ஒயில் கும்மியை" வாசிப்போர், கேட்போர், எழுதுவோர் முருகன் அருள் பெறும் நிலை கூறப்படுகிறது.

*"முருகர் ஒயிலக்கும்மிப் பாடல்*
*நன்றாக குருவே துணை"*

எனக் கும்மிப்பாடல் முற்றுப் பெறுகிறது.

திருநெல்வேலி, தூத்துக்குடி மாவட்டப் பகுதியில் உள்ள கிராமங்களில் முருகன் ஒயில்கும்மி சிறப்பாக நிகழ்த்தப்பட்டு வந்துள்ளது. ஓலைச்சுவடிப் பள்ளி மாணவர்கள் படியெடுத்துப் பாடி வந்துள்ளனர். ஓலைச்சுவடிகள் மெல்ல அழிந்து வருகின்றன. முருகன் ஒயில் கும்மி பாடுவதும் அருகிவிட்டது. தனக்கெனத் தனி கட்டமைப்பும் சந்தக்கட்டும் கொண்டுள்ள ஒயில் கும்மிப் பாடல்களைப் பாதுகாத்துப் பாடுவதற்கும், புதிதாய் படைப்பதற்கும் பயிற்சி அளிக்க வேண்டும்.

## வரலாற்றுச் சுவடி எழுதும் முறைகளில் காணலாகும் இறைமை (மெக்கன்சி சுவடி 3180)

முனைவர் த. கண்ணன்
பேராசிரியர், தலைவர்
அரிய கையெழுத்துச்சுவடித் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

வரலாற்று மூலங்களுள் தாள்சுவடிகளுக்கு முதன்மையான இடம் வழங்கப்படுகிறது. வரலாற்றை எழுதும் முறைகளில் செப்பேடுகள் கல்வெட்டுகள் மெய்க்கீர்த்திகள் ஓலைச்சுவடிகள் என்பனவற்றை மிகுதியும் பயன்படுத்தியுள்ளனர். அவ்வளவில் வரலாற்றை அரிய தாள்களில் எழுதிவைக்கும் மரபும் காணப்படுகிறது. தஞ்சையை அரசாண்ட மராட்டிய மன்னர்களின் வரலாறுகள் பல்வேறு வரலாற்று மூலங்களால் அறியப்பட்ட போதும் அவர்களின் வரலாற்றைத் தொகுத்து எழுதி வைத்திருக்கும் கல்வெட்டுகளையும் அரிய தாள்சுவடிகளையும் காணமுடிகிறது. அவ்வரலாற்றுச் சுவடிகள் மெக்கன்சியின் தொகுப்பில் கிடைக்கின்றன. மெக்கன்சி தொகுப்பில் எண் 3180 எனும் சுவடி தஞ்சை மராட்டியர் வரலாற்றை எழுதி வைத்திருக்கும் தாள்சுவடியாகும். நூறாண்டுகளுக்கும் மேலான வரலாற்றைத் தொகுத்தெழுதும் போது அவர்தம் சமுகம்சார் கருத்துப் பின்புலத்தையும் வெளிப்படுத்துகின்றனர். அவற்றுள் இறைமைசார் பதிவுகளை ஆராய்ந்து காணும் நோக்கில் இக்கட்டுரை அமைகிறது.

### அரிய தாள்சுவடிகள்

காகிதங்கள் முதன்முதலில் சீனாவில் கி.பி. 102இல் கண்டு பிடிக்கப்பட்டதாக்க கூறுவர். இதனை சீனாவின் ஹோனன் பகுதியைச் சார்ந்த லயசிங் கிராமத்தில் வசித்து வந்த டி.சாய்லுன் என்பவர் செல்லுலோஸ் கொண்ட தாவரங்களின் பட்டை, தண்டு அல்லது அதன் சக்கையில் இருந்து தயாரித்தார் என்றும் சுட்டுவர். ஆனால் இந்தியப் பாரம்பரியத்தில் காகிதங்கள் கிறிஸ்துவிற்கு முற்பட்ட காலங்களிலே பயன்பாட்டில் இருந்தன என்பதையும் அக்காகிதங்களை இறந்தவர்களின் சமாதிகளில் வைத்துப் புதைத்துள்ளனர் என்பதையும் அகழாய்வுகள் கண்டறிந்துள்ளன. எனவே காலத்தால் மிகவும் பழமையான ஆவணங்களுள் அரிய தாள்சுவடிகளும் இடம்பெறுகின்றன.

ஓலைச்சுவடிகளில் பெரும்பாலும் எழுதப்பட்டுவந்தவற்றை எல்லாம் காகிதங்களிலும் எழுதத்தொடங்கிய காலத்திலும் காகிதங்களின் பயன்பாடு எளிதில் கிடைத்த காலத்திலும் அரிய தாள்சுவடிகள் பெரிதும் உருவாயின. ஓலைகளைப் படிப்போரும் படியெடுப்போரும் அவற்றைக் காகிதங்களில் எழுதினர். ஓலைகளைத் திரும்பத் திரும்ப எடுத்துப் படிப்பதில் உள்ள சிக்கலை உணர்ந்தவர்கள் ஓலையில் உள்ளதைக் காகிதங்களில் எழுதிக்கொண்டனர். இந்நிலையில் தாள்சுவடிகள் தோன்றின.

காலத்தால் அழியாதவைகள் கல்வெட்டுகள். இக்கல்வெட்டுகளின் உருவாக்கத்திற்கு தாள்சுவடிகளே பெரிதும் துணைநின்றுள்ளன. கால்வெட்டுகளை வெட்டுவதற்கு முன்பு அச்செய்திகள் காகிதங்களில் எழுதப்பட்டுள்ளன. பிறகு அக்காகிதங்கள் கல்வெட்டும் வெட்டும் தொழிலாளியிடம் கொடுக்கப்பட்டது. அதனைப் பார்த்துப் பார்த்து அத்தொழிலாளி அக்கல்வெட்டை வெட்டியுள்ளார். இவ்வாறு கல்வெட்டுகளுக்கும் தாள்சுவடிகள் முன்னோடிகளாக விளங்குகின்றன.

உலகளவில் கிடைக்கும் தாள்சுவடிகள் எண்ணற்றவையாக உள்ளன. உலகெங்கிலும் உள்ள சுவடிக் காப்பகங்களில் தாள்சுவடிகள் சேகரிக்கப்பட்டு பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அரிய தாள்சுவடிகளைத் தொகுத்தவர்களுள் மெக்கன்சிக்குத் தனித்த இடம் உண்டு.

**மெக்கன்சியின் தொகுப்பு**

மேலைநாடுகளில் இருந்து வாணிபம் செய்யவும் சமயத்தைப் பரப்பவும் வந்த ஐரோப்பியர்களுள் காலின் மெக்கன்சியும் ஒருவர். தொல்பொருள் ஆய்வுகளைச் செய்த முதன்மையராக விளங்கினார். இவருடைய சேகரிப்பில் அரிய தாள்சுவடிகளும் உள்ளன.

**நல்லாட்சியும் இறைவன் அருளும்**

மன்னர்களின் வரலாற்றைத் தொகுத்தெழுதும் பொழுது மன்னர்கள் குழந்தைச் செல்வம் முதலிய செல்வங்களைப் பெற்று தனது மரபை விருத்திசெய்து வெற்றிகள் பல பெற்று நன்முறையில் வாழ்ந்தவர்களின் வரலாற்றைப் பதிவு செய்யுமிடங்களில் இச்சுவடியெழுத்தாளர்கள் அம்மன்னர்களின் நல்லாட்சியும் இறையருளுமே அவர்களுக்கு இவ்வாறான சிறப்புகளை நல்கியதாகப் பதிவிடுகின்றனர்.

ஸ்ரீமன் நாராயணன், ஸ்ரீசூரியநாராயணன், மனு, இஷவாக்கு எனும் இவர்கள் முதலாயோர் கிரேதா, திரேதா, துவாபரயுகங்களில் வாழ்ந்தவர்களின் தொடர்ச்சியாக கலியுகத்தில் வாழ்ந்த போன்ஸ்லே வம்சத்தின் மூலவராக சம்பு என்பவரின் வரலாற்றை இச்சுவடி முதலாவதாக எடுத்துரைக்கிறது. அவ்வரலாறு *"கலியுகத்தில் ஸெம்பு றுவத பிறாந்தத்தில் மஹறா' தேசாதிபதி சவுரிய அவதாரிய குணப்பிறக்கியாதியுள்ள றாஜா ஸெம்ப யென்கிறவர் அவதாரமானார் அந்தறாஜா தம்முடைய சுதற்ம்மயுக்த்த மாற்க்கமாய் றாச்சியபரிபாலனம் பண்ணிக்கொண்டு ஸேம்பு றுவதத்தில் ஸ்ரீஸாம்பசிவ பிற ஸாதாற்த்தமாய் அனுஷ்டானம் பண்ணிக்கொண்டு வந்தார் அவர் பண்ணின அனுஷ்டானத்துக்கு ஸ்ரீஸாம்பசிவன் சந்தோஷமாய் அந்த றாஜாவினுடைய சொறப்பனத்திலே பிறசன்னமாய் உமக்கு சந்ததி சம்பத்துகள் விசேஷமாக உண்டாகுமென்று பிறசாதம் பண்ணினார். உடனே கொஞ்ச நாளைக்கு பிற்ப்பாடு அவருக்கு பிறதம யெகொழி றாஜா பிறந்தார்"* என எழுதப்பட்டுள்ளது. இங்குச் சுதற்ம்மயுக்த்த மாற்க்கமாய் என்று அவ்வரசன் தன் ஆட்சிப்பரப்பைத் தர்ம மார்க்கமாய் நடத்தினான் என்பதும் ஸ்ரீஸாம்பசிவ பிற ஸாதாற்த்தமாய்

அனுஷ்டானம் பண்ணிக்கொண்டு வந்தார் என்பதும் அவ்வரசன் இறைவனை வழிபட்டதன் பயனாய் நல்தொரு சிறப்புகளைப் பெற்றான் என்பதும் வரலாற்று எழுதுமுறையின் வழியாகப் பதிவாகியுள்ளது.

இவ்வாறே சரபராசாவின் மகனான மகாசேனராவின் வரலாற்றை எழுதுமிடத்து, "அந்த ராஜா ராச்சியத்தை பரமநீதியாக நடப்பிவித்துக் கொண்டிருந்த புண்ணிய விசேஷத்தினாலே அவருக்கு அன்பது பிள்ளைகள் பிறந்தார்கள்" என்றெழுதுகின்றனர். இங்கு அரசர்களின் வாரியாகக் குழந்தைகள் பிறந்த செய்தியை எழுதும் நிலையில் அவர் அனது அரசாட்சியை சமநீதியாக நடத்திக்கொண்டிருந்தது குறிப்பிடப்படுகிறது.

இவ்வாறே ராமச்சந்திராசவின் மகன் பீமராவின் வாரிசுப் பிறப்பை எழுதுமிடத்து, "அந்த பீமறாஜா தற்மத்தோடேயும் பிறசேகளைப் பரிபாலனம் பண்ணிக்கொண்டிருக்கிற போது அவருக்கு ரெண்டாம் யெகொஜீ றாஜா பிறந்தார்" என்றெழுதப்படுகிறது. இங்கு இரண்டாம் ஏகோஜி ராசா பீமராசாவிற்கு மகனாகப் பிறந்தார் என்று மட்டும் குறிப்பிடாது பீமராச தர்மத்தோடு குடிமக்களை ஆட்சி செய்துகொண்டிருக்கும் போது அவருக்கு இரண்டாம் ஏகோஜி என்று குறிப்பிடுவதன் வழி வராலாற்றை எழுதியோர் மன்னர்தம் வாரிசுப் பிறப்புக்கும் அவர்தம் நல்லாட்சிக்கும் இயைபுபடுத்திப் பார்த்திருப்பதையும் அந்நல்லாட்சியுடன் அவர்களுக்கு உடனிருக்க வேண்டிய இறைபக்தியும் சுட்டிக்காட்டப்பட்டிருப்பதையும் காணமுடிகிறது.

**இறையருளும் வெற்றிகளும்**

சிவாஜி ராசாவை வீழ்த்த வேண்டுமெனக் கருதிய அல்லியெதல்ஷா என்பான் முசேகான் மற்றும் பத்தேகான் என்பவர்களை அனுப்புகிறான். ஆனால் முசேகான் சிவாஜியால் கொல்லப்படுகிறான். பத்தேகான் உயிருக்குப் பயந்து ஓடிவந்துவிடுகிறான். இந்நிலையில் சிவாஜியை வீழ்த்துவது குறித்தும் முசேகான் இறப்பு மற்றும் பத்தேகான் புறமுதுகிட்டு ஓடியது எனும் இவற்றைக் குறித்தும் சிந்திக்கும் அல்லியெதல்'ா, "புனாவுக்கு முசெகான் பத்தெகான் இவாளை அனுப்பிவித்த இடத்தில் சிவாஜிராஜா முசெக்கானைக் கொண்ணு போட்டார். பத்தேகான் எல்லாத்தையும் தோத்து உயிரோடே தப்பிவந்தான். இப்போ சிவாஜிராஜா விஜாபுரக்கோட்டையின் பேரிலே பாளையமெடுத்து பிறப்பட்டு வர ஆயித்தமாகயிருக்கிறார். அவர் மகாசூரன் ஈசுவரப்பிறசாதி யெங்கே போனாலும் செயத்தை அடைகிறார்" என்றுரைக்கிறார். இங்கு அல்லியெதல்லாவின் சிந்தனைகள் வரலாற்றை எழுதியோர்தம் கற்பனைக்கு உட்பட்டது. இவ்விடத்தில் அல்லியெதல்ஷா சிவாஜியின் வெற்றிக்கு அவன் மகாவீரன் என்று நினைத்தார் என்றுமட்டும் குறிப்பிடாது ஈசுவரன் அருள் இருப்பதால் அவருக்கு எங்கே போனாலும் வெற்றிகிடைக்கிறது என்றும் சிந்தித்ததாகக் குறிப்பிடுகின்றனர். இதன் அடிப்படையில் ஒருவரின் வெற்றிக்கு வீரம் மட்டும் போதாது அதனுடன் இறையருளும் வேண்டும் என்ற சிந்தனையையும் காணமுடிகிறது. இச்சிந்தனை அக்காலத்தைய சமுதாயச் சிந்தனையாக இருந்திருக்கவேண்டும். அவ்வாறு இல்லாது வரலாற்றை

எழுதியவரின் தனிப்பட்ட சிந்தனையாக இருக்கமுடியாது. வரலாற்றை வரைவோரின் தனிப்பட்ட சிந்தனைகள் அவர்தம் எழுத்துகளில் பதிந்தாலும் அதனை அச்சுவடி எழுதப்பட்ட காலத்தில் இருந்த அரசனால் ஏற்கப்பட வேண்டியிருப்பதால் அச்சிந்தனை சமுதாயத்தில் நிலவும் சிந்தனையாக இருக்கும் நிலையில் ஏற்கப்படும் என்பதும் தெளிவாகிறது.

சிவாஜி ராசாவை வீழ்த்துவதற்கு அல்லியெதல்ஷாவிற்கு துணைநின்ற டில்லி ஈசுவரன் என்பானுடன் அல்லியெதல்ஷா சிவாஜி ராசா குறித்த முடிவைக்கூறுமிடத்து, "...... இதுவுமல்லாமல் ஈசுவர கிருபையினாலே பூமியிலே அநேகந்திரவியம் அகப்படுது. சத்துருவுடைய சேனைகள் யெத்தனை லெட்சமிருந்தாலும் றாஜாவுடைய சேனைகள் கொஞ்சமாக இருந்தும் இவாள் அரகரமகாதேவா யென்று சப்தத்துடனே வந்து விழுந்தவுடனே சத்துரு சேனைகள் சின்னா பின்னமாய் போய் விடுகுது. இப்படிப்பட்ட றாஜாவை செயிக்கிறது கடினம்" என்றுரைக்கிறார். இங்கு இறைவன் அருளால் அளவில்லாத செல்வம் கிடைப்பதும் இறைவன் பெயரைச் சொல்லிக்கொண்டு இறைவன் மீது முழுநம்பிக்கைகொண்டு செய்யப்படும் செயல் எப்படிப்பட்ட கடின செயலாக இருந்த போதும் அச்செயலில் வெற்றிகிடைக்கும் எனக் கருதிய தன்மையை இவ்விடத்தில் அறியமுடிகிறது.

முடிவுரை

மெக்கன்சி தொகுத்த சுவடிகளுள் எண் 3180 எனும் சுவடியை மையமாக வைத்து எழுதப்பட்ட இக்கட்டுரையில் சுவடி எழுதும் நெறிகள் எனும் நோக்குநிலையில் வெளிப்படும் இறைமை சார்ந்த செய்திகள் ஆராயப்பட்டுள்ளன. அவ்வாய்வின் பயனாக சுவடியெழுதுவோர் வரலாற்றுச் செய்திகளுடன் இறைமை குறித்த பதிவுகளையும் வெளிப்படுத்தியுள்ளனர். அதில் அரச பரம்பரையில் கிடைக்கும் குழந்தைப்பேறு, செல்வங்கள், வெற்றிகள் முதலியன அவர்களின் இறைவழிபாட்டுடன் தொடர்புபடுத்தப்பட்டுள்ளன. அரச வம்சத்தின் வெற்றிகளுக்கு இறைமை ஒரு காரணமாக சுவடியெழுதுவோரால் கருதப்பட்டுள்ளது. எனும் இவற்றையின் வழியாக அறியமுடிகிறது.

துணைநூல் பட்டியல்

1. கே.எம். வேங்கடராமையா (ப.ஆ) *தஞ்சை மராட்டிய மன்னர் வரலாறு,* தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

## முருகனும் திருவுருவ வகைகளும்

ர. கண்ணன்
முதுகலை தமிழ் இரண்டாமாண்டு
செல்வம் கலை மற்றும் அறிவியல் கல்லூரி (தன்னாட்சி)
நாமக்கல்.

தமிழுக்கும் தமிழனுக்கும் முழுமுதற் கடவுளாகத் திகழ்பவர் முருகப்பெருமான். மக்கள் வாழ்வியலின் கருவூலமாகத் திகழும் தமிழ் இலக்கியங்களில் முருகனின் வரலாறுகள் இடம்பெறுகின்றன. திருமுருகாற்றுப்படை, குறிஞ்சிப்பாட்டு, பரிபாடல் போன்ற பல இலக்கியங்களில் முருகன் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. இக்கட்டுரையில் முருகப்பெருமானின் பெயர்க் காரணம், அவர் கொண்டுள்ள திருவுருவம் போன்றவற்றைப் பற்றிய செய்திகளைக் காணலாம்.

### இலக்கியத்தில் முருகன்

தர்மம் வாழும் இவ்வுலகில் அவ்வப்போது அதர்மச் செயலும் நடைபெறும். ஆனால் அதர்மம் மேலோங்கி தர்மம் அழியும் நிலையிலிருக்கும் போது நம் அனைவரையும் காக்க இறைவன் தோன்றுவார் என்பதைச் சாஸ்திரம் கூறுகிறது. அதேபோல் தான் சூரபத்மன் என்னும் அசுரன் தேவர்களிடம் பெற்ற வரங்களைக் கொண்டு வானவரையும் மானிடரையும் துன்புறுத்தி வந்தான். அவன் தேவர்களைச் சிறைப்பிடித்து வைத்தான். அவனது அட்டூழியங்களை அழிக்க சிவபெருமான் தனது நெற்றிக்கண்களின் மூலம் ஒரு குழந்தையை உருவாக்கினார். அக்குழந்தையே முருகப்பெருமானாவார். உலகில் பல்வேறு தெய்வவழிபாடுகளை நம் மக்கள் மேற்கொண்டுள்ளனர். அவற்றில் தமிழ் மக்களின் கடவுளாக பெரும்பாலும் முருகனே உள்ளார். முருகப்பெருமான் மலைவாழ் மக்களின் வழிபாட்டிற்குரிய பெருந்தெய்வமாகும். முருகன் மலைமீது உள்ளதால் *"குறிஞ்சிக் கிழவன்"* என்று அழைக்கப்படுகிறார். முருகவழிபாடு தமிழர் வழிபாடு என்பது நாம் அனைவரும் அறிந்ததே. ஆரம்ப காலகட்டத்தில் அசைவ உணவை உட்கொண்டவர்களின் கடவுளாக இருந்த முருகனை *வேலன்* என்று மக்கள் வழிப்பட்டதாகவும் பலிகொடுத்தும், ஆட்டு ரத்தத்துடன் கலந்த தினைமாவை அவருக்கு படைத்ததாகவும், வெறியாட்டுவித்தும், நெல்லும் மலரும் தூவியும், தேனும் தினையும் படைத்தும், தங்களோடு காவலுக்கு அழைத்தும், காவல் தெய்வமாக மதித்தும், தங்கள் வழிபடு சக்தியாக வழி நடத்தும் தெய்வமாக தமிழர்கள் முருகனைக் கண்டுள்ளனர். அதன் பின் வந்த *சமஸ்கிருத* வழிபாட்டு முறையில் முருகன் வழிபாடு *சைவ வழிபாடாக* மாறியது என்றும் கூறப்படுகிறது.

### தமிழ் கடவுள் முருகன்

தமிழ்மொழி மீது மிகுந்த ஈடுபாடு கொண்ட கடவுளாக முருகப்பெருமான் திகழ்கின்றார். தமிழ் எந்தக் காலம் தோன்றியது என்று

அறியமுடியாத அளவிற்குப் பழமைமிக்க மொழி. அத்தகைய மொழியைப் படைத்த கடவுளாக முருகனைப் போற்றி வணங்கிவருகின்றனர். இதன் மூலம் தமிழக மக்களின் தொன்மையான வழிபாடாக கருதப்படுவது முருகவழிபாடு என்பதை அறியமுடிகிறது. முருகனின் அருள் பெற்றவர்களில் அருணகிரிநாதரும் ஒருவர். அவர் இயற்றிய பாடல்களில் "முத்தமிழால் வைதாரையும் வாழவைப்போன் முருகன்" என்னும் வரிகளைக் கொண்டு முருகன் தமிழின் மீது ஆர்வம் கொண்டவர் என்பதனை அறியலாம். தமிழ்க்கடவுள் என்று அழைக்கப்படும் முருகனைப் பற்றிய செய்திகள் தமிழ் இலக்கியங்களான மகாபாரதம், திருமுருகாற்றுப்படை, பரிபாடல், நற்றிணை, அகநானூறு, குறுந்தொகை, புறநானூறு, போன்றவற்றில் காணப்படுகின்றன.

தொல்காப்பியம் குறிஞ்சி நிலத்தெய்வத்தைச் "சேயோன்" என்ற சொல்லால் சுட்டுகின்றது. தூரத்தில் இருப்பவன் அல்லது செம்மையானவன் என்ற பொருளில் இப்பெயர் வழங்கியிருக்கலாம்.

*"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்"* (தொல்.பொருள்., 63)

என்னும் வரிகளை ஆராய்ந்தால் வெவ்வாய் வேலன் என்பது வெம்மையான வாயை உடையவன் என்ற பொருளில் அமைகிறது. செம்மை, வெம்மை என்னும் இவை இரண்டும் சூரியனின் தன்மைகள் எனவே சேயோன் என்பது இயற்கை வழிபாட்டில் சூரியனைக் குறிக்கும் சொல்லாக அமைந்திருக்கலாம். சேயோன் என்பவனை முருகன் என்றும் வேலன் என்றும் குறிப்பிடுவர். வேலன் என்னும் பெயரும் வேலை உடையவன் என்ற பொருளில் அமைகிறது. குறிஞ்சி நிலமாவது வேட்டைத் தொழிலை மையமாகக் கொண்டுள்ளது. அதற்காக வேலை ஆயுதமாகப் பயன்படுத்துகின்றனர். இதன் மூலம் முருகனுக்கும் தமிழுக்கும் தமிழனுக்கும் உள்ள உண்மைப் புலப்படுகிறது.

**இலக்கியங்களில் அகம், புறம்**

தமிழ்க்கடவுளான முருகப்பெருமான் வழிபாடானது சங்க இலக்கியத்தில் உள்ள அகம், புறம் என்ற இவ்விரண்டிலும் காணப்படுகிறது. அகம் என்பதில் தலைவன் தலைவியின் வாழ்க்கை முறை பற்றிக் கூறப்படும். தலைவியானவள் தனது களவுக் காலத்தில் தலைவனைக் காணாமல் துன்பப்படுவாள். அப்போது தாயானவள் தம்புதல்விக்கு நிகழ்ந்த துன்பத்தைப் போக்க தெய்வத்திற்குச் சாந்தி வழிபாடு நடத்துவார்கள். அத்தகு வழிபாடுகளில் *"வெறியாடலும்"* ஒன்றாகும். வெறியாடலின் போது உயிர் பலியிடப்படும். குறமகள் வெறியாட்டு நிகழ்த்தி வழிபட்ட நிகழ்வு முருகாற்றுப்படையில் காணப்படுகிறது.

இலக்கியங்களில் புறம் என்பது போர் பற்றிய செய்திகளைப் பற்றிக் கூறுவதாகும். போருக்குச் செல்லும் போது முருகனை வேண்டி வழிபட்டுச் செல்வார்கள். ஏனெனில் முருகப்பெருமான் தேவர்களின் சேனாதிபதியாக நியமிக்கப்பட்டவர். அதன் பயனாக தேவர்கள் என்றும் வெற்றிப்பெற்றனர். *"வெல்லும் போரை வல்ல முருகன்"* என மலைபடுகடாமிலும் போர் வன்மை

மிக்க முருகன் கோவில் பற்றிய குறிப்புகள் அகநானூற்றிலும், புறநானூற்றிலும் காணப்படுகின்றன. பரிபாடலிலும், திருமுருகாற்றுப்படையிலும் முருகனுக்குரிய வீரம், பெருமை, வளமை முதலான செய்திகள் இடம்பெற்றுள்ளன. அதனால் போருக்குச் செல்லும் முன்னரும் வெற்றிக்குப் பின்னரும் முருகனைப் போற்றி வழிபடும் முறை காணப்படுகிறது.

**பெயர்க்காரணம்**

தமிழ்க் கடவுளை முருகன் என்ற பெயர் கொண்டு அழைக்கின்றோம். *"முருகு"* என்பதற்கு *அழகு, இளமை* என்று பொருள். முருகு என்னும் சொல்லை நன்கு ஆராய்ந்தால் மெல்லின, இடையின, வல்லின மெய்யெழுத்துகளுடன் *"உ"* என்னும் உயிரெழுத்து ஒவ்வொன்றுடனும் சேர்ந்து முருகு (ம் - உ, ர் - உ, க் - உ - முருகு) என்று அமைகிறது. *அன்* என்பது தமிழ் இலக்கணங்களில் ஆண்பால் விகுதியைக் குறிக்கப் பயன்படுகிறது. தன்பெயரிலேயே தமிழ் இலக்கணங்களைக் கொண்டு அமைத்துள்ளார். இதைத்தவிர வேறு எந்த சான்று வேண்டும் இவர் தமிழ்க்கடவுள் என்பதற்கு. முருகு என்ற இம்மூன்று எழுத்தும் இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி இவைகளைக் குறிக்கும். இதனை வேறுவகையிலும் கூறுகின்றார்கள். *வள்ளிபிராட்டி* (இச்சா சக்தி), *தெய்வானை* (கிரியா சக்தி), முருகனின் கையில் உள்ள *வேல்* (ஞான சக்தி) என்னும் இம்மூன்று சக்திகளையும் கொண்டு *முருகன்* எனப் பெயர் பெற்றார். இதுவே முருகன் என்ற பெயரின் தத்துவம் ஆகும்.

**திருவுருவ வகைகள்**

முருகப்பெருமான் ஆறுமுகங்களையும், பன்னிரு கரங்களையும் அதில் ஆயுதங்கள் ஏந்தியும் காட்சி வழங்குவார். முருகபகவான் ஒவ்வொரு இடங்களில் ஒவ்வொரு உருவ அமைப்பைப் பெற்றுள்ளார். அதன் வகைகளும் விளக்கங்களும் கொடுக்கப்பட்டுள்ளன.

**சக்திதர ஸ்வாமி**

ஒரு திருமுகமும் இரு திருக்கரங்களும் இடக்கரத்தில் வஜ்ரமும், வலக்கரத்தில் இச்சா, கிரியா, ஞான சக்தியின் வடிவாகிய வேலாயுதமும் ஏந்திக் கொண்டு அசுரவதம் பொருட்டு நின்ற திருவுருவம்.

**ஸ்கந்த ஸ்வாமி**

ஒரு திருமுகமும் இரு புயங்களும் அரையில் கோவணமுங்கொண்டு வலக்கரத்தில் தண்டை ஊன்றி இடக்கரத்தைத் தொடையில் வைத்து செம்மேனியுடன் விளங்குகின்ற திருவுருவம்.

**தேவசேநாபதி ஸ்வாமி**

சூரியப் பிரகாசமும், பன்னிரு திருக்கண்களும், ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும், புன்முறுவலும், வலக்கரத்தில் சக்தி, வாள், அங்குசம், பாணம், தண்டு, அபயமும் இடக்கரத்தில் வஜ்ரம், கேடகம், பாசம், சேவல்,

தாமரை, வரதமும் ஆகிய இவைகளைத் தாங்கி தேவர்களையும் மூவர்களையும் தனக்குச் சேனைகளாகக் கொண்டு நின்ற திருவுருவம்.

**ஸுப்ரஹமண்ய ஸ்வாமி**

சிவந்த நிறமும், சந்திரகாந்திப் பிரகாசமும், ஆரகேயூரம் முதலிய சிறந்த அணிகலன்களும், ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், அபய வரதமும், வேலும் சேவற்கொடியுந் தாங்குதலுங் கொண்டு மிகவும் வரதராய் விளங்குகின்ற திருவுருவம்.

**கஜவாஹன ஸ்வாமி**

ஒரு திருமுகமும், இரு திருக்கண்களும், நான்கு திருக்கரங்களும் வலக்கரங்களில் வேலும் அபயமும், இடக்கரங்களில் சேவற்கொடியும் வரதமுங்கொண்டு வேண்டியவற்றை எல்லாம் வழங்குவதாய் நின்ற திருவுருவம்.

**சரவணபவ ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு தேவகணங்களால் உபாசனை செய்யப்பட்டு நல்லவர்களால் பூசிக்கப்பட்டு வலக்கரங்களில் சக்தி, மணி, வாள், தாமரை, சேவல் அபயமும் இடக்கரங்களில் பாசம், தண்டம், கட்கம், பாணம், வில், வரதம் இவைகளை ஏந்தி நின்ற திருவுருவம்.

**கார்த்திகேய ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், ஆறு திருக்கரங்களும் பாலசூரியப் பிரகாசமும், வலக்கரங்களில் சக்தி, வாள், அபயமும் இடக்கரங்களில் குலிசம், கேடகம், வரதமும் தாங்கி சாதுக்கள் வழிபட விளங்குகின்ற திருவுருவம்.

**குமார ஸ்வாமி**

ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், வலக்கரங்களில் சக்தி, வாள். இடக்கரங்களில் கொடி, கேடகம் உடையவராய் விளங்குகின்ற திருவுருவம்.

**ஷண்முக ஸ்வாமி**

சிந்தூர காந்தி நிறமும், மயில் வாகனமும், ஆறு திருமுகங்களும், தெய்வயானை சமேதமும் பன்னிரு திருக்கண்களும், பன்னிரு திருக்கரங்களும் கொண்டு வலக்கரங்களில் சக்தி, பாணம், வாள், கொடி, தண்டு, அபயமும் இடக்கரங்களில் வில், வஜ்ரம், தாமரை, கேடகம், வரதம், சூலம் இவைகளைத் தாங்கி அருள் வடிவாய் நின்ற திருவுருவம்.

**தாரகாரி ஸ்வாமி**

பன்னிரு திருக்கரங்களிலும் இடத்தில் முறையே வரதம், அங்குசம், சேவற்கொடி, கேடகம், வில், வஜ்ரம், வலத்தில் அபயம், பாசம், சக்கரம்,

கட்கம், உலக்கை, சக்தி இவைகளைத் தாங்கித் தாரகனை வதைத்த திருவுருவம்.

**ஸேநாநி ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், பன்னிரு திருக்கரங்களும் வலத்தில் அபயம், வாள், சக்கரம், அங்குசம், சக்தி, சூலம் இடத்தில் வரதம், குலிசம், பாசம், தாமரை, தண்டம், கதை இவைகளை ஏந்திய வடிவங்கொண்டு தேவர்களைச் சைந்யமாகக் கொண்டு நின்ற திருவுருவம்.

**பிரம்மசாஸ்த்ரு ஸ்வாமி**

ஒரு திருமுகமும், நான்கு திருக்கரங்களும், இடக்கரங்களில் வரதமும் குண்டிகையும் வலக்கரங்களில் அபயமும் உருத்திராக்க மாலையும் உடையவராய் நான்முகக் கடவுளுக்கு உபதேசித்த திருவுருவம்.

**வள்ளி கல்யாணசுந்தர ஸ்வாமி**

உருத்திராக்க மாலையும், குண்டிகையும், வரதாபயமும் உடைய திருக்கரங்களுடன் வள்ளியம்மையாருடன் திருமால் நீரகலசத்து தாரை வார்க்க ஓமம் செய்யப்பட்டவராய் எல்லா அமரர்களும் சேவிக்க விளங்குந் திருவுருவம்.

**பால ஸ்வாமி**

குழந்தையுருவமாய் மேல் தூக்கிய இரு கரங்களும் அக்கரங்களில் தாமரை மலர் இரண்டு கொண்டு அம்மை அப்பருக்கு இடையில் அமைந்திருக்குந் திருவுருவம்.

**கிரௌஞ்சதேன ஸ்வாமி**

ஆறு திருமுகங்களும், எட்டுத் திருக்கரங்களும் அபயம், வாள், வேல், அம்பு, வரதம், குலிசம், வில், கடகம் என்ற ஆயுதங்களை முறையே வலமும் இடமுங்கொண்டு தேவ சேனைகள் சூழக் கிரௌஞ்சத்தைப் பிளந்த திருவுருவம்.

**சிகிவாஹன ஸ்வாமி**

பவள நிறமும், ஒரு திருமுகமும், நான்கு திருத்தோள்களும், வஜ்ரம், வேல், வரதம், அபயம் இவைகளுடன் மயில் வாகனத்தில் ஊர்ந்த வண்ணமாய் அமரர்களுடைய இடரை நீக்கிய திருவுருவம்.

**முடிவுரை**

முருகப்பெருமான் கொண்டுள்ள திருவுருவத்தின் பெயர்களைப் பற்றியும் அவரின் சிறப்புகளைப் பற்றியும் அறிய முடிகிறது. மேலும் இலக்கியத்தில் முருகன் இடம் பெற்றிருக்கும் விதம் பற்றியும் விளக்கப்பட்டுள்ளது.

# சுவிஸில் ஆறுபடை வீடுகள்

வே. கணேசகுமார்
ஆலயத்தலைவர்
அருள்மிகு ஸ்ரீகதிர்வேலாயுதசுவாமி ஆலயம்,
சுவிற்சர்லாந்து

அழகுமிகு சுவிற்சர்லாந்தில் உயர்ந்த மலைத்தொடர் ரைன் நதியின் ரம்மியமான ஓட்டம், புல்வெளிகள் பச்சைப் பசேலெனக் காட்சிகள் இவையனைத்தும் ஒருங்கே அமைந்த குறிஞ்சி நிலப்பரப்பில் முருகனுக்கு ஆறுபடை வீடுகள் போல் ஆறுமுகன் ஆலங்கள் சமச்சீரான இடைவெளியில் அலங்கரிக்கின்றன.

தமிழகத்தில் ஆறுபடை வீடுகள் என அழைக்கப்படும் பழனியில் தண்டாயுதபாணியாகவும், திருப்பெருங்குன்றத்தில் வள்ளி, தெய்வானை சமேதராக சுப்பிரமணியராகவும், திருச்செந்தூரில் செந்தில் ஆண்டவராகவும், சுவாமிமலையில் சுவாமிநாதராகவும், பழமுதிர்ச்சோலையில் வெற்றி வேலனாகவும், திருத்தணியில் பாலசுப்பிரமணியராகவும் பல்வேறு வடிவங்களில் வீற்றிருந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார் தமிழ்க் கடவுளான முருகன்.

அதேபோன்று சுவிற்சர்லாந்து நாட்டிலும் ஆறுபடைவீடுகள் என வர்ணிக்கப்படும் செங்காலன் சென்மார்க்கிறேத்தனில் கதிர்வேலாயுதராகவும், பேர்ணில் கல்யாண சுப்பிரமணியராகவும், சூரிச்சில் ஸ்ரீசிவசுப்பிரமணியராகவும், சவ்கௌசனில் சிறி முருகனாகவும், அறோவில் முருகனாகவும், லுகானாவில் சிறிசுப்பிரமணியாகவும் பல்வேறு வடிவங்களில் வீற்றிருந்து அருள்பாலித்துக் கொண்டிருக்கிறார் முருகப்பெருமான்.

தமிழகத்தில் ஆறுபடை வீடுகள் போன்று சுவிற்சர்லாந்திலும் ஆறுபடை வீடுகள் போன்று அமைந்துள்ள ஆறு முருகன் ஆலயங்களிலும் வேதாகம முறைப்படி பூசை வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. பெரும் எண்ணிக்கையான மக்கள் புலம்பெயர்ந்து வாழ்ந்தாலும் தமக்கு ஏற்படும் இன்னல்களுக்குத் தீர்வு வேண்டி இந்த ஆயலங்களில் பூசை வழிபாடுகள் செய்து வணங்குகிறார்கள்.

இந்த ஆலயங்களில் முருகனின் முக்கியமான நிகழ்வுகள் எல்லாம் சிறப்பாக நடைபெற்று வருகின்றன. மாதாமாதம் வரும் கார்த்திகை நட்சத்திரத்தில் விசேட பூசைகள், தைப்பூசம், கந்தசஷ்டி போன்ற நிகழ்வுகள் சிறப்பாக நடைபெற்று வருகின்றன.

தைப்பூசத் திருவிழாவும் கந்த சஷ்டித் திருவிழாவும் இந்த ஆலயங்களில் வெகு சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. பெரும் எண்ணிகையான முருக பக்தர்கள் வழிபாட்டில் ஈடுபடுகின்றனர்.

ஆலய வருடாந்தர உற்சவங்களும் சிறப்பாக நடைபெறுகின்றன. தேர்த்திருவிழாவன்று பெரும் எண்ணிக்கையிலான பக்தர்கள் காவடி எடுத்தும் பிரதட்சணம் செய்தும் அடி அழித்தும் கற்பூரச் சட்டிகளை ஏந்தியும் தமது நேர்த்திக் கடன்களை நிறைவேற்றி வருகின்றனர். ஆலயப் பணிகளுடன் இந்த ஆலயங்களின் நிர்வாகிகள் தாயகத்தில் இன்னல்படும் மக்களுக்கு வாழ்வாதார உதவிகளையும் வழங்கி வருகின்றனர். இங்குள்ள ஆறு முருகன் ஆலங்களும் சிறப்பாக இயக்குவதற்குப் பொதுமக்களும் தமது பங்களிப்பைத் தாராளமாக வழங்கி வருகின்றனர். இந்த ஆறு முருகன் ஆலயங்களில் செங்காலன் மாநிலத்தில் சென்மார்க்கிறெத்தனில் அமைந்துள்ள கதிர்வேலாயுதசுவாமி ஆலயத்தின் சிறப்பு தனித்துவமானது.

அந்த ஆலயம் வெள்ளை மயிலை தன்னகத்தே கொண்டிருப்பது சிறப்பு அம்சமாகப் பார்க்கப்படுகின்றது. இந்த ஆலயத்தில் இடம்பெற்ற கந்த சஷ்டி உற்சவத்தின்போது வெள்ளைமயில் ஒன்று ஆலயச் சூழலுக்குத் தானாக வந்தது. அந்த வெள்ளைமயில் முறையாக பராமரிக்கப்பட்டு வருகின்றது. ஆலயத்திற்கு வருபவர்கள் அந்த மயிலைப் பார்த்துப் புளகாங்கிதம் அடைகின்றனர். அதற்குப் புறம்பாக சுவிஸில் வாழும் முருக பக்தர்களுக்கு உத்வேகம் அளிக்கும் வகையில் இந்த ஆலய நிர்வாகிகள் அனைத்துலக முருகபக்தி மாநாட்டை ஆலயத்தில் நடத்தி முடித்துள்ளனர்.

மலேசியா திருவாக்குத் திருபீடத்தினர் இரு வருடத்திற்கு ஒரு முறை நடாத்தும் அனைத்துலக முருகபக்தி மாநாட்டுத் தொடரில் இரண்டாவது மாநாடு 2014இல் ஆலய ஏற்பாட்டில் ஆலயச் சூழலில் சிறப்புற மூன்று தினங்கள் இடம்பெற்று முடிந்துள்ளது. 75க்கு மேற்பட்ட ஆய்வாளர்கள் முருகனின் பெருமையை எடுத்து விளக்கும் ஆய்வுக் கட்டுரைகளைச் சமர்ப்பித்தனர். இலங்கை, இந்தியா, தென்னாப்பிரிகா, மலேசியா, மொரீசியஸ், ஆஸ்திரேலியா, கனடா, ஐரோப்பா எனப் பல்வேறு நாடுகளிலிருந்து 200க்கும் மேற்பட்ட கல்விமான்கள், ஆதீனங்கள், புத்தி ஜீவிகள் ஒன்று கூடி முருகனின் பெருமைகள், அற்புதங்கள் குறித்து ஆராய்ந்து முருகனின் வரலாற்றை மீள ஆராயக் களம் அமைத்துக் கொடுத்தது இந்த மாநாடு.

இதற்குப் புறம்பாக சமயப் பெரியார்கள், ஆன்மிகத் துறவிகள், கல்விமான்கள், இசை அறிஞர்கள் எல்லாம் ஆலயத்திற்கு வருகை தந்து நல்ல நல்ல கருத்துக்களையெல்லாம் முருக பக்தர்களுக்கு வழங்கி வருகின்றனர். சுவிஸிலுள்ள ஆறு முருகன் ஆலயங்களிலும் முருக வழிபாடு சிறப்பாக அமைந்துள்ளது. ஆறுபடை வீடுகளாக அமைந்த இந்த ஆலயங்களில் முருகன் புகழைப் பரப்பி தொடர்ந்து பணியாற்ற எல்லாம் வல்ல அந்த கதிர்வேலனைத் தாள்பணிந்து வேண்டுகிறோம்.

# தமிழக முருகன் தலங்கள்......
# (கழுகுமலை மற்றும் அழகர்கோவில்)

**எம்.எஸ். கணேசன்**
மாவட்ட விரிவாக்கக் கல்வியாளர் (ஓய்வு)
16 விவேகானந்தர் தெரு
எஸ்.எஸ். காலனி, மதுரை - 16.

**கழுகுமலையப்பா!**

முன் இணைந்த திருநெல்வேலி மாவட்டம் தற்சமயம் தூத்துக்குடி மாவட்டம் கோவில்பட்டி வட்டம் கழுகுமலை கழுகாசல மூர்த்தி கோவில் முருகன் தலங்களில் முக்கியமான ஒன்றாகும். அறுகரங்களும் ஒரு முகமுமாய் மயில்மீது காணக் கண் கோடி வேண்டும்.

கந்த புராணத்தில் குன்றுதோறாடலில் மேற்கு முகமாய் உள்ள தலங்கள் மூன்று என்றும் அவற்றில் இராஜயோகமாக முருகன் வீற்றிருக்கும் தலம் 'கழுகுமலை' எனக் குறிப்பிட்டுள்ளார். மேற்கு முகமாய் முருகன் அமையும் மலை 'சிவரூபம்' என்றும், கிழக்கு முகமாய் இருக்கும் மலை 'சக்தி ரூபம்' என்றும் கந்தபுராண ஆசிரியர் கச்சியப்பர் கூறியுள்ளார். குருமுனி பொதிகை செல்லும் பொழுது இத்தலத்தில் தங்கி பூஜை செய்ததாகப் புராணம் வாயிலாக அறிகிறோம். மேலும் அகத்திய முனிவருக்கு உபதேசம் தருவதற்காகப் பொதிகைமலை நோக்கி அமர்ந்துள்ளதாக செவிவழிச் செய்தி கூறுகிறது. இத்தலம் கழுகுமலை, தென்பழனி, கழுகாசலம் உவணகிரி, கஜமுகபர்வதம், சம்பாதிசேத்திரம் என வழங்கப்படும் இத்தலத்தைத் தென்பழனி என்று புராணங்களில் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

இவ்வூர் மலைக்கு ஓரமாக உள்ள தடாகத்தை ஆம்பல் நதி என கச்சியப்ப சிவாச்சாரியார் தம் புராணத்தில் குறிப்பிட்டுள்ளார். வற்றாத வள்ளிசுனை என்ற நீர் ஊற்று இங்கே உண்டு. இக்கோவிலில் உள்ளே அழகிய தெப்பம் உள்ளது. இதற்குக் குமார தெப்பம் என்று பெயர். நான்கு புறமும் நல்ல கற்களால் ஒருபுறம் மலைப்பாறைகருகில் மழைநீர் சேமிக்கும் தெப்பமாக உருவாக்கப்பட்டு எஞ்சிய நீர் ஆம்பல் ஊரணிக்குச் செல்லும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. இதன் தரையில் "அப்ரேக்" என்ற உலோகப்பொருள் காணப்படுகிறது. இத்தண்ணீர் கெட்டுப் போகாமல் சுவையாக உள்ளது.

பழங்கோட்டையைத் தலைநகரமாகக் கொண்டு அதிமதுரபாண்டியன் என்ற அரசன் வெகு காலத்துக்கு முன் ஆண்டு வந்தான். அருகில் உவண வனம் என்று ஒரு காடு இருந்து வந்தது. அதில் ஒரு மலை 300 அடி உயரத்தில் கம்பீரமாக இருந்தது. ஒரு நாள் மன்னன் களைப்புற்று உவண வனத்தில் ஒரு வேங்கை மர நிழலில் ஓய்வு எடுத்து உறங்கினார். அங்குப் பசு தானாக பால் கறப்பதைக் கண்டான். பசு பால் கறந்தபோது பூஜை

நடக்கும் போது மணி ஓசை ஏற்படும் சத்தம் கேட்டது. சற்று நேரத்தில் மணி ஓசை நின்று போனது. மன்னன் சென்று பார்த்தபோது பாறையின் உள்ளே அழகிய முருகன் மயில் வாகனத்தில் அமர்ந்த சிலையைக் கண்டான். நெஞ்சார வாழ்த்தி வணங்கினான். காடு திருத்தி நாடாக்கிக் கோவில் அமைத்தான்.

இக்கோவிலில் ஆண்டுதோறும் நடைபெறும் திருவிழாக்களில் பங்குனி உத்திரம் - தைப்பூசம், வைகாசி விசாகம், மாசி மகம், கார்த்திகை தீபம் சிறப்புப் பெற்றது. குன்றுதோறாடிய முருகன் தலங்களில் முக்கியமானது அழகர்கோயில், (பழமுதிர்சோலை) மற்றும் கழுகுமலை போன்ற தலங்களாகும்.

*“ஏழமுதிரைப் புனத்து இறைவி முன்புதன்*
*கிழமுதிர் இளநலங் கிடைப்ப முன்னவன்*
*மழமுதிர் களிறென வழூதல் வேண்டிய*
*பழமுதிர் சோலையும் பகவற் போற்றுவோம்”* (கந்தபுராணம்)

முருகப்பெருமானின் ஆறாவது படைவீடாகப் புகழப்படுவது “பழமுதிர்ச்சோலை” எனப்படும் சோலைமலை அழகர்கோவில் என்பதாகும். பழமுதிர்ச்சோலை தலத்திற்கு 24 பெயர்கள் உள்ளது எனப் பழமுதிர்ச்சோலை பிள்ளைத்தமிழ் நூலில் கூறப்பட்டுள்ளது. இதற்கு இடபகிரி, பழமுதிர்ச்சோலை, திருமாலிருஞ்சோலை, சோலைமலை, அழகர்கோவில் எனப் பல பெயர்கள் உண்டு.

வடமொழி ஸ்கந்த புராணத்தில் இம்மலை பழமுதிர்ச்சோலை என்ற பெயரால் அழைக்கப்படுகின்றது. தமிழில் எழுதப்பட்ட கந்தபுராணமும், “முத்திதரு பேரழகர் திருமலை” என்று இதனைச் சிறப்பிக்கிறது. திருப்புகழ் பாடிய அருணகிரிநாதர் தம் திருப்புகழில் பல இடங்களில் பழமுதிர்ச்சோலை என்னும் பெயரால் அழைக்கிறார். இதை அவர் முருகப்பெருமான் கோயில் கொண்ட இடமாகவே வருணிக்கிறார்.

இடம் அமைப்பு

மதுரை மாவட்டம் மேலூரிலிருந்து மேற்கே 14 கி.மீ. தூரத்தில் அழகர்கோவில் உள்ளது. இன்றைய மதுரைக்கு வடக்கே 21 கி.மீ. தூரத்தில் அமைந்துள்ளது. தற்சமயம் இங்கே “கள்ளழகர்” என்ற சுந்தரராஜப்பெருமாள் கோவில் கொண்டுள்ள பிரதான கோவில் கீழே உள்ளது. அங்கிருந்து மலைமேல் 5 கி.மீட்டர் தூரத்தில் சோலைமலை முருகன் கோவில் உள்ளது. முருகன் கோவிலுக்குக் கும்பாபிஷேகம் மற்றும் சுற்று மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன. அதிலிருந்து 1 கி.மீட்டர் தூரத்தில் நூபுர கங்கை என்று அழைக்கப்படும் அருவி உள்ளது. தீர்த்தம் குளிப்பதற்குக் கோவில் நிர்வாகம் ஏற்பாடு செய்து உள்ளது. பழமுதிர்ச்சோலை முருகப்பெருமான் தெற்கே அடிவாரத்திலிருந்து இடம் பெயர்ந்து மலைமேல் அமர்ந்தருளி தற்போது அருள்பாலித்து வருகிறார்.

பழமுதிர்ச்சோலை மலைச்சிறப்பு

இது கிழமேலாய் 10 மைல் நீளம், 1000 அடி உயரமும் 40 மைல் பரப்பளவும் கொண்டது. இங்குப் பலவித தாதுக்களும், மூலிகைகளும் உள்ளன. சூரியனுடைய ஒளி இம்மலை மீது பட்டு பிரதிபலிக்கும் போது ஜோதியாய் விளங்குகிறது. பலவகை பெரிய மரங்களும், செடிகளும், கொடிகளும், மூலிகைகளும் மிக நெருக்கமாக வளர்ந்து பச்சை ஆடை உடுத்தியது போன்று கண்ணுக்குக் குளிர்ச்சியாக உள்ளது.

பழங்கள் உதிரும் சோலைகள் பல அமைந்துள்ளதால் பழமுதிர்ச்சோலை, வனகிரி எனப்பட்டது. அன்றைய மதுரை மாவட்டத்தில் முருகனின் மூன்று படைத்தலங்கள் அமைந்தன. 1) திருப்பரங்குன்றம் 2) திருஆவின்குடி (பழநி) 3) பழமுதிர்ச்சோலை. இவற்றுள் முருகப்பெருமான் வள்ளியம்மையைத் திருமணம் புரிந்த தலம் பழமுதிர்ச்சோலையாகும். முருகன் தெய்வானையைத் திருமணம் புரிந்தது திருப்பரங்குன்றம். மதுரைக்கு மையமாக சோமசுந்தரக்கடவுள் மீனாட்சி திருமணக்கோலத்துடனும், மதுரைக்கு வலப்பக்கம் திருப்பரங்குன்றம் முருகன் திருமணக்கோலத்துடனும், மதுரைக்கு இடப்பக்கமாக பழமுதிர்ச்சோலையில் திருமணக்கோலத்துடனும் அமைந்துள்ளது எங்குமில்லா சிறப்பு. திருமணம் ஆக தாமதமாகும் ஆண் வரன்களும், பெண் வரன்களும் இம்மூன்று கோவில்களையும் ஒரேநாளில் வழிப்பட்டால் திருமணத்தடை நீங்கி திருமணம் கை கூடும் என்பது கண்கூடு எனத் தலபுராணம் கூறுகிறது. இம்மலை உண்டான வரலாறு இடபகிரிச் சுருக்கத்தில் விரிவாக கூறப்பட்டுள்ளது. தற்காலத்தில் "அழகர்கோவில்" என்றே வழங்கப்படுகிறது. இத்தலத்தில் ஒரு கணம் அல்லது அரைக்கணம் வசித்தாலும் தீவினையை வேரறுத்து சிவரூபம் பெறுவார்கள் எனப் புராணம் கூறுகிறது. இம்மலையில் அகத்தியர் முதலிய எண்ணில்லாத முனிவர்கள் எழுந்தருளித் தவம் புரிகின்றனர்.

மாதந்தோறும் சோம வாரத்தில் இவ்விடம் வந்து சிவபெருமானுக்கும் முருகக் கடவுளுக்கும் அபிசேகம் செய்து துதித்து விரதம் இருப்பவர்கள் மற்ற தலங்களில் கோடி விரதங்கள் செய்த பலனைப் பெறுவர். இங்குச் சித்ரா பவுர்ணமியன்று முருகப்பெருமானை வழிபட்டோர் சத்புத்திரர்களை அடைவர். ஒவ்வொரு விசாக நாளும் இங்குச் சிறப்புடையது முருகப் பெருமானுக்குப் புஸ்ப மாலை தொடுத்து சாத்துவோர் குறைவற்ற செல்வம் பெறுவர். ஐப்பசி மாதம் சுக்ல பட்சத்து துவாதசி திதியிலே சிலம்பாற்றில் மூழ்கியவர் அரச பதவி அடைவர். கார்த்திகை மாதம் கார்த்திகையன்று இவ்விடப-கிரியை வலம் வந்து வள்ளிமலை மீது தீப தரிசனம் காண்போர் தொல்வினைகள் நீங்கி உய்வார்கள். மலை வலம் வருதலும் உண்டு பாதையும் உள்ளது. இத்தலத்தில் தைப்பூசம் மிக்க சிறப்புடையது.

மாசி மாதம் இடபகிரி நாதர் தரிசனம் செய்வோர் பூவுலகில் செல்வந்துய்த்துப் பின் கயிலையை அடைவர். பங்குனி மாதம் உத்திரவிழா கண்டவர் கீர்த்தியும் பெற்று இம்மையிலும் சுகமும் பெறுவார்.

இடபகிரி பெயர்க்காரணம்

சமணர்கள் ஏவிய மாயப்பசுவைச் சிவபெருமானின் இடமானது, தன் பேரழகில் மயங்கிய பசுவைக் கூடியது. கூடிய பசு இறந்துவிட்டது. இதுவே மதுரைக்கு மேற்கே பசுமலை என ஆகியது. ரிசபமானது மதுரைக்கு வடகிழக்கே தன் உருவத்தைக் கிடத்தியது. அதுவே (ரிசபகிரி) இடபகிரி என வழங்கலாயிற்று. மலையடிவாரத்தில் இருந்து 4 கி.மீ. தொலைவில் மலைமேலே சிலம்பாறு எனப்படும் நூபுர கங்கை தேனாக பாய்கிறது. கடல் மட்டத்திலிருந்து 1405 அடி உயரத்தில் உள்ள இவ்வாறு நீர் சுவைமிக்கது. இராக்காயி அம்மன் கோயில் மாதவி மண்டபத்தில் உள்ளது. இதன்மேல் நூபுர கங்கை உள்ளது. நாகர்கள் கோவிலும் உள்ளது. பிரதான கோபுரத்தின் 18ம் படி கருப்பசாமி கோவில் என வழங்கப்படுகிறது. அழகர்கோவில் வரும் பக்தர்கள் வணங்கி திருநீறு இட்டு கொண்டே அழகர்கோவிலுள் நுழைவார்கள். முருகன் அடியார் முயற்சியால் 23.8.1960 ஆவணி மாதம் 8ம் தேதி புதன்கிழமை அதிகாலை விநாயகர் வள்ளி தேவசேனை சமேத முருகன் பிரதிறடை செய்யப்பட்டு கும்பாபிசேகம் நடந்தது. தற்சமயம் 2014ம் ஆண்டு கும்பாபிசேகம் நடைபெற்றது.

அவ்வையாரிடம் சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? எனக் கேட்ட நாவல் மரம் இன்றும் உள்ளது. எங்குமில்லாத வகையில் ஐப்பசி சஷ்டியின் போது பழம் பழுப்பது இத்தலச் சிறப்பு. தினமும் ஆறுகால பூஜை நடைபெறுகிறது. அதில் பள்ளியறை பூஜையில் இக்கோவிலில் தினசரி பள்ளியறை பூஜைக்குச் சுவாமியைப் பள்ளியறையில் எழுந்தருளச் செய்து பூஜை செய்து முடியும் போது அன்றைய தினம் மொத்த வரவு வாசிக்கப்பட்டு மொத்த வரவு செலவுக் கணக்கு ஆண்டவனிடம் ஒப்படைக்கப்பட்டு உலக சேமத்திற்காக வேண்டுதல் செய்யப்படுகிறது சிறப்பு. மாத விசேபம்: கார்த்திகை, வளர்பிறை சஷ்டி.

வருட விசேபம்: 1) வைகாசி விசாகம் 2) ஆவணி பூரம் வருடாபிசேகம் 3) ஐப்பசி கந்தர் சஷ்டி 7 நாள் விசேப் பூஜை 6-நாள் சூரசம்ஹாரம், திருக்கல்யாணம் 4) கார்த்திகை சோமவாரம், பெரிய கார்த்திகை லட்சதீபம். மார்கழி: தனுர் மாதப் பூசை, தை : தைப்பூசம் சிறப்பு வழிபாடு, பிரம்ம உற்சவம். மாசி : மகா சிவராத்திரி, பங்குனி : உத்திரம் பதினெட்டாம் படியிலிருந்து 108 பால்குடம் எடுக்கப்படும். இக்கோவிலில் பிரம்மாண்ட தங்கத்தேர் உள்ளது. இத்தலத்தின் காவற்காரர் நவவீரவாகு தேவராக சொல்கின்றனர். வீரவாகு தேவர் முருகவேளது படைத்தலைவராக அவர் ஆலயத்தைக் காப்பவர். இந்தக் கோவில் முகத்து வாரத்தில் காவற்கார கருப்பண்ணசாமி கோவில் உள்ளது. கீழே இருந்து 5 கி.மீ. தூரத்துக்குச் செல்ல நடைபாதை உள்ளது. தேவஸ்தான வேன் உள்ளது.

'முருகு' என்றால் அழகு! முருகன் என்றால் அழகன்! அவனது இருப்பிடமே அழகர்கோவில் எனப்பட்டது. 'முருகு' என்ற சொல்லில் மூன்று 'உ' காரங்கள் அடங்கியுள்ளன. 'உ' காரம் என்பது காக்கும் சக்தியாகும்.

அழகர்கோவில் என்பது முழுமையாக, பூரணமாக, பரிபூரணமாக காப்பாற்றக் கூடிய சக்தி படைத்த மலையாகும்.

நிலம் பற்றி ஆராய்ச்சி செய்து நிலத்தில் மிகப்பழமை வாய்ந்தவை. பின்னால் தோன்றியவை எனப் பிரிக்கின்றனர். அவ்வாறு ஆராய்ந்த நிலையில் வேங்கடத்திற்கும் தெற்கே அமைந்த தமிழ் நிலம் பல நாடுகளைக் காட்டிலும் தொன்மை வாய்ந்தது என வரையறை செய்துள்ளனர். (உ.ம். கீழடி) அப்படிப்பட்ட தமிழ் நிலத்தில் தொன்மை மிக்கது அழகர்மலையாகும். மகாபாரதக் காலத்திலும் இராமாயணக் காலத்திலும் அழகர்மலை சிறப்பாக பேசப்பட்டுள்ளது. பரிபாடல் ‘இருங்குன்றம்’ என்று அழகர்மலையைக் கூறுகிறது.

அழகர்மலையில் உள்ள தெய்வமும், அருவியும் ராக்காயி அம்மன், ராக்காயி அருவி என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. ராக்காயி கருப்பசாமியின் பரிவார தேவதைகளில் ஒன்றாகும். எனவே கருப்பசாமியே முழு முதல் தெய்வமாகக் கருதப்படுவது சிறப்பாகும். மேலும் போகர், ஜைன மதத் தீர்த்தங்காரர்கள் அழகர்மலையில் தங்கி தவமிருந்து உள்ளனர். சமண மதத் துறவி சிற்பமும் தவம் செய்த குகையும் உள்ளன. தீர்த்தங்காரர்கள் இங்கே தங்கித் தவமிருந்து உள்ளனர்.

அழகர்மலை மேல் உள்ள ராக்காயி தீர்த்தம் நூபுர கங்கை என்றும் சிலம்பாறு என்றும் அழைக்கப்படுகிறது. பௌத்த பிட்சுக்கள் இம்மலையைப் பற்றிச் சொல்லும் பொழுது தேவ மனித உயர்வு தாழ்வு நான் என்ற எண்ணம், பகை என்ற உணர்வு எல்லாம் மடிக்கப்பட்டு புதியதோர் அற்புத ஆனந்த உலகம் ஆத்மாவில் பதிவு செய்யப்படுகிறது என்பதைக் குறிப்பிடுகிறார்கள். மேலும் அழகர்மலை நூபுர கங்கை நீர் தவிர உற்சவமூர்த்தி மீது வேறு நீர் பட்டால் உற்சவம் கருமை நிறம் அடையும் என்று ஸ்தல வரலாறு கூறுகிறது.

**பதினெட்டாம்படி கருப்பசாமி:**

அழகர்மலையில் தற்போது “பதினெட்டாம்படியான்” என்றழைக்கப்படும் கருப்பசாமி உள்ளதாகக் கூறப்படும் பதினெட்டு பரிகாரம் மூடி வைத்த கதவும் தகவுக்குள்ளே உள்ள பீடமும் பல்வேறு யூகங்களை ஏற்படுத்துகின்றன. கோபுரத்தின் கீழே நுழைவு வாயிலே அழகர்மலையின் கருப்பன் பீடம் என்ற பெயரில் அழைக்கப்பட்டுள்ளதாக கருத வேண்டி உள்ளது. 1736ல் ஆற்காடு நவாப்பாலும், 1757ல் ஹைதர் அலியாலும், 1780ல் மீண்டும் ஹைதர் அலியாலும் அழகர்கோவில் சூறையாடப்பட்டது வரலாறு ஆகும். திருப்பதியில் முஸ்லீம் படையெடுத்த காலம் கோவிலில் பன்றிமுக (வராகி) தெய்வ ஸ்தாபினம் செய்து திருப்பதி கோவில் காப்பாற்றப்பட்டது. பன்றி கோவில் என்றவுடன் முஸ்லீம் மன்னன் வெறுப்படைந்து மலைக்கு வரவில்லை. அதேபோல் அழகர் மலையில் வாசலை சமாதிகள் புதைக்கப்பட்ட இடம் என்று கூறி பல்வேறு விக்ரகங்களைப் புதைத்துக் காப்பாற்றி உள்ளார்கள் என்றே எண்ண வேண்டி உள்ளது. முஸ்லீம் மன்னர்கள் சமாதியை மட்டும் இடிக்க மாட்டார்கள். அந்த பதினெட்டாம்படி கருப்பசாமியே இதற்கு விடையளிக்கும் காலத்தைத் தரவேண்டும்.

## திருமுருகாற்றுப்படை - இருப்பும் இயக்கமும்

ப. கணேஸ்வரி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அய்யநாடார் ஜானகியம்மாள் கல்லூரி (த),
சிவகாசி.

தமிழ் எவ்வளவு பழமையானதோ அதனொப்பப் பழமையுடைத்து சமஸ்கிருதம் என்பதற்கு நிறைய சான்றுகள் உள. இந்திய மொழிகளிலே தொன்மைமொழிக் குடும்பமாக ஆரியமும் தமிழும் கருதப்பட்டன. தமிழின் வரலாற்றுத் தொடக்கமான தொல்காப்பியம் மற்றும் சங்ககாலத்திற்கு முன்னமே யவன, கிரேக்கருடனான தொடர்பு தமிழகத்துடனாய் இருந்தது. சமணம், பௌத்தம், சாங்கியம், வைதீக சமயங்களென அனைத்தும் தத்துவரீதியில் தனதிருப்பிற்காய் முரண்பட்ட போக்கிலே இயங்கிக் கொண்டிருந்தன. புதுப்புது சமூகத் தாக்கங்களை ஏற்படுத்திக்கொண்டுமிருந்தன. இந்தப் பின்புலத்தில் திருமுருகாற்றுப்படையில் உள்ள முருகன் மீதான ஆரிய கருத்தாக்கப் பகிர்வை இக்கட்டுரை முன்வைக்கிறது.

### ஆற்றுப்படை நூல்களுள் திருமுருகாற்றுப்படை

சங்க நூற்களுள் காலத்தால் பிற்பட்டது திருமுருகாற்றுப்படை எனக் கருதப்படுகிறது. கடைச்சங்ககாலப் புலவரான நக்கீரரால் எழுதப்பெற்றது.

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றி*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்று பயனெதிரச் சொன்ன பக்கமும்* (தொல்.பொருள்.88)

என்றிருந்த தொல்காப்பியர்கால நிலை மாறிக் கடைச்சங்க காலத்திலே கூத்தர், பாணர், பொருநர், விறலியரென மக்களுள் கலைஞர்கள் மன்னர்பால் ஆற்றுப்படுத்திய இலக்கியங்கள் செம்பாதி இருந்த நிலையில் மக்களை இறைவன்பால் ஆற்றுப்படுத்துவதன் தேவையும் அதற்கான இலக்கியப் படைப்புருவாக்கத் தேவையும் சிந்தித்தற்குரியது. முருகாற்றுப்படையில் வீடுபேறு கருதிய சான்றோர் ஒருவரை முருகன் திருவருளால் வீடுபேற்றிற்குரிய திருவடி ஞானம் கைவரப்பெற்ற சீவன் முத்தரொருவர், முருகன்பால் ஆற்றுப்படுத்துகின்றார். வீடுபேற்றுக்கமைந்த திருவருள் ஞானத்தை நல்குதலில் தலைசிறந்து நிற்கும் குரவன் முருகப்பெருமான் ஆதலால் ஆற்றுப்படைக்கு இடனாகின்ற வகையில் முருகப்பெருமான் திருப்பெயரால் இந்த ஆற்றுப்படை திருமுருகாற்றுப்படை என வழங்குகின்றது (பத்துப்பாட்டுச் சொற்பொழிவுகள் ப.33) என்று ஔவை துரைசாமிப்பிள்ளை விளக்குகிறார்.

இனக்குழு சமூகம், குறுநில மன்னர்கள், பேரரசு உருவாக்கம் நிலவுடைமைத் தோற்றம் என ஒரு சமூகம் வேறொரு சமூகச்சூழலைத்

தோற்றுவித்துக் கொண்டிருந்த சூழலில் மன்னன் இறைநிலையிலிருந்த நிலைமாறி கடவுளை முதன்மைப்படுத்தும் நிலை உருவானது. கிரேக்க, யவனரின் வரவால் அப்பாலைத் தத்துவம் தமிழகத்திற்குள் காலூன்ற ஆரம்பித்தது. "சங்க காலத்தில் கி.மு3ஆம் நூற்றாண்டளவில் வேதநெறியின்பாற்பட்ட வேள்வி, யூபத்தூண் ஆகியன தமிழகத்திற்கு வந்து நிலைத்தன என டாக்டர் கி.முப்பால்மணியன் கூற்றும் நோக்கப்பாலது. 'பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி' என்னும் புறநானூற்று அடியும் இதற்குச் சான்றாகிறது. உலகாயதச் சிந்தனைகள் பெரிதும் பேசப்பட்ட சங்க காலத்திலே இயற்கைக்கும், உழைப்பிற்கும் முக்கியத்துவம் தரப்பட்டது. நிலவுடைமை உருவான சூழலில் உழவும் வணிகமும் கொண்ட பெருமக்களாலும், சான்றோராலும் தாங்கப்பெற்ற அரசுத்தலைவன் மேலானவனாகக் கருதப்பட்டான்.

*"செஞ்ஞாயிற்றுச் செலவும், அஞ்ஞாயிற்றுப்*
*பரிப்பும், பரிப்புச் சூழ்ந்தமண் டிலமும்.*
*வளிதிரிதரு திசையும்...........*
*.......................................*
*அறிஅறிவு ஆகாச் செறிவினை அகி, வெளிப்பட*
*யாங்கனம் பாடுவர், புலவர்?"* (புறம்.30)

என்னும் வரிகளில் மன்னன் மேலானவனாக உணரப்பட்ட நிலை அறியப்படுகிறது. "இயற்கைப் பொருளைவிட ஆளும் தகுதியில் உள்ளோருடைய அகவயப் பண்புகள் மேலானவையாக, அதீதமானவையாகத் திகழ்வது தத்துவ வரலாற்றில் குறிப்பிடத்தகுந்தது. பொருட்களை விட உணர்வுகள் முதன்மைநிலை வகித்து, தலைமைபூணும் அப்பாலைவாதம் ஆட்சிபெறுவது இது ஆகும்." (த.த.சி.மரபுகள் ப.333)

இயற்கை, அறிவு, ஆன்மா, கடவுள் என்ற நிலை படிப்படியாக உருவாயின. உணவு சேகரிப்பு, உற்பத்தி வாழ்வு அரசுக்கு இருப்பதனால் அதையும் தாண்டிய அனைத்திறைக் கொள்கை நிலைபெற்று சமயங்கள் அப்பாலைத் தத்துவத்தின் வழி முன்னேற்றம் கண்டன. அப்பாலைத் தத்துவமானது மறைபொருள் பற்றிப் பேசுவது, கடவுள் தான் எல்லாம் என்று இறுதியாக வந்தடையும் தத்துவமுறை ஆகும். இந்த அப்பாலைத் தத்துவம் அரிஸ்டாட்டில் காலத்திலும், அதற்கு இணையாக அதே காலங்களில் இந்தியாவிலும் பெரும்செல்வாக்குடன் தத்துவத்துறையில் செயல்பட்டது என்பதும் குறிப்பிடத்தகுந்தது. இந்தப் பின்புலம் கொண்டு திருமுருகாற்றுப்படையை நோக்குகையில் பண்பாட்டு மற்றும் இறைமாற்றம் நிகழ்ந்திருப்பதை உணரலாம். குறிஞ்சி நில இனக்குழுத் தெய்வமான வேலன், ஆறுமுகனாக மாற்றப்பெற்றதும், பரம்பொருள், வேள்வி குறித்தான விடையங்கள் பதிவுசெய்யப் பெற்றிருப்பதும், அப்பாலை தத்துவம் கால்கொள்வதும் தமிழகப் பண்பாட்டுச் சூழலில் ஆரியப் பண்பாடு கலந்தமைக்கும் திருமுருகாற்றுப்படை தக்க சான்றாகின்றது.

**சான்றுகளும் விளக்கங்களும்**

திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்திலே,

*"உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு*
*.........................................*
*மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன்.."* (திருமுருகு.1-6)

ஞாயிற்றின் தலைமையனாகவும், இந்திரனின் மகளான தெய்வானையின் கணவனாகவும் முருகன் காட்டப்பெறுகின்றான். கடைச்சங்க காலப் புலவர்களுள் ஒருவரான நக்கீரர் தமிழ்நாட்டு அந்தணர். இவர் வேளாளப்பார்ப்பனர் என்றும் அகநானூற்றுக் குறிப்பால் அறியமுடிகின்றது. ஆகவே நூலின் தொடக்கத்திலே தம் குலக்குறியான சூரியனையும் ஆரிய கடவுளாகிய இந்திரனின் மகளாகிய தெய்வானையையும் முதன்மைப்படுத்துகிறார். குறமகளாகிய வள்ளியைத் திருமுகங்களின் ஆறாவது முகத்தோடு தொடர்புபடுத்துகிறார்.

**திருமுகங்களின் செயலும், தத்துவ செருகல்களும்**

ஆறுமுகங்களில் ஒருமுகம்,

*"மாஇருள் ஞாலம் மறுஇன்றி விளங்கப்*
*பல்கதிர் விரிந்தன்று, ஒருமுகம்..."* (திருமுருகு.91-92)

எனப் புறவிருளில் அழுந்திக் கிடக்கும் உலகம் குற்றமின்றி விளங்குமாறு பலவாறு ஒளிக்கதிர்களைப் பரப்பி ஞாயிறாக விளங்கும். புறவிருளைப் போக்கி ஒளிபரப்பும் தன்மையது சூரியன் என்பது உலகாயதச் சிந்தனை. இதனை, கடவுட்கோட்பாட்டோடு கூறி இயற்கைக்கும் மேலான அப்பாலைத் தத்துவத்தை நக்கீரர் புகுத்தியுள்ளார். மற்றொரு முகம்,

*"ஆர்வலர் ஏத்த, அமர்ந்துஇனிது ஒழுகிக்*
*காதலின் உவந்து வரம்கொடுத் தன்றே"* (திருமுருகு.93-94)

எனக் காத்தலையும் அளித்தலையும் முதன்மைப்படுத்துகிறது. "உலகினைப் படைத்தலும் ஆர்வலக்கியைந் திணிதொழுகலும் அவர்க்கியல்பாயுள்ள அருளே, பிறிதில்லை என்பார். காதலின் உவந்து என்றார். அடியார் தமக்கு வேண்டுவன இவை என அறிந்து கேளாதவிடத்தும் அவர்க்கு வேண்டுவன இவையெனத்தானே அறிந்து ஈந்தருள்வன்" எனச் சோமசுந்தரனார் விளக்கமளிக்கிறார். (ப.பாட்டு.ப.36) மற்றொரு முகம்,

*"மந்திர விதியின் மரபுளி வழாஅ,*
*அந்தணர் வேள்விஓர்க் கும்மே"* (திருமுருகு.95-96)

வேதத்தையும் வேதத்தை ஓதும் அந்தணர்களையும் முதன்மைப்படுத்துகிறது. மந்திரவிதியின் என்பதற்கு, "மந்திரத்தையுடைய வேதம் என்றும், அந்தத்தை அணவுவார் அந்தணர் என்றது வேதாந்தத்தையே நோக்குவார்" என்னும்

உரை மேலும் சான்றாகிறது. (நச்சினார்க்கினியர் உரை திருமுருகு. ப.37) மற்றொரு முகம்,

*"எஞ்சிய பொருட்களை ஏமுற நாடித்*
*திங்கள்போலத் திசைவிளக் கும்மே"* (திருமுருகு.97-98)

என இருள்போக்கி ஒளியளிக்கும் நிலவிற்கு உவமையாகிறது. "ஒருமுகம் நூற்களால் காட்ட முடியாது எஞ்சிய பொருள்களைத் தன் அன்பர்கள் காவலுறும்படி ஆராய்ந்துணர்த்தி திங்கள் போலத் திசைவிளக்கும்" (ப.பாட்டு. ப.38) எனச் சோமசுந்தரனார் விளக்கமளிக்கிறார். "ஒருமுகம் ஈண்டு வழங்கிய வேதங்களிலும் நூல்களிலுமுள்ள பொருட்களை ஆராய்ந்து இருடிகள் ஏமுறும்படி திங்கள் போலத் திசைகளெல்லாம் விளக்குவிக்கும்" (நச்சினார்க்கினியர் உரை) மற்றொரு முகம்,

*செறுநர்த் தேய்த்துச் செல்சமம் முருக்கிக்*
*கவறுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே" (திருமுருகு.99-100)*

களவேள்வி செய்தது போர்க்களத்திலே பகைமேலிட்ட அசுரர் முதலியோரை அழித்து களவேள்வி மேற்கொண்டது.

*குறவர் மடமகள், கொடிபோல் நுசுப்பின்*
*மடவரல் வள்ளியொடு நகைஅமர்ந் தன்றே*
*ஆங்கு,அம் மூ-இரு முகனும், முறைநவின்று ஒழுகலின்"*
*(திருமுருகு.101-103)*

குறவருடைய சிறுமியாகிய வள்ளியோடே மகிழ்தலைப் பொருந்திற்று. சைவ சித்தாந்தத்திலே முருகக் கடவுளின் இச்சா சக்தியாக – வள்ளி குறிப்பிடப்படுகிறாள்.

**முடிவுரை**

மன்னர்களையும் மக்களுள் சிறந்த கலைஞர்களையும் மையமாகக் கொண்ட ஆற்றுப்படை நூல்கள் மன்னர்களின் தனித்தன்மையையும் அதீத தேவையையும் உணர்த்தி நின்ற காலச்சூழலுக்குப் பிற்பாடு மக்களை கடவுள்பால் (முருகன்) ஆற்றுப்படுத்தும் இலக்கியத் தோற்றம் மேலும், வரலாற்று கண்கொண்டு நோக்கப்பட வேண்டும். சங்க காலக் குறிஞ்சி நிலத் தெய்வமான வேலன் திருமுருகாற்றுப்படையில் ஆரியக் கட்டமைப்பிற்குள் ஆட்படுத்தப்படுகிறான். இயற்கை நெறியில் இனக்குழு வாழ்க்கை வாழ்ந்த தமிழர்களிடையே வேள்வி மற்றும் வீடுபேறு குறித்த கருத்தியல் சிந்தனைகள் ஏற்பட்டது புரட்டிப்போடும் வரலாற்று உண்மை. சூரியன், சந்திரன் போன்ற இயற்கை தன்மை மீது இறைத்தன்மையை ஏற்றிக்கூறி கருத்துவாதம் கால்கொண்டதை இக்கட்டுரை உணர்த்துகிறது.

## திருப்பரங்குன்ற முருகனைத் தமிழ்க்கடவுளாகப் பதிவு செய்யும் பரிபாடல் செய்யுட்கள்-ஆய்வியல் நோக்கு

முனைவர் தி. கமலி
பேராசிரியர்-தமிழியல்துறைத் தலைவர்
ஆய்வுப் புல முதன்மையர்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
அத்துவம்பட்டி வளாகம்
கொடைக்கானல்-624101

திருப்பரங்குன்றம், பழமுதிர்ச்சோலை ஆகியன அறுபடை வீடுகளுள் இன்றளவும் மதுரையில் முருகனுக்குரிய வழிபடுதலங்களாகச் சிறப்புடன் திகழ்கின்றன. திருமுருகாற்றுப்படை பரிபாடல் செய்யுள்கள் முருகனைப் போற்றுவன. நக்கீரர் மதுரையைச் சேர்ந்தவர். எட்டு பரிபாடல் செய்யுள்கள் முருகனைப் போற்றுவன. அவை நல்லந்துவனார், கடுவன் இளவெயினனார், குன்றம் பூதனார், கேசவனார், நப்பண்ணனார், நல்லச்சுதனார், நல்லழுசியார் ஆகிய புலவர்களால் பாடப்பட்டுள்ளன. இவர்களில் கடுவன் இளவெயினனார் வேட்டுவ மரபினர். குன்றம்பூதனார் திருப்பரங்குன்றத்தைப் பற்றியும் வள்ளி, தெய்வயானையை மணந்ததையும், அவர்களுக்கிடையிலான பூசலைப் பற்றியும் குறிப்பிடுகிறார். இவர்கள் மலைப்பகுதி சார்பினர் என்றறிய முடிகிறது.

*நாவல் அம் தண்பொழில் வடபொழில் ஆயிடைக்*
*குருகொடு பெயர் பெற்ற மால்வரை உடைத்து*
*மலை ஆற்றுப்படுத்த மூ இரு கயந்தலை* (பரி.5-8-10)

என்று தமிழகத்தின் வடபகுதியில் உள்ள கிரவுஞ்ச மலையைக் குடைந்து முருகக்கடவுள் போக்குவரத்துக்கு வழி செய்த செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. இச்செய்தி தமிழ்க்கடவுள் முருகன் வடபுல ஸ்கந்தனுடன் சேர்த்து அனைவருக்கும் உரிய முருகக்கடவுளாக ஆகிவிட்ட நிலையை உணர்த்துவதாகக் கொள்ள இடமுண்டு.

முருகன் திருப்பரங்குன்றம், குன்றுதோறாடல், திருஆவினன்குடி, திருவேரகம், திருச்சீர்அலைவாய், பழமுதிர்ச்சோலை, வேட்டுவர் ஆடும் வெறியாடுகளங்கள், குறத்தியர் குரவைக்கூத்து நிகழ்த்தும் இடங்கள், எண்ணியார் எண்ணியதை எய்தும்படி நிகழ்த்தும் விழாக்கள், வழிபாடுகள் ஆகியவற்றில் கலந்து கொண்டு வரமளிக்கும் இயல்பினன். மயிலேறி விரும்பிய இடங்களுக்குச் செல்வது அவன் இயல்பு. என்று வழிபடுமாறு முருகனிடம் ஆற்றுப்படுத்தும் ஆற்றுப்படை நூலாகத் திருமுருகாற்றுப்படை கடவுள் வாழ்த்துப்பாடல் போல் பத்துப்பாட்டில் முதலாவதாகவும், பக்தி இலக்கியப் பனுவல் என்று பன்னிரு திருமுறையிலும் சேர்க்கப்பட்டு இரட்டைச் சிறப்பைக் கொண்டுள்ளது. முருகனைத் தேவமளிர், தேவர்கள், திருமால், சிவன்,

இந்திரன், ஏனைய தெய்வங்கள், குறிஞ்சி நில மக்கள், வேடர், வேட்டுவர், எயினர் எயிற்றியர் என்று அனைத்து மக்களும் வழிபடுவது சொல்லப்பட்டுள்ளது. முருகன் தமிழ்மக்களின் வழிபடுகடவுளாக

*அளியன் தானே முதுவாய் இரவலன்*
*வந்தோன் பெரும!நின் வண்புகழ் நயந்துஎன* (திரு.284-285)

வருபவனிடம் கனிவுடன்,

*அஞ்சல் ஓம்புமதி,அறிவல் நின் வரவு என*
*அன்புடை,நல்மொழி அளைஇ* (திரு.291-292)

அருளுவதைச் சொல்லி இழுமென அருவி இழிதரு பழமுதிர்ச்சோலை மலைகிழவோனே என்று விளிப்பதாக அப்பனுவல் முடிகிறது. வேலன் ஏத்தும் வெறியாட்டில் முருகன் வெளிப்பட்டுத் தோன்றுவது சொல்லப்பட்டுள்ளது.

தேவர்கள் செய்த யாகத்தில் தந்த அவிர்ப்பாகத்தை உண்ட சிவன் உமையுடன் கூடிக் காமம் நுகர்ந்ததால் சிவனிடத்துப் பெற்ற கருவை இந்திரன் தான் பெற்ற வரத்தின்படி வச்சிரப் படையால் சிதைத்து அந்த ஏழு துண்டங்களை ஏழு முனிவர்களுக்குத்தர, அதை முனிவர்தம் மனைவியர் அப்படியே உண்டால் கற்புக் குறைவு நேருமே என்று வேள்வித் தீயில் அவியுணவுடன் இட்டு, அந்த அவி உணவை,

*வடவயின் விளங்கு ஆல் உறை எழு மகளிருள்*
*கடவுள் ஒருமீன் சாலினி ஒழிய*
*அறுவர் மற்றையோரும் அந்நிலை அயின்றனர்.*
*மறுவரு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயின் வழாது நிற்சூலினரே!*
*நிவந்துஓங்கு இமயத்து நீலப்பைஞ்சுனைப்*
*பயந்தோர் என்ப பதுமத்துப்பாயல்*
*பெரும்பெயர் முருக!* (பரி.5.43-50)

என்று இமயமலையில் கார்த்திகைப் பெண்டிர் வயிற்றில் சரவணப் பொய்கையில் தாமரைப் படுக்கையில் முருகனைப் பெற்ற அன்றே இந்திரன் வச்சிரப்படையால் தாக்க ஆறு துண்டங்கள் ஆகியதால், ஆறு ஆகிப் பின் ஒருவன் ஆனாய் என்று அறுமுகக் கடவுளின் பிறப்பு வரலாறு பரிபாடலில் முதன் முதலாகச் சொல்லப்படுகிறது.

வெறுங்கையுடன் முருகன் செய்த போரில் தோற்ற இந்திரன் மயிலையும், அக்கினித்தேவன் தன் உடம்பின் ஒரு பகுதியைப் பிரித்துச் சேவல் கோழியாகத் தந்தனர். இயமன் தன் உடலைப் பிரித்து வெள்ளாட்டையும், பிற தேவர்கள் வில், தோமரம், வாள், ஈட்டிகோடரி, மழு, கயிறு, மணி ஆகியவற்றைத் தந்தனர். முருகன் அவற்றைத் தன் பன்னிரு கரங்களில் ஏந்தி வளர்ந்தமை சொல்லப்பட்டுள்ளது. வானுலக வாழ்வை மண்ணுலகினரும் பெறுக என்று பரங்குன்றம் வந்து விண்ணக தேவயானையை

அருகில் வைத்துக்கொண்டு ஆடுமயில் வள்ளிப் பூங்கொடியைப் பரங்குன்றத்தில் மணந்தது சொல்லப்பட்டுள்ளது.

திருமால், சிவன், பிரமன், ஆதித்தன் முதல் பன்னிருவர், அசுவினி தேவர் இருவர், பதினெண் உருத்திரர்கள், எட்டுத் திக்பாலர்கள் தேவர்கள், அசுரர்கள், வேதம் பயின்ற தெய்வ முதல்வர்கள் என்று யாவரும் வழிபட வருவதால் பரங்குன்று இமயமலை ஒத்தது. என்றும் பூசைப்புகை மேலெழும்பிப்பரவத் தேவர்களும் கண்ணிமைத்து நீங்குவதும் ஆக முருகனே அனைவரிலும் மேலான தெய்வம் என்று சொல்லப்படுவது கருதுவதற்குரியது.

குன்றத்துக்கும், கூடலுக்கும் இடைவழித் தூரம் தென்றல் வரும் வழியாகவும், மதுரையின் திருமணவிழா முழக்கம் பரங்குன்றில் எதிரொலிப்பதும் கூறப்படுகிறது. மதுரை, பரங்குன்றம் இடைவழித்தூரம் சந்தன மலர்கள் மாலை சூடி ஆண், பெண் பக்தர்கள் ஆடிப்பாடிச் செல்வதால், மலர்கள் பாதை எங்கும் சிந்தி வழிச் செல்வோரைத் தடுத்தமை சொல்லப்பட்டுள்ளது. அறம் செய்வோர் பயன் துய்க்க மேலுலகு செல்வது போல் ஆடவர், மகளிர் ஆடை, அணி தரித்து யானை, குதிரை, தேர் மீதேறிப் பரங்குன்றம் சென்றனர். தன் அமைச்சர்களுடன் பாண்டிய மன்னன் கோவிலை வலம் வருவது விண்மீன்களுடன் சந்திரன் மேருமலையை வலம் வருவது போலிருந்தது.

செவ்வேளின் பரங்குன்றை அடி தொட்டு சூளுரைப்பவனே, பொய்ச்சூளுரைத்தால் முருகனும், அவனைச் சேர்ந்த தெய்வங்களும் ஞான ஞானவேலும் வருத்தும். எனவே முருகன் மீதோ, அந்தணர் மீதோ, வள்ளி மீதோ, மயில் மீதோ, வேல் மீதோ, பரங்குன்றின் மீதோ ஆணையிடாதே என்று தோழி எச்சரிப்பதாகப் பாடல் உள்ளது.

பரங்குன்று சென்று மலர் தூவி, அவிர்ப்பலி ஊட்டி, தடாரிப்பறை முழக்கி, இசைப்பாட்டைப் பாடித் துயர் தீர வழிபடுவோம் என்று அழைப்பது மக்களிடத்தில் முருகன் பெற்ற இடத்தை விளக்கும்.

பரங்குன்று சென்று வழிபடும் பக்தர்கள் சந்தனம், அகில், மலர்கள், மத்தளம், மணி, கயிறு, மழு, பொன்னால் செய்த மயில், யானை காற்றால் அணையாத நந்தாவிளக்கு, தளிர்கள், பூத்தொழிலுடைய ஆடைகள், தீப்பந்தம், தளிர்கள், இசைக்கருவிகள், நறுமணப் பொருட்கள், இலையுடைய வேல் ஆகியவற்றை ஏந்திச் செல்வது கூறப்பட்டுள்ளது. அடிவாரத்தில் குரங்குகளுக்குக் கரும்பும், கருமந்திகளுக்குப் பணியாரமும் தந்து வீணை, யாழ், கொம்பு, முரசு முழக்கி, முருகனைப் புகழ்ந்து பாடி, ஆடித் தொழுது வழிபட்டுச் சென்றனர். இரதி, காமன், இந்திரன், அகலிகை, கௌதமன் ஓவியங்கள் காட்டிச் சிலர் விளக்குவர். பெற்றோரைப் பிரிந்த பேதைப்பெண் அப்பா, அப்பா என்று அரற்றும் ஒலியும், அழுகையும் பரங்குன்றில் எதிரொலித்தது. யானைக்குப் பூசை செய்து கவளம் உண்பிப்பர். அது உண்ணாவிடில் மகளிர் காதலர் தோளைக் கூடார். கன்னிப் பெண்டிர் மைந்தர் தோளைக் கூடார் என்ற நம்பிக்கை சொல்லப்படுகிறது.

பிரிந்து சென்ற கணவரது கையைப் பற்றி வையையில் நீராடுவதாகத்தான் கண்ட கனவு பலிக்க வேண்டும். தனக்கு மகப்பேறு வேண்டும். பிரிந்தவர் பொருளுடன் வர வேண்டும், வெற்றியுடன் வர வேண்டும் வான் பொய்ப்பினும் அருவி இடையறாது வீழும் பெருஞ்செல்வம் பரங்குன்றம் பெற வேண்டும், தேவருலகும் வேண்டாம், பரங்குன்றத்தின் அடிவாரத்தில் தங்கித் தினமும் முருகனைக் காணும்பேறு பெற்று வாழும் வாழ்வு வேண்டும், யாமும் எம் சுற்றமும் முருகனையும், பரங்குன்றையும் பாடித் தொழுது வணங்கி வழிபடும் ஏம வைகல் பெறுக யாம் என்றும், பரங்குன்றத்தின் அடிவாரத்தில் தங்கித் தினமும் முருகனைக் காணும்பேறு பெற்று வாழும் வாழ்வு எங்களுக்கு எல்லாப் பிறவியிலும் வாய்ப்பதாக என்றும் யாமும் எம் சுற்றமும் உன் திருவடிக்கீழ் தங்கி வாழும் பேறு இன்று போல் என்றும் வாய்க்க வேண்டும் என்றும் வேண்டுவது கூறப்பட்டுள்ளது.

அறம் செய்தோர், நிலையான நற்பண்புகளை உடையோர், முனிவரை வழிபட்டோர் ஆகியோர் முருகனது திருவடியைச் சேர்வோர் என்றும், உயிர்களைக் கொல்லும் கொடுஞ்செயலினர், நெஞ்சில் சினம் உடையோர், அறநெறியைப் பின்பற்றாதோர். இழிந்தோர். கூடா ஒழுக்கத்தோர். தவநெறி மறந்தோர், அறிவில்லாதோர், மறுபிறப்பு இல்லை என்போர் முருகன் திருவடியைச் சேராதவர்கள் என்றும் பரிபாடல் கூறுகிறது. பொன், பொருள், போக நுகர்ச்சியை யாம் வேண்டவில்லை. அருள், அன்பு, அறன் மூன்றையும் தருக என்ற வேண்டுதல் முன்வைக்கப்படுகிறது,

சிவனுக்கு முனிவர்தம் மனைவியராகிய கார்த்திகைப் பெண்களுக்கு இமய மலையில் பிறந்தவர் முருகன். அவர் வாழ்வதால் பரங்குன்று இமயம் போன்ற புகழைப் பெற்றது. பரங்குன்றத்து எழுதும் ஓவியம் போன்ற முருகன் கோயில் அம்புவிடும் தொழில் கற்பிக்கும் காமனது பயிற்சிச் சாலையைப் போன்றிருந்தது.

அவர் மான் மகள் வள்ளியை மணந்த போது இந்திரன் மகள் தேவசேனை கண்கள் பெருக்கிய கண்ணீர் கார்காலத்தில் பெய்யவேண்டிய மழை வேனில் காலத்தில் தண்பரங்குன்றில் பெய்ததைப்போல் இருந்ததாம். முருகன் மனைவியருக்கிடையிலான ஊடல் அவர்கள் பாங்கியருக்கிடையிலான போர்ச்செயல்கள், அது தொடர்பாக நடந்த கலைப்போட்டி, இறுதியில் வள்ளி பெறும் வெற்றி பரிபாடலில் சொல்லப்பட்டுள்ளது.

தேவசேனையை இணையச் சென்ற முருகனிடம் ,உன்னை அறியாமல் உன்னிடம் மயங்கிய மகளிர் மழையை எதிர் நோக்கும் சோலையைப் போன்றோர். அவர்கள் தவறுடையோர் அல்லர்.நூ தவறுடையை அல்லை. உன்னை அடைபவர்க்கு அருள் செய்வது உன்னுடைய இயல்பு இல்லை. எனவே உன்னுடன் இன்புற வாய்ப்பு இல்லை என்று கோபத்துடன் வள்ளி நாச்சியார் பால் ஏற்பட்ட புலவி காரணமாகத் தேவசேனை கூற முருகன் அவரை அணுகித் தன் தலைமாலை அவரது அடியில் படும்படி வணங்கி நிற்க அவர் கோபம் நீங்கி இனி வருந்தாதே என்று கூறி முருகனை

அணைத்தார்.அது கண்ட வள்ளி இனி தேவசேனையை அணுகாதே என்று சொல்லி முருகனது திருக்கரத்தைக் கட்டித்தள் மாலையைக் கொண்டு அடித்தார். அதுகண்ட வள்ளி, தேவசேனை ஆகிய இருவரது மயில்களும் தம்முள் ஒன்றையொன்று எதிர்த்தன.இருவரது கிளிகளும் மழலை மொழியில் ஒன்றையொன்று எதிர்த்தன.வள்ளியின் குன்றத்து வண்டு தேவசேனையின் கூந்தல் மீதுள்ள வண்டின் மீது பாய்ந்தது,தேவசேனையின் தோழியர் சினத்தோடு தம் மாலைகளை வள்ளி தோழியர் மாலை மீது எறிந்து மாட்டினர்.தலைமாலைகளை வீசித் தடுமாறினர்.கொங்கை மீது அணிந்த கச்சினைச் சாட்டையாகக்கொண்டு அடித்தனர்.மாலைகளையும் பந்துகளையும் வீசினர்.ஆண்யானைகளைப்போன்ற வள்ளியின் தோழியர் குதிரைகளைப்போன்று கடிது வந்து வில்லை வளைத்தனர்.வாட்படையைக் கொண்ட மறவர் போன்று சினந்தனர்.தோளணிகளைச் சக்கரப் படையாகக் கொண்டு சுழற்றி எறிந்தனர்.இது கண்டு அஞ்சிய தேவசேனையின் தோழியர் முருகனைச் சூழ்ந்து கொண்டனர்.சிலர் சுனையுள் மறைந்து கொண்டனர்.சிலர் யாழிசைத்துப் பாடினர்.சிலர் மயிலுரு கொண்டு தோகை விரித்தனர்.சிலர் குயிலுரு கொண்டு கூவினர்.சிலர் துன்புற்றனர்.வள்ளியின் தோழியர் திருந்திய போரைச் செய்து வென்றனர்.இதனால் வெல்லும் வேலுடைய முருகனுக்கு ஒத்ததாகத் தண்பரங்குன்று அமைந்தது

*கற்பு இணை நெறியூடு அற்பு இணைக்கிழமை .*
*நயத்தகு மரபின் வியத்தகு குமரா*
*வாழ்த்தினோம், பரவுதும், தாழ்த்தும்தலை -நினை யாம்*
*நயத்தலின் சிறந்த நின் அடியுறை*
*பயத்தலின் சிறக்க, நாள்தோறும் பொலிந்தே* (பரி.9.79-85)

**முடிவுரை**

நான்மறை விரித்து நல் இசை விளக்கும் வாய்மொழிப் புலவீர், கேண்மின் சிறந்தது காதல் காமம். காமத்துச் சிறந்தது விருப்போர் ஒத்த மெய்யுறு புணர்ச்சி. புலத்தலின் சிறந்தது கற்பே, அதுதான் ஊடல் உள்ளதுவே, எக்காலத்தும் பிரிதல் அறியாக் கற்புடை மகளிர் தலைவருடன் மாறுபடும் குற்றத்தை உடையவர் அல்லர். இத்தகு சிறப்புடைய களவுப் புணர்ச்சியைப் பாராட்டும் பொருள் இலக்கணம் உடையது தமிழ், அதை ஆராயும் தலைவர் களவொழுக்கத்தைக் கொள்ளாதிரார்(பரி.9) என்ற குன்றம்பூதனார் செவ்வேள் பாடல் சான்றாக மேற்சொன்ன முருகன்-வள்ளி-தேவசேனா ஊடல் அமைந்து முருகனைத் தமிழ்க்கடவுளாக அடையாளப்படுத்துவதைக் காணலாம்.

# குருநாதசாமி கிள்ளை விடுதூது

முனைவர் பி. கரிகாலன்,
தமிழ் உதவிப் பேராசிரியர்,
அரசு கலைக் கல்லூரி
துவாக்குடி, திருச்சி - 22.

தமிழ்மொழி இந்தியாவின் மாநில எல்லைகளைக் கடந்து சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, ஆஸ்திரேலியா உள்ளிட்ட பல்வேறு நாடுகளிலும் மிகச்சிறப்பாக பேச்சுமொழி, எழுத்துமொழி மற்றும் பயன் தரும் இலக்கியங்களாக வளர்ந்து வருகின்றது. இவற்றுள் குறிப்பாக இலங்கையில் தமிழ்மொழியின் ஏற்றம் அளப்பரியது. அவ்வகையில் இலங்கையில் தோன்றிய குருநாதசாமி கிள்ளை விடுதூது என்ற முருக இலக்கியத்தை அறிமுகம் செய்து ஆராயும் நோக்கில் இக்கட்டுரை அமைந்துள்ளது.

**நூலாசிரியர்**

யாழ்ப்பாணத்து சுன்னாகம் வரதராசன் என்பவரே குருநாதசாமி கிள்ளை விடுதூது என்ற இந்நூலைப் பாடியவர் ஆவார். அந்தணக் குலத்தைச் சார்ந்த இவர் கணபதி புராணத்தைத் தமிழில் பாடியவர். இந்நூலினைச் சுன்னாகம் குமாரசாமிப் புலவரின் மாணவரும் முருகேச ஐயரின் மகனுமான ரத்தினேசுவரர் என்பவர் நூலாகப் பதிப்பித்துள்ளார். இந்நூலிற்குக் குமாரசாமிப்புலவரும் சோமசுந்தரப்பிள்ளையும் சிறப்புப் பாயிரம் பாடியுள்ளனர். இந்நூலின் காப்புச் செய்யுள் விநாயகக் கடவுளைப் போற்றி அமைந்துள்ளது. குளிருக்கு வருந்துபவர்கள் நெருப்பின் அருகில் இருக்கும்போது அதன் புகையைத் தீமையாகக் கருதார். மேலும் வாதம் பித்தக் கடும்பிணிகட்கு மருந்து உண்பவர் அதன் ருசியைப் பாரார். அதனைப் போன்றே குருநாதசுவாமியின் பெயரில் அமைந்த இந்நூலினைக் கற்போர் கவிஞனின் குறையைக் கண்டாலும் அதனைக் கருதார் என்ற பொருளில் அமைந்துள்ளது.

**கிளியைத் தூது விடுத்தல்**

இந்நூலின் முதலெட்டுக் கண்ணிகள் தலைவி கிளியைத் தூதுபோய்வர வேண்டுவதாக அமையும். 'அமிழ்தமும் திருமகளும் தேவ மகளிரும் ஆகியோருடன் பாற்கடலில் தோன்றிய கிளியே; இந்தப் பாருலகில் நீ எனக்காகத்தூது சென்றுவா' என்று வேண்டுகின்றாள். மேலும் தான் அதனை வளர்த்த கடன் தீரத் தூது செல்லப் பணிப்பதை,

*தெள்ளுபுனல்*
*ஆட்டிப் பாராட்டி அமுதூட்டிச் சீராட்டி*
*கூட்டில் உனையிருத்திக் கோதாட்டி*

*என்போல் இகழ்ச்சி சற்றுமில்லாமல் என்னிரண்டு*
*கண்போல் வளர்த்தக் கடன் தீர*

என்று கூறுவதால் அறியலாம்.

பொதுவாகத் தூதிலக்கியங்கள் ஒரு பொருளைத் தூது விடுக்கும்போது பிறபொருளை விலக்கியமையை விதந்து பேசும் இயல்பின. ஆனால் இந்நூலின் தலைவி மலர், குயில், வண்டு, மேகம், தென்றல் ஆகியவற்றிடம் தான் தூது செல்லுமாறு வேண்டவில்லை என்று சுருக்கமாகக் கூறிவிடுவதாக ஆசிரியர் படைத்துள்ளார்.

**தூது சென்றவர்கள்**

கிளியைத் தூது விடுக்கும் தலைவி அதனிடம், புராண இதிகாசங்களில் தூது சென்றவர்தம் சிறப்புக்களை எடுத்தோதுகின்றாள். சுந்தரருக்காகச் சிவபெருமான், திருவாரூரில் பரவை நாச்சியாரிடம் தூது சென்றமை, பாஞ்சாலியின் அவிழ்ந்த கூந்தலை முடிக்கக் கிருஷ்ணன் கௌரவர்களிடம் தூதுசென்றமை, இராமன் பொருட்டுச் சீதையை விடுவிக்கவேண்டி அனுமன் இராவணனிடம் தூது சென்றமை, இந்திரன் வேண்ட அது மறுக்காமல் தன் காதலி தமயந்தியிடமே நளன் தூது சென்றமை போன்று கிளியைத் தன்பொருட்டு முருகப்பெருமானிடம் தலைவி தூதுசெல்ல வேண்டுகின்றாள்.

**முருகன் அருள்பாலிக்கும் தலங்கள்**

இலங்கையில் முருகப்பெருமான் வீற்றிருக்கும் பல்வேறு திருத்தலங்களின் இருப்பிடங்களைத் தலைவி கிளியிடம் பின்வருமாறு சுட்டுகின்றாள்.

*தெல்லிநகர் மாவையூர் சேர்ந்தபழை செங்கமல*
*வல்லியிருந்தே வாழ் வீமன்காம - நல்லளிகள்*
*கீதமுறும் சோலைக் காங்கேயன் துறைதேவர்*
*கதல்புரி வளமைக் கட்டுவனூர் -சீதமலர்*
*மன்னுமயில் வாழ் மயிலை வயாவிளான்*
*பன்னுபுகழுற்ற பலாலியூர்-*

. . . . . . . . . . . . . . . . . . . .

*குலகார் மதகரட குஞ்சரங்கள் மேவும்*
*அளகாபதி புரக்கும் அண்ணல்*

மேற்சுட்டிய பகுதியின் மூலம் இலங்கைத் தமிழர் வாழும் பகுதியில் அமைந்த பல்வேறு முருகத் தலங்களை அறிந்துகொள்ளமுடிகின்றது.

**சிலப்பதிகாரக் கதைத்திரிபு**

பாண்டியவேந்தன் ஒருவன் சிவபெருமான் வீற்றிருக்கும் மதுரைப்பதியில் அங்கயற்கண்ணம்மையின் மெய்யழகு கண்டு இச்சை கொள்கின்றான். அதனால்

அம்மையின் கண்களில் கோபாக்கினிப் பொறி எழுந்து அது ஒரு பெண்குழந்தையாய் மாறியது. அதனைக்கண்ட மதுரைநகர் சோதிட வல்லுநர்கள் குழந்தையின் எதிர்காலத்தைக் கணித்துக் கூறினர்.

*. . . . . . . . . . . . . . . இந்நகரில்*
*இப்பெண் மகவிருக்க இந்தநகரும் உன்றன்*
*செப்பும் குளமும் சிதையும்*

என்றதால் பாண்டியன் குழந்தையினை மரப்பெட்டி ஒன்றில் வைத்துக் கடலில் மிதக்கவிடுகின்றான். அப்பெட்டி புகார் நகரில் கரையொதுங்கக் கண்ட மாநாய்கன் என்னும் வணிகன் குழந்தையை மகிழ்வுடன் எடுத்து வளர்த்துவருகின்றான். பின்னர் மன்னனுக்கு இணையான மாசாத்தன் என்பவன் மகனான கோவலனுக்குத் தான் வளர்த்துவரும் கண்ணகியை மணம் செய்துகொடுக்கின்றான். மணம் செய்தபின்னர் கோவலன் மாதவிமேல் மையல்கொண்டு கண்ணகியை விட்டுப் பிரிந்து மாதவியுடன் வாழ்ந்து தன் பெருஞ்செல்வத்தை இழக்கிறான் பின்பு மாதவியைவிட்டு நீங்கி கண்ணகியிடம் வந்து அவள்கால் சிலம்பு பெற்று அதனை விற்க மதுரைக்குச் செல்கின்றான் அங்கு அவனை வண்ணப் பரிபுரத்தைக் கவர்ந்த கள்வனென்று பொன்செய் கொல்லன் கூறக்கேட்ட பாண்டியன் கோவலனை முறைப்படி விசாரிக்காமல் கொன்றுவிடுகின்றான்.

தன் கணவன் கொலையுண்டதை அறிந்த கண்ணகி ஒற்றைச் சிலம்பைக் கையிலேந்திப் பாண்டியன் முன்னின்று அவனை வழக்கில் வென்று முன்பு திரிபுரத்தை எரித்த சிவபெருமான்போல் மதுரையை எரிக்கின்றாள். அந்நெருப்பில் மன்னர் முதலானோர் வெந்தழிந்தனர். கண்ணகியின் கோபம்கண்டு உலகோர் இறைவனை வணங்க இறைவன் உமையுடன் இறங்கிக் குருநாத சுவாமியை அவதரிக்கச் செய்கின்றனர்.

குருநாதசுவாமியாக அவதரித்த முருகனே இலங்கையில் பல தலங்களிலும் உறைகின்றான் என்பதனை

*அண்டர் முதன்முனிவர் அம்புவியோர் அன்புடனே*
*கண்டவர்கள் போற்றும் கசாத்துறையும் துண்டமதி*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*அறங்கண்ணிய பெரியோராதரித்துப் போற்ற*
*விறங்கண்ணிய வளையிலென்றும் - பிறங்கணியாய்*

என்றமைந்த அடிகளில் ஆசிரியர் கூறுகின்றார்.

**முருகன் அலங்காரம்**

குருநாதசுவாமிக்குப் பூசாரிகள் அலங்காரம் செய்கையில் புனிதப் புனலாட்டி மெய்யில் அங்கியிட்டு உத்தரியமிட்டு மணக்கும் பன்னீர் தெளித்துச் சந்தனக்குழம்பைப் பூசிச் சூரியனைப் போலும் சுடர்விடும் பொற்பட்டம் புனைந்து மதிபோன்ற நெற்றியில் கத்தூரிப் பொட்டிட்டு வளைக்கப்பெற்ற கம்பியில்

கடுக்கண், கனகமணிக் குண்டலம் சூட்டி உடம்பில் பதக்கம் சுடர்விட, இடுப்பில் பொன்னாலான அரைஞாணும் காலில் வீரக்கழலும் அணிவித்து முல்லை, தாமரை, அலரி, பிச்சி, இருவாட்சி, மல்லிகை, குவளை முதலான மலர்களால் தொடுக்கப்பெற்ற மலர் மாலைகளைச் சூட்டிக்கண்ணாடி முன் அழகு காட்டினர்.

முருகன் வீதியுலா

குருநாத சுவாமி அலங்காரம்பூண்டு உயர்வகைக் குதிரையிலேறி வீதியில் வருகிறார். அப்போது இசைக்கப்படும் இசைக்கருவிகளின் தாளத்திற்கேற்பக் குதிரை நடனமாடுவது விளக்கப்பட்டுள்ளது. உலாவில் முருகப்பெருமான் ஐவகை நடையில் வருவதாக ஆசிரியர் கூறுகின்றார். உடன் வருபவர்கள் இசைக்கருவிகளை இசைத்துக்கொண்டும் பாடல்கள் இசைத்துக்கொண்டும் நடனமாடிக்கொண்டும் வருகின்றனர்.

ஊர்வலத்தில் வித்தை காட்டுவோர், வாணவேடிக்கை நிகழ்த்துவோரோடு நால்வகை வருணத்தாருடன் அவ்வருணங்களுக்குட்பட்ட பலவகைச் சாதியினரும் உடன் வருவதாகக் குறிப்பிடப்பெறுகின்றது. அலங்கரிக்கப்பட்ட வீதியில் உலா வரும் முருகனை தேவ மகளிர் முதலாக எழுவகைப் பருவ மகளிரும் கண்டு மகிழ்கின்றனர்.

தலைவி முருகன் அழகைக் காணுதல்

“முழு நிலவு போன்ற முருகப்பெருமான் முகத்தில் பிறைமதி போன்ற நெற்றியில் பட்டம் அணிந்துள்ளதைப் பாரீர்; காதில் செங்கனகக் கோல மணிக்குண்டலம் பாரீர்; மணிப்பொன் முடி பாரீர்; கஞ்சமலரனைய கண் பாரீர்; பூங்குவளை போன்ற வெண்முத்து மாலை பாரீர்” என்று சொல்லிக்கொண்டு குயில்போன்றும் அன்னம் போன்றும் வணங்கும் பெண்களுக்கு இடையே தலைவியும் நின்று வணங்கினாள்.

தலைவியின் நிலை

சிவந்த தன்கைகளைக் குவித்துத் தலைவி முருகவேளை வணங்கியபோது அவள் மனமுருகி மாலைப்பொழுதில் வாடிய தாமரைபோல் வாடினாள். மேலும்

*வெங்குருநோய் கொண்டவர்தம் வெம்மைதரும் வெப்பவித்திட்டு*
*அங்குயிரைக் காத்தருளும் ஆண்மைபோல் - பொங்கியெழு*
*தூமக் கனலில் சுருளச் சுடுமெனது*
*காமக் கனல் தணித்துக் காத்தருள் என்று - ஏமுற்று*
*நன்முறுவல் மாதர் நடுநிற்கும் வேளைதனில்*
*புன்முறுவல் காட்டியவர் போயினார்*

என்று தலைவி தன்னிலையை வெளிப்படுத்துகின்றாள்.

**கிளியை வேண்டுதல்**

காமக் கனலால் வருந்தும் தலைவி அன்றில், தாயர், உடனாயத்தார், தென்றல், கடல் பொரும் அலை, மன்மதன், மாங்குயில்கள் என அனைவரும் பகையாகித் தன்னுளம் அறியாது காதல் துயர் அறியாது துயர் செய்வதாகப் பேசுகின்றாள். இத்துயர் தீரக் கிளியிடம்

*உன்னைப் பசுங்கிளியே ஒருதவி வேறறியேன்*
*என்னைப் புரந்து ஏகற்கு எண்ணுவாய்*

என்று உரைக்கின்றாள்.

**செல்லும் வகையுரைத்தல்**

செல்லும் வழியில் உணவுண்டு இளைப்பாறிச் செல்லும்படி பாவையர் அழைப்பர். அவர் இனிய குரலைக் கேட்டு அஞ்சாது செல்க எனவும் பூசையில் படைத்த உணவுண்ண வாரும் என்பது கேட்டு பூனை என்று பதுங்கலாகாது எனவும் நாகமரம் படர்ந்த நாட்டை நாகப்பாம்பு நிறைந்தது என்று நினைக்கலாகாது எனவும் தலைவி கிள்ளைக்கு அறிவுறுத்துகின்றாள். வாவிகளும் சோலைகளும் கடந்தேகித் திருத்தலம் செல்லும் வழியை

*வண்டாமரை மலரும் வாவிகளும் சோலைகளும்*
*கண்டாங்கு அதனைக் கடந்தேகித் தண்டாமல்*
*சங்கை பெறு காராளர் தங்குமூர் தாமலரின்*
*மங்கைபயில் மாவை வழந்தாள் - கங்குல்*
*உறங்கணிய வளையார்ந் தோங்கு பொய்கைசூழும்*
*இறங்கணிய வளையில் எய்தித் - திறம்பெறவே*
*முன்னதிலே நின்று முதல்வன் குருநாதன்*
*சந்நிதி வாசல் தனிலணுகி - அன்னவர்தான்*

என்று தலைவி உரைக்கக் காணலாம்.

**வருத்தம் கூறி மாலை வாங்கிவரச் சொல்லுதல்**

திருத்தலத்தில் குருநாதசுவாமியைக் கண்ட கிள்ளை, நாற்றிசையிலிருந்தும் வந்த அடியார்களுக்கு அருள்புரிகின்ற சந்தோஷ வேளையில் துதித்தபடி அவனுடைய உலாக் கண்ட தன் நிலையைக் கூறுமாறு அறிவுறுத்துவதுடன் மாலையையும் வாங்கி வருமாறு பணிக்கின்றாள்.

*நின்பவனி கண்டொருபெண் நின்னை நினைந்துநெஞ்சில்*

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

*அம்மனைபந் தாடாள் அன்ன மிவைதொடாள்*
*தம்மனைமார் தங்களொடு தார்கட்டாள்- செம்மனையிற்*
*கண்டுயிலாள் என்று எனது காதலெல்லாங் காதிலுற*
*விண்டுவிண்டு நன்றாய் விரித்தெடுத்துப் - பண்டிங்கு*

*இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்கு*
*உறுதி பயப்பதாந் தூதென்று - அறிவிற்*
*திருவள் ளுவருரைத்த செய்யுட் பயனைப்*
*பெருக நினைந் தச்சமறப் பேசி - முருகுமலர்ச்*
*சோலைப் பசுங்கிளியே சொல்லுங் குருநாதர்*
*மாலைதனை நீவாங்கி வா.*

இப்பகுதியில் தூதிற்கு வள்ளுவனார் உரைத்த இலக்கணப்படி அஞ்சாமல் சேதி உரைத்து மாலை வாங்கிவரப் பணிக்கின்றமை அறிந்து இன்புறத் தக்கது.

இந்நூல் கண்ணகி வரலாறு, பிற பொருட்களை விலக்கியமை, தூது சென்ற புராண மாந்தர்களைக் குறித்தல், இலங்கையில் முருகத் தலங்கள், திருக்குறளைப் பொருத்தமுடன் ஆளுதல் ஆகிய நிலைகளில் புதிய செய்திகளையும் மரபுநிலையில் தலைவி உலாக் காணும் தலைவனைக் காமுறல், தூது விடுத்தல், வழி கூறுதல், மாலை வேண்டுதல் ஆகிய செய்திகளையும் கொண்டும் விளங்குகின்றது.

# முருக வழிபாட்டில் பன்முக நோக்கு

முனைவர் மு. கல்பனா,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜா பேட்டை. 632513.

பழந்தமிழர்கள் நிலத்தை நான்கு வகையாகப் பிரித்தனர். ஒவ்வொரு பகுதிக்கும் உரிய கடவுளர்களையும் படைத்தனர். *சேயோன் மேய மைவரை உலகம்* என்ற தொல்காப்பிய அடிகள், மலையையும் மலை சார்ந்த இடத்தையும் கொண்ட கடவுள் முருகன் என்று சுட்டும். *குறிஞ்சி கிழவன், மலை கிழவோன்* என்று தமிழ் நூல்கள் முருகனைச் சுட்டும். 'முருகு' என்ற சொல் இளமை, மணம், அழகு, தெய்வம் என்றெல்லாம் பொருள்படும். முருகன் என்றும் இளையோன் எனப் பாராட்டப்படுகின்றான்.

**முருகனின் பெயர்களும் காரணமும்**

நெருப்பின் கரத்தால் ஏந்தப்பட்டதால் அக்கினிப்பூ என்ற பெயரும், கங்கையில் வளர்ந்த காரணத்தால் காங்கேயன் என்ற பெயரும், சரவண மடுவில் தோன்றியதால் சரவணபவன் என்ற பெயரும், கார்த்திகைத் தாய்களின் பால் உண்டதால் கார்த்திகேயன் என்ற பெயரும், கடம்பமர நிழலில் பள்ளி கொண்டதால் கடம்பன் என்ற பெயரும், விசாக நட்சத்திரத்தில் தோன்றியதால் விசாகன் என்ற பெயரும், ஆறுமுகத்துடன் இருப்பதால் ஆறுமுகன் என்ற பெயரும், இளமை அழகுடன் திகழ்வதால் முருகன், குமரன் என்ற பெயரும் அடியவர்களின் உள்ளமாகிய குகையினிலே வசிப்பதால் குகன் என்ற பெயரும், ஆறு குழந்தையாய் இருந்த முருகனைத் தேவி அணைத்து ஒரு குழந்தையாகச் சேர்த்த காரணத்தால் கந்தன் என்ற பெயரும் கொண்டார்.

நாரத முனிவரின் வேள்வியில் தோன்றிய ஆட்டை அடக்கி வாகனமாகக் கொண்டதால் அருணாருடமூர்த்தி என்றும், பிரணவத்தின் பொருள் அறியாத பிரமனை சிறைப்பிடித்து, சிவன் கருணையால் விடுதலை செய்தக் காரணத்தால் பிரணசாந்த மூர்த்தி என்றும் முருகன் பல பெயர்களைப் பெற்றார்.

**முருகனின் கொடியும் வாகனமும்**

கடலில் மாயமாய் நின்ற சூரபதுமனைத் தன் தாயினால் அளிக்கப்பட்ட வேலைக் கொண்டு எறிந்து பிளக்க, அவன் இறவாத வரத்தைப் பெற்றிருந்த காரணத்தால் சேவலும் மயிலுமாக நின்றான். அவை முருகனை எதிர்க்க, அருள் நோக்கோடு முருகன் அவற்றைக் காண, அவை ஞான நிலை அடைந்தன. சேவல் முருகனின் கொடியாகவும், மயில் முருகனின் வாகனமாகவும் மாறியது.

அன்று முதல் முருகன் வேலாயுதன் சூராரி, மயில்வாகனன், சேவற்கொடியோன் என்னும் நாமங்களையும் பெற்றான்.

**முருகனின் மனைவியர்**

சூரனை வதைத்தது தேவர் உலகத்தை இந்திரனுக்குப் பெற்றுத் தந்த காரணத்தினால் இந்திரன் தான் வளர்த்த தேவசேனையை முருகனுக்குத் திருப்பரங்குன்றத்தில் மணம் முடித்துக் கொடுத்தான். வள்ளமலைச்சாரலில் முனிவராய் தவஞ்செய்து கொண்டிருந்த திருமால், மான் உருவில் இருந்த லட்சுமியைக் காம உணர்வுடன் நோக்க, அந்த மான் கருவுற்று, வள்ளிக்கிழங்கிற்காகத் தோண்டப்பட்டிருந்த குழியில் ஒரு பெண் குழவியை ஈன்று ஓடி விட, வள்ளிமலை தலைவன் நம்பி அக்குழந்தையை வளர்த்து வர அவ்வள்ளியை மணம் செய்து கொண்டு திருத்தணிகையில் வந்து அமர்ந்தார்.

**முருகனின் அறுபடைவீடு**

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருஆவினன்குடி (பழனி), குன்றுதோறாடல் (மலைத்தலங்கள்), திருஏரகம் (சாமிமலை), பழமுதிர்சோலை (கள்ளழகர் கோயில்) என்ற இந்த ஆறு தலங்களே முருகனுக்கு உகந்த தலங்கள் எனத் திருமுருகாற்றுப்படையில் கூறப்படுகிறது. இவை ஆறு படை வீடு என்றும் வழங்கப்படும். படைவீடு என்பது சேனைகள் தங்கும் இடம் ஆகும். திருமுருகாற்றுப்படையில் சொல்லப்பட்ட ஆற்றுப் படைவீடு என்பதே ஆறு படைவீடு என மருவிற்று.

அருணகிரியாரின் திருப்புகழிலும், குமரகுருபரரின் கந்தர் கலிவெண்பாவிலும், ஆறு திருப்பதி என்றே குறிக்கப்பட்டுள்ள இத்தலங்கள் பின்னர் எழுந்த நூல்களில் படைவீடு என்ற சொல்லாட்சியுடன் வலம் வரத் தொடங்கின. இன்றளவும் முருகனின் அறுபடை வீடுகள் என இத்திருத்தலங்களே சிறப்புடன் போற்றப்பட்டு வருகின்றன.

**அறு சமய வழிபாடு**

*ஆறுசமயக் கடவுள் வேறன்று யான்*
*ஒருவனே அங்கங் கிடந்து*
*அன்பார்க்கு முக்திதரு வித்தென்று யாவர்க்கும்*
*அறிவித்த வதன மணியே*

என்ற மயிலரங்கம் நூலின் வரிகள் இவ்வறு வகை சமயம் குறித்து எடுத்தியம்புகின்றது. ஓங்கார வடிவினனாக விளங்கும் கணபதி வழிபாடு. பேரின்ப நிலை வடிவானவனாக விளங்கும் முருகன் வழிபாடு, பேரொளி வடிவிலான சூரியன் வழிபாடு, எங்கும் நிறைந்தவனாம் திருமாலின் வழிபாடு, தாயாக விளங்கும் சக்தி வழிபாடு ஆகிய இவ்வறுவகை சமய வழிபாட்டின் கூறாக முருகனின் முகத்தோற்றம் அமைந்து இருப்பதைக் காணலாம்.

சடாட்சரம்

முருகனுக்கு உரிய ஆறெழுத்து மந்திரமே சடாட்சாரம் என்பர். இந்த ஆறெழுத்து குறித்து அறிஞர்கள் பலரும் பல்வேறு விதமான கருத்துக்களைக் கூறுவார்கள். குமாராய நம என்பதே அந்த ஆறெழுத்து மந்திரம் என்று சிலர் கூறுவார். ஆனால் நச்சினார்க்கினியரோ அதனை மறுத்து சரவணபவ என்பது தான் ஆறெழுத்து என்பார். ஐந்தெழுத்துடன் கூடிய ஓம் சிவாயநம என்பது தான் ஆறெழுத்து என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுவர்.

சுப்பிரமணியனும் முருகனும்

சுப்பிரமணியன் என்பது வடக்கே வாழ்ந்து வந்த ஒரு இன மக்களின் கூட்டத் தலைவன் ஆவான். இந்திரனின் மருமகன் இவன் என்பர். முருகன் அல்லது கந்தன் குறிஞ்சி நிலத் தலைவன் ஆவார். பௌத்தமும் சமணமும் தமிழகத்தில் தழைத்தோங்கத் தொடங்கிய நேரத்தில் அம்மதங்களுக்கு எதிராக ஓரணியில் திரண்ட வைதிக சமயங்கள் சைவத்தை ஏற்றுக் கொண்டு, வடபுல சுப்பிரமணியரும் தென்புலக் கந்தனும் ஒன்றாக்கப்பட்டனர் என்பது அறிஞர்களின் கருத்தாகும்.

முருகனின் உருவங்கள்

முருகனுக்குப் பல உருவங்கள் உள்ளதாக குமார தந்திரம் கூறுகின்றது. முருகனுக்குப் பதினாறு திருவுருவங்கள் உள்ளதாகக் கூறப்பட்டுள்ளது. அவைகளாவன, 1. இளமுருகன் (பாலசுவாமி) 2. கந்தன் 3. இளையோன் (குமார சுவாமி) 4. அறிவாற்றல் கொண்டோன் (ஞானசக்திதர சுவாமி) 5. தெளிவுடைவோன் (சுப்பிரமணியர்) 6. அறுதாய் மைந்தன் (கார்த்திகேய சுவாமி) 7. களிற்றூர்திப் பெருமான் (கெஜவாகனர்) 8. பொய்கையில் உண்டானவர் (சரவணபவன்) 9. படைத்தலைவன் (சேனானி) 10. மேலவர் படைத்தலைவன் (தேவசேனாபதி) 11. சேவலாகவேறு படுத்துயொன் (கிரவுஞ்ச பேதனர்) 12. மயிலூர்திப் பெருமான் (சிகிவாகனர்) 13. தாரணை வீழ்த்தியோன் (தாரகாரி) 14. படைப்போன் (பிரம சாத்தன்) 15. வள்ளி மணாளன் 16. ஆறுமுகன் ஆகியவை ஆகும்.

வள்ளி, தெய்வானை முருகன்

தெய்வானை என்னும் தேவசேனை கிரியாசக்தி, வள்ளி இச்சா சக்தி, வேல் ஞானசக்தி, மயில் ஆணவம், கோழி சிவஞானம், மயிலாகிய ஆணவத்தை வாகனமாக்கிக் கீழ் அடக்கி மேலேறிக் கோழியாகிய சிவஞானதைக் கொடியாக்கி உயர்த்திக் காட்டுக்கின்ற முருகன் என விளக்குவர் பெரியோர். வள்ளி தேவசேனை சமேதராக விளங்கும் முருகனின் உருவத்திற்கான காரணத்தை இவ்வாறு அறுதியிடுகின்றனர் அறிஞர்கள்.

முருகனின் திருவிளையாடல்கள்

திருவிளையாடல் என்றாலே சிவபெருமான் தான் நம் அனைவருக்கும் நினைவில் வருவார். அவரின் குமாரனாகிய குமரக் கடவுளும் தந்தையைப் போலவே திருவிளையாடல்கள் புரிவதில் வல்லவராகத் திகழ்ந்தார். அவற்றுள் சில, திருமாலின் வராக அவதாரத்தின் போது, அதன் கொம்பைச் சிவபிரான் அணிய அவ்வராகத்தை அடுதல் செய்தார். உக்கிரப் பெருவழுதியாய்ப் பாண்டிய நாட்டை ஆண்டார். உருத்திரசன்மர் எனும் பெயருடன் செட்டியார் மரபின் ஊமைப் பிள்ளையாய்ச் சங்கப் புலவர்களின் சந்தேகத்தைக் களைந்தார்.

நக்கீரரைக் கற்கிமுகி என்னும் பூதத்திடம் இருந்து காத்தார். நல்லியங்கோடனுக்குப் பூவை வேலாக்கிப் பகை முடிக்க அருள் புரிந்தார். ஔவையிடம் சுட்ட பழம் சுடாத பழம் என வேடிக்கை புரிந்தார். சம்பந்தராய் அவதரித்து சமண மதத்தை வளர்த்தார். முட்டை என்னும் திருநாமத்தைப் பொய்யாமொழிப் புலவரிடம் இருந்து பெற்றார்.

கச்சியப் சிவாச்சாரியாரை ஆட்கொண்டுக் கந்தப் புராணம் பாடியருளச் செய்தார். முருகம்மையாரின் அற்ற கையை அறாத கையாக மாற்றினார். அருணகிரியாரைத் திருப்புகழ் பாட அருளினார். குமரகுருபரர் வழி கந்தர் கலி வெண்பாவைப் பெற்றார். தந்தையிடம் பழம் பெற மயில் மீதேறி உலகம் சுற்றி வந்தார். சிவகிரி - சத்திகிரி என்னும் மலைகளைக் காவடியாக எடுத்து வந்த இடும்பனை ஆட்கொண்டார். இவ்வாறு இவருடைய திருவிளையாடல்களைப் பட்டியலிட்டுக் கொண்டே செல்லலாம்.

முருகனுக்கு உரிய விரதங்கள்

முருகனுக்கு விரதம் இருக்க உரிய நாள் வெள்ளிக்கிழமை ஆகும். இதைப் போன்றே ஆடி மாதமும், கார்த்திகை மாதமும் முருகனுக்கு விரதம் இருக்க உரிய மாதங்களாகும். முருகனுக்கு உரிய விசாக நட்சத்திரமன்றும் முருகனுக்கு விரதம் இருக்க உகந்ததாகும். சஷ்டி விரதம் முருகனுக்கு உரிய மிகச் சிறப்பானதொரு விரதம் ஆகும். சட்டியில் இருந்தால் அகப்பையில் வளரும் என்ற மரபுத்தொடர் சஷ்டி விரதம் இருந்தால் அகப்பையாகிய கருப்பையில் குழந்தை வளரும் என்பதைக் குறிக்கின்றது. இது பண்பாட்டுக்குரிய வழிபாட்டுமுறை எனக் குறிக்கலாம்.

முருகனின் சிறப்புத் தலங்கள்

கயிலைச் சாரலில் உள்ள கந்தமாதனம், திருத்தணிகை, வள்ளிமலை, சென்னையிற் கந்தக்கோட்டம், காஞ்சியில் குமரக்கோட்டம், இளையனார் வேலூர் ஆண்டார் குப்பம், திருப்போரூர், சேயூர் (செய்யூர்), வல்லக்கோட்டை, மயிலம், வைத்தீசுவரன் கோயில், திருவிடைக்கழி, சிக்கல், எட்டிக்குடி, எண்கன், வயலூர், விராலிமலை, பழநி, திருப்பரங்குன்றம், பிரான்மலை, பழமுதிர்ச்சோலை, குன்றக்குடி பிரான்மலை, திருசெந்தூர், கழுகுமலை, வள்ளியூர், இலஞ்சி, திருமலை, மருதமலை, சென்னிமலை போன்றவைகளாகும். ஈழ நாட்டில்

கதிர்காமமும் மலேசியாவில் பத்துமலை முருகன் கோவில் போன்றவைகளும் தற்போது முருகனுக்குரிய சிறப்புத் தலங்கள் ஆகும்.

முருகனின் திருவிழாக்கள்

வைகாசி விசாகம், ஆடிக்கிருத்திகை, புரட்டாசி வேல் திருவிழா, கந்த சஷ்டி, திருக்கார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம், போன்ற திருவிழாக்கள் உற்சாகமாகவும் ஆரவாரத்துடனும் முருகனுக்காகக் கொண்டாடப்படும் மிக முக்கியமான திருவிழாக்கள் ஆகும்.

தொகுப்புரை

சிவனே இளையோனாக வந்து முருகனாகத் திகழ்கின்றார் என்கிறது புராணம். *சூர் முதலை இறுப்ப அரனே இளையோன் ஆனவாற்றால்* என்கிறது தணிகைப் புராணம். பரப்பிரம்ம ஒளியே முருகன் என்றும் குறிப்பிடுவார்கள். உருக்கம், நல் விழுக்குலம், ஒழுக்கம் இலரேனும் 'திருப்புகழ் படிப்பவர் மனத்தில் இருப்பாம்' என முருகர் கூறுவதாக ஒரு தனிப்பாடல் உண்டு. அருணகிரியார் *முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பவர்* முருகன் என்கிறார். வேலன் வெறியாட்டு சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. தமிழர்களின் பழம் பெரும் கடவுளும், தமிழ்க்கடவுளுமாகப் போற்றி வணங்கப்படுகிறார் முருகப்பெருமான்.

## வள்ளி-தெய்வானை தேவியருடன் சர்வ நலம் தரும் குகைக்கோயில் குமரன்

முனைவர் க. கலாவதி
உதவிப்பேராசிரியர் தமிழ்த்துறை
அவினாசிலிங்கம் மகளிர் மற்றும்
மனையியல் உயர்கல்வி நிறுவனம்
கோவை - 43

'தென்பாண்டி நாட்டைச் சிவலோகம்' என வாதவூரர் பாராட்டி உள்ளார். திக்கெல்லாம் புகழும் திருநெல்வேலி, மாவட்டத்தின் தென் பகுதியில் அமைந்துள்ள ஊரே வள்ளியூர். இது முருகப்பெருமானின் குன்றுதோறாடல் திருப்பகுதிகளில் ஒன்றாக விளங்குகிறது. பல்லாயிரக்கணக்கான சந்தத் திருப்புகழ்ப் பாடல்கள் பாடி முருகன் பெருமையை உலகறியச் செய்த அருணகிரியார் வள்ளியூர்த் தலத்திற்கு ஒரே ஒரு சந்தத் திருப்புகழ் பாடி முருகப்பெருமான் திருவருளை முழுமையாகப் பெற்றார். கந்தக்கடவுள் நம் தமிழகத்தில் பல குன்றுகளில் அமர்ந்து திருவிளையாடல் புரிகிறான். வள்ளியைத் தேடி வள்ளியூர் வந்து வள்ளியைத் திருமணம் செய்யது மனித உள்ளத்தைப் பண்படுத்திக் கருணையினால் ஆட்கொள்ளுகிறான் என்பதுதான் வள்ளித் திருமணக் காட்சி. இந்த பாக்கியம் பெற்ற தலம் வள்ளியூர். யஜுர் வேதம் முருகனைக் குகன் என்று குறிப்பிடுகிறது.

வள்ளியை மணம் முடித்த முருகப் பெருமான், மகேந்திரகிரி மலைக்குக் கிழக்குப் புறமுள்ள மலைக்குன்றில் தனிக்குடித்தனம் நடத்தியதால் அந்தத் தலம் வள்ளியூர் என்று அழைக்கப்பட்டு வருகிறது. முன்னொரு காலத்தில் கிரவுஞ்ச அசுரன் மலை உருவில் இருந்தான். அகத்தியரின் சாபம் காரணமாக முருகப்பெருமானின் வேல்பட்டு அந்த மலை 3 துண்டுகளாகச் சிதறியது. அந்த அசுரனின் தலைப்பாகம்தான் வள்ளியூர் குன்று என்று புராணத் தகவலில் கூறப்பட்டுள்ளது. அந்தக் குன்றில் முருகப்பெருமான் வசித்ததால் அது பூரணகிரி என்று அழைக்கப்பட்டது.

முருகப்பெருமான் வள்ளியுடன் பூரணகிரியில் இருப்பதை அறிந்த அகத்தியர் அங்கு வந்து முருகப்பெருமானை வணங்கினார். முருகனும் அகத்தியருக்குக் குரு ஸ்தானத்தில் கிழக்கு முகமாக நின்று நான்மறை பொருளுரைத்தார். அகத்தியரும் மேற்கு முகமாக மாணவன் ஸ்தானத்தில் நின்று நான்மறைப் பொருளை உபதேசம் பெற்று பூரணகிரியை வலம் வந்தார். அப்போது குகையின் தெற்குப் புறத்தில் தெய்வானை சோகத்துடன் நிற்பதைக் கண்டு அகத்தியர் திடுக்கிட்டார். முருகப்பெருமானைக் காண வந்த தன்னை வள்ளி அனுமதிக்காததால் வெளியே நிற்பதாகக் கூறி மனம் வருந்தினாள் தெய்வானை.

அகத்தியரும் தெய்வானையை வள்ளியிடம் அழைத்துச்சென்று வள்ளி தெய்வானை ஆகிய இருவரின் முந்தைய பிறவியை எடுத்துக்கூறினார். அதன்படி இருவரும் சகோதரிகள் என்பதை அறிந்ததும் அவர்கள் சண்டையிடுவதை நிறுத்திக்கொண்டு முருகப்பெருமானின் இருபுறமும் நின்று அகத்தியருக்கு அருள்பாலித்தனர்.

இப்படிப்பட்ட சிறப்புக் கொண்ட வள்ளியூர் தலக் குகைக்கோயில் நெல்லை மாவட்டத்தில் பெரிய குகைக்கோவிலாகக் கருதப்படுகிறது. பிற கோவில்களில் முருகன் குன்றின் மேல் நின்று பக்தர்களுக்கு அருள்பாலிக்கிறார். ஆனால் இங்குக் குன்றின் குகைக்குள் இருந்து அருள் பாலிக்கிறார் என்பது சிறப்பாகும்.

கோவிலின் கருவறையில் வள்ளி, தெய்வானையுடன் முருகன் பக்தர்களுக்கு அருளாசி வழங்கிக்கொண்டிருக்கிறார். தேவ ரூபமாயிருந்த முருகனைப் பிம்ப ரூபமாக இருக்க தேவேந்திரன் வேண்டினார். முருகனும் பிம்பரூபமாக தன் இருதேவியருடன் காட்சி தந்தார். தேவேந்திரனும் பிம்பப் பிரதிஷ்டையை ஆகம முறையில் செய்து முருகனை வணங்கினார். அப்போது முருகப்பெருமான் வள்ளியுடன் கார்த்திகை மாதம் கடைசி வெள்ளிக்கிழமையன்று தெப்பத்தில் காட்சி கொடுத்தார். அதுவே இன்றும் தெப்பத் திருவிழாவாகக் கொண்டாடப்படுகிறது.

வள்ளியூரை ஆண்டு வந்த அற்பகன் என்ற அரசன் தனது மனைவி மகாபாகையுடன் மகேந்திர கிரியில் குழந்தை வேண்டி தவம் செய்தான். அங்குவந்த பரசுராமர் வல்லிக்கொடி ஒன்றை அந்த அரசனிடம் கொடுத்தார். அந்தக் கொடி பெண் குழந்தையாக மாற அந்தக் குழந்தைக்கு வல்லி என்ற பெயரிட்டு வளர்த்து வந்தனர். பெண் குழந்தை பருவமடைந்த பின்னர் அரச முறைப்படி முருகன் வள்ளியின் அம்சமாகிய வல்லியை மணம் செய்தார். இந்நகரை வல்லி ஆண்டதால் வல்லி மாநகரம் என்றும் அழைத்தார்கள். இப்படிச் சிறப்புப் பெற்ற வள்ளியூர் தலத்தில் சித்திரை மாதம் அசுவதி நட்சத்திரத்தில் கொடியேறி 10 நாட்கள் திருவிழா நடைபெறும். 9வது நாளில் தேரோட்டம் நடைபெறும். வைகாசி விசாகத்தின் வசந்தம் திருவிழா 10 நாட்களும், கார்த்திகை மாதம் கடைசி வெள்ளிக்கிழமை தெப்பத் திருவிழாவும் நடைபெறும்.

**தாரகவதமும் வள்ளியூர்த் தலச்சிறப்பும்**

தாரகன் வாழ்ந்த மலையும், மலைப் பகுதியுமாக உள்ள பகுதி பாரதத்தின் தென்பகுதி. அவன் முருகப் பெருமானுடன் போர் செய்து மாயை ஒழிந்து ஞானம் பெற்றுக் குமரன் அருள் பெற்றதும் தென்பகுதியே. தாரகன் நிலப் பகுதியையும், சிங்கமுகன், சூரன் ஆகியோர் கடற்பரப்பின் பெரும் பகுதியையும் ஆண்டு வந்ததாகப் புராணங்கள் குறிப்பிடுகின்றன. தாரகனை அழித்த திருவிளையாடல் நிகழ்ச்சியைக் காட்டுவது வள்ளியூர் கந்த சஷ்டிப் பெருவிழா நிகழ்ச்சியாகும் மாயத்தடங்கிரியை வெல்லக்

குமரப்பெருமான் இங்கு மயூரக்கொடியுயர்த்தி, பத்து நாட்கள் விரதமிருந்து வேள்வி நிகழ்த்தி எட்டாம் நாள் நடுஇரவில் தாரகனை வதம் செய்து ஆட்கொள்கிறார் என்பது பண்டைய மரபின் ஐதீகக் கொள்கை. தாரகன் மாயம் ஒழிந்து பேருருவாயக் குமரன் அடி விழுந்ததன் அடையாளமாகத் தற்போது காணப்படும் கிரவுஞ்சகிரியும், குகையும் காணப்படுகிறது. தலைப்பகுதியே இப்போது காணப்படும் குகைக்கோயில், உடல்பகுதியே முருகப்பெருமான் திருக்கோவிலுக்கு மேற்கே பெரும் பாறையாகக் காட்சியளிக்கிறது. அவன் கால் பகுதி இன்னும் மூன்று, நான்கு கல் தொலைவில் மேற்கே குடமாடி மலைப்பகுதியாக உள்ளது என்று நம்பும் தன்மையதாக உள்ளது. தாரகன் வாய் பிளந்து கவிழ்ந்து கிடப்பது போன்ற தோற்றத்திலேயே முருகப் பெருமான் குகைக்கோயில் காணப்படுகிறது. (தகவலாளர் - க. உதயகுமார்)

கந்த சஷ்டிப் பெருவிழாவில் வீரபாகு மூர்த்திக்கு முதன்மை, அளிப்பது வள்ளியூரில் மட்டுமே நடைபெறுகிறது. முதலில் வீரபாகு சூரன் தாரகனுடன் போரிட்டுத் தன்னால் இயலாமை கூறும் நிகழ்ச்சியும் இவ்விழாவில் நிகழ்த்திக் காட்டப்படுகிறது. பின் குமரன் தாரகனை வதம் செய்யும் நிகழ்ச்சியும் காட்டப்படுகிறது. பிற முருகப்பெருமான் தலங்களிலும் திருக்கோவில்களில் சஷ்டிப் பெருவிழா நிகழ்ச்சி ஆறு நாட்கள் நடைபெற்று ஆறாம்நாள் மாலையில் சூரசம்ஹாரக் காட்சி நடைபெறுகிறது. ஆனால் வள்ளியூர்த் திருத்தலத்தில் இவ்விழா நிகழ்ச்சி நடுநிசிக்குப்பின் நிகழ்த்தப்படுவது தாரகவத நிகழ்ச்சியை வலியுறுத்தவே ஆகும் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். சஷ்டிப் பெருவிழாவில் சூரத்தாரக வடிவம் அமைக்கப்பெற்று வதம் முடிந்தபின் வடிவம் முழுவதும் எரிக்கப்படுவது சிறப்பு நிகழ்ச்சியாகும். இந்நிகழ்ச்சி மாயை மலம் சுட்டெரிக்கப்பட்டால் உண்மை ஞானம் பெற வழியுண்டு என்பதும், உண்மை, ஞானம் பெற வழியையும் காட்டுகிறான் முருகன் என்பதையும் சஷ்டிப் பெருவிழா மூலம் நமக்குக் காட்டப்படுகிறது.

**வள்ளி திருமண நிகழ்ச்சி அடிப்படையில் வள்ளியூர் தலச்சிறப்பு**

புராண நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு வள்ளித் திருமண நிகழ்ச்சி நடைபெற்ற இடம் பற்றி இங்கே கண்டோம், திருமால் நம்பிராஜனாக வள்ளியூருக்கு வடமேற்கே திருக்குறுங்குடி என்ற வைணவத் திருப்பதியாகும். இங்கு மலைப்பகுதியில் மலை நம்பி என்ற பெயரில் நம்பிராஜனாகக் கோவில் கொண்டுள்ளார். வள்ளி நாயகி தினைப்புனங்காத்த மலைச்சாரல் முழுவதும் திருக்குறுங்குடி மலை முதல் நன்செய் நாடெனப்படும் நாஞ்சில் நாட்டில் வேளிமலை எனப்படும் குமாரக் கோவில் வரை என்பதாகச் சொல்லப்படுகிறது.

இந்த மலையில் தான் குமரப் பெருமான் வேங்கைமரமாக நின்று காட்சியளித்தான் என்பதும் தெரிய வருகிறது. குமரப்பெருமான் வேங்கை மரமாக நின்ற காட்சி குமாரக் கோவிலில் இன்றும் உள்ளது. அங்கேயே மலைப்பகுதியில் முருகன் விருத்தனாக (கிழவனாக) வந்து வள்ளியிடம் தேனும் தினைமாவும் உண்டு பசி தீர்த்தான் என்றும் கூறப்படுகிறது.

தினைமாவுண்டு தீர்த்த சுனையும் குமாரக் கோவிலில் உள்ளது. நம்பிராஜன் மக்களுக்கும், முருகப்பெருமானுக்கும் நடைபெற்ற போரில்தான் அவர்கள் திருத்தணிவரை விரட்டிச் சென்று இருக்க வேண்டும் என்றும் தெரிகிறது. பின் நம்பிராஜன் இடமாகிய திருக்குறுங்குடிப் பக்கம் உள்ள வள்ளியூரில் வள்ளிக்கும் முருகப்பெருமானுக்கும் நம்பிராஜன் திருமணத்தை நடத்தி வைத்தான் என்றும் தெரிய வருகிறது.

சூரன் வதம் முடிந்தபின், தேவசேனை திருமணம் முடிந்தபின் தேவசேனையுடன் தென்திசைப் பயணம் வருகிறான் முருகன். அகத்தியரால் உண்டாக்கப்பட்ட குகையில் தாரகனை இருக்க வைத்து மீண்டும் முருகன் கைலை யாத்திரை செல்கிறான். பின் நாரதர் தூண்டுதலால் வள்ளித் திருமண மூலம் சுந்தர வல்லியை ஆட்கொள்ள வருகிறார். முன் உபதேசம் செய்து “ஷடாஷ்ர” மந்திர பலன் கிடைக்க அவளைத் திருமணம் செய்து கொள்கிறார் என்பது கருத்து.

முருகப் பெருமான் வள்ளியைத் திருமணம் செய்துக்கொண்டு தேவசேனை இருக்கும் குகையைத் தேடி வருகிறார். தேவசேனையோ தனக்குப் போட்டியாக இன்னொருத்தி வந்து விட்டாள் என்ற சினத்துடன் தாடகத்தியாக தன்னை மாற்றிக்கொண்டு குகையை விட்டு வெளியேறுகிறாள். அந்தச் தேவசேனையே வள்ளியூரில் இப்பொழுது சரவணப் பொய்கையின் மேலக்கரையில் “தாடகத்தி அம்மன்” என்ற பெயரில் பக்தர்களுக்கு அருள் வழங்கிக் கொண்டிருக்கிறாள். பின் அவள் ஊடலை நீக்கித் தன்னுடன் சேர்த்துக் கொள்கிறார் முருகன். குகையில் குமரப் பெருமான் சுந்தரவல்லி ஆனந்தவல்லியுடன் அருளாட்சி செய்யும் முருகப் பெருமானய்க் காட்சியளிக்கிறார். மேலே கூறியவற்றின் மூலம் வள்ளியூர் வள்ளித் திருமணம் நடந்த இடம் என்று கூறும் அளவிற்கு உள்ளது என்பதைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

**வள்ளியூர் முருகன் திருக்கோவில் வழிபாட்டுச் சிறப்புகளும், விழா சிறப்புகளும்**

நாள்தோறும் நடைபெறும் வழிபாட்டுப் பூசைகள் நித்திய பூசை எனவும் பிற சிறப்புகளும் விழாக்களும் நைமித்தக பூசை எனவும் வழங்கப்படுகின்றன. இந்த நித்திய மித்திய பூசைகளிலும் இந்த முருகன் திருக்கோவில் சிறப்பாக விளங்குகிறது. தினந்தோறும் ஆறுகால பூசை வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன. மாதந்தோறும் தமிழ் மாத இறுதி வெள்ளிக்கிழமைகளில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. இம்மாதாந்த வெள்ளிக்கிழமைகளில் வெளியூர், உள்ளூர் பக்தர்கள் அதிக அளவில் கலந்துக்கொண்டு வழிபட்டு முருகப் பெருமான் திருவருள் பெற்றுச் செல்கின்றனர்.

**கந்தர் சஷ்டிப் பெருந்திருவிழா**

ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் பெருந்திருவிழாவாகத் திருக்கொடியேற்றத்துடன் பத்து நாட்கள் சிறப்பாக நடைபெற்று வருகிறது.

இவ்விழா வள்ளியூர்த் தலத்தில் தாரகனை அழித்த சிறப்பு நிகழ்ச்சியாகக் கொண்டாடப்படுகிறது. ஆணவ மலம், கன்ம மலம் இவைகளை முருகப் பெருமான் ஆறு நாட்கள் விரதமிருந்து அழித்துச் சூரனையும், சிங்கமுகனையும் ஆட்கொள்ளுகிறார். ஆனால் உயிர்களுடன் என்றும் ஒட்டிய மாயாமலம் என்ற ஒன்று அறுபடுவதற்கு வள்ளியூரில் முருகப் பெருமான் திருக்கொடியேற்றி ரட்சாபந்தனம் செய்து (காப்பிட்டு) யாகசாலை பூசை வழிபாடு நிகழ்த்தி தாரகனை, மாயம் வல்ல சூரனின் தம்பியை எட்டாம் நாள் இரவில் தம்பி வீரபாகு துணையுடன் அழிக்கின்றார் என்பது புராண வரலாறு காட்டும் உண்மையாகும். இதனாலேயே இங்கு ஏழாம், எட்டாம் நாள் விழாக்களில் ஆறுமுகச் செம்மலாய் வீதிவலம் வந்து திருக்கோவிலுக்கு எழுந்தருளிய பின் ஒருமுகச் செம்மலாய் முருகன் குதிரை வாகனத்திலும், வீரபாகுதேவர் மற்றும் ஒரு குதிரை வாகனத்திலும், எழுந்தருளி வீதி வலம் வந்து நடுநிசிக்குப்பின் தாரகனைவதம் செய்து ஆட்கொள்ளும் நிகழ்ச்சியாகிய திருவிளையாடலை நிகழ்த்திக் காட்டுகிறார் முருகப் பெருமான். வேறு எந்த முருகப் பெருமான் திருத்தலத்திலும் வீரபாகு தேவருக்குச் சஷ்டிப் பெருவிழாவில் சிறப்புக் கொடுப்பதில்லை. குமாரப் பெருமான் தாரகனை அழிக்கும் விளையாட்டில் வீரபாகுவம் முக்கியம் கொடுக்கும் புராண நிகழ்ச்சி அடிப்படையிலேயே வள்ளியூர் கந்த சஷ்டிப் பெருவிழா அமைந்திருப்பது ஓர் சிறப்பாகும். வீரபாகு தேவருக்கு வள்ளியூரிலும் புஷ்ப அங்கி, கிரீடம் சார்த்திப் பிட்டமுது நிவேதன வழிபாடு நிகழ்த்துகின்றனர். எல்லா நலன்களும், அடைய வேண்டிய பேறுகளும் அடியார்கள் பெறுவதற்குரிய சிறப்பு வழிபாடு இதுவாகும்.

**திருக்கல்யாணத் திருவிழா**

ஆண்டுதோறும் ஐப்பசி மாதத்தில் தாரக சூரவதம் பெருவிழா முடிந்தபின் ஆறு அல்லது ஏழாம் நாளில் வள்ளித் திருமணத் திருவிழா சிறப்பான முறையில் கொண்டாடப்படுகிறது.

**தெப்பத்திருவிழா**

ஆண்டுதோறும் கார்த்திகை மாதக் கடைசி வெள்ளிக்கிழமையில் ஸ்ரீமுருகப் பெருமான் நிகழ்த்தும் நீர் விளையாட்டு என்ற தெப்பத் திருவிழா நடைபெற்று வருகிறது. இத்திருவிழா இத்திருக்கோவில் திருவிழாக்களிலேயே மிகச் சிறப்பு மிக்க முக்கியமான விழாவாகும். இவ்விழாவில் பல்லாயிரக் கணக்கான மக்கள் வந்து வழிபட்டு முருகப் பெருமான் அருள் பெற்றுச் செல்கின்றனர். நீண்ட நாட்களாகவே இவ்விழா இங்கு நடைபெற்று வருகிறது.

**படிப்பாயாச வழிபாடு**

திருமடப்பள்ளியில் பாயாசம் வைத்து நிவேதனம் முருகனுக்குச் செய்து சரவணப் பொய்கையில் நீராடிக் கொண்டிருக்கும் குழந்தைகளுக்குப் பழத்துடன் பாயாசம் உண்ணச் செய்யும் வழிபாடு சிறந்ததொன்றாகும்.

இவ்வழிபாடு இவ்வூரில் மட்டுமே நடைபெறும் சிறப்பாகும். ஒவ்வொரு தமிழ் மாதக் கடைசி வெள்ளிக்கிழமை தோறும் இவ்வழிபாட்டை ஓராண்டு இரண்டாண்டுகள் தொடர்ந்து தமக்குப் பலன் கிடைப்பது வரை வழிபாடு நிகழ்த்துவர். இவ்வழிபாட்டின் பயனாய் பிள்ளைப் பேரில்லாதவர் பிள்ளைபேறடைந்து இன்ப வாழ்வு எய்துவர்.

**சந்தனக்காப்பு வழிபாடு**

இவ்வழிபாடு இவ்வூர் முருகப் பெருமானுக்கு நிகழ்த்தும் வழிபாடுகளில் மிகச்சிறந்த ஒன்றாகும். இவ்வழிபாட்டில் உச்சிகால பூசையின் போது கும்பக் கலசம் வைத்துக் கும்பாபிஷேகம் நடத்திச் சந்தனக் காப்பு வழிபாடு செய்வது சிறப்பாகும். மறுநாள் காலை விசுவருபதரிசனக் காட்சி வரை சந்தனக்காப்பு அலங்காரம் அப்படியே இருக்கும்.

**நிறைவாக**

*அருளால் அழகாய் என்றுமே நிறையும்*
*பொருளாய்ப் போகமாய் அளிப்பான் அவனே*
*மலைவாழ் வள்ளியூர் முருகன் மயக்கினை*
*மலைப்பினை மாய்ப்பான் வல்லிமா ருடனெ*

என்னும் முருகன் துதியைப் பாடி பரவசமடைவோம்.

**பார்வை நூல்**

1. வள்ளியூர் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் தலவரலாறு – சுந்தர – ஜெயந்தீஸ்வர சாஸ்திரி - 2005.

# தமிழ் இலக்கியத்தில் முருக வழிபாடு

முனைவர் த. கலாஸ்ரீதர்
உதவிப் பேராசிரியர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்

*"தாமரை புரையும் காமர் சேவடி
பவழத் தன்ன மேனி திகழ்ஒளி
குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்
நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்
சேவலம் கொடியோன் காப்ப
ஏம வைகல் எய்தின்றால் உலகே"*

என்று போற்றிப் புகழப்படும் முருகன் தமிழகத் தெய்வங்களுள் குறிப்பிடத்தக்க இடம் பெறுகிறான். நிலங்களுக்குரிய தெய்வங்களை வரையறை செய்யும் தொல்காப்பியர்,

*"சேயோன் மேய மைவரை உலகமும்
மாயோன் மேய காடுறை யுலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்"*

என்று குறிஞ்சி நிலத்திற்கு முருகன் உரியவன் எனக் கூறுகிறார். ஏனைய நிலத் தெய்வங்களான திருமால், வருணன் இந்திரன் ஆகியோரைக் காட்டிலும் முருகனே சிறப்பாகப் பேசப்படுவதைச் சங்கப் பாடல்களில் காணலாம்.

**வேலன் வெறியாடல்**

தலைவன் மேல் காதல் கொண்டு துயரில் வாடும் தலைவியின் மேனி வருத்தம் கண்டு தாய் அதற்குக் காரணம் தெரியாது பூசாரியாகிய வேலனை அழைத்து வெறியாடுவாள். அவ்வாறு வெறியாடும் நிகழ்ச்சி அகப்பாடல்கள் பலவற்றிலும் குறிக்கப்பட்டுள்ளது.

*"அறுவை தோயும் ஒரு பெருங்குடுமி
சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்
ஆகுவ தறியும் முதுவாய் வேல
கூறுக மாதோ நன்கழங்கின் திட்பம்"* (அகம். 195)

என்று வேலன் கழங்கைப் பயன்படுத்தியநிலை பேசப்படுகிறது. வெறிபாடிய காமக்கண்ணியார் வெறியாடலை இரண்டு பாடல்களில் விளக்குகிறார். வெறியாடுதற்குக் களம் ஒன்று அமைத்து மாலை சூட்டி இறைவனைப் போற்றிப்பாடிப் பலிகொடுத்துத் தினையைக் குருதியோடு தூவி வெறியாடிய நிலையை ஒரு பாடலில் விளக்குகிறார்.

*"களம் நன்கு இழைத்து, கண்ணிசூட்டி*
*வளநகர் சிலம்பப்பாடி, பலி கொடுத்து*
*உருவச் செந்தினை குருதியொடு கூஉய்*
*முருகு ஆற்றுப்படுத்த உருகெழு நடுநாள்"* (அகம் - 22)

என்பது அவர் கூற்று, அவர் மற்றொரு பாடலில் கூடுகொள், இன்னியம் கறங்கம் பெரும்பந்தர்க்கீழ் வெண்போழ் கடம்பொடு சூடி இன்சீர் ஐதமைபாணி இசைத்து முருகனைப் போற்றி வெறியாடிய செய்தியைப் பாடுவார். (அகம். 98) மலர்கள் உதிர்ந்துள்ள இடத்தைக் குறிப்பிடும்போது வேலன் வெறியாடும் களம்போல என உவமை கூறப்படுகிறது. (அகம், 114, 182, மலைபடு 182) இவ்வாறு வெறியாடும் நிகழ்ச்சி மதுரைக்காஞ்சியில்,

*"அருங்கடி வேலன் முருகொடு வளைஇ*
*அரிக்கூட்டின்னியம் கறங்க நேர் நிறுத்து*
*கார்மலர்க் குறிஞ்சி குடிக் கடம்பின்*
*சீர்மிகு நெடுவேள் பேணித்தழு உப்பிணையூஉ*
*மன்று தொறும் நின்ற குரவை"* (மதுரை : 611-615)

என்று கூறப்படுகிறது.

குறமகள் நிகழ்த்திய வெறியாடலை, மிக விளக்கமாகப் பாடுகிறார். நக்கீரர் மாண்தலைக் கொடியொடு மண்ணி அமைவர, நெய்யொடு ஐயவி அப்பி ஐது உரைத்துக் குடந்தம்பட்டு மலர் சிதறி இரண்டு முரண்பட்ட உடை உடுத்துச் செந்நூல் யாத்து வெண்பொரி சிதறி விடைக் குருதியொடு விரவிய தூ வெள்ளரிசி பலியாகப் படைத்துப் பல்பிரப்பரீஇ சிறுபசுமஞ்சளோடு நறுவிரை தெளித்துப் பெருந்தண் கணவீர நறுந்தண்மாலை துணையற அறுத்துத் தூங்க நாற்றிச்சிலம்பினை வாழ்த்தி நறும்புகை எடுத்துக் குறிஞ்சிபாடி இன்னியம் கறங்கப் பல்பூ தூவிக் குருதிச் செந்தினை பரப்பிக் குறமகள் முருகாற்றுப்படுத்தினாள்" என்று அவர் விளக்கமாகப் பேசுகிறார்.

*"சால்தலைவ எனப் பேண விழவினுள்*
*வேலன் ஏத்தும் வெறியும் உளவே"* (பரி - 5)

என்று பரிபாடலில் வெறியாடல் குறிக்கப்படும்.

முனிவர் வழிபடும் முறை, குறமகளின் வழிபாடு, அந்தணர் வழிபடும் முறை என்று முருகனைப் பலவாறு வழிபட்ட நிலையினை முருகாற்றுப்படையுள் நக்கீரர் கூறும்போது குறமகள் வழிபடுமுறையாக வெறியாடலைக் குறிக்கிறார்.

இவ்வாறு வெறியாடுதல் தலைவியின் நோயை அறிய மட்டுமல்லாது பொதுவான முருக வழிபாடாக இங்கு குறிக்கப்பட்டுள்ளமை கருதத்தக்கது.

இன்று தமிழகத்தில் வெறியாடல் நிகழ்ச்சி வழக்கில் இல்லாத போதும் கேரள நாட்டில் இருப்பதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர் (பி.எல்.சாமி)

முருகன் சினங்கொண்டவன் என்றும் வெகுண்டு போர் செய்பவன் என்றும் பாடல்கள் குறிக்கின்றன.

*"முருகுறழப் பகைத்தலைச் சென்று"* (மதுரைக்காஞ்சி – 181)
*"சினமிகு முருகன் தண் பரங்குன்றத்து"* (அகம் - 59)
*"முருகன் அன்ன சீற்றத்து"* (அகம் - 158)
*"முருகுறழ் முன்பொடுகடுஞ்சினம்"* (நற் - 225)
*"முருகன் சீற்றத்து உருகெழு குருசில்"* (பெரும் – 131)

என்று முருகனது சீற்றமும் போராற்றலும் குறிக்கப்படுகின்றன. முருகன் அவுணர்களைக் கொன்றான் என்றும் சூரபன்மனை அழித்தான் என்ற செய்திகள்

*"செங்களம் படக்கொன்(று) அவுணர்த்தேய்த்த*
*செங்கோல் அம்பின் செங்கோட்(டு) யானைக்*
*கழல்தொடி சே எய்குன்றம் என்றும்* (குறுந் - 1)

"வெண்திரைப்பரப்பின் கடுஞ்சூர் கொன்ற
*பைம்பூன் சேஎய்"* (பெரும்பாண் 457-458)

என்றும் பேசப்படுகின்றன.

*"முருகு புணர்ந்தியன்ற வள்ளிபோல"* (நற் - 82)

என்று வள்ளியோடு இணைந்துள்ள நிலை பேசப்படுகிறது.

கச்சியப்பர் கூறும் போர்க்கோலவடிவம்

அழகுத் தெய்வமாகவும் இளமைத் தெய்வமாகவும் திகழும் முருகன் போர்த் தெய்வமாகவும் கூறப்படுகிறார். வடமொழியில் உள்ள இதிகாசங்களும் அவனைப் போர்க்கடவுளாகவே சுட்டும் புராணக் கூறுகள் வளர்ச்சியுற்ற நிலையில் இத்தகைய தோற்றத்தினைச் சிற்ப நூல்கள் சேநாநி என்றும் சேனாபதி என்றும் குறிப்பிடும் அசுரர்களுடன் போருக்குச் செல்லும் முருகனுடைய பன்னிரு கரங்களிலும் விளங்கும் படைகளைக் கச்சியப்பர் விடைபெறு படலத்தில் (1.18) வரிசைப் படுத்திக் கூறுவர். சிவன் தன் உருத்திர கணத்தார் பதினொரு வரையும் தோமரம் (இரும்பு, உலக்கை) கொடி, வாள் குலிசம் (வச்சிராயுதம்), பகழி, அங்குசம், மணி, தாமரைமலர், தண்டு வில், மழு, என்னும் பதினொரு படைகளாக மாற்றி முருகன் கரங்களில் வீற்றிருக்கச் செய்தலுடன் (1.18:37) எப்படைக்கும் நாயகமாம் ஒரு தனிச்சுடர் வேலையும் நல்கியதாகக் கூறிப் (1.18:38) பகைமேற் செல்லும் பன்னிரு கரத்தனின் பன்னிரு ஆயுதங்களையும் சுட்டுவர். இத்தகு போர்க்கோலத்துடன் எழுந்தருளிய முருகனைப் போர்களத்தில் தாரகன் கண்ணுற்ற திறத்தை

*"முழுமதியன்ன ஆறுமுகங்களும் முந்நான் காகும்.*
*விழிகளின் அருளும் வேலும் வேறுள படையின் சீரும்*

*அழகிய கரம் ஈறும் அணிமணித் தண்டை ஆர்க்கும்*
*செழுமலரடியும் கண்டான் அவன் தவம் செப்பல் பாற்றே"* (1:20:126)

என்று உவந்து பாடுவர் கச்சியப்பர்.

ஆறுமுக வடிவம்

கந்தபுராணக் கதை மாந்தர்களில் பக்தர்களுக்கும் பகைவர்களுக்கும் காட்சிதரும் பொழுதெல்லாம் ஆறுமுகமும் பன்னிரு கரங்களும் கொண்டவனாகவே முருகன் தோன்றுவான், முருகன், மகேந்திரச் சிறையில் துன்புற்று வாடி மெலியும் சயந்தனுக்கு (இந்திரன் மகன்) காட்டிய உருவினை,

*"வீறுகேதனம் வச்சிரம் அங்குசம் விசிகம்*
*மாறிலாத வேல் அபயமே வலமிடம் வர்தம்*
*ஏறுபங்கயம் மணிமழுத் தண்டுவில் இசைந்த*
*ஆறிரண்டுகை அறுமுகங் கொண்டு வேள் அடைந்தான்"* (3:10:4)

என்றும் வள்ளியாம் கன்னியை மானுட வடிவங்கொண்டு பூஞ்சோலையிற் கலந்த முருகனைப் போற்றுவார் கச்சியப்பர். முதல் நூலில் பகைவரைத் தடியும் ஒரு கருவியாகவே வேல் விவரிக்கப்படுகிறது. பண்டைக் காலத்தில் தமிழகத்தில் நிலவிய வேல் வழிபாட்டினை மீண்டும் நிறுவுவதற்காக அம்முதல் நூலில் கூறப்படாத வேல் பற்றிய செய்திகளைத் தம் நூலில் மிகுதியாகக் கூறியுள்ளார். முருகன் கட்டளையை நிறைவேற்றுவதுடன் தன் தனித்தன்மை தோன்றுமாறு வேல் செயலாற்றுவதைத் தாரகன் வதைப்படலத்துள் விரிவாகப் பாடுவார். சூரபன்மன் இருள் உருக் கொண்டு முருகனோடு போர் செய்கையில் வேலே அவ்விருளை அகற்றுவதாகக் கூறி அறியாமையினைப் போக்கி உயிர்களுக்கு அறிவு கொடுக்கும் ஞான வடிவமாக வேலினைப் படைத்துக் காட்டுவார்.

எப்படைக்கும் நாயகம் (1:18:37) எண்ணரும் படைகட்கெல்லாம் இறைவ (4:5:213) தெய்வப்படைக்கலம் (4:13481) தெய்வச் செவ்வேள் (4:13:462) கடவுட் செவ்வேள் (4.13483) உடம்பிடித் தெய்வம் (4:13:487) எனவரும் தொடர்களால் வேலினைச் சுட்டுதலால் வேலினைத் தெய்வமாகவே கருதுவதை கச்சியப்பரின் கூற்று உணர்த்துகிறது. மேற்கூறப்பட்ட தமிழ் இலக்கியங்களில் காணப்படும் செய்திகளின் வாயிலாக முருகனின் பெருமையையும் வழிபாட்டின் சிறப்பினையும் உணர்ந்துக் கொள்ள முடிகிறது.

(குறிப்பு: அடைப்புக் குறிக்குள் தரப்பெற்றவை கந்தபுராணத்தின் காண்ட, படல, பாடல் எண்கள்).

## பரிபாடல் காட்டும் செவ்வேள்

முனைவர் இர. கற்பகம்
உதவிப்பேராசிரியை
ம.தி.தா.இந்து கல்லூரி
திருநெல்வேலி-10

தொல்காப்பியர் முருகனைக் குறிஞ்சித் தெய்வமாக்கினாலும், அவர் அழைத்த பெயர் சேயோன் என்பதாகும். "சேயோன் மேய மைவரை உலகமும்" செந்நிறந்தான் என்பதைச் சுட்டும் எட்டுத்தொகையுள் ஒன்றான பரிபாடலும் செவ்வேள் என்ற சொல்லால் முருகனைச் சுட்டுகிறது. பரிபாடல் 19ஆம் பாடலில் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகன் பற்றிய செய்தி விளக்கப் பெற்றுள்ளது. திருமணம் எனில் அவ்வூரில்தான் இப்போது மக்கள் மணம் நிகழிடமாக விரும்புகின்றனர். அதற்குக் காரணம் வள்ளியை மணம் புரிய வந்த இடம் அது எனப் பரிபாடல் கூறுவதேயாம். ஆயின் இன்று முருகன் கோயிலில் தேவேந்திரன் மகள் தெய்வயானை மணம் நிகழ்வது போன்ற திருவிழாவே நடைபெற்று வருகிறது. நக்கீரர் இதனை முருகாற்றுப்படையில் விளக்காது விட்டுவிட்டதால் இருவர் மணமும் இங்கு நடைபெற்றதாகப் புலவர்கள் பாடினர். பரிபாடல் இலக்கியத்தில் முருகன் குறித்த செய்திகளை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

*"தண்பரங்குன்றத்து இயலனிநின் மருங்கு*
*சாறுகொள் துறக்கத்து அவளோடு*
*மாறு கைள்வத போலும் மயிற்கொடி வதுவை"*

மதுரைக்கு அருகில் திருப்பரங்குன்றத்தில் அமர்ந்த முருகன் திருமண நிகழ்வோடு இணைத்துப் பேசப் பெறுகிறான். மேலை உலகில் தெய்வானை இவ்வுலகில் வள்ளி நாச்சியார் என இருவரை மணந்த செவ்வேளாகப் போற்றப்படுகிறான். முதல் மணம் ஏற்பாட்டுத் திருமணம் மேலை உலகினர் பங்கு பெற்றனர். இரண்டாம் திருமணம் காதல் திருமணம் சாதி மறுப்புத் திருமணம் என்றும் கொள்ளலாம். பூஉலகத்தூக்கு வழிகாட்டும் முறையில் இத்தகு திருமணங்கள் கண்டதைத் தெய்வம் மீது ஏற்றிக் கூறியதாகக் கருதலாம்.

திருமால் செவ்வேள் ஆகிய இரு தெய்வ வழிபாடுகளே பரிபாடலில் வந்துள்ளன. ஆற்றைத் தெய்வமாகக் கருதி வையைப் பாடல்களும் உள்ளன. பாடல்கள் மட்டுமே உள்ளன. தெய்வப்பாடல் மட்டுமே இருப்பதால் ஓங்கு பரிபாடல் என்ற அடைமொழி அமைந்துள்ளது. 6 பாடல் மாமனுக்கு 8 பாடல்கள் மருமகனுக்கு எனவும் வையைக்கு 8ம் ஆக 22 பாடல்கள் உள்ளன. இவை நூலாக இருப்பதால் முத்தமிழான இயல், இசை, நாடகத்தில் இடைநிற்கும் இசைக்கு ஏற்ற நடை உள்ள இலக்கியம் இசையால் ஓங்கியது எனவும்.

திருமாலுக்குப் பாமா உருக்குமாலை போலத் தேவியர் இருவர் முருகனுக்கு உண்டு இப்பெண்மணிகள் இச்சாசக்தி ஞானசக்தி என ஆற்றலையும், ஆளுமையையும் வெளிப்படுத்துவன. ஆடல் பாடல் இசைக்கு ஏற்ப மகளிர் படைப்பு இடம் பெற்றுள்ளது. கடவுளர் பற்றிய வடிவங்களும் வழிபாடுகளும் செம்மொழி இலக்கியமான பத்துப்பாட்டிலும் எட்டுத்தொகையிலும் இடம் பெற்றருப்பதை நோக்கத் தமிழன் என்பவன் தெய்வ பக்தி உடையவன் எனத் தெரியலாம். வணிக மொழி ஆங்கிலம், இத்தாலி காதலின் மொழி, தமிழ் பக்தியின் மொழி எனப் பகுத்து ஆய்ந்து கூறினார் தனிநாயக அடிகள். இவர் இடைக்காலப் பக்தி நூல்களை மட்டும் அடிப்படையாகக் கொண்டு கூறவில்லை சங்க கால முதலே முருக இலக்கியம் இருந்து வருவதை அறிந்தே கூறினார். இப்பாடலில் புலவர் செவ்வேளை இறைவா என்று அழைக்கிறார்.

*"மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப்*
*பிணிமுகம் ஊர்ந்த வெல்போர் இறைவ"* (பரி.பா.17:48-49)

யானை ஊர்தி பறவைக் கொடி என்பதால் சூரசம்காரம் புராணக் கதை இணைந்துள்ளது. கந்தபுராணம் பிற்கால நூல் நூல்வடிவம் பெறுமுன் நாட்டார் வழக்கில் செவி வழிச் செய்திக் கதைகளாக மக்களிடையே முருகன் பற்றிய கதைகள் வழங்கி வந்திருக்க வேண்டும். அகிற் புகையிட்டு வழிபாடு இயற்றியுள்ளனர். இது பாதுகாப்பை வேண்டுவதேயாகும்.

*"நின்புகழ் ஏத்தி*
*அணி நெடுங்குன்றம் பாடுதும் தொழுதும்*
*கவை யாமும் எம்சுற்றமும் பரவுதும்*
*எம வைகல் பெறுகயாம் எனவெ"* (மேலது 50-53)

திருப்பரங்குன்றத்தைப் பாட மகளிர் அழைக்கப்பட்டுள்ளமை இறை மட்டுமின்றி இறை உறையும் இடமும், சிறப்புப் பெறுகின்றது. குன்று தோறும் குடியிருக்கும் குமரன் என முருகன் இன்றும் கூறப்படுகிறான். மலை மீதமர்ந்த தெய்வங்களில் இமயத்தில் சிவன், திருப்பதி திருமலையில் திருமால், திருத்தணியில் முருகன் எனச் சில தெய்வங்களுக்கே சிறப்பிடம் கூறப்பட்டுள்ளது. குமரனுக்கோ குன்றுகள் தோறும் குடியிருப்புகள் என்பதற்கு ஏற்ப இன்று பலநாடுகளில் வாழும் தமிழர் தமிழ்க்கடவுளாய் முருகனுக்கே கோயில் கட்டி வழிபாடு செய்து வருகின்றனர். தமிழன் எனில் முருக வழிபாடு இயற்ற வேண்டும் என்ற நிலைப்பாடு சங்க கால முதல் இன்று வரை இருந்து வருகிறது. கேசவனார் பாடிய 17ஆம் பாடலில் முருகவேள் எனுஞ்சொல் ஆளப்பட்டுள்ளது

*"யாம் நின்னைத் துன்னித்துன்னி வழிபடுவதன் பயம்*
*இன்னும் இன்னும் அவை ஆகுக.*
*தொன்முதிர் மரபினின் புகழினும் பலவே"* (மேலது பா.14:29-32)

*வேள்பிருப்பம் முருகு அழகு அழகை விரும்பாதார் யார்?* (29-32)

புராணப்பரவல்

வேற்படை உடைய வேலவன் வானவன் மணந்தவன் குறவர்குல மகள் வள்ளியையும் மணந்தவன் எனும் செய்தியைக் குன்றம் பூதனார் பாடிய 9 ஆம் பாடலில் குறித்துள்ளார். இருவரை மணந்தவன். சூரனை வென்றவன் எனும் குறிப்புகளே இப்பாடலில் கூறப்பட்டுள்ளன. சிவ குமாரர் தான் முருகன் என்ற பிறப்புக் குறிப்பும் இப்பாடலில் உள்ளது.

*"மணிமிடற்றண்ணற்கு மதியாரல் பிறந்தோய்கி"* (மேலது பா.த:7)

1000 கண் கொண்ட இந்திரன் மகள் தேவசேனா கண்ணீர் பொழிந்தது போலத் திருப்பரங்குன்றத்தில் மழை பொழிந்தது என உவமையாக இந்திரன் தெய்வயானை தொடர்பான செய்தி கூறப்பட்டுள்ளது. புராணக் கதைகள் பரவலாக மக்களிடையே செல்வாக்குப் பெற்றிருந்தமை இதனால் புலப்படும். வள்ளி குறவர் இனப்பெண் என்பது,

*"குறிஞ்சிக் குன்றவர் மறங்கெழு வள்ளிதமர்"* (மேலது 67 அடி)

எனும் அடி உணர்த்துகிறது.

*"வித்தகத்தும்பை விளைத்தலான் வென்வேலாற்கு*
*ஓத்தன்று தண்பரங்குன்று*
*கடுந்தர் மாமுதல் தடிந்தறுத்தவேல்"* (மேலது 68-70)

என வேற்படையுடன் இணைத்துப் பேசப் பெறுகிறான். வீரம் விளைத்து மணம் புரிதல் எனும் வழக்கம் இங்கு குறிக்கப் பெறுகின்றது. முருகவேளின் மற்றொரு பெயர் 'மணவேள்' எனக் குறிக்கிறார் புலவர் நல்லந்துவனார். தண்பரங்குன்றத்து அடி தொட்டேன் என்பாய் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியுள்ள முருகன் மணக்கோலத்தில் உள்ளான். இருபக்கமும் தேவியர் ஊர் சிற்பநூல் வடிப்போர் இக்குன்றத்துக் கடவுளைக் கல்லில் செதுக்கினால் தேவியருடன் இருப்பதாக அமைக்க வேண்டும் என்பதைப் புலவர் குறிக்கிறார்.

பரிபாடல் முருகன் பல புலவர்கள் கண்டு பாடியதாகும். மக்கள் மணம் புரிந்துவாழ வேண்டும் என்பதைக் குறிக்க அவன் பெயரை முருகன் என்று கூறாது 'மணவேள்' என்கிறார் புலவர் இன்றும் இப்பகுதி மக்கள் திருமணம் எனில் இக்கோயிலையே நாடி வருகின்றனர். ஈராயிரம் ஆண்டுப் பழமை முருகனால் தொடர்கிறது. முருகனிடம் பக்தர் கேட்பது என்ன என வினாவி விடை தருகிறார். புலவர் கடுவன் இளவயினார் (பா.5: 75-50). யாம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால், அருளும் அன்பும் அறனும் மூன்றும் என வழிபாட்டு முறையை மக்களுக்கு எடுத்து விளக்குகிறார். அருள் அன்பு அறம் மூன்று மட்டுமே கேட்கத் தகுந்தவை என்பதைப் பரிபாடல் செவ்வேள் பற்றிய பாடல்கள் வழி அறியலாம்.

# கடவுள் முருகன்

ச. காஞ்சனா.
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, பச்சையப்பன் கல்லூரி,
சென்னை-600 030.

*"வந்த வினையும் வருகின்ற வல்வினையும்*
*கந்தனென்று சொல்லக் கலங்குமே —— செந்தினகர்ச்*
*சேவகா என்று திருநீறு அணிவார்க்கு*
*மேவவா ராதே வினை"* (பழம் பாடல்)

என்ற பாடலின் வரிகளுக்கேற்ப மனிதனுக்கு எத்தகைய துன்பங்கள் வந்தாலும் அதனைத் துடைத்தெரிய கந்தா எனக் கூறி நெற்றியில் திருநீறு அணிந்தால் எப்பேர்பட்ட வினைகளையும் ஊதித்தள்ளி விடுவான் வேலவன் என்கிறது. மேலும், உலகைப் படைத்தவன் இறைவன் என்றும், கடவுள் என்றும், ஆத்மார்த்தமான சக்தியென்றும், ஆண்டவன் என்றும் பல பெயரிட்டு அழைப்பர். இருப்பினும் எது எப்படியாயினும் இவ்வுலகைப் படைத்து பல ஜீவராசிகளையும் உண்டு செய்து, அவற்றிற்குத் தகுந்தார் போல் வாழ வழிசெய்து பணிபுரிந்து ஆயுளைக் கூட்டிக் குறைத்து பாவபுண்ணிய கணக்குகளை அளந்தெடுத்து அரும்பணி செய்யும் அப்பப்பா... எப்பேர்பட்ட பணியாயினும் அவனின்று ஒரு அணுவும் அசையாது என நினைத்து, எங்கும் நீக்கமற நிறைந்துள்ள கடவுளை நாம் மனத்தால் நினைத்து வழிபட்டுக் கொண்டிருக்கின்றோம். இப்படிப் பல செயல்களையும் கண்களுக்குத் தெரியாமல் எளிமையால் ஒரு கண் அசைவினால் செய்யும் அத்தகைய உருவத்தை யாரும் பார்த்ததில்லை ஏனென்றால் அவன் அனைத்தையும் கடந்து உள்ளே இருக்கின்றான்.

## கடவுள் என்பவன்

கடவுள் என்பவன் இவ்வுலகை மாயைகளுக்கு அப்பாலும் கடந்து ஆன்மா, உடல், ஊண், உயிர், சரீரம், பிரம்மம், சக்தி, ப்ராணயானம், அருள், ஸ்பரிசம், சங்கீதம், சாத்வீதம், காருண்யம், அன்பு, வீரம், பொருமை, அறிவு, அழகு, எளிமை, இளமை, இன்பம் இவைபோன்ற அனைத்தையும் கடந்து மனிதனின் உள்ளமாகிய பெருங்கோயிலின் உள்ளே கடந்து படைக்கப்பட்ட உயிர்களுக்கு வாழ்க்கைத் தத்துவங்களையும் போதனைகளையும் பாராயணம் செய்ய அனைத்தையும் கடந்து பிரபஞ்ச உயிர்களின் உள்ளத்தையும் கடந்து செயல்படும் ஒரு சொருபமே கடவுள். ஏனெனில் மேற்சொன்ன அனைத்தையும் கடந்து உள்ளே செயல்படுவதால் உள்கட., உள்கட., எனவரவே பின்பு இது கடவுள் என்றானது எனப் பார்க்கக் கூடும்.

முருகனின் திருஅவதாராம்

பொதுவாக இறைவனுக்குக் குடும்பம் என்ற ஒன்று இல்லையென்றே கூறுவர். காரணம் இறைவன் என்பவன் அருவும், உருவும் அற்றவன் எனும் கருத்து நிலவி வருவதால் இப்படிக் கூறப்படுகிறது. இறைவன் படைக்கப்படுபவனும் இல்லை, படைக்கப்பட்டவனும் இல்லை என்றும் ஆதியும் அந்தமும் இல்லாதவன் என்றும் கூறுவர். அப்படி இருக்க இறைவனுக்குக் குடும்பம் இல்லறம் என வரக் காரணம் எதுவாக இருக்கும். அதுதான் இறைவனின் சூட்சமம் என்று கொள்ளவேண்டும். இறைவனால் படைக்கப்பட்ட அனைத்தையும் ஏதேனும் ஒன்று இயக்கிக் கொண்டிருக்கிறது. இது சக்தி எனக் கூடக்கொள்ளலாம். அத்தைகைய சக்தியைத் தாங்கிப் பிடிக்கும் சுழிமுனையே இறைவன் குடும்பம். ஏனென்றால் கலி காலத்தில் இவ்வுலக உயிர்களுக்கு ஏற்படும் இன்னல்களைத் தடுத்து நிறுத்தவும், அவர்களைத் தீய சக்திகள் அண்டாமல் பாதுகாக்கவும் வெவ்வேறு காலகட்டங்களில் வெவ்வேறு சூழ்நிலைகளில் இறைவன் தனக்குத் தானே எடுத்துக் கொண்ட அவதாரத்தின் பிரம்மமே இறைக்குடும்பம் என்று கொள்வது சிறந்ததாகும். அப்படி இல்லையெனில் இன்று உலக மக்களின் எண்ணிக்கைக்கு ஏற்றவாறு கடவுள்களின் எண்ணிக்கையும் கணிசமான அளவு பெருகியுள்ளதற்கு இவையும் ஒரு காரணமாக எண்ணிக் கொள்ளலாம்.

அந்த வகையில் படைத்தல், காத்தல், அழித்தல் என மூன்று தொழில் செய்தவன் சிவன். இவனின் மைந்தனாக..

*"நிவந்து ஓங்கு இமயத்து நீலப்பைஞ் சுனைப்*
*பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்........*
*அரிது அமர் சிறப்பின் அமரர் செல்வன்*
*எரி உமிழ் வச்சிரம் கொண்டு இகந்து வந்து, எறிந்தென*
*அறி வேறு துணியும் அறுவர் ஆகி*
*ஒருவனை, வாழி ஓங்கு விறல் சேயே"* (பரிபாடல்-46-54)

என்ற பாடல் வரிகளின் வாயிலாக சரவணப் பொய்கையில் முருகப் பொருமான் ஆறு குழந்தைகளாகத் தாமரை மலர்களில் தவழ்ந்திருக்க கார்த்திகைப் பெண்கள் அருகில் நின்றிருந்தனர். அப்பொழுது சிவன் உமாதேவியோடு எழுந்தருளியபோது உமாதேவி மகன் மீது கொண்ட அதீத பாசமிகுதியால் விரைந்து சென்று ஆறு குழந்தைகளையும் ஒன்று சேர்த்து இருகக் கட்டி அணைத்தாள் அதனால் அந்த ஆறு குழந்தைகளும் ஒன்று சேர்ந்து ஆறு முகங்களாய் பனிரெண்டு கண்களுடன் இரு கால்களுடனும் கொண்ட ஆறு முகங்களோடு அவதரித்தான் என்று பாடல் பகர்கிறது.

அழகென்ற சொல்லுக்கு முருகா

இவ்வாறு அவதரித்த அழகன் பாலகனை முருகன் என்பர். இவனுக்கு இன்னும் எத்தனையோ பெயர்கள் உண்டு என்பதனை

*"சேயோன் மேய மைவரை உலகமும்"* (தொல், பொருள் அகத்-5)

எனும் நூற்பா வழி அறியலாம் அந்த பெயர்களில் சிறந்தது சேயோன் என்பதாகும். சேயோன் என்றால் முருகன். இது முருகு, சேய், சேயோன், முருகன், வேள், எனப் பலப் பெயரிட்டு அழைத்தனர் இருப்பினும் "முருகு" என்பது "அழகு" என பொருள்படும் எனவே அழகு தெய்வமாகிய முருகனையும் இப்பெயர் சூட்டியும் முருகன் என்றாலும் அழகன் என்றாலும் பொருள் ஒன்று என்பதனை,

*"என்றும் இளையாய் அழகியாய்*
*ஏறூர்ந்தான் ஏறே"*

என்று நக்கீரர் முருகனை அழகன் என்றே கூறுகிறார். எனவே முருகன் என்பவன் அழகன் என்றே கொள்வது சாலச் சிறந்தது எனக் கருதியழைக்கலாம்.

**உடையும் திருவுருவும்**

முருகனின் ஆடை அலங்காரம் மிகவும் பிரசித்திப் பெற்றது எனக் கூற நாம் கேட்டிருப்போம். அப்படி இருக்க மற்ற தெய்வங்களுக்கு மலர்களாலும், மற்றவைகளாலும் அலங்காரம் செய்தல் என்பதால் முருகனுக்கு துணி உடைகளைக் கொண்டு அலங்காரம் செய்தல் என்பது மிகவும் உயர்வே என்பதனை,

*"உடையும் ஒலியிலும் செய்யை மற்று ஆங்கே*
*படையும் பவளக் கொடிநிறம் கொள்ளும்*
*உருவும் உருவத் தீஒத்தி முகனும்*
*விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்தி"* (பரிபாடல்-19, 97-100)

எனக் கூறுகிறது. அதாவது முருகப் பெருமான் புணைந்துள்ள உடை, மாலை முதலியன அவனின் திருவுருவம் போன்றே செந்தீப்பிழம்பாகக் காட்சி தருகின்றன என்றும் செந்நிற மார்பிலே முத்துமாலை அணிந்துள்ளான் என்பதனைப் பார்ப்பதற்கு செவ்வான ஒளியில் வரிசை வரிசையாகப் பறக்கும் கொக்கின் கூட்டத்தைப் போன்று உள்ளது என்கிறது இப்பாடல். மேலும் முருகனின் ஆடைகளைப் பற்றி,

*"நலம் பெறு கலிங்கம்"* (முருகு-109)
*"இவனுடைய உடை வெண்துகிலால் அமைந்தது* (கலி-105-17)

என்ற பாடல் வரிகளின் வாயிலாக நாம் அறியலாம். எது எப்படி இருப்பினும் பக்தி பரவசத்தோடு எவன் இறைவனைக் காண்கிறானோ அவனின் கண்களின் ஒளிப்பிம்பத்திற்கு ஏற்றவாறு முருகனின் ஆடை அலங்காரம் தெரியும். மேலும்

*"தோய்ந்த நவ ரத்நச் சுடர்மணியாள் செய்தபைம் பொன்*
*வாய்ந்த கிரண மணிமுடியும்-தேய்ந்த பிறைத்'...*
*புன்முறுவல் பூத்தவர்ந்த பூங்குமுதச் செவ்வாயும்*
*கென்மவிடாய் தீர்க்குள் திருமொழியும்"* (கந்தர் கலிவெண்பா-37-41)

எனும் பாடல் கூறும் போது மின்னலின் ஒளியையும், நவரத்தின சுடர்மணியால் ஒன்பது வகையான கோமேதயம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் எனும் ஒளியுண்டாகும் படியும், கிரணங்களை வீசுகின்ற அழகிய மணிமுடிகளையும், குறைந்த ஆறு பிறைத் துண்டுகனளயும் (நிலவு) வரிசையாக விளங்கும்படி பதித்தார் போன்ற நெற்றிகளில் பொட்டுக்களின் அழகினையும், உரிய காலத்தில் மலர்ந்த தாமரை மலர்கள் பன்னிரண்டு பூத்தார் போன்ற திருவருளைப் பொழிகின்ற கண்மலர்கள் பன்னிரண்டையும், ஒளியை வீசினார் போன்று விளங்குகின்ற குண்டலங்களையும், நிலவை வீசுகின்ற புன் சிரிப்பும் தோன்ற, அழகிய செவ்வல்லி மலர்களைப் போன்ற சிவந்த வாயினையும் பிறவித் துன்பத்தைத் தீர்க்கும் திருவாக்கினையும் கொண்டவன் முருகன் என்று கொள்ளப்படுகிறது.

முருகனின் ஆயுதங்கள்

முருகப் பெருமான் வான் நிலவைப் போன்று குளிர்ச்சியான முகத்தையுடையவன் என்றாலும் அவன் மிகுந்த சினம் கொண்டவன் என்பதைனைச் சங்கப்பாடல்,

*"முருகற் சீற்றத்து உருகெழு குருசில்"* (புற-16-12)

*"முருகன் அன்ன சீற்றத்துக் கடுந் திறல்*
*ஏந்தையும் குல்லன் ஆக"* (ஆகம்-158, 16-17)

எனும் பாடல் வரிகளால் முருகன் மிகுந்த சீற்றம் கொண்டவன் என்று விளங்குகிறது. இப்படிச் சினம் கொண்டவனின் கைகளில் ஆயுதம் இல்லாமல் இருக்க வாய்பில்லை என்பதனை விளக்கும் பாடலாக,

*"வேல் ஆற்றும் மொய்ம் பணின் விரைமலர் அம்பினோன்*
*போல் ஆற்று முன்பின் புனை கழல் மைந்தர்"* (பரி-22-26-27)

எனும் பாடல் வரிகளால் அவன் எப்பொழுதும் கைகளில் மிகவும் சக்திவாய்ந்த ஆயுதமான வேலை வைத்துள்ளான். என்று கூறப்படுகிறது இவன் வைத்துள்ள ஆயுதங்களிலேயே மிகவும் சிறப்புற்றது "வேல்" ஆகும் என்பதை விளக்கும் விதமாக ..

*"வேல் வல்லான் நிறனே போல் வெருவந்த சேயும்"* (கலி-104-14)

*"வேல் வலான் உடைத் தாழ்ந்த விளங்கு வெண் துகில் ஏய்ப்ப*
*வாலிது கிளர்ந்த வெண்காற் சேயும்"* (கலி.105-17-18)

என்ற வரிகளின் வாயிலாக நாம் அறிந்து கொள்ளலாம். எனவே இவனை வேல் வல்லான் என்றும் சிறப்பிப்பர். தேவர்கள் முருகனுக்குப் படையாகச் சொல்லும் போது மறி, மயில், கோழி, வில், மரன், வாள், ஈட்டி, கோடாரி, மழு, கனலி, மாலை, மணி, இவற்றை தனது பன்னிரண்டு கைகளிலும் இந்த பன்னிரண்டு பொருட்களையும் கொண்டு விளங்குவதாகப் பரிபாடல் கூறுகிறது என்பதனை,

*"ஆ அங்கு அவரும் பிறரும் அமர்ந்து படை அளித்த*
*மறியும், மஞ்ஞையும், வாரணச் சேவலும்*
*பொறிவரிச் சாபமும், மரனும், வாளும்*
*செறிஇவை ஈட்டியும் குடாரியும் கணிச்சயும்....*
*மறுஇல் துளக்கந்து அமரர் செல்வன் தன்*
*பொறிவரிக் கொட்டையொடு புகழ்வரம்பு இகள் தோய்"* (பரி.63-70)

எனும் பாடற்வரிகளின் வாயிலாக முருகப் பெருமான் இத்துணை ஆயுதங்களைத் தாங்கி நின்றாலும் கூட அவனின் கண்களில் கருணை மட்டுமே எஞ்சிநிற்கும். எனவே தான் அவனைக் கருணைக்கடல் என்றும் கந்தன் கருணை என்றெல்லாம் அழைத்து மகிழ்கின்றோம்.

முருகன் மணமுடித்தல்

ஏறக்குறைய முருகன் இறைவனாக இருந்தாலும் அவன் சாதாரண மனிதனைப் போல பிறப்பு இல்லாவிட்டாலும் அவன் வாழ்க்கைத் துணைநலம் வேண்டி இரு பெண்களை மணம் செய்கின்றான். அதற்குக் காரணம் மனிதன் தன் வாழ்வில் ஏற்படும் இன்பம், துன்பம், நல்லது, கெட்டது, இரவு, பகல், இனிப்பு, கசப்பு இப்படி பல்வேறு விதமான சூட்சம வலையில் சிக்கிக் கொண்டால் அதிலிருந்து மீண்டு நித்திய வாழ்வைப் பெறுவது எப்படி என்பதை தன் மூலமாக விளக்கும் விதமாகவே அவன் இரண்டு பெண்களை திருமணம் செய்து கொண்டுள்ளான் என்பது எனது தாழ்மையானக் கருத்து. இத்தைகைய திருமணத்தை முதலில் செய்து வைத்தவன் வானவத் தலைவன் தேவர்களின் அரசன் இந்திரனே என்பதனை

*"நாவல் அம் தண்பொழில் வடபொழில் ஆயிடை*
*குருகொடு பெயர் பெற்ற மால்வறை உடைத்து*
*மலை ஆற்றுப்படுத்த மூ-இரு கயந்தலை"* (பரி-5-8-10)

-அதாவது கிரவுஞ்சத்தையும், சூர்பன்மா முதலிய அவுணரையும் கொன்று தங்களுக்கு வாழ்வளித்த பெருமானுக்கு இந்திரன் தன் மகள் தேவயானையைத் திருமணம் செய்து கொடுத்தான். தேவயானையை தேவ சேனை என்றும் அழைப்பர். மேலும் முருகனின் திருமண நிகழ்வைக் கூறும் விதமாக ஒரு வெண்பாப் பாடல் இவ்வாறு கூறுகிறது

*"சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவும்*
*தெய்வக் களிற்றை மணஞ் செய்தோனே-பொய்விரவு*
*காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்*
*வாமமட மானின் வயிற்றுதித்துப் -பூ மருவும்*
*கானக் குறவர் களிகூரப் பூங்குயில் போல்*
*ஏனற் புனங்காத்து இனித்திருந்து மேன்மைபெறத்*
*தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த*
*வள்ளிக் கொடியை மணந்தானே"*

எனும் பாடல் வரிகளால் நாம் அறியலாம். அதாவது வேதங்களின் முடிவாக உள்ள சைவசமயத்தின் இளஞ்சோதியே, தவமாகிய ஆறுகளெல்லாம் சென்று அடையும் இடமாகிய கடலாய் உள்ளவனே. வான் உலகத்திற்குத் தலைவனாகிய இந்திரன் மகிழ்ந்த அறித்த தெய்வானை அம்மையாரை திருமணம் செய்து கொண்டவனே நிலையாமையையுடைய இச்சையைத் துறந்த பார்வையினால் அழகிய இளம் பருவத்தையுடைய பெண்மானின் வயிற்றில் பிறந்து பூ பொருந்திய கானகத்தில் வாழும் குறவர்கள் களிப்படையுமாறு அழகிய குயிலைப் போல் தினைக் கொல்லையை இனிதாகக் காவல் புரிந்து தெள்ளிய தினை மாவையும், தேனையும் அன்போடு அளித்த பூங்கொடி போன்ற வள்ளி நாச்சியாரையும் திருமணம் செய்து கொண்டானே என்று கூறப்படுகிறது.

எனவே முருகப் பெருமான் பிறபில்லாதவனாக இருப்பினும் அவனும் திருமணம் செய்துள்ளான் என்பதனை பார்க்கும் பொழுது மனிதர்களுக்கு குடும்பத்தின் முக்கியத்துவம் உணர்த்தி அறத்தின் வழி பொருளை ஈட்டி, ஈகை குணத்தோடு இன்பவாழ்வு வாழ்ந்து வீடுபேறாகிய இறைவனடி சேர்தலே சிறந்த முழுமையான வாழ்கையாகும். இதனை உணர்த்தவே இறைவன் பல வடிவங்களில் காட்சியளித்து உணர்த்தியதை புராணங்களிலும் இதிகாசங்களிலும் காணமுடிகிறது. எனவே நற்குணம், கருணை உள்ளம் கொண்ட அனைவருமே இறைவன் தான் என்பது தெளிவாகப் புலப்படுகிறது.

முடிவுரை

நினைத்ததை அருள் புரிந்திடும் எம்பெருமான் முருகனை மனதால் நினைத்து வாயால் துதித்து பணிந்தால் போதும் அனைத்தையும் அள்ளிக கொடுப்பவன் முருகன்.

*"காக்க காக்க கனக வேல் காக்க*
*நோக்க நோக்க நொடியினில் நோக்க..*

இந்தக் கந்த சஷ்டியைப் பாடி தொழும்போது எந்த துன்பங்களும், துயரங்களும் நம்மை அண்டாது விலகி ஓடும். ஊரெல்லாம் முருகன் உரைந்தாலும் அறுபடை வீடு என்று சொல்லக்கூடிய திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், சுவாமிமலை, பழமுதிர்ச்சோலை, திருத்தணி, பழநி ஆகிய ஆறு இடங்களிலும் சிறப்பாக வழிபடும் மரபு தமிழகத்தில் உண்டு. முருகன் கருணை உள்ளம் கொண்ட அன்பின் இருப்பிடம், அண்டியவர் உடல் பிணியையும், உள்ளப் பிணியையும் அகற்றும் மருத்துவன் அழகுத் தன்மை வாய்ந்த அறிவுக்கடல். பார்வதி மைந்தன் தாமரை மடியில் பிறந்து தந்தைக்கு ஞான உபதேசம் செய்து அகிலத்தை அறிவால் வென்று, உலக உயிர்களின் பாவம் போக்கி காக்க வந்த கதிர்வேலன், எப்போதும் கைகொடுக்கும் இணையற்ற தோழன். அவன் தாழ் பணிவோம் என்றும் பாதுகாப்பு பெறுவோம்.

## முருக வழிப்பாட்டின் படிநிலை வளர்ச்சியும் மாற்றங்களும்

முனைவர் க. காமாட்சி
கௌரவ விரிவுரையாளர்
அறிஞர்அண்ணா அரசினர் மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜாபேட்டை

முருக வழிப்பாட்டின் படிநிலை வளர்ச்சியும் மாற்றங்களும்' என்னும் தலைப்பில் எழுந்துள்ள இவ்வாய்வானது தெய்வ நம்பிக்கை, நம்பிக்கைக்கான காரணங்கள், தமிழர் வழிபடும் தெய்வங்களில் முருகன் பெரும் இடம், சேயோன், முருகு, முருகன், வேலன் இத்தெய்வங்களின் எழுச்சியும் வேறுபாடும், வேறுபடும் தன்மை குறித்த ஆய்வு நோக்கிலான பொதுப்புரிதலையும் இக்கட்டுரை விளக்கி உரைக்க முற்படுகின்றது.

மனித வாழ்வில் வழிபடும் தெய்வங்களும் மிகவும் இன்றியமையானதாகவே உள்ளன. அறிவை உணர்ந்து செயல்படத் தொடங்கிய மனித வாழ்வில் புலனுணர்விற்கு அடுத்தப்படியாக மனவெளியில் உணர்ந்திருந்தது தெய்வத்தைப் பற்றிய உணர்வு என்றே கூறலாம். இவ்விடத்தில் தெய்வம் என்பதும் அறிவால் நாம் உணருகிற முயற்சியாகவே மு லில் இருந்திருக்க வேண்டும். அனுபவம், வழிவழியான மாற்றங்கள் இவை காரணமாகவே தெய்வ உணர்வானது முழுமையான நம்பிக்கையாக நிலைப்பெற்றுவிடுகின்றது. எனவே தெய்வச் சிந்தனையோ, நம்பிக்கையோ நாம் உணருகின்ற முறையிலேதான் மேன்மையடைய முடியும் என்பதனையும் நாம் சிந்திக்க வேண்டும்.

இந்நிலையில், தெய்வம் குறித்த தேவை எங்கிருந்து எழுந்திருக்க வேண்டும் என்று முயலுதலில் நாம் செல்வோமேயானால் பூர்வீக மனிதச் சமூகத்தில் நிலவிய வேட்டை மற்றும் உணவுத் தேட்டம் இவ்விடங்களை நிதானிக்க வேண்டியுள்ளது. ஒவ்வொரு நாளுக்கான உணவுத் தேடலிலும் மனித வாழ்வின் அத்தனைப் பிரயத்தனங்களும் தேவையாக இருந்துள்ளன. அதிலொன்றாக தெய்வத்தை வணங்கி வழிபடும் நிகழ்வும் இருந்துள்ளது உணவைத் தேடி வெகுதூரம் செல்வதற்குத் தங்களுடைய முன்னோரையோ அல்லது முன்னோர் வழியில் அறிந்திருந்த குறியிடாத தெய்வத்தையோ வணங்கிச் செல்வது அடிப்படை கடமையாக இருந்துள்ளது. வாழ்வின் நீட்சி மற்றும் பின்னாளான வாழ்வியக்க முறைகளில் தெய்வ வழிபாடு வாழ்விற்கான அடிப்படை தேவையாக இருந்துள்ளது.

தெய்வம் அல்லது கடவுளை வழிபடுவதற்குரிய காரணத்தை எடுத்துக்கூறும் வாழ்வியற் களஞ்சியம் "மனிதனுடைய உள்ளமானது தன்னுடைய அடிப்படைத் தேவைக்குத் தக்கவாறு கடவுளை உண்டாக்கிக் கொள்கின்றது என்பது உண்மையே. ஆனால் அப்படி உள்ளம் எதை

உண்டாக்கினாலும் அது உளத்தன்மை உடையதாக இருந்தால் மட்டுமே மனிதனுக்குப் பயன் தருவதாக இருக்கும். அது தொடர் இல் பொருட்காட்சியாக (Tantasy) மட்டுமே இருக்குமாயின் நீடித்து நில்லாது நிலையான பயனும் தராது. கடவுள் என்னும் கருத்து ஆழ்ந்தும் பரந்தும் இருக்கிறது. வெறும் கற்பனை ஆழ்ந்த பயனைத் தரமுடியாது". மேலும் "மனிதன் தன்னிடம் நிறைவு இல்லை என்று உணர்கிறான் என்பது உண்மையே. ஒவ்வொருவனும் நிறைவை நாடுகின்றான் என்பது உண்மை. ஏதோ ஒன்று நம்மைத் தன்னிடம் இடைவிடாமல் இழுத்துக் கொண்டிருக்கிறது என்று எல்லோரும் உணர்கின்றனர். இத்தகைய உணர்ச்சி உண்டாக வேண்டுமாயின் நமக்குப் புறத்தே கடவுள் என்று ஒரு பொருள் இருக்கத்தான் வேண்டும் என்று ஏற்படுகிறது". பக்-448-449 என்னும் கருத்தினை நாம் இங்குக் கவனித்தாக வேண்டும். எனவே வாழ்வை நிறைவுபடுத்தும் ஆற்றலாக வழிபாடும், வழிபடும் தெய்வமும் இருக்கின்றதென்பதை நம்மால் மறுத்திட முடியவில்லை. இனித் தமிழர்த் தெய்வங்களில் முருகனைப் பற்றிக் காணவிருக்கின்றோம். முதலில்,

**சேயோன்**

பழந்தமிழரின் முதல் முழுமையான இலக்கண நூலாக விளங்கும் தொல்காப்பியத்தில் முருகனைப் பற்றிய குறிப்புகள் இல்லையாயினும் சேயோன்' என்னும் மலைக் கடவுளும், வெறியாட்டு பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையால் சொல்லவும் படுமே*

(தொல் - அகத் -951)

என்னும் நூற்பா வரிகளில் மாயோன், சேயோன் ஆகிய இருநிறக் கடவுள்களைக் குறித்து இங்குக் காணமுடிகின்றது.

சேயோன்' என்னும் சொல்லிற்குச் சிவப்பு, செவ்வாய், முருகன், மகன், இளமை, தலைவன் என்னும் பொருள்களை அகராதிகள் எடுத்துக் கூறுகின்றன. சேயோன்' சொல்லிற்கான முதன்மைப் பொருளாக, சிவப்பு, செவ்வாய் பொருண்மைகள் இருப்பதையும் முருகன், மகன், இளமை முதலான பொருண்மைகள் பின்னாளில் இணைந்திருக்க வேண்டும் என்பதையும் கருதவேண்டியுள்ளது. ஏனெனில் ஒரே சொல்லிற்கு கால மாற்றத்தில் வெவ்வேறு பொருள் தன்மைகள் தோன்றி பின்னர் பல்வேறு பொருண்மையுடன் ஒரு சொல்லுக்குப் பல பொருள் என்கிற நிலைமை மொழியில் கூறுகளில் நிகழ்ந்து வருவதைக் காண்கின்றோம். இன்னுமேகூட தொல்காப்பிய நூற்பாவினைக் கவனித்து அணுகுவோமேயானால் இரு விடயங்களை நம்மால் கவனித்திட

முடியும். ஒன்று, மாயோன், சேயோன் இரு கடவுள்களை அடுத்தடுத்துக் கூறும் நூற்பா வரிகள் இவ்விருவரும் நிற அடிப்படையிலான கடவுள்களாக அறியப்பட்ட இனக்குழுக்கான கடவுள்கள் என்பதும், வேந்தன், வருணன் ஆகிய தெய்வங்கள் நிறுவனத் தன்மை பெற்ற தலைமைக் கடவுள்களாகவும் இருந்திருக்க வேண்டும். முடிவில் நிற அடிப்படையிலான இனக்குழு தலைவர்கள், அரசப் பொறுப்பிலிருந்த தலைவர்களாகவும் பின்னாளில் இவர்களே அந்நில மக்களால் நிலத்தெய்வங்களாக வழிபடப்பட்டுள்ளனர்.

மேலுமொரு கருத்தியல் தெளிவு நம்மிடம் வேண்டுமெனில் மாயோன், சேயோன் இவர்களின் நிற அடையாளக் குறியீடுகளை நாம் தெளிந்தறிய வேண்டியுள்ளது. மலை நிலம் சமவெளி பரப்பிலிருந்து உயர்ந்து நிற்கும் மலைப்பகுதியாகும் அடர்ந்த மழை, கடுமையான வெப்பம் ஆகிய பருவநிலை மாற்றங்களும் உணவுத் தேட்டம், வேட்டையாடுதல் முதலான உணவைப் பெறுவதில் உள்ள அடிப்படைச் சிக்கலினாலும் இந்நில மக்கள் கருமையாக இருந்துள்ளனர். எனவே இந்நிலத்தை விரும்பி வந்து தங்கி இந்நில மக்களின் வாழ்விற்காக வாழ்ந்துக் காட்டிய கடவுளாகச் சேயோன் இருந்துள்ளார்.

அது போலவே அடர்ந்த மரங்களும், புதர்களும் பசுமையான புல்வெளிகளும் பரந்த காட்டு நிலம் மாயோன் விரும்பியிருந்த நிலமாகும். மாமையாகிய கருமை நிறமுடையவனே மாயோனாகிய கடவுளாகும். அப்படியாயின் இந்நிலத்து மக்கள் பெரிய அளவில் கருமையாக இருந்திருக்கவில்லை. ஏனெனில் காட்டுப்பகுதி நிலம் பழைய இரண்டாவது தொழிலான ஆநிரைகளைப் பாதுகாத்து வாழ்வதற்கான மேய்ச்சலுக்குரிய நிலமாகும். மலை நிலத்தைப் போன்று வேட்டை முதலான உணவுத் தேட்டத்திற்கு வெகுதூரம் செல்ல வேண்டியதில்லை, நிறைவான இறைச்சி உணவும், பால், தயிர், கொழுப்பு முதலான ஊட்டமுள்ள உணவுகள் நிலையாகக் கிடைப்பதால் காட்டில் வாழும் மக்கள் வெளிர் நிறத்தில் இருந்திருக்க வேண்டும். ஆகவே தான் இந்நிலக்கடவுள் கருமையானவராக அடையாளம் காட்டப்பட்டுள்ளார்.

எனவே தொல்காப்பியத்திற்கும், அதற்குப்பிறகான காலப்பகுதியிலும் சேயோன் நிறக்கடவுளாகவே இருந்துள்ளார் எனவும் கருதமுடியும். அதே வேளையில் தொல்காப்பியம் தவிர சங்க இலக்கியங்களில் சேயோன் என்னும் சொல்லினை நம்மால் காண முடியவில்லை என்பதையும் இவ்விடத்தில் குறிப்பிட வேண்டியுள்ளது.

**முருகு**

சங்க இலக்கியப் பாடல்களில் குறிப்பாக அகப்பாடல்களில் குறிப்பாக குறிஞ்சித் திணைப் பாடலில் முருகு தெய்வத்தைப் பெரும்பான்மையாகக் காண முடிகின்றது.

*மன்றம் மராஅத்த போஎமுதிர்க்கடவுள்*
*கொடியோர் தெறும்உம் என்ப* (குறுந். 87)

என்னும் பாடலில், மராஅம் எனப்படும் செங்கடம்பு மரத்தில் உறையும் கடவுளாகவும் முதிர்ந்த கடவுளாகவும் முருகு குறிக்கப்படுவதை நாம் அறிய வேண்டும். சேயோனைப் போல் நிலம் உறைக் கடவுளாக இல்லாமல் இவ்விடத்தில் மரம் உறைக் கடவுளாகவும் பழைய முதிர்ந்த தெய்வமாகவும் முருகு என்னும் வழபாட்டுத் தெய்வம் இருந்துள்ளது என்பதனை,

*மனைமுதிர் மகளிரொடு குரவை தூங்கும்*
*ஆர்கலி விழவுக் களம்கடுப்ப, நாளும்*
*விரவுப் பூம் பலியொடு விரைஇ! ஆன்னை*
*கடியுடை வியல்நகர் காவல் கண்ணி*
*முருகு என வேலன் தருஉம்* (அகம் - 232)

எனவும்

*வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து*
*அன்னை அயறும் முருகுநின்*
*பொன்னேர் பசலைக்குதவா மாறே* (நற் - 47)

மேற்கண்ட பாடல்களில் நம்மால் காணமுடிகின்றது. மற்றுமொரு விடயமாக முருகு தெய்வம் குறியிடப்படாத, வேலன் மூலம் மட்டுமே வெளிப்படுகிற உணர்நிலைத் தெய்வமாக இருப்பதையும் நம்மால் கவனிக்க முடிகின்றது.

முருகன்

பழந்தமிழ்த் தெய்வமாக மலைநில மக்களால் வணங்கப்பட்ட முருகு சங்கப்பாடல்களிலேயே பரிபாடல், திருமுருகாற்றுப்படை ஆகிய இலக்கியங்களில் முருகனாக வருணிக்கப்படுவதைக் காண்கிறோம். இன்று வரையிலும் நாம் அறிந்து வணங்குகின்ற அழகு, இளமை பொருந்திய கடவுளாக இன்று வரையிலும் தொடரும் மரபாகவும் இவ்விரு இலக்கியங்களில் நம்மால் காணமுடிகின்றது. ஆனால் சிலம்பில்,

*குலமலை உறைதரு குறவர்தம் மகளார்*
*நிலைஉயர் கடவுள்! நின் இணையடி தொழுதேம்*
(சிலம்பு – கு.கு.17)

என்னும் பாடல்வரிகளில், முருகனை மலையில் வாழும் மக்கள் சமூகத்தில் உள் பெண்ணை மணமுடித்து, அந்நில மக்களின் வாழ்கைக்கு மதிப்பை உருவாக்கிக் கொடுத்த கடவுளாக இளங்கோவடிகளின் வரிகளில் நம்மால் உணர முடிகின்றது.

ஒவ்வொரு நிலத்திலும் மக்களை அடி நிலையிலிருந்து உயர்த்தி நிறுத்தி அவர்களின் வாழ்விற்கான சுயமதிப்பினை ஏற்படுத்திக் கொடுத்த தெய்வங்கள், நிலம் உறைத் தெய்வமாகவும் குலமுதல் தெய்வமாகவும் வழிபடப்பட்டு வரும் நிலையில் முருகன் மலைவாழ் மக்கள் என ஒதுக்கப்பட்டிருந்த நிலையில் வாழ்வின் உன்னதத்தை அனைத்து மக்களுக்கும்

உணர்த்தும் விதமாக குறிஞ்சி நிலப் பெண்ணைத் திருமணம் முடித்து மக்கள் சமூகத்தில் அவர்களுக்குச் சம மதிப்பீட்டினை ஏற்படுத்தியக் கடவுளாக முருகன் இருந்துள்ளார் என்பதை நாம் இங்கு அறிகின்றோம்.

இதுவரையிலும் முருகனைச் சிவந்த, நிலம் உறைத் தெய்வமாகவும் முருகு எனப்படும் பழைய முதிர்க்கடவுளாகவும், அழகும் இளமையும் பொருந்தியவராகவுமே காண்கின்றோம். இனி ஆயுதமேந்திய கடவுளாகவும் நாம் காண வேண்டியுள்ளது.

**வேலன்**

சங்கப் பாடல்களில் வெறியாட்டு என்னும் வழிபாட்டு முறை பழந்தமிழரின் வழிபாட்டு முறைகளில் மேலோங்கியதாகவும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது. அதுமட்டுமல்லாமல் அகப்புறச் செயல்பாடுகளில் முதலிடம் பெற்றிருப்பதையும் காணமுடிகின்றது. அகச்செயல்பாட்டில் அறத்தொடு நிலை என்னும் களவு வெளிப்படுவதற்கான கருவியாகவும் புறச்செயல்பாடுகளில் ஆநிரைகளைக் கொள்ளையிடுவதற்காகப் புறப்படுவதற்கு முன் நிகழ்த்தப்படும் வழிபாடாகவும் வெறியாட்டு இருந்துள்ளது. வேலெடுத்து ஆடும் பூசாரியின் உடலில் வந்திறங்கி அவர் வாய்மொழிச்சொல்லாக அருள்வாக்கு கூறும் கடவுளின் தூதுவனாகவும் இருப்பவனே வேலன் ஆவான்.

*வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்* (தொல்- புறத் - 1006)

இதில் போருக்குப் புறப்படும் முன் தெய்வமுற்று வெற்றி பெறுவதற்கான கடிய சொற்களைக் கூறி நிமித்தம் கூறுபவனாக வேலன் இருக்கின்றான்.

*முருகயாற் துவந்த முதுவாய் வேல*
*சினவ லோம்புமதி வினவுவ துடையேன்*
*பல்வே உருவிற் சில்லவிழ் மடையொடு*
*சிறுமறி கொன்றிவண் நறுநுதல் நீவி* (குறுந். 362)

என்னும் போது, வேலன் மீது முருகு தெய்வமிறங்கி ஆட்டுக்குட்டியினைப் பலியிட்டு அதன் சிவப்பினை வணங்கி நிற்போரின் நெற்றியில் நீவிவிட்டு வழிபாடு நடத்துபவனாகவும்,

*சிறுபை நாற்றிய பல்தலைக் கொடுங்கோல்*
*ஆகுவது அறியும் முதுவாய் வேல!* (அகம் - 195)

தலையில் குடுமியுடன் கையில் பல்வேறு தலை வடிவம் கொண்ட மூங்கில் கோலினையும், சிறிய பையினையும், பின்னே நடப்பவற்றை முன் கூட்டிக் கூறுகின்ற பூசாரியாகவும்,

*வணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்*
*கிளவியின் தணியின் நன்றுமன் சாரல்* (நற் - 282)

என்பதில், வேலனால் தற்காலிகமாக உருவாக்கப்பட்ட வெறியாட்டுக் களத்தில் செந்நெல் பொரியினைத் தூவி வழிபட்டிருப்பதையும் மேற்கண்ட பாடல்களில் வேலனைப் பற்றிய பல்வேறு நிலைகளை அறிகின்றோம்.

உண்மையில் வேலெடுத்து ஆடுகின்ற கடவுள் பூசாரியாகவே சங்கப் பாடல்களில் வேலன் விளங்கியிருப்பதை நம்மால் தெளிவாகவே உணர்ந்துக் கொள்ள முடிகின்றது. பின்னாளில் முருகனே வேலினை உடையவன் வேலனாக வருணிக்கப்பட்டிருப்பதையும் நாம் கவனிக்க வேணடியுள்ளது.

காலத் தேவையில் கடவுளைப் பற்றிய எல்லா கற்பிதங்களும் ஒருங்கிணைக்கப்படுவதும் புதியதாக உருவாக்கப்படுவதும் இயல்பாகவே இருந்துள்ளது. அந்த வகையிலே தான் முருகனே தெய்வமிறங்கி ஆடும் பூசாரியாகிய வேலன் முருகனின் மற்றுமொரு வடிவமாக, வேலவனாக வடிவமியற்றப்பட்டுள்ளதை நாம் கவனிக்கின்றோம்.

இப்படியான வேட்டைச் சமூகக் கடவுளைப் பின்னாளில் அசுரரை அழிப்பவனாகவும் காண்கின்றோம். எவரையும் அழிப்பதும் ஆதரிப்பதும் கடவுளின் நியதியின் பின்னால் நிற்கிற உண்மையாகும்.

ஆனால் நாம் ஆயுதமேந்திய கடவுளாக இதுநாள் வரையிலும் ஏற்றுக்கொள்வதன் பின்னணியை நோக்குவோமேயானால் முருகன் இனக்குழு சமூகத்தின் போர்த்தெய்வமாகவும் தோற்றுவிக்கப்பட்டிருப்பது நமக்குப் புலப்படும். முருக வழிபாட்டினைப் பற்றிக் குறிப்பிடும். கலாநிதி கைலாசபதி அவர்கள் “சங்க இலக்கியங்களை நுணிகி ஆராயின் தமிழ்நாட்டிலே சமயம் எவ்வாறு வளர்ச்சியும் மாற்றமும் அடைந்து வந்தது என்பது புலனாகும். கொற்றவை, முருகன் ஆகிய பழந்தெய்வங்களோடு நாகரிகக் கலப்பின் பயனாகச் சில பழைய தெய்வங்கள் புதிய வடிவிலும், சில புதிய தெய்வங்கள் பழைய வடிவிலும் தோன்றுவதைக் காணலாம். இவற்றையெல்லாம் காலவகைப்படி பகுத்துப் பார்த்தாலன்றி சமய வளர்ச்சியின் படி முறைகளைச் சரியான முறையில் அறிந்துக் கொள்ள முடியாது. அதுமட்டுமன்று ஆரியக் கலப்பினால் ஏற்பட்ட மாற்றங்கள் என்றும் இலகுவான காரணம் கூறிவிடமுடியாது. எத்துணைப் பிற பண்பாட்டுக் கலப்பு வந்து சேர்ந்தாலும், இருந்த பண்பாட்டிலும் சில குறைகளோ தேவைகளோ இருத்தல் வேண்டும்” என்று தெய்வங்களின் ஒருங்கிணைப்பிற்கான விளக்கத்தின் மூலம் தெளிவுபெறலாம்.

இக்கட்டுரையின் முடிவில் முருக வழிபாடு தொடர்பாக சில கருத்தியல்களை முன்வைக்க முடிந்துள்ளது. இதிலிருந்து நாம் தெளியவேண்டிய விடயம் ஒன்று தான் எல்லாம் மாறியே தீரும்’ என்பது கடவுளரின் படிமுறை மாற்றங்களிலும் நம்மால் காணவே முடிகின்றது.

# HISTORY OF MURUGAN WORSHIP IN KANDAPURANAM

Dr.A.Karkuzhali,
Asst Prof. of History
KunthavaiNachciyar Govt Artscollege for women (A),
Thanjavur-7.

Murugan, the native and indigenous deity had his own form of worship and that worship was prominent in the Tamil country even from the Sangam age on wards. Murugan was treated as a God of Kurinji region. While Tolkappiyam the earliest Tamil grammatical extant had referred to this God as Seyon of Maivarasi ulagam[1], the Tamil deity was also known as Velan in various Sangam classics[2]. Though he was an identical was God equal to noerthrn Skanda Karthikeya[3], who was known by names such as Skanda, Kumara, Subramania, Devasenapathy, etc., Murugan was an indigenous Tami God called otherwise as Kadamban, Sevvel, Kumaran, Sendan.

Under such circumstances Kachchiyappar, who lived in the later half of the 11th century and in the early half of the 12th century[4] produced his Kandapuranam to revive the glory of the Tamil Murugan which had deteriorated and was in an eclipse stage.

The panel attests the value of family of Siva because Murugan is associated with Siva and Parvathi as his parent[5]. In the same way Kachchiyappar had referred to Skanda seated on the lap of his mother Uma who is along with her partner Siva[6]. This panel is available in the Siva temples of Pallava period[7]. It is evident that with the emergence of the Bhakthi Movement, there occurred transformations in the Bhakthi literature[8]. Such aspects widened the scope in describing the qualities of the deity Murugan in various forms. Further Murugan worship offered an opportunity for the Saiva Nayanmars to elevate Saivism. To amalgamate the two deities of identical nature and qualities with each other[9]. It was mainly to revive gone down the Murugan cult in Tami Nadu[10]. In the same way on par with Thanigai Puranum[11] and Kanchipuranam[12], Kachiyappar has treated Murugan as Bramma Sastha[13].As pointed out the Sangam classics[14] and other northern works[15], Kachchiyappar too had treatedMurugan as a war God. He had referred to his wars with Asuras in many place in his work[16]. As pointed out by Nakkirar, Kachchiyappar also had described Murugan as a hunter[17]. He had even portrayed Murugan with his wives Valli and Devasena in many places[18].

In Tirumugarruppadai when Murugan is mentioned as the son of the six celestials along with Siva, Malaimagal ,Korravai and Palayol[19]. It is clear that Murugan was a child associated with different mothers.

Who encouraged the tradition of worshipping Vinayaka for successful completeion of any work, was a sympathizer of Siva and Saivism of his period. He had associated Vinayaka with Murugan, while the latter wanted to marry Valli the lady of the hunter clan. Vinayaka himself informed Naradha to undertake a fasting in favour of Murugan for 12 years[20].

Indra, the king of celestials was also linked with Murugan by Kachchiyappar. Indra, whose familiarity was degraded after sixth century A.D., in Tamil Nadu[21], is mentioned in various places in Kandapuranam[22]. Indra had served as the vehicle for Murugan during his war with Surabanman[23]. He had even hailed Murugan[24]. It is estimate to note that every God was associated with gods and Kachchiyappar also did not deviate from that tradition.

The above facts indicate that Kachchiyappar had endeavoured to elevate the position of Murugan of associating him with the other deities. Such facts prove that unification of deities was a way adopted for the promotion of Murugan cult.

This also was a venture employed by Kachchiyappar in promoting the worship of a renowned and indigenous Tamil deity Murugan. Through his earnest endeavours to elevate position of muruganKachchiyappar had connected Murugan with the northern Skandan, who was a war God and had none of the traditional qualities of Tamil Murugan.

In addition to that Kachchiyappar, had brought to light various qualities of Murugan and in many respects they seem to be superior to those of the traits of northern Skanda. It is customary practice among the poets and devotees of different languyages to highlight their Gods as superior enables them to impose the virtues and qualities of the ordinary human beings[25]. In almost all the Tamil as well as northern epics one can witness such approaches. In Kandapuranam of Kachchiyappar, without any excepting such as epic qualities are utilized in an apt and appropriate way. In this regard a detailed of the work suggests the distinctive qualities of Murugan described in revealed in various places in Kandapuranam. In general being a warrior Murugan's qualities of valour is different contexts[26]. Probably it should be for quatingMurugan with northern war God Skanda. His calling of Murugan by the alliterations such as Veludai

Kumaran[27], Veeravel[28], the head of the army of the celestials[29], etc. exhibit the warlike wirtues of Murugan. Even Kandan had brought out his valour[30]. This Murugan is depicted as a war God. He is shown as God known for his grace[32], love and affection[33]. As Vedas treat the deities having six different qualities[34] as narrated by Naikkirar in his six qualities. So one can clearly understand that Kachchiyappar had succeeded in his attempt in making Murugan as a primary deity by reviving his part glories.

Among the various distinctive qualities, VelanVeriyadal is a significant aspect. He name Kandan available in Gnanasambandar'sDevaram, the name Subramanian in the Tiruvisaippa of the eleventh Tirumarai and many other names in the earlier Tirumurais except the tenth, indicate that Kachchiyappar qualities. These facts expose the method employed by Kachchiyappar to reinstate Murugan as the son of Siva and Uma, as he husband of Valli and Devasena, as the brother of Vinayaka, as six faced God 9Arumugam), as the leader of the forces which used spear, as red coloured God, as youthful God and as Kumaran (son). They are appealing and prominent. Kachchiyappar, by elucidating the distinctive qualitieshad described his names with such attributes. This was an unique method employed to make Murugan worship as a promising and prominent one.

After hearing about the NannanurBalasubramanya temple constructed by Adhitya I, the Chola ruler of Vijayalaya line we have the name of the specific Murugan temple of Kumarakottam in Kandapuranam. It is revealed that a separate temple was ascribed to Murugan at Kanchipuram in the name of Kumarakkottam. It is believed that Kachchiyappar released his Kandapuranam at Kumarakottam. Beyond the above measures Kachchiyappar had endeavoured to elevate Murugan even through the mouth of Siva in various places.

**CONCLUSION**

Any how it is obvious that he had never achieved success in making Muruganas the primary deity of Hinduism. Because in the 16th century St.Srunagiri had made further attempts to revive and enhance the status and position of Murugan through his literary works such as Tiruppugal, Kandar, Alangaram, kandarAnubhudhi etc. But is cannot be denied that Kachchiyappar contributed a lot in reviving and promoting the murugan cult in Tamil Nadu. The eclipse nature of Murugan cult and the important places obtained by Saivism and Vaishnavism compelled Kachchiyappar to carry out a new venture in promoting the status and position of the original Tamil deityMurugan. Particularly by his Tamil work

Kandapuranam in an epic from he had made all sincere efforts in promoting Murugan worship which had attained a lower position. As seen Murugan, the once popular Tamil deity attained the position of a Parivara devata or Gopura devata. Further the impact of Sanskrit too played its role. Only on that line Murugan was called as Subramanyan, Skandan, Karthikeyan etc.

The Tamil deity Murugan was a treated means for maintaining a relationship between Saivism and Vaishnavism.

This was also a technique continued to survive even in a dark background. Only after the 16th century i.e., after Arunagirinathar, the author of ThiruppugalMurugan revivalism actually commenced. Many Murugan shrines and literature on Murugan came up after the 17th century.

This could very well by treated as an impact of the efforts of Kachchiyappar, the author of Kandapuranam. Though Kachchiyappar could not have immediate result for his endeavours. He was able to inculcate the faith over Murugan. On the basis of the efforts of Kachchiyappar, many Tamil works and Murugan emerged. Pillai Tamil form, Talavaralaru etc. came up on Murugan and Murugan shrines anyhow Kachchiyapparwasa cause for effecting transititon in the Murugan cult in Tamil Nadu.

**REFERENCES**


1. **Tolkappiyam,** Porul, 5.
2. **Ahananurru,** 1:3, 59:11, 96:10, 156:15, **alINGURUNUR,** 129:2, **Paripadal**5:50, 8:81, **Porunararrupadai,** 131, **Purananuru**16:12, 23:4, 299:6,**Thirumurugarrupadal,** 269.
3. Zvelebiu, Kami **.The Poets of thepowers,** London , 1973, p.150.
4. Kandapuranam, **KasimadamPadippu,** Introduction, p.13.
5. N.R.Murugavel, **DeivaThiruUruvangal,** Madras, 1974, p.73.
6. **Kandapuranam,** 1:13:26.
7. R.Nagasamy, **'VaralarrilMurugaPeruman',** Kalaimagal Deepavali Malar,1965, p.27.
8. T.Zvelebil, Kamil, **The Smile of Murugan in Tamil Literature of South India,** Leiden, Netherlands, 1973, p.30.
9. Veronica Sons, **Indian Mythology,** New York, 1975, p.12.
10. **Kandapuranam,** 5:2:223.
11. KachchiyappaMunivar, **Thangaipuranam,** p.428.

12. Sivagnana, Yogihal, **Kanchipuranam, KumarakottaPadalam,** Madras, 1938, p.24.
13. **Kandapuranam,** 1:16:17.
14. **Ahananuru,** 1:3, 158:16, **Purananuru,** 16:12, 56:14, **Purunararrupadai,** 131.
15. E.W.Hopkins, **Epic Mythology,** Delhi, 1968, p.227.
16. **Kandapuranam,** 1:20:126, 4:3234, 4:13:46, ETC.
17. Tirumurugarruppadai, **208.**
18. Kandapuranam, **6:24:66.**
19. Ibid, **1:24:256, 257:258, 259.**
20. **Thirumurugarruppadai,** 255-259.
21. **Ibid, 6:23:10.**
22. **Ibid,** S.Vidhyanandhan**TamilarSalsu,** Madras, 1971, p.147.
23. **Kandapuranam,** 1:14:82, 104, 105, 106.
24. **Ibid,** 4:13:380.
25. **Ibid,** 4:13:381, 4:14:8, etc.
26. C.M.Bowra, **Heroic Poetry,** London, 1966, p.94.
27. **Kandapuranam,** 1:13:27, 1:14:88, 91, 111, 1:51:1, 1:20, 148, 1:25:26, 1:26:18, 3:19:4, 3:21, 40, 3:12:111, 4:11:5, 4:12:68, 297, 303, 462, 4:13:110, 502, 507, 4:13:100, 218, 325, 502, 507, 4:5:216 etc.
28. **Ibid, 4:13:502.**
29. **Ibid,** 5:4:4.
30. **Ibid,** 4:13:448.
31. **Ibid,** 3:21:126.
32. **Ibid,** 1:14:119: 3:112: 22, 4:7:39. 6:24:266.
33. **Ibid,**K.VajravelMudaliyar, **SaivamumVainavmum,** Saivam, Madras, 1976, p.58.
34. K.A.Kailasapathy, **Palantamilar Valium Valipadum, Madras,** 1966, pp.16-17.

# ஔவையாரின் தனிப்பாடல்களில் முருகன்

முனைவர் த. கார்த்திகேயன்
தமிழ் உதவிப் பேராசிரியர்
அரசு கலைக்கல்லு'ரி
அரியலூர் - 621 713.

பெண்பாற் புலவருள் ஔவையார் குறிக்கத்தக்கவர் ஆவார். ஔவையார் என்னும் பெயரில் சங்ககாலம் தொட்டு பிற்காலம் வரை பலர் தோன்றிக் கருத்துடைய பாக்கள் பலவற்றைப் படைத்துள்ளனர். அவர்களுள் தனிப்பாடல் திரட்டில் இடம்பெற்றுள்ள ஔவையாரின் நான்கு பாடல்களை இக்கட்டுரை பொருண்மையாகக் கொண்டுஆய்கின்றது.

## தனிப்பாடல் திரட்டு

புலவர் சிவ.கன்னியப்பன் அவர்களின் தெளிவுரையுடன் முல்லை நிலையம் வெளியிட்டுள்ள தனிப்பாடல் திரட்டு என்னும் நூல் கற்போர் மனதை ஈர்க்கும் பலவகையான பாக்களால் அமைந்தது. நாற்பொருள் பயக்கும் தன்மைத்தான இதன் பாக்கள் பாடிய புலவர்களின் இயல்பையும் நுண்ணறிவையும் புலப்படுத்துவன. இந்நூலின் இயல்பை உரையாசிரியர் இந்நூலில் உள்ள பாக்கள் அனைத்தும் யமகமும் எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொள்ளும் தன்மையுடையன. உலக நடை செய்யுள் நடை என இரண்டும் அமைந்து கற்போருக்கு மனத்தளர்ச்சி ஏற்படாவண்ணம் புத்துணர்வும் மனத்தெம்பும் உண்டாக்கவேண்டிய அலங்காரங்கள் பல பாடல்களில் பூத்துப் பொலிந்திருக்கின்றன என்றுரைக்கின்றார். இந்நூலின் பாடல்கள் அகப்பொருள் புறப்பொருள் துறையைச் சார்ந்தமைவனவாகும். இந்நூலில் காளமேகப் புலவர், ஔவையார், திருவள்ளுவ நாயனார், கம்பர், ஒட்டக்கூத்தர் போன்ற பல சான்றோர்களின் பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

## ஔவையார் - அறிமுகம்

தனிப்பாடல் திரட்டு குறிப்பிடும் ஔவையாரின் வரலாற்றுச் செய்தி சுவையுடையது. இவர் சோழநாட்டு உறையூரில் பகவன் என்னும் ஞாலிதத்தன் என்பவருக்கும் ஆதிக்கும் பிறந்தவர். ஆனால் காவிரிப் பூம்பட்டினத்தில் பாணர் சேரியில் வளர்ந்தார். காரணம் பகவனாரும் ஆதியும் தமக்குப் பிறக்கும் பிள்ளைகளையெல்லாம் பிறக்குமிடத்திலேயே விட்டுவிட்டுச் செல்லவேண்டும் என்று அவர்களுக்குள் செய்துகொண்ட உறுதிமொழி ஆகும். இதனாலேயே ஔவையாரைப் பெற்றவுடன் தாய் சிசுவைப் பிரிந்து செல்ல ஏங்கி நிற்கையில்,

*இட்டமுடன் என்றலையில் இன்னபடி என்றெழுதி*
*விட்டசிவ னுஞ்செத்து விட்டானோ - முட்ட முட்டப்*

*பஞ்சமே யானாலும் பாரமவனுக் கன்னாய்*
*நெஞ்சமே யஞ்சாதே நீ*

என்ற பாடலைத் தாயை நோக்கிப் பிறந்த சிசு பாடியதாகக் கூறுவர். ஔவையார் பாணன் வீட்டிலும் அதிகமானூர் திருக்கோவலூரிலும் வளர்ந்துவந்தார். பின் ஔவையாரின் திருமண வயதில் பாணர் அவருக்கு மணமகனை நிச்சயித்துக் குலவழக்கப்படி ஔவையார் சேலை உடுத்தி வரும்போது கிழ உருவம் தாங்கிவர மணமகன் இக்கிழவி வேண்டாம் என நீங்கினான். அது முதல் அவர் தனியே காலங்கழித்தார் என்னும் செவிவழிச் செய்தியும் கூறப்படுகின்றது. சங்க கால ஔவையார் முதல் பிற்கால ஔவையார் வரை அனைவரும் ஒருவரே; நீண்ட காலம் வாழ்ந்தவர் என்னும் தொன்மச் செய்தியும் உண்டு. எனினும் இது பொருந்துவதன்று.

**ஔவையும் முருகனும்**

ஔவையார் ஒரு காட்டின் வழியே செல்கையில் முருகப்பெருமான் ஔவையாரிடம் தமிழ்க்கவிதை கேட்க விரும்பி மாடோட்டும் சிறுவனைப்போல் வேடந்தாங்கி நாவல் மரத்தின் மீதமர்ந்திருந்தார். அவ்வழியில் கோடைவெயிலுக்கு வருந்திய ஔவையார் அம்மர நிழலில் நின்று மரத்திலிருக்கும் சிறுவனிடம் 'பழம் போடப்பா' என்று கேட்டார். முருகன் 'கிழவீ! சுட்ட பழம் வேண்டுமோ, சுடாத பழம் வேண்டுமோ' என்று கேட்க ஔவையார் சுட்ட பழமே வேண்டுமெனச்சொன்னார். சிறுவன் கிளையை உலுக்க கனிகள் கீழே விழுந்தன. விழுந்தவற்றுள் மண் ஒட்டிக்கொள்ள ஔவையாரும் மணல் நீங்கப் பழத்தை ஊதினார். சிறுவன் ஏன் கிழவீ! பழம் அதிகம் சுடுகின்றதோ ஆற்றியுண் என்று கூற ஔவையாரும் வெட்கித் தோற்று

*கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாலி*
*இருங்கதலித் தண்டுக்கும் நாணும் - பெருங்கானில்*
*கார்எருமை மேய்க்கின்ற காளைக்குநான் தோற்றது*
*ஈரிரவு துஞ்சாது என்கண்*

என்ற பாடலின் வழித் தன்னிலையைக் கூறுகின்றார். கருங்காலி மரத்தை வெட்ட இயலாத துருவேறிய கோடரி வாழைத் தண்டையும் வெட்ட மழுங்கும். அதுபோல காட்டில் எருமையை மேய்ப்பவனிடம் தான் தோற்றதால் தன் கண்கள் இரு இரவுகளாக துஞ்சாமல் வருந்துவதாகக் கூறுகின்றார்.

**கொடியது - இனியது - பெரியது - அரியது**

முருகப்பெருமான் ஔவையிடம் கொடியது எது? இனியது எது? பெரியது எது? அரியது எது? என்று கேட்க அதற்கு ஔவையார் தம் காலச் சமுதாய நம்பிக்கையை வெளிப்படுத்துவதாய்ப் பாடல்வழி விளக்குவார். இங்கு முருகப் பெருமானுடன் நேர்நின்று உரையாடும் திறம்பெற்றவராக ஔவையார் சுட்டப்பெறுகின்றார். இது ஔவை என்ற சமூகப் புனைவுமீதும் தமிழோடு உறவுடையன் முருகன் என்ற கொள்கைமீதும் எழுந்த சிந்தனை வெளிப்பாடு எனலாம்.

வாழ்க்கையில் வறுமை கொடிது. இவ்வறுமையும் துய்க்கவேண்டிய இளமையில் இருத்தல் அதனைவிடக் கொடிது. தீர்க்க வியலாத கொடு நோய் அதனைவிடக் கொடிது. அன்பு இல்லாத மனைவி அதனைவிடக்கொடிது. அம்மனையாளிடம் வாங்கி உண்ணுதல் அதனினும் கொடுமையானது என்று ஆணாதிக்க வெளிப்பாட்டுடன் நெடிய வேலேந்திய முருகவேளிடம் மொழிகின்றார். இதனை

*கொடியது கேட்கின் நெடியவெவ் வேலோய்*
*கொடிது கொடிது வறுமை கொடிது;*
*அதனினும் கொடிது இளமையில் வறுமை;*
*அதனினும் கொடிது ஆற்றொணாக் கொடுநோய்;*
*அதனினும் கொடிது அன்புஇலாப் பெண்டிர்;*
*அதனினும் கொடிது இன்புற*
*அவர்கையில் உண்பதுதானே*

என்பதால் அறியலாம்.

இனியது எதுவெனில் பிறருடைய இடையூறு இல்லாத் தனிமை இனிது. முழுமுதற் கடவுள வணங்குதலும் அறிவுடையாருடன் சேர்ந்து இருத்தலும் அறிவுள்ளவரைக் கனவிலும் நனவிலும் காண்பதும் இனிதாகும் என்று வேலவனிடம் மொழிவதை

*இனியது கேட்கின் தனிநெடு வேலோய்!*
*இனிது இனிது ஏகாந்தம் இனிது;*
*அதனினும் இனிது ஆதியைத் தொழுதல்;*
*அதனினும் இனிது அறிவினர்ச் சேருதல்;*
*அதனினும் இனிது அறிவுள்ளாரைக்*
*கனவினும் நனவினும் காண்பது தானே!*

என்னும் பாவால் அறியலாம். பெரியது எதுவெனில் உலகமே பெரிது. இவ்வுலகமும் பிரம்மனுடைய படைப்பாகும். பிரம்மன் திருமாலின் உந்திக் கமலத்தில் உதித்தவன். திருமால் பாற்கடலில் பள்ளிகொண்டவன். கடலோ அகத்தியன் கையில் அடங்கியது. அகத்தியனோ குடத்தில் தோன்றியவர். குடம் மண்ணால் இயன்றது. மண்ணாகிய உலகம் ஆதிசேடனாகிய அரவத்தால் தாங்கப்பெறுவது. அரவமோ உமையம்மையின் சிறுவிரல் மோதிரம். உமையம்மையோ இறைவனின் ஒரு பாதியானவள். இறைவன் தொண்டருள்ளத்தில் தங்கி நிற்பவன். ஆகவே தொண்டர்தம் பெருமையே மிகப் பெரியது என்று தருக்க ரீதியில் ஔவை கூறுகின்றாள். இங்கு இறைவனுடைய பெருமையும் அடியாருடைய பெருமையும் மட்டுமே பாடுபொருளாகும். இதனைப்,

*பெரியது கேட்கின் எரிதவழ் வேலோய்!*
*பெரிது பெரிது புவனம் பெரிது;*
*புவனமோ நான்முகன் படைப்பு;*
*நான்முகன் கரியமால் உந்தியில் வந்தோன்;*

*கரிய மாலோ அலைகடல் துயின்றோன்;*
*அலைகடல், குறுமுனி அங்கையில் அடக்கம்;*
*குறுமுனியோ கலசத்தில் பிறந்தோன்;*
*கலசமோ அரவினுக்கு ஒருதலைப் பாரம்;*
*அரவோ உமையவள் சிறுவிரல் மோதிரம்;*
*உமையோ இறைவர் பாகத்து ஒடுக்கம்;*
*இறைவரோ தொண்டர் உள்ளத்து ஒடுக்கம்;*
*தொண்டர் தம்பெருமை சொல்லவும் பெரிதே!*

என்ற பாடல் உணர்த்தும். அரியது எதுவென்று கேட்ட முருகவேளிடம் ஔவையார் பின்வருமாறு கூறுகின்றார். மனிதப் பிறவி அரிதானதாகும். அப்பிறவியும் கூன் குருடு செவிடு பேடு ஆகியன நேராமல் பிறப்பது அரிதாகும். அவையில்லாமல் பிறந்தாலும் அறிவையும் கல்வியையும் விரும்புதல் தானம் தவம் செய்தல் அரிதானது. அப்படி அரிய வாழ்வை வாழ்வோரும் தேவர்களால் வரவேற்கப்படுவார் என்கிறார். இதனை உணர்த்தும் அவர் பாடல் வருமாறு:

*அரியது கேட்கின் வரிவடி வேலோய்*
*அரிது அரிது மானிடர் ஆதல் அரிது;*
*மானிடர் ஆயினும் கூன் குருடு செவிடு*
*பேடு நீங்கிப் பிறத்தல் அரிது.*
*பேடு நீங்கிப் பிறந்த காலையும்*
*ஞானமும் கல்வியும் நயத்தல் அரிது;*
*ஞானமும் கல்வியும் நயந்த காலையும்*
*தானமும் தவமும் தான்செயல் அரிது*
*தானமும் தவமும் தான்செய்வராயின்*
*வானவர் நாடு வழி திறந்திடுமே*

பிற்கால ஔவையார் கூறும் இக்கருத்தின் அடிப்படையில் அவர் சமய நம்பிக்கை மிகுந்தவராக வாழ்ந்தமையை அறியலாம். மேலும் அறிவுடையோரைச் சார்ந்திருத்தல் கனவிலும் நனவிலும் இனிது என்பதால் அவருக்கு அறிவுடையார் மீதிருந்த உயர்ந்த எண்ணம் புலப்படும். மேலும் வாழ்வில் ஞானமும் கல்வியும் விரும்ப வேண்டும். தானமும் தவமும் செய்யவேண்டும் என்று கூறுவதால் மனித வாழ்க்கை உயர் ஒழுக்கத்துடன் இறைநெறிக்கு உட்பட்ட்தாக அமையவேண்டும் என்பது ஔவையாரின் கருத்தாகும். இத்தனிப்பாடல்கள் ஔவையின் தமிழ் மீது முருகன் ஈர்ப்புடையவனாகச் சுட்டுகின்றன. இதன்மூலம் தமிழ்க் கடவுள் முருகன் என்னும் கருத்தியலைச் சார்ந்தனவாக இப்பாடல்கள் விளங்குகின்றன.

## பரிபாடலில் செவ்வேள் சிறப்புகளும் வழிபாட்டு முறைகளும்

முனைவர் கோ. குணசேகர்
தமிழ் உதவிப் பேராசிரியர்
அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி
விழுப்புரம் - 605 602

பரிபாடல் சங்க கால இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாகும். பரிபாடலின் தொகுப்பைப் பின்வரும் வெண்பாவின் துணைகொண்டு அறியலாம்.

*திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்*
*தொருபாட்டுக் காடுகாட் கொன்று - மருவினிய*
*வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப*
*செய்யபரி பாடற் றிறம்.*

பரிபாடலில் மொத்த பாடல்களின் எண்ணிக்கை 70. ஆனால் இவை முழுமையாகக் கிடைக்கவில்லை. கிடைக்கும் பாடல்கள் திருமால் - 6, செவ்வேள் - 8, வையை - 8. இவற்றுள் செவ்வேள் பாடல்கள் ஆய்வுக்கு உட்படுத்தப்படுகின்றன.

### செவ்வேட்கு வழங்கும் வேறுபெயர்கள்

*சேயோன் மேய மைவரை உலகமும்*

என்கிறது தொல்காப்பியம்.

*சீர்மிகு முருகன் தன்பரங் குன்றத்து,*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை* (அகம் 59).

செவ்வேள், முருகன், சேய், வேள், நெடுவேள், செல்வேள், நெடியோன், குமரன் மால்மருகன், வெறிகொண்டான், காஅய்கடவுள் எனப் பல பெயர்கள் கொண்டு வழிபட்டதைப் பரிபாடல் குறிப்பிடுகிறது. சிவந்த நிறமுடைய முருகனைச் செவ்வேள் என்று மக்கள் போற்றினர். மாறாக இளமையுடைய முருகனைச் சேய் என்றும் இயற்கை எழில் பொருந்தியவன் என்பதால் முருகு, முருகன், அழகு, அழகன் எனவும் போற்றப்படுகிறான். இதனை,

*உடையும் ஒலியலும் செய்யை மற்றுஆங்கே*
*படையும் பவழக்கொடி நிறம் கொள்ளும்*
*உருவும், உருவத் தீஒத்தி முகனும்*
*விரிகதிர் முற்றா வரிசுடர் ஒத்தி* (பரி. 19-97-100)

என்றும் பாடலடிகள் எடுத்துரைக்கின்றன. முருகன் காலைக் கதிரவனோடு ஒப்பிட்டு வணங்கத் தக்கவன் என்பதை,

*உலகம் உவப்பவலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு*
*ஓவள இமைக்கும் சேண்விளங்கு அவிரொளி* (திருமுரு.1-3)

என்ற பாடலடிகளும் குறிப்பிடுகின்றது. செவ்வேளின் பிறப்பு, உருவம், நிறம் முதலியன வேறுபாடுகள் மிக்கதாகவும் புதிதாகவும் இருப்பது பரிபாடல் பாடுபொருள் ஆகிறது.

*சிறப்பினுள் உயர்பாகலும்*
*பிறப்பினள் இழிபாகலும்*
*ஏனோர்நின் வலத்தினதே* (பரி. 5. 19.21.)

**செவ்வேளின் உருவப் புனைவு**

செவ்வேளின் உருவச் சிறப்பினைப் புலவர்கள் கடுவன் இளவெயினனார் (பாடல் -5), ஆசிரியன் நல்லந்துவனார் (பாடல்-8) குற்றம் பூதனார் (9, 18 என இருபாடல்கள்) கேசவனார் (பாடல் -14), நப்பண்ணனார் (பாடல் -19), நல்லச்சுதனார் (பாடல் -21), நல்லழுசியார் (பாடல் -17) போன்றோர் பாடியுள்ளனர். அவர்களுள் கடுவன் இளவெயினனார் செவ்வேள் மேனியின் நிறம் காலை எழும் இளங்கதிரவன், நிற அழகை ஒத்திருந்தது என்பர். இதனை,

*ஞாயிற்றோர் நிறத்தகை* (பரி. 5 - 12)

எனவரும் அடி சுட்டிக்காட்டுகிறது. செவ்வேள் ஆறுதலைகளையும் இளங்கதிர் மண்டிலம் போன்ற முகத்தினையும் மத்தளத்தைப் போன்ற பன்னிரண்டு தோள்களையும் பன்னிரண்டு கைகளையும் உடையவன் என்பதை,

*மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத் தோள்* (பரி. 5. 10)
*முகனும் விரிகதிர் முற்றா விரிசுடர் ஒத்து* (பரி. 19. 100)

என்னும் பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது. செவ்வேளின் மார்பு மலை போன்ற ஆற்றலும் அகலமும் கொண்டது. வாளால் வெட்டப்பெற்ற வெற்றித் தழும்புகள் கொண்டது. சந்தனம் முதலிய நறுமணம் கமழும் மலர்மாலையும் முத்துமாலையும் அணிந்ததும் ஆகும் எனப் பரிபாடல் குறிப்பிடுகிறது.

தீக்கடவுள், இந்திரன், இயமன் எனப் பிறர் கொடுத்த படைக்கருவிகள் பன்னிரண்டையும் தம் பன்னிரு கைகளிலும் ஏந்தியவன் என்பதைக் கடுவன் இளவெயினனார்,

*மறியும் மஞ்ஞையும் வாரணச் சேவலும்*
*பொறிவரிச் சாபமும் மரனும் வாளும்*
*செறியிலை ஈட்டியும் குடாரியும் கணிச்சியும்*
*தெறுகதிர்க் கனலியும் மாலையும் கைக்கொண்டு*
*வேறுவேறு உருவின இவ்வாறு இரு கைக் கொண்டு*
(பரி 5 - 64 - 68)

என்றவாறு குறிப்பிடுகிறார். செவ்வேளின் படைக்கலன்களான மயில், கோழி, மறி, வில், மான், வாள் ஈட்டி, கோடரி, மழு, கனல், மாலை, மணி ஆகியவை அசுரர்களைக் கொல்வதற்காக உயர்த்திய வேல் மேகத்தின் இடியோசை போலவும், முரசு அதிர்வதைப் போலவும் அதன் மின்னல் ஒளி போலவும் திகழ்ந்தது.

**செவ்வேளின் வீரமும் வலிமையும்**

செவ்வேள் வீரம் மிக்க கடவுளாகவும் போர்க் கடவுளாகவும் விளங்குகின்றான். தாமரை மலரில் குழந்தையாகத் தோன்றிய அந்நாளிலேயே வச்சிரப்படை கொண்டு வந்த இந்திரனுடன் போரிட்டு வெற்றி கொண்டான். இதனை,

*பிறந்த ஞான்றே நின்னை உட்கிச்*
*சிறந்தோர் அஞ்சிய சீருடையோய்* (பரி. 14.25-26)

என்று கேசவனார் குறிப்பிடுவதன்மூலம் அறியலாம். ஆயுதம் எதுவுமின்றித் தன் கைகளைக் கொண்டே பகைவரை ஓடச் செய்து வெற்றி கொண்டான் என்பதை,

*ஓங்கு வீறல் சேஎய்*
*ஆரா உடம்பின் நீஅமர்ந்து விளையாடிய*
*போரால் வறுங்கைக்குப் புரந்தரன் உடைய* (பரி. 5. 54 - 56)

என்னும் பாடலடிகள் வழி அறியலாம்.

**திருப்பரங்குன்றின் சிறப்பு**

மதுரை மாநகரின் தென்மேற்கில் எட்டு கி.மீ. தொலைவில் திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. இத்திருப்பரங்குன்றம் விண்ணுலகமே மண்ணுலகத்தில் உதிர்ந்தது போன்ற காட்சி அமைப்புடையது. இங்கு விண்ணுலகத்தவர் திருமால், சிவபெருமான், நான்முகன், தேவர்கள், அசுரர்கள், முனிவர்கள் மற்றும் எல்லாத் தெய்வங்களும் வந்து இருந்தனர் என்ற குறிப்பை மருத்துவன் நல்லச்சுதனாரின்

*மண்மிசை அவிழ்துழாய் மலர்தரு செல்வத்துப்*
*புள்மிசைக் கொடியோனும் புங்கவும் ஊர்வோனும்*
*மலர்மிசை முதல்வனும் மற்றவன் இடைத்தோன்றி*
*உலகிருள் அகற்றிய பதின்மரும் இருவரும்*
*மருந்துரை இருவரும் திருந்துநூல் எண்மரும்*
*ஆதிரை முதல்வனிற் கிளந்த*
*நாதர்பன் னொருவரும் நன்திசை காப்போரும்*
*யாவரும் பிறரும் அமரரும் அவுணரும்*
*மேவரு முதுமொழி விழுத்தவ முதல்வரும்*
*பற்றா கின்றுநின் காரணமாகப்* (பரி. 8. 1-10)

என்னும் பாடல் மூலம் அறியலாம், மேலும்,

*கனவில் தொட்டது கைபிழை யாகாது*
*நனவில் சேஎப்ப, நின் நளிபுனல் வையை*
*வருபுனல் அணிகென வரங்கொள் வோரும்*
*கருவயிறு உறுகஎனக் கடம்படு வோரும்*
*செய்பொருள் வாய்க்கஎனச் செவிசார்த்து வோரும்*
*ஐஅமர் அடுகஎன அருச்சிப் போரும்* (பரி- 8 : 103-108)

என்னும் பாடலடிகளின் வழி திருப்பரங்குன்ற செவ்வேளைப் போற்றி வணங்கும் மங்கையர், தாம் விரும்பிய தலைவரை மணக்கவும், பிள்ளைபேறு எய்தவும், பொருள்வயிற் பிரிந்த கணவர் பொருளீட்டி நலமுடன் திரும்பவும் தன் கணவர் மேற்கொண்டதன் போரில் வெற்றி பெறவும் உள்ளமுருக வேண்டினர் என்பதுவும் நோக்கத்தக்கது.

**வழிபாட்டு நெறி**

திருப்பரங்குன்றம் சென்றோர் முருகனையும் அவன் உறையும் மலையினையும் அவனுக்குரிய கடம்ப மரத்தையும் பிணிமுகம் என்னும் ஊர்தியையும் வழிபட்டனர். இறையன்பர்கள் எழுப்பிய நறும்புகை கதிர்மண்டிலத்தை மறைத்தது. யாழ், முழவு முதலிய இயங்களின் துணையுடன் தெய்வப் பண் பாடினர். இறைவழிபாட்டின்போது, வழிபாட்டிற்குச் சந்தனம், நறும்புகை, நந்தாவிளங்கு, மலர்கள், புத்தாடை முழவு, மணி, கயிறு, மயில், இலை, கடாரி, யானை, குழை, வேல் முதுலியன கொண்டு சென்றனர் செவ்வேளை வணங்க நல்வாழ்க்கை பெறலாம் என நம்பினர். இதனைத்,

*தேம்படு மலர்குழை, பூந்துகில், வடிமணி*
*ஏந்திலை, சுமந்து சாந்தம் விரைஇ.*
*விடைஅரை அசைத்த வேலன் கடிமரம்*
*பரவினர் உரையயாடு பண்ணிய இசையினர்*
*விரிமலர் மதுவின் மரநனை குன்றத்துக்*
*கோல்எரி, கொளைநறை, புகை, கொடி ஒருங்குஎழ,* (பரி. 17. 1-6)

என்னும் பாடலின் வழி அறியலாம்.

**வேண்டுதல் நிறைவேற்றும் கடவுள்**

திருப்பரங்குன்றம் சென்ற மகளிருள் சிலர் செவ்வேளிடம் யாம் எம்காதலரோடு கைப்பிடித்து அளவளாவி மகிழ்ந்ததாகக் கண்ட கனவு பொய்க்காமல் அவர் நனவில் வந்து நீராடும் பொருட்டு நினக்குரிய வையையாற்று புதுவெள்ளத்தைப் பெறுக என்று வரம் வேண்டுவர். மகளிர் சிலர், 'எம்வயிறு கருவுறுக' என்று வேண்டிப் பல பொருள்களைக் காணிக்கையாகச் செலுத்துவர். வேறுசிலர் எம் கணவருக்கு மிகுந்தபொருள் வாய்ப்பதாக என்று வேண்டுவர். மேலும் வேறுசிலர் 'எம்கணவர் மேற்கொண்ட போரில் வெற்றி பெறுக' என்றும் வேண்டுவர்.

உயிர்கள் வருந்தும்படி இல்லாமல் போனாலும் திருப்பரங்குன்றத்து அருவியானது நீர் மிக்கிருக்கும் தன்மை பெறுவதாகச் சிலர் வேண்டிய தன்மையை,

*........... யாவும் இரப்பவை,*
*பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்*
*அருளும் அன்பும் அறனும் மூன்றும்*
*உருளிணர்க் கடம்பின் ஒலிதா ரோயே* (பரி. 5. 78.80)

எனவரும் பரிபாடலடிகள் காட்டுகின்றன. செவ்வேள் வழிபாட்டில் வேண்டுதல் பயனாக வேண்டியவை பெறுவர் என்பதைப் பரிபாடல் செவ்வேள் பாடல்களின் வழி அறியமுடிகிறது.

முடிவுரை

தொல்காப்பியர் காலத்தில் குறிஞ்சி நிலத் தெய்வமாக இருந்த ***சேயோன்*** சங்க காலந்தொட்டு நிலங்கடந்த பெருங்கடவுளாக எல்லா நிலத்தினராலும் போற்றப் பெற்றார். அதன்வழி பரிபாடல் புலவர்கள் செவ்வேளின் வேறுபெயர்கள், உருவப் புனைவுகள், ஆடை அணிகலன்கள், தேவர்களைப் பாதுகாத்தல், அசுரர்களை? அழித்தல், பக்தர் வேண்டுதல், வழிபாட்டு நெறி, திருப்பரங்குன்றத்தின் சிறப்பு, இயற்கை எழில் சூழ் அழகு, தலைவன் தலைவி இடையே நடைபெற்ற காதல் உவகைகள் போன்றவாறான நிகழ்வுகளைச் சுவைபடச் சித்திரித்துள்ளனர்.

# திருமுருகாற்றுப்படை உரைகள்-ஓர் ஒப்பீடு

முனைவர் மா. கோவிந்தராசு,
தமிழ் இணைப் பேராசிரியர்,
மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி,
தஞ்சாவூர்-613005.

**நூல் பொருள்**

கடைச்சங்கப் புலவராகிய மதுரைக் கணக்காயனார் மகனார் நக்கீரனார் திருமுருகாற்றுப்படை, நெடுநல்வாடை, நற்றிணையில் ஏழு பாடல்கள், குறுந்தொகையில் எட்டுப் பாடல்கள், புறநானூற்றில் மூன்று பாடல்கள், திருவள்ளுவ மாலையில் ஒரு வெண்பா, இறையனார் களவியல் உரை ஆகியவற்றைப் படைத்துள்ளார். திருமுருகாற்றுப்படை நூல் பத்துப்பாட்டு நூல்களுக்குக் கடவுள் வாழ்த்து போல அமைந்துள்ளது. இந்நூலின் பாட்டுடைத்தலைவர் திருமுருகப்பெருமான் ஆவார். இவர் சங்க காலத்தில் குறிஞ்சிநிலக் கடவுளாகவும் பிற்காலத்தில் தமிழ்க் கடவுளாகவும் குறிப்பிடப்படுகின்றார்.

*"சேயோன் மேய மைவரை உலகமும்"* (தொல்.பொருள்.5:2)

என்கிறார் தொல்காப்பியர்.

**பாடுபொருள்**

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், பழநி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்சோலை ஆகிய அறுபடை வீடுகளிலும் வீற்றிருக்கும் திருமுருகப்பெருமானின் அருள்திறம் நூல் முழுமையும் பேசப்படுகின்றது. "கந்தழியைப் பெற்றானொருவன் அதனைப் பெறாதான் ஒருவனுக்குப் பெறுமாறு கூறி அவனை வழிப்படுத்துக் கூறுவான் என்பது பற்றி நக்கீரனார் இத்திருமுருகாற்றுப்படையைப் பாடியுள்ளார்" என்று நச்சினார்க்கினியர் உரைக்கின்றார். கந்தழியாவது ஒரு பற்றுமற்று அருவாய்த் தானே நிற்கும் தத்துவம் கடந்த பொருள். இறைவன் திருவடியே உலக உயிரினங்களுக்கு வீடாக இருக்கின்றது. இதனைத்,

*"...... ....... தென்னன் பெருந்துறையான்*
*காட்டா தனவெல்லாம் காட்டிச் சிவங்காட்டித்*
*தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன் காட்டி"*
(திருவாசகம்)

என்னும் மாணிக்கவாசகரின் திருவாசகத்தால் உணர முடிகிறது.

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவனடி சேரா தார்"* (திருக்குறள்,10)

என்று திருவள்ளுவர் இறைவன் திருவடியே வீடுபேறு என்பதை உணர்த்துகின்றார்.

**உரைகள்**

இக்காலத்தில் இந்நூலுக்குப் பல உரைகள் தோன்றியுள்ளன. எனினும் இடைக்காலத்தில் இதற்கு ஐந்து உரைகள் காணப்பெறுகின்றன.

1. கவிப்பெருமாள் உரை. (11-ஆம் நூற்றாண்டு)
2. பழைய உரை ( 13-ஆம் நூற்றாண்டு)
3. பரிமேலழகர் உரை ( 13- ஆம் நூற்றாண்டு)
4. நச்சினார்க்கினியர் உரை (14-ஆம் நூற்றாண்டு)
5. பரிதியார் உரை ( 15-ஆம் நூற்றாண்டு)

இவர்களின் உரைச் சிறப்புகள் ஒப்பு நோக்கி இவண் ஆராயப்பெறுகின்றன. திருமுருகப்பெருமானின் அருள்திறத்தினை நக்கீரர் எடுத்தியம்புகின்றார். நக்கீரரின் பாடலில் வரும் சொல் மற்றும் சொற்றொடர்களுக்கு விளக்கம் அளிக்கும்போது உரையாசிரியர்களுக்குள் ஒற்றுமையும் வேற்றுமையும் காணப்பெறுகின்றன. இங்கு ஒற்றுமைப் பகுதியை விடுத்து, வேற்றுமைப் பகுதியை மட்டும் இந்தக் கட்டுரையில் ஒப்பிட்டுக் காணலாம்.

**1. வலனேர்பு**

"உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு" (திருமுரு.01) எனத் திருமுருகாற்றுப்படை நூல் "உலகம்" என்னும் மங்கலச் சொல்லால் தொடங்குகின்றது. இத்தொடரில் வரும் "வலனேர்பு" என்னும் சொல்லினை "வலன்ஏர்பு" எனப் பிரித்துக் கவிப்பெருமாளும் பரிமேலழகரும் நச்சினார்க்கினியரும் பொருள் கொள்கின்றனர். இவர்கள் "மேரு மலையை வலமாக வருகின்ற ஞாயிறு" எனப் பொருள் கூறுகின்றனர். ஆனால் பழைய உரையாசிரியர் "வலன்ஏர்பு" என்று பிரித்து "யாவர்க்கும் நேராகச் சுழலும் ஞாயிறு" என்று பொருள் உரைக்கின்றார். இவருடைய கருத்து, மக்களின் பார்வையில் ஞாயிறு நேராகச் செல்வதுபோல் தெரியும் மாயையாகும். ஆனால் கவிப்பெருமாள், நச்சினார்க்கினியர் "வலமாகச் சுழலும் ஞாயிறு" என்பதில் உண்மை உள்ளது. ஞாயிறு தன்னைத்தானே வலமாகச் சுற்றி வருகின்றது என்பது அறிவியல் உண்மையாகும்.

**2. பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு**

"பலர்புகழ் ஞாயிறு கடற்கண் டாஅங்கு" (திருமுரு.02) எனும் அடிக்கு, "எல்லாச் சமயத்தாரும் புகழும் ஞாயிற்றைக் கடலிடத்தே கண்டாற்போல", என நச்சினார்க்கினியரும் பரிமேலழகரும் பரிதியாரும் பொருள் உரைக்கின்றனர். ஆனால் கவிப்பெருமாளும் பழைய உரையாசிரியரும் "தனது ஒளியாற் காட்சியின் பயன்கொள்வார் பலரும் புகழும் ஞாயிறு" எனப் பொருள் கூறுகின்றனர். இங்குக் கவிப்பெருமாள் உரையே சிறந்தது. சமய நெறியைப் பின்பற்றாதவரும் ஞாயிற்றினை வணங்குவதால், "பலரும் புகழும் ஞாயிறு" என்று உரைத்ததே சாலப் பொருந்தும்.

"கடற்கண்டாங்கு"-இது வினையெச்சயுவமம். "விரவியும் வருஉம் மரபின என்ப" (தொல்.பொருள்.) என்பதனால் தொழிலுவமமும் வண்ண உவமமும் பற்றி வந்தது என்கிறார் நச்சினார்க்கினியர். ஏனைய உரையாசிரியர்கள் வண்ண உவமமாகக் கூறுகின்றனர்.

3. மறுவில் கற்பு

"மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்" (திருமுரு.06) எனும் அடியில் மறுவில் கற்பு என்பதற்குப் பழைய உரையாசிரியர், பரிமேலழகர், கவிப்பெருமாள் ஆகிய மூவரும் "குற்றமில்லாத கற்பு" எனப் பொருள் உரைக்கின்றனர். ஆனால் நச்சினார்க்கினியர் மட்டும் "மறக் கற்பில்லாத அறக் கற்பு" என்கிறார்.

"இறையன்பு மீதூர்ந்த அடியவர்களின் செயலை வல்வினை, மெல்வினை என அருள் நூல்கள் பாகுபடுத்திப் பேசும். அதனைப் போன்றே தன் கணவனைத் தெய்வமென்றே ஒழுகும் மனையற மகளிரின் கற்பையும் அறக் கற்பு, மறக் கற்பு என இலக்கியப் பேராசிரியர்கள் பாகுபடுத்திப் பேசுவர். கண்ணகிப் பெருமாட்டியார் தம் மார்பைத் திருகி எறிந்து மதுரையை எரியூட்டிய செயல் போல்வன மறக் கற்பு என்பர். தற்காத்துத் தற்கொண்டான் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்வில்லாது வாழ்ந்து தம் கணவன் உயிர் துறப்பத் தம் உயிரும் தாமே கழியுமாறு அமையும் கற்புடைமை அறக் கற்பாகும்." (கு.சுந்தரமூர்த்தி,1987:25) இவ்வகையில், நச்சினார்க்கினியர் உரை பொருத்தமாகத் தெரிகின்றது.

4. மந்தி

*"சூரர மகளிர் ஆடும் சோலை*
*மந்தியும் அறியா மரம்பயில் அடுக்கத்து"* (திருமுரு.41-42)

இவ்வடிகளில் வரும் "மந்தி" என்னும் சொல்லுக்கு நச்சினார்க்கினியரும் கவிப்பெருமாளும் "குரங்கு" என்று பொருள் கூறுகின்றனர். ஆனால் பழைய உரையாசிரியரும் பரிமேலழகரும் ஆதித்தன் (ஞாயிறு) என்று பொருள் கூறுகின்றனர். பரிதியார் ஏதும் கூறாமல் விட்டுவிட்டார்.

*மரமேறுதற் றொழிலிற் சிறப்புடைய மந்திகளும் மரங்களினீட்டத்தால் ஏறியறியாத மரம் நெருங்கின பக்கமலையிடத்து நின்ற"*
(நச்சினார்க்கினியர்)

"அருக்கனும் அறியாத மரங்கள் நெருங்கிய சில மலையிடத்து"
(பரிமேலழகர்),

*"ஆதித்தனையும் காணாத மரம் நெருங்கின பக்க வரையிடத்து"*
(பழைய உரையாசிரியர்),

"மந்தி" என்பதற்குக் "குரங்கு" எனில் மரங்களின் உயர மேம்பாடு புலப்படும்; "ஞாயிறு" எனின் மரங்கள் ஒன்றோடொன்று செறிந்து நிற்கும்

செறிவு மேம்பாடு புலப்படும். இவற்றுள் ஞாயிறு என்னும் பொருளே இலக்கிய வழக்கிற்குச் சாலப் பொருந்தும். இக்கருத்துடன்

*"வெயில் நுழைபு அறியாக் குயில் நுழை பொதும்பர்"*
(பெரும்பாணாற்றுப்படை, 374)

எனவும்

"வெயிலொளி அறியாத விரிமலர்த் தண்காவில்" (கலித்தொகை, 30)

எனவும் வரும் இலக்கியக் கருத்துக்கள் ஒப்புநோக்கத் தக்கன ஆகும்.

**5. படுமணி**

*"பாடுஇன் படுமணி இரட்ட ஒருகை"* (திருமுரு.115)

இத்தொடரில் வரும் "படுமணி" என்னும் சீருக்கு நச்சினார்க்கினியர் "தாழ்கின்ற மணி" என்றும், பழைய உரையாசிரியர் "பெருமையும் இசையினிமையும் உடைய வீரமணி" என்றும், பரிமேலழகரும் கவிப்பெருமாளும் "ஓசை பொருந்திய மணி" என்றும் பொருள் உரைக்கின்றனர். இவற்றுள் நச்சினார்க்கினியர் உரை பொருந்தாது.

**6. நாற்பெருந்தெய்வம்**

*"நாற்பெருந் தெய்வத்து நல்நகர் நிலைஇய"* (திருமுரு.160)

இந்த அடியில் வரும் "நாற்பெருந் தெய்வம்" என்னும் தொடர்க்கு நச்சினார்க்கினியரும் பரிதியாரும் "இந்திரன், யமன், வருணன், சோமன் "என்னும் தெய்வங்கள் என்று பொருள் உரைக்கின்றனர். பழைய உரையாசிரியர் "நாலாகிய பெருந்திசைகளை உடைய நன்றாகிய ஊர்கள்" என உரைக்கின்றார். பரிமேலழகர், "நாற்பெருந் தெய்வம் என்றார். அந்தணர் தெய்வம், அரையர் தெய்வம், வைசியர் தெய்வம் , வேளாண் தெய்வம் என்பதைச் சிலப்பதிகாரத்துங் கண்டு கொள்க" என்று மொழிகின்றார். கவிப்பெருமாள் "நால்வகை வருணத்தார்க்கும் உரிய பூதம்" என்கிறார். இதற்கு "நாற்றிசைக் கண்ணும் வீற்றிருந்து அருளும் தெய்வம்" என்னும் உரையே பொருத்தமாக இருக்கும்.

**7. பிணிமுகம்**

*"ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி"* (திருமுரு.247)

இந்தத் தொடர்க்கு நச்சினார்க்கினியர், "கெடாத வலியினையுடைய பிணிமுகம் என்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி" என்று உரை கூறுகின்றார். இங்குப் "பிணிமுகம்" என்னும் தொடர்க்குக் கவிப்பெருமாளும் பழைய உரையாசிரியரும் "மயில்" என உரைக்கின்றனர். பரிமேலழகர் "யானை" என்கிறார். மேலும் இவர் "பிணிமுகம் என்பது பிள்ளையார் பவனி வரும் யானையின் பெயர்; இதனைச் "சேயுயர் பிணிமுகமூர்ந்த" எனப் பரிபாடலிலும் "பிணிமுக மஞ்ஞை செருமுகத்தேந்திய" எனக் கல்லாடத்தும் கூறலானும் அறிக" என்கிறார்.

8. விழுமிய பெறலரும் பரிசில்

*"..... ..... ..... விழுமிய*
*பெறலரும் பரிசில் நல்குமதி"* (திருமுரு.294-295)

திருமுருகாற்றுப்படைக்குப் "புலவராற்றுப்படை" என்னும் பெயருண்டு. இந்நூலில் புலவர் பெற்ற பரிசில் "விழுமிய பெறலரும் பரிசில்" ஆகும். இந்தத் தொடர்க்கு நச்சினார்க்கினியர், "சீரிய பிறராற் பெறுதற்கரிய வீடுபேற்றினைத் தருவன்" என்று உரைக்கின்றார். இவர் கருத்தினை ஏற்றுப் பழைய உரையாசிரியரும் கவிப்பெருமாளும் உரை கூறுகின்றனர். பரிமேலழகர், "அறிவுகள் பலவுடனே மேம்பட்ட பெறுதற்கரிய பரிசில்" என்கிறார். பரிதியார், "பெறுதற்கரிதாகிய பொருள்" என்கிறார். இங்கே முருகனிடத்துக் கிடைக்கும் பெறுதற்கரிய சிறந்த பரிசில் வீடுபேறு என்பதே மிகச் சரியானதாகும்.

9. கருத்துரை

"உச்சிமேற் புலவர் கொள் நச்சினார்க்கினியர்" தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தாமணி எனப் பல நூல்களுக்கு உரை எழுதியுள்ளார்; இலக்கணத்தில் இளம்பூரணர் உரையைப் பல இடங்களில் மறுத்துள்ளார்; வடமொழிப் புலமையும் உடையவர். இந்தச் சிறப்புக்கு உரியவர் உரை திருமுருகாற்றுப்படையிலும் சிறப்பாகக் காணப்பெறுகின்றது. இருப்பினும் "மந்தி" (42) முதலான இடங்களில் இவர் உரை அவ்வளவாகப் பொருந்தவில்லை. இவர் கூறும் இலக்கணக் குறிப்புகள் சிறப்பாக உள்ளன.

நிறைவுரை

தொல்காப்பிய உரைகளுக்குள் வேறுபாடுகள் இருக்கின்றன. இவற்றைக் கண்ட பிற்கால இலக்கணிகள் (வைத்தியநாத தேசிகர், வீரமாமுனிவர்...) தம் நூலுக்குத் தாமே உரையையும் எழுதியுள்ளனர். திருமுருகாற்றுப்படை நூலுக்குப் பலர் உரை எழுதி இருப்பினும், இக்கட்டுரையில் முன்னர்க் குறிப்பிட்ட ஐவர் உரைகளே சிறப்பானவையாகும். இவற்றில் நச்சினார்க்கினியர் உரை பலரும் அறிந்ததாகும். பிறர் உரைகள் பயன்பாட்டில் குறைவாகவே காணப் பெறுகின்றன. பெயர் தெரியாத உரையாசிரியர் உரை பல இடங்களில் சிறப்பாக உள்ளது. கவிப்பெருமாள் உரையும் சில இடங்களில் தனித்தன்மை வாய்ந்ததாக இருக்கின்றது. இந்த உரையாசிரியர்கள் தங்கள் உரைகளில் பிற உரையாசிரியர்களின் (பெயர்களைக் குறிப்பிடாமல்) உரைகளை மறுத்துள்ளனர். செய்யுளில் வரும் சொல் மற்றும் சொற்றொடர்கள் சூழலுக்கு ஏற்றாற்போல் பொருள் வேறுபடுகின்றன. அவற்றை உணர்ந்து உரை எழுதும் உரையாசிரியர்கள் நுண்மாண் நுழைபுலம் மிக்கவர்கள் ஆவர். உரையாசிரியர்களின் உரை விளக்கம் மூல பாடத்திலேயே பாட வேறுபாடுகளைக் காட்டுகின்றன. மூல பாடத்தை முழுமையாகப் புரிந்துகொள்ள உரைகள் வழிகாட்டிகளாகத் திகழ்கின்றன.

# முருகனின் இளமைப் பெயர்களும் வழிபாடுகளும்

சு. சங்கர்,
முனைவர்ப்பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

முருகு என்பது கட்டிளமை என்னும் பொருள் பயத்தலில் அதனை என்றும் உடைய குமாரன் முருகன் எனப்பட்டான். இவ்விளமைப் பிள்ளை நீர்மை குறிக்குமாற்றேன் முருகன் என்பது சிவசுதன் என்னும் பொருட்டு நறுமணம் கூடிய தெய்வத்தன்மையும் அதன் அழகும் முருகன் அத்தன்மை உடையோன் எனப் பலவாறு அமையும்.

**முருகவேள் வணக்கம்**

*முக்காண போற்றி முதல்வா போற்றி*
*முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி*
*தக்கணா போற்றி தருமா போற்றி*
*தத்துவனெ போற்றி என் தாதாய் போற்றி"*
(திருவதிகை வீட்டானம் திருத்தாண்டகம்.10)

இந்த உலகத்திற்கு முதலாகவும் தன்னைப் பயந்தவனுக்கு உயர்ந்தவனாகவும் முருகவேள் வணக்கம் அமைந்துள்ளது.

**முருகன்**

முருகு என்பது இளமை, மணம், அழகு, தேன், திருவிழா என்ற பல பொருள்களைத் தரும் தமிழ்ச் சொல்லாக அமைந்தது. இளமை உடையவன், தெய்வ மணம் கமழும் திருமேனியை உடையவன். சிவமணம் கமழ்பவன், பேரழகுடையவன், தன்னை அன்புடன் மனம் உருகி நினைத்து வழிபடுவார்க்குப் பேரின்பமாகிய ஆனந்தத்தேனை எடுத்து அருள்பவன். பெரும் திருவிழாக்கள் எடுத்துப் பூசிக்கத் தகுந்த தேவதேவன் என்ற ஐந்து பொருள்களைக் கொண்டது இந்த திருநாமம். "அருள்பெறல் மரபில் பெரும் பெயர் முருகா" என்ற நக்கீரர், முருகன் என்னும் திருநாமத்தின் சிறப்பை நமக்கு எடுத்துக்காட்டுகிறார். (திருமுருகாற்றுப்படை. 269) மேலும், முருகன் என்னும் திருநாமத்தைத் தம் மனத்துட்கொண்டு "மணம்கமழ் தெய்வத்து இளநலம் காட்டி" எனவும் அருளிச் செய்கின்றார். 1. மணம், 2. விழாக்கள் எடுத்து வணங்கப்பெறும் தெய்வத்தன்மை, 3. இளமை, 4. நன்மையைத் தருவது எல்லா நன்மைகளிலும் சிறந்ததாகிய பேரானந்தத்ததை அருளுவது ஆகிய நான்கு பண்புகளையும் இது உணர்ததும் தன்மையினைக் காண்கிறோம். திருப்பெயர்களுள் சுப்ரமணியம், குமாரபிரான், முருகன், சிவபாலன் என்பன "மறைந்துள்ள பரசிவப்பொருளின்று வெளிப்பட்டு

மிளிர்வது என்னும் பொருளைப் பயக்கும்." எனத் திரு. குமரகுருதாச சுவாமிகள் விளக்கம் தருகிறார்.

**என்றும் இளமைப் பெயர்கள்**

மொழிக்குத் துணை முருகா என்னும் நாமங்கள் என்று அருணகிரிநாதர் பாடுகிறார். (கந்தன் அலங்காரம் 70) முருகன் என்ற தமிழ் திருநாமத்துக்கு ஒத்த பொருள் கொண்ட பல வடமொழித் திருநாமங்கள் உண்டு. அவை,

ஓம் குமாராய நம- என்னும் இளையோன்
ஓம் அபிராமாய நம - விரும்பத்தக்க அழகான உருவத்தை உடையவன்
ஓம் கோமளாங்காய நம - அழகான உறுப்புகளையுடையவன்.
ஓம் ஆனந்தாய நம - ஆனந்தமே உருவாக உடையோன்
ஓம் ஆனந்தானெ நம - களிப்பை உடையோன்
ஓம் ஜகதானந்த ஜநகாய நம - உலகுக்கு ஆனந்தம் அளிப்பவன்.
ஓம் உத்வப்ரியாய நம - திருவிழாக்களில் விருப்பம் உடையவன்.

போன்ற சுப்பிரமணிய சகஸ்ர நாணியிற் காணப்பெறும் நாமங்கள் ஆகும்.

**1. வேற்குமரன்**

குமாரன் இளம்பிராயம் உடையவன் பதினாறு வயதுடையவன் இளையோன் என்றதற்குக் காட்டிய வடமொழி மந்திரங்கள் கொண்டு குமாரன் என்ற சொல் "பிரமசாரி" என்ற பொருளும் தரும். குமரக் கடவுளின் தேவிகள் இருவரும் கன்னிகள் என்பதை நாம் அறிதல் வேண்டும். குமாரன் என்ற திருநாமம் ஆணவ மலத்தைப் போக்குபவன் எனப் பொருள் தருவதால் அத்திருநாமத்தால் முருகப்பெருமானை அன்புடன் துதிப்பவர்களது ஆணவ மலப்பிணியை நீக்கி அவர்களைப் பேரானந்தக் கடலில் அழுந்தும்படி அவர் செய்வார்.

**2. வேல்**

வெல்வது வேல் யாவற்றையும் வெல்லும் தன்மையுடையது. குமரன் கைவெல் பகையை வெல்லும் வேல். முருகப் பெருமான் கையில் வேல் இருப்பது அந்த இடத்தில் பரிபூரண ஞானம் விளங்குவதைக் காட்டுவது. மனிதனிடம் அறியாமை, காமம், வெகுளி, மயக்கம் போன்ற தீய குணங்களைப் போக்குவது வேல்.

**3. குமரன் பெயர்**

முருகப் பெருமானுக்குப் பதினாறு மூர்த்தங்கள் உண்டு. அவை, ஞானசத்திரர், கந்தர், தேவசேனாபதி, சுப்ரமணியர், கஜாருடர், சரவணபவர், கார்த்திகேயர், குமாரர், சண்முகர், தாரகாந்தர், சேனாபதி, பிரமசாத்தர், கல்யாணர், பாலசுப்பிரமணியர் கிரௌஞ்சத்துவஞ்சர், மயூரநவாகனர் என்பனவாகும்.

**4. சாமிநாதை**

ஸ்வதாமி என்ற வடமொழிச் சொல் தமிழில் சாமி என்றாயிற்று. ஸ்வம் - சம்பத்து, செல்வங்களில் எல்லாவற்றிலும் சிறந்த செல்வம்

திருவருட்செல்வம் சிவஞானம் எனவும் ஞானம் வழங்கும் சாமி இருக்கும் மலையும் சாமிமலை எனப் பெயர்பெற்றது.

**5. மயில் ஏறவன்**

மயிலை ஏறுதல் உடையவன். மயிலை ஊர்தியாகக் கொண்டவன். முருகப் பெருமான் சூரபன்மனை வேலால் அழித்த போது அவன் உடல் இரு கூறாகி ஒன்று மயிலும் மற்றொன்று சேவலாகவும் கொடியாகவும் கொண்டான் என்பது கந்தபுராணம் கூறும் வரலாறு. ஞான சக்தியால் இரு கூறாகப் போழ்ந்த போது ஒரு கூற்றின் மயில் என வந்த மனவலிமையைத் தூய மாயையின் அதோ பாகத்தில் அடக்கி ஊர்தி எனக் கொண்டு அதன் மீது அமர்ந்தான் முருகன்.

**6. மலை மகன் மதலை**

பார்வதி குமாரன் எனச் சுப்பிரமைணிய நாமங்களை மலைமகள் மதலை என்ற தமிழ் மந்திரம் உணரத்தும். இவன் ஞான சக்தியாகிய தெய்வயானை யோகம், ஞானம் என்ற இரு நெறிகளையும் உலகில் வருத்து செய்பவன்.

**7. நங்கை யானைக்கு குழகன்**

குழ - இளமை, குழகன் - இளையோன், முருகன், நங்கையானை - தெய்வயானை, யானைக்குக் குழகன் - தெய்வயானை கணவன் என்ற பொருளில் வந்தது.

**8. வெற்றி வெல் கொடியோன்**

வெற்றி பொருந்திய கோழிக் கொடியை உடையவன். கோழி வடமொழியில் குக்கடம் என்று சொல்லப்படும். கோழிக்கொடியோன் - கக்குடத்துவஜன், துவஜன் - கோடி, கு-பூமி, குடம் - வக்கிரமாகக் கிளைத்தல், பூமியைக் காலாற் கிளைக்கும் தன்மை உடைய பறவையாகிய கோழி. குக்குடம் எனப் பெயர் உண்டு.

**9. ஆறுமுகம்**

ஆறு திருமுகங்களை உடையவன் ஆறுமுகன், ஷண்முகப் பெருமான், சிவன்முகன், ஈசன், தற்புருஷன், அகோரம், வாமதேவம், சத்தியோஜாதம் ஆகிய ஐந்துமாம். இவையே கிழக்கு, தெற்கு, வேடக்கு, மேற்கு என்ற நான்கு திக்குகளை நோக்கியும் இருப்பான்.

**10. சரவணத்துத் தனயன்**

தனயன் - புத்திரன், சரவணத்து உதித்த புத்திரனான முருகப்பெருமான். இது சரவணபவன் என்ற முருகன் திருநாமத்தை உணர்த்துகிறது.

சிவபெருமானது 5 முகங்கள் அதோ முகத்தோடு ஆறுமுகங்கள் ஆனவை போல், சிவபெருமானது, திருநாமமாகிய அஞ்செழுத்துடன் நாதப்பிரம்மாகிய சரவணபவ என்ற ஆறெழுத்து மந்திரம் ஆயிற்று. இதனை, ஷடகஷ்ரம் என்று கந்தபுராணப் பாடல் உணர்த்துகிறது.

## போகரும்... முருகரும்

ஆ. சண்முகம்
ஆய்வாளர்
மருத்துவ நுண்ணுயிரியல் துறை
சென்னைப் பல்கலைக் கழகம்
சென்னை.

பழனி பதி வாழ் பாலகுமாரனின் சிலையை, நவபாசான சிலையாக உருவாக்கி பக்தர்களின் உடல், மன ஆரோக்கியத்தைக் காத்த சித்தர்களுள் பெருமை மிக்கவரான போகர் அறியப்படுகிறார்.

தங்கள் தவயோகத்தின் பலனாக அணிமா லகிமா, லகுமா, கரிமா, பிராப்தி, வசித்துவம், பிராகாமியம், ஈசத்துவம் எனும் அட்டமா சித்தி ஆற்றல்களைப் பெற்றவர்கள் சித்தர்கள் எனும் மகான்கள். இவர்கள் மருத்துவம், மந்திரம், ஜோதிடம், மெய்யுணர்வு ஆகியவற்றில் சிறந்து விளங்கி தங்களை நம்பும் மக்களுக்கு நன்மையை அளிப்பவர்கள். இன்றும் பல சித்தர்கள் மனிதரின் கண்களில் படாமல் மறைந்து அருள்பாலிப்பதாக ஆன்மிக அன்பர்களின் கூற்று. அவர்களின் இருப்பைத் தமக்கேற்பட்ட அனுபவங்கள் மூலம் உணர்ந்தவர்கள் பலருண்டு. நவநாத சித்தர்கள் பதினெண் சித்தர்கள் எனப்படுவார்கள், நம் தமிழ்நாட்டில் வாழ்ந்தவர்களே. இவர்களிலும் மூலர், காலாங்கி, கொங்கணர், கோரக்கர், போகர் போன்றவர்கள் குறிப்பிடத்தக்கவர்கள்.

### முருக பக்தர்

இவர்களுள் போகர் திருமூலரின் மாணவர் என்றும், காலாங்கிநாதரின் மாணவர் என்றும் இருவேறு கருத்துகள் இருந்தாலும், ஒன்பது விதமான நஞ்சு கலந்த, உடல் நலம் பேணும் மூலிகைகள் கொண்டு இவர் ஸ்தாபிதம் செய்த பழனி முருகன் சிலையின் பெருமையால் இவர் ஒரு முருகபக்தர் என்பது மட்டும் தெளிவாகிறது. இவரும் இவரின் மாணாக்கரான புலிப்பாணியும் வைகாவூர் என்றழைக்கப்பட்ட பழனிமலை அடிவாரத்தில் சுமார் 5000 வருடங்களுக்கு முன் வாழ்ந்து வந்துள்ளதாக தகவல்.

### மருத்துவ நூல்கள்

திருநந்தி தேவரே பல பிறப்புகளுக்குப் பின் போகராக இப்புவியில் அவதரித்ததாகக் கூறுகின்றனர். போகர் வரலாறு பற்றிய நூல்கள். பழனி தண்டாயுதபாணி திருக்கோவில் சித்த மருத்துவ நூல் வெளியீட்டுக் குழுவினரால் வெளியிடப்பட்டுள்ளது. போகர் ஏழாயிரம், போகர் திருமந்திரம், நிகண்டு பதினேழாயிரம் போன்ற நூல்கள் இவர் எழுதியுள்ளவற்றில் சில. இவரது படைப்புகளில் மருத்துவம் குறித்த செய்திகளே அதிகம். இவரது மாணவர்கள் புலிப்பாணி, சட்டமுனி, மச்சமுனி, கமலமுனி, நந்தீசர், கொங்கணர், கருவூர்த்தேவர் எனும் எழுவர் ஆவர்.

**அருள் தரும் முருகன் திருமேனி**

யோகம், மருத்துவம், ரசவாதம், கணிதம், காயகற்பம் போன்றவற்றில் சிறந்து விளங்கியவர் போகர். அந்நாட்களில் வான்வழியில் சீனம், ரோமபுரி, மக்கா, மதீனா சென்று இறுதியாக சீடர் புலிப்பாணியுடன் பழனிக்கு வந்தார். பின்னர் அங்கேயே தங்கியிருந்து பழனி மலையில் தாம் அமைத்த திருக்கோவிலில் நவபாஷாணக் கட்டி கொண்டு தண்டாயுதபாணி சுவாமியின் அருள்மேனியை நிறுவினார். இங்கு ஆண்டவரின் வலக்கரத்தில் உள்ள தண்டம் ஞானத்தின் சின்னமாகக் கருதப்படும். மாபெரும் மருத்துவ சக்தியைக் கொண்ட நவபாஷாண முருகன் திருமேனியில் பட்டுவரும் விபூதி, பால், சந்தனம், தேன், பஞ்சாமிர்தம் போன்ற அனைத்தும் தேடிவரும் பக்தர்களின் உடற்பிணி, உளப்பிணி, பிறவிப்பிணியைத் தீர்க்கும் வல்லமை கொண்ட அருமருந்து என்பதை இன்றும் மக்கள் தங்கள் அனுபவங்கள் மூலம் உணர்ந்து உண்மை என்கின்றனர்.

**போகர் சன்னதி**

பழனி மலைக்கோவில் தென்மேற்கு மூலையில் போகரின் சன்னிதி உள்ளது. இங்குதான் போகர் ஜீவ சமாதி ஆனார். போகர் தன் இஷ்ட தெய்வமாக வழிபட்ட ஸ்ரீபுவனேஸ்வரி அம்மனும், ஈஸ்வர சொருபமான மரகத லிங்கமும் இங்கு இன்றும் பூஜையில் உள்ளன. இச்சன்னதியில் இருந்து தண்டாயுதபாணி சுவாமியின் திருவடி நிலைக்கு ஒரு சுரங்கவழி உள்ளது. கடைசியாக அதனுள் முருகப்பெருமானின் திருவடியில் ஐக்கியமானதாக வரலாறு குறிப்பிடுகிறது.

தான் கற்ற வித்தைகள் மூலம் மக்கள் அனைவரும் நலம்பெற வேண்டும் எனும் நல் எண்ணத்துடன் பல மருத்துவ வழிகாட்டி நூல்களையும், நவபாஷாணம் கொண்டு முருகன் சிலையையும் படைத்த மக்கள் சித்தர் போகரின் பொற்பாதங்கள் பற்றி நல்வாழ்வு பெறுவோம்.

## நாட்டுப்புறப் பாடல்களில் முருக வழிபாட்டுக் கூறுகள்

சா. சத்தியமூர்த்தி
முன்னைவர்ப் பட்ட ஆய்வாளர்
மன்னர் சரபோஜி அரசு கலைகல்லூரி(தன்),
தஞ்சாவூர்- 7.

நாட்டுப்புற மக்கள் "செய்யும் தொழிலே தெய்வம்" என்ற கொள்கையுடையவர்கள் செய்யும் தொழிலில் சோர்வு ஏற்படும்போது அதனை மாற்றத் தோன்றுவது இசை. இவ்விசையே பாட்டாகிப் பரம்பரையாகப் பாடப்பட்டு வருகின்றது. சமயப் பெரியோர்களின் பக்திப் பாசுரங்களைப்போல நாட்டுப்புறப் பாடல்களிலும் இறைமணம் கமழக் காணலாம். பாடும் பாடல்களிலெல்லாம் இறைவர்களின் வரலாறுகளும், ஆற்றல்களும், குணநலங்களும் நிறைந்திருக்கும். இப்பாடல்களில் முருகனுக்கு முக்கிய இடம் இருப்பதையும் அறிய முடிகின்றது.

### நாட்டுப்புற மக்களின் தெய்வ நம்பிக்கை

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற பழமொழிக்கேற்ப நாட்டுப்புற மக்களிடம் தெய்வ வழிபாடு இடம்பெற்றிருக்கின்றது. தூங்கச் செல்லும் போதும் தூங்கி விழித்தெழும் போதும் "அப்பனே முருகா" என்று கூறுவதைக் காணமுடிகின்றது. அந்த அளவிற்கு முருகன் நாட்டுப்புற மக்களிடம் உறைந்திருப்பதை அறிய முடிகின்றது. நல்லது நடந்தால் தெய்வத்தின் அருளால் ஏற்பட்டது என்றும் தீயது நடந்தால் தெய்வத்தின் கோபம் என்றும் நாட்டுப்பற மக்கள் நம்புகின்றனர். "அவனின்றி ஓர் அணுவும் அசையாது" கடவுளை நம்பினார் கைவிடப் படார்" அரசன் அன்று கொல்லுவான், தெய்வம் நின்று கொல்லும்" போன்ற பழமொழிகள் மக்கள் தெய்வத்தின் மீது வைத்துள்ள நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றன. நாட்டுப்புற மக்கள் தெய்வங்களில் வேறுபாடு காட்டாமல் வழிபடுகின்றனர். அவ்வழிபாட்டில் முருகன் வழிபாடு மக்களைப் பெரிதும் கவர்ந்துள்ளதை நாட்டுப்புறப் பாடல்களில் பதிவு செய்துள்ளனர்.

*வெள்ளி விளக்கெரியும் / வெண்கலங்கள் ஓசையிடும்*
*தங்க விளக்கெரியும் / சண்முகனார் கோயிலிலே!*

### தாலாட்டுப் பாடலில் முருகன்

தாயின் அன்பையும் சேயைச் சுற்றி எழும் கற்பனையையும் பாடலாக வழங்கும் பாட்டுருவம் தாலாட்டு என்பர். தன் கண்ணின் மணியாக நேசிக்கும் குழந்தையைப் பெற்றெடுக்கத் தாய் செய்த தவத்தையும், தரிசித்த தலங்களையும் நோற்ற நோன்பையும், ஆடிய தீர்த்தங்களையும் பாடுவதைத் தாலாட்டுப் பாடல்களில் பதிவு செய்துள்ளாள். ஆண்டவனே தனக்குக்

குழந்தையாக வந்து பிறந்துள்ளான். தன்குடியும் கல்வியும், செல்வமும் இந்த அகிலத்தில் தழைக்கப்போகின்றன என்று, அவன் பெருமைகளைச் சொல்லி அடக்கமுடியாத இன்பத் தேனை அள்ளி இசைவடிவோடு வடிவேலனையும் பாடுவதையும் அறிய முடிகிறது.

*"சேவற் கொடியோனே! திருமால் மருமகனே!*
*பார்வதியாள் பெற்றெடுத்த / பன்னிருகை வேலவனே!* (ஏ.எ.க.பக்.71)

*"பழனிமலை ஆண்டவர்க்கு / பாதம் பணிந்தவனோ"*
*"தைப்பூசமாடிக் தவம்பெற்று வந்து கண்ணோ"*
(ஏ.எ.க.பக்.64)

*கடலோரம் கோயில் கட்டிக் / கந்தனென்று பேர்விளங்கி*
*அலையடிக்கு நேரமெல்லாம் / வேலவர்*
*ஆண்டி வேஷம் கொண்டாரோ!* (த.நா.பாட.பக்.90)

இப்பாடல்கள் முருகனின் ஆண்டிக் கோலம், சேவற்கொடி, தைப்பூசம் போன்ற அடையாளங்களை விளம்புகின்றன.

*உச்சிமலைக் கந்தா / உயர்ந்த மலை வேல்முருகா*
*சாய்ந்த மலைக் கந்தா / சஞ்சலத்தைத் தீருமைய்யா!* (த.நா.பாக்.99)
*"ஐந்து தலையாண்டி / ஆறுமுக வேலாண்டி*
*பிச்சைக்கு வந்தாண்டி / பிள்ளைக்கலி தீர்த்தாண்டி* (த.நா.பா.100)

வேண்டினால் வேண்டும் வரம் தருபவன் முருகன் என்ற நம்பிக்கையோடு வரம் கேட்பதையும், பிணியைத் தீர்க்க முருகன் அருள் வேண்டுவதையும் அறிய முடிகிறது. இதனால் கள்ளம் கபடமற்ற நாட்டுப்புற மக்கள் முருக வழிபாட்டில் கொண்டுள்ள நம்பிக்கையையும் பற்றுதலையும் அறிய முடிகிறது.

*"அஞ்சிமலை கொஞ்சிவர- உனக்கு*
*அழகுமலைத் தேரோட*
*கண்ணே மலையழகா*
*கண்மணியே நீ உறங்கு"* (த.நா.பா.பக்.112)

இவ்வாறு தாலாட்டுப்பாடல்களில் பல இடங்களில் முருகனைப் பற்றிய பதிவுகள் உள்ளன.

காதற்பாடல்களும் முருகனும்

நாட்டுப்புறப் பாடல்களில் காதல் பாடல்கள் தனியிடம் பெற்றவை. காதல் பல வகைகள்! பல நிலைகள்! அவற்றை எல்லாம் எடுத்துக்காட்டும் நாட்டுப்புறப் பாடல்கள் ஏராளம்! விவசாயம் சார்ந்த வேலை செய்யும் போது காதல் ஏற்பட்டுப் பாடி மகிழ்கின்றனர்.

*"கூடுணமே ரெண்டு பேரும் / குமர கோயில் அன்னம்போல"*
(த.நா.பா.பக்.90)

*"ஊருக்கு நேர் கிழக்கே- வள்ளிக்கு /ஒத்தை புளிய மரம்- வேலவா*
*ஒத்தை புளிய மரம் / அங்கம் சுருக்கிண்ணிச்சாம்- வள்ளிக்கு*
*நெஞ்சு நெருக்கிண்ணிச்சாம்"* (த.நா.பா.பக்.143)

நாட்டுப்புற மக்களின் காதல் உணர்வு வெள்ளந்தியானது. உள்ளத்திலிருந்து அற்புத-ஊற்றாய் காட்டாற்று வெள்ளமாய்க் கரைபுரண்டு பெருகுகின்றது.

**திருமணப் பாடல்கள்**

நமது தமிழர் பண்பாடு திருமணத்தின் போது வாழ்த்துக் கூறுதல் ஆகும். வாழ்த்துப் பாடுவது போன்று மணமகன் உறவினர் ஒரு கட்சியாகவும், மணப்பெண் உறவினர் ஒரு கட்சியாகவும் போட்டிப் போட்டுப் பாடுவதும் உண்டு. மணப்பெண்ணும், மணமகனும் கந்தனையும் கார்த்திகையையும் தொடர்பு வைத்து

*"கந்தனைக் காண வென்று∴ காத்திகைக்கு வந்தேனடி*
*உந்தனைக் கண்டேனினி∴ ஊருக்குப்போகேனடி"*

எனப் பாடியுள்ளனர்.

**கும்மிப் பாடல்களும் முருகனும்**

திருவிழாக் காலங்களிலும் குடும்ப விழாக்களிலும், ஓய்வு நேரங்களிலும் பெண்களும் ஆண்களும் தம்முள் ஆடியும் பாடியும் மகிழ்வார்கள். மகிழ்ச்சியை வெளிப்படுத்தும் விதமாகக் குழுமி நின்று பெண்கள் கும்மியடிப்பர். கும்மியடிப்பதற்கு ஏற்றதுபோலப் பாடல்களையும் பாடுவர். இப்பாடல்களில் ஊர்வளம், வரலாறு, தெய்வங்களின் வரலாறும் பெருமைகளும், எள்ளல், கேலி, வருணனை போன்றவையும் இடம்பெறும். மேலும், முருகனது வரலாறும் வள்ளி -முருகன் காதலும் பாடப்பட்டுள்ளது.

*வள்ளியதத்தான் கைபுடிச்ச சீலனுக்கு - அந்த*
*வெள்ளிமலை குடியிருக்கும் வேலனுக்கு!*
*தெள்ளுத் தெனை மாவிடிச்சி தேன் கலந்து- நல்ல*
*அள்ளிப்படை ஆறுபடை முருகனுக்கு!*

என்று மலையின் சிறப்பு, காவடியாட்டம், முருக வழிபாட்டு முறைகள், நேர்த்திக் கடன்கள், வீரச்செயல்கள் முதலான செய்திகள் கும்மிப்பாடல்களில் மக்களால் போற்றிப் பாடப்படுகின்றன. இப்பாடல்களை வள்ளியம்மை கும்மி, முருகன் வள்ளிக் கும்மி என்றும் மக்கள் வழங்கி வந்துள்ளனர். முருகன் பன்னிரு கரங்களுடனும், ஆறு முகங்களுடனும் கையில் வேலுடனும் மயில்மீது அமர்ந்து காட்சி கொடுப்பது போன்ற தோற்றம் நாட்டுப்புற மக்களை மிகுந்த பரவசம் அடையச் செய்கிறது. குறிஞ்சி நிலத்தில் குறத்தியாகப் பிறந்த வள்ளிக்கும்

வேலனுக்கும் உள்ள காதல் கதைகளை நினைத்துப் பூரித்துப் புனைந்து பாடுகின்றனர்.

*“ஆவாரங் காட்டுக் குள்ளெ- வள்ளியம்மை*
*அல்லியை நாம கண்டு*
*காலடி மண்ணெடுத்து- வள்ளியம்மை*
*கையிலே அரச்சாளே!*
*வெள்ளி மலை மேலே- வள்ளியம்மை*
*வெறகுக்கு போகையிலே*
*அத்தமகன் போல- வேலவர்*
*வெத்தலே கேட்டாரு*
*வெத்தலே இல்லையையா*
*சுண்ணாம்பு வேனுமைய்யா”*
*“ஆறோடும் பாதையிலே - வள்ளியம்மை*
*ஆடும் மேய்க்கையிலே*
*ஆடு விலகி நின்று - வேலவர்*
*ஆனந்தம் காணவந்தார்”*

இப்பாடல்களில் நாட்டுப்புறக் காதல் வாழ்க்கையைத் தங்களின் அன்புமிக்க கடவுளான முருகனும் அவனது காதல் துணைவியாகிய வள்ளியும் நிகழ்த்துவதாகக் கற்பிதம் செய்து பாடுகின்றனர்.

**அறுவடைப் பாடல்கள்**

“உழைக்கும் விவசாயப் பெருங்குடி மக்கள் அறுத்தக் கதிரைக் அரி அரியாகக் காயவிடுவதுண்டு. காயப்போட்ட கதிரைக் காலையில் இளநேரத்தில் கட்டிவிட வேண்டும். கட்டுகளைத் தலையில் வைத்துக்கொண்டு ஆண்களும் பெண்களும் வரிசையாக வரப்பிலும் வயலிலும் ஒருவர்பின் ஒருவராக ஓடுவர். தலையிலிருக்கும் கதிர்கட்டு கொண்டையை ஆட்டி ஆட்டிச் சல், சல் என்று மேலுங் கீழுமாகக் குதிப்பது போன்றிருக்கும். அத்துடன் உடுக்கை அடித்துக் கொண்டு வழிநடைப் பாட்டொன்றைப் பாடிவிட்டால் அது வேலையாகவே தோன்றா' என்கிறார் செ.அன்னகாமு.

*“கஞ்சிக் கலையங் கொண்டு - வள்ளியவள்*
*காட்டுக்குப் போகையிலே*
*அத்தை மகன் போல- வேலவர்*
*அவளைத் தொடர்ந்தாராம் (தந்தனை)* (ஏ.எ.க.பக்.136)

என்ற பாடல் முருகன் வள்ளிமீது கொண்டுள்ள காதல் உணர்வுகளை உழைக்கும் மக்களின் வாழ்வியலோடு தொடர்புப்படுத்திப் பாடியுள்ளது வெளிப்படுத்துகிறது.

**தேரோட்டப் பாடல்கள்**

தமிழகத்தில் தேர்கள் கலையழகு மிக்கன. திருவிழாவின்போது தேரின்மேல் தெய்வத்தை வைத்து மக்களெல்லாம் ஒன்று திரண்டு தேர்வடத்தைப் பற்றி ஊர்வலமாக இழுத்து வருவர். அப்பொழுது முருகனை வேண்டி,

*பாக்கு நல்ல ஏலேலோ! மரம் பிளந்து!ஐலசா*
*பழனியப்பன் ஏலேலோ! தேரு செய்து! ஐலசா*
*தேரசைய ஏலேலோ! ரதம் குலுங்க! ஐலசா*
*தேசத்தாரே ஏலேலோ! கையெடுக்க! ஐலசா* (ஏ.எ.க பக்.192)

என்று பாடுகின்றனர்.

**உடுக்கைப்பாட்டு**

உடுக்கையடித்துப் பாடுபவருக்குக் கோடாங்கி என்று பெயருண்டு, கோடாங்கிதான் சில கோயில்களுக்கும் பூசாரியும் கூட. அவரால் சாமியை அழைக்கவும் பேய் பிசாசுகளை விரட்டவும் முடியும் என்று மக்கள் நம்புகின்றனர். அவருடைய உடுக்கடியும் பாட்டும் கேட்போரை மெய்சிலிர்க்கச் செய்யும். இப்பாடலில் முருகனை வருந்தி அழைப்பதைக் காண முடிகிறது.

*ஓம் சரவண பவமுருகனே / உன்னைப் பணிந்தேன் கதிர் கடம்பனே!*
*வள்ளிமணாளனே வடிவேலய்யனே /நெடுநாளாகவே தேடினேன் கந்தனே!*

**ஏற்றப்பாட்டு**

"ஏற்றப் பாட்டிற்கு எதிர்ப்பாட்டில்லை" என்ற பழமொழி ஏற்றப்பாட்டின் பெருமையை உணர்த்துகிறது. ஆற்றுப் பாசனமோ குளத்துப் பாசனமோ இல்லாத இடங்களில் ஏற்றங்கள் மிகுதியாகவுண்டு. அதிக முதலீடு இல்லாமல் வேலை செய்யும் சிரமமான நிலையில் உள்ள ஏழை உழைப்பாளிகள் ஏற்றம் இறைத்து விவசாயம் செய்து வந்துள்ளனர். விவசாயம் பெருகவும் இறைவனின் அருள்வேண்டியும் இறைவனின் வரலாறு சொல்லியும் பாடுகின்றனர்.

*"சோதியினுக் கழகு / துலங்கு வடிவேலு!*
*வேலெடுக்கும் கையே / வினைகள் தீர்க்கவேணும்!* (ஏ.க.க.பக்.156)
*"ஆறே கோவிந்தம் ஆறு முருகவேலு!*
*ஆறுமுக வேலு ஏழே கோவிந்தம்*
*ஏழே கோவிந்தம் எழுதினவன் தஞ்சம்"*

இப்பாடல்கள் நீண்டு கொண்டே செல்வதுண்டு ஏற்றம் இறைக்கும் தண்ணீர் இதமாக ஓடுவது போன்று முருகனின் வரலாறும் இனிமையைச் சேர்க்கிறது.

**காவடிப் பாடல்கள்**

"காவடி" என்பது ஒரு தடித்த கம்புதனில் இருபுறமும் பொருள் சுமைகள் இருக்கத் தோளில் கொண்டு செல்லுதல் ஆகும். தூரப்

பயணத்திற்கும், சுமைகளைத் தோள் மாற்றித்தோள் எனக் கொண்டு செல்வதற்கும் பயன்பட்டது இந்தக் காவடி ஆகும், காவடியைக் கழுத்திலும் தோளிலும், தலையிலும் வைத்துக் கொண்டு நடை பயணம் செல்லும் போது பாடிக் கொண்டே செல்லும் சிந்து "காவடிச் சிந்து" ஆகும். முருகனைக் கண்டு தரிசிக்கச் செல்லும் மக்கள் காணிக்கைகளை ஒரு நீண்ட மரத்தடியை எடுத்து அதன் இரண்டு முனைகளிலும் சுமைகளைக் கட்டித் தொங்க விடுகின்றனர். தடியைத் தோளின் மீது சுமந்து கொண்டு சுகமாக மலையேறுகின்றனர்.

*"பாலால் காவடியும் / பழத்தால் காவடியும்*
*தேனால் காவடியும் / செம்பழநி வேலவர்க்கு*
*இளநீர் காவடியும் / எடுத்து விளையாடி"*
*மலைமேல் இருக்கும் - அந்த*
*மாயவர்க்கு"*

எனக் காவடியின் பல வகைகளைக் கும்மிப் பாட்டில் பாடுவதை அறிய முடிகிறது.

*எட்டடிக் குச்சுக்குள்ளெ- சுப்பையா*
*எப்படி நானிருப்பேன்*
*தங்க மயிலேறிச் - சுப்பையா*
*வந்திட வேணுமையா (தந்தனை)*
*வெள்ளிக் கிழமையின்னு - வள்ளியவள்*
*வீடு மெழுகையிலே.*
*அத்தை மகன்போலச் - சுப்பையா*
*கூட மெழுகுறாராம்!*
*ஆறும் பொரியாறு - சுப்பைய்யா*
*ஆறு முகனாறு*
*அந்த ஆறு கடந்து- சுப்பைய்யா*
*எப்படி நான் வருவேன்"*

என்ற காவடிப் பாடலில் ஆறு என்ற சொல் திரும்பத் திரும்ப வருகிறது. ஆறு என்ற சொல்லுக்கு நதி என்று பொருள் கொண்டு நாட்டு வளத்தையும் ஆனால் ஆறு-வழி என்று பொருள் கொள்ளும்போது ஆறுமுகம் கொண்ட முருகா நீ எனது ஆன்மா விடுதலைக்குக் காட்டுகின்ற வழி மிகப் பெரியது என்று முருகன் அருள் வேண்டி காவ்டி எடுத்துப் பாடுகின்றனர்.

நாட்டுப்புற மக்கள் தங்கள் நலனுக்காகவும், ஊர் நலனுக்காவும், உலக நலனுக்காகவும் வழிபடும் தெய்வங்களில் முருகன் முக்கிய இடம்பெற்றுள்ளதை நாட்டுப்புறப் பாடல்கள் வழி அறிய முடிகின்றது. முருகன் மீது கொண்டுள்ள பக்தியையும், நம்பிக்கையையும், வழிபாட்டு முறைகளையும், நேர்த்திக் கடன்களையும் இப்பாடல்கள் வெளிப்படுத்துவதோடு முருகன் பற்றிய கதைகளையும் பதிவு செய்துள்ளதைக் காணமுடிகின்றது.

# அத்திதல முருகன் பிள்ளைத்தமிழ்

முனைவர் வெ. சத்யநாராயணன்
தமிழ் உதவிப் பேராசிரியர்
மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி
தஞ்சாவூர் - 613005

உலகெங்கிலும் பரவிய தமிழ்க்குடியினர் தங்கள் சமய நெறிகளையும் தங்களுடைய புதிய வாழிடங்களில் பரவச் செய்தனர். இலங்கையில் தமிழ்ச் சமூக இருப்பு என்பது தொன்மையானது. அங்கு வாழும் தமிழர், தமிழ்க் கடவுளாகிய முருகவேளைப் பெரிதும் பராவும் இயல்பினர். கந்தபுராணத்தைச் சஷ்டி விரதத் திருநாட்களில் பயபக்தியுடன் பாராயணம் செய்துவரும் தொன்மரபை விடாது கடைப்பிடிப்பவர்கள். இத்தகைய பக்தி மேலீட்டால் இலங்கைத் தமிழர் முருகன் மீது பல்வேறு இலக்கியங்களைப் படைத்து அணிசெய்து தங்கள் பக்தியைப் புலப்படுத்துகின்றனர். அத்திதலம் என்பது இலங்கை யாழ்ப்பாணத்தில் தென்மராட்சிப் பகுதியில் கைதடி என்னும் ஊரில் உள்ளது. இங்கு மாவடிக்கந்தன் என்னும் திருப்பெயர் தாங்கி முருகவேள் எழுந்தருளியுள்ளான். நூற்றாண்டுக்கு முன் அத்தி முதலான மரங்கள் செழித்திருந்த இத்தலத்தில் இரவில் பூசை மணியோசை கேட்டு அருகிலிருந்த மக்கள் அந்த இடத்தில் வேலை வைத்து வணங்கிவந்தனர். பின்னர் அவ்விடம் ஓலைக் குடிலாக மாறிப் பின்னர் கற்கோயிலாகவும் உருப்பெற்றது. இத்திருக்கோயிலுக்கு உரியவாகப் பழமையான ஊஞ்சற் பாட்டுக்கள் சுவடிகளாகப் பாதுகாத்து வரப்பெறுகின்றன. இங்கு எழுந்தருளியுள்ள முருகவேளைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு எழுந்த நூலே அத்திதல முருகன் பிள்ளைத்தமிழ் என்பதாகும். அத்திதல முருகன் பிள்ளைத் தமிழின் ஆசிரியர் வண்ணார் பண்ணை மு.தியாகராசா என்பவர் ஆவார். இவர் புகைவண்டி நிலைய மேலாளராக விளங்கியவர். தமிழ் மரபிற்கேற்ற வகையில் பாடப்பெற்ற இப்பிள்ளைத்தமிழ் முதலில் 1986இல் அத்திதல முருகன் திருக்கோயில் தேவஸ்தான வெளியீடாக வெளிவந்தது. இந்நூல் நல்லை திருஞானசம்பந்தர் ஆதீன ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர பரமாசார்ய சுவாமிகள் வழங்கிய அருளுரையுடன் ஏனையோர் வழங்கிய வாழ்த்துரை அணிந்துரைகளுடன் பதிப்பிக்கப்பெற்றது.

**நூலமைப்பு**

இப்பிள்ளைத்தமிழ் காப்புச் செய்யுள் நீங்கலாக 30 பாடல்களை உடையது. இரட்டை ஆசிரிய விருத்தம், இரட்டை ஆசிரியச் சந்த விருத்த யாப்பமைதிக்கு உட்பட்ட இந்நூல் ஆண்பாற் பிள்ளைத்தமிழுக்கேற்ற பருவங்களைப் பெற்றுப் பருவத்திற்கு மூன்று பாடல்கள் என அமைந்தது.

**கந்தபுராண நவநீதம்**

கந்தபுராண நிகழ்வுகளை உள்ளடக்கி முறைப்படுத்திப் பாடும் நூல்களுக்குக் கந்தபுராண நவநீதம் என்னும் சிறப்புப் பெயர்

வழங்கப்பெறுவதுண்டு. வ.சு.செங்கல்வராயப்பிள்ளை படைத்தளித்த திருத்தணிகேசர் எம்பாவையின் ஏழாம்பாடல் முதல் பதினேழாம் பாடல்வரை கந்தபுராண நிகழ்ச்சிகள் எடுத்துரைக்கப் பெற்றுக் கந்தபுராண நவநீதம் எனக்கொண்டாடப்பெறும். அதுபோலவே இந்நூலின் ஒவ்வொரு பாடலிலும் கந்த சரிதை கூறும் நிகழ்வுகளை முறைப்படத் தொகுத்து அவற்றின் வழியாக முருகனின் பிள்ளைப்பருவச் செயல்களைக் கற்பித்துப் பாடியமையால் இந்நூலும் கந்தபுராண நவநீதம் என்னும் பெயருக்கு உரியதாக அமைந்தது.

காப்புப்பாடல்

கந்தபுராண ஆசிரியர் விகடச் சக்கர விநாயகரைப் பாடி நூலைத் தொடங்கியமை போல இவரும் காப்புப் பருவத்தில் முருகன் பிள்ளைத்தமிழ் பாடுதற்கு ஏற்ற சொற்பொருள் வழங்க விநாயகரை வேண்டுகின்றார்.

*ஆங்காரக் குறும்பகல அடியார்கள் உள்ளத்து*
*அகலாது வீற்றிருக்கும் ஐந்துகரத் தெய்வம்*
*அருள்வடிவத் திருப்பொலிவால் ஆண்டெம்மை உய்க்கும்*
*அடிமலர்கள் சிரமீது அணிந்து உவகை கொள்வாம்*

என்னும் பாடலடிகள் பிள்ளைத்தமிழ் பாடக் கணபதியை வேண்டுவதுடன் இப்பிள்ளைத்தமிழ் நூல் சேய்மேல் எழுந்த தன்மையால் துன்பம் நீக்கும் தன்மையது என்பதையும் குறிக்கின்றார்.

காப்புப் பருவம்

பிள்ளைத்தமிழ்ப் பருவத்திற்கேற்ற வகையில் முதற்பருவமான காப்புப் பருவம் திருமாலை வேண்டுவதாகத் தொடங்குகின்றது. இப்பாடல் அத்தி தலம் வீற்றிருக்கும் செவ்வேட் சேயை, "நாமொடுங்கும் காலத்தும் நாவாயாகி நவை தீர்ந்த கதியேற்றும் அருளாள மூர்த்தி எனும் குகனை, பொதுவரோடு நிரைகாத்துப் புகழ்கொண்ட கோபால போற்றிக் காக்க" என வேண்டுவதாக அமைகின்றது. காப்புப் பருவத்தின் இரண்டாம் பாடல் சிவபிரானைத் துதித்துக் கந்தபுராணச் செய்தியைத் தொடங்கி வைக்கின்றது. இப்பாடல் மன்மதனை அழித்தமை, இமவான் மகளை மணந்தமை ஆகியனவற்றைச் சுட்டிச் சிவபெருமானிடம் கந்தனைக் காக்க வேண்டுவதாக அமைகின்றது. உமையம்மையிடம் முருகனைக் காக்க வேண்டுதல் மூன்றாம் பாடலாக அமைகின்றது. இப்பாட்டில் முருகன் திருவவதாரமும் முருகவேளைக் காணவந்த உமையம்மையின் செயலும் கூறப்பட்டுள்ளது. இதனை,

*ஆர்த்து எழும் சூர் முதலால் அலக்கணுற்ற தேவரெலாம்*
*அகமகிழச் சிவன்விழியால் ஆறுசுடர் அருள*
*அனலனொடு மருத்தினனும் அவைதாங்கி ஆற்றாதே*
*அருங்கங்கை யிடம் சேர்க்க அன்னாளு மாழ்கித்*
*தீர்த்திகையாம் சரவணத்தில் செலவுய்க்க அவைகளெல்லாம்*
*திரண்டொன்றாய்ச் செழுமலரில் சிறுகுழவியாகித்*
*திரளமுது கார்த்திகையா ரிடம்உண்டு விளையாடித்*
*திரிகின்ற காலத்தே நம்மகனை யின்றே*
*பார்த்தருள வேண்டும் எனப்பரமனுடன் வந்தவளே* (3)

என்னும் அடிகளால் அறியலாம். மேலும் இப்பாடல் அம்மையின் அரவணைப்பால் ஆறு உருவம் ஒருருவமானதையும் அவளின் காற்பரலிலிருந்து நவ வீரர்கள் தோன்றியமையும் விளக்கும்.

செங்கீரைப் பருவம்

பிள்ளைத்தமிழின் இரண்டாம் பருவம் செங்கீரையாகும். அத்திதலப் பிள்ளைத்தமிழின் இப்பருவப் பாடல்களில் முருகன் கோள், மலை ஆதியன கொண்டு திருவிளையாடல் செய்வதும் தேவர் சினப்பதும் வியாழகுரு வேண்ட விசுவருபம் காட்டியருள்தலும் பிரம்மனைக் குட்டிச் சிறையிடலும் தந்தைக்கு உபதேசம் செய்தலும் போர் முடிக்கக் கயிலை விட்டுப் புறப்படலும் கூறி, "செழுமை பெறும் அத்திதலம் விளங்க வரும் ஒரு குமர! செங்கீரையாடியருளே" என்றும் "சேணிடத்தவர் புகழ் அத்தி தலத்தாய் செங்கோ செங்கீரை" என்றும் செங்கீரையாட வேண்டுவதாக அமைகின்றது.

தாலப்பருவம்

மூன்றாம் பருவமாகிய தாலப்பருவத்தில் முருகன் தாரகனுடன் போர் செய்து வீழ்த்தித் தேவகிரிக்கு எழுந்தருளியமை பேசப்படும்.

*சேந்தன் எழிலார் முகம் முதலாய்ச் சிவந்த அடிகள் ஈறாகச்*
*செவ்வேகண்டு தாரகனும் சேயே உமக்கு நாம் பகையோ*
*சாந்த நிலையாய்க் கேட்டவுடன் தருமம் தழைக்க வேண்டுமெனச்*
*சமரிலேற்போம் என்றுரு அவுணன் சாற்றி* (8)

என்ற அடிகள் முருகவேளை இறைவன் என்று கண்டுணர்ந்து தாரகன் பணிந்து பின்னர் போர் தொடுத்தமையை உணர்த்தும்.

சப்பாணிப் பருவம்

இரு கைகளைக் கொட்டி விளையாடுமாறு வேண்டும் சப்பாணிப் பருவத்துப் பாடல்களில் முருகவேள் திருச்சேந்தூருக்கு ஏகுதலும் போர்க்கோலம் கொள்ளுதலும் அமரருக்கு அபயம் அளித்தலும் குறிக்கப்படுகின்றன.

*இந்திரனும் மாலயனும் இருசுடரும் திசையினரும்*
*எனையுள தேவருடனே*
*இலக்கத்து வீரர்களும் எறுழ்கொண்ட பூதர்களும்*
*எங்கெங்கும் சூழ்ந்ததேபோல்*
*சந்ததமும் அத்தித் தலத்து அன்பருனை ஏத்திவரச்*
*சப்பாணி கொட்டியருளே* (11)

என்ற அடிகள் முருகப்பெருமான் போர்க்கோலம் கொண்டு படைவீரர் சூழ இருத்தலைப் போல அத்திதலத்தில் அடியவர்கள் சூழ இறைவன் விளங்குகின்றான் என்று இணைத்துக் கூறுவதை அறியலாம்.

முத்தப்பருவம்

முத்தப் பருவத்தில் வீரவாகுவின் தூது இடம்பெறுகின்றது. வீரவாகுத் தேவர் வீரமகேந்திரபுரத்தில் சூரனைக் கண்டு அறிவுரை கூறியும் திருந்தவில்லை. அவன் 'வரங்கொண்ட பேறுடையேன்' என்றெல்லாம் தருக்கியபோது நீதி சொன்ன வீரவாகுவைக் கட்டி வருத்துமாறு ஆணையிட்டான். அப்போது வீரவாகு சூரனின் படைஞரை வீழ்த்தித் திருச்செந்தூர் மீளத் திரும்பினான். சூரன் நகரில் நிகழ்ந்தமையைக் கேட்ட முருகவேள் புன்னகை புரிந்தான். அவ்வாறு முறுவலித்த திருவாயால் முத்தம் தருமாறு வேண்டுவதை

*உற்றவரை அவண் அழித்துத் திருச்செந்திற் பதியணைந்து*
*ஒருங்கெல்லாம் இசைத்து நிற்கும்*
*திறங்கண்டு வாகுவின் முன் முகிழ்த்ததொரு முறுவலுடைத்*
*திருவாயால் முத்தமருளே* (15)

என்னும் அடிகளால் அறியலாம்.

வருகைப் பருவம் - அம்புலிப்பருவம்

வருகைப் பருவத்துப் பாடல்களில் சூரனின் ஆலோசனையும் ஏமகூடப் பாடிக்கு எழுந்தருளுதலும் சூரனிடம் நாரதர் ஏகுதலும் கூறி, "சீரார் அத்தி தல குமரா, செல்வா வருக வருகவே! புண்ணியனே வருக" என்று உரைக்கக் காணலாம். அம்புலிப் பருவப் பாடல்களில் பானுகோபன், சூரனுடன் நிகழ்ந்த போர், வீரவாகுவை மோக வெம்படையால் சாய்த்தமை, ஞானவேலால் மோகத்தை நீக்கியமை ஆகியன கூறப்படும். இறுதியில் இத்தகைய விறல் வாய்ந்த முருகனுடன் நிலவை விளையாட அழைப்பதை

*அஞ்சொலிள தமிழ் விரக முருகனுடன் எந்நாளும்*
*அம்புலீ ஆட வாவே*
*அருள் பொழியும் அத்திதல அழகனை விட்டகலாதே*
*அம்புலீ ஆட வாவே*

என்று கூறும் அடியால் அறியலாம். கந்தபுராணத்தை அடியொற்றிப் பாடுவதால் அம்புலிப் பருவத்திற்கே உரிய சாம, பேத, தான, தண்டம் என்னும் நயம் பொருந்தப் பாடுதல் இப்பருவப் பாடல்களில் இல்லை.

சிற்றிற் பருவம்

ஆண்பாற் பிள்ளைத்தமிழிற்கே உரிய சிறப்புப் பருவங்களுள் ஒன்றான சிற்றிற் பருவத்தில் சூரன் மகன் மைந்திரியை வீரவாகுத்தேவர் வெல்லுதல், சிங்கமுகன் வதை, சூரனின் மாயங்கள் அழிதல் ஆகிய செய்திகள் சிற்றிற் பருவச் செய்திகளுடன் இணைத்துச் சுட்டப்பெறும். சிங்கமுகன் மேனி சிதைத்தமை போல எம் சிற்றில் சிதையேல் எனச் சிறுமியர் முருகவேளிடம் வேண்டுவதை

*நீயும் சென்று சமர்செய்து நிகரில் குலிசந்தனை ஏவி*
*நேர லான்றன் வரமழிய நெஞ்சம் போழச் சிதைத்தனையே*

*ஆய அவன்போல் எமையெண்ணி அடியேம் சிற்றில் சிதையேலே*
*அத்தி தலத்தின் அருளாள அளியேம் சிற்றில் சிதையேலே*
*(23)*

என்னும் அடிகளால் அறியலாம்.

**சிறுபறை**

சிறுபறைப் பருவத்தில் சூரன் முருகவேளின் விசுவரூபக் கோலம் காணுதல், சூர சங்காரம், தெய்வானை திருமணம் ஆகிய செய்திகளுடன் சிறுபறைப் பருவ நிகழ்ச்சிகள் பேசப்படுகின்றன. இதனை, "செருக்குற்ற தெவ்வர் பகை ஒழித்து அருளும் திருக்கரத்தால் சிறுபறை முழக்கியருளே! சீரான அத்திதலச் செல்வா நின் செங்கரத்தால் சிறுபறை முழக்கியருளே!" எனவரும் தொடர்களால் அறியலாம். முசுகுந்தனுக்கு அருள்புரிந்த நிகழ்வும் இப்பருவப் பாடலில் இடம்பெற்றுள்ளது.

**சிறுதேர்**

சிறுதேர்ப் பருவத்தில் வள்ளியுடனான திருமணமும் அடியார் வேண்டுதலும் அமையக் கந்தபுராண நிகழ்வுகளைப் பேசும் இப்பிள்ளைத்தமிழை ஆசிரியர் நிறைவு செய்கின்றார். இப்பருவத்தில் முருகவேள் வள்ளியைத் தனக்கு உடன்படச் செய்த நிகழ்வுகளைக் கூறி, அவற்றிற்காக அலைந்து திரிந்த பாதமலர்கள் மேலும் சிவப்பேறச் சிறுதேர் உருட்டி வருமாறு வேண்டுவதை

*ஆராத காதலுடன் வேடனாய் வேங்கையாய்*
*அமைவுறும் விருத்த னாகி*
*அவளுள்ளம் கனிவு பெற நீயாங்கே அலைந்ததால்*
*ஆற்றாத பாத மலர்கள்*
*தீராத செம்மையின மேலுமவை சிவப்பேறச்*
*சிறுதேர் உருட்டியருளே*
*தேனார்ந்த கடம்பணியும் அத்திதலத் திருக்குமர*
*சிறுதேர் உருட்டியருளே* (28)

என்னும் அடிகளால் அறியலாம்.

அளவிற் சிறிய நூலாயினும் கந்தபுராணக் கடலைக் கடைந்து அங்கை திரட்டிய வெண்ணெய் போலக் கற்போர்க்கு ஏற்றவகையில் எளிய நடையில் அளித்துள்ள இந்நூல் முயற்சி பாராட்டற்பாலது. ஆசிரியரின் நோக்கம் முருகன் சரிதையைப் பாடுவது என்றாலும் பொருத்தமாகப் பிள்ளைத்தமிழ்ப் பருவச் செய்திகளைக் கூட்டிச் சிறந்த இலக்கியமாக இந்நூலை ஆசிரியர் படைத்தளித்துள்ளார். இந்நூலின் காணும் பக்திச் சிறப்பும் சைவசித்தாந்த வெளிப்பாடும் தனித்த ஆய்வுக்கு உரிய அருஞ்செய்திகளை உடையன.

# War God of Tamils Lord Muruga – A Study

**R. Sathyabhama,**
Department of History,
Assistant Profecer,
Thiru.Vi.Ka.Govt.Arts College,
Thiruvarur – 610003

Man is a complex being it is kinly that more than one factor was responsible for generating religious impulse. Thus, fear, bewilderment of the inexplicable phenomen of Nature, as well as eagerness for personal or communal gain, might have all cumulatively promoted primitive religion[1]. Religion can play predominant role in society in two ways, either by claiming so much of the average man's attention and conscience that he has little of his personality left over for other affairs or by continuously feeding the fire of religious fanaticism and generating intra – social antagonisms.

Religion among the Tamils in the Sangam age, played a harmonious role in society than it did in the succeeding age. Religious is a technique for the establishment of a relationship between man, the known and the natural, and God, the unknown and the ritualistic and supplicatory aspects of religion and their rituals related to animism and other forms of anthropomorphic deity workship. Ther are three strands of religion clearly market off from each other during the Sangam period, (i). the indigenous Gods workship (ii). The exotic Hindu Gods Workship, (iii). The exotic non – Hindu religious faiths, functions etc., All the three undoubtedly co – existed and till the very end of the Sangam age[2], no serious and open clash among them occurred, though the tendency for the protagonists of each religion was to promote the cause of one's own religion.

It is significant that the Tholkappiyam itself speaks of, "Kadavul", apparently signifying a supreme force or deity[3]. Tholkappiyar makes a reference to four Gods being appropriate to ahapporul tinais, (1) Mayon (Tirumal) of the mullai religion, (2) Seyon (Murugan) of kurinji, (3) Vendan (Indra), of Marudam, (4) Varunan of the Neithal. The palai is not mentioned in this context probably because it comprised the desert region where unsocial elements

comprising robbers dominated. From the references in other works of the sangam literature it is learnt that the deity specially associated with the palai was the goddess Kotravai.

Nachchinarkkiniyar states that the hunters of the hill tracts worshipped Murugan as God of the hillock. Murugan came to be considered as the favourite God of all the Tamils. Murugan has been the pre – eminent God of the Tamils through the ages. The term "Murugan" is said to denote beauty, youth and god – head. This suggests that the ancient Tamils associated their god – head with thepermanent youth and beauty reflected in nature.

The conception of the early Tamils was that murugan was the Governor of all seven worlds[4]. He was worshipped as a war God. The spear was his favourite weapon, from its name "vel" Murugan was known as velan or merely as vel. Another name of his was "seyon" (Red God), who was the patron of pre – nuptial love. He was offered by his worshiped balls of rice mixed with the red blood of goats killed in his behalf. His priest was also called velan[5]. The Adichchanallur relics of the urn – burials like the Vel (spear), mouth pieces and masques indicate the prevalence of Murugan worship.

Murugan has the blue feathered peacock or the elephant as his carrier. The snake is also associated with him.his flag carries the figure of the peacock or the cock. He wears the kadappa (kadambu) garland[6]. From the sangam classics in connection with the early mode of worship, the kuravai dance figured prominently. The kuravar and Kanavar, both men and women, participated in the Kuravai dance which took place under the venkai tree.

A more elaborate from of Murugan worship was the well known veriyadal[7]. It was a of priest in a frenzy when he was supposed to be under divine inspiration. It took place when the parents of love-sick girl wanted to know the cause of and remedy for her indisposition. After offering prayes and sacrificing a goat, the priest danced, as is possessed[8]. Besides the kuravai and the veriyadal, the people resorted to a war dance, called poradal, apparently on the eve of their setting out for war. Both men ann women participated in this, which instilled courage into the warriors. Apart from there special occasions, it consisted of offering flowers, paddy, tinai and honey, it ended with the sacrifice of a goat.

Thirumurugattruppadai describes the pattern of worship conducted by Brahmins in a different way. There, immediately after a both, the Brahmins are said to chant mantras and offer puja to Murugan. As a consequence, Muragan came to be known as skanda, somaskanda, karthikeya on the basis of various legends.

During the archaeological survey in adichanallur of Tirunelveli District in Tamilnadu, the trident, the golden and silver mouth closers and the cock symbol on the trident belonging ti the first millennium B.C were excavated. The Adichanallur relics shows that Murugan was a tamil deity, later Aryanised as Subramania.

Muragan was usually housed in temples on the top of hills and hillocks. Thirumurugattruppadai, says murugan resides in the six sacred military camp of

1. Thiruparangkundram
2. Thiruchiralavai (Tiruchendur)
3. Thiruvavinankudi (palani)
4. Thiruthani
5. Palamuthisolai (Alagarmalai)
6. Swamimalai

Which is some unidentificiable town in the hill country.

Thus the worship of Murugan was popular in the period of Sangam. Sangam literatures also eulogise Murugan in manifoldways of "Tudikkattu and Kadaikkattu" silspathikaram also mentioned the war dances. Murugan was worshipped as war God by hilly regions of sangam. Turning to the consideration of the various other deities, Lord Murugan has been doubtless the pre – eminent God of the Tamils through the ages. This early Tamil deity became transformed even by the sangam age into the aryanised Subrahmania. He came to be known as skanda, somaskanda, karthikeya, and so forth on the basis of various legends. Devasena, Indira's putative daughter became a wife of Murugan,while tha indigenous tradition is that valli a hunter girl was married as a result of the typical 'Kalavu' love.

**Footnotes**

1. K.K.Pillay, A social History of the Tamils, University of Madras, 1975 Vo1.P.466.
2. N.Subramanian, Sangam polity, Ennes publications Udumalpet, P.372.
3. Tol.Porul: 83,88.
4. K.K.Pillay, OP. cit, P.484.
5. P.T.Srinivasa Iyengar, History of the Tamils, Aisan Educational Services, Madras, 1995, P.76.
6. K.K.Pillay, OP.Cit, P.76.
7. Silap: XXIV: 62.
8. K.K.Pillay, OP, Cit, P.485-486.
9. Ibid.,

## திருஅருட்பாவில் முருகன்

தி.ம. சதீஷ் கண்ணன்,
உதவிப் பேராசிரியர், தாவரவியல் துறை,
அ.வ.அ. கல்லூரி (தன்னாட்சி),
மன்னன்பந்தல், மயிலாடுதுறை -5.

திருஅருட்பிரகாச வள்ளலார் தம்முடைய சிறு வயதில் சீர்மிகு சென்னையில் உள்ள கந்தகோட்டம் சென்று முருகப் பெருமானின் மீது மனமுருகி கவிபாடி வணங்கிவந்தார். வள்ளலார் தம்முடைய பாடல்களில் கந்தகோட்டம், திருவொற்றியூர், திருத்தணிகை, திருவலிதாயம், திருமுல்லைவாயில், திருஎவ்வுள், புள்ளிருக்குவேளூர், திருவாரூர், திருக்கண்ணமங்கை, திருவதிகை, திருவண்ணாமலை, திருமுதுகுன்றம், திருத்தில்லை, வடலூர் என்னும் பதினான்கு தலங்கள் பற்றியும் பாடியுள்ளார். இவற்றுள் கந்தகோட்டம் மற்றும் திருத்தணிகை ஆகிய இரண்டும் முருகன் தலங்கள், திருஎவ்வுள் மற்றும் திருக்கண்ணமங்கை ஆகிய இரண்டும் திருமால் தலங்கள், வடலூர் இறைவனை அருட்பெருஞ்சோதியாக உணர்த்திய தலம், ஏனைய ஒன்பதும் பாடல்பெற்ற சிவத்தலங்கள் ஆகும். மேலும், வள்ளலார் விநாயகர், நடராசர், அம்மையார், இராமர், திருமகள், கலைமகள் எனப் பல தெய்வங்கள் பற்றியும் பாடியுள்ளார். இக்கட்டுரையில் முருகப்பெருமானை வள்ளலார் சிறுவயதில் வழிபாடு செய்து அவரின் அருளைப் பெற்றது பற்றியும், பின் ஞானத்தின் எல்லை அதிகரித்து தம்முள் முருகப்பெருமானைக் கண்டு, முருகப்பெருமானின் உண்மைத் தத்துவப் புகழைக் எடுத்துக் கூறுவதைப் பற்றியும் காண்போம்.

**வள்ளலார் கண்ட தெய்வக்காட்சிகள்**

வள்ளலார் தம்முடைய குழந்தைப் பருவத்தில் பெற்ற அற்புதத் தெய்வக் காட்சியே அம்பலக்காட்சி, இதனை அருட்பாவில்,

*"தாய்முதலோ ரொடுசிறிய பருவத்தில் தில்லைத்*
*தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது*
*வேய்வகைமேல் காட்டாதே என்றனக்கே எல்லாம்*
*வெளியாகாக் காட்டியஎன் மெய்உறவாம் பொருளே."*

எனப் பாடித் தாம் கண்ட காட்சியைத் தெளிவு படுத்துகின்றார். வள்ளலார் பள்ளிப் பருவம் எய்தியதும், ஓதாதுணர்ந்து இறைவனிடமே கல்வி பயின்று நாள்தோறும் கந்தகோட்டத்திற்குச் சென்று கவிபாடி வழிபடும் பழக்கத்தைக் கொண்டிருந்தார். தெய்வமணி மாலையும், கந்தர் சரவணப்பத்தும் கந்தகோட்டத்தில் வள்ளலாரால் பாடப் பெற்றவை. அடிகளாரின் திருவாக்கில் முதன் முதலிற் பிறந்த அருட்பாடல் 'திருஓங்கு' எனத் தொடங்கும் சண்முகனைப்

பற்றிய பாடலாகும். கந்த கோட்டத்தில் வழிபட்டு வந்த வள்ளலார், தம் இல்லத்திலும் ஆறுமுகனை நிலைக்கண்ணாடி வைத்து, தீபம் ஏற்றி அமர்ந்து வழிபட்டு வரும்போது, தணிகை முருகன் தோன்றி திருக்காட்சியருளினார். இதனை,

> *"சீர்கொண்ட தெய்வ வதனங்கள் ஆறும் திகழ்கடப்பந்*
> *தார்கொண்ட பன்னிரு தோள்களும் தாமரைத் தாள்களும் ஓர்*
> *கூர்கொண்ட வேலும் மயிலும்நற் கோழிக் கொடியும் அருட்*
> *கார்கொண்ட வண்மைத் தணிகா சலமும்என் கண்ணுற்றதே"*

என்று தாம் கண்களிக்கக் கண்டதைக் கூறுகின்றார். *"கண்ணால் யானுங்கண்டேன் காண்க"* என்று மணிவாசகர் கூறியதுபோல் பிள்ளைப் பெருமான் தணிகை முருகனைக் கண்டார். மேலும், இந் நிகழ்ச்சியை *"ஆண்டாறு மூன்றாண்டில் ஆண்டு கொண்ட அருட்கடலே"* என்றும், *"ஏடகத்தே எழுதாத மறைகளெல்லாம் களித்தே, என்னுள்ளத்தே எழுதுவித்த என்னுரிமைப் பதியே"* என்றும், *"ஓதிஉணர்ந் தவரெல்லாம் எனைக்கேட்க, எனைத்தான் ஓதாமே உணர்ந்து"* என்றும் குறிப்பிடுகிறார்.

**சுப்பிரமணியம் எனும் தத்துவார்த்தம்**

கந்தன், கடம்பன், வேலன், சுப்பிரமணியர், ஆறுமுகன் எனப் பல்வேறு திருப்பெயரால் குறிக்கப்பெறும் முருகப் பெருமான் ஆறுபடை வீடு, ஆறுமுகம், "சரவணபவ" எனும் ஆறெழுத்து மந்திரம் என்று ஆறு என்பதில் தனிச்சிறப்புற்று விளங்குகின்றார். மனித தேகத்தில் புருவ மத்தியில் ஆறு பட்டையாய் உருட்சியுள்ள ஒரு மணிப் பிரகாசம் பொருந்தியிருக்கிறது, இந்தச் சோதி மணியையும், ஆறு ஆதாரங்களில் உள்ள ஆறு பிரகாசத்தையும் ஷண்முகமென்று பெரியோர்கள் சொல்லுவார்கள் என்கிறார் வள்ளலார். மேலும், இந்தத் தேகத்திலுள்ள ஆறறிவும் ஒருங்கே சேர்ந்த சுத்த விவேக மென்பதையும் ஷண்முகம் என்கிறார்கள்.

**அறுபடை வீடும் ஆறு ஆதாரங்களும்**

திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, சுவாமிமலை, திருத்தணி, பழமுதிர்ச்சோலை எனும் இந்தப் படை வீட்டுத் தலங்கள் ஆறும் நமக்குள் இருக்கும் மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிப்பூரகம், அனாகதம், விசுத்தி மற்றும் ஆக்கினை எனும் சக்தி ஆதாரங்கள் ஆறினையுங் குறிப்பதாகவும், இதனை அனுபவத்தினாலே உணரமுடியும் என்கிறார்.

படைவீடென்பது அடங்கியிருக்குமிடம். அடங்கியிருக்கும் ஸ்தானங்களே இயற்கை விளக்கம் தங்குமிடங்களாகும். இதில் ஏரகம் (சுவாமி மலை) என்பது அழகு பொருந்திய உள்ளமென்னும் இடம். திருவாவினன்குடி (பழனி) யென்பது திரு-ஆ-இனன்-குடி; திரு- இலக்குமியாகிய மகிழ்ச்சியும், ஆ- பசுவாகிய விளக்கமென்னுஞ் சீவனும், இனன்- சூரியனாகிய

புத்தியும் ஒன்று கூடி விளங்கும் ஆன்ம அறிவின் சுத்தகாரிய இடம். பழமுதிர்ச்சோலை யென்பது இந்திரிய, கரண, சீவ முதலிய அனுபவப் பழங்களாகிய பிரயோசன இன்பங்கள் நீங்கிக் குறைவற்ற அறிவாய் விளங்குமிடம். திருச்சீரலைவாய், திருச்செந்தில், செயந்திபுரம் (திருச்செந்தூர்) என்பன சுத்தமனத்தின் முகத்தில் விஷயக் கடலின் அவாவாகிய அலையடித்துக் கொண்டிருக்கும் மனம், அஞ்ஞான சூரனை நிவர்த்தித்துச் சந்தோஷகரத்தைப் பெற்ற பதிமனத்தின் விளக்கம். திருப்பரங்குன்ற மென்பது அசைவில்லாத ஒன்றான விளக்கத்தையுடைய விவேக உல்லாச இன்ப நிறைவு. குன்றுதோறாடல் (திருத்தணி) என்பது மலைதோறாடல், மலை என்பது அலைவில்லாத உணர்ச்சிக்கு முதற்காரணமாயுள்ள துரிய நன்னிலை. இத்துரியம் பரதுரியம், சுத்ததுரியம், குருதுரியம், சிவதுரியம், சக்திதுரியம் முதலிய துரியமலைகள் அனுபவக் காட்சியில் அனந்தம் உண்டு என்கிறார். மேற்குறித்த அனுபவக் காட்சிகளுக்குத் தேகத்திலிடமாவது; கோசத்தினடி, தொப்புளின் கீழ், தொப்புள், வயிற்றில் தொப்புளுக்கு மேல், மார்புக்கு கீழ், மார்பு நெஞ்சு ஆக ஆறு என்று எடுத்துரைக்கின்றார்.

**பிறப்பும் சிறப்பும்**

முருகப் பெருமான் கங்கையிலுள்ள நாணற்காட்டிற் பிறந்தது என்பது, ஆன்ம இயற்கைக் குணமாகிய தயவே கங்கை. ஆன்மாவின் அனுபவ மத்திய நிலையகிய சகித்தலென்னும் - சர்வ விஷயங்களிலும் அகங்கார மென்னும் தலையெழாமல், கீழ்ப்படிந்த குணமே நாணல். இவ்விரண்டின் மத்தியில், அனுபவத்திற்கு இயற்கை விளக்கமாய் விளங்கும் பகுத்தறிவாகிய விவேகம் தோன்றுவதே கங்கையிலுள்ள நாணற்காட்டிற் பிறந்தார் என்பதாயிற்று. பின் கார்த்திகை அரிவை பால் கொடுத்த தென்பது, விவேக விளக்கந் தோன்றுங்கால், பெண்பாலின் குணமாகிய சமனையென்னும் சக்தியின் விளக்கத்தால் இன்பமாகிய அமுத கிரணம் விவேகத்திற்கு ஊட்டுவதே பால் கொடுத்தல் எனும் நிகழ்வாகும். சுவாமி அம்மையிடத்தில் குழந்தையைக் கொடுக்க, அம்மை குழந்தை ஆறையும் ஒன்றாய் சேர்த்துக் கையால் தடவ, முகம் ஆறும் ஒன்றி வேறாயும், உடல் ஒன்றாயும், கால் இரண்டாயும் ஆனது எவ்வாறெனில் பரமாத்மாவாகிய சுவாமி அருளென்னுஞ் சக்தியுடன், தயவென்னும் நதிக்கரையில், சகிப்பென்னும் நாணற்காட்டில், சமாதி முதலிய காலத்தில் தோன்றி விளங்கும்போது, சுத்த வாசனா தோற்றமாகிய ஆறு பொறியாகிய குழந்தையை அருள் வசமாக்க, அருட்சத்தி விகாரமன்றி அவிகாரமாய் ஆறுபொறியையும் அருட்போதக்கையால் அடக்க, விஷயங்களை அறிந்து தோயாமலிருக்க ஆறுபொறிகள் ஒன்றாயும், குறி ஆறும், அனுபவவிளக்கம் சாதனவிளக்கம் இரண்டுந் திருவடியாயுந் தோன்றி, சமாதிநிலை விளங்குவதே என விவரிக்கின்றார்.

**சுப்பிரமணியர் வடிவம்**

மனித தேகத்தில் மூலாதாரத்திற்கு மேல் மூன்றிடந்தாண்டி விசுத்தியாகிய இருதய ஸ்தானத்தில் இடது புறத்தில் ஆறு தலையுடைய

ஒரு நாடியிருக்கின்றது இதைச் சுப்பிரமணியம் என்று சொல்லுவார்கள். அதுபோல ஆறு சோதியாயும், ஆறறிவாயும், ஆறு தலையுடையதாயும் (நாடி) இருப்பதால் முகம் ஆறு என்றும், கால் இரண்டென்பது தோன்றும் அறிவு, தோற்றுவிக்கும் அறிவு என்னும் இரண்டறிவாகிய விஷயவுணர்ச்சியும், நிர்விஷய உணர்ச்சியுமேயாம். கை பன்னிரண்டென்பது ஆறு ஆதாரங்களிலுள்ள பிரகாச - அப்பிரகாசமாகிய பன்னிரண்டுமாம். கையிலுள்ள தசாயுதம் அபய வரத மென்பவை முறையே வச்சிரம் என்பது தீட்சண்ணியவுணர்ச்சி; வேல் என்பது சக்தி; அருள் என்பது அறிவு; மணி என்பது ஆன்ம விளக்கமாகிய நாதம்; த்வஜம் என்பது புகழாகிய கீர்த்தி; ஸரஸிஜம் என்பது தயவு; குக்குடம் என்பது மாச்சரியமில்லாத நிறைவு; பராகம் என்பது பாச நீக்கம்; தண்டம் என்பது வைராக்கிய அறிவு; பாணம் என்பது அன்பு. மேலும் இரண்டு கைகளான அபயம் என்பது சமாதான உணர்ச்சி; வரதம் என்பது நிராபாரமாகிய ஆதரவென்னுஞ் சகிப்பு ஆகும். கடப்ப மாலை என்பது சர்வ தத்துவக் கண்டனம்.

சுப்பிரமணியம் ஒருமுகம், மூன்றுமுகம், நான்குமுகம், ஆறுமுகம் ஆனதற்குக் காரணம்; ஒன்று மிரண்டுமல்லாத ஒப்பற்ற பரப்பிரம சொருபம் நம்பொருட்டுக் குழூஉக்குறியாய், பாவனைக்கு ஒன்றென்று நிச்சயிக்கும், பரகாரண நிமித்தம் ஆகிய அறிவுருவமே ஒருமுகமென்று ஞானிகள் சொல்லுவார்கள். சுத்தராஜசம், சுத்ததாமசம், சுத்த சாத்விகமாகிய மூன்று குணங்களின் கூட்ட விளக்கமாகிய முக்குண விளக்கமே மூன்றுமுகம். பசுமனம், சுத்தமனம், உள்மனம், சங்கலித மனம் என்னும் நான்கு தத்துவங்களின் கூட்ட விளக்கமே நான்குமுகம். சத்த அறிவின் மூலம், ஒளி அறிவின் மூலம், சுவை அறிவின் மூலம், பரிச அறிவின் மூலம், வாசனை அறிவின் மூலம், ஆத்ம அறிவின் மூலம் என்னும் ஆறு தத்துவங்களின் கூட்டறிவின் மூலகாரணப் பிரகாச விளக்கமே ஆறுமுகம் என முகங்களின் வெவ்வேறு அமைப்பையும் அதற்கான தத்துவத்தையும் தெளிவுப்படுத்துகிறார் வள்ளலார்.

**மயில்**

பல வர்ணமுள்ளதும், விசித்திர வடிவமானதும், மறதி முதலிய குணங்களுக்குக் காரணமானதும், மாயைக்கு இருப்பிடமாயுள்ளதும் ஆன மூலப்பிரகிருதியே மயிலென்பது. மயிலின் மேல் சுவாமி ஏறிக்கொண்டிருத்தல் என்பது, பிண்டாண்டமாகிய இந்தத் தேகத்திலும் அண்டத்திலும், மூலஞ்ஞான காரணமாயுள்ள கேவலமாகிய பிரகிருதி மாயையின் அசுத்தகேவலமாகிய அசுத்தாசுத்த மகா அகங்காரமென்னும் இராட்சச அம்சமான சூரதத்துவம் அதின் சேதரமான மூவகைத் தத்துவத்தோடு, அஞ்ஞான திசையில், ஆன்ம அறிவையும், பிண்ட விளக்கமான தேவர்களையும், விஷய விளக்கமான இந்திரியங்களையும், நாடி விளக்கமான யந்திரங்களையும், பிராண விளக்கமாகிய உயிரையும் விழுங்கித் தன்னரசு செலுத்தும். அந்தச் சூரதத்துவத்தை வதைக்கும் போது, மகாமாயையாகிய மாமரமாயும், மாச்சரியமாகிய கோழியாயும், விசித்திரமாயை யென்னும் மயிலாயும்,

மகாமதமாகிய யானை முகமாயும், அதிகுரோதமாகிய சிங்கமுகமாயும் விளங்கும்.

மயிலின் காலின்கீழும் வாயிலும் பாம்பு இருப்பதென்பது, விசித்திரமாயையின் காரி உருமான அகங்காரம் தோன்றி வெளிப்படுங்கால், மூலாங்காரத்திலும் அதிகரிப்பிலும் பிராணவாயு வென்னும் பாம்பானது கீழும் மேலும் உண்டாயினும், அகங்காரத்தின் முகப்பாகிய மயில் வாய்மூலமாய்ப் பிராணவாயுவினது வேகத்தை விழுங்கிக் கொண்டிருப்பது இயற்கைதான் என இயல்பாக கூறுகிறார்.

சர்வ தத்துவங்களையுந் தன்வசமாக்கி, அகங்காரக் கொடி கட்டி, அஞ்ஞான நாடகம் செய்த தத்துவ அகங்கரிப்பை அடக்கி, பதி, பசு, பாசம், அநாதிநித்தியம் என்னும் சித்தாந்தத்தை விளக்கிக் காட்டுவதற்காக, மாச்சரிய குக்குடத்தைப் போதமாகிய கையால் அடக்கியும், விசித்திரமாயையாகிய மயிலைக் கீழ்ப்படுத்தி மேலிருந் தடக்கியும், ஆபாச தத்துவங்களைச் சம்மரித்தும், சுத்த விஷயபுவனமாகிய தேவலோகத்தை நிலைபெறச் செய்தும், இந்திரபதியான ரூபேந்திரனுடைய பெண்ணாகிய தாந்தர தத்துவ மென்னுந் தெய்வயானையை இடப்பாலமைத்தும், இந்திரியங்களாகிய வேடர்களின் கண்ணிற் புலப்பட்ட மானச மென்னும் மானினது கர்ப்பத்திலுண்டான வள்ளியாகிய சுத்த மனதை வலத்தில் வைத்தும், நவதத்துவ காரணமாகிய நவவைரகத் தத்துவமாகிய வீரர்களைச் சமீபத்திலிருத்தியும், சகல கேவலங்களுக்கும் நினைப்பு மறப்புக்கும் இடையில் விவேக வடிவாயும், பாதம் முதல் நாபி வரையில் உஷ்ணவுருவாயும், நாபி முதல் கண்டம் வரையில் ஆதாரநாடி உருவாயும், கண்டம் முதல் புருவமத்தி வரையில் மணியுருவாயும், உச்சியில் ஒளியுருவாயும், புத்தியில் சுத்த அறிவாயும், அனுபவத்தில் நித்தியமாயும், எங்கும் நிறைவாயும், கோணத்தில் ஆறாயும், எக்காலமும் மதங்களில் ஆறாயும், சமயத்தில் ஆறாயும், சாதியில் ஆறின் கூட்டமாயும் விளங்குகின்ற உண்மைக் கடவுளே சுப்பிரமணியம் என்று விளக்குகிறார்.

### பிரம்மாவைச் சிறையிடுவது

சுத்த மன சங்கல்ப சிருஷ்டித் தொழிலையுடைய பிரமாவாகிய மனத்தை கிரியையில் பிரவேசிக்க வொட்டாமல், சுத்த விளக்க விவேக நிறைவாயுள்ள சுப்பிரமணிய தத்துவத்தால் சர்வ பிண்ட விஷயங்களாகிய தோன்றல், வளர்தல், குற்றம் நீங்கல், ஒன்றினிடத்தில் மலைவடைதல், தெளிதல் முதலிய பஞ்ச கிருத்தியங்களை விவேக முன்னிலையில் நடத்துங்கால் சலிப்பறப் பந்தித்து இருப்பதே சிறையிட்டது எனச் சிறையிலிடும் நிகழ்ச்சியின் தத்துவத்தை எடுத்துரைக்கிறார்.

### சிவனுக்கு உபதேசித்தல்

உருத்திர தத்துவமாகிய பிரேரக நிலையான காரண தத்துவ முடிவான ஈசுவர தத்துவத்தினியற்கை ஞானம் ஏறிக் கிரியை குறைந்திருப்பதால்,

கிரியாகாரண பூதமாயும், ஞானகாரண அமிசமாயும் விளங்கும் பிரணவமாகிய உண்மை நிறைவான கிரியையற்ற நிர்விஷய அனுபவம் ஈசுவர தத்துவத்திற்கு நியதி செய்வது - சுத்த விவேக தத்துவ அதிஷ்டாதாவான சுப்பிரமணியம் அன்றித் தோன்றாது. இத் தத்துவத்துவமே உபதேசஞ் செய்தாரெனலாயிற்று எனக் கூறுகிறார்.

சரவணபவ எனும் மந்திரம்

இருதயாகாச ஷட்கோண வடிவமே யந்திரமாய், அதில் அங்க வேறுபாடே நாற்பத்து முக்கோணமாய், உபாங்கமே நவகண்டமாய், உண்மையே சகரமாய், விஷயநீக்கமே ரகரமாய், நித்திய திருப்பதியே வகரமாய், நிர்விஷயமே ணகரமாய், பாவ நீக்க ஏதுவே பகரமாய, ஆன்ம இயற்கைக் குணமே வகரமாய் விளங்குவதே ஆறெழுத்தான சரவணபவ ஆகும் எனக் குறிப்பிடுகிறார்.

முடிவுரை

இவ்வாறாக சுத்த உள்ளமாய், சோதியாய் நம்முள்ளே காணப்படும் இந்த அற்புத தெய்வத்தைத்தான் நாம் வெளியில் தேடிக்கொண்டிருக்கிறோம். *“பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும்பொய்மை, பேசா திருக்க வேண்டும்”* என்று சிறுவயதில் முருகப் பெருமானை வேண்டிக்கொண்ட வள்ளலார் முருகப் பெருமானின் உண்மைத் தத்துவத்தை நமக்கெல்லாம் தெளிவுப் படுத்தியிருக்கிறார். அருணகிரிநாதர் எல்லாமே ஒரு முகத்தோடு செய்த நீ ஆறுமுகமானது எவ்வாறு? என அதன் பொருளை அருளவேண்டும் எனக் கேட்டுத் தெளிந்தார். நம் முன்னோர்கள் அன்று இயற்கைச் சக்தியை, இறைவனின் தத்துவத்தையே உருவாமாக்கி நம்மை உணரச் செய்தார்கள். ஆனால் இன்று உருவத்தையே தெய்வமாக வழிபட வைக்கின்றார்கள். நாம்யாவரும் அவ்வுண்மைக் கடவுளை வேதாகம விதிப்படி உண்மையாய்ப் பத்திசெய்து அவர் அருளைப் பெறவேண்டும் என்று வள்ளலார் குறிப்பிடுகிறார். ஆறறிவே ஆறுமுகம், சுத்த உள்ளமே சுப்பிரமணியர், பகுத்தறிவே இந்தப் பரமசிவனின் மகன் எனத் தெளிவோம்.

## ஆஸ்திரேலியாவில் ஆறு படை வீடுகள்

முனைவர் சந்திரிகா சுப்ரமண்யன்
வழக்குரைஞர்
ஆஸ்திரேலியா

உலகின் மிகப் பழைமையான கண்டம் ஆஸ்திரேலியா. சுமார் நாற்பதாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக பழங்குடியின மக்கள் இங்கு வசித்து வருகிறார்கள். 1788ஆம் ஆண்டு பிரித்தானியர்களின் வருகையை அடுத்து காலனித்துவ நாடாக மாறிய ஆஸ்திரேலியா, கடந்த 200 வருடங்களுக்குள் 24.2 மில்லியன் மக்கள் தொகையைக் கொண்ட நாடாக வளர்ந்திருக்கிறது. இங்குள்ள இயற்கை பழைமை, புவியியல் வேறுபாடுகள், மக்களின் ஆயுள் நீட்டிப்பு மற்றும் இளைய தலைமுறையின் ஆற்றல் என்பன ஆஸ்திரேலியாவை நோக்கி பிறநாட்டவரைக் கவரச் செய்கின்றன. பன்மொழி, பல்சமய மற்றும் பல் கலாச்சாரங்களைக் கொண்ட நாடான ஆஸ்திரேலியாவில், ஏறக்குறைய நூறு நாடுகளைச் சேர்ந்த, சுமார் நூற்றுக்கும் மேலான எண்ணிக்கையில் பிற மொழிகளைப் பேசும் மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். பிங் வாழ்பவர் அனைவரும் தத்தமது கருத்துக்களை வெளியிடவும் விரும்பிய சமய நம்பிக்கைகளைப் பின்பற்றவும் இந்நாட்டில் முழுச் சுதந்திரம் வழங்கப்பட்டிருக்கிறது.

1981ஆம் ஆண்டுக்கு முன் வரை, ஆஸ்திரேலியாவில் சுமார் ஆயிரம் தமிழர்கள் மட்டுமே வாழ்ந்து வந்தனர். எனினும் தொடர்ந்து வந்த ஆண்டுகளில் இந்த எண்ணிக்கை படிப்படியாக உயரத் தொடங்கி இன்று ஏறக்குறைய ஐம்பது ஆயிரம் தமிழர்கள் இங்கு வாழ்ந்து வருகிறார்கள். ஆஸ்திரேலியாவின் ஏனைய இனக் குழுக்களுக்கு இணையாக, புலம்பெயர் தமிழ்ச் சமூகமும் தாம் வாழும் பிரதேசங்களில் தமது சமய மற்றும் கலாச்சார நிலையங்களையும் நிறுவத் தொடங்கினர். தமது மொழியையும் கலாச்சாரத்தையும் சமயத்தையும் வளர்த்தெடுக்க, தமிழ் இந்துக்களுக்கு ஆஸ்திரேலியா ஒரு சொர்க்க பூமியாகத் திகழ்கிறது. ஆரம்ப கால இலங்கைத் தமிழ் இந்துக்களின் வரவு கல்வியறிவு பெற்ற சமூக வரவாகும். வேலை வாய்ப்பும், வருமானமும் குடியேறத் தொடங்கிய குறுகிய காலப் பகுதிக்குள் தமக்க்குத் தேவையான கோயில்களைத் தாமே நிர்மாணிக்கத் தொடங்கினர்.

நியூ சௌத்வேல்ஸின் ஹெலன்ஸ் பேர்க்கில் அமைந்துள்ள ஸ்ரீவெங்கடேஸ்வரர் கோயிலே ஆஸ்திரேலியாவில் நிர்மாணிக்கப்பட்ட முதல் கோயிலாகும். ஆஸ்திரேலிய இந்துச் சமூகத்தினரின் உடனடி ஆன்மீகத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொள்வதற்கு இவ்வாலயம் வழிவகை செய்தது.

நியூ சௌத்வேல்ஸ், விக்டோரியா, மேற்கு ஆஸ்திரேலியா, குவீன்ஸ்லாந்து, இதற்கு ஆஸ்திரேலியா, டஸ்மேனியா ஆகிய ஆறு மாகாணங்களைக் கொண்டது ஆஸ்திரேலியா தவிர ஆஸ்திரேலியன்

கெப்பிட்டல் மற்றும் வடக்கு ஆஸ்திரேலியா என இரண்டு யூனியன் பிரதேசங்களையும் உள்ளடக்கியது. மேலே சொன்ன அனைத்துப் பகுதிகளிலும் தமிழர்கள் வாழ்ந்து வருவது குறிப்பிடத்தக்கது. தமிழர்களில் 90 சதவீதமானோர் இந்துக்களே! இவர்களின் ஆன்மிகத் தேவைகளுக்காக, 1994ஆம் ஆண்டு முதல் வினாயகர், சிவன் மற்றும் முருகன், துர்க்கை ஆகிய கடவுளருக்கான கோயில்கள் நிர்மாணிக்கப்படத் தொடங்கின. நடப்பு ஆண்டுக்கான ஆஸ்திரேலியாவின் மக்கள் தொகை கணக்கெடுப்பு அறிக்கையின்படி, சுமார் ஐம்பதாயிரம் தமிழர்கள் அங்கு வசித்து வருகின்றனர். ஆஸ்திரேலியாவில் வாழும் தமிழர்களில் பாதிக்கும் மேற்பட்டோர் நியூ சௌத் வேல்ஸில் வசித்து வருகின்றனர், அடுத்து மெல் பேர்னில் வசிக்கின்றனர்.

கோயில்களைப் பொறுத்தவரையில், டஸ்மேனியா மாகாணத்தைத் தவிர ஆஸ்திரேலியாவின் ஏனைய அனைத்து மாகாணங்களிலும் யூனியன் பிரதேசங்களிலும் இந்துக் கடவுளருக்கான கோயில்கள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. நியூ சௌத் வேல்ஸ், விக்டோரியா மற்றும் மேற்கு ஆஸ்திரேலியா ஆகிய மாகாணங்களில் ஒன்றுக்கும் மேற்பட்ட கோயில்கள் - குறிப்பாக, முருகன் கோயில்கள் நிர்மாணிக்கப்பட்டுள்ளன. இவை தவிர, ஆஸ்திரேலியன் கெப்பிட்டல் யூனியன் பிரதேசமான கன்பராவிலும் முருகன் கோயில் ஒன்று இருக்கிறது. அண்மைய தகவல்களின்படி சுமார் 150க்கும் மேற்பட்ட தமிழ்க் குடும்பங்கள் டஸ்மேனியா உள்ளன. விரைவில் இங்கும் கோயில் ஒன்று உருவாகி விடும் என்று நம்பப்படுகிறது.

வைகாசிக் குன்றில் வடிவழகன் கோயில் நியூ சௌத் வேல்ஸ் ‘சிட்னி முருகன்’ என்று குறிப்பிடப்படும் முருகன் கோயில், நியூ சௌத் வேல்ஸ் மாகாணத்தின் தலைநகரான சிட்னியில் அமைந்துள்ளது. ‘குன்றுதோறும் ஆடும் குமரன்’ என்பதற்கிணங்க, குறிஞ்சி நிலத்தின் மலையும் மலைசார்ந்த இடத்துக்குரிய கடவுளான முருகனின் இந்த ஆலயமும் ‘மேய்ஸ் ஹில்ஸ்’ என்ற மலைப் பகுதியிலேயே அமைந்திருக்கிறது. மேய்ஸ் ஹில்ஸ் என்ற இப்பகுதியைத் தற்போது ‘வைகாசிக் குன்று’ என்றே ஆஸ்திரேலியத் தமிழர்கள் அழைக்கிறார்கள்.

சிட்னியில் முருகன் வழிபாடு தோன்றுவதற்குக் காரணகர்த்தாவாக இருந்தவர் திரு.சிவஜோதி தணிகை ஸ்கந்தகுமார் என்ற இலங்கையர். மேஸ் ஹில்ஸ் ஆலயத்தின் மூலவராக வீற்றிருக்கும் முருகப் பெருமானின் பஞ்ச உலோகத்தினால் ஆன திருவுருவச் சிலையை 1983ஆம் ஆண்டு யாழ்ப்பாணத்தில் இருந்து கொணர்ந்தவரும் இவரே!

தாம் கொணர்ந்த சிலையைத் தனது வீட்டில் வைத்து இவர் வழிபடத் தொடங்கினார். காலப் போக்கில், இவரது அழைப்பை ஏற்று வேறு சில பக்தர்களும் இவ்வழிபாடுகளில் கலந்துகொண்டனர்.

1986ஆம் ஆண்டில் இவ்விக்கிரகத்துக்க, ‘ஸ்ட்ரெத்.’.பீல்ட்’ பெண்கள் மேல்நிலைப் பாடசாலையின் அறை ஒன்றில் வைக்கப்பட்டு, பிரதி

வெள்ளிக்கிழமை தோறும் பூஜை வழிபாடுகள் நடத்தப்பட்டன. இந்த நிலையில், முருகனுக்கு ஒரு ஆலயத்தை நிர்மாணிப்பதற்காக 'சைவ மன்றம்' என்ற ஒரு அமைப்பு 1985ஆம் ஆண்டு உருவாக்கப்பட்டது. ஏறக்குறைய ஒரு சகாப்த கால கடும் முயற்சியின் பின் இவ்வாலயம் உருப்பெற்றது. இதையடுத்து, வழிபடப்பட்டு வந்த முருகப் பெருமானும் 'சிட்னி முருகன்' என்று அழைக்கப்படலானார்.

தமிழ்க் கலாச்சார நிலையம் ஒன்றை அமைத்து, அங்கே முருகன் வழிபாடுகளை நடத்துவது என்ற திட்டத்தின் அடிப்படையிலேயே இந்த இடம் வாங்கப்பட்டது. ஈற்றில் அங்கு முருகனுக்கான கோயிலைக் கட்டியெழுப்புவது என்று தீர்மானிக்கப்பட்டது. அதன்படி, 1994ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் சிட்னி முருகன் கோயில் மற்றும் தமிழ்க் கலாச்சாரக் கல்வி நிலையத்துக்கான அத்திவாரம் இடப்பட்டது. எவ்வாறெனினும் 1997ஆம் ஆண்டளவிலேயே ஆரம்பிக்கப்பட்ட நிர்மானப் பணிகள் 1999ஆம் ஆண்டே நிறைவுற்றன. அவ்வாண்டு ஜூன் 17ஆம் திகதி சிட்னி முருகன் கோயிலில் கும்பாபிஷேகம் நடத்தப்பட்டு பக்தர்கள் வழிபாட்டுக்காகத் திறந்து வைக்கப்பட்டது.

ஆலயம் அமைக்கப்பட்டு ஒரு வருடம் நிறைவுறுவதற்குள்ளாகவே முதலாவது மகா கும்பாபிஷேகம் நடத்தப்பட்டது குறிப்பிடத்தக்க ஒரு அம்சம். முருகனையே பிரதம வழிபடு தெய்வமாகக் கொண்ட இக்கோயிலில் சிவன் மற்றும் அம்பாள் சன்னிதிகளும் அமையப்பெற்றுள்ளன. பிரமாண்டமான இந்த முருகன் கோயில் இன்று, ஆஸ்திரேலியச் சைவர்களுக்கு ஆன்மிக மற்றும் சமூகத் தொண்டுகளுக்கான நிலைக்களனாக விளங்கி வருகிறது.

**சண்ஷைன் முருகன் கோயில் - விக்டோரியா**

விக்டோரியாவில் முருக வழிபாட்டைத் தொடங்கி வைத்தவர் திருமதி மணி செல்வேந்திரா என்ற இலங்கைப் பெண்மணியே! இவர், பஞ்ச உலோகங்களால் ஆன வேல் ஒன்றை 1991ஆம் ஆண்டு கொண்டு வந்ததையடுத்தே, மெல்பேர்னின் சனசமூக நிலையங்கள் மற்றும் பக்தர்களின் வீடுகளில் முருக வழிபாடு தொடங்கப்பட்டது. மணி செல்வேந்திராவின் தந்தை திரு.வி.தம்பிநாயகம் ஒரு முருக பக்தர். மெல்பேர்னில் முருகன் கோயில் ஒன்றை அமைக்க வேண்டும் என்பது அவரது பேரவாவாக இருந்தது. அதை நிறைவேற்றுவதற்கான முயற்சியில் மணி செல்வேந்திரா இறங்கினார். இதற்காக திரு.கணேஷமூர்த்தி என்பவரது தலைமையில் 1995ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்ட கலாச்சார நிலையம், முருகன் கோயிலுக்கான ஆரம்பகட்டப் பணிகளைச் செய்து முடித்தது. வேல் வடிவில் வேலவனை வணங்கும் முறைக்கிணங்க, யாழ்ப்பாணம் நல்லூரைப் போலவே இங்கும் மூலஸ்தானத்தில் வேல் மட்டுமே நிறுவப்பட்டது. தற்போது முருகன், வள்ளி, தெய்வானை மற்ற தெய்வங்களைப் பிரதிட்டை செய்திருக்கிறார்கள்,

**குன்றத்துக் குமரன் முருகன் கோயில் - விக்டோரியா**

மெல்பேர்ன் ரொக்பாங் குன்றத்துக் குமரன் ஆலயத்தின் தமிழ்க் கல்வி மற்றும் கலாச்சார அமைப்பின் மூலம் இத்திருக்கோயிலுக்கான நிதியம் உருவானது. மெல்பேர்ன் ரொக்பாங் குன்றத்துக் குமரன் ஆலயத்தின் மகாகும்பாபிஷேகம் 2012இல் நடைபெற்றது.

மெல்பேர்ன் ரொக்பாங் குன்றத்துக் குமரன் ஆலயத்தின் வளர்ச்சி அளவிடற்கரியது. ஆரம்பத்தில் சிறியதாகத் தொடங்கப்பட்ட கோயில் இன்று பெரிய அளவில் வளர்ச்சி பெற்றுள்ளது. ஆகம முறைப்படி அமைக்கப்பட்டுள்ள குன்றத்துக் குமரனுக்குப் பத்து நாட்கள் பகல் இரவுத் திருவிழாக்கள், கொடியேற்றம், சப்பறம், தேர்த்திருவிழா, தீர்த்தோற்சவம், பூங்காவனம் போன்ற முக்கிய தினங்கள் விசேஷமாக நடைபெறுகின்றன.

**ஆறுபடை வீடு முருகன் கோயில் - கன்பரா**

இவ்வாலயம், ஆஸ்திரேலிய கெப்பிட்டல் யூனியன் பிரதேசத்தின் டொரன்ஸ் எனுமிடத்தில் அமைந்துள்ளது. முருகனை மூலவராகக் கொண்ட முருகனின் சன்னிதி ஆகம விதிமுறைகளின்படி இந்திய ஸ்தபதியாரால் நிர்மாணிக்கப்பட்டுள்ளது. முருகனுடன், வினாயகர், சிவன், வள்ளி - தெய்வானை சமேத முருகப் பெருமான் மற்றும் ஸ்ரீதேவி - பூதேவி சமேத மகாவிஷ்ணு, நடராஜர், அம்மன், துர்க்கை, லட்சுமி, சரஸ்வதி, வைரவர் மற்றும் நவக்கிரக சன்னிதிகளும் இங்கு அமையப்பெற்றுள்ளன. இவ்வாலயத்தின் சிறப்பம்சம் என்னவென்றால், முருகனின் ஆறுபடை வீடுகளையும் குறிக்கும் வகையில் முருகனுக்காக ஆறு சன்னிதானங்கள் அமையப்பெறவுள்ளன.

சிட்னி முருகன் மற்றும் கன்பரா முருகன் கோயில்களைப் போலவே, கன்பரா முருகன் கோயிலும் மலைப்பாங்கான இடத்திலேயே அமைந்து வருவது குறிப்பிடத்தக்கது.

இக்கோயிலின் பரிபாலனத்தைக் கன்பரா சைவக் கோயில் மற்றும் கல்வி அமைப்பு மேற்கொண்டு வருகிறது. முருகன் கோயில் தவிரவும் நூலகம் மற்றும் கல்வி நிலையத்தை அமைப்பதும் இவ்வமைப்பின் நோக்கங்களாகும். ஒரு தனியார் நிறுவனத்துக்கு நிகராக இயக்குனர் சபை மற்றும் உறுப்பினர் சபை என்பவற்றுடன் இயங்கினாலும் இவ்வமைப்பு அனைவருக்கும் பொதுவானதே! ஆனீகச் சேவை செய்ய விரும்பும் எவருக்கும் வாய்ப்பளிக்கும் பொது நிறுவனமாக இவ்வமைப்பு இயங்கி வருகிறது.

**பால முருகன் ஆலயம் மேற்கு ஆஸ்திரேலியா**

மேற்கு ஆஸ்திரேலிய மாகாணத்தின் தலைநகர் பேர்த்துக்குச் சுமார் நாற்பது கிலோ மீட்டர் தொலைவிலுள்ள மண்டோகலப் என்ற நகரில் அமைந்துள்ளது இவ்வாலயம்! ஐந்து ஏக்கர் விரிந்து பரந்திருக்கும் பசுமையான மலைப்பாங்குப் பிரதேசத்தில் இக்கோயில் அமையப்பெற்றுள்ளது.

தமிழ்நாட்டுக் கோயில்களின் அமைப்பையொத்த வடிவில் இக்கோயில் அமைந்துள்ளது. மேற்கு ஆஸ்திரேலியாவில் முருக வழிபாடு 1996ஆம் ஆண்டு ஆரம்பிக்கப்பட்டது. சைவ மகா சபையின் பரிபாலனத்தில் இக்கோயில் இயங்கி வருகிறது. கோயிலுக்காக வாங்கப்பட்ட இடத்தில் ஏற்கனவே ஒரு கட்டடம் நிர்மாணிக்கப்பட்டிருந்தது. அக்கட்டடமே கோயிலாக உருமாற்றம் பெற்றது. இங்குப் பாலமுருகன் தவிரவும் மேலும் பல கடவுளர் சன்னிதானங்கள் அமையப்பெற்றுள்ளன.

இந்து விழாக்கள் - குறிப்பாக, முருகனுக்கு உகந்த தைப்பூசம் போன்ற திருநாட்களில், நூற்றுக்கணக்கான பக்தர்கள் முருகன் அருள் பெற இக்கோயிலுக்குத் திரள்வது வழக்கம்! தற்போது, இவ்வாலய வளாகத்தினுள் புத்தம் புதிய ஆலயம் ஒன்று நிர்மாணிக்கப்பட்டுள்ளது. சுமார் ஒன்றரை மில்லியன் ஆஸ்திரேலிய டொலர் மதிப்பில் அமைக்கப்பட்டுள்ள இவ்வாலயம் மொத்தமாக 1350 சதுர மீற்றர் பரப்பில் அமையவுள்ளது. மூலவர் கோபுரம் சுமார் பத்து மீற்றர் உயரத்தில் நிர்மாணிக்கப்படவுள்ளது. கோயிலின் கிழக்குப் பகுதியில் அமையவுள்ள ராஜகோபுரத்தின் உயரம் பதினைந்து மீட்டர்களாகும். இவ்வாலயம், தமிழர்களின் பேர்த்தின் முக்கிய சைவ அடையாளமாகத் திகழ்கிறது. வயதான தமிழ் இந்துக்கள் இங்குத் தங்கி, தமது வாழ்நாளை ஆன்மீக சேவையில் செலவிடும் வகையில். இவ்வாலயத்திற்கு அருகாமையிலேயே வயோதிபர் இல்லம் ஒன்றும் அமையப்பெறவுள்ளது.

**பால விநாயகர் ஆலய முருகன் சன்னதி - குயீன்ஸ்லாந்து**

இந்து ஆலய சங்கம் 25 ஏப்ரல் 1986 பிரிஸ்பேனில் வளரும் இந்து சமூகத்துக்குக் கோவில் தேவை என்பதினை உணர்ந்து, நாலரை ஏக்கர் நிலப்பரப்பில் மக் லீன் என்ற இடத்தில் பிள்ளையார் கோயில் ஒன்றைக் கட்டியது. இதன் கும்பாபிஷேகம் 1993 இல் நடந்தது. சிறப்பான முருகன் சன்னிதி ஒன்றினை முருக பக்தர்களுக்காக நிறுவியது.

1985ஆம் ஆண்டுக்கு முன், ஆஸ்திரேலியாவில் கூட்டு முருக வழிபாடோ, கட்டமைக்கப்பட்ட முருக வழிபாட்டிடமோ இருக்கவில்லை. கூட்டுப் பிரார்த்தனை வடிவிலேயே ஆஸ்திரேலியாவில் முருக வழிபாடு தோற்றம் பெற்றது என்பதையும் பின்னாட்களில், கூட்டு வழிபாடுகளில் பங்கேற்றவர்கள் அமைப்புகளை உருவாக்கி அவற்றின் ஊடாகவே முருகப் பெருமானின் கோயில்களை அமைத்தார்கள்.

ஆஸ்திரேலியாவில் முருக வழிபாட்டையும் முருகனுக்கான கோயில் நிர்மாணத்தையும் ஆரம்பித்ததில் முன்னின்றவர்கள் இலங்கைத் தமிழர்களே என்பது! மற்றொன்று, இலங்கைத் தமிழர்களின் வழிபாட்டில் முருகனுக்கு முக்கிய இடம் இருக்கிறது என்பது மறுக்க முடியாத உண்மை.

மேலே விவரிக்கப்பட்டிருக்கும் ஆறு கோயில்களுமே இலங்கைத் தமிழர்களாலேயே நிர்மாணிக்கப்பட்டுள்ளன.

ஆய்வு உதவி

1. மகாகும்பாபிஷேக நினைவுமலர். முருகன் ஆலய பரிபாலன சபை, சிட்னி, ஆஸ்திரேலியா, ஜூன் 1999.

2. முருகன், தமிழர்களின் கடவுள். கலாநிதி ஏ.கந்தையா, நடனாலயா பதிப்பகம், சிட்னி, ஆஸ்திரேலியா. மீள்பதிப்பு மற்றும் மீள்தலைப்பிடப்பட்டது, டிசம்பர் 1998.

3. ஆஸ்திரேலியாவில் தமிழர்கள். கலாநிதி ஏ.கந்தையா, நடனாலயா பதிப்பகம், சிட்னி, ஆஸ்திரேலியா. மீள்பதிப்பு மற்றும் மீள்தலைப்பிடப்பட்டது, டிசம்பர் 1998.

4. உதயம் (மாதாந்த இரு மொழிப் பத்திரிகை) மலர் 4, இதழ் 10. ஆசிரியர் கடிதம். எழுதியவர், கே.இரத்தினகோபால், பெப்ரவரி 2001.

5. மகாகும்பாபிஷேக நினைவுமலர். ஸ்ரீ வெங்கடேஸ்வரர் கோயில் சபை, ஆஸ்திரேலியா, ஜனவர் 1994.

6. தமிழ் லெக்ஸிகன். தொகுதிகள் 1 முதல் 7, சென்னை பல்கலைக்கழகம், 1982.

7. மேற்கு ஆஸ்திரேலியாவின் சைவ மகா சபை மூலம் பெப்ரவரி 2001இல் அனுப்பிவைக்கப்பட்ட தகவல்கள் அடங்கிய மின்னஞ்சல்கள்.

8. கன்பரா முருகன் ஆலய மலர். தொகுதி 2.'.00, கன்பரா சைவக் கோயில் மற்றும் கல்விச் சபை, 15 ஜூன் 2000.

9. சிட்னி முருகன் கோயில் மகா கும்பாபிஷேக நினைவுமலர். 177 ஜூன் 1999.

10. மெல்பேர்ன் முருகன் கலாச்சார நிலையம். முருகன் ஆலயம் (முதற்றொகுதி), திறப்பு விழா, 23 ஜனவரி 1999.

# அருணகிரியாரின் திருப்புகழ் முருகனின் ஞானாமிர்தம்

வெ.அ. சம்பந்தம்,
ரெட்டிவலம். வனச்சரகர். (ஓய்வு ),
ரெட்டிவலம் ஆஞ்சல், பனப்பாக்கம்.631052.
நெமிலி வட்டம், வேலூர் மாவட்டம்

முருகப் பெருமானை வழிபடும் அன்பர்களுக்கு அருணகிரிநாதர் எனும் சித்தர் பெருமான் அருளியுள்ள அற்புதமான பாடல்கள் அமைந்துள்ள நூல் திருப்புகழ் எனும் பெயரில் போற்றப்படும் நல்லுரை நூலாகும். அறுநூறு ஆண்டுகட்கு முன் திருவண்ணாமலை எனும் புனிதத் தலத்தில் முருகப்பெருமானின் திருவருளைப்பெற்ற அருணகிரியார் பாடிய திருப்புகழ்ப் பாடல்கள் நமக்கு இன்று கிடைத்துள்ளவை 1324 பாடல்களாகும். அவரது பாடல்கள் 8 வரி, 12 வரி, 16 வரி, 24 வரி, 36 வரி எனப் பலவாறாக உள்ளன. பாடல்களில் சொற்கள் ஒன்றுடன் ஒன்று பின்னிப் பிணைந்து இணைந்து நிற்கின்றன. நாம் பலமுறை படித்து பொருள் உணர்ந்து பிரித்துப் படிக்க வேண்டும். அகத்தியர், நக்கீரர், ஔவையார், சங்கப் புலவர்கள் எனத் தொடங்கி அருணகிரியாருக்கு நல்லருள் புரிந்து திருப்புகழ் எனும் பெயரில் பாட வைத்தவன் முருகப்பெருமானவார். பாரத தேசம் மட்டுமல்லாது கடல் கடந்து உலகமெங்கும் உள்ள நகரங்களுக்கு நம் தமிழர்கள் சென்று தங்கி ஆலயங்களை எழுப்பித் தினமும் முருகப்பெருமானை வழிபட்டு பூசை செய்து திருப்புகழ்ப் பாடல்களைப் பாடி மனம் நிறைந்து வாழ்ந்து வருகிறார்கள்.

*"உம்பர் தரு தேனுமணிக் கசிவாகி*
*ஒண்கடலிற் றேனமுதத் துணர்வூறி*
*இன்பரசத் தேபருகிப் பலகாலும்*
*என்றன் உயிர்க்கு இதரவுற்று அருள்வாயே"*

எனத் தொடங்குகிறார். அருணகிரிநாதர் உம்பர் தரு - விண்ணுலகத்தோர் வழிபடும் மரங்கள்-சந்தனம், மந்தாரம், பாரிஜாதம், கற்பகம், சண்பகம். காமதேனு - பசும்பால் தரும் பசுக்கள் இனத்தின் தலையாய தெய்வீகப்பசு. மணி -முத்து, பவளம், வைரம், வைடூரியம், மரகதம், மாணிக்கம், புட்பராகம், கோமேதகம், நீலோற்பலம் எனும் நவரத்தினக் கற்கள். பரந்து விரிந்து படர்ந்து வளர்ந்துள்ள உயரமான மணம் வீசும் பூக்களை அளிக்கும் மரங்களையும், புனிதமான பசுக்களையும் நவரத்னக் கற்களைத் தன்னகத்தே கொண்டுள்ள மலைகளையும் தினமும் மனதில் நினைந்து வழிபடுபவர்க்கு நலமும் வளமும் கிடைக்கும். என்றும் எங்கும் எப்பவும் அடியேனுக்குத் துணையாய் இருந்து திருவருள் புரிய வேண்டும் என வேண்டிப் பாடத் தொடங்குகிறார் அருணகிரியார்.

கயிலை மலை, காளத்திமலை, வேங்கடமலை, தணிகைமலை, அண்ணாமலை, பழனிமலை, பழமலை, மருதமலை, சுவாமிமலை, வள்ளிமலை, பொதிகைமலை என பாரத மண்ணில் பல புனிதமான மலைக்காடுகள் பரந்துள்ளன. நல்ல மரங்கள் வளர்கின்றன. பசுக்கள் உலவுகின்றன. பலவிதமான செல்வங்கள் தரும் கற்கள் குவிந்துள்ளன. மலைகளைத் தரிசித்து வணங்குதல் மாபெரும் புண்ணியம்.

*"வண்டமிழ் பயில்வோர் பின் சென்றவன்"* (பாடல் எண் 3)

பைந்தமிழ் பாசுரங்கள் பாடி வழிபட்ட ஆழ்வார்கள் பின் சென்று செவிமடுத்து தரிசனம் தந்து மகிழ்ந்தவன் ஸ்ரீமன் நாராயணன்.

*"ஆரியமும் தமிழும் சொலிக்காரிகை யார்க்குக் கருணை செய்தவன்"*

சிவபெருமான். தமிழ்மொழியைத் தோற்றுவித்தவன் சிவபெருமான்.

*"ஆதியில் தமிழ்நூல் அகத்தியருக்கு உணர்த்திய மாதொரு பாகன்"*

சிவபெருமான். அம்பலத்தில் ஆடிய நடராசனுக்குத் தாளமிட்டு ஆசையை உருவாக்கியவள் ஆதிபராசக்தி.

*"முத்தமிழ் அடைவினை முற்படு கிரிதனில்*
*முற்பட எழுதியவன்"* - திருப்புகழ்

இயல், இசை, நாடகத் தமிழை முதன்முதலாக பரந்து விரிந்துள்ள மேரு மலையில் எழுதியவன் விநாயகப்பெருமான் அருணகிரிநாதர்.

*"இலக்கணங்களும் இயலிசைகளும் மிக*
*விளக்கும் அம்பலமதுரித கவிதனை*
*இயற்று செந்தமிழ் விதமொடு புயமிசை புனைவோனே"* (பாடல், 4)

இலக்கணங்களுடன் கூடிய இயற்றமிழையும் இசைத்தமிழையும் செந்தமிழ் மொழியில் கவிப்பாடல்களாகத் தனது தோள்களில் சுமந்து தருபவன் - மாலையாகச் சுமந்து நிற்பவன் முருகப்பெருமான் எனப் பாடுகிறார் அருணகிரிநாதர்.

*"சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்"*

என்கிறார் திருமூலர். இறைவன் தமிழ்மொழியைத் தோற்றுவிக்கவும் உமையம்மை, நாராயணன், கணபதி, முருகன் என நால்வரும் தமிழை வளர்த்தவர்கள்.

*"என்னை நன்றாக இறைவன் படைத்தனன்*
*தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே"* -திருமூலரின் திருமந்திரம்

*"தன்னை யடைந்தார் வினை தீர்ப்ப தன்றோ தலை*
*யாயவர் தம் கடன்"*

நாவுக்கரசர் வாக்கு. விண்ணுலக மாந்தரையும் மண்ணுலக மாந்தரையும் காக்கும் தொழிலைக் கவனிப்பவன் நாராயணன். நாராயணனாகிய மகாவிஷ்ணு இம்மண்ணில் சீதாராமனாக வாழ்ந்து இராவணனுடன் போர் செய்தபோது உதவியவர்கள் -பறவை முகம் சடாயு, வானர அரசனாக சுக்ரீவன், வாயு மைந்தனாக அனுமன் மற்றும்

*"உந்தியிறைவன் எண்கினக் கர்த்தன்"* (பாடல் 8)

திருமாலின் தொப்புள் வழியாகத் தாமரை மலரில் தோன்றிய படைக்கும் தலைவனாக பிரம்மன் கரடி முகத்துடன் சாம்பவான் எனும் பெயரில் தோன்றி உதவினார்கள் என்கிறார் அருணகிரியார். உந்தியிறைவன்-பிரம்மன், எண்கு இனக்கர்த்தன்-சாம்பவான்.

*"செறுக்கெழுந்து உம்பர் சேனை துளக்க வென்று*
*அண்டமூடு தெழித்திடும் சங்கபாணி மருகன்"* (பா.15:7)

சங்கபாணி மருகன் - முருகப்பெருமான். ஆண்மையோடு போர் செய்து விண்ணவர் கூட்டத்தை மயங்கச் செய்து வானவெளியில் சங்கமேந்தி முழக்கம் செய்த கரங்களுக்கு உரியவனான விஷ்ணு பிரானின் மருமகனாகத் தோன்றி உலகை வலம் வந்த முருகப்பெருமான் எனப் போற்றுகிறார் அருணகிரியார். விண்ணுலகில் வளரும்-வளர்ந்த பாரிஜாத மரத்தை மண்ணுலகிற்குக் கொண்டு வந்தவன் கண்ணபிரான். கண்ணபிரானின் மருமகன் முருகன் என்கிறார் அருணகிரியார்.

*"இந்திர தாருவை ஞாலமீதினில் கொணர்ந்த*
*சங்கபாணியன் ஆதி கேசவன், பிரசங்கன்*
*என்று வாழ்மணி மார்பன் வீர விக்ரமன் தன்மருகோனே"*
(திருப்புகழ், பா..889)

முருகப் பெருமான் எத்தன்மையன் என்பதை இங்கு விளக்குகிறார் அருணகிரிநாதர். ஒரு காலத்தில் விண்ணுலக அரசனான தேவேந்திரனின் தாயாகிய அதிதி என்பவரின் காதில் அணிந்திருந்த குண்டலங்களை நரகாசுரன் என்பவன் கவர்ந்து சென்றான். நரகாசுரனுடன் போரிட்டு அந்த குண்டலங்களை மீட்டு இந்திரனின் தாயான அதிதியிடம் தரச்சென்றான் கண்ணபிரான். கருட வாகனத்தின் மீது தனது பத்தினியான சத்யபாமாவுடன் சென்றபோது அங்கே மணம் வீசும் பாரிஜாத மலர்கள் பூத்துக்குலுங்கும் பாரிஜாத மரத்தைக் கண்ட சத்யபாமா, அந்த மரத்தைத் தனக்குப் பெற்றுத் தரும்படி வேண்டினாள். இந்திரன் மனைவியான இந்திராணி தர மறுத்தாள். தன்னிடம் உள்ள சங்கின் மூலம் சங்கநாதம் எழுப்பி தேவர் சேனைகளை மயங்கச் செய்து கருடன் மூலம் மரத்தையே தோண்டிக் கொத்திக் கிளறிக் கொண்டு வந்து சத்யபாமாவின் வீட்டு முற்றத்தில் நட்டு மகிழ வைத்தவர் கண்ணபிரான். பாரிஜாத மரத்தைப் பூமிக்குக் கொணர்ந்தவன், ஆதிகேசவன், கவுத்துவம் எனும் மணிமாலையை அணிந்தவன் வீர பராக்ரமன் என போற்றப்படும்

திருமாலின் மருமகன் வேலேந்தி மயில்மீது விளையாடும் முருகன் எனப்பாடுகிறார் அருணகிரிநாதர். ஒவ்வொரு பாடலிலும் பண்டைய வரலாறுகளை நமக்கு நினைவு படுத்தி சிந்திக்க வைக்கிறார் முருகனடிமையான அருணகிரியார்.

*"கொன்றைச் சடையற்கு ஒன்றைத் தெரியக்*
*கொஞ்சித் தமிழைப் பகர்வோனே"*

இம்மண்ணுலகில் பல காலங்களில் பல இடங்களில் வாழ்ந்த நமது முன்னோர்கள் கண்டு கேட்டு நுகர்ந்து அறிந்துள்ள பூக்கள் 108 எனக் குறிப்பிட்டுள்ளார்கள். இறை வழிபாட்டுக்குரிய பூக்கள் புனிதமானவை, நறுமணம் தருபவை, மருத்துவ குணம் உள்ளவை, சிறப்புடையவை மற்றும் உயர்ந்த புகழ்பெற்ற மலர்கள் எனப் பலவிதமாக கூறப்படுகின்றன. கொன்றை மாலையணிந்த சதாசிவப் பெருமானுக்கு அவரது திருநாமமான மூலமந்திரச் சொல்லான திருவைந்தெழுத்து என உச்சரிக்கப்படும் எனும் "நமசிவாய" எனும் சொல்லுக்கான பொருளை தமிழ் மொழியில் விளக்கி தந்தையை மகிழச் செய்தவன் முருகன் எனக் குறிப்பிடுகிறார் அருணகிரியார்.

*"ஆத்திச் சூடி அமர்ந்த தேவனை*
*ஏத்தி ஏத்தி தொழுவோம் நாமே* (ஔவையார்)

கொன்றை, ஆத்தி, மந்தாரம், சண்பகம், தாமரை சிறப்பான மலர்கள். சிவபூசைக்கு மிக மிக உகந்தது. "வில்வம்" எனும் எளிய பச்சிலையாகும்.

*"கம்பியா திந்திர லோகங்கள் கர வென்றவா*
*கண்ணடலேசன் சொல்வீரா"*
*கரவென்றவா கண்ட லேசன் - தேவேந்திரன்*
*தேவேந்திரன் போற்றும் முருகன்* (பா.38)

*"திண்திறற்கொண்ட லாகற்டலற்கு*
*அண்ட லோகம் கொடுத்தருள்வோனே"*

வலிமை மிக்க மேக வாகனன் இந்திரன் இகண்டலன் -இந்திரன், கொண்டல்-மேகம், அண்டலோகம்-தேவலோகம் அசுரர்களை மாய்த்து விண்ணுலகத்தை மீட்டு இந்திரனுக்கு அளித்தவன் முருகப்பெருமான் என்பதை இப்பாடலில் நினைவுபடுத்துகிறார்.

60 அறுபத்து 60 சூத்திரங்கள் அடங்கியுள்ள முதல்நூல் இறையனார் அகப்பொருள் என்ற தலைப்பில் இறைவன் அளித்த தலையாய மறைநூல். அந்த அகப்பொருளுக்கு 7 X 7=49 தமிழ்ப் புலவர்களும் தனித்தனியாக உரை எழுதித் தம்தம் உரையே சிறந்தது என வாதித்தனர். இறைவன் அருளாணைப்படி, முருகப்பெருமான் உப்பூர்கிழார் எனும் செட்டியாரின் மகனாக உருத்திரசன்மன் எனும் பெயரில் இளம்பிள்ளையாக வாய் பேசாது அமைதியான

நிலையில் வருகை தந்து சங்கப் பலகையில் அமர்ந்து புலவர்களின் உரைகளைக் கேட்டு செவிமடுத்து தீர்ப்பு வழங்கினார் என்பது வரலாறு. 49 புலவர்கள் தம்தம் உரையைத் தனித்தனியாக வருகை தந்து வாசிக்க

*"வாமுறுகீரன் தரைபுகழ் கபிலன்,*
*மாசறு பாணன்"*

எனக் குறிப்பிடுகிறார் அருணகிரியார். தமிழ்ச்சங்கப் புலவர்களான வாமுறுகீரன்-நக்கீரர், தரைபுகழ் கபிலன்-கபிலர் என்பார் மாறு பாணர்-குறையில்லாத பாணர் என இம்மூவரது உரையைக் கேட்டு செட்டிப் பிள்ளையாக வந்த உருத்திரசன்மன் தேகம் புல்லரித்தது. உரோமங்கள் சிலிர்க்க முகம் மலர, கண்கள் அனந்த ஒளிவீச காட்சி தந்த செல்வனைக் கண்ட புலவர்கள் உண்மைநிலை உணர்ந்து பேதம் நீங்கி கலக்கம் களைந்து வணங்கி நிற்க. செட்டிப்பிள்ளை மறைந்து நீல மயில் மீது முருகப்பெருமானாகத் தரிசனம் தந்து மறைந்தார் முருகன் எனப் பாடுகிறார். "பதியெங்கிலும் இருந்து விளையாடிப் பல குன்றிலும் அமர்ந்த பெருமானே" எனப்பாடி வழிபடுகிறார் அருணகிரியார். "வழுதிய தமிழில் ஒரு பொருளதனை வழிபட மொழியும் முருகேசா" இனிமையான சொற்றொடர்கள்.

எனக்கு வாழ்வளித்த தமிழ்க் கடவுளே மயில்வீரனே, வேல்கொண்டு விளையாடும் செல்வனே, கருணைப் பெருங்கடலே, எனது இதயத்தில் குடிகொண்டிருக்கும் முருகனே, உம்திருவடியில் நான் சேரும் அந்த ஒருநாள் விரைவில் வர வேண்டும். அந்த நல்வரத்தைத் தாரும் என அருணகிரியார் வேண்டி நிற்கிறார். அருணகிரியாரின் திருப்புகழ் முருகனின் ஞானாமிர்தம். முருகன் திருவடியை வணங்குவோம். வழிபடுவோம். நல்வளம் பெறுவோம்.

# அறுபடை வீடும் ஆலய வழிபாடும்

மு. சரண்யா,
முனைவர்ப் பட்ட ஆய்வாளர்,
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர் -621 713.

மக்களின் வாழ்வு திருக்கோயிலை மையமாகக் கொண்டது. நம் அகத்துக்கும் புறத்துக்கும் அரணாக அமைந்து ஒழுக்க நெறிக்கு ஊன்றுகோலாக இருப்பது திருக்கோயிலாகும். அதனால் தான் "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று உலக நீதி உரைக்கின்றது. அப்பர் பெருமானோ இன்னும் ஒருபடி மேல் சென்று திருக்கோயில் இல்லா ஊரைக் காடு என்று சாடுகின்றார். அப்படிப்பட்ட ஆலய வழிபாட்டைப் பற்றிக் இக்கட்டுரையில் காண்போம்.

## அறுபடைவீடு

முருகனை ஓரிடத்தில் கண்டு வணங்குதல் சிறப்பன்று. அறுபடைத் தலத்திலும் சென்று வணங்க வேண்டும். தமிழகத்தில் உள்ள முருகன் தலங்களில் நாம் வழிபாடு செய்வது வாழ்க்கைத் தத்துவத்தை எளிதில் உணரவே. அறுபடை வீட்டைப் பற்றித் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் மிகவும் சிறப்பாக விளக்குவார். குன்று இருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பான் என்று சொல்லுவதற்கு ஏற்ப அவனின் திருவிளையாடல்கள் மனித வாழ்க்கைத் தத்துவத்தையும் ஆலய வழிபாட்டையும் இந்த உலகத்திற்கு எடுத்துச்சொல்கிறது. திருமுருகாற்றுப்படையில் முருகன் வழிபாடு குறித்தும் அவன் திருவிளையாடல்கள் குறித்தும் தெளிவாக நக்கீரனார் பாடியுள்ளார். திருமுருகாற்றுப்படை கூறும் முருகனின் அறுபடை வீடுகள். திருப்பரங்குன்றம், திருசீரலைவாய் (திருச்செந்தூர்), திரு ஆவினன்குடி (பழனிமலை, சித்தன்வாழ்வு), திருவேரகம் (சுவாமிமலை), குன்றுதோறாடல், பழமுதிர்ச்சோலை ஆகும்.

முதலில் உள்ள திருப்பரங்குன்றத் தலம் முருகனின் தலங்களில் சிறப்பு வாய்ந்தது. இத்தலத்தில் மூலவர் சுப்பிரமணியசுவாமி ஆவார். உற்சவர் சண்முகர் ஆவார். இத்தலத்தில் அம்மனாகத் தெய்வானை உள்ளார். இத்தலத்தில் தலவிருட்சமாகக் கல்லத்தி மரம் உள்ளது. இத்தலத்திற்கு உரிய தீர்த்தங்கள் லட்சுமி தீர்த்தம், சரவணப்பொய்கை உட்பட தீர்த்தங்கள் உள்ளன. இத்தலத்திற்குப் புராணப்பெயர் தென்பரங்குன்றம் ஆகும். இது தற்போது திருப்பரங்குன்றம் என்று அழைக்கப்படுகிறது. இத்தலம் மதுரை மாவட்டத்தில் உள்ளது. இத்தலத்தில் நக்கீரர், திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் அருணகிரிநாதர், பாம்பன் சுவாமிகள் ஆகியோர் முருகனை மனமுருகப் பாடியுள்ளனர். அருணகிரிநாதர் திருப்புகழில் முருகனைப் பற்றிச் சொல்லும் போது,

*வினைத்த லந்தனில் அலகைகள் குதிகொள*
*விழுக்கு டைந்துமெய் உகுதசை கழுகுண*
*விரித்த குஞ்சியர் எனுமவு ணரைஅமர் ...... புரிவேலா*

என்று பாடுகின்றார். இத்தலத்தின் சிறப்பானது முருகப்பெருமானின் முதல் வீடாகும். இங்கு மட்டுமே முருகனின் வேலுக்கு அபிசேகம் நடக்கிறது. இங்குச் சத்தியகிரீசுவரர் (சிவன்), பவளக்கனிவாய்ப் பெருமாள், கற்பகவிநாயகர், சுப்பிரமணியர், துர்க்கையம்மன் எனப் பல தெய்வங்களும் மூலத்தானத்தை ஒட்டிய ஒரு குடவரையில் அமைந்துள்ளன. பரம்பொருளாகிய சிவன் அருளுவதால் சுவாமி பரங்குன்றம் என்னும் திருப்பரங்குன்றம் சிவன் கோவிலாக உள்ளது. முருகன் தெய்வானையைத் திருமணம் செய்ததால் அது முருகன் கோயிலாகப் பெயர்பெற்றது.

திருச்செந்தூர்

திருச்செந்தூர் கோயிலில் மூலவராகச் சுப்ரமணிய சுவாமியும் உற்சவராக சண்முகர், குமரவிடங்கர், அலைவாய்ப் பெருமான் ஆகிய திருமேனிகளுடன் முருகப்பெருமான் உள்ளார். இத்தலத்தில் அம்மனாக வள்ளியும் தெய்வானையும் உள்ளனர். இத்தலத்தின் தீர்த்தமாகச் சரவணப் பொய்கைக் குளம் உள்ளது. இத்தலம் தூத்துக்குடி மாவட்டத்தில் உள்ளது. முருகனின் அறுபடை வீடுகளில் இது இரண்டாவது வீடு ஆகும். இத்தலம் மட்டும் கடற்கரையில் உள்ளது. மற்ற தலங்கள் மலைக்கோயிலாக உள்ளன. இத்தலம் மட்டும் போர்புரிந்த தலமாக உள்ளது. சூரனை வதம் செய்த தலம் இதுவாகும். இத்தலமுருகனை வழிபட்டால் சகல எதிர்ப்புகளும் நம்மை விட்டு அகலும் என்பது திண்ணம்.

பழனி (திருஆவினன்குடி)

பழனி என்னும் தலம் சித்தர் போகரால் பிரசித்தி பெற்ற தலமாகும். இத்தலத்தில் மூலவராக குழந்தை வேலாயுதர், தண்டாயுதபாணியாக விளங்குகின்றார். இந்தத் தண்டாயுதபாணித் திருமேனி நவபாஷாண மூர்த்தி ஆவார். இத்தலத்தில் உற்சவர் கிடையாது. இத்தலத்தின் தலமரமாக நெல்லிமரம் உள்ளது. இத்தலம் மூலிகைகள் நிறைந்த பகுதியில் அமைந்தது. இம்மலைத் தெய்வம் 450 மீட்டர் உயரத்தில் உள்ளது. 690 படிகள் ஏறித்தான் முருகனைக் காண இயலும். மலையே மருந்தாக அமைந்த மலை இதுவாகும். பழனிக்குத் திருஆவினன்குடி, தென்பொய்கை ஆகிய புராணப் பெயர்களும் உண்டு.

தண்டாயுதபாணி சுவாமி தண்டம் வைத்துள்ளார். இவர் தவறு செய்பவர்களைத் தண்டிக்கும் ஆசானாக மலைக்கோவிலில் வீற்றிருக்கின்றார். சிவனின் நெற்றியிலிருந்து பிறந்தவன் முருகன் என்று புராணம் சொல்லும். முருகன் கோபித்துக் கொண்டு பழனி மீது ஏறிக்குடிகொண்டதால் இத்தலம் சிறப்புறுகிறது. இத்தலத்தில்தான் போகர் என்ற சித்தர் வாழ்ந்து வந்தார். இயற்கையாகக் கிடைத்த 4000 மூலிகைகளைக் கொண்டு வந்து அவற்றைப்

பக்குவப்படுத்தி அதனை 81 சித்தர்களைக் கொண்டு நவபாசாணமாக சேர்த்து 9 ஆண்டுகள் இடைவிடாது செய்ததன் பலனாக முருகத் திருமேனியைச் செய்தார். இந்த முருகன்தான் பழனிமலையில் பிரசித்தி பெற்று உள்ளார். இந்தத் திருமேனி மிகவும் சூடாக இருக்கும். அதனைத் தணிக்க விக்கிரகத்திலிருந்து நீர் வெளிப்படும்.

**விஞ்ஞான செய்தி**

நவபாஷாண மூர்த்தி மலைக்கோயில் மூலவராவர் தண்டாயுத பாணி சிலை நவபாஷாண மூலிகைக் கலவையாகும். இது உயிர்ப்புடன் உள்ளது. சிலைக்கு வியர்க்கும் என்பது ஐதிகம். அந்த வெப்பத்தை தணிக்க கொடுமுடித் தீர்த்தம் கொண்டு வந்து அபிஷேகம் நடைபெறுகிறது.

**திருவேரகம் (சுவாமிமலை)**

இத்தலம் தஞ்சை மாவட்டத்தில் அமைந்துள்ளது. இத்தலத்தின் மூலவர் சுவாமிநாதர் ஆவார். இவரை சுப்பையா என்றும் அழைப்பர். இத்தலத்தின் அம்மன் வள்ளி மற்றும் தெய்வானை ஆவர். விபூதி அலங்காரம் செய்யும்போது ஞானியாகவும் சந்தனத்தில் அபிஷேகம் செய்யும்போது கம்பீரமாகவும் காட்சியளிக்கும் திருமேனி இங்கு விளங்குகின்றது.

**திருத்தணி**

வருடத்தின் நாட்கள் குறிக்கும் விதமாக 365 படிகளுடன் அமைந்த கோயில் இது. 1 லட்சம் ருத்திராட்சங்களால் ஆன ருத்ராட்ச மண்டபம் இங்கு உள்ளது. இத்தலம் முருகனின் ஐந்தாம் படைவீடாகும். சூரனை வதம் செய்துவிட்டுச் சினம் தணிய இத்தலத்தில் வந்தமர்ந்தார். இக்கோயிலைப் பற்றி அருணகிரிநாதர் பாடல் பாடியுள்ளார்.

**சோலைமலை (மதுரை) (பழமுதிர்ச்சோலை)**

இத்தலம் அருள்மிகு சுப்ரமணியசுவாமி திருக்கோயிலாக மதுரையில் உள்ள சோலைமலையில் உள்ளது. இத்தலத்தின் மூலவராக தம்பதியருடன் முருகன் வீற்றிருக்கின்றார். இத்தலத்தின் தீர்த்தமாக நூபுரக்கங்கைக் குளம் உள்ளது. இத்தலத்தின் பெருமையினை அருணகிரிநாதர் திருப்புகழில் பாடியுள்ளார்.

முருகப்பெருமானின் அறுபடை வீடுகளில் இது ஆறாவது வீடாகும். சாதாரணமாக நாவல் மரப் பழங்கள் ஆடி ஆவணி மாதத்தில் தான் பழுக்கும். ஆனால் இத்தலத்து நாவல் மரத்தில் மட்டும் முருகனின் திருவருளால் சஷ்டி மாதமாகிய ஐப்பசி மாதத்திலும் பழுக்கும் அதிசயத்தைக் காணலாம்.

இப்படி ஆறுபடையில் வீற்றிருக்கும் முருகப் பெருமானை வழிபட்டு வந்தால் மனித வாழ்வின் தத்துவமான ஓங்காரத் தத்துவத்தை உணரலாம். இவை புராண கதைகளாக இருந்தாலும் மனித வாழ்வியலுக்கான தேடலை தெய்வங்கள் தான் நிவர்த்தி செய்கின்றது.

ஆலய வழிபாடு

அவனன்றி ஓரணுவும் அசையாது, அனைத்துக்கும் இறைவனே ஆதிகாரணம். கேட்பவனும் அவனேதான்; கேட்பிப்பவனும் அவனேதான். அதனால்தான் ஆலயம் சென்று வழிபட வேண்டும். "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என ஔவை பாடியுள்ளார். ஆலய வழிபாடு செய்ய வேண்டியதன் அவசியத்தைக் கிருபானந்த வாரியார் அவர்கள் பின்வருமாறு சொல்லுவார். பசுவின் உடம்பு முழுக்கப் பால் பரவி இருந்தாலும் மடியின் மூலமாகத்தான் பாலைப் பெறமுடியும். காதைப் பிடித்து இழுத்தால் பால் வராது. காது தான் வரும், பூமிக்கு அடியில் எங்கும் தண்ணீர் இருந்தாலும் அதனைப் பயன்படுத்தக் கிணறு வெட்டித்தானே ஆக வேண்டும்? அதனால் மனிதன் செய்யும் பாவம் வெந்துபோக மறுபிறப்பு உண்டாகாதிருப்பதற்கு ஆலய வழிபாடு இன்றியமையாதது.

*"மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந்தானும் அரனெனத் தொழுமே"*

என்று சிவஞானபோதமும் கூறும். ஆகவே ஆலயத்திற்குச் சென்று வழிபடுவது இறைவனுக்கு நாம் செய்யும் நன்றியறிவிப்பு. எந்தப் பாவத்தைச் செய்யினும் நன்றிகொன்ற பாவத்தைச் செய்யக்கூடாது. அதனைத் திருக்குறள்

*"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை*
*செய்ந்நன்றி கொன்ற மகற்கு"*

என்கிறது. ஆகவே நம்மை உருவாக்கி அருள்புரியும் இறைவனுக்கு நாம் நன்றியறிதலை வழிபாடாகச் செய்யவேண்டும். இறைவனின் வழிபாட்டை வைத்துத் திருமூலர்,

*உள்ளம் பெருங்கோவில் ஊன் உடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானார்க்கு வாய் கோபுரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளா மணி விளக்கே*

என்கிறார். நம் உடம்பை ஆலயமாக வெளியே வகுத்துள்ளான். பிண்டத்தில் உள்ளது தான் அண்டத்தில் உள்ளது. ஆலயத்தில் வீழ்ந்து வணங்கும் பழக்கம் பெரும்பாலும் குறைந்து வருகின்றது. தலை, முழங்கால் இரண்டு, உள்ளங்கைகள் இரண்டு ஆகிய ஐந்து உறுப்புகள் தரையில் பட வணங்குவது பஞ்சாங்க நமஸ்காரம். நெடுஞ்சாண்கிடையாக வீழ்ந்து வணங்குவது சாஷ்டாங்க நமஸ்காரம் எனப்படும். பெண் பஞ்சாங்க நமஸ்காரமும் ஆண் சாஷ்டாங்க நமஸ்காரமும் செய்தல் வேண்டும்.

ஆகவே ஆலய வழிபாடு என்பது ஆன்ம வழிபாடாகும். நம் உடலை தூய்மையாக வைக்க பாவம் செய்வதைத் தவிர்க்க வேண்டும். அறுபடை வீட்டின் முருகப்பெருமானைக் காணக் கந்தசஷ்டி விரதம் இருப்பது அவனுக்கு நாம் செய்யும் உண்மையான விரதம் ஆகும். இதனைத்தான் வள்ளுவர்

*இலர்பலர் ஆகிய காரணம் நோற்பார்*
*சிலர்பலர் நோலா தவர்.*

என்பார். மனம் மாறிய வழி போகாது தடுக்கும் பொருட்டு உணவைச் சுருக்கி மனம், வாக்கு, காயத்தால் இறைவனை நியதிப்படி வழிபடுவது விரதமாகும். உலகத்தில் செல்வந்தர் சிலராகவும் வறியவர் பலராகவும் இருப்பதற்கு காரணம் விரதம் இருப்பவர்கள் சிலராகவும் விரதம் இருக்காதவர் பலராகவும் உள்ளதுதான் என்பது வள்ளுவர் சொல்லாக உள்ளது. ஆ க வே ஆலயம் சென்று ஆன்மா ஏற்றம் அடைய உண்மையாக வழிபட வேண்டும் என்று புலனாகிறது.

முடிவுரை

"புண்ணியம் செய்வாருக்கு பூவுண்டு நீருண்டு" என்பார் திருமூலர். அவரின் வாக்கிற்கு ஏற்ப நமது வழிபாடு முறையைச் செம்மைப்படுத்தி சீர்தூக்கி ஆலயத்தின் கொடிமரம், நந்தி மூலவர், உற்சவர் என்று வரிசையாக வழிபட நமது வேண்டுதல் பலன் கிடைக்கும் என்பதை இக்கட்டுரை உணர்த்துகின்றது.

துணை நூல்கள்

1. தமிழ் இலக்கியத் தகவல் களஞ்சியம், முனைவர் தேவிரா
2. ஆலயம் ஏன்?, திருமுருக. கிருபானந்தவாரியார்.

# புள்ளிருக்கு வேளூர் மும்மணிக்கோவையில் முருகனது பெருமைகள்

முனைவர் ந. சரவணன்
உதவிப்பேராசிரியர்,
அ.வ.அ.கல்லூரி(தன்.),
மன்னன்பந்தல், மயிலாடுதுறை.

சைவத் தலங்கள் அனைத்தும் தலம், தீர்த்தம், மூர்த்தம் என்ற மூன்றில் ஒன்றினால் சிறப்பு பெறும். அத்தகைய தலங்களுள் ஒன்று வைத்தீசுவரன் கோயில் என்று வழக்கில் அழைக்கப்படும் புள்ளிருக்கு வேளூர் எனும் தலமாகும். இத்தலத்துள் முருகன் செல்வமுத்துக் குமாரனாக எழுந்தருளி அருள்பாளித்து வருகிறார். அம்முருகனது பெருமைகளை புள்ளிருக்கு வேளூர் மும்மணிக்கோவை எடுத்துரைப்பதனை இக்கட்டுரை வெளிப்படுத்தி உரைக்க முற்படுகின்றது.

## புள்ளிருக்கு வேளூர் விளக்கம்

தேவாரப்பெயராக வழங்கப்பெறுவது இப்பெயர். புள் என்றால் பறவை. பறவைகளின் சக்கரவர்த்தியாக திகழ்ந்த சடாயூ முக்தியடைந்த இடம் என்பதாலும். வேதங்களில் முதலாவதாகத் திகழக்கூடிய ரிக் வேதம் வழிப்பட்ட தளம் என்பதாலும் இங்கு முருகன் செவ்வாய் கிரகத்து அதிபதியாக இருந்து பக்தர்களுக்கு அருள்பாளித்து வருவதாலும் இத்தலம் புள்ளிருக்கு வேளூர் எனப்படுகிறது.

## நூல் அறிமுகம்

புள்ளிருக்கு வேளூர் மும்மணிக்கோவை என்னும் இந்நூல் மயிலாடுதுறை மன்னன்பந்தல் அ்.வ.அ.கல்லூரி, தமிழாய்வுத்துறைப் பேராசிரியர் செஞ்சொற் கொண்டல் சொ.சிங்காரவேலனாரால் இயற்றப்பட்டதாகும். இந்நூலாசிரியரின் குல தெய்வம் வைத்தியநாத சுவாமி ஆகும். தான் நோயின் பிடியில் அடிமையாக பிடிக்கப்பட்டிருந்த வேளையில் அதிலிருந்து விடுபட இந்நூலினை ஆசிரியர் படைத்துள்ளார். நூல் இயற்றி முடிந்ததும் அவர் நோயிலிருந்து விடுபட்டுள்ளார். இந்நூலில் காப்பு, வாழ்த்து நீங்கலாக ஆசிரியம் வெண்பா, விருத்தம் என முப்பது பாடல்கள் அமைந்துள்ளன. அவைகள் முறையே வைத்தியநாதர், தையல்நாயகி, செல்வமுத்துக்குமரர் பெருமைகளைப் பேசுவனவாக அமைந்துள்ளன. காப்புச் செய்யுள் திருக்குளக்கரையில் எழுந்தருளி அருள்பாலித்து வரும் விநாயகக் கடவுளைப் போற்றிப் பரவுகின்றது.

## முருகனது அருள் திறன்

புள்ளிருக்கு வேளூரில் சித்தர்கள் பலர் முருகனை வேண்டிப்பயன் அடைந்துள்ளனர். இத்தலத்தில்தான் பதினெட்டுச் சித்தர்களுள் ஒருவரான

தன்வந்திரி வாழ்ந்துள்ளார். இத்தலத்தில் அமைந்துள்ள சிவாலயத்தில் தன்வந்திரிக்கு எனத் தனிச் சந்நிதி அமைந்துள்ளது. சித்தர்கள் பலர் வழிப்பட்டுள்ளதை,

*'தவநெறிச் சித்தர் பல்லோரும்*
*தலத்துணைப் பரவிப் பயன்பெற்றார்'* (பு.வே.3)

என வரும் பாடலடிகளால் உணரலாம். முருகன் தன்னைப் புகழ்ந்து பாடிப் பரவுதலை வரைவில்லாது வாரி வழங்கும் கருணையுள்ளம் கொண்டவன் என்பதைக்,

*'கேட்டால் இனிக்கும் திருப்புகழை*
*கேட்டே உவக்கும் சீர்குமரா!*
*பாட்டால் நினக்குச் சொன்மாலை*
*பகர்தற் கருள்வாய் பதமாக!*
*ஏட்டால் வரைய இயலாத*
*இயற்கைத் தன்றோ நின்கருனை!*
*கேட்டால் வாடல் முறையேயோ!*
*கேட்டற் றிருக்க அருள்வாயே'* (பு.வே.6)

என வரும் பாடலால் அறியலாம். ஆணவம், கன்மம், மாயை, இவற்றின் வழி மனம் செல்லாமல் அடக்கி உள்ளத்தின்கன் உண்மையான மெஞ்ஞானத்தைப் புகட்டவல்லவன் செல்வமுத்துக்குமரன். தன்மீது உண்மையான அன்பு கொண்டவரிடத்து துன்பம் நெருங்காது அவர்களைக் காத்து அருள்வான் எனும் செய்திகளை,

*அடங்கா மனமும் அடங்கியிட*
*அறியா அறிவும் ததும்பியெழும்*
*தொடங்கா நற்செயல் தொடங்கியிடத்*
*துவளா அன்பும் மல்கியெழ*
*இடன்கான முத்துக்குமரா! நீ*
*எளியேன் வாய் நின் றருள்வாயே!*
*கடங்காண் புனத்தின் வள்ளிமயில்*
*கவினார் துணையாய் நின்றவனை!*

என்னும் செய்யுளடிகளால் தெரியலாம். முருகனை நினைந்துருகும் அடியாருக்கு அவர்களது துயரினை வேண்டிய அன்றே களையக்கூடிய ஆற்றல் கொண்டவனாக முருகன் விளங்குகின்றான். என்பதனை,

*நின்றே உருகு மடியாரை நெஞ்சுள் நின்று நினைவாகி*
*அன்றே துன்பம் அகல்விக்கும் ஆறு முகனை அருங்குமரா!*
*இன்றேன் அன்ன செந்தமிழால் எனவாய் துதிக்க அருள்வாயே!*
*சென்றேன் புறத்தே என்றாலும் திருந்திக் கொள்வாய் தாளிணைக்கே*
(பு.வே - 18)

எனும் செய்யுளடிகள் உணர்த்துகின்றன.

செல்வமுத்துகுமரன் பக்தர்கள் வேண்டியதை எல்லாம் தராமல் பக்தர்களுக்கு எது வேண்டுவனவோ (தேவையோ) அதை அவர்களுக்கு அளித்துக் காக்கக் கூடியவன். பக்தர்களுக்கு வாழ்வில் என்றும் துணையாய் இருக்கக் கூடியவன் என்பதனை,

*விழைவன எல்லாம் தாராமல்*
*வேண்டிய தறிந்து வழங்கி, நிதம்*
*பிழையறு நெறியே காட்டுகிற*
*வேரொளியே முத்துக்குமரா*
*தழைவுறும் அன்பால் இங்கடியேன்*
*தமிழாற் பாடும் வாய்காத்தே*
*உழயறு துணையாய் வாராயோ*
*உன்னிரு செவிகள் தாராயோ* (பு.வே. 24)

என்னும் செய்யுளடிகள் எடுத்துரைக்கின்றன.

முருகன் இத்தலத்தில் செவ்வாய் கிரகத்துக்கு அதிபதியாகத் திகழ்வதாய் செவ்வேல் கொண்டு சிவந்த மேனியான விளங்கிறான். முருகன் அருள் ஆற்றலின் மீது உண்மையான நம்பிக்கை வைப்பவர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனியாய் காட்சியளிக்கக் கூடியவனாக முருகன் விளங்குகின்றான் எனும் செய்தியினைச்,

*செய்ய மேனி உடையானே*
*செவ்வேல் திருக்கைப் படையானே*
*ஐயம் இன்றித் தெளிவோர்க்கே*
*அங்கைக் கனியாய் வருவோனே*
*வையம் காக்க வருமீசன்*
*வைத்திய நாதன் தருசேயே*
*உய்ய வாயின் உறுதுயரம்*
*ஒருநொடி யோட செய்வாயே* (பு.வே. )

எனும் பாடலடிகள் நமக்கு உணர்த்துகின்றன.

**தலப்பெருமைகள்**

புள்ளிருக்கு வேளூர் எனும் தலத்தில் சிவன் வைத்தியநாதராகவும் அம்பிகை தையல்நாயகியாகவும் அருள்பாளித்து வருகின்றனர். இங்குக் கிருத்திகையன்று செல்வ முத்துகுமாரருக்கு அபிஷேகம் செய்யப்படும் சந்தன நீர் மருத்துவ குணம் மிகுந்த்தாக மாறி பக்தர்கள் நோயினைத் தீர்த்து வருகின்றது. இத்தலத்தில் வழங்கப்பட்டு வந்த மண் உருண்டை சகல நோய்களையும் தீர்க்கும் ஆற்றல் கொண்டதாக விளங்குகின்றது. தற்சமயம் அம்மண் பெருமளவில் வழங்கப்படுவதில்லை. மண் உருண்டையும் சந்தன நீரையும் பக்தர்களுக்கு அளித்து அவர்களுடைய நோயினைத் தீர்க்கும் தாயாக தையல்நாயகி அம்மாள் விளங்கிய தமையை,

*மண்ணுருண்டை, சந்தன நீர், மாண்பாருந் தீர்த்தங்கள்*
*பெண்ணுருவாய்த் தந்த பிராட்டியவள் - உண்ணின்றாள்*
*அஞ்சாதே நெஞ்சே அருஞ்செவிக்கிங் கூறுண்டோ?*
*செஞ்சரனம் சேர்தல் சிறப்பு* (பு.வே. 11)

எனும் செய்யுளடிகள் சுட்டிக்காட்டுகின்றன.

**தொகுப்புரை**

சொ.சிங்காரவேலனாரால் இயற்றப்பட்டது புள்ளிருக்குவேளூர் மும்மணிக்கோவையாகும். இந்நூல் பாடிப்பரவிய பிறகு நூலாசிரியன் நோய் நீங்கியுள்ளதனை நூலாசிரியர் வழி உணரமுடிகிறது. செவ்வாய்க் கிரகத்து அதிபதியாக முருகன் இத்தலத்தில் வீற்றிருந்து அருள்பாளித்து வருவதை இக்கட்டுரை எடுத்துரைக்கிறது. பக்தர்களுக்கு அருள்வதில் முருகனுக்கு நிகர் எவருமில்லை என்பதனையும், பக்தர்களின் தேவையறிந்து அருள்வது முருகனின் இயல்பு என்பதனையும் தகுந்த பாடல்களைச் சான்றாதரங்களாகக் கொண்டு இக்கட்டுரை நிறுவியுள்ளது.

# செம்மொழித் தமிழ் நூல்களில் முருக வழிபாடு

முனைவர் க. சிங்காரவேலு,
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
திருவள்ளுவர் பல்கலைக்கழகம்,
சேர்க்காடு, வேலூர்- 632 115.

செம்மொழி என்பது செம்மையான மொழி எனப் பொருள்படும் செம்மொழித் தகுதியானது ஒரு மொழியின் இலக்கியப் பழமை மற்றும் தனித்த பண்புகளின் அடிப்படையில் முடிவு செய்யப்படும் ஓர் வகைப்பாடு ஆகும். உலகச் செம்மொழிகளான இலத்தீன், கிரேக்கம், சீனம், ஹீப்ரு, சமஸ்கிருதம் போன்ற மொழிகளின் வரிசையில் தமிழ் மொழியும் செம்மொழி நிலையைப் பெற்றுள்ளது. செம்மொழித் தமிழ் நூல்களைத் தமிழறிஞர்கள் நாற்பத்தியொரு நூல்களாக பதினெண்மேற்கணக்கு நூல்கள், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள், தொல்காப்பியம், சிலப்பதிகாரம், மணிமேகலை, முத்தொள்ளாயிரம் ஆகிய நூல்களைப் பட்டியலிட்டுள்ளனர். இந்நூல்களில் முருக வழிபாடு குறித்த செய்திகளை ஆராய்வதாக இக்கட்டுரை அமைகிறது.

**முருக வழிபாட்டின் தோற்றம்**

பழந்தமிழர்களின் வழிபாட்டு முறையானது இயற்கைப் பொருட்களை அடிப்படையாகக் கொண்டது. இயற்கையின் மூலங்களான நீர், நிலம், காற்று, வானம், தீ, மலை, திங்கள், ஞாயிறு போன்றவற்றின் அருட்தன்மைக்கு நன்றி செலுத்தும் விதமாகவும், அவற்றின் பேராற்றலைக் கண்டு அச்சத்தின் காரணமாகவும் வழிபடத் தொடங்கினான். இவ்வியற்கை வழிபாடு ஆதிகாலம் முதல் இன்று வரை நிகழ்ந்து கொண்டு தான் இருக்கிறது. இவ்வியற்கை வழிபாட்டை தொல்காப்பியர் சுட்டுவதைக்,

*“கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்று*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே”* (தொல்.பொருள்.85)

என்ற நூற்பாவில் ஞாயிறு, திங்கள், தீச்சுடர் ஆகிய இயற்கையின் கூறுகளை வழிபட்டிருப்பதனை அறியலாம். மேலும் இயற்கையின் கூறுகளான ஞாயிற்றினையும் கடலையும், மலையையும் தெய்வமாக வழிபட்டிருப்பதைப்,

*“பகல்கெழு செல்வன் குடமலை மறையப்*
*புலம்புவந் திறுத்த புண்கண் மாலை”* (நற்.215-3)

என்ற நற்றிணைப் பாடல் மூலம் பகல்கெழு செல்வன் என்பது ஞாயிற்றினை வணங்கியுள்ளதைக் குறிப்பிடுகிறது. கடலே தங்களுக்கு வாழ்வளிக்கும்

தெய்வம் என்று கருதிய பரதவகுலப் பெண்டிர் கடலை வணங்கிய முறையினைப்,

*"புகழ்மலி சிறப்பிற் கொற்கை முன்றுரை*
*அவிர்கதிர் முத்தமொடு வலம்புரி சொரிந்து*
*தழையணிப் பொலிந்த கோடேந்து அல்குல்*
*பழைய மகளிர் பனித்துறைப் பரவு"* (அக.201:4-7)

என்ற அகநானூற்றுப் பாடல் மூலம் கொற்கை முன்றுரை எனக் குறிப்பிடப்படும் கடலை வணங்கியுள்ளமையை அறியலாம். குறிஞ்சி நில மக்கள் மலையினைத் தெய்வமாகக் கருதி வணங்கியமையை கலித்தொகையானது,

*"கொடிச்சியர் கூப்பி வரைதொழு கைபோல்"* (கலி.39:11)

என்ற பாடலடியில் வரை என்பது மலையினை வணங்கியுள்ளதை அறியலாம். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் நிலவினைப் போற்றும் விதமாக,

*"திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்"*
(சிலம்பு.மங்கல. 1)

எனப் போற்றுவதை அறியலாம். இவ்வாறு அமைந்த இயற்கை வழிபாடே பிற்காலங்களில் உருவ வழிபாட்டிற்கும், பல தெய்வ வழிபாட்டிற்கும் வழி வகுத்தது எனலாம். இயற்கை வழிபாட்டின் ஒரு கூறான சூரிய வணக்கமே பின்னர், முருக வழிபாடானது என்பர். இதனைப் பரிபாடல் திறன் என்னும் நூலில் செவ்வேள் வணக்கம் பற்றிச் சாரங்கபாணி பின்வருமாறு விவரித்துள்ளார்.

"மாக்கடலினின்று நிவர்தெழுந்த இளஞாயிற்றின் இயற்கை அழகில் உள்ளம் தோய்ந்த அன்பர்கள் அதனையே இறையென வழிபட்டு வணங்கினர். அதுவே பின்னர், நீலமயில் மீது வீற்றிருக்கும் செவ்வேள் வழிபாடாக மலர்ந்தது" என்பர். மேலும், தமிழர்கள் முருகனைப் போர்நிலத் தெய்வமான கொற்றவையின் மகன் என்று போற்றியதோடு போர்த் தெய்வமாகவும் வழிபட்டிருப்பதைக்,

*"கொற்றவை சிறுவ"* (திருமுருகு.258)

என திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. மக்களின் வாழ்வு முதன் முதலில் தொடங்கப்பட்ட இடம் மலையே ஆகும். என்பது மானிடவியலாரின் கருத்தாகும். ஆதிகால மனிதர்கள் மலைப்பகுதிகளிலே வாழ்ந்த காலத்தில் முருகன் கடவுளாகப் படைக்கப்பட்டிருக்கலாம். இதனையே,

*"விண்பொரு நெடுவரை குறிஞ்சிக்கிழவ"* (திருமுருகு. 267)

எனத் திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகிறது.

**முருகனைக் குறிப்பிடும் பெயர்கள்**

முருகு என்றால் அழகு என்று பொருள்படும். "முருகையுடையவன் முருகன், முருகன் என்றால் அழகு இளமை மணம் கடவுட்தன்மையுடைவர்"

என்று திரு.வி.க குறிப்பிடுகிறார். முருகன் ஐந்திணைகளில் முதல் திணையான குறிஞ்சி நிலத்திற்குரிய கடவுளாகப் போற்றப்படுகிறான். முருகனுக்குப் பல்வேறு பெயர்கள் இலக்கியங்களில் வழங்கப்பட்டிருப்பதனைத் தொல்காப்பியத்தில்,

*"சேயோன் மேய மைவரை உலகம்"* (தொல்.பொருள்.5)
*"வெறிஅறி சிறப்பின் வெவ்வாய் வேலன்"* (தொல்.பொருள்.1006)

என்ற இந்நூற்பாக்களில் சேயோன், வேலன் எனக் குறிப்பிடப்பட்டிருப்பதை அறியலாம். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் முருகனை,

*"கண்டேத்துஞ் செவ்வேள்"* (சிலம்பு. மங்கல.38)
*"அவுணரை கடந்த சுடரிலை நெடுவேள்"* (சிலம்பு. கட்டு 189)
*"அறுமுக ஒருவயநின் அடியினை தொழுதோம்"* (சிலப்.குன்ற. 18)
*"சீர்கெழு செந்தில்"* (சிலம்பு. குன்றக்குரவை. 8)

என்று குறிப்பிடுவதை அறியலாம். நற்றிணையானது முருகனின் பெயராக,

*"வேலன் கண்ட வெறி மனை வந்நோய்"* (நற்.34-9)

என்றும், கலித்தொகையில் ஆலமர் செல்வன் என்றும் குறிப்பிடுவதன் மூலம் முருகனைக் குறிப்பிடும் பெயர்களை அறியலாம். திருமுருகாற்றுப்படையில் நக்கீரர்,

*"ஆலஅமர் செல்வன், ஆலகெழு கடவுள் புதல்வன்*
*மால்வரை மலையகன் மங்கை கணவர்"* (திருமுருகு.255-256)

குறிப்பிடுவதன் மூலம் முருகனின் பல்வேறு பெயர்களை அறியலாம்.

**முருகப்பெருமானின் பிறப்பு**

முருகப்பெருமானின் பிறப்பு பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவுகின்றன. ஆதிகால மனிதர்களில் இனக்குழுத் தலைவனாக இருந்து பல வெற்றிகளை இனத்தவர்களுக்குப் பெற்றுத்தந்த பின்னர், தெய்வத்தன்மைக்கு உயர்த்தப்பட்டிருக்கலாம் என்பது மானிடவியலாரின் கருத்தாகும். ஆனால், பரிபாடலில் முருகனின் பிறப்பைப் பற்றிக் கூறுகையில், தேவர்கள் செய்த வேள்வியில் கொடுத்த அவிர்பாகத்தை உண்ட சிவன் உமையம்மையுடன் கூடிக் காமம் நுகர்ந்தான். சிவனிடம் இந்திரன் உன் புணர்ச்சியில் பெற்ற கருவைச் சிதைக்க வேண்டுமென வரம் பெற்றான். இந்திரன் அக்கருவைப் பல துண்டங்களாகச் சிதைத்து முனிவர்களிடத்து கொடுத்தான். அக்கரு தேவரின் படைத்தலைவன் ஆவதற்கு உரியது என்பதை உணர்ந்து சிதைக்காமல் அம்முனிவர்கள் கார்த்திகைப் பெண்டிர் அறுவரிடமும் கொடுத்தனர். அப்பெண்டிர் இமயமலையில் நீலப்பூக்கள் மலர்ந்துள்ள சரவணப்பொய்கையில் உள்ள தாமரை மலர்ப் படுக்கையில் முருகனைப் பெற்று வளர்த்தனர் என்று கூறும் இச்செய்தியானது பரிபாடலின் பின்வருமாறு விளக்குகின்றது.

*"மறு அறு கற்பின் மாதவர் மனைவியர்*
*நிறைவயின் வழாஅது நிற்சூ லினரே*
*நிவந்து ஓங்கு இமயத்து நீலப்பைஞ்சுனைப்*
*பயந்தோர் என்ப பதுமத்துப் பாயல்*
*பெரும் பெயர் முருக"* (பரி.5:46-50)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். இச்செய்தியானது திருமுருகாற்றுப் படையில்,

*"அறுவர் பயந்த ஆறுஅமர் செல்வ"* (திருமுருகு.255)

என்றும், சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள்,

*திருமுலைப்பா லுண்டான் திருக்கைவே லன்றே*
*வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து*
*குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடுவேலே"* (சிலம்பு. குன்ற. 10)

என்ற பாடலடிகள் மூலம் கார்த்திகைப் பெண்கள் அறுவரும் முருகனைக் கருவாகத் தன் வயிற்றில் தாங்கிச் சரவணப் பொய்கையில் ஒரு சேரப் பெற்றெடுத்தனர். அக்குழந்தைகளே ஆறுமுகனாகி ஒருமுகம் கொண்ட திருமுருகன் ஆனான் என்ற செய்தியை அறியலாம்.

**முருகனின் தோற்றப் பொலிவு**

முருகன் தாமரை போன்ற திருவடிகளையும் பவளத்தை ஒத்த சிவந்த நிறத்தை உடையதாய் விளங்குகின்ற ஒளியினையும் குன்றிமணியை ஒக்கும் சிவந்த ஆடையையும் கிரவுஞ்ச மலையினது நடுவிடம் பிளக்கும்படி வீசிய அழகிய ஒளியை உடைய நெடிய வேற்படையையும் சேவற் கொடியையும் உடையவன் முருகன் என்பதை குறுந்தொகை,

*"தாமரை புரையும் காமர் சேவடி*
*பவழத்து அன்ன மேனி திகழ்ஒளிக்*
*குன்றி ஏய்க்கும் உடுக்கை குன்றின்*
*நெஞ்சு பக அறிந்த அம்சுடர் நெடுவேல்"* (குறுந்.கடவுள்)

என்ற பாடலடிகளால் அறியலாம். முருகன் காலையில் எழும் கதிர் ஒளி போன்ற நிறத்தினையும் ஆறு மெல்லிய தலைகளையும் மத்தளம் போன்ற நிற அழகையும் உடையவர் என்பதை,

*"மலையாற்றுப் படுத்த மூவிரு கயந்தலை*
*மூவிரு கயந்தலை முந்நான்கு முழவுத்தோள்*
*ஞாயிற்றேர் நிறத்தகை"* (பரிபாடல். 5:10-12)

என்ற பாடலடிகள் மூலம் முருகனின் தோற்றப்பொலிவின் சிறப்பை அறியலாம்.

**முருகன் உறையும் இடங்களும் திருத்தலங்களும்**

பழங்கால மக்கள் இயற்கை பொருட்களை இறைவன் உறையும் இடங்களாக மதித்தனர். எனவே முருகன் உறையும் இடங்களாக

திருமுருகாற்றுப்படை, காடு, சோலை ஆறு, குளத்தங்கரை, முச்சந்தி, நாற்சந்தி, கடம்ப மரம் ஆகிய இடங்களில் முருகனை வழிபட்டனர் என்பதனை,

*"காடும் காவும் கவின்பெறு துருத்தியும்*
*யாறும் குளனும் வேறுபல் வைப்புஞ்*
*சதுக்கமும் சந்தியும் புதுப்பூங் கடம்பும்*
*மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்"* (திருமுருகு.223-226)

என்ற பாடலடிகள் விளக்குகின்றது. இதுமட்டுமன்றி நல்மனத்தவர் அடியவர்கள் தம் மனதிலும் விரும்பி உறையும் இடமாக முருகப்பெருமான் திகழ்வதை,

*"ஆர்வலர் ஏத்த மேவரு நிலையினும்"* (திருமுருகு.221)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். முருகனின் படைவீடுகளாக சிலப்பதிகாரம் திருச்செந்தூர், சுவாமிமலை, திருச்செங்கோடு, திருவேரகம் போன்ற பகுதிகளைக் குறிப்பிட்டிருப்பதைச்,

*"சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமு நீங்கா இறைவன்"* (சிலம்பு. குன்றக். 8:1-2)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

முடிவுரை

வழிபாட்டு முறையானது தொடக்ககாலத்தில் இயற்கைப் பொருட்களையே அடிப்படையாகக் கொண்டதாகும். இயற்கையின் மூலங்களான ஐம்பூதங்களின் அருட்தன்மையையும், பேராற்றலையும் கண்டு நன்றி செலுத்தும் பொருட்டும், அச்சத்தை தெளிவிக்கும் பொருட்டும் இயற்கை வழிபாட்டு முறைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இயற்கை வழிபாடு இருந்துள்ளதை என்பதை அறியமுடிகிறது. நற்றிணையில் சூரிய வழிபாடும், அகநானூற்றில் கடல் வழிபாடும் கலித்தொகையில் மலை வழிபாடும் சிலப்பதிகாரத்தில் நிலவு வழிபாடு பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளதன் மூலம் இயற்கை வழிபாட்டின் முக்கியத்துவத்தை அறிய முடிகின்றது. இயற்கை வழிபாட்டின் ஒரு கூறான சூரிய வணக்கமே முருக வழிபாடானது என பரிபாடல் திறன் என்னும் நூலில் சாரங்கபணி குறிப்பிட்டிருப்பது அறியத்தகுந்ததாகும். குறிஞ்சி நில மக்களே முதலில் வாழ்வைத் தொடங்கியவர்கள் என்ற அடிப்படையில் முருக வழிபாடே முதலில் தோன்றியது எனலாம். முருகனுக்குப் பல்வேறு பெயர்கள் குறிப்பிட்டிருப்பதைத் திருமுருகாற்றுப்படை, சிலப்பதிகாரம், தொல்காப்பியம் போன்ற நூல்கள் மூலம் அறியமுடிகிறது. முருகன் பிறப்பு பற்றி ஒரே செய்திகளாக சிலப்பதிகாரம், திருமுருகாற்றுப்படை, பரிபாடல் போன்ற நூல்கள் கூறுவதை அறிய முடிகிறது. செம்மொழித்தமிழ் நூல்கள் முருகனின் தோற்றப்பொலிவைக் கூறுமிடத்து செவ்வேள், ஞாயிற்றேர் நிறத்தகை என்று குறிப்பிடுவதால் சூரிய வழிபாட்டின் மூலம் தான் முருக வழிபாடு தோன்றியது எனலாம்.

# தமிழரின் வாழ்வில் முருகப் பெருமானுக்குரிய விரதங்கள்

சி. சிவகுமாரி,
நேஷனல் மேனிலைப்பள்ளி
குடியாத்தம்
வேலூர் மாவட்டம் - 632 602

முருகப்பெருமானை ஆராதிக்கும் மூன்று முத்தான விரதங்கள் விரத நூல்களிலே சொல்லப்பட்டிருக்கின்றன. வார விரதமான சுக்கிர வாரம் அல்லது வெள்ளிக்கிழமை விரதமான திதி விரதம் ஒன்றும் கந்தசஷ்டி விரதம் என ஒன்றும், நட்சத்திர விரதமான கார்த்திகை விரதம் என மூன்றுமாக அவை அமைகின்றன.

முருகப்பெருமானை வணங்கி அருள் பெறுவதற்குரிய விரதங்களைச் சிறப்பாக ஒவ்வொன்றாக எடுத்து ஆராய்வோம். உயிர்களுக்கு வேண்டுவது மூன்று சுகம். இகம், பரம், வீடுபேறு இந்த மூன்று இடங்களிலும் காத்தருளும் தெய்வம் முருகன் அதனால் அப்பெருமான் மூன்று உகரங்களுடன் கூடிய முருகு என்ற சொல்லை உடைய தனிப்பெருந் தெய்வமாக விளங்குகின்றான். அழகு உறையும் குன்றுகளிலெல்லாம் கோலக்குமரன் கொலுவீற்றிருப்பதாகக் கொண்டு ஆங்காங்கு அவனுக்கு விழாவெடுத்து வழிபடுகின்றோம் விரதங்களைக் கடைப்பிடிக்கிறோம்.

அழகுக் கடவுளாக உறையும் முருகனைத் தமிழ்க்கடவுளாக நாம் கொண்டோம். முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன் என்பர் அருணகிரியார். அத்தகைய பெருமையும், அருளும் நிறைந்த முருகனுக்குரிய விரதங்களை இங்கு நோக்குவோம்.

**சுக்கிரவார விரதம்**

சுப்பிரமணியக் கடவுளை வேண்டி ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் கைக்கொள்ளப்படும் இந்த விரதம் ஐப்பசி மாத முதல் வெள்ளிக்கிழமையில் ஆரம்பிக்கப்படும்.

உபவாசமிருத்தல் உத்தமம். அது இயலாதவர்கள் பால்பழமாவது பலகாரமாவது இரவு ஒரு நேரம் கொள்ளலாம். அதுவும் முடியாதவர்கள் பகல் ஒருபொழுது போசனம் செய்க. மூன்று வருட காலம் அநுஷ்டித்த பின் விரத உத்யாபனம் செய்யலாம்.

**கார்த்திகை விரதம்**

கார்த்திகை மாதக் கார்த்திகை நட்சத்திரம் முதலாக மாதந்தோறும் கார்த்திகை நட்சத்திரத்தில் முருகப்பெருமானைக் குறித்துக் கைக்கொள்ளப்படும் விரதம் இது. உபவாசம், உத்தமம், இயலாதோர் இரவில் பால், பழம்,

பலகாரம் உண்ணலாம். அதுவுமியலாதோர் பகலொரு பொழுது போசனம் செய்க. பன்னிரண்டு வருடங்கள் இவ்விரதமநுஷ்டித்த பின் உத்யாபனம் செய்யலாம். திருக்கார்த்திகை விரதத்துக்கு இஸ்தமன வியாபகம் முக்கியம். அதாவது மாலை ஐந்து மணிக்குமேல் கார்த்திகை நட்சத்திரம் இருக்கும் நாளே விரத நாளாகும்.

திருக்கார்த்திகை தீபம் என்று இத்தினத்தில் தீபங்களை ஏற்றி வைத்து சோதி வடிவில் இறைவனை வழிபடுவர். சிவராத்திரி நாளில் பிரம விஷ்ணுக்களுக்குத் தமது சோதி வடிவை இறைவன் காட்டிய பொழுது அவ்வடிவைத் தமக்கு என்றும் காட்டியருள வேண்டுமென அவர்கள் வேண்டினர். அதற்கு இறைவன் திருக்கார்த்திகை நாளில் மீண்டும் இவ்வரவைக் காட்டுவோம் என்றார். அதனை நினைவு கூர்ந்தே கார்த்திகைத் தீபநாள் கொண்டாடப்படுகின்றது.

திருவண்ணாமலை தலத்திலே மலையுச்சியிலே பெருந்தீபம் ஏற்றப்படுகின்றது. பல ஊர்களிலுமுள்ள பல்லாயிரக்கணக்கான அடியவர்கள் இறைவனது சோதி வடிவைத் தரிசிப்பார்கள் குன்றின் மேலிட்ட தீபம் என்பதும் மலை விளக்கு ஆகிய மரபுச்சொற்றொடர்கள் நீண்ட காலம் இவ்வழக்கு இருந்ததைக் காட்டுகின்றன.

*"மைம்மிசை யின்றி மலைவிளக்குப் போலோங்கி*
*செம்மை யினின்றிலங்குந் தீபிகை - தெம்முனையுள்"*

என்று தொல்காப்பியம் புறத்திணை நூற்பா எண்85ல் வருவதும்,

*"முடநடைப் பறவையு மாய விலங்கு*
*முடிமலர் முடிக்கா டவைமுறை போகா""*

என்று சங்க புலவர் பொய்கையார் கூறுவதும்,

*"வானம்ஊர்ந்தவளங்கொளிமண்டிலம்*
*நெருப்பெனச்சிவந்தஉருப்புஅவிர்அம்கட்டு""*

என்னும் ஔவையாரின் அகநாநூறுப் பாடலின் கூற்றும் கூறுகின்றன. திருக்கார்த்திகை தினத்தில் ஆலயங்கள் தோறும் சொக்கப்பானை கொளுத்தி மகிழ்வர். சுட்டபனை என்னும் சொற்றொடர் திரிந்து சொக்கப்பானை என வழங்குகிறது. சுட்கம் என்பது வறட்சி, உலர்ந்ததென்னை, பனை, கமுகு, வாழை இவற்றின் தண்டினைத் தீப தண்டமாகக் கோயில் சந்நிதானத்திலே நட்டு உலர்ந்த பனையோலை முதலியவற்றால் விமானம் போல உயரமாக மூடிக்கட்டிய சொக்கப்பானையில் அக்கினி மூட்டி அது சுவாலித்தெரியும் போது சோதி சொரூபமாகவும், திருவண்ணாமலை தீபமாகவும் பாவித்து பக்தர் வழிபடுவர்.

**கந்தசஷ்டி விரதம்**

கலியுக வரதனும், தமிழ்க் கடவுளுமாகிய கந்தக்கடவுளாம் சுப்பிரமணிய சுவாமிக்குரிய மூன்று விரதங்களில் மிகச் சிறந்தது கந்தசஷ்டி

விரதம் சைவ சமயிகள் முக்கியமாகக் கந்தபுராண கலாசாரத்தில் திளைக்கும் ஈழத்துச் சைவத் தமிழ்மக்கள் மற்றெல்லா விரதங்களையும் விட இந்தச் கந்தசஷ்டி விரதத்தை மிகவும் புனிதமாகவும் பக்தி பூர்வமாகவும் கைக்கொள்ளுகிறார்கள்.

ஐப்பசி மாதத்துத் தீபாவளி அமாவாசையையடுத்த வளர்பிறை பிரதமை முதல் ஷஷ்டியீறாகவுள்ள ஆறு நாட்கள் கந்தசஷ்டி விரதமாகும். சகல செல்வங்களையும், சுகபோகங்களையும் தரவல்ல இந்த விரதம் புத்திர லாபத்துக்குரிய சிறப்பான விரதமாகும். சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும் என்பது ஒரு பழமொழி. இதற்கு வெளிப்படையான சொற்பொருளைவிட கந்தஷஷ்டியில் விரதமிருந்தால் அகப்பையாகிய கருப்பையில் கரு உண்டாகும் என்ற உட்கருத்துமுண்டு. பகல் பன்னிரண்டு நாழிகைக்குக் குறையாமல் பஞ்சமி திதியும் அதன்பின் ஷஷ்டி வியாபகமும் இருக்கும் நாள் சூரன்போருக்குரியது. பிரதமை திதியில் ஆரம்பமாகும்.

முருகபக்தர்கள் ஒரு கடுந்தவமாகவே இவ்விரதத்தைக் கருதி ஆறு நாட்களும் முழுப் பட்டினியாக உபவாச திருத்தல் வழக்கம். முதல்நாள் அமாவாசையன்றே ஒரு நேர உணவுண்டு விரதமாக இருந்து மறுநாளைய உபவாசத்துக்குத் தயார் செய்து கொள்வர் (பொதுவாகவே உபவாச விரதமநுஷ்டிக்கும்போது முதல் நாளும் மறுநாளும் ஒருநேர உணவே கொள்ளவேண்டும்).

பிரதமையிலன்று அதிகாலை நீராடி தூய ஆடையணிந்து கர்மாநுஷ்டானங்கள் முடித்து முருகன் ஆலயம் சென்று அங்கேயே ஆறு நாட்களும் அன்ன ஆகாரங்கள் எதுவுமின்றி இறைவழிபாடு, முருகநாம பஜனை, நாமஜபம், புராணபடனம், புராணம் கேட்டல் என்றித்தகைய புனித காரியங்களுடன் அங்கேயே தங்கியிருப்பர். தண்ணீர்கூட அருந்தாது ஆலயத்தில் வழங்கப்படும் பானகம் (பானக்கம்) மட்டும் அருந்தியிருத்தல் உத்தமோத்தமமான விரதமாகும். பானகமென்பது சர்க்கரை, தேசிக்காய், இளநீர், முதலியன கலந்து தயாரிக்கப்படும் ஒரு நீராகாரம் ஆகும். பட்டினி கிடக்கும் வயிற்றினுள் வெளிப்படும் அதிக சக்திமிக்க வெப்பம், வாய்வு, பித்தம், இவற்றைத் தணித்து உடற்சமநிலையைப் பேணுவதற்கும், பசி, தாகம், இவற்றை ஓரளவு தணிக்கவும் இது உதவுகிறது.

ஆலயங்களில் ஆரம்ப தினத்திலேயே தர்ப்பையணிந்து காப்பு கட்டி, சங்கல்பித்து ஆறு நாளும் நோன்பிருத்தல் முறை. இறுதி நாளில் கர்ப்பை அவிழ்த்துத் தர்ப்பையுடன் சேர்த்துத் தாம்பூல தஷிணைகளுடன் அர்ச்சகரிடம் சமர்ப்பிப்பர்.

ஏழாம்நாள் அதிகாலையில் நீராடி நித்தியகர்மாநுஷ்டானங்களை நிறைவேற்றிப் பாரணைப் பூஜை என்று நடைபெறும் விசேஷ பூஜையையும் கண்டு வழிபட்டபின் மாஹேஸ்வர பூசை செய்து (அடியார்களுக்கு அன்னமிட்டு) பாரணை செய்யவேண்டும்.

இவ்விதம் கடும் விரதம் அநுஷ்டிக்க முடியாதவர்கள் முதல் ஐந்து நாட்களும் இரவு ஒருபொழுது பால் பழம் அல்லது பலகாரம் உண்டு இறுதிநாள் உபவாசம் இருக்கலாம். அதுவும் முடியாவதவர்கள் முதல் ஐந்து நாட்களும் பகல் ஒருபொழுது அன்னமும் ஆறாம்நாள் இரவு பால்பழம் அல்லது பலகாரமும் உண்டு விரதமிருக்கலாம்.

ஆறாம்நாள் ஷஷ்டி திதியில்; சூரசம்ஹாரம் முடிந்த அன்றிரவு முழுவதும் துயில் நீக்கி விழித்திருந்து முருகன் பெருமைகளையே பேசியும், வழிபட்டிருக்குமாறு பழம்நூல்கள் விதிக்கின்றன. சிவபிரானுக்குரிய சிவராத்திரியும், மஹாவிஷ்ணுக்குரிய வைகுண்ட ஏகாதசியும் போல முருகப் பெருமானுக்குரிய ஸ்கந்தசஷ்டியும் மிக விசேஷமான தினமாதலால் துயில் நீத்தல் பொருத்தமானதே. ஆயினும் அனைவராலும் இது கைக்கொள்ளப்படுவதில்லை.

இவ்விரதம் ஆறு வருடங்கள் அல்லது பன்னிரண்டு வருடங்கள் தொடர்ந்து கைக்கொள்ளப்பட வேண்டும். உபவாசம் அல்லது ஒரே நேர உணவு என்பது உணவு நியதி ஆறு வருடமும் ஒரே மாதிரியாக இருக்கவேண்டும். முறைப்படி சங்கல்ப பூர்வமாக ஆரம்பித்து ஆறாவது வருடம் விரத முடிவில் விரதோத்யாபனம் செய்து பூர்த்தி செய்து கொள்ளவேண்டும்.

**தொகுப்புரை**

உயிர்களுக்கு வேண்டுவது மூன்று சுகம். இகம், பரம், வீடுபேறு இந்த மூன்று இடங்களிலும் காத்தருளும் தெய்வம் முருகன் அதனால் அப்பெருமான் மூன்று உகரங்களுடன் கூடிய முருகு என்ற சொல்லை உடைய தனிப்பெருந் தெய்வமாக விளங்குகின்றான். இந்த மூன்று நலன்களை வழங்கவல்ல தெய்வம் முருகவேள். எனவே முருகப்பெருமானைப் பயன்கருதாது மெய்யன்புடன் வழிபட்டு விரதத்தால் இகம், பரம், வீடு என்ற மும்மை நலன்களையும் பெற்று செம்மையுறுவார்கள் என்று நம்பி விரதங்கள் கடைப்பிடிக்கப்டுகின்றன.

## முருக வழிபாட்டில் காவடி

மு. சுதா
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பாரதிதாசன் உயராய்வு மையம்
பாரதிதாசன் பல்கலைக்கழகம், திருச்சி.

உலகில் மனிதன் தோன்றிய இடம் 'குறிஞ்சி நிலம்' என்றழைக்கப்படும் மலைப்பகுதியே, மக்கள் வாழ்வு முதன்முதலில் தொடங்கப்பட்ட இடமும் மலையுமாகும். அம்மலையில் வாழ்ந்த மக்கள் 'குறிஞ்சிக் கிழானாகிய' முருகனையே வழிபட்டு வந்தனர். மனிதப் பண்பாட்டைப் பிரதிபலிக்கும் வகையில் தெய்வ வழிபாடு மக்களிடையே இரண்டறக் கலந்து காணப்படுகிறது. இத்தெய்வ வழிபாடு மக்களின் சமூக ஒற்றுமைக்கும், கலை வளர்ச்சிக்கும் பெரிதும் பயன்படுகிறது. தெய்வ வழிபாட்டில் நகர்ப்புற, நாட்டுப்புற மக்களின் பண்பாடும் பழக்க வழக்கங்களும் நாகரிகமும் வெளிப்படுகிறது. நாம் மனதுக்குப் பிடித்தவர்களைப் பார்க்கச் செல்லும் போது, நம் அன்பை அவர்களுடன் பரிமாறிக் கொள்ளும் பொருட்டு, பரிசுப்பொருள் ஏதாவது ஒன்றைக் கொண்டு செல்வது வழக்கம். அதுபோல் நம் அன்றாட வாழ்வில், நம் குடும்பத்தில் ஏதேனும் நல்லது நடக்க வேண்டுமென்று, நம்முடைய மனத்திற்குப் பிடித்தக் கடவுளைக் காணச் செல்லும்போது, தம்முடைய அன்பை இறைவனிடம் தெரிவிக்கும் பொருட்டு, தம்மால் முடிந்த பொருள்களை இறைவனுக்குக் காணிக்கையாக அளிக்கிறோம். அவ்வகையில் தமிழ்க் கடவுளாம் முருக வழிபாட்டில், மக்கள் காணிக்கையாகச் செலுத்தும் பொருட்களில் காவடி முக்கியப்பங்கு வகிக்கிறது.

### காவடி - சொற்பொருள் விளக்கம்

காவு+அடி=காவடி. 'கா' என்றால் பாதுகாத்தல் 'அடி' என்றால் பாதம். முருகனின் பாத கமலங்களைச் சரணடைந்தால் அவன் அருள் காட்டிப் பாதுகாப்பான் என்று பொருள்.

*ஒரு தலையான் இன்னாது காமம் காப் போல*
*இரு தலையானும் இனிது*

இதில் 'கா' என்ற சொல்லைக் 'காவடி' என்ற பொருளில் திருவள்ளுவர் காட்டியுள்ளார்.

### காவடியின் தோற்றம்

ஆரம்பக் காலத்தில் மலையில் ஏறுவோர் நீண்ட தடியைக் கழுத்தில் வைத்துக் கொண்டு தடியின் இருபக்கமும் சமமான அளவில் பொருட்களை வைத்துக்கொண்டு மலையில் ஏறிச் செல்வர். இவ்வழக்கத்திலிருந்து தான் மலைமீது இருக்கும் முருகனை வழிபடச் செல்லும் பக்தர்கள், ஆண்டவன்

பூசைக்கான பொருட்களைத் தடியின் ஒரு பக்கமும், தம் தேவைக்கான பொருட்களைத் தடியின் மறுபக்கமும், தனித்தனியாகக் கட்டி தோளின் இருபுறங்களிலும் தொங்கவிட்டுச் சுமந்து சென்றனர். இதுவே காவடியின் தோற்றமாக இருந்திருக்கக்கூடும்.

**காவடியின் தோற்றம் குறித்த புராண வரலாறு**

காவடியின் தோற்றம் குறித்து புராண வரலாறு ஒன்று குறிப்பிடுகின்றது. சிவகிரி, சக்திகிரி என்னும் இரு மலைகள் கைலாயத்தில் இருந்தன. அவற்றைச் சிவபெருமான், அகத்தியரின் மீதிருந்த அன்பின் காரணமாய், அகத்தியருக்குக் கொடுக்க, அவற்றைப் பொதிகைக்குக் கொண்டு செல்ல நினைத்தார் அகத்தியர். உடனே அவரின் சீடரான இடும்பாசுரனை அழைத்து, அம்மலைகளைப் பொதிகைக்குக் கொண்டு செல்ல ஆணையிட, இடும்பனும் அவைகளைக் கொண்டு போகும் வழியில் களைப்படைந்து ஓரிடத்தில் இறக்கி வைத்தான். அச்சமயம் சிவகிரியின் மீது அழகிய சிறுவன் ஒருவன் நின்றிருக்கக் கண்ட இடும்பன் அச்சிறுவனை மலையைவிட்டுக் கீழே இறங்கும்படி பணித்தான். அச்சிறுவன் இறங்க மறுக்கவே, சிறுவனுக்கும், இடும்பனுக்குமிடையில் கடுமையான போர் நிகழ்ந்தது. போரில் இடும்பன் இறந்துவிட, இடும்பனின் மனைவி இடும்பியின் முறையீட்டால் இளஞ்சேயாகிய முருகனின் அருளால் அசுரன் உயிர்மீளப் பெற்றான். பின் இடும்பாசுரன் முருகனிடம் இருவரம் பெற்றான். ஒன்று முருகன் மலையில், வாயில் காவலனாக இடும்பன் சந்நிதி என்ற ஒரு இடம், தான் இருமலைகளையும் எடுத்து வந்தது போன்று, முருகனடியார்களும், காவடி கொண்டு வந்து தன் சந்நிதியில் காட்டி வழிபட்ட பின்னரே முருகனிடம் கொண்டு சென்று முருகன் அருள் பெற வேண்டுமென்றும் வரம் பெற்றான். இடும்பன் கொண்டு வந்த சிவகிரி, சக்திகிரி என்னும் இருமலைகளும், தற்போது பழனிமலை, இடும்பன் மலை என்றழைக்கப்படுகிறது.

**காவடியின் வகைகள்**

மனித சமுதாயம் பல்வேறு காரணங்களால், பல்வேறு பிரிவுகளாக வாழ்ந்திருந்த போதிலும் அவர்கள் அனைவரும் ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்களாகும். இத்திருவிழாக்கள் பெரும்பாலும் இறைவழிபாட்டோடு இணைந்தே கொண்டாடப்படுகிறது. அதுபோலவே முருகன் கோவில்களில் கொண்டாடப்படும் தைப்பூசம், பங்குனி உத்திர விழாக்களில் காவடி எடுத்தல் முக்கிய வழிபாடாக மேற்கொள்ளப்படுகிறது. காவடி இரண்டு வகைப்படுகிறது அவை, 1. தீர்த்தக்காவடி, 2. தூக்குக் காவடி ஆகும்.

**தீர்த்தக் காவடி**

கோவிலில் குடிகொண்டிருக்கும் கடவுளைத் தீர்த்தத்தால் அபிடேகம் செய்வது மரபு. அவ்வகையில் முருகப்பெருமான் அபிடேகப் பிரியர் ஆவார். அவ்விறைவனை மகிழ்விக்கும் பொருட்டு மக்கள் தத்தமது ஊரிலுள்ள புனிதமான நீர்நிலைகளில் இருந்து, குடங்களில் தீர்த்தத்தைக் கொண்டு

வந்து முருகனுக்கு அபிடேகம் செய்து இறைவனை மகிழ்விக்கின்றனர். தைப்பூசம், பங்குனி உத்திரம், அக்கினி நட்சத்திரம் ஆகிய திருவிழாக்களின் போது மக்கள் கொடுமுடி காவிரியாற்றிலிருந்து, விரதமிருந்து தீர்த்தம் கொண்டு வந்து அபிடேகம் செய்வர்.

**தூக்குக் காவடி**

காவடியைத் தோளில் சுமந்து கொண்டு வருவதால் இதனைத் 'தூக்குக் காவடி' என்றழைப்பர். தண்டு போன்ற அமைப்பின் மீது அரைவட்ட வடிவம் உருவாக்கப்பட்டு, மயில் தோகைகளினால் அலங்கரிக்கப்பட்டிருக்கும். தண்டின் இருபுறங்களிலும் செம்பு அல்லது கலயங்கள் கட்டப்படும். அப்பாத்திரங்களில் உள்ள பொருளைக் கொண்டு காவடி பெயர் பெறுகிறது.

தோளில் சுமந்து வரும் காவடிகள் முப்பத்தைந்து வகைப்படும். அவை 1. அன்னக்காவடி, 2. பால்காவடி, 3. பன்னீர்காவடி, 4. புஷ்பக்காவடி, 5. இளநீர் காவடி, 6. எண்ணெய்க்கவடி, 7. சாம்பிராணிக் காவடி, 8. தயிர்க்காவடி, 9. தினைக்காவடி, 10. தானியக்காவடி, 11. தாழம்பூக்காவடி, 12. அபிடேகக் காவடி, 13. அட்டைக்காவடி, 14. அலங்காரக்காவடி, 15. ஆறுமுகக் காவடி, 16. கரும்புக்காவடி, 17. வெட்டிவேர்க் காவடி, 18. சுரைக்காய்க்காவடி, 19. முந்திரிக் காவடி, 20. சர்க்கரைக் காவடி, 21. கற்கண்டுக் காவடி, 22. ஏலக்காய்க் காவடி, 23. பேரிட்சைக் காவடி, 24. சேவல் காவடி, 25. மயில் காவடி, 26. புறாக் காவடி, 27. மச்சக் காவடி, 28. சர்ப்பக் காவடி, 29. தங்கக் காவடி, 30. வெள்ளிக் காவடி, 31. சந்தனக் காவடி, 32. பஞ்சாமிர்தக் காவடி, 33. விபூதிக் காவடி, 34. கற்பூரக் காவடி, 35. செருப்புக் காவடி, போன்றவைகளாகும். தோளில் சுமந்து வரும் காவடிகளைப் போன்றே, முருக வழிபாட்டில் உடலால் சுமந்து வரும் காவடிகளும் காணப்படுகின்றன. அவை, அலகுக் (வேல்) காவடி, அக்னிக் காவடி, பறவைக் காவடி, இரதக் காவடி ஆகும்.

மேற்கண்ட நான்கு காவடிகளுடன், சர்ப்பக்காவடி, மச்சக்காவடி, புறாக்காவடி, சேவல் காவடி, மயில் காவடி, செருப்புக் காவடி போன்றவை முருக வழிபாட்டில் சிறப்பிடம் பெறுகின்றன. இவற்றை உயிர்காவடிகள் என்றும் குறிப்பிடுவர்.

**சேவல் மற்றும் மயில் காவடி**

முருக வழிபாடின் சின்னங்களாக சேவலும், மயிலும் காணப்படுகின்றன. சேவல் முருகப் பெருமானின் கொடியாகவும், மயில் முருகனின் வாகனமாகவும் விளங்குவதால் இவற்றை பக்தர்கள் ஒரு நீண்ட கம்பின் இருபுறங்களிலும் துணியால் தொட்டில் கட்டி அத்தொட்டில்களில் சேவலும் மயிலும் வைக்கப்பட்டு காவடி எடுக்கப்படுகின்றது.

**புறாக் காவடி**

முருகப் பெருமானின் ஆணைப்படி புறா சமைக்கப்பட்டுக் காவடித் தண்டின் இருபுறங்களிலும் கட்டப்பட்டுள்ள பாத்திரத்தில் வைத்துக் காவடி

எடுக்கின்றனர். மலைக்கோயிலில் இக்காவடியை அவிழ்த்துப் பார்த்தால், அப்புறா மீண்டும் உயிர் பெற்று விடுவதாகக் கூறுகின்றனர்.

### மச்சக் காவடி

மீனை மூன்று இடத்தில் வெட்டி மஞ்சள் தடவித் தண்ணீரில் போட்டுக் காவடி எடுத்து வருவர். ஒரு சிலர் அம்மீனைச் சமைத்துக் காவடியில் கொண்டு வருகின்றனர். கோயிலில், இக்காவடியை அவிழ்த்துப் பார்த்தால் சமைக்கப்பட்ட மீன், மீண்டும் உயிர் பெற்றுத் துள்ளி விழுவதாக இக்காவடியைப் பற்றிக் குறிப்புக் காணப்படுகிறது. இக்காவடி மீன்வளம் பெருகுவதற்காக எடுப்பதாகக் கூறப்படுகிறது. இக்காவடி பற்றி, பழைய சோற்றினை இக்கடவுளுக்குப் படைக்கும் போது ஆவிபறக்கும் சுடுசோறாக மாறுகிறது, பொறித்து உப்பிடப்பட்ட மீன்கள் மீண்டும் உயிர் பெற்றுக் கடலில் குதிக்கின்றன எனத் திருநெல்வேலி கெசட்டுக் குறிப்பிடுகின்றன.

### சர்ப்பக் காவடி

நல்ல பாம்பினைக் காவடியில் கட்டிக் கொண்டு வந்து காணிக்கை செலுத்துவது சர்ப்பக்காவடி எனப்பெறும். சர்ப்பக் காவடி எடுப்பவர் கடும் விரதமிருப்பார். ஊருக்கு வெளியே தங்கி ஆறு நாட்கள் உணவருந்தாமல் மருகனை வேண்டி உருகி நிற்பார். ஆறாம் நாள் அவர் கனவில் முருகன் தோன்றி ஓர் இடத்தைக் குறிப்பிட்டு அவ்விடத்திலுள்ள பாம்பைக் கொண்டு வருமாறு கூறுவார். விரதமிருப்பவர் தாரை, தப்பட்டை முழங்க அவ்விடம் சென்று பச்சை மட்கலத்துள் பாம்பினை அடைத்துக் (பாம்பு தானாகவே வெளியே வந்து மட்கலத்தினுள் புகும் என்பர்)காவடியில் கட்டிக் கொண்டு வருவர். வள்ளிகனை அருகில் மட்கலத்தைத் திறந்து விட்டவுடன் பாம்பு வெளியேறி ஓடிவிடும்.

### செருப்புக் காவடி

பெரும்பாலும் இக்காவடியை ஒரு குறிப்பிட்ட இன (சக்கிலிய)மக்கள் எடுப்பதாக அறிய முடிகிறது. இம்மக்கள் முருகனைத் தம் மருமகனாக எண்ணி, முருகனுக்கு மாட்டுத் தோலினால் செருப்பு செய்து, அச்செருப்பைத் தங்கள் தலையில் வைத்துக் கொண்டு ஒரு குழுவாக வந்து முருகனுக்குக் காணிக்கை செலுத்துகின்றனர்.

## உடலால் சுமந்து வரும் காவடிகள்

### அலகுக் காவடி

பக்தர்கள் தம் நாக்கில் சிறிய அல்லது பெரிய அளவிலான வேலை வாயில் குத்திக் கொண்டு வருவர். ஒரு சிலர் வாயில் வேல் குத்திக் கொள்வதுடன், உடல் முழுவதும் சிறுசிறு கொக்கிகளைக் குத்திக்கொண்டு, அதில் ஆண்டவனுக்குப் பூசை செய்யத் தேவைப்படும் பூசைப் பொருட்களை மாட்டிக் கொண்டும் நேர்த்திக்கடன் செலுத்துகின்றனர்.

அக்கினிக் காவடி

முருகனடியார்கள் தம் இருகைகளில் அக்கினிச் சட்டியை ஏந்திக்கொண்டு கோவிலை வலம் வந்து, இறைவன் சந்நிதி முன் வைத்து காணிக்கைச் செலுத்துகின்றனர். இவ்வக்கினிச் சட்டியே, அக்கினிக் காவடி, என்றழைக்கப்படுகிறது.

பறவைக் காவடி

பக்தர்கள் லாரி வாகனத்தில் தன் உடலைக் கயிறினால் கட்டிக் கொண்டு வெட்ட வெளியில் பறவை போல் பறந்த மாதிரி நேர்த்திக் கடன் செலுத்துகின்றனர். இதனையே பறவைக்காவடி எனக் கூறுகின்றனர்.

இரதக் காவடி

மரத்தால் தேர் செய்து, அத்தேரில் முருகன் படம் வைக்கப்பட்டும், அத்தேரைச் சுற்றி வண்ணக் காகிதங்களால் அலங்கரித்திருப்பர். அத்தேரில் நீண்ட கயிறு ஒன்று இணைக்கப்பட்டு, அக்கயிற்றின் நுனியில் கொக்கிகள் மாட்டப்பட்டு இருக்கும். அக்கொக்கிகளை அடியார்கள் தம் முதுகில் குத்திக் கொண்டு, தேரை இழுத்து, கோவில் வரை வலம் வருவர்.

மேற்கண்ட இக்காவடிகள் அனைத்தும், முருகன் கோவில்களில் காணப்படும் அதிசயக் காவடிகளாகும்.

தமிழ்க் கடவுளாம் முருகப் பெருமான், பல்வேறு இன மக்களின் முதல் கடவுளாய் விளங்குகிறார். முருகனை நம்பினால் கைவிடப்படார் என்னும் வாக்கிற்கேற்ப உலக மக்களின் நம்பிக்கைத் தெய்வமாக முருகன் விளங்குகிறார். பெரும்பாலான மக்கள் முருகனைத் தன் குழந்தையாகவே பாவிக்கின்றனர். தங்கள் அன்றாட வாழ்வில் நிகழும் இன்ப, துன்பங்களில் கடவுளின் அருள் கிடைக்குமானால் வெற்றி கிட்டும் என்னும் நம்பிக்கையில் மக்கள் இறைவனிடம் பல்வேறு விதமான கோரிக்கைகளை வைத்து, அவ்வேண்டுதல் நிறைவேறினால் இன்னது செய்வேன் என்று, மேற்கண்ட காவடிகளையும், பிற பொருட்களையும் காணிக்கையாகச் செலுத்தி வேண்டுதலை நிறைவேற்றுகின்றனர். இவ்வழிபாட்டில் பல்வேறு இனமக்கள் ஒன்று கூடுவதால், அம்மக்களின் பண்பாடும், பழக்கவழங்கங்களும் வெளிப்படுகிறது. இதன் மூலம் மனித உறவுகளிடையே பலவிதமான புரிதல்கள் உருவாகிறது என்பதை நாம் அறியலாம்.

# பரிபாடல் காட்டும் முருகன்

த. சுதாகர்
முனைவர் பட்ட ஆய்வாளர்
அரசு கலைக் கல்லூரி
அரியலூர்

எட்டுத்தொகை நூல்களில் காலத்தால் பிந்திய நூல் பரிபாடலாகும். கடவுள் பற்றிய குறிப்புகளும் வழிபாடு பற்றிய குறிப்புகளும் பிறநூல்களில் வந்தாலும் ஆங்காங்கு வந்தாலும் பரிபாடலைப் போல அவை அமையவில்லை என நாராயணவேலுப்பிள்ளை கூறுகின்றார். திருமால், செவ்வேள், கொற்றவை, வையை பற்றிப் பரிபாடல் எடுத்துரைக்கின்றது.

*"திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்*
*தொருபாட்டுக் காடு கிழாட் கொன்று - மருவினிய*
*வையையிரு பத்தாறு மாமதுரை நான்கென்ப*
*செய்ய பரிபாடல் திறம"* (இறை.கள.ப.7)

என்ற பழம்பாடல் பரிபாடலில் எத்தனை பாடல்கள் இருந்தன என்பதைக் கூறும். எனினும் இன்று திருமாலுக்கு 6 முருகனுக்கு 8 வையைக்கு 8 என மொத்தம் 22 பாடல்கள் மட்டுமே கிடைத்துள்ளன.

*பரிபாடல்லே*
*நாலீரைம்ப துயர் படியாக*
*ஐயைந்தாகும் இழிபடிக் கெல்லை"* (தொல்-பொருள்-நூ464)

என்னும் தொல்காப்பிய நூற்பாவின்படி பரிபாடலின் அடி வரையறை சிற்றெல்லை 25 அடி முதல் பேரெல்லை 400 அடி வரை எனக் கூறுகின்றது. ஆனால், தற்போது பரிபாடலில் சிற்றெல்லை 32 அடி முதலாகவும் பேரல்லை 140 வரையாகவும் அமைந்த பாடல்களைக் காணலாம். பரிபாடல் இலக்கணம்,

*"பரிபாடல்லே தொகைநிலை வகையின்*
*இதுபா வென்னும் இயல் நெறி இன்றிப்*
*பொதுவாய் நிற்றற்கும் உரித்தென மொழிப"* (தொல்-செய்-நூ.425)

என்ற நூற்பா பரிபாடலானது தொகைநிலை வகையால் பா இ·.து என்று சொல்லப்படும் இன்றி எல்லா பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கும் உரியது என்று சொல்லுவர் என்று விளக்கம் தருகின்றது. வெண்பா, ஆசிரியப்பா ,கலிப்பா, வஞ்சிப்பா ஆகிய நால்வகைப் பாடல்களுக்கும், பலவகை அடிகளுக்கும் பரிந்து இடம் கொடுத்துப் பரிந்து செல்லும் ஓசையை உடைய பரிபாட்டுக்களின் தொகுப்பாக விளங்குவதால் இது பரிபாடல் என்னும் பெயரினைப் பெற்றுள்ளது.

## பரிபாடல் காலம்

பரிபாடலின் காலமானது கி.பி.634 என ஆய்வறிஞர் எல்.டி. சாமிக்கண்ணு கூறியுள்ளார். டாக்டர் மா. இராசமாணிக்கனார் பரிபாடலின் காலம் கி.பி. 3-ஆம் நூற்றாண்டு என்று தெரிவித்துள்ளார். எனவே இன்றைக்கு 1700 ஆண்டுகளுக்கு முற்பட்டது பரிபாடல் என்று கொள்ளலாம். ஒவ்வொரு பாடலுக்கும் இறுதியில் பாடலைப் பாடியவர், இசை வகுத்தவர், பண்ணமைதி என்னும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. புலவர் பதின்மூவரால் பாடப்பட்டு இசைஞர் பதின்மரால் இசை வகுக்கப்பட்டுள்ள நூல் இது. பண் அடிப்படையில் அமைந்த நூலாகப் பரிபாடலை அறிந்து கொள்ள முடிகின்றது.

## முருகன்

பரிபாடல் முருகனை செவ்வேள் என்று அழைக்கிறது. குறிஞ்சித் திணைக்குரிய தெய்வமாகச் சேயோன் என்று குறிப்பிடுகின்றது. இதனையே தொல்காப்பியர், "சேயோன் மேய மைவரை உலகமும்" என்கிறது. இதில் சேயோன் என்பது முருகனைக் குறிக்கும். 'சேய்' என்னும் சொல் செம்மைப் பண்பையும், இளமையையும் குறிப்பிடும் ஒரு சொல்லாக அமைந்துள்ளமைக் கருதத் தக்கது. 'செங்கேழ் முருகன்' என்ற தொடர் இதனை உறுதி செய்யும். செவ்வேள், நெடுவேள், முருகு, கடம்பன் என்று வேலனின் வெறியாட்டத்தை ஏற்றலின் 'வெறி கொண்டான்'(பரி.9.4) என்றும் முருகன் பெயர் பெற்றார்.

## முருகனின் தந்தை

மூவகைப் புரங்களை ஒரு தீக்கணையாலே வேகும்படி எய்தவனும், அமரர் மூலமாக வேத யாகங்களின் அவியுணவை ஏற்பவனும் வேள்வி முதல்வனாக இருக்கின்றவனும், விரிகதிர் இந்திரனுக்கு தான் அளித்த வரமாகிய புணர்ச்சி மூலம் தம் மனைவியர் வயிற்றில் அமைத்தல் பெருமானுடைய திருவருளாகிய அக்கருவின் பெருமைக்குத் தகாது என அவர்களே பெற்றுக் கொள்ளட்டும் என்று வேள்வித் தீ வளர்த்து, அந்த முத்தீயில் அவியுடன் இட்டனர். அவ்வாறு அவ்வேள்வித்தீயில் திகழ்ந்த தானப் பிரசாதத்தை வடதிசையில் திகழும் விண்மீண்களான ஏழு மகளிருள் அருந்ததி தவிர, அறுவரும் உண்டனர். மாசு மறு ஏதும் இல்லாத கற்புடைய மாதவர் மனைவியராகிய அவர்கள் தவறாமல் உண்ண முருகப்பெருமான் கருக்கொண்டார் என சிவனருளால் முருகப்பெருமான் தோன்றியதைத் "தனக்குக் காமப்புணர்ச்சி இல்லையாயினும் ஒரு விலக்கமாக புத்திரனைப் பெற்று அமைய வேண்டும்." என்பது தான் உண்மைப் பொருளாக விளங்குவதால், 'செய்வதற்கில்லை' என்று கூறி ஒதுக்காது, அழிவில்லாத மழுவுடைய அவன் ஏரி போலக் கனன்று, ஏழு உலகங்களும் அச்சமுறுமாறு தோற்றம் பெற்றான் என்று விளக்குவர்.

அந்த நெருப்புருவத்தின் கருவினை பெற்றுக் கொண்ட உடல் பழுத்த தவம் பெருக்கி மெலிந்த சப்த ரிஷிகளும் அதன் பெருமை உணர்ந்து, அதனைப் பிரித்து எடுத்துத் தாம் வசீகரணம் செய்துக் கொண்டு

மாதவர்களாகிய அவர்கள், தம் மனைவியர் வயிற்றில் அமையச் செய்தால் அது தகாது என , சிவபெருமான் திருவருட் பிரசாதத்தைத் தான் உண்டனர். இதனையே,

*"ஆதி யந்தணன் அறிந்து பரி கொளவே*
*வேத மாபூண் வையத்தேர் ஊர்ந்து*
*நாக நாணா மலை வில்லாக*
*. . . . . . . . . . . . . . . . .*
*பெரும் பெயர் முருக"* (பரி - 5 : 21-50)

என்று பரிபாடல் எடுத்து இயம்புகின்றது. இப்பாடலில் சிவன் முப்புரங்களை எரித்த நிகழ்வும் இடம்பெற்றுள்ளது. மேலும், முருகப்பெருமானின் திருவவதாரத்தைக் குறிப்பிடுகிறது. சிவபெருமான் உண்மைப் பொருளாவதும் எல்லோரும் புணர்ச்சியின் மூலமே மகவு பெறும்போது பரமசிவனார் மற்ற உயிர்கள் போல அன்றி அரிய செயலாகப் புணர்ச்சி இன்றியே முருகப் பெருமானைப் பெற்றனர் என்பதைத் தெரிந்துகொள்ள முடிகின்றது.

முருகப்பிறப்பு

பரிபாடலடிகளில் சிவன், ஆகாய கங்கையைத் தலையில் தாங்கிய தொன்மமும், நீல மணி மிடற்றனாகிய சிவனுக்குக் கார்த்திகைப் பெண்டிரிடம் பிறந்தவன் முருகன் என்பத உணர முடிகின்றது. இதனை,

*"எரிமலர்த் தாமரை யிறை வீழ்ந்தப் பெருவாரி*
*விரிசடைப் பொறை யூழ்ந்து விழுநிகர் மலரேய்ப்பத்*
*தனிவுறத் தாங்கிய தனிநிலைச் சலதாரி*
*மணிமிடற் றண்ணற்கு மதியாரற் பிறந்தோய் நீ"* (பரி-9-4-7)

என்பதால் அறியலாம்.

முருகனின் தாய்

வடகதை, தமிழ்க்கதை எனும் இரண்டிலும் உமையம்மை முருகப் பிறப்புடன் இணைத்துக் கூறப்படவில்லை. இருந்த போதிலும் சிவனின் தொடர்பால், உமையும் முருகனின் தாயாகின்றாள் என்பதை,

*கடம்புஅமர் செல்வன் கடிநகர் பேண,*
*மறுமிடற்று அண்ணற்கு மாசிலோள் தந்த,*
*நெறிநீர் அருவி அசும்புறு செல்வ!*

என்ற பரிபாடலே உமையை முருகனின் தாயாகக் காட்டியுள்ளது. இதனையே,

"ஆல்கெழு கடவுட் புதல்வ மால்வரை
மலைமக்கள் மகனே" (திரு. முருகு-பா-256-257)

எனத் திருமுருகாற்றுப்படையும் முருகனின் தாயாக உமையைக் காட்டுகின்றது.

**முருகனின் வாகனம்**

குறிஞ்சி நில மக்கள் முருகனை மட்டுமின்றி அவனோடு தொடர்புடைய அனைத்துப் பொருள்களையும் வழிபட்டனர். முருகனுக்கு உரிய ஊர்தியாக பெரும்பாலான மக்களால் 'மயில்' என்று அழைக்கப்படுகின்றது. முருகன் சூரபதுமனை அழிக்க வரும்போது முருகன் யானை மீது வருவதை அறிய முடிகின்றது. இதனை,

*"சேர் உயிர் பிணிமுகம் ஊர்ந்து அமர் உழக்கி"* (பரி -5-2)

எனவும்,

*"கடுஞ்சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு"* (பதிற்-2-6)

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம்.

**முடிவுரை**

சங்க இலக்கிய நூல்களில் பழமையான இசை நூலாகக் கருதப்படும் பரிபாடலில் முருகனின் தோற்றம், பிறப்பு, தாய் தந்தை, அவதாரச் சிறப்பு, ஊர்தியின் பெருமை ஆகியன தெளிவாகக் கூறப்பட்டுள்ளன. மற்ற நூல்கள் முருகனின் அழகை மட்டுமே வருணிக்கின்றன. ஆனால் பரிபாடல் முருகனின் வரலாற்றைத் தெளிவாகக் காட்டுகின்றது.

## சேந்தனார் பாடிய திருவிடைக்கழி முருகன் பதிகம் - ஓர் ஆய்வு

முனைவர் கி. சுப்பிரமணியன்
(ஐ.கே.எஸ்.)
கோவை.

அருணகிரிநாதரால் பாடப்பட்ட முருகன் தலங்களில் திருவிடைக்கழியும் ஒன்று இன்றைய நாகப்பட்டினம் மாவட்டத்தில் தில்லையாடிக்கு அருகில் அமைந்துள்ள தலம் இது, காந்தியடிகளுடன் சேர்ந்து, தென் ஆப்ரிக்காவில் வெள்ளையர்களை எதிர்த்துச் சத்யாக்ரகப் போரில் ஈடுபட்ட வள்ளியம்மை பிறந்த மண் இது. குமரப் பெருமானின் தேவியாகிய வள்ளியின் பெயர் தாங்கிய தமிழ்ப்பெண் அமைதி வழிப் போரிட்டது சாலப் பொருந்தும்.

அருணகிரியார் இந்தத் தலத்துக்குத் ஆறு திருப்புகழ்கள் பாடியுள்ளார். மற்றும் பிற தலங்களைப் பாடும்போதும் வைப்புத்தலம் போலவும், வகுப்பு விருத்தப் பாடல்களிலும் திருவிடைக்கழி முருகனைப் போற்றுகிறார்.

மிகப் பழைமையான கோயில். அரசர்களாலும் செல்வர்களாலும் பல திருப்பணிகள் செய்யப்பட்டமைக்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. மடம், மண்டபம் என்று சமுதாய நலன் சார்ந்த அமைப்புக்களும் இருந்தன.குரவை லிங்கன் என்பவர் எழுதிய தலபுராணம், 2878 பாடல்கள் - இன்னும் அச்சாகவில்லைஸ, மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையின் பிள்ளைத்தமிழ், தில்லையாளி தம்பியப்ப செட்டியார் இயற்றிய திருவிடைக்கழி முருகர் அந்தாதி போன்ற சில நூல்கள் இந்தத் தலத்தின் பெருமையையும் முருகப்பெருமானின் அருட்சிறப்பையும் பேசுவன.

இப்பொழுது ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டிருக்கும் இந்த முருகன் பதிகம் குறிப்பிடத்தக்கதோர் சிறப்பை உடையது. பன்னிரு திருமுறைகளில் சிவபெருமானைத் தவிர எந்தக் கடவுளுக்கும் பாடல்கள் இல்லை, இரண்டே தவிர பதினோரம் திருமுறையில் சங்க இலக்கியமாகிய திருமுருகாற்றுப்படையைச் சேர்த்துள்ளனர். இன்னொன்று ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாவில் சேந்தனாரின் ஒரு பதிகம் வருகிறது. மற்றவை எல்லாம் கூத்தப்பெருமான் பற்றியவை. திருமந்திரத்தில் சக்தி வழிபாடு, மந்திர, தந்திர, யோக நெறிகள் பேசப்பட்டாலும் சிவபரம்பொருளே மையமாக உள்ளது தெளிவு. சேந்தனாரின் இந்த நான்காவது பதிகம் வேல் உலாம் தடக்கை வேந்தன் என் சேந்தனைப் பாடுகிறது.

மேலெழுந்த வாரியாகப் பார்த்தால் இது ஒரு மரபு மீறலாகவோ - ஏன் புரட்சியாகவோ கூட - காணப்படலாம். ஆனால் சற்று நிதானித்துப் பார்த்தால் இதில் பெரிய புதுமை ஏதும் இல்லை. தமிழகத்தில் முருக

வழிபாடு மிகமிகத் தொன்மை மிக்கது. இன்றும் விருப்பு வெறுப்பின்றி ஆழ்ந்து ஆராயின் பிற இறைவடிவங்களைவிட முருகவடிவம் தான் மிக அதிகமாக மக்களால் வழிபடப்படுகிறது என்பதைக் காணலாம். அடுத்தது சக்தி வணக்கம் ஆகலாம்.

திருவிசைப்பாவில் சேந்தனார் படைப்பாக மூன்று பதிகங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அவற்றுள் மிழலை,துறைசை ஆகிய தலங்களுக்கு உரிய இரு பதிகங்களும் ஏக நாயகனாம் தருணேந்து சேகரனைப் பழிச்சுபவே, அந்த இரண்டு பதிகங்களிலும் சிவபரத்துவமும், தன் அடிமைத்திறமும் சற்றும் ஐயத்திற்கு இடமின்றி வெளிப்படுத்தப்பட்டுள்ளன. "என் உயிர்க்கு அமுதினை," "யோகநாயகனை அன்றி மற்றொன்றும் உண்டு என உணர்கிலேன் யானே," "பொன்அடிக்கு அடிமை புக்கு இனிப் போக விடுவனோ பூண்டு கொண்டேனே," "சிவம் அலாது அவமும் அறிவரோ அறிவுடையோரே', என்னும் தொடர்களைவிடச் சேந்தனாரின் சிவபக்திக்கு வேறு சான்றும் வேண்டுமோ? இவரே சிவபெருமானைச் சேந்தன்தாதை [I - II] எனக் குறிப்பிடுகிறார். இது திருவிடைக்கழிப் பதிகத்திலும் "வள்ளல்தன் பிள்ளை 1 - [42] "அரன் மதலை" [6], "பொன்மலை வில்லிதன் புதல்வன்" [8] எனக் கூறப்பட்டுள்ளது.

அரசனைப் போற்றுவோர் இளவரசனையும் வாழ்த்துதல் போலச் சேந்தனார் - காலப் பழமையான முருக வழிபாட்டு மரபையும் கைக்கொண்டு - இத்திருவிசைப்பாப் பதிகத்தில் வாழ்த்துகிறார். தமிழ் அகப்பொருள் மரபிற்கேற்பக் கடவுள்மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம் ஆகிய பாடாண்திணைப் பாடல்களாகவே இவை அமைந்துள்ளன. இப்பதிகத்தின் பதினொரு பாடல்களுள் ஒன்றில் கூட சமய முறையில் முருகவேளுக்குப் பரத்துவம் கூறப்படவில்லை.

மற்றொன்று தமிழ் மரபில் சிவபெருமான் பிறவா யாக்கைப் பெரியோனாகவே கருதப்படுகிறான். பிறப்பு இல்லை என்றால் இறப்பும் இல்லை. அவன் செத்துப்பிறக்கின்ற சிறுதெய்வம் அல்லன். அதனால் தான் காலகாலனுக்குப் பல்லாண்டும் இல்லை; பிள்ளைத்தமிழும் இல்லை. இந்நிலையில் அதே ஒன்பதாம் திருமுறையில் உள்ள திருப்பல்லாண்டு சேந்தனார் உரைத்ததுதான். இதனால் சேந்தனார் சிவபிரானுக்கு இறப்பு உண்டு எனக் கருதிப் பல்லாண்டு பாடுகிறார் எனலாமா? இதனைச் சைவத்துக்கு எதிரான மரபுமீறல் அல்லது புரட்சி என்றால் ஏற்றுக் கொள்ளமுடியுமா?

சேந்தனார் காலத்தில் சைவம் ஒரு வழிபாட்டு நெறியாக மட்டும் இருந்திருக்குமேயன்றி நிறுவனப்படுத்தப்பட்ட ஒரு சமயமாக இருக்க வாய்ப்பில்லை [Not an institutionalised Religion]. எனவே மன்றாடி மைந்தனைத் தொழுவது சைவத்துக்குப் புறகு அல்ல.

இவற்றை எல்லாம் உள்ளத்திற்கொண்டு சிந்தித்தால் சேந்தனாரின் இலக்கியப் பாணி கொஞ்சம் வேறுபட்டதே தவிர சற்றும் மாறுபட்டதல்ல என்பது போதரும்.

இனி சற்றே பதிகத்துள் நுழைவோம்.

ஏற்கெனவே கூறியபடி இது புறப்பொருள், பாடாண்திணை, கடவுள்மாட்டு மானிடப் பெண் நயத்த பக்கம் என்னும் துறையில் அமைந்த பதிகம். 10 எழுசீர் விருத்தங்களால் ஆனது. பதினொன்றாவது நூற்பயன். இது ஒரு மண்டலித்த அந்தாதி.

திருக்கடைக்கழியில் குராமர நீழலில் நின்ற குமரவேளை ஒரு தலைவி பார்த்துவிட்டாள். உடனே அவன்மீது அடங்காக் காதல் கொண்டுவிட்டாள். ஆனால் முருகன் தலைவியின் தீராக்காதலைச் சற்றும் பிரதிபலிக்கவில்லை. இதனால் தலைவி பெருந்துன்பத்துக்கு ஆளாகிவிட்டாள். இதைக் கண்ணுற்ற அவளுடைய செவிலியும் நற்றாயும் பலவாறு வருந்துகின்றனர். இதுதான் இப்பதிகத்தின் மொத்தப் பொருண்மை.

முதல்பாடலில் தலைவி எப்படியெல்லாம் தன் காதலனை எண்ணி எண்ணிப் புலம்புகின்றாள் என்பதனைச் செவிலி அல்லது நற்றாய் எடுத்து மொழிகிறாள். இதில் முருகனின் பெருமையும் தலைவி காதலால் உடல் மெலிந்ததும் கூறப்பட்டுள்ளன.

இரண்டாவதில் பெருமை மிக்க முருகனே தன் மகளின் துன்பத்திற்குக் காரணம் என நேரடியாகக் குற்றம் சாட்டுகிறாள். மூன்றாம் செய்யுளும் இதுவே. சேந்தனார் பற்றிப் பலவிதமாகப் பேச வாய்ப்பளிக்கும் சுப்பிரமண்ணியன் என்னும் பெயர் இதில் தான் இடம்பெற்றுள்ளது.

வேதங்களில் கூறப்பெற்றுள்ள அறுவகைத் தொழில்கள்: ஓதல் ஒதுவித்தல், ஈதல் ஏற்றல், வேட்டல் வேட்பித்தல் - வளர்வதற்காக முருகவேள் எழுத்தருளியுள்ளான் என்னும் கருத்து நான்காம் செய்யுளில் இடம்பெற்றுள்ளது. ஐந்தாவதில் முருகன் தன் மகளைக் காப்பற்றாதது அறம் அல்ல என்கிறாள். அடுத்தது முருகன் தன் மகளுக்கு அருள் செய்வானா என்னும் ஐயவினா ஆக அமைந்துள்ளது. ஏழாவது பாட்டில் செவ்வேளின் திருமேனி நனி அழகிய கவிதையாக வருணிக்கப்படுகிறது. அது வருமாறு :-

*பரிந்தசெம் சுடரோ பரிதியோ மின்னோ*
*பவளத்தின் குழவியோ பசும்பொன்*
*சொரிந்த சிந்துரமோ தூமணித் திரளோ*
*சுந்தரத்து அரசு இது என்ன*
*தெரிந்த வைதிகர் வாழ் திருவிடைக்கழியில்*
*திருக்குரா நீழல்கீழ் நின்ற*
*வரிந்தவெம் சிலைக்கை மைந்தனை அம்பொன்*
*மையல் கொண்டு ஐயுறும் வகையே.*

கட்டுப்படுத்தமுடியாத காதலால் மகளிரின் மரபையும் மீறி என்மகள் மடலேறவும் துணிந்துவிட்டாள் என்கிறாள் தாய் எட்டாவது கவியில். மடலேறுமளவு துணிந்துவிட்ட தலைவிக்குத் தன் மார்தங்கு மாலையைத் தராவிட்டாலும்

தன் தலையில் சூடியுள்ள மலர் ஒன்றின் புற இதழைக் கூடத் தர மறுக்கிறான் தலைவன் எனக் குற்றம் சாட்டுகிறது ஒன்பதாம் விருத்தம், பத்தாவது பாட்டு முருகன் அருள்செய்யாமல் இருக்கமாட்டான் எனத் தாய் தனக்குத் தானே சமாதானம் செய்து கொள்ளும் முறையில் அமைந்துள்ளது.

இத்திருவிடைக்கழிப் பதிகத்தின் நூற்பயன் பாடல் இது. தாய்க் கூற்றாக அமைந்த பதிகம் என்றும் இதனால் துதித்து வணங்குபவர்கள் மனத்தின் மயக்கமாகிய ஐயம் திரிபுகள் நீங்கி நல்லறிவு பெறுவர் என்றும் தெரிவிக்கிறது. இதில் பயிலும் சுவாமி என்னும் சொல்லும் ஆய்வாளர்களைக் கவர்ந்துள்ளது.

பொதுவாகச் சேந்தனாரின் திருவிடைக்கழிப் பதிகத்தை அகப்பொருள் கருத்தைச் சும்மா தொட்டுக்கொள்ளவைத்துக்கொண்டு முருகனின் பெருமைகளை மனம் நிறைய நுகரச் செய்யும் ஒரு தமிழ் விருந்து எனலாம்.

மேல் இவராலேயே கிழித்தெறியப்பட்டன. எஞ்சியுள்ளவை 50 ஆயிரம் பாடல்கள். தமிழிசை வளர்ச்சியில் இவருக்குத் தனி இடம் உண்டு. தியாகராசர், முத்துசுவாமி தீட்சிதர், சியாமா சாஸ்திரிகள் முதலானோர் தெலுங்கிலும், சமஸ்கிருதத்திலும் கர்நாடக இசையை வளர்த்துப் பாடப்பட்டு வந்த காலத்தில் இவர் தமிழில் வண்ணம் பாடியும், வண்ணத்தியல்பு என்னும் இலக்கண நூல் யாத்தும் தமிழிசைக்கு உயிரூட்டினார்.

குருபர தத்துவம் என்ற பெயரில் தன் வரலாற்று நூலை எழுதினார். இது 1240 விருத்தப் பாக்களால் ஆனது. 72 புலவர்களின் வாழ்க்கை வரலாற்றை புலவர் புராணம் என்ற நூலாக எழுதினார். இது மூவாயிரம் பாடல்களைக் கொண்டதாகும். தமிழ்ச்சொல் "புகல்" என்பது இந்தியில் "போல்" என்று மருவிவிட்டது என்றார். அதை "புகல்" எனும் சொல்லினைப் பொல் எனச் சொல்லுதல் போல் இகல் இந்துத்தானியும் பல சொல் செந்தமிழிற் கொண்டு இயம்புகின்றார் என்று பாடினார். எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என்ற தமிழின் ஐந்திலக்கணத்தை விட புலமை இலக்கணம் கூறும் ஆறாம் இலக்கணத்தை இவர் கற்பித்தார். சிற்றிலக்கியங்களில் முன்னிலை நாட்டம், மஞ்சரி, ஆயிரம், முறைமை, விஜயம், நூல், சூத்திரம் என்ற புதுமை இலக்கிய வகைகளை வழங்கினார்.

இவரது படைப்புகள்

- அறுவகை இலக்கணம், ஏழாம் இலக்கணம்
- வண்ணத்தியல்பு
- ஊர்ப்பெயரும் நூற்றொகையும்
- குருநாதன் அந்தாதி
- கௌமார முறைமை நூல்
- கௌமார விளக்கம் என்னும் அறுசமய வழிபாட்டு முறைத் தொகுப்பு
- ஏகத்தார் இதழகலந்தாதி, சடகோபர் சதகத்தந்தாதி, முதலொலியந்தாதி
- சித்திர கவிகள்
- சூரிய மாலை: தனிப்பதிகம்
- சென்னை கத்தகோட்டத் திருப்புகழ்
- திருவெழுக்கூற்றிருக்கை திருப்பதிகம்
- சென்னைக் கந்தக்கோட்டம் முருகக் கடவுள் பிள்ளைத்தமிழ்
- கந்தசாமி பேரிற் கலம்பகம், திசியந்தாதி முதலியன
- ஞாயிறு ஆயிரம், கணபதி ஆயிரம்
- தமிழலங்காரம் - தமிழ்த் துதிப்பதிகம்
- தியானாநுபூதி
- திருச்செந்திற் பிரபந்தங்கள்
- திருச்செந்திற் கோவை
- திருமகளந்தாதி
- திருவரங்கத் திருவாயிரம்

- திருவருணைப் பாடற்றிரட்டு
- திருவானைக்காப் பதிகங்கள்
- திருவாமாத்தூர் தல புராணம்
- அருணகிரிநாதர் புராணம்
- புலவர் புராணம்
- தில்லைத் திருவாயிரம்
- பழனித் திருவாயிரம்
- மனுநெறித் திருநூல்
- மயிலாசலக் கலம்பகம்
- சத்தியவாசகம் (உரைநடை நூல்)
- முசுகுந்த நாடகம்
- ஆங்கிலியர் அந்தாதி

இவரது படைப்புகளில் ஒரு எடுத்துக்காட்டு:

**வண்ணத்தியல்பு**

தமிழிசை நூல்களில் இந்த வண்ணத்தியல்பு முதல் - நூல் எனலாம். இந்த நூலில் 110 நூற்பாக்கள் உள்ளன. முதல் 10 பாடல்கள் நூல் பற்றிய செய்திகளைக் கூறும் பாயிரமாக அமைந்துள்ளது.

**வண்ணம்**

தத்த, தத்தா, தாந்த, தாத்தா, தாந்த, தாந்தா
தனா, தான, தானா, தன்ன, தன்னா, தய்ய, தய்யா

ஆகிய வண்ணங்களுக்கு இந்நூலில் விளக்கங்கள் உள்ளன. முருகப் பெருமானைக் காப்புச் செய்யுளில் பாடித் தொடங்கும் இந்த நூல் முடிவிலும் முருகப் பெருமானைப் போற்றும் தனி வெண்பா ஒன்றைக் கொண்டு முடிகிறது. முதலிலும் முடிவிலும் கடவுளைப் போற்றும் புதுமை இந்த நூலில் காணப்படுகிறது. இந்நூல் குறிப்பிடும் செய்திகளில் சில பாடல் எண்ணுடன் பின்வருமாறு:

வண்ணத்தியல் பொருள் 100 என்று இந்த நூல் சுட்டுகிறது – 5
வடமொழி மருஉச்சொல் சேர்த்தால் மதுரம் குன்றும் - 17
துள்ளல் என்பது சில சந்தம் புணர்ப்பது – 95
குழிப்பு என்பது பல சந்தம் புணர்ப்பது – 96
தன் விருப்பத்தையும் தெய்வத்தின் சீரையும் வண்ணப் பாவால் வழங்குவது முறைமை – 103.

**முடிவுரை**

வண்ணச் சரபம் தண்டபாணி சுவாமிகள் முருகன் பற்றிய பல பாடல்களையும் நூல்களையும் எழுதியும் பாடியும் முருகனின் பெருமையையும் தமிழின் பெருமையையும் உலகிற்கு அளித்துள்ளார்.

# முருகனின் திருவுருவ வகைகள்

ரா. சுபிதா,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சை.

திருக்கோயிலில் அமைந்துள்ள தெய்வ வடிவங்கள் திருமேனிகள் எனப்படும். இவ்தெய்வ உருவங்களைத் தெய்வங்களாகவே கொள்ளப்படுவது உருவ வழிப்பாட்டினர் மேற்கொள்ளும் மரபாக அமைகிறது. முருகனின் திருமேனி கோயில்களில் இடம் பெறுவதற்கு முன்பே வேல் வழிபாட்டுக்குரியதாக அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதற்குச் சான்றுகள் நிரம்ப உள்ளன. இந்நிலையில் முருகனின் திருமேனி திருவுருவ வகைகளை விளக்குவதாக இக்கட்டுரை அமைகிறது.

## திருவுருவ வகைகள்

முருகனின் திருவுருவம் மக்களின் எண்ணங்களுக்கு ஏற்பப் பல வேறுபாடுகளுடன் காணப்படுகிறது எனலாம். ஆகம நூல்கள், புராணங்கள் முருகனின் வடிவ வேறுபாடுகளைக் கூறுகின்றன. தாம் தலங்களில் கண்ட வடிவ வேறுபாடுகளைப் பல்வேறு வகைகளாக அருணகிரிநாதர் கூறியுள்ளார். இம்முருகனின் 16 வடிவங்களைப் பற்றிச் சனக்குமார பிரசன குமாரதந்திரம் என்னும் ஆகமநூல் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆகமநூலில் சிறு வேறுபாடுகளுடன் 16 வடிவங்கள் பற்றி மற்றொரு நூலான குமாரதந்திரம் நூலும் குறிப்பிடப்படுகின்றது. மேலும், தியானத்திற்கு ஏற்ற வடிவங்களை மூன்று வகையாக பிரித்துள்ளன. அவை சாத்வீக வடிவம், இராசச வடிவம், தாமச வடிவம் என்பனவாகும். இது ஒரு முகமும், இரண்டு கைகளும் அமைந்த வடிவம் சாத்வீக வடிவமாகும். ஒரு முகமும், நான்கு கைகளும் கொண்டு விளங்குவது இராசச வடிவமாகும். ஆறு முகமும், பன்னிருகரங்களும் கொண்டது தாமச வடிவமாகும். ஸ்ரீதத்துவநிதி என்னும் நூல் பதினேழு வடிவங்களைக் கொண்டது என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் தணிகைப்புராண ஆசிரியர் குமாரதந்திரத்தை ஒட்டி பதினாறு வடிவங்கள் என்று குறிப்பிட்டுள்ளார். அவை, ஞானசக்திதரன், கந்தசுவாமி, தேவசேனாபதி, சுப்பிரமணியர், களிற்றூர்திப் பெருமான், சரவணபவன், கார்த்திகேயன், குமாரசுவாமி, ஆறுமுகசாமி, தாரகாரி, சேனாபதி, பிரம்ம சாஸ்தா, வள்ளி கல்யாண சுந்தரர், பாலசுவாமி, கிரவுஞ்சபேதனர், மயிலூர்திப் பெருமான் என்று பதினாறு வடிவங்களாகும்.

## ஞானசக்திதரன்

ஞானசக்திதரன் என்பது அறிவையே ஆற்றலாக உடையவன் என்று பொருள்படும். இச்சை, ஞானம், கிரியை என்ற மூன்றையும் சக்தியாகக்

கொண்டு நின்ற வடிவமாகக் காட்சி தருகிறான். ஸ்ரீதத்துவநிதி என்ற நூல் இவரை ஞானசக்தி சுப்பிரமணியர் என்று குறிப்பிடுகிறது.

**கந்தசுவாமி**

ஸ்கந்தன் என்னும் வடசொல் தமிழில் கந்தன் (வெளிப்படுவது) என்று வழங்கப்படுகிறது. கந்தன் என்பவன் தண்டாயுதத்தை உடையவனாக திகழ்கிறான். இவன் ஒரு முகம், இருகரம் கொண்டு நின்ற கோலத்தில் காட்சி தருகின்றான். இடையில் கோவணம் உடுத்திக் கொண்டு, ஒரு கை தண்டம் ஏந்தியும், மற்றொரு கையை இடுப்பில் வைத்துக் கொண்டும் காணப்படுகிறான். இது பழனியாண்டவர் திருக்கோலம் என்று குறிப்பிடப்படுகிறது.

**தேவசேனாபதி**

தேவசேனாபதி என்பது தேவயானை கணவன் என்று பொருள்படுகிறது. இது ஆறு முகம், பன்னிருகைகள் உடைய கோலத்தில் தேவசேனையுடன் காட்சி தரும் வடிவமாகும். இவ்வடிவம் இடப்பக்க கையால் தெய்வயானையை அணைத்தபடியும், மற்றொரு கை அபயக் கையாகவும், பத்து கைகளிலும் சக்தி, சூலம், அம்பு, வாள், தண்டு, குலிசம், கோழிக்கொடி, வில், கேடயம், தாமரைமலர் போன்றவைகளையும் கொண்டு விளங்குகின்றது.

**சுப்பிரமணியர்**

சுப்பிரமணியர் என்பது நல்ல வேதத்திற்குத் தலைவன் என்றும், ஆனந்தமயமான சூரியன் போன்ற ஒளி உடையவன் என்றும் பொருள்படுகிறது. சுப்பிரமணியர் ஒரு முகமும், இரண்டு கைகளும் உடைய அபயக்கரமும், இடக்கை இடுப்பில் ஊன்றிய நிலையில் அமைந்திருக்கின்றார். இதுபோன்ற வடிவத்தோடு திருவிடைக்கழி முருகன் அமைந்திருப்பது கருத்தில் கொள்ளத்தக்கது.

**களிற்றூர்திப் பெருமாள்**

இவ்வடிவம் ஒருமுகம், இருவிழிகள், கோழி, வாள், வேல் ஆகியவற்றைக் கொண்டும், மற்றொரு கை வரத முத்திரை கொண்டும், நான்கு கைகளோடு ஆண்யானை மீது ஏறி வருவதை தான் களிற்றூர்திப் பெருமாள் என்று அழைக்கப்படுகிறது. இத்தகைய வடிவம் சிதம்பரம் கீழ்க் கோபுரவாயிலில் வடபக்கம் அமைந்துள்ளது. இதனை அருணகிரியார் தம்முடைய பாடலில் பாடி இருப்பது குறிப்பிடத்தக்கது.

**சரவணபவன்**

சரம் என்பது நாணல் என்று பொருள்படுகிறது. நாணல் நிறைந்த பொய்கையில் ஆறு தாமரை மலர்களிலும் ஆறு குழந்தைகளாகக் காட்சியளித்ததால் அதற்குச் சரவணபவன் என்ற பெயர் உண்டாயிற்று என்பர். இச்சரவணபவன் ஆறுமுகங்கள், பன்னிரண்டு கைகள் உடையதாய், அபயம், வரதம், சக்தி, மணி, கோழிக்கொடி, தாமரைமலர், கோழி, தண்டம், உளி,

அம்பு, வில் போன்றவைகளைக் கொண்டும், அன்று மலர்ந்த தாமரை போன்ற திருமுகத்தோடு காணப்படுகிறார்.

### கார்த்திகேயன்

கார்த்திகை மாதர்களால் வளர்க்கப்பட்டதால் இவன் கார்த்திகேயன் என்றும், வைகாசி மாதத்தில் விசாக நட்சத்திரத்தில் பிறந்ததால் இவன் விசாகன் என்றும் அழைக்கப்படுகிறான். இவன் ஆறு முகங்களும், ஆறு கைகளும் கொண்டு கார்த்திகேயன் என்ற வடிவத்தைப் பெறுகிறான். கார்த்திகேயன் என்ற வடிவம் அபயம், வரதம், வச்சிரம், கேடகம், சக்தி, கட்கம் இவற்றை ஆறு கைகளிலும் தாங்கி, சூரியன் போன்று விளங்குகின்றது.

### குமாரசுவாமி

ஒருமுகமும், நான்கு கைகளும் கொண்டு அழகிய வடிவத்துடன் வலப்பக்கம் உள்ள கைகளில் வாலும், வேலும், இடப்பக்கம் உள்ள கைகளில் கோழிக்கொடியும், கேடயமும் கொண்டு விளங்கும் வடிவம்தான் குமாரசுவாமி ஆகும்.

### ஆறுமுகசாமி

ஆறு முகங்களை உடையதாக இருப்பதால் இவன் ஆறுமுகன் எனப்பட்டான். ஆறுமுகன் என்பது வடமொழித் திருநாமம் ஆகும். மயிலுடன் தோன்றுகின்ற வடிவமாதலால் ஆறுமுக சுவாமி என்று அழைக்கப்பட்டார். இவர் ஆறு முகங்களும், பன்னிரு கைகளும் உடையவர். வலப்பக்கம் வேல், அம்பு, வாள், கதை, பாசம், அவயம் இவற்றுடன் ஒரு கை அபயகரமாகவும், இடப்பக்கம் வச்சிரம், வில், கேடயம், கோழி, தோட்டி அவற்றோடு வரதமும் அமைந்த கையுடன் உடையவராகக் காட்சியளிக்கிறார்.

### தாரகாரி

தாரகாசுரனை அழித்ததால் தாரகாரி என்னும் வடிவம் பெற்று விளங்குகின்றான். இவன் கோடி சூரியன் பிரகாசம் உடையவராய் பன்னிரண்டு கைகளிலும் இடது கை முதல் வரதம், அங்குசம், வல்லி, கடகம், வில், வச்சிரம், அபயம், காசம், சக்கரம், கட்கம், உலக்கை, சக்தி இவற்றைத் தாங்கி, தாரகாரி வடிவத்தில் வீற்றிருக்கின்றான். ஒருமுகமும், ஆறு கைகளும் கொண்டு யானை மீது அமர்ந்த கோலமாகத் தாரகாரி வடிவம் உள்ளது என்று ஸ்ரீதத்துவநிதி நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

### சேனாபதி

சேனாபதி என்பது சூரபன்மாவை எதிர்ப்பதற்குத் தேவர் படைக்குத் தலைமை தாங்கிய வடிவமாகப் போற்றப்படுகிறது. இது பன்னிரு கைகளும், ஆறு முகங்களும் உடையதாக விளங்குகின்றது. சேனாபதியின் பன்னிரு கைகளிலும் அபயம், கத்தி, சக்கரம், அங்குசம், சூலம், சக்தி, வரதம், வச்சிரம், பத்மம், பாசம், தண்டம், கதை போன்றவைகளைக் கொண்டு விளங்குவது குறிப்பிடத்தக்கது.

### பிரம்மசாஸ்தா

பிரம்மனைச் சிறையிலிட்டுப் படைப்புத் தொழிலை மேற்கொண்ட வடிவமே பிரம்மசாஸ்தாவாகும். இவ்வடிவம் ஒரு முகமும், நான்கு கைகளும் உடைய திருமேனியாக காட்சியளிக்கின்றார்.

### வள்ளி கல்யாண சுந்தரர்

வள்ளியை மணந்ததால் வள்ளி கல்யாண சுந்தரர் என்னும் பெயர் பெற்றார். இவர் ஒரு முகமும், நான்கு கைகளும் கொண்ட திருமேனியாக வலப்புறத்தில் வள்ளியம்மையுடன் காட்சியளிக்கிறார்.

### பாலசுவாமி

குழந்தை வடிவத்தோடு காணப்படுவதால் பால முருகன் என்று அழைக்கப்பட்டு பல இடங்களில் வைத்து வழிபடுகின்றனர். குழந்தை வடிவிலே ஒரு முகமும், இரண்டு கைகளும் உடையவனாக திகழ்கிறான். வலக்கையில் தாமரையும், இடக்கை இடுப்பில் ஊன்றியும் இவனின் திருமேனி அமைந்துள்ளது.

### கிரவுஞ்சபேதனார்

கிரவுஞ்சம் என்பது அன்றிற்பறவை என்று பொருள். இப்டிபயருடைய மலையில் இருந்த தாரகாசுரனை அழித்த வடிவமாகக் கூறப்படுகிறது. ஆறு முகமும், எட்டுக் கைகளும் கொண்டதாக விளங்குகிறது.

### மயிலூர்திப் பெருமான்

மயிலூர்தியைச் செலுத்துகின்ற தோற்றமாக இவ்வடிவம் பெற்றுக் காட்சியளிக்கிறார். இவர் ஒரு முகமும், நான்கு கைகளும் கொண்டுள்ளார். இரண்டு கைகளில் வேலும், குலிசமும், மற்ற இரு கைகள் அபய வரதமாக விளங்குகிறது.

### முடிவுரை

முருகன் பல்வேறு திருவுருவங்களாக நமக்கு காட்சியளிக்கிறார். மக்களின் எண்ணங்களுக்கேற்பப் பல்வேறு கோலங்களைத் தாங்கி நிற்கிறார். முருகன் நின்ற கோலமாகவும், இருந்த கோலமாகவும், மயில், சிங்கம், யானை போன்ற வாகனங்களில் அமர்ந்த திருக்கோலமாகவும் காட்சி தருகிறார். ஒவ்வொரு திருவுருவமும் குழந்தையாக, இளைஞனாக, கலைஞனாக, தவம் புரிபவனாக, பிரம்மசாரியாக இப்படியாக ஒவ்வொரு தருணங்களிலும் வெவ்வேறு வடிவங்களுடன் காணப்படுவதை இதன் வாயிலாக அறிய முடிகின்றது.

# சிலம்பில் முருகன்

சு. சுரேஷ்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழாய்வுத்துறை
பெரியார் ஈ.வெ.ரா.கல்லூரி (த)
திருச்சிராப்பள்ளி -23.

தொல்தமிழகத்தின் முதன்மைக் கடவுளாகப் போற்றப்படுபவன் சேயோன் எனப்படும் முருகப்பெருமான் ஆவார். குறிஞ்சிநில மக்களின் தலைமைத் தெய்வமாகவும், சிவபெருமானின் பிள்ளையாகவும் அழைக்கப் பெறும் சிறப்பைப் பெற்றவர். முருகன் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வம் என்பதனைத் தொல்காப்பியர்,

*"சேயோன் மேய மைவரை உலகம்"* (தொல் பொருள் - 951)

என்று எடுத்துரைக்கிறார். மலைப்பகுதியான குறிஞ்சிநிலத்தின் தெய்வம் முருகன் என்பது இதனால் சுட்டப்பெறுகின்றது. தொல்காப்பியத்திற்குப் பின் தோன்றிய இலக்கண, இலக்கிய நூல்களில் முருகனின் பெருமையைப் புலவர்கள் பாடி வருகின்றனர். முத்தமிழ்க் காப்பியம் என்று அழைக்கப்பெறும் சிலப்பதிகாரத்தில் முருகன் பெறும் இடம், தோற்றம், பிறப்பு, வீரச்செயல்கள், குன்றக்குரவை, வெறியாட்டு என முருகனோடு தொடர்புடைய நிகழ்வுகள் இக்கட்டுரையில் ஆராயப்படுகின்றன.

## முருகனின் தோற்றமும் பிறப்பும்

சைவ சமயத்தின் முதன்மைத் தெய்வமாக விளங்கும் சிவன் - பார்வதிக்கு மகனாகப் பிறந்தவராகவும், கார்த்திகைப் பெண்கள் அறுவரால் வளர்க்கப்பட்டவராகவும் முருகப்பெருமானைச் சிலம்பு காட்டுகின்றது. முருகன் என்ற சொல் மணம், இளமை, கடவுள் தன்மை, அழகு என்ற பல்பொருள் உடைய ஒருதனித் தமிழ்ச்சொல் ஆகும்.

'முருகு' = பகுதி + அன் = விகுதி, மூன்று உகரங்கள் முக்கடவுள்கள்
ம் + உ = மு - முகுந்தன் - காத்தல்
ர் + உ = - உருத்திரன் - அழித்தல்
க் + உ = கு - நான்முகன் - ஆக்கல்

முத்தொழிலைப் புரிபவன் முருகன். "முருகு" என்ற சொல்லில் உள்ள அகர, உகர, மகரங்கள் சேர்ந்து ஓங்காரமாகத் திகழ்கின்றன என்கின்றார் வெ.இராமமூர்த்தி. தமிழக் கடவுளான முருகக் கடவுளின் தோற்றத்தினை இளங்கோவடிகள் பின்வருமாறு சித்திரிக்கின்றார். முருகப்பெருமான்,

*"அணி முகங்கள் ஓர் ஆறு, ஈர் - ஆறு கையும்*
*இணை இன்றித் தான் உடையான் ஏற்றிய வேல்"* (சிலம்பு. 24: 8)

என்று ஆறுமுகங்கள், பன்னிரெண்டு கைகளும் உடையவராகக் கூறப்படுகின்றார். முகங்கள் ஆறும் காலத்தைக் குறித்துக் காட்டும், பன்னிரண்டு, கைகள் பருவத்தை வெளிப்படுத்தும். தமிழர்கள் சிவபெருமானின் நெற்றிக்கண்ணில் இருந்து தீப்பிழம்பாகப் பிறந்து சரவணப் பொய்கையில் தவழ்ந்தவனைக் கார்த்திகைப் பெண்கள் அறுவர் வளர்த்ததால் கார்த்திகேயன் என்றும், திருமுலைப்பால் உண்டதன் வழியாகத் திருமுருகன் எனவும், குறிப்பிடுவதைக் கீழ் வரும் அடிகள் தெரிவிக்கின்றன.

*"சரவணப் பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்*
*திருமுலைப் பால் உண்டான் திருக்கை வேல்"* (சிலம்பு. 24: 9)

என்ற பாடல்கள் முருகப்பெருமான் இருபிறப்பு உடையவன் என்பதும் வடமரபை ஒட்டி எடுத்துரைக்கப்படுகின்றது. மேலும் சிவன் மற்றும் மலைமகளின் புத்திரன் என்பதற்குச் சிலம்பு கூறும் சான்று,

*"ஆல் அமர் செல்வன் புதல்வன் வரும்"* (சிலம்பு. 24: 12)
*"மலைமகள் மகனை நின் மதி நுதல் மடவர்"* (சிலம்பு. 24: 16)

ஆகிய அடிகளின் மூலம் பதிவு செய்யப்படுகின்றது. முருகப்பெருமான் தேவர் கோல கோமன் இந்திரன் கொடுத்த மயிலை ஊர்தியாக உடையன் என்பதும்,

*"அறுமுகம் இல்லை அணிமயில் இல்லை"* (சிலம்பு. 24: 18)

என்னும் அடியில் தெரிவிக்கப்படுகின்றது. முருகனின் இருப்பிடம் மலைகளாகவும், வாகனம் மயிலாகவும் சுட்டப்படுகின்றன.

*"சீர்கெழு செந்திலும், செங்கோடும், வெண்குன்றுட் ஏரகமும்,*
*நீங்கா இறைவன் கை வேல் - அன்றே"* (சிலம்பு. 24: 7)

என்பது மூலம் ஒளிமிக்க வேலினைக் கையில் தாங்கிய முருகனது இருப்பிடங்களாகத் திருச்செந்தூர், திருச்செங்கோடு, சுவாமிமலை, திருவேரகம் ஆகிய மலைவாழிடங்களும், திருச்செந்தூர் எனப்படும் கடல்வாழிடமும் குறிக்கப்படுகின்றன.

முருகனின் வீரச்செயல்கள்

முருகப்பெருமான் மாயங்கள் செய்த சூர்களையும், அவுணர்களையும் சுடரிலை வேலால் அழித்தொழிக்கும் வெற்றிச் செயல்கள் சிலம்பில் கூறப்பட்டுள்ளன. கடலில் மாமரமாக நின்ற சூரபதுமனை அழித்து கிரௌஞ்சம் என்னும் பறவையின் பெயருடைய மலையை வேலினால் குடைந்து பாதை அமைத்தவன் எனப் போற்றப்படுகின்றான். முருகனின் இத்தகைய வீரச்செயல்களை,

*"பார் இரும் பௌவத்தினுள் புக்கு, பண்டு ஒரு நாள்*
*சூர் மா தடிந்த சுடர் இலைய வெள் வேலே"* (சிலம்பு. 24: 7)

*"பிணிமுகம் மேற்கொண்டு, அவுணர் பீடு அழியும்வண்ணம்*
*மணி விசும்பின் கோன் ஏத்த மாறு அட்ட வெள் வேலே"*
(சிலம்பு. 24: 8)
*"வரு திகிரி கோல் அவுணர் மார்பம் பிளந்து*
*குருகு பெயர்க் குன்றம் கொன்ற நெடு வேலே"* (சிலம்பு. 24: 9)
*"குருகு பெயர்க் குன்றம் கொன்றான் மடவன்"* (சிலம்பு. 24: 9)

ஆகிய அடிகள் சூரர்களையும், அவுணர்களையும் கையில் ஏந்திய வேலால் அழித்தும், கிரவுஞ்சம் என்னும் பறவை மலையைப் பெயர்த்தவன் என்றும் முருகனது வீரச்செயல்கள் இளங்கோவடிகளால் எடுத்துரைக்கப்படுகின்றன.

**குன்றக் குரவையில் முருகன்**

மலைவாழ் மக்களின் குலதெய்வம் முருகன். அவ்வினப்பெண் வள்ளியைத் திருமணம் செய்து கொண்டவன். குறவர்கள் முருகப்பெருமானைக் குன்றக்குரவை எடுத்து ஆடியும், பாடியும், போற்றி உரைக்கின்றனர். இளங்கோவடிகள் முருகப்பெருமானுக்குக் கூறுவது போன்று இக்காட்சியைக் கண்ணகிக்கும் கூறுகின்றார்.

*"சிறுகுடியீரே சிறுகுடியீரே*
*தெய்வம் கொள்ளுமின், சிறு குடியீரே*
*நிறம் கிளர் அருவிப் பறம்பின் தாழ்வரை,*
*சினை வேங்கை நல் நிழல்கீழ், ஓர்*
*தெய்வம் கொள்ளுமின், சிறுகுடியீரே"* (சிலம்பு. 24:01-8)

என்னும் அடிகள் மூலம் முருகப்பெருமானுக்குக் குரவைக் கூத்தில் தொண்டகப்பறையும், குறிஞ்சிப் பண்ணும் பாடப்படுகின்றன. மலர்கள் தூவப்படுகின்றன. காவல் தெய்வங்கள் நிறுத்தப்படுகின்றன. நறும்புகை ஊட்டப்படுகின்றன. பத்தினித் தெய்வம் கண்ணகியைத் தங்கள் தெய்வமாக ஏற்றுக் கொள்வதற்குச் செய்யப்படும் குரவைக் கூத்தில் முருகனுக்குரிய பலி பொருள்களே இடம் பெறுவது குறிக்கத்தக்கது.

**வெறியாடலில் முருகன்**

தமிழ்மொழியின் முதன்மை இலக்கண நூலாகக் கருதப்படும் தொல்காப்பியம் புறத்திணையியலில் வெறியாடல் நிகழ்த்து கலை முருகனுக்குரியதாக இடம் பெறுகின்றது என்பதைத் தொல்காப்பியர் சுட்டுகிறார். வெறியாடுதல் என்பதே வெறியாட்டு என வழங்கப்படுகிறது. புறத்தில் போர் மேல் செல்லும் அரசன் தன் முயற்சி வெற்றியடையுமா? என்பதைத் தெரிந்து கொள்வதற்காக வேலனை அழைத்து வெறியாடலை நிகழ்த்துவான். வேலனின் குறிகேட்டு போர்க்கள முயற்சியைத் தொடங்குவதை,

*"வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட் டயர்ந்த காந்தள்"* (தொல் - பொருள், 1008)

எனும் நூற்பா மூலம் அரசன் போர்க்களத்தில் வெற்றி பெற்று வேட்டுவர்களுடன் முருகனுக்குக் காந்தள் மலரைச் சூட்டி வெறியாட்டை நிகழ்த்துவதை அறிய முடிகிறது. சிலப்பதிகாரம் வஞ்சிக்காண்டத்தில் குன்றக்குரவையில் முருகனுக்கு விழா எடுத்து வழிபட்டுள்ளனர். முருகனுக்கு வெறியாட்டு நிகழ்த்தி வழிபாடு செய்துள்ளனர். என்பதற்குத்,

*"தெய்வங் கொள்ளுமின் சிறுகுடியீரே*
*தொண்டகம் தொடுமின் சிறுபறை தொடுமின்*
*கொடுவாய் வைம்பின் கொடுமணி இயக்குமின்*
*குறிஞ்சி பாடுமின் நறும்புகை எடுமின்*
*பூப்பலி செய்ம்மின் காப்புக்கடை நிறுமின்"* (சிலம்பு. 24:1-7-8)

என்ற பாடல் அடிகள் முருகனுக்கு எடுக்கப்படும் வெறியாட்டு விழாவில் முருகன் கையில் வேலேந்தி ஆடுவதாகும், இன்னிசைக் கருவிகள் முழங்குவதாகவும், தினையரிசி, மலர் போன்றவை தூவுவதாகவும், ஆடுகளைப் பலியிடுவதாகவும் சுட்டப்படுகின்றன. காலமாற்றத்தின் காரணமாக முருகவழிபாட்டு முறைகள் இன்றைக்கு மாற்றமடைந்துள்ளன.

## முடிவுரை

முருகப்பெருமான் தமிழர்களின் முதன்மைக் கடவுளாகவும், மலைவாழ் மக்களின் நம்பிக்கை தெய்வமாகவும் இருந்துள்ளதை அறியமுடிகிறது. கார்த்திகைப் பெண்களின் வளர்ப்பின் காரணமாகக் கார்த்திகேயன் என்றும், ஆறுமுகத் தோற்றமும் பன்னிரெண்டு கைகளையும், சுடரிலை வேலும், சேவல் கொடியும், மயிலை வாகனமாகவும் கொண்டு தன்னை வணங்குபவர்களுக்கு நல்லாசியும், தீமை செய்பவர்களை அழிப்பவனாகவும் அறியப்படுகின்றான்.

## பார்வை நூல்கள்

1. செம்மொழித் தமிழ் இலக்கண இலக்கியங்கள் - ம.வே. பசுபதி (ப.ஆ) தஞ்சை.2010

2. திருக்கோயில் - இந்து சமய அறநிலையத்துறை வெளியீடு. சென்னை. அக் -2017.

# இலக்கியங்களில் முருக வழிபாடு

மு. செல்வி
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613 010

தமிழோடும் தமிழ் மக்களுடைய வாழ்வோடும் இயைந்து காணப்படுகின்ற தெய்வமாக முருகன் விளங்குகிறார். இவர் இளமை என்றும், அழகு என்றும், ஆற்றல் என்றும் பல்வேறு பொருள் கொண்டனவராகத் திகழ்கின்றார். அந்த அழகு, ஆற்றல், இளமை ஆகியவற்றை விரும்பிய மக்கள் முருகனை வழிபடும் கடவுளாக ஏற்றுக் கொண்டனர். அத்தகைய நிலையில் இலக்கியங்களில் முருக வழிபாடு எவ்வாறு இருந்தன என்பதை இக்கட்டுரையின்வழி காண்போம்.

**நிலவழிபாடு (அ) இயற்கை வழிபாடு**

மக்கள் தெய்வங்களைப் போற்றும் முறையே வழிபாடு எனப்படும். ஒரு காலகட்டத்தில் மக்கள் இயற்கையோடு இயைந்த வாழ்வை நடத்தினர். தம் வாழ்வு நிலைக்கு ஏற்பத் தெய்வத்தை வணங்குவதிலும் ஓர் இயற்கையான அமைப்பினைக் கொண்டிருந்தனர். தேவர் பராவுதல் என்பது தொல்காப்பியத்திற்கு முற்பட்ட வழக்காக இருந்ததை அறியமுடிகிறது. மேலும் நிலங்களின் இயற்கை அமைப்பை நான்காகவும் ஐந்தாகவும், அவ்வந்நில மக்களின் இயற்கைக்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப நிலத் தெய்வங்களை வகுத்துள்ளனர். அவற்றை

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல்"* (தொல்.அகத்.நூ.5.)

என்னும் தொல்காப்பிய நூற்பா சுட்டுகிறது. இதில் நிலத்தில் வாழ்கின்ற மக்கள் தங்களின் நிலைக்கு ஏற்பத் தெய்வங்களை அமைத்திருக்கின்றனர். மேலும் குறிஞ்சி நிலமக்கள் முருகனைத் தெய்வமாகக் கருதி வணங்கி வந்துள்ளனர். இம்முருகனைச் சேயோன் என்றும் குறிஞ்சி நிலத்தவன் என்றும் தொல்காப்பியம் குறிப்பிட்டுள்ளது. வில்லும் வேலும் வேடர்களின் தொழிலில் முக்கியமான பொருளாகும். இவ்வேலே ஒரு காலத்தில் வழிபடும் பொருளாக இருந்திருக்கின்றது. மேலும் மலைவாழ் மக்களுக்கு இன்றியமையாத உணவாகத் தேனும் தினையும் இருந்திருக்கின்றன. அவ்வுணவுப்பொருளை முருகனுக்குரிய வழிபாட்டில் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். இம்முருகன்

குன்றமர் செல்வனாக இருந்ததைச் சங்க இலக்கியங்களும் பிற்கால இலக்கியங்களும் சுட்டுகின்றன. அவற்றை,

*"................... வான்கோட்டுக்*
*கடவுள் ஓங்குவரைக் கோக்கிக்"* (அகம்.348)

என்றும்

*"கிருக்கை சான்ற வுயர்மலைத்*
*திருத்தரு வேஎய்நிற்.........."* (புறம்.125)

என்னும் இப்பாடல்கள் சுட்டிக்காட்டுகின்றன. மேலும் பரிபாடல் பரங்குன்றையும் முருகனையும் இணைத்தும், திருமுருகாற்றுப்படை ஐந்து மலைகளையும் குன்றுகளையும் முருகன் கோயில் கொள்ளும் இடங்களாகவும், சிலப்பதிகாரம் வெண்குன்று போன்ற இடங்களையும் எடுத்துரைக்கின்றன. இக்குன்றில் வாழும் குறிஞ்சி நில மக்கள் தங்களின் வாழ்விடமாகிய மலையைத் தம் தெய்வம் வாழும் இடமாக அமைத்துக் கொண்டுள்ள இயற்கைச் சூழலை அறிய முடிகிறது.

திருமுருகாற்றுப்படை காடு, சோலை, ஆற்றிடைக்குறை, சதுக்கம், சந்தி, பொதியில், மக்கள் மனம் ஆகிய இடங்களில் முருகன் வாழ்வதாகக் குறிப்பிட்டுள்ளது. மேலும் மழை வேண்டியும், வேட்டைத் தொழிலில் விலங்கு கிடைக்க வேண்டுமென்றும் முருகனை வழிபடும் மரபு காணப்படுகிறது. குல தெய்வ வழிபாடு என்னும் மரபு சங்க நூல்களில் காணப்படுகின்றன. அதனை,

*"மலையுறை கடவுள் குலமுதல் வழுத்த"* (ஐங். 259)

என்ற வரி சுட்டுகிறது. கடவுளை வணங்கி நல்நீர் நிலைகளில் மூழ்கினால் எண்ணிய பயன் கிடைக்கும் என்ற நம்பிக்கை மக்களிடம் இருப்பதை,

*"இட்டசித்தி எய்துவீர் ஆயீன்*
*இட்டசித்தி எய்துவீர் நீரே"* (சிலப்.காடுகாண்.104-105)

என்னும் இப்பாடல் நமக்கு புலப்படுத்துகிறது. மேலும் கடம்ப மலர், காந்தள் பூ, சேவல், மயில், யானை போன்ற குறிஞ்சி நிலக் கருப்பொருள்களை முருகனோடு இணைத்துப் பார்த்த இந்நில மக்கள் அவனுக்குப் படைக்கும் பொருள்களாகக் குறிஞ்சி நிலக் கருப்பொருள்களையே பயன்படுத்தினர் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

### பலியிடுதல்

வேட்டையாடித் திரும்பிய மக்கள் தம்குல முதல்வனாகிய முருகனை நினைத்துத் தாம் கொண்டு வந்த பொருள்களைப் பலியாகக் கொடுத்திருக்க வேண்டும். அவ்வாறு திருமுருகாற்றுப்படையில் முருகனுக்குரிய வழிபாட்டில் பலியிடப்பட்ட பொருள்களாகத் தினை அரிசியைப் பூக்களோடுக் கலந்து பரப்பி வைத்து ஆட்டுக் குட்டியை அறுத்து முருகனை வழிபட்ட நிலையைச்,

மேற்கொள்ளப்பட்ட காலம் என்று கூற இயலாது எனினும் அத்தகைய காலகட்டம் கடவுளைப் போற்றுகின்ற முறையாலும் வழிபடுகின்ற நிலையிலும் ஒரு புதிய மாற்றத்தைச் செய்த காலமாகக் கருதுதல் வேண்டும் என்பர். அந்த நிலையில் பரங்குன்று, திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை போன்ற இடங்களில் முருகனுக்கு முதன்முதலில் கோயில் எழுப்பி வழிபட்ட இடங்களாகக் கருதுவதற்கு வாய்ப்பு நிரம்ப உள்ளதாகக் கூறுகின்றனர். அவற்றை,

*மேவருங் கூடல் மேலைவெற்பினில் அலைவாய் தன்னில்*
*ஆவினன் குடியி னல்லே ரகந்தனில் றணிக்கை யாதிப்*
*பூவுலகு குள்ள வெற்பிற் பொற்புறும் ரனை வைப்பிற்*
*கோயில் கொண் டருளி வைகுங் குமரகோட்டத்து மேயோன்"*

(கந்தபுராணம், திருநகர்ப்படலம், பா.106)

என்று கந்தபுராணம் முருகனுக்குக் கோயில் இருந்ததை எடுத்துரைக்கிறது.

**சிறப்பு வழிபாடு**

"சிறப்பு வழிபாட்டை நைமித்திகம் எனக் குறிப்பிடுவர். சிறப்பொடு பூசனை செல்லாது என்னுமிடத்தில் நித்தியத்தில் ஏற்படுகின்ற குறைபாடுகளை நைமித்திகம் நீக்குமாதலால் சிறப்பு வழிபாட்டை முன் கூறியதாகக் குறிப்பிடுவதால் அறியலாம்". முருகனுக்கு ஏற்றப்படுகின்ற கொடிகள் வேல், மயில், கோழி போன்றவையாகும். அவற்றுள் வேலுக்கு முதன்மை அளித்தல் நன்மை செய்யும் என்றும், நாள்வழிபாட்டின் பின்னரே சிறப்பு வழிபாடு செய்தல் வேண்டும் என்பர். நாள் வழிபாட்டில் ஏற்படுகின்ற குறைகளைச் சிறப்பு வழிபாட்டால் நிறைவு செய்யும் மரபு அமைந்திருக்கிறது. இதில் திங்கள் விழா, பெருவிழா, பக்தர் விழா என்ற மூன்று வகையான தன்மைகளில் முருகன் கோயில்களில் சிறப்பு வழிபாடுகள் நடைபெறுகின்றன. மாதந்தோறும் நடைபெறும் விழாக்கள் ஒருநாள் விழாவாகவே நடைபெறுகிறது. ஏழு (அ) ஏழு நாள்களுக்கு மேல் விழாக்காலம் தொடருமானால் கொடியேற்றி விழாவை நடத்த வேண்டும் என்பது மரபாகும். மேலும் தினை பூக்களோடுக் கலந்து வைத்து ஆட்டுக்குட்டியைப் பலியிட்டு நடத்தும் வெறியாட்டு விழாவில் சிறப்பு வழிபாடு நடைபெறுவதைச்

*"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து*
*வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ*
*ஊருர் கொண்ட சீர்கெழு விழவினும்"* (திருமுரு.217-220)

எனும் பாடல் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

**நேர்த்திக்கடன்கள்**

நேர்த்திக் கடன்கள் இருவகைப்படும். அவை பெற்ற பயனுக்காகச் செய்வது எனவும், பெறவேண்டிய பயனுக்காகச் செய்வது எனவும் குறிப்பிடுவர்.

மழை வேண்டிப் பலி இடுகின்ற வழக்குப் புறநானூற்றிலும், திருப்பரங்குன்றத்து முருகனிடம் காதலனை வேண்டியும், பிள்ளைப்பேறு கருதியும், பொருளுக்காகவும் மக்கள் நேர்த்திக்கடன்கள் செய்வது பிற நூல்களிலும் இடம்பெற்றுள்ளன.

முருகன் குடி கொண்ட மலையை வலம் வந்தால் தீவினை அகலும் என்றும், முருகன் புகழ்பாடி அவன் வீற்றிருக்கும் மலையின் படியேறினால் வினை பொடியாகும் என்றும் குறிப்புகள் இடம்பெற்றுள்ளன. அவை,

*“பன்னரிய வுன்னற் புதத்திருப் புகழைப் பகர்ந்துகொண் டுன்றிருமலைப்படியேறு மன்பர்வினை பொடியாகு மென்றுநிறை மொழி மாந்தர் பகருவதுகேட்”*

(திருத்தணிகைத் தி.வி., பா.2)

என்னும் பாடலில் கூறப்பெற்றுள்ளன. முருகனுக்கு எடுக்கப்படுகின்ற நேர்த்திக் கடன்களில் காவடி எடுத்தல், அலகு குத்திக் கொள்ளுதல் போன்றவை குறிப்பிடத்தக்கது. நேர்த்திக் கடன்கள் உடல்நலம் கருதியோ, உள்ள நலன் கருதியோ, பெற வேண்டிய பேறுகள் கருதியோ, தனி முயற்சியினாலும், கூட்டு முயற்சியினாலும் செய்யப்பெறுகின்றன.

**விரதங்கள்**

விரதம் என்னும் வடசொல் உண்ணாநோன்பு என்னும் பொருளைத் தருகிறது. இந்நோன்பினைத் துறவிகளும் இல்லத்தாரும் மேற்கொள்ளும் நிலை பண்டுதொட்டு இருந்து வருகின்றது. உண்ணாநோன்பு உடலைத் தூய்மை செய்வதோடு உள்ளத்தை ஒருநிலைப்படுத்தி மனஅலைச்சலைத் தவிர்க்கிறது எனலாம். தெய்வத்தின் பெயரால் மேற்கொள்ளுகின்ற உண்ணா நோன்பு ஒருவகை அச்ச உணர்வோடு பின்பற்றப்படுவதால் தொடர்ந்து செய்வதற்கு வாய்ப்பாக அமைகிறது. திருக்குறள் “மருந்தென வேண்டாம் யாக்கைக்கு அற்றது போற்றி யுணின்” என்னும் உணவுக்கட்டுப்பாடு உடல் நலத்திற்கு உகந்தது என்பதைக் காட்டுகின்றது. முருகனுக்கு உரிய விரதங்களில் வெள்ளிக்கிழமை விரதம், கார்த்திகை விரதம், சஷ்டி விரதம், விசாகவிரதம் என்பன குறிப்பிடத்தக்கவை.

**வெள்ளிக்கிழமை விரதம்**

வெள்ளிக்கிழமை விரதத்தை மேற்கொள்ளும்போது வியாழக்கிழமையும் சனிக்கிழமையும் பகலில் மட்டுமே உணவு உண்ண வேண்டும். வெள்ளிக்கிழமை அன்று முற்றிலும் உணவு உண்ணுதல் ஆகாது. இரவில் துயில் நீத்தல் வேண்டும். இவ்வாறு மூன்று ஆண்டுகள் தொடர்ந்து செய்பவருக்கு நினைத்ததெல்லாம் வாய்க்கும் எனக் கந்தபுராணம் எடுத்துரைக்கிறது. மேலும் “வெள்ளிக்கிழமை விரதத்தைத் தொடங்குங்கால் ஐப்பசிமாத முதல் வெள்ளியில் தொடங்குதல் வேண்டும். வைகறையில் எழுந்து புண்ணிய நீராட வேண்டும். நாட்கடன்களை முறையாக முடித்து முருகனைத் தியானித்தல் வேண்டும். வீட்டில் தூய்மையான ஓர் இடத்தில் நெல்லைப் பரப்பி அதன்மேல் நீர்நிறைந்த வெண்கலத்தை வைத்து மாவிலை, தருப்பை, கூர்ச்சம், மாலை ஆடை, முதலியவற்றால் அலங்கரித்துப் பொன்னால்

செய்த முருகன் திருமேனியை வைத்து விதிப்படி வழிபடுதல் வேண்டும். அன்று மாலை முருகன் கோயில் சென்று வழிபாடு செய்தல் வேண்டும். மறுநாள் நீராடி, கடன்களை முடித்துக்கொண்டு கும்பத்தையும் முருகனையும் பூசித்து அவைகளை அந்தணர்களுக்குத் தானம் செய்தல் வேண்டும். பின் சிவனடியார்களுடன் இருந்த ஒன்பது நாழிகைக்குள் உணவு உட்கொள்ளுதல் வேண்டும்" என இதற்குரிய விதிமுறைகளைத் தண்டபாணிதேசிகர் விளக்குகின்றார்.

### கார்த்திகை விரதம்

கார்த்திகைப் பெண்கள் அறுவரின் கூட்டமே கார்த்திகை விண்மீன் எனக் கூறுவது புராண மரபாகும். இக்கார்த்திகை விண்மீன் சந்திரனோடு சேர்ந்திருக்கும் நாளைக் கார்த்திகை நாள் என்பர். முருகனுக்குரிய நாள்களில் இந்நாள் குறிப்பிடத்தக்கதாகக் கருதப்படுகிறது. மேலும் கார்த்திகை விரதத்தைக் குறித்த விதிமுறைகள் கந்தபுராண விரதப்படலத்தில் இடம்பெற்றுள்ளன. இவ்கார்த்திகை நோன்பு இன்றும் பலரால் மேற்கொள்ளப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. புள்ளிருக்குவேளூர், சுவாமிமலை மற்றுமுள்ள முருகத்தலங்களுக்குக் கார்த்திகை நாளில் முருகனை வழிபட மக்கள் பெருந்திரளாகச் செல்கின்றனர் என்பது புலனாகிறது.

### சஷ்டி விரதம்

சஷ்டி என்னும் வடசொல்லே சட்டி எனத் தமிழ்மொழியில் வழங்கப்படுகிறது. இது ஐப்பசி அமாவாசையில் தொடங்கி ஆறுநாள் அளவும் நோற்கின்ற நோன்பாக கருதப்படுகிறது. "ஆறு நாட்களிலும் புண்ணிய நீராடி இரண்டு ஆடைகளை உடுத்திக் காலையிலும் மாலையிலும் சந்நிதிகளில் வணக்கம் செய்து திருமேனி வடிவிலும், கும்ப வடிவிலும் முருகனை வைத்து வழிபடுதல் வேண்டும். இரவில் வெல்லக்கட்டியோடு நெய்சேர்த்துச் சமைக்கப்பட்ட மோதகத்தை முருகனுக்கு நிவேதித்து விதிப்படி வழிபாடு செய்து முருகனின் திருப்புகழைக் கேட்டுச் சிறிதளவு நீர் அருந்தி உண்ணாநோன்பு இருத்தல் வேண்டும்" எனக் கந்தபுராணக் கந்தவிரதப் படலம் சுட்டுகின்றது. இதனை ஆயுட்காலம் முழுமையும் பின்பற்றப்பட வேண்டிய விரத நோன்பாக கருதலாம்.

### நிறைவு

சங்க இலக்கியங்களில் இயற்கை வழிபாடு மிகுதியாகப் பேசப்பட்டுள்ளது. மக்கள் அச்ச உணர்வோடு முருகனை வழிபடத் தொடங்கி முருகனுக்கு உயிர்ப்பலி கொடுத்த செய்தி சங்க இலக்கியத்தில் இடம்பெற்று உள்ளது. இவ்விலக்கியங்கள் இறைவன் கோயில் கொண்ட குன்றங்களை எடுத்துரைக்கின்றன. மக்களின் உணவு பழக்கவழக்கங்களை ஒட்டியே இறைவனுக்குரிய வழிபாட்டுப் பொருள் அமைந்திருக்கின்றன. நேர்த்திக்கடன் விரதம் போன்றவை சமுதாய உணர்வுக்கு வித்தாக அமைகின்றன. சங்க நூல்களுக்குப் பிற்பட்ட நூல்களில் முருகனுக்கு ஆட்டை அறுத்துப் பலி கொடுக்கும் முறை இடம்பெறவில்லை. எனினும் இதன் வாயிலாக இலக்கியங்களில் முருக வழிபாடு எவ்வாறு இருந்தது என்பதை அறிந்துகொள்ள முடிகின்றது.

# அறுபடை வீடு திருத்தலங்கள்

திருமதி D. சௌம்யா
முனைவர் பட்ட ஆய்வாளர், இசைத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

வேல் என்ற இனிய சொல்லையும் அதனோடு சேர்த்து முருகவேல் என்று வழங்குவதுண்டு. “காதலை” உணர்த்தும் “காமனைக்”, “கருவேல்” என்றும், “கருணையை பொழியும்”, “முருகனைச் செவ்வேல்” என்ற பழந்தமிழ் நூல்களில் கூறப்பட்டுள்ளது.

**ஆறுபடை வீடு**

படை - போர்வீரர்கள் தங்கியிருந்த பாசறை
படைவீடு - பக்தர்களுக்கு ஆற்றுப்படுத்துதல்

முருகப் பெருமான் தன்னுடைய பாசறைக் குறைகளை ஏற்றி வரும் பக்தர்களுக்கு வினையை தீர்த்து அன்பர்களை ஆற்றுப்படுத்துதல்.

முதல் படை வீடு - திருப்பரங்குன்றம்
இரண்டாம் படை வீடு - திருச்செந்தூர்
மூன்றாம் படை வீடு - பழநி
நான்காம் படை வீடு - சுவாமிமலை
ஐந்தாம் படை வீடு - திருத்தணி
ஆறாம் படை வீடு - பழமுதிர்ச்சோலை

**முதல் படை வீடு - திருப்பரங்குன்றம்**

கோடானுகோடி பக்தர்களின் விருப்பத்தை நிறைவேற்றும் ஸ்தலமாக திருப்பரங்குன்றம் திகழ்கின்றது. தமிழ் வளர்த்த மதுரை அருகே உள்ளது திருப்பரங்குன்றம். தெய்வானையை முருகன் மணம் புரிந்த தலமாகத் திகழ்கின்றது. மதுரையிலிருந்து 8 கிலோமீட்டர் தொலைவில் திருப்பரங்குன்றம் அமைந்துள்ளது. கடல் மட்டத்தில் இருந்து இதன் உயரம் 1050 அடி. இத்திருக்கோயிலில் மலையின் அடிவாரத்தில் ஒரு குறிப்பிட்ட பகுதி பாறையைக் குடைந்து முருகனுக்குக் கருவறை இருப்பதால் இத்திருக்கோயில் குடவறைக் கோயிலாகத் திகழ்கின்றது. மற்ற கோவில்கள் போன்று இல்லாமல் கருவறையிலேயே 5 சன்னதிகள் அமைந்துள்ளன. இந்த 5 சன்னதிகளும் சிற்ப சாஸ்த்திரத்தில் “கருசர்க்கரை பிரயோகம்” என்ற முறையில் அமைக்கப்பட்டு உள்ளதாகச் சொல்லப்படுகிறது. இத்திருக்கோயிலிருக்கும் சன்னதி மலையைக் குடைந்து உள்ளதால் இங்கு மூலவருக்கு அபிஷேகங்கள் நடைபெறுவது இல்லை. முருகனின் கையில் இருக்கும் வேலுக்குதான் இங்கு அபிஷேகம் நடைபெறும்.

திருப்பரங்குன்றத்தில் தெய்வயானையுடன் ஒருதார சமேதராக காட்சித் தருவதாக இத்தலம் அமைகின்றது. சூரபத்மனை வதம் செய்து தேவர்களைக் காத்த, முருகப்பெருமானுக்குத் தேவர்கள் தலைவனான இந்திரன் தனது மகளான தெய்வயானையை பிரம்மா விவாக காரியங்கள் நிகழ்த்த, சூரிய, சந்திரர்கள் ரத்ன தீபங்கள் தாங்கி நிற்க, பார்வதி-பரமேஸ்வரன் பரமானந்தம் எய்தி நிற்க... இந்திரன் தனது மகளை முருகப்பெருமானுக்கு விவாகம் செய்து வைத்ததாகக் கூறுகிறது திருப்பரங்குன்றத்துப் புராணம். இங்குத் திருமணக் கோலத்திலேயே முருகப் பெருமான் சுப்பிரமணிய சுவாமியாக அருள்பாலிக்கிறார்.

இரண்டாம் படை வீடு - திருச்செந்தூர்

அறுபடை வீடுகளில் இரண்டாம் படை வீடாகத் திகழ்வது திருச்செந்தூர் ஆகும். தூத்துக்குடி மாவட்டத்தில் அலைகள் தாலாட்டும் வங்கக் கடற்கரையோரம் அமைந்துள்ளது. சூரபத்மனைச் சம்ஹாரம் செய்து தேவர்களை முருகப்பெருமான் காத்து நின்ற தலமும், பக்தர்களைக் காப்பதற்காக பாலமுருகனாகத் திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கிறார். இத்தலத்திற்குச் சந்தனமலை என்ற பெயரும் உண்டு. கந்தபுராணம் இதனைக் "கந்தமாதனபர்வதம்" என்று குறிப்பிடுகிறது. இத்திருக்கோயிலில் மிகச்சிறப்பு வாய்ந்தது இலை விபூதி. பன்னீர் இலையில் விபூதியை வைத்து வழங்குவது வேறு எந்த கோவிலிலும் இல்லாதது தனிச்சிறப்பாகும்.

மகேந்திர புரியை ஆண்ட அசுர குலத்தின் மன்னனான சூரபத்மன், சிவனை நோக்கி தவம் செய்ததைக் கண்டு மனம் இறங்கிய சிவபெருமான், சூரபத்மனுக்குத் தன் சக்தியைத் தவிர வேறு எந்த சக்தியாலும் மரணம் ஏற்படாது என்ற வரத்தை அருளினார். வரத்தைப் பெற்ற மமதையில் மதி மயங்கிய சூரபத்மன், உலகையே ஆட்டிப் படைத்தான். தேவலோகத்தைப் படையெடுத்து இந்திரன் உள்பட தேவர்களைச் சிறைப்பிடித்து சித்ரவதை செய்வதோடு மட்டுமில்லாமல் ரிஷிகளையும், முனிவர்களையும் துன்புறுத்தினான்.

தேவர்கள் உள்ளிட்ட அனைவரும் சிவபெருமானிடம் வந்து முறையிட்டனர். தன்னிடம் வரம்பெற்ற ஆணவத்தில் இருந்த சூரனை அழித்து, தேவர்களைக் காப்பதற்காக சிவபெருமான் தனது நெற்றிக்கண்ணைத் திறந்து தெறித்த நெருப்பு பொறிகள் சரவண பொய்கையில் இருந்து 6 தாமரை மலர்களில் விழுந்து 6 குழந்தைகளாக மாறின. அந்த ஆறு குழந்தைகளைக் கார்த்திகைப் பெண்கள் 6 பேர் வளர்த்தனர். 6 குழந்தைகளையும் அன்னை பார்வதி தேவி அன்போடு ஒரு சேர அனைத்தும், 6 முகமும், பன்னிரு கண்ணும், பன்னிரு கைகளுமாக ஆறுமுகக் கடவுள் தோன்றினார்.

தக்க தருணத்தில் கந்தனின் பிறப்புக்கான நோக்கத்தை சிவபெருமான் எடுத்துக்கூறி, சூரனை அழித்து தேவர்களைக் காக்குமாறு பணித்தார். முருகனுக்கு உதவியாக வீரபாகு உள்ளிட்ட நவகுமாரர்களையும் படைத்து அவருடன் அனுப்பினார். அன்னை பராசக்தி, தனது அம்சமான சக்தி வேலை வழங்கி வேலனுக்கு ஆசி வழங்கினார். போருக்கு முன்பு முருகப்பெருமான்

வீரபாகுவை சூரபத்மனிடம் தூது அனுப்பினார். ஆணவம் கொண்ட சூரனோ தூது கொண்டு வந்த வீரபாகுவை மதிக்காததோடு, முருகப்பெருமானைப் பாலகன் என்று எள்ளி நகையாடி சமரசத்துக்குப் பணிய மறுத்தான். இதை அறிந்து சினம் கொண்ட முருகப்பெருமான், சுப்பிரமணியராகப் போருக்குப் புறப்பட்டார். 10 நாட்கள் போர் நடந்தது.

முதலில் சூரபத்மனின் சகோதரர்களை அழித்து பின் சூரனை அழிக்க செந்தூரில் வந்து தங்கினார். கடும்போருக்குப் பின், "இனி முருகனை வெல்ல முடியாது" என்று எண்ணிய சூரபத்மன் தனது மாயவித்தையால் மாமரமாக உருமாறி நின்றான். மாமராகி நின்ற சூரபத்மனை நோக்கி தனது சக்தி வேலை எய்து சூரனின் மார்பைப் பிளந்து மீண்டும் கந்தனிடமே வந்து சேர்ந்தது. தவறு செய்தவர்களைத் தண்டிக்காமல் அவர்களை ஆட்கொண்டு நல்வழிப்படுத்துவது என்ற உயர்ந்த கருத்தைக் கொண்டு சுப்பிரமணியன், சூரனைச் சேவலாகவும், மயிலாகவும் மாற்றி ஆட்கொண்டார். அன்றுமுதல் முருகப் பெருமான் "சேவற்கொடியோன்" என்ற திருப்பெயரும் பெற்றார்.

தேவர்களையும் சிறையிலிருந்து விடுவித்து அவர்களைக் காத்து நின்ற கந்தன், அன்பர்களுக்கு வேண்டிய வரத்தை அளித்து காத்தருளும் செந்திலாண்டவராக எழுந்தருளி அருள்பாலிக்கிறார்.

**மூன்றாம் படை வீடு - பழநி**

மூன்றாவது படைவீடாகத் திகழ்வது திரு ஆவினன் குடி என்று செல்லபடுகின்ற பழநி ஆகும். இங்கு மலை அடிவாரத்திலும், மலை மீது முருகப்பெருமான் இருவேறு கோலங்களில் கோவில் கொண்டுள்ளார். இங்கு மலை அடிவாரத்தில் உள்ள திருஆவினன்குடியில் குழந்தை வேலாயுதராகவும், மலை மீது தண்டாயுதபாணியாக ஆண்டிக் கோலத்திலும் அருள்பாலிக்கிறார். பழனி மலைக்கு அருகே இன்னொரு மலை உள்ளது. அதற்குப் பேர் இடும்பன் மலை என்று பெயர். இந்த இடும்பன் மலைக்கும், பழநிமலைக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு என்று புராணக்கதைகள் கூறுகிறது. பழனி முருகன் திருமேனி நவபாஷணத்தால் ஆனது என்பதால் அவரது அதில் பட்டு வரும் விபூதி, பால், சந்தனம், தேன், பஞ்சாமிர்தம், நீர் போன்ற அபிஷேகப் பொருட்கள் அனைத்தும் மக்களின் உடல் நோய்களுடன் உள்ள நோய்களையும் தீர்க்கும் அருமருந்தாக மாறிவிடுவது விஞ்ஞானமே வியக்கும் சிறப்பு. போகர் சித்தர் ஜீவசமாதியை அடைந்ததும் பழநியில்தான். ஞானப்பழத்துக்காக முருகப் பெருமான் முதலில் கோபித்துக் கொண்டு வந்து நின்ற தலம். மலை அடிவாரத்தில் திருவாவினன் குடி தலமே மூன்றாம் படை வீடு ஆகும். இங்கு முருகப்பெருமான் மயில்மீது அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறார். இங்கு முருகப்பெருமான் குழந்தை வடிவில் அருள்பாலிக்கிறார். ஞானப்பழம் கிடைக்காத கோபத்தில் பெற்றோரான சிவபெருமான் பார்வதியிடம் கோபித்துக் கொண்டு முருகப்பெருமான் ஆண்டிக்கோலத்தில் வந்து அமர்ந்த இடம் திருஆவினன்குடி ஆகும்.

பழத்துக்காக கோபித்துக்கொண்டு வந்த முருகப்பெருமானை சமாதானம் செய்ய வந்த சிவபெருமானும், பார்வதியும் அவரைப் பார்த்து நீயே ஞானப்பழமாக இருக்க, உனக்குப் பழம் வேண்டுமோ? என்று கேட்டனர். அந்தக் கருத்தின் அடிப்படையில் *பழம் நீ* என்று இந்தத் தலத்துக்குப் பெயர் ஏற்பட்டு, நாளடைவில் *பழநி* என்று ஆகிவிட்டது.

நான்காம் படை வீடு - சுவாமிமலை

நான்காம் படை வீடாகத் திகழ்வது திருவேரகம் என்கின்ற சுவாமிமலை. குன்றிருக்கும் இடமெல்லாம் குமரன் இருப்பான் என்பார்கள். குன்றுதோறும் குமரன் அருள்புரிய ஒரு மலையை எழுப்ப வேண்டும் என்ற எண்ணத்தில் உருவானது சுவாமிமலை. தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகே அமைந்துள்ளது. சுவாமிமலையில் முருகப்பெருமான் சுவாமிநாதனாக, தகப்பன்சாமியாக அருள்பாலிக்கிறார். சுவாமிமலை பெயரிலும் மட்டுமின்றி நிஜத்திலும் "மலை"யைக் கொண்டுள்ளது. இந்த மலை கருங்கற்களைக் கொண்டு கட்டப்பட்டதால் இந்த மலைக்குக் "கட்டுமலை" என்ற பெயர் உண்டு.

படைப்புத் தொழில் ஆணவம் கொண்டு பிரம்மன் முருகப்பெருமானைச் சந்திக்க நேர்ந்தது. அப்போது குமரன் பிரம்மனிடம், படைப்புத் தொழில் செய்யும் உமக்கு "ஓம்" என்ற பிரணவ மந்திரத்தின் பொருளைக் கேட்டான். அந்தக் கேள்விக்குப் பிரம்மனால் பதில் சொல்ல முடியவில்லை. உடனே முருகப்பெருமான் பிரம்மனின் நான்கு தலைகளிலும் குட்டினார். அத்துடன், கீழே விழுமாறு தனது திருவடியால் அவரைச் சிறையிலும் அடைத்தார். பின்பு படைப்புத் தொழிலை முருகனே செய்தார். பிரம்மன் முருகப்பெருமானால் சிறை வைக்கப்பட்டிருப்பதை அறிந்து வருந்திய மகாவிஷ்ணு, சிவபெருமானிடம் நடந்த விஷயத்தைக் கூறி பிரம்மாவை விடுவிக்குமாறு வேண்டினார்.

சிவபெருமானும் முருகப்பெருமானிடம் பிரம்மனை விடுதலை செய்யுமாறு கூறினார். "தந்தை சொல்மிக்க மந்திரம் இல்லை" என்பதால் முருகப்பெருமான் பிரம்மாவை விடுதலை செய்தார். இதனால் மகிழ்ந்த சிவபெருமான், முருகனைத் தன் மடியில் அமர வைத்து, "பிரம்மனுக்கே தெரியாத பிரணவ மந்திரத்தை நீ எனக்குச் சொல்ல வேண்டும்" என்று கேட்டார். பிரணவ மந்திரத்தை எல்லோரும் அறியக்கூடாது என்பதால் சிவபெருமான் காதருகே சென்று அந்த மந்திரத்தின் பொருளை உரைத்தார் முருகப் பெருமான். இந்த அற்புதம் நடந்த தலம்தான் இந்த சுவாமிமலை.

ஐந்தாம் படைவீடு - திருத்தணிகை

இத்திருத்தலத்தில்தான் வள்ளித்திருமணம் நடைபெற்ற ஸ்தலமாகத் திகழ்கின்றது. இந்தத் திருத்தலத்தின் வருடத்தின் மொத்த நாட்களைக் குறிக்கும் விதமாக 365 பணிகளுடன் அமைந்த கோவில். முருகன்,

திருச்செந்தூரில் சூரனை வதம் செய்துவிட்டு வந்து அமர்ந்த கோபம் தணிந்த தலம். பெரும்பாலும் அனைத்து முருகர் கோவிலில் கந்த சஷ்டி விழாவை முன்னிட்டு ஆறாம் நாள் சூரசம்ஹாரம் நடக்கும். ஆனால் திருத்தணிகையில் சூரனை வதம் செய்து கோபம் தணிந்து காட்சி தரும் தலம் என்பதால் இங்குச் சூரசம்ஹாரம் கிடையாது.அன்று முருகனைக் குளிர்விக்க புஷ்பாஞ்சலி செய்கிறார்கள்.

வேடர் குழுத்தலைவர் நம்பிராஜனுக்குக் குழந்தை இல்லாமல் இருந்தது. ஒருநாள் வேட்டைக்குச் சென்ற இடத்தில் பெண் குழந்தை ஒன்றைக் கண்டெடுத்து அதைத் தன் குழந்தையாக ஏற்று வளர்த்து வந்தான். அந்தப் பெண் குழந்தை தான் வள்ளி. வள்ளி பிறந்தது ஒரு மானின் வயிற்றில்.

நம்பிராஜன் வள்ளியை நன்றாக வளர்த்து வந்தான். வள்ளி, தினை நிலத்தில் பயிர் செய்யப்பட்ட பயிர்களைப் பறவைகளிடம் இருந்து காக்கும் பொருட்டு அவற்றை விரட்டும் பணியில் ஈடுபடுகிறாள். அப்போது அவளைக் கண்ட நாரத முனிவர், நேராக தணிகை மலையில் உள்ள முருகப்பெருமானிடம் சென்று வள்ளியின் அழகைப் பற்றி முருகப்பெருமானிடம் கூறி, அவளை மணக்கச் சொல்கிறார்.

முருகப்பெருமானும் வேடன் போல் புனைந்து வள்ளியிடம் தன் காதலை அவர் தெரிவிக்கும்போது அங்கே நம்பிராஜன் வந்து விடுகிறான். உடனே வேங்கை மரமாக முருகப்பெருமான் மாறிவிடுகிறார். நம்பிராஜன் சென்ற பிறகு திரும்பவும் வேடனாக மாறி தன்னைத் திருமணம் செய்து கொள்ளுமாறு வள்ளியை வற்புறுத்துகிறார். வள்ளி மறுக்கிறாள். அப்போது நம்பிராஜன் படைகள் சூழ அங்கு வர, முருகப்பெருமான் அங்கிருந்து மாயமாகி, ஒரு துறவி கோலத்தில் அங்கு வருகிறார். வள்ளி, நம்பிராஜனுக்கு ஆசி வழங்குகிறார். பிறகு முருகப்பெருமான் முதியவர் வேடத்தில் வந்து தனக்குப் பசிப்பதாகக் கூறி தினைமாவு கேட்கிறார். வள்ளியும் தினைமாவு தர அவருக்கு விக்கல் எடுக்கிறது. அவள் தண்ணீர் தர, அந்த சன்னியாசி இது வேண்டாம், சூரியனைக் காணாத சுனையில் இருந்து நீர் எடுத்து வந்து தரவேண்டும் என்றார். அதையும் தேடி எடுத்து வந்து கொடுக்கிறாள் வள்ளி. உடனே முருகப்பெருமான் (சன்னியாசி வேடத்தில்) தன்னை கல்யாணம் செய்து கொள்ளும்படி கூற, வள்ளிக்குக் கோபம் வந்து விட்டது. "வயதான முதியவரே, உமக்குக் கல்யாணம் ஒரு கேடா?" என்று ஆவேசத்துடன் கூற, முருகப்பெருமான் தன் அண்ணன் விநாயகரை நினைத்து வேண்ட, அவர் யானையாக அங்கு வருகிறார். யானையைக் கண்டு பயந்த வள்ளி, அந்த முதியவரை அப்படியே அணைத்துக் கொள்கிறாள். யானையை விரட்டுமாறு கேட்கிறாள். ஆனால் அவரோ, "நீ திருமணத்திற்கு ஒத்துக் கொண்டால் தான் யாலையை விரட்டுவேன்" என்கிறார். வேறு வழியில்லாத வள்ளி அதற்குச் சம்மதிக்கிறாள். பிறகு சுய உருவத்திற்கு வரும் முருகப்பெருமான், முன்ஜென்ம நினைவைக் கூறி திருத்தணிகையில் வள்ளியை மணந்து கொள்கிறார்.

### ஆறாம் படைவீடு - பழமுதிர்ச்சோலை

பழங்களை உதிரும் சோலையாக பழமுதிர்ச்சோலை திகழ்கின்றது. இதற்குச் "சோலைமலை" என்ற பெயரும் உண்டு. இங்குள்ள முருகன் "வெற்றிவேல் முருகன்" என்று அழைக்கப்படுகிறார். முருகப்பெருமானின் அறுபடை வீடுகளில் மூலஸ்தானத்தில் தம்பதியருடன் காட்சி தருவது இங்கு மட்டுமே. அறுபடை வீடுகள் ஒவ்வொன்றிலும் திருவிளையாடல் புரிந்த முருகப்பெருமான், இந்த தலத்தில், மதுரை நோக்கிச் சென்று கொண்டிருந்த அவ்வையாரிடம் திருவிளையாடல் புரிந்ததாகக் கூறப்படுகிறது.

அவ்வை மதுரைக்கு நடந்து செல்லும் வழியில் ஆடு மேய்க்கும் சிறுவனாக ஒரு நாவல் மரத்தின் கிளை ஒன்றில் ஏறி அமர்ந்து கொண்டார். நடந்து வந்த களைப்பால் அந்த மரத்தின் அடியில் வந்து அமர்ந்தார் அவ்வை. வயிறு பசிக்கவும் செய்தது. அப்போது அந்த மரக்கிளையில் ஆடுமேய்க்கும் சிறுவன் ஒருவன் அமர்ந்திருப்பதைக் கண்டார். அந்த மரத்தில் நாவல் பழங்கள் இருப்பதையும் கண்டார். உடனே அந்த சிறுவனிடம், குழந்தாய், எனக்கு மிகவும் பசிக்கிறது. சிறிது நாவல் பழங்களைப் பறித்துத் தரமுடியுமா? என்று கேட்க, சிறுவனாக இருக்கும் முருகப்பெருமான், சுட்டப் பழம் வேண்டுமோ? சுடாத பழம் வேண்டுமோ? என்று கேட்டார். சிறுவனின் கேள்வி அவ்வைக்கு புரியவில்லை.பழத்தில் கூட சுட்ட பழம், சுடாத பழம் என்று இருக்கிறதா? என்று எண்ணிக் கொண்டவர், விளையாட்டாக சுட்ட பழத்தையே கொடுப்பா என்று கேட்டுக் கொண்டார்.

நாவல் மரத்தின் கிளை ஒன்றை சிறுவனாகிய முருகப்பெருமான் உலுப்ப, நாவல் பழங்கள் அதில் இருந்து கீழே உதிர்ந்து விழுந்தன. அந்தப் பழங்களைப் பொறுக்கிய அவ்வை, அந்தப் பழத்தில் மணல் ஒட்டி இருந்ததால், அவற்றை நீக்கும் பொருட்டு வாயால் ஊதினார். இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிறுவனாகிய முருகப்பெருமான், என்ன பாட்டி...பழம் சுடுகிறதா? என்று கேட்டார்.

சிறுவனின் அந்த ஒரு கேள்வியிலேயே அவ்வையின் அகங்காரம் அகன்று தன்னையே சிந்திக்க வைத்த அந்த சிறுவன் நிச்சயம் ஒரு மானிடனாக இருக்க முடியாது என்று எண்ணி, குழந்தாய்... நீ யாரப்பா? என்ற கேட்டார். மரக்கிளையில் இருந்து கீழே குதித்த சிறுவன் முருகப்பெருமான் தனது சுய உருவத்தைக் காண்பித்து அவ்வைக்கு அருள்பாலித்தார்.

# ஆலத்தூர் வெள்ளாற்றில் முருக வழிபாடு

அ. தமிழ்ச்செல்வன்
முனைவர் பட்ட ஆய்வாளர்
தமிழாய்வுத்துறை
பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி - 620 023.

"ஆறில்லா ஊருக்கு அழகு பாழ்" என்பது முதுமொழியாகும். ஆற்றோடு அழகாய் அமைந்த ஆலத்தூர் கிராமம். கடலூர் மாவட்டம் திட்டக்குடி வட்டம். சென்னை திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் தொழுதூருக்கு மேற்கில் ஐந்து கல் தொலைவில் வாய்க்கால் ஏரி வயலென அமைந்தது ஆலத்தூர். மேல்புறம் தென்புறமென இருபுறமும் அழகாய் அமைந்த வெள்ளாறு ஓடி வளம் கொழிக்கின்றது.

தமிழகத்தில் இரு வெள்ளாறு உள்ளதால் இதனை வடவெள்ளாறு என அழைக்கின்றனர். மேற்கிலிருந்து கிழக்காக ஓடி வருகின்ற வெள்ளாறு ஆலத்தூரின் பெரியாயி கோயிலிலிருந்து தெற்கு நோக்கி ஓடிக் கூட்டாற்று மூலையில் கல்லாற்றைத் தன்னகத்தே இணைத்துக்கொண்டு கிழக்கு நோக்கி ஓடிச்செல்கின்றது. இந்த ஆறு கடலூர் மாவட்டத்திற்கும் பெரம்பலூர், அரியலூர் மா ட்டங்களுக்கும் எல்லையாக உள்ளது இதன் தனிச்சிறப்பாகும்.

## வெள்ளாற்றின் சிறப்பு

வசிட்ட முனிவர் திட்டக்குடியில் வாழ்ந்துள்ளார். ஆலத்தூர் கூட்டாற்று மூலையில் நீராடி வழிபாடு செய்துள்ளார். அதனால் வசிட்டநதி எனவும், சுவேதமுனிவர் ஆடுதுறையில் தவம் செய்தார் அதனால் சுவேதநதி எனவும் வடக்கே ஓடிய நதியைத் தெற்கே நீ வா என வசிட்டர் அழைத்ததால் நீவா நதி எனவும் சுசிநதி, தென்யமுனை, தேவகங்கை எனவும் அழைக்கின்றனர். இராமர் இலங்கை செல்லும் வழியில் தாகம் ஏற்பட்டுத் தனது வில்லால் அம்பு எய்தார். அது சேர்வராயன் மலையில் வெள்ளெருக்குக் கீழ்ப்பட்டு நீர்வந்தது. அதனால் வெள்ளாறு எனப் பெயர் பெற்றதாகவும், ஆற்றில் இருகரையும் வெள்ளம் நிறைந்து ஓடியதால் வெள்ளாறு என அழைத்ததாகவும் கூறுகின்றனர்.

தட்சன் செய்த யாகத்தால் சாபம் ஏற்பட்டது. அந்தச் சாபம் நீங்க வேண்டுமென வெள்ளாற்றில் சப்த முனிவர்களான வசிட்டர், அகத்தியர், பரத்வாசர், பராசரர், கௌதமர், காசிபர், கௌசிகர் ஆகியோர் கீழ்க்கண்ட ஊர்களில் உள்ள துறைகளில் நீராடி வழிபாடு செய்தனர் என்பதை,

"ஆதித்துறை (காரியானூர்) - ஆதிதீர்த்தம்
ஆலந்துறை (திருவாலந்துறை) - வட தீர்த்தம்

திருமாந்துறை - பிரமதீர்த்தம்
திருவாடுதுறை (சு. ஆடுதுறை) சுக்ரீவ தீர்த்தம்
திருவதிட்டத்துறை (திட்டக்குடி) சுத்திகார தீர்த்தம்
திருநெல்வரத்துறை (திருவட்டத்துறை) - அரதீர்த்தம்
திருச்சகத்துறை (பெலாந்துறை) - சைவ தீர்த்தம்"

(திட்டக்குடி தலவரலாறு, ப. 43)

**ஆலத்தூர்**

ஆலம் என்பது நஞ்சு, அந்த நஞ்சை உண்ட சிவன் கோயில் கொண்டுள்ள ஊராகும். மிகப் பழமையான சிவ லிங்கத்தை வைத்துக் கோயில் கட்டப்பட்டு உள்ளது. சோழ மன்னனால் கட்டப்பட்ட பெரிய சிவாலயம் திருவாலந்துறையில் உள்ளது. இது சப்த துறைகளில் ஒன்றாகவும் ஆலமரம் ஊரின் நடுவில் உள்ளதால் ஆலத்தூர் எனப்பெயர் வந்தது என்கின்றனர். ஆயிரம் ஆண்டுகள் பழமை வாய்ந்த மிகப்பெரிய ஆலமரமாக இருந்து அழிந்து போனது. அதே இடத்தில் மீண்டும் ஆலமரம் வைக்கப்பட்டுள்ளது. மேலும் 700 ஆண்டுகள் பழமை வாய்ந்த பெரிய வன்னிமரத்தைக் காணலாம். கரும்பு அதிகமாக விவசாயம் செய்து ஆறு மாதத்திற்கு மேல் கரும்பை ஆலையடித்ததால் ஆலைகள் நிறைந்த ஊர் ஆலத்தூர் என அழைத்ததாகக் கூறுகின்றனர். விவசாயத்தை மட்டுமே நம்பி இருக்கும் ஊர் நிலவளமும் நீர் வளமும் மண் வளமும் மக்கள் வளமும் நிறைந்த ஊராக அமைந்துள்ளது.

**ஆலத்தூர் - தெய்வ கோயில்கள்**

விநாயகர், சிவன், பெருமாள், பெரியநாயகி, அங்காளம்மன், திரௌபதியம்மன், கிருஷ்ணன், மாரியம்மன், அய்யனார், கேசவபெருமாள், மண்ணாதீஸ்வரர், பூமலையப்பா, பச்சையம்மன், பெரியசாமி, இருச்சாயி, சீரங்காயி, ஆனந்தாயி, திண்டுவீரன், பாட்டப்பா ஆகிய கோயில்கள் இவ்வூரில் காணலாம்.

**தெய்வங்களின் தோற்றம்**

தெய்வங்களின் தோற்றம் பற்றித் தொல்காப்பியமும், பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் கூறுகின்றன. நிலமும் பொழுதும் முதற்பொருள் என்று வகுத்த தமிழ் இலக்கணம் அந்நிலங்களுக்குக் கருப்பொருள் வகுக்கும்போது,

*"தெய்வம் உணவே மாமரம் புள்பறை*
*செய்தி யாழின் பகுதியொடு*
*அவ்வகை பிறவும் கருவென மொழிப"*

(தொல்.பொருள்.அகத்.நூ. 20)

என்ற தெய்வத்தை முதன்மையாக வைத்துத் தொல்காப்பியம் கூறுகின்றது. பெருந்தெய்வங்களைப் பற்றி,

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*

*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்"*

(தொல்.பொருள்.அகத். நூ. 5)

என்கிறது. முல்லைக்குத் திருமாலும், குறிஞ்சிக்கு முருகனும், மருதத்திற்கு வேந்தனும், நெய்தலுக்கு வருணனும் பாலைக்குக் கொற்றவையும் தெய்வங்களாக வகுத்துத் தொல்காப்பியம் கூறுகிறது.

இயற்கை வழிபாட்டு நிலையிலிருந்து ஐந்திணைத் தெய்வ வணக்கங்களும் இரண்டு பிரிவாக வளர்ச்சியடைந்தன. 1. சைவம், 2. வைணவம்

சேயோன் வணக்கத்திலிருந்து சைவமும், மாயோன் வணக்கத்திலிருந்து வைணவமும் தோன்றின. பேரூர்களில் அன்று பெருந்தெய்வக்கோவில்கள் இருந்தமைக்கான இலக்கியச் சான்றுகள் உள்ளன.

*"பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்*
*ஆறு முகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்*
*வால்வளை மேனி வாலியோன் கோயிலும்*
*நீலமேனி நெடியோன் கோயிலும்*
*மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்"*

(சிலம்பு - புகார். இந்திரவிழா. பா. 168 - 173)

என்ற அடிகளில் புகார் நகரில் இருந்த பெருங்கோவில்களைப் பற்றிச் சிலப்பதிகாரம் கூறுவதைக் காணலாம்.

குறிஞ்சிக் கடவுள்

*"செந்நூல் யாத்து வெண் பொரி சிதறி"* (திருமுரு. 331)

*"தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்*
*கொழும்பு ஆ எறிந்து குருதி தூஉய்*
*புலவுப் புழுங்கு உண்டவான் கண் அகல்அறை"* (அக.30: 4-6)

என்கிறது. குறிஞ்சி நில மக்களாகிய குறவர்கள் மலைக்கடவுளான முருகனுக்குத் தேனும், தினையும் படைத்தனர். வெறியாடி விழா கொண்டாடினர். குறத்தியர் குன்றக் குரவையாடினர். விழாக்காலங்களில் தங்களை ஒப்பனை செய்துக்கொண்டனர். நோன்பு நோற்பதற்காகப் பூசாரி கையில் சிவந்த நூலைக்கட்டிக் கொள்வார். பூவும் பொரியும் நாற்புறமும் தூவிப் பலியிட்டுக் குருதியில் சோற்றைக் கலந்து பலியாகப் படைத்துள்ளார்கள்.

முருக வழிபாடு

*"சுக்குக்கு மிஞ்சிய மருந்துமில்லை*
*சுப்பிரமணியனுக்கு மிஞ்சிய கடவுளுமில்லை"*

என்கிறது பழமொழி. ஆலத்தூர் கிராமம் எப்போதும் விவசாயம் செழிப்பானதாக இருக்கும். ஆனால் அருகில் உள்ள வைத்தியநாதபுரம் கிராமம் வானம்பார்த்த

பூமி மானவாரி விவசாயம். அதனால் சுமாரான வளமே காணப்பட்டது. மக்கள் வறுமையில் ஏழ்மையான நிலையில் இருந்தனர். இரு ஊர்களில் திருமண உறவு போன்ற கொள்வினை கொடுப்பினை வைத்துக் கொள்ளவில்லை. நூறு வருடங்களுக்கு முன்பு ஒருநாள் வயதான பெரியவர் மருதை கனவில் முருகக்கடவுள் தோன்றி உங்க ஊர் வளமாகவும் மக்கள் செழிப்பாக வேண்டுமென்றால் என்னைக் கோயில் கட்டி வணங்குங்கள், அதோடு வருடா வருடம் பங்குனி உத்திரத்தன்று ஆலத்தூர் ஆற்றிலிருந்து சக்தி அழைத்து வரவேண்டும். இதே போல் தொடர்ந்து செய்து வந்தால் உங்களைச் செல்வச் செழிப்புடன் வைத்திருப்பேன் என்றார். இதனை மறுநாள் காலையில் ஊரின் மற்ற பெரியவர்களிடம் கூறினார். அதன்பின் பங்குனி மாதம் முதல் நாளிலிருந்து விரதமிருக்க ஆரம்பித்துப் பங்குனி உத்திரத்தன்று காலையில் 8 மணிக்குப் புறப்பட்டு நான்கு கல் தொலைவில் உள்ள ஆலத்தூர் வெள்ளாற்றுக்கு வந்து வழிபாடு செய்து அப்போது பறவை கருடன் வானத்தில் வந்து மூன்று முறை வலம் வரும் அந்த நேரத்தில் பூசாரிக்குத் தெய்வமேறப்பட்டு அருள்வாக்குக் கூறி வேண்டுதல் காரணமாக குளித்து ஈரத்துணியுடன் நிற்கின்ற பக்தர்களுக்கு நாக்கில் வேல்குத்தி அதனை நாக்கு அலகு, வாய் அலகு, அள்ளை அலகு, தேர் அலகு, 108 அலகு எலுமிச்சைப்பழ அலகு குத்திக்கொண்டு காவடி எடுத்துக் கொண்டு மேளதாளத்துடன் ஆற்றிலிருந்து புறப்பட்டு வருவார்கள். ஆலத்தூரில் மிகச்சிறப்பான திருவிழாவாகப் பங்குனி உத்திரம் காணலாம். பார்ப்பவர்களைப் பரவசமடைய செய்வதாக இருக்கும். தேரை அலகால் இழுத்துக் கொண்டு நடந்தே வைத்தியநாதபுரம் செல்வார்கள்.

காவடி வகைகள்

"காவடி என்பது காவுதடியில் அபிசேகப் பொருட்களைக் கட்டிச்சுமந்து கொண்டு செல்வதற்காக முதன் முதலில் பயன்படுத்தினர். எனவே காவுதடியே காவடியானது என்கிறார்" ஏ.என். பெருமாள். தீர்த்தக்காவடி, பால்காவடி, தயிர் காவடி, கற்கண்டு காவடி, கரும்புக் காவடி, சர்க்கரைக் காவடி, வெல்லக்காவடி, பஞ்சாமிர்தக்காவடி இவைகள் சுவைக்காவடி ஆகும். சேவல்காவடி, மயில்காவடி, பக்தர்கள் பறவைபோல் வண்டியில் பறந்து வருதல் பறவைக்காவடியாகும். "மணங்கமழ் தெய்வம்" எனத் திருமுருகாற்றுப்படை கூறும். அதனால் சந்தனக்காவடி, பன்னீர்க் காவடி, வெட்டி வேர்க்காவடி, தாழம்பூக் காவடி, மலர்க்காவடி என்று இதனை மணம் வீசும் காவடி என்றழைக்கின்றனர்.

அலகுக் காவடிகள்

தங்களின் வேண்டுதல் அடிப்படையில் நாக்கில் வேல்குத்திக் கொண்டு வருவதை அலகுக் காவடி என்று கூறுகின்றனர். நாக்கு, வாய், முதுகில் அலகு மூலம் உடலில் பல நோய்கள் நீங்குகின்றன. மனதில் ஏற்படுகின்ற பயம், அச்சம் போன்றவை பக்திமூலம் துரத்தப்படுகின்றன.

அலங்காரக் காவடிகள்

மயில்தோகை, காகிதப் பூக்கள், மலர்கள், இளநீர், சுரைக்காய், தானியம், தேன், திருநீறு, தேர், தொட்டில், மச்சம், சர்ப்பம், அக்கினி, அபிசேகம் செய்து வைத்தியநாதபுரம் கிராமத்தின் முக்கிய வீதிகள் வழியாக ஊரை வலம்வந்து கோயிலில் வணங்கி வழிபட்டு விரதம் முடிப்பார்கள். அப்போது அன்னதானம் வழங்கப்படும். இரவு சாமி வீதிஉலா வரும். பிறகு தெருக்கூத்து நடைபெறும். இது ஆண்டாண்டுக் காலமாக நடைபெற்று வருகிறது.

குழந்தை வரம் வேண்டிப் பேசும் மணி கொடுத்தால் ஆட்டும் மணி வாங்கி வைக்கிறேன் எனவும் சாமி உன் பெயரையே குழந்தைக்கு வைக்கிறேன் எனக் கூறி குழந்தைகளுக்குப் பெயர் வைக்கின்றனர். வேல்முருகன், சக்திவேல், சுப்பிரமணி, பாலசுப்பிரமணி, முருகன், ஆறுமுகம், வேலு, வேலாயுதம், பழனிவேல், தனவேல், கந்தசாமி எனவும் பெண் குழந்தைகளுக்கு வள்ளி, வள்ளியம்மை, பூவழகி, பழனியம்மாள், தெய்வானை எனவும் பெயர் வைக்கின்றனர். ஆண் பெண் இருவருக்கும் கொளஞ்சி எனப் பெயர் வைக்கின்றனர்.

வைத்தியநாதபுரம் மக்கள் ஆலத்தூர் வெள்ளாற்றில் முருகனை வழிபட்டு வருவதால் இன்றைக்கு நல்ல விளைச்சலால் செல்வ செழிப்புடன் வாழ்ந்து வருகின்றனர். சாதிமத இனவேறுபாடு இன்றிப் பல ஊர்களைச் சேர்ந்தவர்கள ஒற்றுமையுடன் வணங்கி வருகின்றனர். இரண்டாண்டிற்கு முன்பு இ ளைஞர்கள் நாம் ஏன் ஆலத்தூர் ஆற்றிற்குச் செல்ல வேண்டும் நமது ஊர் குளத்திலிருந்து சக்தி அழைத்துப் பங்குனி உத்திரம் விழா நடத்துவோம் எனக் கூறிக் குளத்துக்கு அழைத்துச் சென்றனர். மதியம் 12 மணி ஆகியும் கருடப் பறவையும் வரவில்லை. யாருக்கும் சாமியின் மருள் வரவில்லை. உடனே ஆலத்தூர் ஆற்றிருக்குவந்து வழிபாடு செய்தவுடன் கருடப் பறவை வர பூசாரிக்குத் தெய்வமேறப்பட்டு ஆணியால் ஆன காலணி அணிந்து அழகு குத்தி விழா நடத்தினர்.

ஆலத்தூர் கிராமத்தில் எத்தனையோ கோயில்கள் இருக்க முருகனுக்கு எனத் தனியான கோயில் இல்லை. முருகனுக்குக் கோயில் வேண்டுமென மக்கள் நினைக்கவுமில்லை. வெள்ளாறே முருகனின் சக்தியிருக்கும் இடமாகும். அதனால் வெள்ளாற்றையே முருகன் உறையும் இடமாகக் கருதி வணங்கி வருகின்றனர்.

## முருகன் தலங்கள்

க. தமிழ்ச்செவல்வன்
முனைவர்பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

தலம் என்னும் சொல் வடமொழியிலிருந்து வந்த வழக்காகும். இடம் என்னும் பொருளைக் குறித்த தலம் என்னும் சொல் காலப்போக்கில் இறைவன் கோயில் கொண்ட இடங்களைக் குறிப்பதாகக் காணப்படுகின்றது. முருகன் கோயில் கொண்டுள்ள இடங்களைப் பல்வேறு வகைகளாகப் பார்க்கலாம். பரிபாடல், திருமுருகாற்றுப்படை, கந்தப்புராணம், தலப்புராணங்கள், பிள்ளைத்தமிழ் நூல்கள், சதகம், உலா, கலம்பகம், அந்தாதி, மாலை, கலிவெண்பா முதலான சிற்றிலக்கியங்கள் தனிப் பாடல்கள் எனப் பல்வேறு வகையான இலக்கியங்கள் முருகனைப் பற்றி எழுந்துள்ளன. முருகன் கோயில் கொண்ட இடங்களில் இருவகை அமைப்புகளைக் காணலாம். ஒன்று தனிப்பட்ட நிலையில் முருகனுக்கென்றே எழுந்த கோயில்கள். மற்றொன்று சிவபெருமான் கோயில் கொண்டுள்ள இடங்களில் குறிப்பிடத்தக்க நிலையில் காணப்படுகின்ற முருகன் கோயில்கள். இவற்றையே முருகன் தலங்கள் என அழைக்கப் படுகின்றன. இவற்றைப் பற்றிப் பின்வரும் கட்டுரையின் வழி அறியலாம்.

சங்க இலக்கியங்களில் முருகன் கோயில் கொண்டுள்ள இடங்கள் பல காணப்படுகின்றன. பரிபாடல் திருப்பறங்குன்றையே எடுத்து மொழிகின்றது. திருமுறுகாற்றுப்படையில் சுட்டப்பட்ட இடங்களில் ஐந்து தனிப்பட்ட கோயில்களாகவும் மற்றொன்று தொகுதியாகவும் காணப்படுகின்றன. திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், பழமுதிர்ச்சோலை என்பவை தனிப்பட்ட நிலையில் சுட்டப்பட்ட தலங்களாகும். குன்றுதோறாடல் என்பது குறிஞ்சிக் கடவுள் முருகன் என்பதால் குன்றுகள் தோறும் அவன் இருப்பிடங்களாகக் குறிக்கப்பட்டுள்ளதாகக் கருதலாம். இவற்றைப் படைவீடுகள் என வழங்குகின்றன.

### படைவீடு

'படைவீடு' என்னும் வழக்கு காலத்தால் பிற்பட்டதாகத் தோன்றுகிறது. நக்கீரரும், அருணகிரியாரும், குமரகுருபரரும் முருகன் குடி கொண்டதாக ஆறு இடங்களைக் குறிப்பிடுகின்றனர். முருகன் படைத்தலைவன் எனப்பட்டமையால் அவன் கோயில் கொண்டிருந்த ஆறு இடங்களையும் ஆற்றுப்படைவீடு எனக் கருதியதாகக் கூறுவர். ஆற்றுப்படை என்பது இலக்கியத்தில் பெயராகக் கருதப்பட்டு அவ்விலக்கியத்தில் இடம்பெற்ற தலங்கள் ஆறினையும் ஆற்றுப்படைவீடு எனக் குறித்திருக்கலாம்.

'வீடு' என்பது கோயில் கொண்ட இடம் அல்லது ஆன்மாக்களுக்கு வீடு பேற்றைத் தரும் இடம் என்னும் நிலையில் சுட்டப்பட்டதாக அமைந்ததோர் சொல்லாகும். ஆற்றுப்படை நூலில் இடம்பெற்ற தலங்கள் ஆறு எனக் கொண்டு காலப்போக்கில் ஆற்றுப்படைவீடு என்பது அறுபடை வீடு என எண்ணுப் பெயரால் குறிக்கும் வழக்கம் ஏற்பட்டிருக்கலாம்.

**ஆற்றுப்படைத் தலங்கள்**

திருமுருகாற்றுப்படையில் இடம்பெற்றுள்ள தலங்கள் ஆறாகும். புராணங்கள் தலபுராணங்கள், சிற்றிலக்கியங்கள் தனிப்பாடல்கள் முதலான பல இலக்கியங்கள் இத்தலங்களின் சிறப்புக்களைப் போற்றியுள்ளன.

**திருப்பரங்குன்றம்**

இத்தலம் மதுரைக்குத் தென்மேற்கே ஐந்து மையில் தூரத்தில் அமைந்துள்ளது. திருப்பரங்குன்றம் காலப்பழைமையுடையதோர் கோயிலாகும். முருகனுக்குரிய தனிநிலைக் கோயிலாக இக்குன்றம் போற்றப்பட்டு வருகின்றது. எனினும் சிவப்பெருமான் கோயில் கொண்டுள்ள தலமாக தேவாரங்களில் இடம் பெற்றுள்ளன.

*'கொடினு டங்கு மறுகிற் கூடற்குடா அது*
*பல்கொடி மஞ்ஞை வெல்கொடி உயரிய*
*ஓடியா விழவின் நெடியோன் குன்றம்'*

என்ற இடத்திலும் பரங்குன்று சுட்டப்பட்டுள்ளது. பரிபாடலில் செவ்வேளுக்குரிய பாடல்களாக எட்டுப் பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இப்பாடல்கள் அனைத்தும் திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் முருகனைப் பற்றி அமைந்துள்ளன. வெல் வேலான் குன்று எனவும் மணிவேற் குமரன் திருவளர் குன்றம் எனவும் குறிப்பிடுகின்ற பண்டைய இலக்கியங்கள் இதனை முருகனுக்குரிய குன்றாகவே குறிப்பிடுவதைக் காணமுடிகின்றது.

சங்க காலத்தில் முருகன் கோட்டம் மட்டுமே அமைந்திருந்த குன்று பிற்காலத்தில் சிவன் கோயிலும் சேர்த்து அமைக்கப்பட்டதாகக் காணப்படுகிறது என்பது கருதத்தக்கது. முருகன் ஒப்புயர்வுற்ற கடவுளாகப் பரிபாடலில் கூறப்பட்டுள்ள செய்தியும் உள்ளம் கொள்ளத்தக்கது. முருகன் மயிலை ஊர்தியாகக் கொண்டு விளங்குவதையும் அடியார்களைக் காத்தும் பகைத்தோரை அழித்தும் அருள் செய்யும் திருவடிகளையும் கைகளையும் உடையவனாக விளங்குகின்றான் என்ற குறிப்பினை நக்கீரர் குறித்துள்ளார். தெய்வயானைக்குக் கணவனாக விளங்குகின்ற செய்தியும் முருகாற்றுப்படையில் இடம்பெற்றுள்ளது.

**திருச்செந்தூர்**

இது வ.உ. சிதம்பரனார் மாவட்டத்தில் கடற்கரையில் அமைந்துள்ள ஒரு தலமாகும். திருமுருகாற்றுப்படையில் குறிக்கப்பெற்ற தலங்களுள்

இரண்டாவதாகும். திருமணி விளக்கின் அலையாய்ச் செருமிகு சேஎய் என அகநானூற்றிலும் உலகம் புகழ்ந்த ஓங்குயர் அலையாய் எனத் திருமுருகாற்றுப் படையிலும் இது கடற்கரைத் தலமாகக் குறிக்கப்பெற்றுள்ளமை கருதத்தக்கது. இக்குறிப்புக்களால் இத்தலத்தின் பண்டையப் பெயர் அலைவாய் என்றே இருந்திருக்கலாம் எனக் கருத இடமுண்டு. வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில் என்ற புறநானூற்று அடியில் செந்தில் என்னும் பெயர் முதன் முதலாக காணப்படுகிறது.

அலைவாய் என்னும் பெயரோடு திரு சீர் என்னும் இரு செற்கள் அடையாக இணைந்து திருச்சீர் அலைவாய் என்னும் பெயர் வழங்கி வந்துள்ளது. அலைவாய் என்பது அலைகள் வந்து மோதும் இடத்தில் உள்ளது. பொருளில் வழங்கப்பெற்ற பெயராகக் காணப்படுகிறது. செந்தில், செந்தூர் என்ற பெயர்கள் திரு என்னும் அடைமொழி பெற்று திருச்செந்தில் திருச்செந்தூர் என வழங்கப்பெறுகின்றன.

முருகன் ஆறு முகங்களுடனும் பன்னிரண்டு கைகளுடனும் கையில் வேல் தாங்கி யானை மீது அமர்ந்து செல்வதாக திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது. திருசெந்தூர் முருகனைப் பற்றி எழுந்த இலக்கியங்களுள் கந்தர் கலிவெண்பா குறிப்பிடத்தக்கதாகும். ஊமைக்குழந்தையாக இருந்த குமரகுருபரர் திருச்செந்தூர் தலத்தில் இறைவன் திருமுன் நின்று வாய்திறந்து பேசிய பேச்சே கந்தர் கலிவெண்பா என்று கூறப்படுகிறது.

திருவாவினன்குடி

திருவாவினன்குடி என்பது அறுப்படை நூலில் மூன்றாவது தலமாகக் குறிக்கப் பெற்றுள்ளது. இன்றைய அண்ணா மாவட்டத்தில் அமைந்து விளங்கும் இத்தலம் இன்று பழனி எனக் குறிப்பிடப்படுவதாகும். பழனிமலை மேற்குத் தொடர்ச்சி மலைகளின் பிரிவாக விளங்கும் வராக மலைக்கும் கொடைக்கானல் மலைக்கும் இடையிலுள்ள பள்ளத்தாக்கில் அமைந்துள்ளமை யாவரும் அறிந்ததே. திருமுருகாற்றுப்படையில் திருவாவினன்குடி என்று குறிக்கப்பெறும் தலம் மலையின் அடிவாரப் பகுதியாக இருக்கக் கூடும் என்று கருதலாம்.

சங்க நூல்களில் பொதினி எனக் குறிக்கப்படுகின்ற இடமே பின்னர் ஆவினன்குடி என அழைக்கப்பட்டிருக்கலாம் எனக் கருத இடமுண்டு. தண்டபாணி சுவாமிகள் அவருடைய நூல்கள் பலவற்றிலும் வயலூர் முருகனைப் போற்றி உரைத்துள்ளார் என்பது கருதத்தக்கதாகும். தண்டபாணி சுவாமிகளை அடுத்து பாம்பன் சுவாமிகள் என அழைக்கப்பட்ட குமரகுருதாச சுவாமிகள் முருக அன்பர்களில் குறிப்படத்தக்கவராவார். இவர் தமது பாடல்கள் அனைத்தையும் ஆறு மண்டலங்களாக வகுத்துக் கொடுத்துள்ளார். இவர் முருகனிடம் அளவிலா ஈடுபாடு கொண்டவர். இவருடைய நூல்கள் முருகனைப் பல்வேறு வகைகளில் புகழ்வதாக அமைந்துள்ளன. பழனி முருகனைப் பத்துப் பாடல்களில் பாடியுள்ளார்.

ஓங்காரத்தில் உள்ள குருநாதனாக முருகனை இவர் போற்றியுள்ள திறம் குறிப்பிடத்தக்கது. ஒவ்வொரு பாடலிலும் உலகம் புகழும் திருப்பழனி என மகுடமாக ஒரு செய்தியைச் சுட்டிச் செல்கிறார். இதைப் போன்று திருவாவினன்குடி பற்றிய பல்வேறு செய்திகளும் முருகன் ஒருவனையே என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## திருவேரகம்

திருமுருகாற்றுப்படையில் நான்காவதாகக் குறிக்கப்பெற்றுள்ள தலம் திருவேரகம் என்பதாகும். ஏரகம் என்னும் சொல் அழகு என்னும் பொருளை உடையது. ஏர் என்னும் சொல் அடிப்படையில் ஏரி என்னும் சொல்லிலிருந்து தோன்றியிருப்பதால் அதன் பொருளை உணரலாம். அழகுமிக்க தங்குமிடம் என்னும் பொருளிலேயே ஏரகம் என்னும் சொல் தோன்றியிருத்தல் வேண்டும். முருகனுக்குரிய பழம்பெரும் பதிகளுள் ஏரகமும் ஒன்று.

*'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்.'*

என சிலப்பதிகாரமும் ஏரகத்தையும் சேர்த்து முருகனுடைய பதிகளாக வரிசைப்படுத்தியிருப்பதால் உணரலாம்.

திருவேரகம் படைவீட்டுப் பதிகம் என்னும் நூல் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பெற்றுள்ளது. படைவீடுகளில் திருச்செந்தூரையே இவர் முதற்படைவீடாகக் கருதியுள்ளார். திருச்செந்தூர், திருப்பரங்குன்றம், திருஆவினன்குடி, திருவேரகம், பழமுதிர்சோலை, திருத்தணிகை என்ற முறை வைப்பில் இவர் ஆறு தலங்களையும் குறிப்பிட்டுள்ளமை கருதத்தக்கதாகும். திருஏரகம் பற்றி அமைந்துள்ள பாடல்கள் காப்பு, செய்யுள் உட்பட பதிமூன்று பாடல்கள் அமைந்துள்ளன.

## குன்று தோறாடல்

ஆற்றுப்படை நூலில் குறிக்கப்பெற்ற தலங்களில் குன்று தோறாடல் என்பது வேறுபாடானதாகக் கருதப்படுகின்றது. 'தொறும்' என்னும் சொல்லுக்கு ஒவ்வொரு என்பது பொருள். குன்று தோறாடல் என்னும் தொடரில் அமைந்துள்ள சொற்களுக்குக் குன்று தொறும் ஆடுகின்றவன் என்னும் பொருளே கொள்ளப்பெறுவதாகும். மலைகள் தொறும் சென்று விளையாடுதலும் தனக்கு நிலையற்ற குணம் எனக் குன்று தோறாடலும் நின்றதன் பண்பே' என்னும் அடிக்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருளால் காணலாம். முருகன் குறிஞ்சிக் கடவுள் என்பதால் எல்லா மலைகளிலும் அவன் அருளாட்சி செய்கிறான் என்ற குறிப்பே குன்று தோறாடல் என்று குறிக்கின்றது. முருகன் கோயில் கொண்டதாகக் கந்தபுராண ஆசிரியர் ஐந்து இடங்களைத் தலையானவாகக் குறித்துள்ளார். மலைகள் அனைத்திலும் அவன் வாழ்பவனாயினும் திருப்பரங்குன்றம் திருச்சீரலைவாய் ஆவினன்குடி ஏரகம் தணிகை ஆகிய இடங்களைக் குறிப்பிட்டுள்ளார். இதனை,

'மேவருங் கூடல் மேலை வெற்பினில் அலைவாய் தன்னில்
ஆவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிக்கையாதிப்
பூவுலகுக்குள்ள வெற்பிற் பொற்புறும் ஏனை வைப்பிற்
கோயில் கொண்டருளி வைகுங் குமர கோட்டத்து மேயோன்'

என்னும் பாடலில் காணலாம். திருமுருகாற்றுப்படையில் குறிக்கப்பட்ட ஆறு தலங்களில் பழமுதிர்சோலையை வெளிப்படையாகக் குறிப்பிடாமல் தணிகைமலையைக் குறிப்பிட்டு வரிசைப் படுத்தியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

பழமுதிர்ச்சோலை

ஆற்றுப்படை இலக்கியத்தில் ஆறாவது தலமாகக் குறிக்கப்பட்டுள்ள தலம் பழமுதிர்ச்சோலை. இதனை நக்கீரர் 'இழுமென இழிதரும் அருவிப் பழமுதிர்ச் சோலை மலைகிழவேனே' எனக் குறிப்பிடுகிறார். இவ்வடிகளில் மூன்று குறிப்பினை உளங்கொள்ளுதல் வேண்டும். அங்கு அருவி ஒன்று இழிதருகின்றது என்பதாகும். இரண்டாம் நிலையில் அப்பகுதி காடுகள் மிகுதியாக இருந்து கொள்வாரற்று பழங்கள் உதிரும்படியான சோலை சூழ்ந்த பகுதியாகும். மூன்றாம் நிலையில் அது ஒரு குன்று என்பதாகும்.இத்தலத்தை பற்றிய சிக்கல் ஒன்று உள்ளது. பழமுதிரச்சோலை என்பது முருகனுக்குரிய தலமா அல்லது திருமாலுக்குரிய தலமா என்பதேயாகும். இலக்கியச் சான்றுகளை ஆராய்வதற்கு முன் நடைமுறையில் பழமுதிர்ச்சோலை என்னும் தலம் மதுரைக்கு அருகாமையில் பதினெட்டு கிலோ மீட்டர் வடக்கில் அமைந்துள்ள ஒரு மலையாக மக்கள் கொண்டு வழிபட்டு வருகின்றனர்.

முடிவுரை

திருப்பரங்குன்றம் முருகனை வழிபடும் தலமாக சங்க காலம் முதற்கொண்டே இருந்து வந்துள்ளமை குறிப்பிடத்தக்கது. சிவனும் இங்குக் கோயில் கொண்டுள்ள நிலையைத் தேவாரப் பாடல்களால் உணர இயலுகின்றது. வேல் வைத்து வழிபடும் மிகப்பழைய வழக்காறு இருந்திருக்கின்றது. படைவீடு என்ற சொல் வழக்கு இத்தலம் குறித்து எழுந்ததாகவே கருதலாம். கந்தபுராண ஆசிரியர் குன்றுதோறாடல் என்பதற்குத் தணிகை மலையைக் குறித்திருப்பதும் அருணகிரிநாதர் குன்றுதோறாடல் என்ற பகுதிக்கு முப்பத்து நான்கு மலைகளைக் குறித்திருக்கின்றார். தணிகையைத் தலைமையிடமாகக் குறித்துள்ளார். மேலும் முருகன் சிவப்பெருமானை வழிபட்ட தலமாக இது கருதப்படுவதால் திருத்தணிகை இறைவனுக்குக் குமாரலிங்கம் என்ற பெயர் காணப்படுவது குறிப்பிடத்தக்கது. இராமலிங்க அடிகளார் திருத்தணிகை முருகனையே மிகுதியும் பாடியுள்ளார். பழமுதிர்ச்சோலை என்னும் தலம் அறுப்படை நூலில் கூறப்பட்டுள்ள ஆறாவது தலமாகும். அருணகிரிநாதர் இதனை முருகனுக்குரிய தலமாகக் காண்கிறார் பழமுதிர்சோலை அருவி காலநிலைக்கு ஏற்ப புதிய மாற்றங்களைப் பெற்று திகழ்கின்றது. முருகனுக்கு அமைந்துள்ள ஆறு முகங்களும் இறைவனின் ஆறு குணங்களின் உருவகமே என்னும் கருத்தும் போறறதக்கதாகும் இவையே அறுபடை வீடுகளின் சிறப்புகளாகும்.

# கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பா

முனைவர் சு. தமிழ்வேலு
தலைவர், இணைப்பேராசிரியர்
தமிழ்த்துறை, அ.வ.அ.கல்லூரி (த)
மன்னன்பந்தல், மயிலாடுதுறை–5

ஆறுமுகம் உடையதோர் அமலனின் மாக்கதை என்பதே கந்தபுராணம். கந்தனுடைய புராணத்தைத் தக்கோர் தக்கவழி சுருக்கியும் பெருக்கியும் தம் வளத்திற்கு ஏற்ப வளப்படுத்தி வருகின்றனர். அவ்வகையில் தோற்றம் பெற்ற கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பாவை அறிமுகம் செய்வதே இவ்வெழுத்துரை ஆகும்.

## நூல்பெயர்

கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பா என்னும் நூல் 1004 வெண்பாக்களால் இயற்றப்பட்டது. கச்சியப்பச் சிவாச்சாரியாரின் கந்த புராணத்தை முதல் நூலாகவும் வழி நூலாகவும் கொண்டு இந்நூல் அமைந்தது என்று ஆசிரியர் சுட்டுவதைப் போன்றே அமைந்துள்ளது. நூலாசிரியர் சுப்பிரமணியன் கண்டு வணங்கிப் பூசைசெய்த மானசீகக் கடவுளான சீர்காழி, வைத்தீசுவரன் கோயில் அருகிலுள்ள கன்னியாகுடி என்னும் ஊரிலுள்ள வள்ளி, தெய்வானை உடனுறையும் முருகனைப் புகழ்ந்து பாடியுள்ளார்.

காஞ்சிபுரக் கந்தக்கோட்டத்தில் எழுந்தருளியுள்ள முருகனின் நல்லருள் பெற்ற கச்சியப்பச் சிவாச்சாரியார் அவர்கள் உற்பத்திக்காண்டம், அசுர காண்டம், மகேந்திரக் காண்டம், யுத்த காண்டம், தேவ காண்டம், தட்ச காண்டம் என ஆறு காண்டங்களையும் நூற்றி ஆறு படலங்களையும் உள்ளடக்கி 10,346 விருத்தப்பாக்களில் வடமொழி கந்தபுராணத்தை ஆறு சங்கிதைகளில் ஒன்றான சங்கர சங்கிதையின் முதல் காண்டத்தைத் தழுவி எழுதியுள்ளார்.

இக்கந்தபுராணம் சரணாலய முனிவரால் சுருக்கப்பெற்று 6 காண்டங்களில் 1,048 விருத்தங்களில் கந்தபுராணச் சுருக்கம் என்று எழுதியுள்ளார். இக்கந்தபுராணச் சுருக்கத்தைச் சுருக்கி 460 வெண்பாக்களால் திரிசிரபுரம் வெ.சரவணப்பிள்ளை காத்தசார வெண்பா என்ற நூலினை உருவாக்கினார். இவ்வரிசையில் கந்தபுராணத்தைச் சுருக்கமான வடிவில் வெண்பா யாப்பில் கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பா எனப் பெயரிட்டுள்ளார்.

## நூல் உருவான வரலாறு

காலந்தோறும் தமிழ் தன்னைப் புதுப்பித்துக் கொண்டே வரும் என்ற கூற்றுக்கேற்ப நூலாசிரியர் தன்னுடைய இணையப் பக்கத்தில் நாள்தோறும் ஒரு வெண்பாவை எழுதுவது எனத் திட்டமிட்டுள்ளார்.

அப்பாடல் வெண்பா வடிவில் அமைந்தது. பின் பொருண்மை முருகன் புகழினைச் சொல்வதாக அமைந்தது, தொடர்ந்து முருகனின் வரலாற்றை 100 பாடல்களில் எழுதுவது எனத் திட்டமிடப்பட்டது. அப்பாத்தொகுப்பு நிறைவு தராத காரணத்தால் கந்தபுராணத்தைச் சுருக்கி எழுத முனைந்து வலைப்பூவில் உருவான நூலாகக் கந்தபுராண வெண்பா உருவாகியுள்ளது.

## நூல் அமைப்பு

சுவாமி சுப்பிரமணியன் அவர்கள் கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பா என்னும் நூலினை 1004 வெண்பாக்களில் 94 காதைகளில் 13 படலங்களில் படைத்துள்ளார். வாழ்த்துப்படலம், பார்வதி அவதாரப்படலம், சிவனார் தவநிலைப் படலம், காமதகனப் படலம், அம்பிகை தவநிலைப்படலம், அம்மையப்பன் திருமணப்படலம், திருமுருகன் அவதாரப்படலம், தாரகன் வதைப்படலம், அவுணர்கள் தோற்றப்படலம், வீரவாகு தூதுப்படலம், சூரன் மந்திராலோசனைப் படலம், போர்புரிப்படலம், தேவரைச் சிறை மீட்பபடலம், தெய்வயானை திருமணப்படலம், வள்ளித்திருமணப் படலம் எனக் கச்சியப்பர் சொன்ன ஆறுபடலத்தை விரிவாக்கி 13 படலங்களாக வடித்தெடுத்துள்ளார். புராண நிகழ்வுகளை 94 காதைகளாகப் பகுத்துக்கொண்டு வடித்துள்ளார். கந்தபுராணக் கதைச் சுருக்கத்தை அடித்தளமாகக் கொண்டு நேரிசை வெண்பாவில் உருவாக்கியுள்ளார். காப்பியத் தரத்திற்குக் குறைவுபடாமல் படலம் என்னும் 13 பெரும் பிரிவுகளாகக் கொண்டு கதைப் போக்கை விளக்கும் வகையில் 94 குறுந்தலைப்புகளை இட்டு நூலினை ஆக்கியுள்ளார். கந்த புராணப் படலம், காதைகளை அப்படியே வெளிப்படுத்துவதோடு கதைமாந்தர்களையும் உள்ளடக்கிப் பண்பு நலனும் பெருமையும் குன்றா வகையில் உருவாக்கிச் சிறப்புச் சேர்த்துள்ளார்.

## நூல் தொடக்கமும் முடிவும்

வாழ்த்துப்படலம் என்னும் தலைப்பில் விநாயகர், சிவபெருமான், பார்வதி, முருகன் எனக் காப்புப் பாடல் பாடி கன்னியாகுடி முருகன் போற்றி என 16 பாடல்களில் சீர் பெற்ற முருகன் தலங்களையெல்லாம் கன்னியாகுடியோடு பொருத்திக் காட்டியுள்ளார். வள்ளித்திருமணப் படலத்தில் வள்ளியின் வாழ்வியலை அகப்பொருட் சுவையோடு பொருத்தி 118 பாடல்களில் புகழ்ந்தேத்துகின்றார். நிறைவாக முருகா போற்றி என்னும் தலைப்பில் 10 பாடல்களில் போற்றித் துதிகளாகச் சுட்டுகின்றார்.

*அழகனே போற்றி அறிஞனே போற்றி*
*குழந்தையே போற்றி குழகா - பழமதை*
*வேண்டினாய் போற்றி வியன்மயிலையே போற்றியே*
*ஆண்டிப் பழனியே போற்றி* (1000)

என்று பாடியுள்ளார். நூலின் நிறைவுப் பாடலில்

*பரங்குன்றம் வாழ்க பழனி மலை வாழ்க*
*திறனுடைச் செந்தூரும் வாழ்க – வரமருள்*

*ஏரகமே வாழ்க திருத்தணி வாழ்கவே*
*தாரப்பழ நல்லுதிர்சோ லை* (1004)

என ஆறுபடை வீடு கொண்ட முருகா போற்றி எனப் பாடியுள்ளார்.

**முந்துநூல் போற்றல்**

சுப்பிரமணியன் அவர்கள் முருகன் புகழ், வெண்பா என வரையறுத்துக் கொண்டு பாப்புனைந்தாலும் அவரையும் அறியாமல் பன்னூற் புலமை பாக்களில் வெளிப்பட்டு நிற்கும் தன்மையினை அறிய முடிகின்றது.

*கண் ணென்னாம் கந்தனைக் காணா நிலையினில்*
*பண்ணென்னாம் பாடற் கியைகின்றோம்? மன்னன்னாம்*
*மாமுருகன் காலடி தீண்டா நிலையினில்*
*சேமமது பெற்றிடச் சேர்* (4)

என்னும் பாடலில் பாடலுக்கு இயைபில்லாத பண் பயனற்றது கந்தனைக் காணாத கண்ணும் பயனற்றது எனப்பாடும் பொழுது திருக்குறளை (573) எடுத்துக்காட்டு உவமையணியாக்கி முருகனின் பெருமையைப் பாடுகின்றார்.

*தோன்றிற் புகழோடு தோன்றுக என்பதின்*
*சான்றாளன் சண்முகன் சாற்றினான் - தோன்றாத*
*தோன்றலே! தந்தையே தாங்களின் சொல்படி*
*ஆன்றபணி ஆற்றுவன் யான்* (225)

என்னும் பாடலில் தோன்றிற்புகழோடு தோன்றுக எனத் திருக்குறளையும் தோன்றாத தோன்றலே என்னும் தொடரில் பிறவாப் பெரியோன் எனச் சிலப்பதிகாரத்தையும் எடுத்தாண்டுள்ளமையை உணரமுடிகின்றது.

*நீசக் கிழவன் நிறுத்த மாட்டான் - ஏசிடம்*
*விட்டே அகல்வேன் என அகல முற்பட்டான்* (117)

எனும் வெண்பாவின் வழி தடுத்தாட்கொண்ட புராணத் திருவிளையாடல் வழி கந்தரோடு வாதிட்டு அவரைப் பித்தன், பேயன் எனப் பேச வைத்துக் காட்சி தந்தமையைப் புலப்படுத்துகின்றார்.

இவ்வாறு தேவாரம், திருவாசகம், திருக்குறள், சிலப்பதிகாரம் ஆகிய நூல் கருத்துக்களைப் பரவலாகக் கையாண்டு கந்தபுராண வெண்பாவைச் செழுமை பெறச் செய்துள்ளார்.

**வஞ்சினம் கூறல்**

புற மரபுகளில் வஞ்சினம் உரைத்தலும் ஒன்றாகும். அம்மரபிற்கேற்ப சூரன் சூளுரைப்பதாகப் பதிவு செய்யும் பாடல்

*என்னோடு போர்புரிய அஞ்சிட்ட பாலகன்*
*என்னமாயம் செய்துவிட்டான்? என் மயக்கம் - என்வீரம்*

*வீழ்ந்திடுமோ? வென்றிடுவேன் நின்றிடுவேன், என்றுமே*
*வீழ்ந்திடுவேன் விண்ணவர்பூ தர்* (789)

என்வீரம் வீழ்ந்திடுமோ? வென்றிடுவேன் நின்றிடுவேன், என்றுமே வீழ்ந்திடுவேன் விண்ணவர் பூதர் ஆகியோரை வென்றிடுவேன் என்றன் என்னும் பாடல் எளிமையான சொல்லாடலாக இருந்தாலும் எவ்வகையிலும் குறைந்ததாய் அமையவில்லை.

முருகனின் தோற்றம்

முருகப்பெருமானின் தோற்றம் பன்னூறு நூல்களிலும் பன்னூறு சொற்களில் தொடர்ந்து வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இருப்பினும் ஒவ்வொரு தோத்திர நூலுக்கும் ஒவ்வொரு வெளிப்பாட்டுச் சிந்தனை உள்ளது. இந்நூலின் ஆசிரியர் பிள்ளைத்தமிழ் பாடலைப் போன்று சொற்களைப் பெய்து எழுதியுள்ள பாங்கு போற்றுதலுக்கு உரியதாய் அமைந்து சிறக்கிறது.

*அறுமகளிர் கார்த்திகைப் பெண்டிர் அளிக்க*
*அறுகுழவி ஆனான் குகன்* (154)

*தவழ்ந்திட ஒன்று, தளிர்நடை ஒன்று*
*நவமெனத் துள்ளிட ஒன்று – திவலைசூழ்*
*பொய்கை கலக்கிட ஒன்று, அமர வொன்று*
*கையமர் தாய் மடியில் ஒன்று* (155)

என்னும் பாடல்களில் பயன்படுத்தியுள்ள சொற்பயன்பாடும் ஓசை ஒழுங்கமைவும் இயைபும் நூலாசிரியரின் சிறப்பினையும் முருகனின் இளமைத் தோற்ற உண்மையையும் உணர்த்தி நிற்கின்றன.

உபதேசம் உரைத்தல்

முருகன் சிவனுக்கும் அகத்தியருக்கும் உபதேசம் உரைத்துள்ளார். அம்மொழிகள் சின்மொழியே என்றாலும் நூலாசிரியரின் சொல்லாடலில் உணருகின்ற பொழுது பேருரையாகத் திகழ்வதை உணரமுடியும். அப்பாடல்கள் வருமாறு.

*தரையதில் சீடனாய்த் தட்சிணா மூர்த்தி*
*விரைமலர் ஆசனத்தில் ஆசான் - நிறைமதி*
*கந்தக்கடவுள் உபதேசம் செய்யவும்*
*அந்தமில் ஆசான் அறி* (213)

என்னும் பாடலில் தரையினில் தட்சிணாமூர்த்தியாய் அமர்ந்தார். ஆசானாய் ஆசனத்தில் முருகர் அமர்ந்தார். வாழ்வின் உண்மைப் பொருளைச் சிவன் சீடனாய் அமைந்து கற்றார் என உரைக்கின்றார்.

*உலகம் உவக்க ஒருமுனி மாமுனி*
*உள்ளம் உவக்க உபதேசம் - உய்வித்து*

*மாணாக்கர் மாண்பு போற்றி மாமறை மெய்ப்பொருள்*
*தேன்போல் அளித்ததேன் பெறு* (216)

குறுமுனி பிரணவப் பொருளின் மறைபொருளைச் சிவன் முருகனிடம் உற்று அறிந்தார் எனும் செய்தி கிட்டியவுடன் எனக்கும் அப்பொருளை உபதேசம் செய்திடுக எனக் கேட்டவுடன் உலகம் போற்றும் நல்ல முனிவன் அகத்தியன். அவனது கலக்கத்தைப் போக்குவேன். தலை மாணாக்கன் ஆனதால் தத்துவம் புகல்வேன் என்று பிரணவப் பொருளின் பொருளை உபதேசித்தார்.

**பா அமைப்பு**

நூல் முழுமையும் நேரிசை வெண்பா யாப்பில் அமைந்துள்ளது. பாடல்கள் அனைத்தும் எளிமையும் பொருள் தெளிவும் கொண்டவையாய் அமைந்துள்ளன. ஆகாசம் பட்டு சேஷாசலம் கவித்தொகுப்பைப் போலவும் காளமேகம் பாடல்களைப் போலவும் புகழேந்திப் புலவரின் பாத்தொகுப்புப் போலவும் கற்பதற்கு இனிமை பயக்கும் தொகுப்பாய் அமைந்துள்ளது. வெண்பா படிக்கும் பொழுதே பொருள் விளக்கம் பெறும்படி அமைந்துள்ளது. ஓரெதுகை, ஈரெதுகை, ஓர் மோனை, ஈர்மோனை, இணைமோனை, இணை எதுகை, இயைபு முதலான தொடை நயங்கள் சிறக்கப் பாக்கள் அமைந்துள்ளன.

**உரையமைப்பு**

நூல் முழுமைக்கும் நூலாசிரியரே வெண்பாப் போலவே உரையையும் வரைந்துள்ளார். கருத்து, விளக்கம் என்னும் இரு பொருண்மையில் உரை வரைந்து செல்கின்றார். பாவின் பொருளை முதலில் கருத்து எனச் சுருக்கமாக நான்கடிகளில் சொல்கின்றார். ஒரு சொல்லையோ தொடரையோ எடுத்துக்கொண்டு விளக்கம் என்னும் தலைப்பில் ஓரிரு வரிகளில் எழுதிசச் செல்கின்றார். பொருள் தொடர்புடைய பாடல்களைத் தொகுப்பாய் உரையெழுதும் வழக்கம் உள்ளது.

**நிறைவாகக்**

கன்னியாகுடிக் கந்தபுராண வெண்பா என்னும் நூல் தமிழுக்கும் சைவ மரபுக்கும் துணை செய்யும் நூலாய் அமையும். புராணங்கள் பயில காலச் செலவு செய்யத் தயங்குவோர் இந்நூலினைக் கற்றே அந்நூலின் பயனை அடையலாம். இருபத்தோராம் நூற்றாண்டில் எழுச்சியுடன் தோன்றிப் பரிமளிக்கும் இந்நூலினைக் கற்றால்

*வற்றா வளம்நிறை வெண்ணிலவனன் மாக்கதை*
*கற்றாரும் செற்றாரும் நற்றவமாய்க் - பெற்றாரும்*
*கற்க முனைவாரும் கேட்பாரும் கந்தனது*
*நற்பதம் நாடுவார்நன் கே.*

என்று நூற்பயனைச் சொல்கின்றார்.

## முருகனைப் போற்றிய பிற்காலப் பெண் புலவர்கள்

முனைவர் தாயம்மாள் அறவாணன்
முன்னாள் தமிழ்த் துறைத் தலைவர்
அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகம்
கொடைக்கானல்.

சங்க காலம் முதல் இக்காலம் வரை முருகனைப் போற்றிப் பாடிய புலவர்கள் காலந்தோறும் இருந்தார்கள், இருக்கிறார்கள். திருமுருகாற்றுப்படை என்ற பெரிய நூலை இயற்றியவர் நக்கீரர். முருகன் அவ்வையிடம் சுட்ட பழம் வேண்டுமா சுடாத பழம் வேண்டுமா என்று கேட்க, அவன் அறிவை வியந்து அவ்வை பாடிய தனிப்பாடல்கள் உள்ளன. பல நூல்களைப் பிற்காலப் பெண் புலவர்கள் முருகன் மீது இயற்றியுள்ளனர். வள்ளியம்மன் சோபனம், வள்ளியம்மை திருமணக்கும்மி, திருத்தணிகை மும்மணிக்கோவை, ஸ்ரீ சுப்பிரமணியர் துதி, திருப்புகழ்ச்சிந்து போன்ற பல நூல்களை 1899 முதல் 1943 வரையிலான காலங்களில் வாழ்ந்த பெண் கவிஞர்கள் இயற்றியுள்ளனர். முருகன் மீது பாட்டுப் பாடினர். எனவே அறியப்பெறாத சில பெண் கவிஞர்களையும் அவர்களின் நூல்களையும் பாடல்களையும் அறிமுகம் செய்கிறது இக்கட்டுரை.

### 1. ஆண்டவன் பிச்சை (மரகதவள்ளி)

1899இல் மயிலாப்பூரில் சங்கர நாராயண சாஸ்திரிக்கும் சீதாலட்சுமிக்கும் மகளாகப் பிறந்தவர் மரகதவல்லி. நன்றாகக் கற்ற தந்தையார் தம் மகளுக்குக் கல்வி அறிவு ஊட்டி வளர்த்தார். இளவயதிலேயே தாயார் இறந்துவிட்டார். மரகதத்தைத் தந்தையார் நரசிம்மன் என்ற பெயருடைய உறவினருக்குத் திருமணம் செய்து கொடுத்தார். மரகதம் தன் பாட்டி வழியாகத் திருத்தணி முருகக் கடவுளின் கதைகளை அறிந்தவர். தாய்வீட்டிற்கு வந்த ஒரு நாள் பாட்டியிடம் முருகக் கடவுளின் கதைகளைக் கேட்டுவிட்டுத் தூங்கியபோது கனவு ஒன்று கண்டார். கனவில் அவர் மனத்தை முருகன் கொள்ளை கொண்டார். அவள் வாழ்வு, திறமை பக்தி யாவும் முருகன் அளித்த பிச்சையாகக் கருதத் தொடங்கினார் மரகதம். அதனால் தன்னை ஆண்டவன் பிச்சை என்று பெயர் கொண்டார். பல கவிதைகள் படைக்கத் தொடங்கினார். அதில் ஒரு கவிதை வருமாறு:

*உள்ளம் உருகுதய்யா முருகா உன்னடி காண்கையிலே*
*அள்ளி அணைத்திடவே எனக்குள் ஆசை பெருகுதய்யா - முருகா.*
*(உள்ளம் உருகுதய்யா)*

*பாடிப் பரவசமாய் உன்னையே பார்த்திடத் தோணுதய்யா*
*ஆடும் மயிலேறி முருகா ஓடி வருவாயப்பா*
*(உள்ளம் உருகுதய்யா)*

*பாசம் அகன்றதய்யா, உந்தன் மேல் நேசம் வளர்ந்ததய்யா*
*ஈசன் திருமகனே எந்தன் ஈனம் மறைந்ததய்யா*
*(உள்ளம் உருகுதய்யா)*
*ஆறு திருமுகமும் உன்னருளை வாரி வழங்குதய்யா*
*வீரமிகு தோளும் கடம்பும் வெற்றி முழக்குதப்பா*
*(உள்ளம் உருகுதய்யா)*
*கண்கண்ட தெய்வமய்யா நீயிந்தக் கலியுக வரதனய்யா*
*பாவியென்று இகழாமல் எனக்குன் பதமலர் தருவாயப்பா*
*(உள்ளம் உருகுதய்யா)*

என்ற பாடல் பலரும் அறிந்தது. "உருகுதடா" என்று வரும் சொல்லை "உருகுதய்யா" என்று மாற்றிப் பாடியவர் திரு. டி.எம். சௌந்தரராஜன். எழுதியவர் மரகதவள்ளி என்ற ஆண்டவன் பிச்சையாகும். "முருகன் என் மீது காதல் கொண்டான் என் கனவில் வந்து என் கைகளைத் தொட்டான். என்னை ஆட்கொண்டான். அவனின் அடியாராக என்னை ஏற்றுக் கொண்டான். திருத்தணி முருகனின் கரங்களில் இணைந்து விட்டேன். அவன் என்னைக் கவிஞராக மாற்றினான். தமிழ் மாலைகள் தந்தான். அவன் அருளால் நான் தமிழ்க் கவிதைகளைப் புனையப் போகிறேன். தமிழ்க் கவிஞரான ஆண்டாளை ஆட்கொண்ட அரங்கநாதனைப் போல் நானும் முருகன் மீது கவிதைகள் பாடப் போகிறேன். என்னிடமிருந்து கவிதை சரமாரியாக இயற்கையாக வருகின்றன. இறைவன் என் உள்ளத்தில் சிம்மாசனம் இட்டுள்ளான். அவனே கவிதை படைக்கிறான்" என்று கூறினார் மரகதம். அவர் பெற்றோரும் உற்றார் உறவினரும் வியப்படைந்தார்கள்.

கனவில் கண்டதிலிருந்து மரகதம் முருக பக்தையாகவே வாழ்ந்தார். முருகனையே கணவனாக வரித்துக் கொண்டார். கணவனையும் பிள்ளைகளையும் உறவினரையும் மனதளவில் விட்டுப் பிரிந்தார். அவர் மனம் மட்டும் இறைவன் முருகனோடு இணைந்தே இருந்தது. குழந்தையைக் கவனிக்காமல் முருகன் மீது பக்திப் பாடல்களை மட்டும் எழுதி வைத்தார். உறவினர் அப்பாடல்களை எல்லாம் எடுத்துப் பெட்டியில் வைத்துப் பூட்டி வைத்தனர்.

பல நிகழ்ச்சிகள் நடந்தேறின. குழந்தைகள் பிறந்தன. மரகதம் முருக பக்தையாக வாழ்ந்தாள். கவிதை எழுதினாள். 'முருகா என் கண்ணில் நீ தோன்றமாட்டாயா?' என்று வேண்டி அழுதாள். அப்போது முருகன் தோன்றி, 'என்னை உன் மனத்தில் தேடு. உன் மனக்கண்ணுக்குத் தென்படுவேன்' என்று கூறினான். 1950இல் மரகதம் தன் தோழிகளுடன் திருவண்ணாமலை சென்றபோது சிறுவன் வடிவில் கோயில் வாசலில் காட்சி கொடுத்தது முருகன்தான். நடை அடைத்த நிலையில் தண்டபாணி என்ற சிறுவன் பூசை செய்து பிரசாதம் கொடுத்தான். அது முருகன்தான் என்று மரகதம் கூறினாராம். இரமண மகரிஷியின் அருளும் மரகத வள்ளிக்குக் கிடைத்தது.

இவர் திருத்தணிகை மும்மணிக் கோவை என்ற புத்தகத்தையும் எழுதியுள்ளார். இப்புத்தகம் 1953இல் வெளியிடப்பெற்றது. திருத்தணிகை மும்மணிக்கோவை 1953இல் வெளியிடப்பெற்றது. மொத்தம் 31 பாடல்கள்.

*கேசம் முதல் பாதாந்தம் வீசும் பரஞ் சுடரைப்*
*பாசமற்றார் பார்க்கும் பரம் பொருளை நேசமில்லா*
*நெஞ்சத்தில்காணா நித்திய பராபரன்*
*அஞ்சல் அஞ்சல் என்று அபயம் அளித்தான் அடிமைக்கு* (பா.29)

**2. அலமேலு அம்மாள் (வள்ளியம்மன் சோபனம்)**

வள்ளியம்மன் சோபனம் என்ற நூலை 1915இல் எழுதியுள்ளார் அலமேலு அம்மாள். பாலக்காட்டுப் பகுதியைச் சேர்ந்தவராக இருக்கலாம். 28 பக்கங்களில் 20 கட்டங்களில் வள்ளியைப் பற்றி எழுதியுள்ளார்.

*தேவாதிதேவன் சிறைபிடித்து*
*திருக்கரத்தில் வடிவேல் பிடித்து*
*கானகத்தில் லீலை செய்தது சொல்லி*
*ஆனை முகன் துணை காப்பாமே*

என்று கணபதி துதியை எழுதுகிறார். அலமேலு அம்மாள் சுப்பிரமணியன் செய்த லீலைகளைச் சொல்கிறார். கானகத்தில் வள்ளியைக் கலியாணம் செய்த கதையைக் கவிதை வடிவில் எழுதி வெளியிட்டுள்ளார். முருகன் வள்ளி மேல் மோகம் கொண்டான். கிழ வேடம் பூண்டு வளையல் வியாபாரியாகச் சென்றான்.

வள்ளி: *நாழி உரி தினைகள் தாரேன்*
*நாலிரண்டு வளைகள் தாரும்*

முருகன் பதில்: *நாழி உரி தினை களுக்கெல்லாம்*
*ஒரு வளையும் விற்பதில்லை*

பின் தினை காக்க வனம் சென்றாள் வள்ளி. வடிவேலன் தன் அண்ணனிடம் வேண்டியபடி யானை வரவே அச்சத்தில் வள்ளி கிழவேட முருகனைக் கட்டிப் பிடித்துக் கொண்டாள். கிழ வேடம் தவிர்த்து வள்ளியை மணம் புரிந்தான் முருகன் என்று வள்ளியம்மன் சோபனம் முடிவடைகிறது. கதையைக் கவிதை நடையில் அழகாக எழுதும் ஆற்றல் பெற்றவர் அலமேலு என்பது தெரிகிறது. அவரின் பாடலுக்கு ஓரிரு சான்றுகள் வருமாறு:

பண்டாரக்கிழவனைப் போல்வடிவுகொண்டு
பாசாங்கு கொண்டு வள்ளி யண்டயில்வந்தார்
பாதைதெரியாதேவனம் எங்கும் சுற்றியே
பசியால்வருத்தம் கொண்டு வாடி மெலிந்து
பசிதீர்க்க ஒரு பேரும் இல்லாமலே
எதிர்ச்சயமாய் உன்னை யிங்கே தேடியேவந்தேன்

ஏதானும்கொடுத்து எந்தன் பசிதீரென்றார்
இம்பமுடன் வள்ளியும் ஆலோசித்து
இந்தபண்டாரத்தின் பசிதீரவே
என்னாஹாரத்தை நானும் குடுத்திடலாம்
தெனைமாவும் தேனுமாக பக்குவம் செய்து
ருசியாகக் கொடுத்தார்"

இவ்வாறாக முருகன் வள்ளியைத் திருமணம் செய்த கதையைக் கவிதையில் வடித்தவர் அலமேலு அம்மாள்.

### 3. சஞ்சீவி அம்மாள் (வள்ளியம்மை திருமணக்கும்மி)

1916இல் சஞ்சீவி அம்மாள் எழுதிய வள்ளியம்மை திருக்கல்யாணக்கும்மி என்ற நூல் வள்ளி முருகனை மணந்த செய்தியை உரைக்கிறது. இச்சிறுநூல் பன்னிரண்டு பக்கங்களைக் கொண்டது. வள்ளியின் பிறப்பு முதல் முருகனை மணம் முடிப்பது வரை நல்ல உயர்ந்த கவிதையில் எழுதப் பெற்றுளது.

வேடராஜனின் பெயர் நம்பிராஜன் அவனுக்கு ஏழு ஆண் குழந்தைகள். பெண் குழந்தை இல்லை என வருத்தம் கொண்டான். வள்ளிக் கிழங்கைத் தோண்டி எடுக்கையில் வடிவான பெண் குழந்தை கிடைத்ததும் வள்ளி எனப் பெயர் சூட்டினான். வளர்ந்த அவள் முருகனாம் குமரனையே மணம் புரிவேன் என்று பிடிவாதமாக இருந்தாள். பெற்ற தந்தை, தமையன்மார்கள், "முருகன் உனைனத் திருமணம் செய்ய இயலாது. வேறு ஆடவரை மணம் செய்து வாழ்வாய்" என்று கூறிடவே வள்ளி மறுத்து முருகனையே மணக்க உறுதி பூண்டாள்.

*"கற்புள்ள என்னை சுப்பிரமணியரிடம்
அற்பணம் செய்துவிட்டேன் - அண்ணா
கர்ப்பத்தில் ஊறிய அற்ப மனிதரை
நான் எப்படி மணம் புரிவேன்"*

என்று கேட்டாள் வள்ளி. தோழியருடன் தினைப்புனம் சென்று பரணின் மேல் நின்று பறவை ஓட்டினாள். நாரதர் வருகிறார். முருகனை மணக்கும் தன் எண்ணத்தை உரைக்கிறாள் வள்ளி.

முருகன் கிழ வேடம் கொண்டு பசி எடுக்கிறது என்று வள்ளியிடம் கூற வள்ளியும் தினைமாவு கொடுத்துப் பசியாற்றினாள். 'உன்னை விடேன் பாரடி என்னை வந்து சேரடி' என்று கிழவேட முருகன் கூறினான்.

மங்கை. "அண்ணா" என்று அழைத்திட அங்கே வந்தனர் அண்ணன்மார்கள். முருகன் வேங்கை மரமாய் மாறி நின்றிட்டான்: அண்ணன்மார்கள் சென்றிடவே மறுபடி கிழமுருகன் தோன்றி 'நான் வந்தேன் பெண்ணே' என்று வந்திட்டான். யானை வடிவில் தொந்தி வினாயகரை

வந்திடும்படி சிந்தித்தான் வேலன் மனத்தில். வந்தது யானை புனத்தில். யானைக்குப் பயந்து கிழவன் அருகில் வள்ளி சென்று நின்றாள். அவனும் தன்னை மணப்பாய் என்று உரைத்தான்.

பன்னிரு கையனைத் துதி செய்து, 'பாவி' என்று கிழவரைக் கூறி உயிரை விட நாவைப் பிடுங்கப் போனாள் வள்ளி, கிழவர் வடிவேலராகத் தோன்றினார். சங்கரன் மைந்தனும் மங்கை வள்ளிதனை மணம் புரிந்தார் என்று நூல் முற்றுப் பெறுகிறது.

**4. ஜானகி அம்மாள்**

ஜானகி அம்மாள் 'சுவாமி மலை ஆறுமுகக் கடவுள் ஸ்ரீவள்ளி நாயகி திருமணக்கோலம் என்ற கருத்தில் அமைந்த 'திருப்புகழ்ச் சிந்து' என்ற நூலை இயற்றியுள்ளார். எட்டுப் பக்கங்கள் கொண்ட நூலை 1930இல் ஜானகி அம்மாள் இயற்றியுள்ளார். வலங்கைமான் என்ற ஊரில் பிறந்தவர் ஆசிரியர்.

கிழ வேடம் புனைந்து வள்ளியை மணம் செய்ய வேண்டுதலும் பின் விநாயகர் துணையுடன் வேடம் களைந்து வள்ளியை மணந்தது வரையிலுள்ள நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு நூல் ஆக்கியிருக்கிறார் ஜானகி அம்மாள். எளிய நடையில் அமைத்துள்ளார். ர,ற வேறுபாடு மிகுதியாகக் காணப்பெறுகின்றது. பாடலின் சிறு பகுதி மட்டும் இங்கே தரப்பெறுகிறது.

**திருப்புகழ் மெட்டு**

*சித்தூரில் நம்பிராஜன் பத்தினிமோகினியாளும்*
*புத்திரர் மித்திரரோடு மெத்தவும் வாழ்ந்திருந்தான்*
*ஒருநாள் வேட்டைக்குப் போகிறேன் என்றான்*
*அநேக ஆட்களோடு சென்றான்*
*ஓடி மிக களைத்து மனம் சலித்து*
*தவமுனிவர் என்றவாய் இல்லா முனிவர் ஒரு மானே*
*உற்றுப் பார்த்தார் மிக்க சலித்தார்*
*ஆசைகொண்டு அவர் சேர்ந்தார்*
*ரிஷிகர்ப்பம் ராத்தங்காமல் அரைக்ஷணத்தில்*
*ஒரு மகவை பெற்றுவிட்டு மிகப் பயந்து ஓடியே சென்றது*
*உற்று பார்த்தது அந்த நம்பிராஜன் அப்போ*
*சேற்றில் கிட்டே வந்து வள்ளி குழிதனில் நின்றான்*

**5. பார்வதி சி.எஸ்.**

கேரளப் பாலக்காட்டைச் சேர்ந்த ஆசிரியர் சி.எஸ். பார்வதி 1943இல் 33 பக்க அளவில் துதிமாலையை உருவாக்கியிருக்கிறார். முனிசிபல் ஸ்கூலில் பணியாற்றிய பார்வதி அம்மையார் நூல் சிறியது; யாப்பு அமைப்பில் கவிதை இல்லை. ஆனால் இறைத்துதியாகச் சிறு சிறு பாடல்களை அமைத்திருக்கிறார். கணபதி ஸ்துதி, ஸரஸ்வதி ஸ்துதி, அம்பாள் ஸ்துதி, பண்டரீநாதன் துதி,

ஸ்ரீராமர் ஸ்துதி, சுப்பிரமணியர் துதி என்று தெய்வங்களைத் துதி செய்யும் பாடல்களை இயற்றியுள்ளார். சுப்பிரமணியர் துதியாக 17 பாடல்களைப் புனைந்துள்ளார். ஒவ்வொரு துதிப் பாடலும் இசையுடன் பாடத்தக்கதாக, தாளம் அமைத்து மெட்டுப் போட்டு, பல்லவி, சரணம் அமைத்து இயற்றப் பெற்றுள்ளது. எளிய பாடலாக அமைக்கப் பெற்றுள்ளது. முனிசிபல் பள்ளி மாணவர்களுக்கு இறை வழிபாட்டிற்காக அப்பாடல்கள் இயற்றப்பெற்றவை என்று உணரலாம். சுப்பிரமணிய ஸ்துதிகள் என்ற தலைப்பில் 17 பாடல்கள் குழந்தைகள் மனனம் செய்து பாடவல்ல எளிய தன்மையன. இறைவன் துன்பங்களினின்றும் காப்பவன் என்ற கருத்தில் அமைந்த பல பாடல்களில் ஒரு சான்று:

*கருணையுடன் காத்திடவே*
*தருணமிது அல்லவோ*
*பச்சமயில் மீதிலேறும் பாலசுப்ரமணியனே*
*ஆதியே பரம் ஜோதியே*
*என்னை காப்பது உந்தன் பாரமே*
*சக்திவடி வேலவா உன் திருவடி நான் நம்பினேன்*
*சங்கரர் மைந்தனே சரவணப் பவனே*
*பார்வதி குமார வள்ளி தேவயானை மணாளா*
*ஆனைமுகர்க்கு இளையா ஆறுமுக வேலவா*

முருகனிடம் 'என்னைக் காப்பது உன் பாரமே' என்று இறை நம்பிக்கையோடு பாடப்படுகிறது. சிவகாமி மகன், ஆனை முகனாம் கணபதிக்கு இளையவன், மயில் மீது ஏறி வருபவன், சங்கரனாம் சிவனின் மகன், வள்ளி தேவயானையின் கணவன் என இறைவனின் உறவு முறையை அடுக்கிக் கூறுகிறார் கவிஞர் பார்வதி. எளிய பாடல்கள், புராணக் கருத்துகள், இறை நம்பிக்கை இவற்றை உணர்த்தும் தன்மை கொண்டவை..

## முடிவுரை

பெண் புலவர்கள் சிலர் முருகனைப் புகழ்ந்து பல நூல்களை இயற்றியுள்ளனர். ஆண்டவன் பிச்சை, அலமேலு அம்மாள், சஞ்சீவி அம்மாள், பார்வதி போன்ற பலர் முருக பக்தைகளாக விளங்கினர். திருத்தணிகை மாலை, வள்ளியம்மன் சோபனம், வள்ளியம்மை திருமணக்கும்மி, சுப்பிரமணியர் துதி போன்ற அரிய நூல்கள் இலக்கிய வரலாற்றுக்கு எழுதிய மகளிர் வரலாறாக வாழ்ந்து வந்துள்ளனர்.

# சிலம்பில் சேயோன்

முனைவர் ஜா. திரிபுரசூடாமணி
உதவிப்பேராசிரியர்
இந்துக்கல்லூரி, பட்டாபிராம் 72

இந்தியாவில் தோன்றி வளர்ந்த சமயங்கள் பலவற்றையும் தமிழில் தோன்றிய முதற்காப்பியமான சிலப்பதிகாரத்தில் காணமுடிகிறது.புத்த சமயம், சமண சமயம் இந்து சமயப்பிரிவுகளான சைவம், வைணவம், சாக்தம், முருக வழிபாடு, சூரிய வழிபாடு போன்றவற்றைக் காணமுடிகிறது. காப்பியத் தலைமக்கள் சமண சமயத்தவர்; கோவலன் இறந்ததும் அவன் தந்தைப் புத்த துறவியாகின்றான்; மாதவியும் புத்த துறவியாகின்றாள்; கண்ணகியின் தந்தையோ ஆசிவகர் துறவியாகின்றான். மாதரி போன்றவர்கள் திருமால் வழிபாட்டினராக இருந்தனர். குன்றக் குறவர்கள் முருகனை வழிபட்டனர். முதலிலேயே சூரியனை ஞாயிறு போற்றுதூஉம் ஞாயிறு போற்றுதும்' என வாழ்த்துகின்றார். வேட்டுவர்கள் கொற்றவையை வழிபடுகின்றனர். சோழநாட்டுத் தலைநகரில் இந்திரவிழாவும் நிகழ்ந்தது. மேலும் 'பிறவா யாக்கை பெரியோனாகிய' சிவனைப்பற்றியும் சிலம்பு பகர்ந்துள்ளது.இவற்றில் சேயோனாகிய முருகப்பெருமான் குறித்து இளங்கோவடிகளால் கூறப்பட்டிருக்கும் முருகப் பெருமானின் கோயில்கள், வேல் வழிபாடு, வள்ளியோடு எழுந்தருளியிருக்கும் திருக்கோலம், முருகன் உறையும் திருத்தலங்கள் ஆகியவை இக்கட்டுரையில் இயம்பப்படுகின்றன.

## முருகன் கோவில்கள்

முருகனுக்குரியக் கோயில்கள் சிலம்பு காலத்திலேயே இருந்தன. இளங்கோவடிகள் மூன்று கோவில்களைக் குறிப்பிட்டுள்ளார்.

*'அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோவில்'*
*'வேல் கோட்டம்'*

என்ற இரண்டு கோயில்கள் புகார் நகரிலும்

*'கோழிச் சேவற் கொடியோன் கோட்டம்'*

என்ற கோயில் மதுரை நகரத்திலும் இருந்ததாக சிலம்பு பகர்ந்துள்ளது. இதில் புகார் நகரிலுள்ள அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயில் என்னும்போது ஆறுமுகத்தோடு கூடிய முருகனது திருக்கோலம் என அறியமுடிகிறது. ஆனால் திருவுருவத்தைப் பற்றி முழுமையாக சிலப்பதிகாரத்தின் வழி அறிய முடியவில்லை.

## வேல் வழிபாடு

முருகன் கோவில்கள் சிலம்பில் சொல்லப்பட்டாலும், அக்கோயில்களில் பிரதிட்டை செய்யப் பெற்றிருந்த திருவுருவங்களைப் பற்றி

அறியமுடியவில்லை. இருப்பினும் ஒன்றை மட்டும் அறியமுடிகிறது. அதாவது, 'வேல்கோட்டத்தில்' வேல் பிரதிட்டை செய்திருந்தனர் எனலாம். ஏனெனில் ,இலங்கையிலுள்ள பலமுருகன் கோயில்களிலும் வேல் மட்டுமே உள்ளதைக் காணமுடிகிறது என்பர். முருகன் கோட்டத்தைப் பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் இருந்தாலும் சிலம்பில் சுட்டியுள்ள திருக்கோலங்களோடு கூடிய கோயில்கள் இருந்ததா என்பது சிந்திக்கத் தக்கது.ஏனெனில், திருமுருகாற்றுப்படையில் திருச்சீரலைவாயில் முருகப்பெருமானைப்,

*"பல்கதிர் விரிந்தன் பெருமுக மொருமுக*
*மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்*
*காதவினு வந்து வரங்கொடுத் தன்றேயொரு முக*
*மெஞ்சிய பொருள்களை யேமுற நாடித்*
*திங்கள் போலதிசை விளங்கும்மே யொருமுகஞ்*
*செறுநர்த் தேயத்துச் செல்சமமுருக்கிக்*
*இறுவுகொ நெஞ்சமொடு களம் வேட்டன்றே யொருமுக*
*குறவர் மடமகள் கொடிபோ னுசுப்பின்*
*மடவரல் வள்ளி யொடுநகை யமர்ந்தன்றே யாங்கம்*
*மூவிரு முகனு முறைநவின் றொழுகவி*
*னாரந் தாழ்ந்த வம்பகட்டு மார்பிற்*
*வண்டிகழ் நிறைந்து வசிந்து வாங்கு நிமிர்ந்தோள்"*
(திருமுருகாற்றுப்படை, 90-102)

என, ஆறுமுகக் கடவுளாக முருகன் விளங்குவதை நக்கீரர் குறிப்பிட்டுள்ளார். ஆனால் , இப்பாடல் சங்க காலத்ததுதான் என்று கூறுவதில் கருத்து வேறுபாடு உள்ளது என்பதை நினைக்க வேண்டியிருக்கிறது. மேலும், திருச்செந்தூர் முருகன் கோயிலில் ஆறு திருமுகத்துடன் கூடிய வடிவம் உற்சவ மூர்த்தியாக மட்டும்தான் உள்ளது. கருவறையில் பிரதிட்டை செய்யப்பெற்ற வடிவம் ஒருமுகமும் நான்கு திருக்கைகளும் உடைய முருகப்பெருமான் வடிவமேயாகும். இளங்கோவடிகள் 'அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயில் என்று கூறியிருந்தால் அத்திருக்கோயில் பழமையானதுதானா? என்ற ஐயம் தோன்றும்.

**முருகப்பெருமான் வள்ளியோடு எழுந்தருளிய திருக்கோலம்**

குறக்குலப் பெண்ணான வள்ளியை முருகப்பெருமான் காதலித்து மணந்து கொண்டான். இதனைக் கந்தபுராணம் உள்ளிட்ட பல இலக்கியங்கள் கூறியுள்ளன. சிலம்பில் முருகப்பெருமானும் வள்ளியும் எழுந்தருளியுள்ள திருக்கோலத்தைப் பல இடங்களிலும் கூறப்பட்டுள்ளது. குன்றக்குரவையில் இவ்வடிவத்தைப் பார்க்க முடிகிறது. பொதுவாக, முருகப்பெருமான் வள்ளி தெய்வயானையுடன்தான் காட்சி தருவான். முருகப்பெருமானின் இடப்பக்கம் தெய்வயானையும், வலப்பக்கம் வள்ளியம்மையும் இருப்பர். ஆனால் சிலப்பதிகாரத்தில் குன்றக்குரவையில் முருகப்பெருமான் மயில்மீது வள்ளியோடு மட்டும் எழுந்தருளியுள்ள ஒரு திருக்கோலம் குறிப்பிடப்பட்டுள்ளது. இதனை,

*நீலப் பறவைமேல் நேரிழை தன்னொடும்*
*ஆலமர்ச் செல்வன் புதல்வன் வரும்*

(சிலம்பு, குன்றக்குறவை,78-79)

என்ற சிலப்பதிகார அடிகள் மூலம் அறியலாம். இதில், ஆலமர்ச் செல்வனான சிவபெருமானின் புதல்வனான முருகப்பெருமான் நீலப்பறவையாகிய மயில்மீது நேரிழையாகிய வள்ளியுடன் முருகப்பெருமான் வருவான் எனக் குறிப்பிடப்பட்டு உள்ளது. இதில் தெய்வயானை குறிப்பிடப்படவில்லை. இதே திருக்கோலத்தை இன்னொரு வகையாகவும் இளங்கோ விளக்கியுள்ளார்.

*"கடம்பு சூடி உடம்பிடி ஏந்தி*
*மடந்தை பொருட்டால் வருவ திவ்வூர்*
*அறுமுகமில்லை அணிமயில் இல்லை*
*குறமகளில்லை செறி தோளில்லை*
*கடம்பூண் தெய்வமாக நேரார்"* (சிலம்பு: குன்றக்குறவை,97-101)

இவ்வரிகள் முருகன் அணிமயில்மீது வள்ளி நாச்சியாரோடு ஆறுமுகக் கடவுளாக எழுந்தருளும் கோலத்தை எதிர்மறை வாய்ப்பாட்டில் விளக்குவதாக உள்ளது. இவ்வடிவத்தினை,

*'குறமகள் அவள் எம்குலமகள் அவளொடும்*
*அறுமுக ஒருவ நின் அடி இணை தொழுதேம்'*

(சிலம்பு: குன்றக்குறவை அ-ள் 89-90)

என்ற அடிகளும் உணர்த்துகின்றன.

குறமகளான வள்ளி தங்கள் குலத்தவள் என்ற நிலையில் , குறவர்கள் வழிபட்டிருப்பர். நற்றிணை போன்ற சங்க இலக்கியத்திலும் இந்தச் செய்தியுண்டு. இதற்கு,

*'முருக புணர்ந் தியன்ற வள்ளி போல'* (நற்றிணை பா 82)

என்ற நற்றிணை பாடல் வரியைச் சான்றாகக் கொள்ளலாம். சிலம்பில் வள்ளியோடு உள்ள கோலத்தை மட்டுமே காண முடிகிறது. இத்திருக்கோலம், வள்ளி தெய்வயானையோடு கூடியதாகவோ, ஆண்டிக் கோலத்திலோ அமைந்து உள்ளதினும் வேறானது என்பது நினைக்கத்தக்கது.

மேற்கூறியுள்ள பாடல் வரிகளைக் கூர்ந்து நோக்கும்போது, குறவர்கள் கடவுளாகக் கண்டு மகிழும் ஒருகாட்சியினைக் கொண்டு படைக்கப்பட்டிருக்கலாம் எனக் கருத இடமுண்டு.

முருகன் நீங்காமல் உறையும் இடங்கள்

வேல் கோட்டம் என முருகன் கோயிலைச் சுட்டியுள்ள இளங்கோவடிகள், முருகனின் திருவுருவத்தை, அறுமுகச் செவ்வேள் எனவும், நீலப்பறவையாகிய மயில் மீது, குறமகளாகிய வள்ளியோடு எழுந்தருளி

இருப்பான் எனவும் சுட்டுகின்றார். மேலும் முருகன் உறையும் தலங்களாக, சிலவற்றைச் சிலம்பு பகர்ந்துள்ளது. அதாவது,

*'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்'* (சிலம்பு: குன்றக்குறவை,47-48)

என்னும் அடிகளில், 'செந்தில்', 'செங்கோடு', 'வெண்குன்று', 'ஏரகம்' என்னும் தலங்களை அடுக்கிக் கூறுகின்றார். இவற்றுள் திருச்செங்கோடு தவிர்த்து மற்ற மூன்று தலங்களையும் முருகனின் படைவீடுகளாகக் கூறுவர். செங்கோடு என்ற தலம், நெடுவேள் குன்றத்தைக் குறிக்கும்.

சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்ட பழனி சிலம்பில், குறிப்பிடப்படவில்லை. ஆனால் சங்க இலக்கியங்களில் காணப்பெறாத சில செய்திகள் சிலம்பில் சொல்லப்படுவது இங்கு குறிக்கத்தக்கது. முருகப் பெருமான், சரவணப் பொய்கையில் தாய்மார் அறுவரிடம் பாலுண்டு வளர்ந்த நிலையைச்,

*சரவணப் பூம்பள்ளியறை தாய்மாரறுவர்*
*திருமுலைப் பாலுண்டான்* (சிலம்பு: குன்றக்குறவை,57-58)

எனச் சிலம்பு இயம்புகிறது. இதுமட்டுமல்லாமல், முருகப்பெருமான், குருகுபெயர்க் குன்றம் கொன்ற வீரச் செயலையும், சிவனின் மகன் முருகன் என்பதை, கயிலைநன் மலையிறை மகன் என்ற செய்தியையும் குறிப்பிடுகின்றது.

நிறைவாக, முருகப்பெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டு வளர்ந்த மதம் கௌமாரம். இம்மதம் வளர்ந்த நிலையைச் சிலம்பில் காணமுடியவில்லை. இருப்பினும் சங்க காலத்தினும் வளர்ந்த வளர்ச்சி நிலையைக் காணமுடிகிறது என்பதை, சிலம்பில் சேயோன் என்ற இக்கட்டுரை பகர்ந்துள்ளது என்ற குறிப்போடு இக்கட்டுரை நிறைவெய்துகின்றது.

# திருமுருகாற்றுப்படையில் முருகனின் சிறப்பும் இயற்கைக் காட்சியும்

முனைவர் ஆ. திருமேனி,
உதவிப் பேராசிரியர்,
தமிழ்த்துறை,
பெரியார் அரசு கலைக் கல்லூரி,
கடலூர் -1.

குன்று இருக்குமிடமெல்லாம் குமரன் இருப்பான் என்பார்கள் பெரியோர்கள். முருகன் மலையின் மேல் கோயில் கொண்டுள்ளதால் அம்மலையின் மேல் சென்று முருகனைத் தமிழர்கள் வணங்கி வருகின்றனர். முருகனை மட்டும் வழிபடாமல் கூடவே இயற்கை அன்னையின் அழகினை இரசிக்க ஒருவாய்ப்பு அமைகிறது. அக்காலத்தில் விமானம், இராக்கெட் போன்ற அறிவியல் சாதனங்கள் கண்டுபிடிக்காத பொழுது மலையின் மேல் நின்று இயற்கையின் அழகினை இரசிக்கும் முன்னோர்களின் அறிவு வியப்பூட்டும் செயலாகும். அதன்பின்னர் வழிவழியாக முருகனை வழிப்பட்டு வருகிறோம். அறுபடை வீடுகளின் ஒன்றான திருப்பரங்குன்றம் மீது வீற்றிருக்கும் முருகனின் சிறப்பினையும் இயற்கையின் எழிலையும் இக்கட்டுரையின் வாயிலாக ஆராய்வோம்.

## தமிழ்க்கடவுள்

முருகு என்ற சொல்லுக்கு அழகு, மணம், இளமை, கடவுள்தன்மை என்ற பொருள்கள் உண்டு. திரு.வி.க அவர்கள் தமிழ்க்கடவுளான முருகனை மாறா இளமையும், எல்லாப் பொருளையுங் கடந்தொளிருந் தன்மையும், அழியா அழகும் இறைவனிடத்தில் இலங்குவது கண்டு, அப்பொருள்கள் முறையே உறைதற்கிடம் பெற்றுள்ள முருகன் என்னும் சொல்லை அவ்விறைவனுக்குப் பழந்தமிழ் மக்கள் சூட்டினர்" என்கிறார்.

## முருகனுக்குரிய தமிழ்ப் பெயர்கள்

முருகனுக்குப் பல பெயர்கள் உண்டு. அழகன், முதுமலை அழகு குருநாதா, குமர வடிவேலன், கந்தன், அக்கினிப்பூ, கங்கையில் வளர்ந்த காரணத்தால் காங்கேயன் என்றும், சரவணப் பொய்கையில் தோன்றியதால் சரவணன் என்றும், கார்த்திகைப் பெண்கள் வளர்த்ததால் கார்த்திகேயன் என்றும், கடம்ப மரநிழலில் துயின்றதால் கடம்பன் என்றும், ஆறுமுகம் கொண்டமையின் ஆறுமுகன் என்றும், அழகும் இளமையையும் இருப்பதால் அழகன், குமரன் என்றும், அடியார்களின் உள்ளத்தில் குடிகொண்டதால் குகன் என்றும், விசாக நாளுக்கு உரியவனாகத் தோன்றியதால் விசாகன் என்றும், சிவனுக்கு உபதேசித்ததால் தகப்பன்சாமி, குருமூர்த்தி, சாமிநாதன் ஆகிய பெயர்கள் முருகனுக்கு உண்டு.

**சங்க இலக்கியங்களில் முருகன்**

பழந்தமிழ் நூல்களான பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, மதுரைக்காஞ்சி முதலான நூல்களுள் திருப்பரங்குன்றத்தின் முருகன் உறையும் தலமாகக் குறிப்பிடுகின்றன. அதாவது,

*"பரங்குன்று இமயக் குன்ற நிகர்க்கும்"* (பரி. வரி-8:11)

*"ஒன்னாதார்க் கடந்தடூஉ முரவுநீர் மாகொன்ற*
*வென்வேலான் குன்றின்மேல் விளையாட்டும் விரும்பார்கொல்"*
(கலி. பா-27)

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேற்*
*சீர்மிகு முருகன் தண்பரங் குன்றத்து*
*அந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை"* (அகம்.59:10-12)

*". . . . . . . . . . . . செந்தில்*
*நெடுவேல் நிலைஇய காமர் வியந்துறைக்*
*கடுவளி தொகுப்ப ஈண்டிய*
*வடுவாழ் எக்கர் மணலிலும் பலவே"* (புறம்-55)

திருப்பரங்குன்றம் முருகனுக்குரிய மலையாகும். கடைச்சங்கப் புலவர்களுள் நல்லந்துவனரால் பாடப்பட்ட சந்தனமரங்கள் மிகுந்த அந்த உயர்ந்த மலையின்கண் இனிய பசுமை வாய்ந்த சுனையில் பூத்த மணங் கமழும் செங்கழுநீர் மலரால் பொலிவுடன் காட்சி தரும் அம்மலையின் சிறப்பினை பாடியுள்ளார் மதுரை மருதன் இளநாகன். திருப்பரங்குன்றத்தின் கண் வண்டுகள் மொய்க்கும்படி நீண்ட ஆழமான சுனையில் பூத்த குவளை மலர்கள் இரண்டு ஒன்று சேர்ந்து இருந்ததைத,

*". . . . . . . கூடற் கூடாது*
*பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய*
*ஓடியா விழவின் நெடியோன் குன்றத்து"* (அகம்.149:15-16)

*"வங்கை வினைஞர் அரிபறை யின்குரல்*
*அளிமழை பொழியுந் தண்பரங் குன்றில்"* (மதுரைக். 262-263)

என்னும் வரிகளால் அறியலாம்.

**திருமுருகாற்றுப்படை**

உலகிற்கு ஒளியும் உயிரும் ஊட்டும் கதிரவனை முதற்கண் புகழ்கின்றார் நக்கீரர். ஒளிஉமிழும் ஞாயிறு நீலநிறக் கடலின் மேல் கிளர்ந்தெழுதல் போன்று திருமுருகனும் அவிரும் ஒளியை உடையவனாய் நீலமயில் மீது கோலங்கொண்ட மேனியனாய்த் தூரத்தே தோன்றி ஒளிர்கின்றான். என்பதை,

*உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு*
*ஓவற விமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி* (திருமுருகு. 1-3)

என்னும் வரி இயற்கையின் மீது நக்கீரர் கொண்ட காதல் விளங்குகிறது. கொடியவர்களின் ஆணவத்தை அழித்து பெய்ய வேண்டிய காலத்தே பெய்து, வளஞ்சுரக்கும் மழையைப் போலத் திருவருள் மழைபொழிந்து அவர்களை அவ்வழியினின்று நீக்கி நல்வழி சேர்த்துக் காப்பாற்றுகின்ற கருணை சான்ற பெரிய கைகளையுடையவன் அவன். குற்றமற்ற கற்பினைக் கொண்டொளிரும் தெய்வானை அம்மையாருக்கு கணவன் முருகன் என்பதை,

*உறுநர்த் தாங்கிய மதனுடைய நோன்றான்*
*செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை*
*மறுவில் கற்பின் வாணுதல் கணவன்* (திருமுருகு. 4-6)

என்னும் வரியால் தெய்வானை முருகனின் மனைவியாவாள் என்பது புலனாகிறது. கடல் நீரைக் குடித்து அதனால் கருக்கொண்ட பெரிய மேகம் மின்னல் ஒளி வீசிக் கண்ணைப் பறிக்கும் விண்ணிலே நிரம்பிய மழைநீர்த் துளிகளாய் எங்கணும் பரப்பியது; அது கார்கால மழையை, முதல் மழையைப் பொழிந்தது, கார்கால மழையின் கருணை அன்பால் காடு குளிர்ந்து அதனால் காட்டு மரங்கள் பரப்பின. அக்காட்டின் இடையே இருள் மண்டிக் கிளை தழைத்துப் பரந்திருந்த பெரிய அடி மரத்தையுடைய செங்கடப்ப மரம் தேருருளை போன்ற பூக்களைப் பூத்து நின்றது. அப்பூக்களாற் தொடுக்கப்பட்ட குளிர்ந்த மாலை அசையும் மார்பினையுடையவன் திருமுருகன் ஆவான் என்பதைக்,

*கார்கோள் முகந்த கமஞ்சூல் மாமழை*
*வாள்போழ் விசும்பில் வள்ளுறை சிதறித்*
*தலைப்பெயல் தலைஇய தண்ணறும் கானத்து*
*இருள்படப் பொதுளிய பராரைமரா அத்து*
*உருள்பூந் தண்தார் புரளும் மார்பினன்* (திருமுருகு. 7-11)

என்னும் பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

சூரமகளிர்

பெரிய வளவிய மூங்கில்கள் வானளாவி வளர்ந்திருக்கின்றன. மூங்கில்கள் உயர்ந்து வளர்ந்திருக்கும் மலையிடத்தே சிறு சதங்கை அணிந்த ஒளி நிழற்றும் அடியினையும், திரண்ட காலினையும், வளைந்த இடையினையும், மூங்கிலைப் போன்ற தோள்களையும் உடையராய்ச் சூர மகளிர் வாழ்கின்றனர். அவர்கள் இந்திர கோபப் பூச்சிகளைப் போன்று சாயம் ஏற்றாமலே இயல்பாகவே செந்நிறம் வாய்ந்த அழகிய ஆடைகளை அணிந்துள்ளனர். இதனை,

*மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்*
*கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடிக்*

*கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்*
*கோபத் தன்ன தோயாப் பூந்துகில்*
*பல்காசு நிரைத்த சில்கா ழல்குல்*
*கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பின்*
*நாவலொடு பெயரிய பொலம்புனை அவிரிழைச்*
*சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனி.* (திருமுருகு. 12-18)

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம். நன்கு முற்றமுடித்த குற்றமற்ற கொண்டையிலே பெரிய குளிர்ந்த சண்பகப் பூவைச் செருகி உள்ளனர். செண்பகப் பூவின்மேலே கரிய புறவிதழினையும் அகத்தே துய்யினையும் உடைய பூக்களை மிகுதியாகக் கொண்ட மருதப் பூங்கொத்துகளை இட்டுள்ளனர். இவற்றிற்கும் மேலே கிளையிடத்து அழகுபெற வளர்கின்றனவும், சாய்ந்து நீரின் கீழிடத்து இருப்பனவும் ஆகிய செந்நிற அரும்புகளால் இணைத்து கட்டிய மாலையைக் கொண்டையிலே சூழச் சுற்றியுள்ளனர்.

*துணையோர் ஆய்ந்த இணையீர் ஓதிச்*
*செங்கால் வெட்சிச் சீறிதழ் இடையிடுபு*
*பைந்தாட் குவளைத் தூவிதழ் கிள்ளித்*
*தெய்வ வுத்தியொடு வலம்புரி வயின் வைத்துத்*
*திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்*
*மகரப் பகுவாய் தாழ மண்ணுறுத்துத்*
*துவர முடித்த துகளறு முச்சிப்*
*பெருந்தண் சண்பகம் செரீஇக் கருந்தகட்டு*
*உளைப்பூ மருதின் ஒள்ளிணர் அட்டிக்*
*கிளைக்கவின்று எழுதரு கீழ்நீர்ச் செவ்வரும்பு*
*இணைப்புறு பிணையல் வளைஇ* (திருமுருகு. 20-30)

என்று தளிரையும் மலரையும் காதிலே செருகிக் கொள்வது பண்டைய மரபு. தளிருக்குக் குழை என்ற பெயரும் உண்டு.

மரமேறுதல் தொழிலில் வல்ல மந்தியும் ஏறமுடியாத உயர்ச்சினையுடைய மரங்கள் நெருங்கி நிறைந்த பக்க மலையில், வண்டுகளும் மொய்த்தலில்லாத தெய்வத்தன்மை வாய்ந்த நெருப்புப் போலும் பூவினையுடைய செங்காந்தள் மலரின் பெரிய குளிர்ந்த கண்ணியை விரும்பிச் சூடிய திருமுடியினை யுடையவன் திருமுருகன் ஆவன். இவ்வாறு இப்பகுதியில் சூர மகளிர் தம் செயல்களும் விளையாட்டும் முருகன் விரும்பி அணியும் அடையாளப் பூமாலையாம் காந்தளாங் கண்ணியும் சிறப்புற வருணிக்கப்பட்டுள்ளன என்பதை,

*. . . . . . . . . . . துணைத்தக*
*வண்காது நிறைந்த பிண்டி ஒண்தளிர்*
*. . . . . . . . . . . . . . . . . . . . . .*
*. . . . . . . . . . . . . . . . . . . . . .*

*சுரும்பு மூசாச் சுடர்ப்பூங் காந்தட்*
*பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்* (திருமுருகு. 30-44)

என்னும் பாடலின் வழி அறியலாம்.

**பேய்மகளிரை இகழ்ந்துபேசுதல்**

பேய்மகள் எண்ணெய் தேய்த்துக் கொள்ளாமல் காய்ந்துபோன மயிரினையும் ஒன்றுக்கொன்று வரிசையில் பொருந்தாத பிறழ்ந்த பற்களையும், சுழலுகின்ற கருவிழியினையுடைய பசிய கண்களையும், கண்டாரை அச்சத்தாற் கொல்லும் கொடிய பார்வையினையும் உடையவளாய் இருக்கின்றாள். அவளின் செவித்துளை சந்து போன்றிருத்தலினால் கூகைகள் ஆண்டு வந்து தங்கி உறைகின்றன. கொடிய பாம்புகள் அவளின் காதணிகளாகத் தொங்கி அவள் தன் பெரிய கொங்கைகளைத் தாக்கி வருத்துகின்றன. அவள் வயிற்றிடம் சருச்சரையையுடையதாயுள்ளது. அவளின் விரைந்த கொடிய நடை அச்சத்தைத் தோற்றுவிக்கின்றது. அவள் குருதி தோய்ந்த கூர்மையான நகத்தையுடைய கொடிய விரல்களால், போர்க்களத்திலே தான் கண்களைத் தோண்டி விழுங்கிய புலால் நாற்றம் மிகுந்து வீசும் பெரிய தலையைத் தன்னுடைய ஒளி சுடர்விடும் வளையலை அணிந்துள்ள பெரிய கையிலே தாங்கி, திருமுருகன் அடியார் துயர் அகல அவர்க்குப் பரிந்து பகைவர் மேற் சென்று, அவர்களைக் கொன்று குவித்த அடுகள வெற்றியைப் புகழ்ந்து பாடிக் கொண்டு தோள்களைப் பெயர்த்துப் புலாலை உண்ணும் வேட்கை மிகுந்து அங்காந்த வாயளாய்த் துணங்கை என்னும் கூத்தினை ஆடா நின்றாள். இவ்வாறு அஞ்சுவரு பேய்மகளின் அடுகளத் துணங்கைக் கூத்தை நக்கீரர் பெருமான் நவின்றுள்ளார் இதனைப்,

*பார்முதிர் அப்பனிக்கடல் கலங்கவுள் புக்குச்*
*சூர்முதல் தடிந்த சுடரிலை நெடுவேள்*
*உலறிய கதுப்பிற் பிறழ்பல் பேழ்வாய்ச்*
. . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . .
*அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி*
*அவுணர் நல்வல மடங்க* (திருமுருகு. 45-59)

என்னும் பாடலடிகள் மூலம் அறியலாம்.

முருகப் பெருமானின் சிவந்த திருவடிகளைத் தேடிச்செல்லும் தலைமை சான்ற உள்ளத்துடனே நன்மையையே நாடிச் செல்லும் குறிக்கோளுடனே முருகன் விரும்பி எழுந்தருளியிருக்கும் இடத்திற்குச் செல்லுதலை நீ விரும்பினாயேயானால் முன்னர் எடுத்த பல பிறவிகளிலும் தேடிய நல்ல மனத்திலுள்ள விருப்பமானது இனிதே நிறைவேறும்படி நீ எண்ணிய செயலின் பயனை இப்பொழுதே பெறுவாய்" என்று 'சேவடி படரும் செம்மல் உள்ளம்' முன்னிய வினையினை இன்னே பெறுதலைக் கூறுகின்றார் நக்கீரர் என்பதைக்,

. . . . . . . . . . . கவிழிணர்
மாமுதல் தடிந்த மறுவில் கொற்றத்து
எய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்
சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நம்புரி கொள்கைப் புலம் பிரிந்து உறையும்
செலவுநீ நயந்தனை யாயின் பலவுடன்
நன்னர் நெஞ்சத்து இன்னசை வாய்ப்ப
இன்னே பெறுதிநீ முன்னிய வினையே. (திருமுருகு. 59-66)

என்னும் அடிகள் வாயிலாக உணரலாம். மலையின் அடிவாரத்தே வளம் பொருந்திய வயல்கள் உள்ளன. நீர்வளமும் நிலவளமும் செறிந்து அரியசேறு ஆழ்ந்து காணப்படுகின்றது. சேற்றிடையே முள்ளையுடைய தாமரை மலர்களில் வண்டுக் கூட்டங்கள் இரவு முழுவதும் இனிமையுடன் தங்கி நின்று, வைகறையில் மலர்ந்து காணும் நெய்தல் மலர்களில் தேனை உறிஞ்சிக் குடித்து அவற்றின் ரீங்காரம் இடையறாது கேட்டுக் கொண்டிருக்கும் குன்று திருமுருகன் விரும்பி உறையும் திருப்பரங்குன்றாகும் இதனை,

இருஞ்சேற்று அகல்வயல் விரிந்துவாய் அவிழ்ந்த
முள்தாள் தாமரைத் துஞ்சி வைகறைத்
கட்கமழ் நெய்தல் ஊதி எற்படக்
கண்போல் மலர்ந்த காமரு சுனைமலர்
அஞ்சிறை வண்டின் அரிக்கணம் ஒலிக்கும்
குன்றமர்ந்து உறைதலும் உரியன். (திருமுருகு. 72-77)

என்னும் பாடல் அடிகள் வாயிலாக அறியலாம்.

முடிவுரை

கொடியவர்களின் ஆணவத்தை அழித்து வளஞ்சுரக்கும் மழையை சரியான நேரத்தில் பொழியச் செய்வதுபோல திருவருள் மழையைப் பொழிந்து பக்தர்களை நல்வழிப்படுத்துவர் முருகப்பெருமானாவான். திருப்பரங்குன்றத்தின் கண் வண்டுகள் மொய்க்கும் நீண்ட ஆழமான சுனையில் பூத்த குவளை மலர்கள் இரண்டு ஒன்று சேர்ந்து இருந்தமையை இயற்கையின் அழகினை நக்கீரர் பாடல் மூலம் காணமுடிந்தது. திருப்பரங்குன்றத்தின் கண் வாழும் சூரமகளின் அழகினை நக்கீரர் படம்பிடித்துக் காட்டியது மூலம் மலையில் வாழும் பழங்குடிகளின் நிலையைத் திருமுருகாற்றுப்படையின் மூலம் அறியலாம்.

## பள்ளு இலக்கியங்களில் முருக வழிபாடு

க. திலகவதி,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக் கல்லூரி,
வாலாஜாபேட்டை, வேலூர் மாவட்டம்.

நம் பழந்தமிழ் மொழி பன்னெடுங்காலத் தொன்மைச் சிறப்பு வாய்ந்தது. பண்பாட்டுச் சிறந்தது. பல மொழிகளின் தாயாய் விளங்கிய நம் தமிழ் மொழிக்கு மேலும் பெருமை சேர்ப்பது அதன் இலக்கிய, இலக்கண வளங்களாகும்.

தொல்காப்பியம், சங்க நூல்களின் வழியே நம் தமிழ் மக்களின் தொன்மையை அறிய முடிகிறது. அகம், புறம் என்னும் வாழ்வியல் கோட்பாடுகளோடு அறம், பண்பாடு, வழிபாடுகள் போன்ற விழுமிய நெறிகளையும் சமூகக் கூறுகளாகக் கொண்டு நம் தமிழ் மக்கள் வாழ்ந்துள்ளனர்.

நம் தமிழ் மக்களின் வாழ்வியல் கூறுகளில் வழிபாடு முக்கிய இடத்தை வகிக்கிறது. இவ்வழிபாடுகள் அவர்களின் சமூக ஒருங்கிணைப்பையும், பண்பாட்டு நெறியையும் வெளிப்படுத்தும் விழுமியக் கூறுகளாகும். திருமால், சிவன், கொற்றவை, இந்திரன் முருகன் போன்ற கடவுளர்கள் பண்டைய தமிழர்களின் வாழ்வியல் வழிபாட்டிற்குரிய, நம்பிக்கைக்குரிய முதன்மைக் கடவுளர்களாவர். இதனைத் தமிழ் இலக்கியங்கள் வாயிலாக அறிய முடிகிறது.

சங்க இலக்கியம் தொடங்கி எண்ணற்ற இலக்கியங்கள் கடவுள் வழிபாடுகளை எடுத்துரைத்து பக்தி நெறியைத் தழைத்தோங்கச் செய்கின்றன. பல்லவர் காலத்தில் பக்தி இலக்கியங்கள் வளர்ச்சி பெற்றதைத் தொடர்ந்து, சிற்றிலக்கியங்கள் தோன்றலாயின. இவ்விலக்கியங்களிலும் பக்தி இலக்கியங்கள் தொடர்ந்தன. பிள்ளைத்தமிழ், பள்ளு போன்ற இலக்கியங்களின் வாயிலாக இதை நாம் அறியலாம். பள்ளு நூல்கள் சிவன், திருமால், முருகன் போன்ற கடவுளர்களைப் பாட்டுடைத் தலைவர்களாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன. முருகக் கடவுளைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு திருமலை முருகன் பள்ளு, வையாபுரிப் பள்ளு, இலங்கைப் பள்ளு நூலாகிய கதிரைமலைப்பள்ளு போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும்.

### முருகன் பெயர் விளக்கம்

*'கைபுனைத் தியற்றாக் கவின்பெறு வனப்பு'*

என நக்கீரர் இயற்கையைப் புகழ்வது, அழியாத் தன்மையான மணம், இளமை, கடவுட் தன்மை, அழகு என்னும் இயல்பை வெளிப்படுத்துகிறது. இவ்வியல்புகளையெல்லாம் 'முருகு' எனத் தமிழ் மக்கள் வழிபட்டனர் என்பதை,

"பண்டைத் தமிழ் மக்கள், இயற்கைவழி வாழ்வு செலுத்தி அதற்கு அடிப்படையாயுள்ள அழகுண்மை கண்டு அவ்வழகால் இயற்கை அழகு

பெறுவது நோக்கி, அவ்வியற்கையை வழிபட்டு, முழுமுதற் பொருட்டு அழகு என்னும் பொருள்பட முருகன் என்னும் பெயரணிந்தார்கள்." என்னும் திரு.வி.க. கூற்றின் மூலம் உணரலாம். முருகன் என்னும் பெயர் 'முருகு' என்பதிலிருந்து கிடைக்கப் பெற்றது. 'முருகு' என்பதின் பொருள் 'இயற்கையைக்' குறிப்பதாகவும் கொண்டு, முருகன் என்னும் சொல் வழக்கு எனலாம்.

**திருமலை முருகன் பள்ளு**

தென்பாண்டி நாட்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் சிறந்த திருத்தலமாகத் திகழும் திருமலை என்னும் நகரில் கோவில் கொண்டருளிய முருகப் பெருமானைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப் பெற்ற நூல்.

*"செம்பொற் சிலம்பும் பரமென்ன ஆட்டினோய்*
*செங்கீரை ஆடி அருளே*
*திருமலை எனுங்காவி திருமலைக் குமரனே*
*செங்கீரை ஆடி அருளே"*

என்றமைந்த சேத்திரக் கோவை பிள்ளைத்தமிழ்த் தொடரில் திருமலை முருகன் சிறபித்துக் கூறப்பட்டிருத்தலைக் காணலாம்.

**அ) துதிப் பாடல்**

*"பெண்ணானைக் காந்தனைப் பேரானைத் தம்பியைப் பெய்முகிலூர்*
*விண்ணானை யானைச் சடானன மூர்த்தியை வீணர்தம்பால்*
*நண்ணானைக் காவித் திருமலை யானைமுந் நான்குதிருக்*
*கண்ணானை என்னிரு கண்ணிற்கண் டேன்வினை கண்டிலனே"*

(திரு.பள். 101)

என்றமைந்த பாடல் வரிகள் முருகப் பெருமானிடத்து கொண்ட மிகுதியான பக்தியை எடுத்தியம்பும் துதிப்பாடலாகும்.

**ஆ) பக்திப்பயிர்**

வயலில் நெல் விதைப்பது முதல் முளைப்பது வரையிலான செயல்கள் அனைத்தும் பரமகுருவாக விளங்கும் முருகனின் அருளால்தான் என்பதை,

*"கையகல மனநிலச்சஞ் சிதக்கா டெற்றிக்*
*கருணைபெருஞ் சிற்பரையேர் பூட்டிப் பூண்ட*
*மையகல அருட்கொழுவால் உழுதா னந்த*
*வாரிவிட்டுச் சிவவிதையை வித்தி நாளும்*
*ஐயனெங்கள் ஆறுமுகக் குருவசது அனகால்*
*அனுபூதிப் பயிரிட்டு இன்பம்விளைத் தாற்போல்*
*செய்யில்நடும் நாற்றெல்லாம் கிளைகொண் டோங்கிச்*
*செம்பவளம் போல்விளைந்து சிறந்த தன்றே"*

(திரு. பள். 156)

என்ற பாடல் உணர்த்துகின்றது.

இ) அகத்துறைப் பாடல்

திருமலை முருகன் பள்ளு நூலில் அகத்துறைப் பாடல்களும் அணி செய்கின்றன. திருமலை முருகனிடத்துக் காதல் கொண்ட பெண்ணொருத்தி வண்டைத் தூது விடுகிறாள்.

*"கைக்கு வளைக்குலங் காணாள் அரைக்குக் கலைமறந்தாள்*
*இக்கு வளைக்கும் ஒருவனுக் கேங்கினள் என்றருளச்*
*சிக்கு வளைக்குடம் பற்றியுண் டான்மெய்த் திருமருகன்*
*மைக்கு வளைக்குன் றுடையான்முன் போய்ச் சொலும் வண்டினமே"*

(திரு. பள். 109)

எனவரும் பாடலில் அகப்பொருண்மை சிறந்து விளங்குகிறது. முருகன் மீது தலைவி காதல் கொண்டாள். இதனால் உடல் மெலிந்து அவள் வளை கழன்றது. நினைவு மறந்த நிலையில் அரையில் ஆடை அவிழ்ந்ததையும் மறந்தாள். கரும்பு வில் வளைக்கும் கடவளாகிய மன்மதன் செயலுக்குத் துன்பமுற்றாள். திருமால் மருமகனாகிய முருகனிடத்து தலைவி துயரைக் கூறுங்கள்! என்று வண்டினத்தை நோக்கித் தலைவி தூது விடுவதாக அமைந்த இப்பாடல் அகப்பொருண்மைக்குச் சான்றாகும்.

கதிரை மலைப் பள்ளு

கதிர்காமத்திலே எழுந்தருளி இருக்கும் சுப்ரமணிய சுவாமி மீது பாடப்பட்ட பள்ளு கதிரை மலைப் பள்ளுவாகும். ஈழத்தில் தோன்றிய முதல் பள்ளு நூலாகும். கதிரையப்பர் பள்ளு எனவும், கதிரைமலைப் பள்ளு எனவும் அழைக்கப்படும் இந்நூல் 96 பிரபந்த வகைகளில் ஒன்றாகும். இந்தியா, இலங்கை போன்ற நாடுகளில் எல்லாத் தரப்பு மக்களாலும், பண்டைய காலந்தொட்டு இன்றுவரை அநுதினமும் வணங்கித் துதிக்கும் தெய்வம் முருகக்கடவுள். வடமொழியாகிய சமஸ்கிருதத்திலும் தென்மொழியாகிய தமிழிலும், கிளைத்து பிரிந்த ஏனைய மொழிகளிலும் சுப்ரமணிய பெருமானின் பிறப்பு, வெற்றி, அருள் போன்றவை விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றது.

தமிழின் முதல் இலக்கண நூல் செய்த அகத்திய முனிவர்க்கு முத்தமிழ் உபதேசம் செய்தவர் குமரக் கடவுள் என்பர். 'குன்றமெறிந்த குமரவேல்' என முதல் சங்கத்திலிருந்து தமிழாய்ந்தாருள் ஒருவரென்று இறையனாரகப் பொருளுக்கு உரைகண்ட நக்கீரர் குறிப்பதோடல்லாமல், திருமுருகாற்றுப்படையில், *'நூலறிபுலவ', 'பலர் புகழ் நன்மொழிப் புலவரேறே'* எனவும் முருகப் பெருமானைத் துதிக்கின்றார். 'கதிர்' என்னும் பதம் 'ஒளி' என்னும் பொருள் கொள்வதால், 'கதிர்காமம்' என்பதற்கு "ஒளியாய் விளங்கும் மலை" எனலாம். நக்கீரர்,

*'ஒவற விமைக்கும் விளங்கவிர் ஒளி*

எனவும், கச்சியப்ப சிவாச்சாரியார்,

*'சோதிப்பிழைப்பாதோர் மேனியாகி'*

என்றும், அருணகிரிநாதர்,

*'ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத் துச்சியின்*
*மேலொளியில் விளைநடதோரானந்தத் தேன்'*

என முருகவேள் ஒளியாய் விளங்குவதாகக் கூறுகின்றனர்.

**வையாபுரிப் பள்ளு**

முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் முத்தனாய முருகனைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்டு பாடப்பெற்ற நூல் வையாபுரிப் பள்ளுவாகும். சதக இலக்கியங்கள் நாட்டின் பெயரால் பெயர் பெற்றதைப் போன்று வையாபுரி நாடு என நாட்டின் பெயரால் வையாபுரிப் பள்ளு எனப் பெயர் பெற்றது. இன்றைய பழனி நகர்ப்பகுதி சங்க காலத்தில் கொங்கு நாட்டின் ஒரு பகுதியாக இருந்தது. கொங்கு நாட்டின் உட்பிரிவுகளில் வையாபுரி நாடு அல்லது திருஆவினன் குடிநாடு ஒன்றாகும். திருஆவினன்குடி என்பது இன்றைய பழனி நகர்ப் பகுதியாகும்.

18-ஆம் நூற்றாண்டில் குமார விஜயகிரி வேலச் சின்கோவையன் என்பவர் பழனி பாளையக்காரராக இருந்தார். இவர் இயற்றிய நூலே வையாபுரிப் பள்ளு. சங்க காலப் புலவரான நக்கீரர் தமது திருமுருகாற்றுப்படையில் முருகனின் மூன்றாவது படைவீடாகத் திருஆவினன் குடியைப் போற்றியுள்ளார். மேலும், முருகனைத் தரிசித்து நன்மை பெறத் தேவர்களும் முனிவர்களும் வருவதாகத் திருமுருகாற்றுப்படையில் குறிப்பிடுகிறார். இப்பள்ளு இலக்கியம் மு( கப் பெருமானுக்காகப் பாடப்பட்ட பள்ளு ஆதலால், இதில் இடம் பெறும் பள்ளியர்கள் வையாபுரி, பழனி பள்ளிகளாக காட்டப்பெற்றுள்ளனர். 'மழை காலூன்றல்' என்ற பகுதியில்,

*"தடையில் லாமலே சசிம ணாளனை*
*விடைகொண் டெழுந்து படியுங்கார்*
*சண்முகத்து வேலி னுமின்னி"* (வை.ப. 54)

என்ற பாடல் வரியில் முருகப் பெருமானின் வேலினைப் போல் மின்னல் ஒளிர்ந்தது எனச் சுட்டியதில் ஆசிரியரின் முருக பக்தி உணர்வு வெளிப்படுவதை அறிய முடிகிறது.

**முடிவுரை**

தமிழ் நாட்டில் பாலக் குழந்தையாக அவதரித்து, கோலக் குமாரனாகவும், சாலக் கிழவனாகவும் அடியவர்க்குக் காட்சி கொடுத்தருளி அறுபடை வீட்டிலும் மட்டுமின்றி, தமிழ்நாட்டிலுள்ள ஒவ்வொரு கிராமத்திலும் கோயில் கொண்ட தெய்வம் முருகக் கடவுள் மக்களின் வாழ்வியலுக்கேற்ற நம்பிக்கைக்குரிய கடவுளாக விளங்குகிறார். இவ்வாறு நன்கறியப்பட்ட தெய்வமான முருகப் பெருமானின் திருவுருவப் பெயருக்கு ஏற்ற வகையில் அழகுடன் விளங்கும் முருகு நூல்களில் பள்ளு இலக்கியங்கள் தமிழ் இலக்கிய உலகில் அற்புதப் படைப்பு என்றால் அது மிகையாகாது.

## திருமுருகாற்றுப்படை -நூலாய்வு

முனைவர் பி. தீபா
உதவிப்பேராசிரியர்
கல்வியியல் மற்றும் மேலாண்மையியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

பத்துப்பாட்டு என்ற பெயரே, பத்து நூல்களின் தொகுப்பு என்பதைச் சுட்டிக்காட்டுகிறது. ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் தனிவெண்பாக்கள் சில உள்ளன. அவை பிற்காலத்தே நூலினைப் படித்து ஒன்றியவரால் பாடப்பட்டு, சேர்க்கப்பட்ட பாடல்கள் எனலாம்.

*முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை*
*பெருகு வளமதுரைக் காஞ்சி - மருவினிய*
*கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்*
*பாலை கடாத்தொடும் பத்து*

என்னும் வெண்பா இப்பத்துப் பாட்டுகளின் அமைப்பு முறையைத் தெரிவிப்பதாகும். இவை நெடிய பாடல்கள். ஐந்து பாடல்கள் ஆற்றுப்படைகள். அதில் முதல் பாட்டாக நிற்பது திருமுருகாற்றுப்படை.

### ஆற்றுப்படை

ஆறு என்பது வழி; படுப்பது-செலுத்துவது. ஆசிரியர் தொல்காப்பியனார்,

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்ற பயன்எதிரச் சொன்ன பக்கமும்*

என்று ஆற்றுப்படையின் இயல்பைப் பொதுப்படக் கூறினார்.

### திருமுருகாற்றுப்படையின் தனிச்சிறப்பு

தமிழர்களுக்கு முருக பக்தி அதிகம். முருகனைச் செந்தமிழ்க் கடவுள் என்பர் ஆன்றோர். ஐந்திணைகளுள் ஒன்றான குறிஞ்சித்திணை மலையும் மலைசார்ந்த இடமும் ஆகும். அக்குறிஞ்சித் திணையின் தெய்வம் முருகன். தமிழர்கள் முருகப் பெருமானை மிக உயர்ந்த இடத்தில் வைக்கவேண்டும் என்று விரும்பினார்கள் போலும்! ஆதலால், அம்முருகனைக் குறிஞ்சித்தலைவன் என்றும் மலைக்கிழவோன் என்றும் போற்றினர். எனவே முருகாற்றுப்படை பத்துப்பாட்டின் முதலில் அமைந்தது எனலாம். சிவப்பிரகாச சுவாமிகள்,

*பாவுள், முந்துற வந்து நிற்கும்*
*முருகாற் றுப்படை மொழிந்தான்*

என்று சொல்கிறார்.

"கடைச்சங்க நூல்கள் முப்பத்தாறு. அவற்றில் முதலில் நிற்பது திருமுருகாற்றுப்படை. தத்துவங்கள் முப்பத்தாறில் முதலில நிற்கும் சிவ தத்துவம்போல் அது விளங்குகிறது." என்பார் கி.வா. ஜகந்நாதன் அவர்கள். முருகன் வழிபாட்டில் முருகனின் திருவுரு நலமும், திருவருள் நலமும், அவன் உறையும் திருப்பதிகளின் நலமும், வழிபடும் திறமும், வழிபாட்டின் இறுதியில் அப்பெருமான் வந்து அருள் வழங்கும் திறமும் நன்கு விளக்கப்படும். மேலும் பரிபாடலிலும் முருகன் திருமால் மீதான பக்திப் பாடல்கள் இருந்தாலும் திருமுருகாற்றுப்படையே நீண்ட பக்தி இலக்கியமாக அமைந்துள்ளது. இதன் சிறப்பை உணர்ந்து சைவசமயச் சான்றோர்கள் இதனைச் சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் பதினோராம் திருமுறையில் சேர்த்து அமைத்துள்ளனர். திருமுருகாற்றுப்படை என்பது ஒருவகையில் பிற ஆற்றுப்படை நூல்களினின்றும் வேறுபட விளங்குவதாக உள்ளது. பெரும்பாலும் யார் பயன்பெற முயல்கிறார்களோ அவர்கள் பெயரால் ஆற்றுப்படைக்குப் பெயரிடுவது வழக்கம்.

பாணனுக்கு வழிகாட்டினால் பாணாற்றுப்படை. பொருநனுக்கு வழிகாட்டினால் பொருநர்ஆற்றுப்படை. புலவருக்குக் கூறுவது புலவராற்றுப்படை. அந்த முறையில் பெயர் சொல்வதனால் புலவராற்றுப்படை என்றே இந்தநூலுக்குச் சொல்ல வேண்டும். சில உரையாசிரியர்கள் இதை அவ்வாறே குறித்திருக்கிறார்கள். இருப்பினும் இந்த நூல் முருகனின் திருவருள் வேண்டி, திருமுருகாற்றுப்படை என்றே பெயர் வழங்கப்பட்டு வந்துள்ளது. காரணம் யாதெனில் முருகாற்றுப்படையில் வீடுபேறு கருதிய சான்றோர் ஒருவரை, முருகன் திருவருளால் வீடு பேற்றிற்குரிய திருவடி ஞானம் கைவரப் பெற்ற சீவன் முத்தர் ஒருவர், முருகன் பால் ஆற்றுப்படுத்துகின்றார். வீடுபேற்றுக்கு அமைந்த திருவருள் ஞானத்தை நல்குதலில் தலைசிறந்து நிற்கும் குரவன் முருகப்பெருமான். ஆதலால், ஆற்றுப்படைக்கு இடனாகின்ற வகையில் முருகப்பெருமான் திருப்பெயரால் இந்த ஆற்றுப்படை திருமுருகாற்றுப்படை என வழங்கப்படுகின்றது. இந்த நூல், குறவர்கள் முருகனை வழிபடும் இடத்தை "முருகாற்றுப் படுத்த உருகெழு வியனகர்" (244) என்று குறிக்கின்றது.

ஆசிரிய யாப்பில் 317 அடிகளால் அமைந்துள்ளது இப்பாடல். பிற ஆற்றுப்படை நூல்களில் உள்ளது போல இதில் கலைஞரின் வறுமை நிலை பற்றிய வருணனைகளைக் காண இயலாது.

நக்கீரர்

இதனைப் பாடியவர் மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரனார். இவர் கடைச்சங்கத்தில் இருந்த நாற்பத்தொன்பது புலவர்களில் சிறந்தவராக விளங்கினார். இவரே பத்துப்பாட்டில் உள்ள நெடுநல்வாடையையும் இயற்றியவர். பதினோராம் திருமுறையில் நக்கீர தேவநாயனார் பாடியதாகப் பத்து நூல்கள் உள்ளன. அதில் திருமுருகாற்றுப்படையைத் தவிர பிறநூல்கள் சங்க கால நக்கீரர் பாடியதல்ல என்று ஆராய்ச்சியாளர்கள் சொல்வார்கள் என்று கி.வா. ஜகந்நாதன் குறிப்பிடுகின்றார்.

### திருமுருகாற்றுப்படை பிறந்த கதை

திருமுருகாற்றுப்படை தோன்றியதற்குக் காரணமாக ஒருகதை உண்டு. அந்தக் கதையில் வரும் நிகழ்ச்சிகள் மதுரையிலும், காளத்தியிலும், திருப்பரங்குன்றத்திலும் நிகழ்ந்ததாகக் காணப்படுகின்றன. அதனால் திருவிளையாடற் புராணத்திலும், திருப்பரங்குன்றப் புராணத்திலும், காளத்திப் புராணத்திலும் நக்கீரர் திருமுருகாற்றுப்படை பாடிய வரலாறு இடம்பெறுகின்றது. ஒவ்வொரு புராணத்திலும் சில வேறுபாடுகள் உள்ளன. ஆனால் நக்கீரர் சிவபெருமானுடைய சாபத்தைப் பெற்று அதனை நீக்கிக் கொள்ளும் பொருட்டுக் கைலாச யாத்திரை சென்றார் என்றும், இடையில் ஒரு மலைக்குகையில் அடைப்பட்டு முருகப்பெருமான் மேல் திருமுருகாற்றுப்படை பாடி விடுதலை பெற்றார் என்றும், பின்பு காளத்திமலை சென்று கைலாச தரிசனம் செய்து சாபத்தினின்றும் விடுதலை பெற்று மீண்டும் மதுரையை அடைந்தார் என்றும் உள்ள செய்தி பொதுவானதாக அந்நூல்களில் காணப்படுகின்றது. கதைக்கு ஆதாரமான செய்தி சிறியது. இருந்தாலும் புலவர்கள் தங்கள் கற்பனை வளத்தினால் விரிவாகப் பெருக்கிச் சொல்லியிருக்கிறார்கள்.

### உதய ஞாயிறு

நூலைத் தொடங்கும் புலவன் மங்கலச் சொல்லில் தொடங்குவது வழக்கு. மங்கலச் சொற்கள் பலவற்றில் 'உலகம்' என்பது முக்கியமான சொல். பாரத நாட்டுப் பண்பாடே உலகம் எல்லாம் வாழவேண்டும் என்பதாகும். தமிழ் இலக்கியங்கள் பலவும் உலகம் என்ற மங்கலச் சொல்லால் தொடங்குகின்றன. சூரியன் கீழ்க்கடலில் உதயமாகிறான். அவன் உலா வரும்போது உலகமே மகிழ்கின்றது. செஞ்சுடர்ப் பிழம்பாக உள்ளான். அதனால் சூரியனை உவமையாகக் கொண்டு நக்கீரர் முருகனாம் செவ்வேளின் பெருமையை முதலில் குறிப்பிடுகின்றார்.

*உலகம் உவப்ப வலன்ஏற்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு*
*ஓவற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி*

என்று நக்கீரர் உவமை நலம் தோன்றப் பாடுகின்றார். இதிலிருந்து புலவரின் உலகளாவிய சிந்தனையை உணரலாம். மேலும் இயற்கை அழகில் நக்கீரர் மிகுந்த ஈடுபாடுடையவர் என்பதையும் அறியலாம்.

### முருகாற்றுப்படையின் கருப்பொருள்

இந்நூலின்கண் முதலில் முருகப்பெருமானுடைய தலைமைத் தன்மையின் சிறப்பும் பிறகு திருவுருவச் சிறப்பும் அப்பெருமானை வழிபட்டுத் தேவமகளிர் ஆடும் சிறப்பும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. திருப்பரங்குன்றத்துப் பெருமையும் பிறகு திருச்சீரலைவாயில் என்னும் தலத்தில் உள்ள அப்பெருமானுடைய ஆறுமுகங்களும் பன்னிரு கரங்களும் கூறி அப்பெருமானின் ஐந்தொழில் நடத்தும் திறமும் கூறப்பட்டுள்ளன. திருவாவினன்குடியில் முனிவர்

தேவர் முருகனை வழிபடும் திறம் தெரிவிக்கப்படுகிறது. திருவேரகத்தில் இரு பிறப்பாளர் முருகனைப் போற்றும் சிறப்பும் பேசப்படுகிறது. குன்றுகள் தோறும் முருகப் பெருமானுக்கு வேலன் ஆடும் வெறியாடலும் பிற செய்திகளும் அழகுற விரித்து ஓதப்பெற்றுள்ளன. இறுதியில் பழமுதிர்ச்சோலையில் உள்ள மலைக்கிழவோனின் மேன்மை பேசப்படுகிறது.

**விழுமிய பெறலரும் பரிசில்**

இத்திருமுருகாற்றுப்படையில் திருவருள் ஞானம், "விழுமிய பெறலரும் பரிசில்" (294, 295) எனப்படுகிறது. முருகனை அணுகினால் கிடைக்கும் பயன் எதுவோ அதுதான் பரிசில்.

உலகிலுள்ள மக்களை அணுகினால் கிடைப்பன பொன்னும் பொருளும்; ஆடை அணிகலன்கள் முதலியன. இவை அனைத்தும் அழியும் தன்மையுடையன. முருகன் தரும் பரிசிலை யாரும் தரமுடியாது. அது எல்லாவற்றிலும் உயர்ந்த பரிசில். வேறெங்கும் பெறமுடியாத பெறலரும் பரிசில். எனவேதான் நக்கீரர் அதனை 'விழுமிய பெறலரும் பரிசில்' என்கிறார். சீவன்முத்தியே அப்பரிசில். அதாவது உடம்பு உள்ளபோதே முத்தியின்பத்தை நுகர்ந்து வாழ்வது சீவன் முத்தியாகும். உடம்பை விட்டபிறகு அடைவது விதேக முத்தி. முருகன் தன்னை அணுகி வழிபட்டோனுக்கு உடம்புடன் கூடிய சீவமுத்தியைத் தந்தருளுவான் என்கிறார் நக்கீரர். நச்சினார்கினியர் அப்பரிசிலைக் "கந்தழி" என்கிறார். 'கந்தழியாவது ஒரு பற்று மற்று அருவாய் தானே நிற்கும் தத்துவம் கடந்தபொருள்' என்று கூறியுள்ளார். கந்து - பற்றுக்கோடு; கந்தழியாவது சார்பினால் தோன்றாது, சார்பிறந்து நிற்கும் தூய பரம்பொருள் என்பதாகக் குறிப்பிடுவர். பரம்பொருளை நல்குதலாவது, அதற்குரிய ஞானத்தைப் பெறுவதாம்.

**சொற்சுவை**

முருகு என்ற சொல்லுக்கு 'அழகு' என்று ஒரு பொருளும் உண்டு. அதற்கேற்பச் சொற்சுவையும் பொருட்சுவையும் நிரம்பியதாக நூல் அமைந்துள்ளது. இயற்கையழகில் மிகுந்த ஈடுபாடு கொண்ட நக்கீரர் நூலின் தொடக்கத்தில் கந்தனைக் கதிரவனோடு உவமித்து மகிழ்ந்தார். அடுத்து, "கைபுனைந் தியற்றாக வின்பெறு வனப்பு" உடையவர்கள் தேவமகளிர் என்றும் குறிப்பிடுகின்றார். திருப்பரங்குன்றத்தின் வளம் பற்றிக் கூறும்போது அழகான வருணனையைக் கூறுகின்றார். "சேற்றில் முளைத்த செந்தாமரையில் தேன்பருகச் சென்றவண்டு அதில் திளைத்துக் கிடந்தது. தாமரை இரவில் குவியவே, அதில் சிக்கிக்கொண்டது. பொழுது புலர்ந்ததும், தாமரை இதழ்கள் விரிய அவ்வண்டு வெளியேறி நெய்தல் ஊதி சுனையில் மலர்ந்த குவளை மலரைச் சுற்றி ஒலித்தது. இத்தகு இயற்கை வளம் உடையது திருப்பரங்குன்றம்" என்று வருணித்துள்ளார். இதன் மூலம், உயிர்கள் அறியாமை என்னும் சேற்றில் விழும், மனைவி மக்களிடத்துப் பற்றுகொண்டு அகப்பற்றும் புறப்பற்றுமாகிய தளையில் பிணிப்புண்டு அல்லல்படும். அவனருளால்

அத்தளையிலிருந்து நீங்கி எழுந்தால், இளமை, அழகு, தெய்வத் தன்மை பொருந்திய முருகனைக் கண்டு பேரின்பத்தில் திளைக்கலாம் என்னும் தத்துவப் பொருளையும் உட்கிடக்கையாக்குகின்றார்.

இறைவனாம் முருகப்பெருமானைத் துதித்திடும் வகையில், அவன் புகழ்களை எடுத்தோதும் தன்மை அழகுற அமைந்துள்ளது.

*நெடும்பெரும் சிமயத்து நீலப் பைஞ்சுனை*
*ஐவருள் ஒருவன் அங்கை யேற்ப*
*அறுவர் பயந்த ஆறமர் செல்வ*

என்று தொடங்கி,

*சூர்மறுங் கறுத்த மொய்ம்பின் மதவலி*
*போர்மிகு பொருந, குரிசில்*

என்பது முடிய உள்ள தொடர்கள் முருகனைப் பரவுவோர் சொல்லிப் போற்றிடக் கூடிய புகழுரைகள்.

**முடிவுரை**

பண்டைத் தமிழரின் வாழ்வியல் நெறிகளையும், வழிபாட்டு முறையையும் தெரிவிக்கும் ஒப்பற்ற நூல் திருமுருகாற்றுப்படை, இயற்கை எழிலோடு இறையுணர்வையும் இணைத்துக் கூறும் நூல். மனக்கவலை தீர்க்கும் மாமருந்து எனப் பெரியோர்கள் இதனைப் போற்றிப் புரக்கின்றனர். பக்திச் சுவையும் கவியின்பமும் ஒருசேர வழங்கிடும் கலைப்பொக்கிஷம்! முருகனை அவனுறையும் இடங்களில் கண்டு, பேரின்பத்தில் திளைத்துத் தமிழின்பம் நுகர்வோமாக!

*நக்கீரர் தாமுரைத்த நன்முருகாற்றுப் படையைத்*
*தற்கோல நாடோறுஞ் சாற்றினால் - முற்கோல*
*மாமுருகன் வந்துமனக் கவலை தீர்த்தருளித்*
*தான்நினைத்த வெல்லாந் தரும்.*

## சங்க கால முருகன் வழிபாட்டில் புழங்குப் பொருட்கள்

ர. தீபா,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
மன்னர் சரபோஜி அரசு கல்லூரி,
தஞ்சாவூர் - 613005.

### சங்க காலம்

உலக மொழிகளுள் தொன்மையானதாகவும் முதன்மையானதாகவும் விளங்குவது தமிழ் மொழி ஆகும். தமிழ் இலக்கிய இலக்கணங்கள் தொன்மையானவை; பண்பட்டவை; வரலாற்றுச் சிறப்புமிக்கவை. இந்தச் சிறப்பு மிக்க இலக்கியங்களுள் சங்க இலக்கியங்கள் மிகவும் குறிப்பிடத்தக்கவை ஆகும். சங்க காலத்தில் பல்வேறு இடங்களில் பல்வேறு புலவர்களால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பு எட்டுத்தொகை இலக்கியங்கள் ஆகும். இவை சங்ககால மக்களின் வாழ்க்கையையும் வரலாற்றையும் பண்பாட்டையும் பழக்க வழக்கங்களையும் பறைசாற்றுகின்றன.

தமிழ்மொழியின் பேச்சு வழக்கில் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்னும் பொருளில் பாட்டும் தொகையும் எனும் வழக்குள்ளது. இதன்படி பத்துப்பாட்டு முதலில் அமையினும் காலத்தால் எட்டுத்தொகையே முந்தையது ஆகும். எட்டுத்தொகை என்பது தனிமனிதப் படைப்பன்று; பலர் பல காலங்களில் பல பொருள் பற்றிப் பாடிய நூல்களின் தொகுப்பு. சங்க இலக்கியங்களில் தமிழ்க் கடவுளான முருகனைப் பற்றியும் முருகச் சடங்குகள் - வழிபாட்டுக்குரிய பொருட்களைப் பற்றியும் செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் பல இன்றைய காலத்திலும் காணப்பெறுகின்றன.

### திணைக்கோட்பாடு

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நிலம் நான்காகப் பகுக்கப்பட்டது. குறிஞ்சியும் முல்லையும் திரிந்து பாலைநிலம் தோன்றுகின்றது. ஒவ்வொரு நிலத்திற்கும் ஒவ்வொரு முதன்மை கடவுள் உண்டு என்பதைத் தொல்காப்பியர்,

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"* (தொல்.பொருள்.5)

என்கிறார். திருமாலின் காத்தலைக் கொண்ட காடாகிய இடமும் முருகவேளின் காத்தலைக் கொண்ட உயர்ந்த மலையாகிய இடமும், இந்திரனின் காத்தலைக் கொண்ட வயல் சூழ்ந்த மருத நிலமும், வருணனின் காத்தலைக் கொண்ட கடல் சார்ந்த இடமும், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று வகைப்படுத்தப்பட்டுள்ளன.

அகத்திணை என்பன ஏழு; அவற்றுள் பெருந்திணையும் கைக்கிளையும் ஒழிந்த திணை ஐந்து வகைப்படும். அவற்றுள் பாலைத்திணைக்குத் தனிநிலம் இல்லை. இதனைத் தொல்காப்பியர்,

*“அவற்றுள்*
*நடுவண் ஐந்திணை நடுவணது ஒழியப்*
*படுதிரை வையம் பாத்திய பண்பே”* (தொல். பொருள்.2)

என்று கூறுகின்றார். மேற்கூறப்பட்ட ஐந்து திணையுள் நடுவென்று சொல்லப்பட்ட பாலைத் திணையொழியக், கைக்கிளை பெருந்திணைக்கு நடுவாகி நின்ற ஐந்திணைகளும், கடல் சூழ்ந்த உலகம் பகுக்கப்பட்டிருக்கின்ற இயல்பாகும். நடுவண் ஐந்திணை - முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் என்பனவாகும்.

தோற்றத்தைத் தரும் மணல் மேடுகள் பொருந்திய ஊரில் உள்ள அகன்ற நீர்த்துறையிடத்தே நேரிய முட்டுவாயையுடைய முன்கையைப் பிடித்துத் தெய்வமகளிரைச் சுட்டிச் சொல்லிய உறுதி மொழிகள் துன்புறுத்தின. தலைவியின் களவுக் காதல் அலராலும், உடல் வேறுபாட்டாலும் அறியும்போது அந்தவேறுபாட்டிற்குக் காரணம் முருகனே என்று நம்பிக் கட்டுவிச்சி மூலமும் வேலன் மூலமும் குறிபார்த்து அறிந்து வெறியாட்டை மேற்கொண்டனர். இதற்குச் சான்று பகரும் விதமாகப் பின்வரும் பாடல்,

*“தோடமை செறிப்பின் இலங்குவளை நெகிழக்*
- - - - - - - - - - - - - - - - - - - - - -
*கிளவியின் தணியின் நன்று”* (நற்.282)

என்று வெறியாட்டுக் குறித்து விளக்குகின்றது. தலைவியின் வளையல் கழலுவதும், உடல் மெலிவதும் இன்னபிற மாற்றங்களும் தலைவன் பிரிவினால் ஏற்பட்டனவாகும். இதனை வேலனால் வந்தது என்று மாறாகக் கருதிய தாய் வெறியாட்டிற்கு ஏற்பாடு செய்ததாகக் குறிப்பிடப்படுகிறது.

**முருக வழிபாட்டில் புழங்குப் பொருட்கள்**

சங்ககால மக்கள் தமிழ்க் கடவுளான முருகப் பெருமானை வழிபடும்போது சில பொருட்களைக் கொண்டு தெய்வங்களை வழிபடுகின்றனர். முருகனை வழிபடுவதற்குச் சில பொருட்களையும் முருகன் சில பொருட்களை வைத்து இருந்தமையையும் சங்ககாலம் முதல் இக்காலம் வரை அறிய முடிகிறது.

**காந்தள் மலர், வேல்**

முருகப் பெருமான் தனது தலையில் காந்தள் மலர்களைச் சூடி உள்ளார். அக்காந்தள் மலர்கள் சிவந்த நிறமுடையன என்றும் வேல் உடன் கூடியவன் முருகன் என்றும் கூறும் கருத்தை,

*"மந்தியும் அறியா மரன் பயில் அடுக்கத்துச்*
*அரும்பு மூசாச் சுடர்பூங் காந்தள்,*
*பெருந்தண் கண்ணி மிலைந்த சென்னியன்*
*பார்முதிர் பனிக்கடல் கலங்க உள்புக்குச்*
*சூர் முதல் தடிந்த சுடர் இலை நெடுவேல்"* (திரு.42-46)

என்ற அடிகள் உணர்த்தும்.

**வெறியாட்டு**

முருகப் பெருமானைத் துதித்துப் பெண்கள் வெறியாடினர் என்பதை,

*"வெண்போழ் கடம்பொடுகடி இன்சீர்*
*ஐது அமை பாணி இரீஇ கைபெயரா*
*செல்வன் பெரும் பெயர் ஏத்தி வேலன்*
*வெறிஅயர் வியன்களம் பொற்ப வல்லோன்"* (அக.98:16-19)

என்ற அடிகள் உணர்த்தும். கைவளையல்கள் நெகிழ்ந்ததை அறிந்து முருகனது செயலால் நேர்ந்தது என்று எண்ணி கட்டுவிச்சியை அழைத்து அன்னை வெறியாடுதலைக் கருதினள். மகளிர் அழகு பண்டு போல் சிறக்குமாறு தெய்வத்தை ஏத்தினள். அதனால் முருகக் கடவுளைத் துதித்து வெறியாடுதலை மேற்கொண்டால் என்ன நிகழுமோ எனத் தலைவி வருந்தியது கூறப்படுகிறது.

வேலன் வெறியாடிய இடம் எல்லாம் செந்நெல்லின் வெண்ணிறப் பொரி சிதறிக் கிடந்தது போன்று மணல் மேடுகள் காணப்படும் என்பதை,

*"நனைமுதிர் புன்கின் பூத்தாழ் வெண்மணல*
*வேலன் புனைந்த வெறிஅயர் களம் தொறும்*
*செந்நெல் வான்பொரி சிதறி யன்ன*
*எக்கர் நண்ணிய எம்ஊர் வியன்துறை"* (குறுந்.53:2-5)

என்பதால் அறியலாம். மகிழ்ச்சி தருவதற்குரிய தலைவனே நீர்த்துறையின் முன்னிடத்துள்ள அரும்பு முதிர்ந்த புன்கமரத்தின் மலர்கள் உதிர்ந்து கிடக்கின்ற வெண்மணற் பரப்பு, வேலன் வெறியாடிய இடந்தோறும் செந்நெல்லின் வெண்ணிறப் பொறி சிதறிக் கிடந்தாற் போன்ற இவ்வடிகளில் மலைகளிலேயே வாழ்ந்து பழகிய குரங்குகள் கூட ஏறி அறியாத உயர்ந்து, வளர்ந்த மரங்கள் நிறைந்த அந்த மலைச்சரிவில், வண்டுகள் வந்து மொய்க்காத நெருப்புச் சுடர்போலச் சிவந்த நிறமுடைய காந்தள் மலர்கள் நிறையப் பூத்திருக்கும், சிவந்த காந்தள் மலர்களால் ஆன பெரிய மாலையைத் தலைமாலையாய் அணிந்த திருமுடி உடையவன் முருக பெருமான். அவனுடைய கூரிய

இலைபோலும் வடிவமுடைய ஒளிவிடும் நெடுவேல் என்கின்றனர். முருகப்பெருமான் காந்தள் மலர்களைத் தலைமாலையாகவும், இலைவடிவ வேலைக்கொண்டவர் என்பனவற்றை அறியமுடிகின்றன.

**மலர் தூவுதல்**

தாங்கள் செய்த தவறுகளை மன்னிக்க சினம் கொண்ட முருகபெருமானை மலர்தூவி வழிபடுவர் என்பதைப் பரிபாடலில்,

*"இடு துனிகை ஆறாஎன் துயர் கூரச்*
*கடும் இறை; ஆற்றிசின், அடிசேர்ந்து சாற்று மின்*
*மிக ஏற்றும் மலர் ஊட்டுதும் அவி*
*கேட்டுதும் பாணி எழுதும் கிணை முருகன்*
*தான் தொழு தன் பரங்குன்று"* (பரி.78-82)

என்ற அடிகள் விளக்கும். செய்த தவற்றை இறைவன் தண்டிப்பதற்கு முன் முருகப்பெருமானின் திருவடியை அடைந்து அவனை வணங்கி அப்பெருமானது, சினத்தைப் பொறுத்தருளவேண்டித் திருப்பரங்குன்றத்தில் உள்ள முருகன் திருவடியில் மலர்தூவியும் இசைப்பாடல்கள் பாடியும், கிணைப்பறையினை முழங்கியும் வழிபட்டனர். சங்ககால மக்கள் முருகனுக்கு மலர்தூவியும் கிணைப்பறை அடித்தும், இசைப்பாடல்கள் பாடியும் வழிபட்டு உள்ளனர்.

**வீரக்கழல்**

முருகப் பெருமான் குறிஞ்சி நிலத்தலைவனாக விளங்கினார் என்பதையும் வீரக்கழல் அணிந்தவர் என்பதையும் பொதிய மலையின் தலைவன் என்பதையும் அகநானூற்றடிகள் விளக்கும்.

*"வண்டுபடத் ததைந்த கண்ணி ஒண்கழல்*
*உருவக் குதிரை மழவர் ஓட்டிய*
*முருகன் நாற்போர் நெடுவேள் ஆவி"* (அக.1-3)

என்ற அடிகளில் ஆவி என்பவன் பொதினி மலைக்குத் தலைவன்; வீரக் கழலையும், கண்ணியையும் உடைய அவன் குதிரைப் படையையுடைய மழவர்களை வெற்றி கொண்டவன் என அழைக்கின்றனர். முருகப் பெருமானைப் போன்று வீரக்கழலையும் உடையவன் தலைவன் ஆவான்.

**முருகனை அலங்கரித்தல்**

முருகனை அலங்கரிப்பதற்கு, அழகிய துகிலையும், பூக்களையும், வாசனைப் பொருட்களையும் அவரின் கருவிகளையும் வைத்து அலங்கரித்து வழிபடுகின்றனர் என்பதை,

*"தேம்படு மலர், குழை, பூந்துகில், வடிமணி,*
*ஏந்து இலை சுமந்து; சாந்தம் விரைஇ*
*விடை அரை அசைத்த, வேலன், கடிமரம்"* (பரி.17:1-3)

என்பதால் அறியலாம். அடியவர்கள் தேன் பொருந்திய மலர், தளிர் பூத்தொழில் அமைந்த துகில், வடித்தமணி, ஏந்திய இலைவடிவினதாகிய வேல் ஆகியன சுமந்தவராய் வருவர். அங்ஙனம் வரும் அடியவர்கள், வேலன் சந்தனம் தெளித்து ஆட்டின் கிடாய் அடியிலே கட்டப்பட்டிருப்பதும் முருகவேள் பூசைக்கு உரியதுமான கடம்ப மரத்தைத் தம் உரையாலே புகழ்வர்.

முருகனுக்குரிய சேவற்கொடியுடன் மணப்பொருட்களையும், நறுமணப் புகையையும், கோல் நெருப்பையும் எடுத்துச் செல்வர் முருகனை வழிபடுவர்.

*"பரவினர் உரையொடு பண்ணிய இசையினர்*
*விரிமலர் மதுவின் மரம் நனை குன்றத்து*
*கோல் எரி, கொளை, நறை, புகை, கொடி, ஒருங்கு எழ"* (பரி.174-6)

அடியவர்களுள் கோல் நெருப்பும், இசைக் கருவிகளும், மணப்பொருட்களும், நறுமணப் புகையும் முருகனுக்குரிய சேவற்கொடியும் ஏந்துவாரும், ஒருங்கே உடன்வருவர்.

**முடிவுரை**

சங்ககாலம் முதல் இக்காலம் வரை முருகனை வழிபடுதற்கும், முருகனை அலங்கரிப்பதற்கும் மலர், வேல் முதலான பொருட்களை மக்கள் பயன்படுத்துகின்றனர். மக்கள் முருகன் வழிபாட்டில் மலர், கருவிகள், வாசனைப் பொருள், மணப்பொருட்கள் எனப் பல பொருட்களைப் புழங்குகின்றனர்.

# தமிழும் ஆறும்

முனைவர் ஆ. துரைராஜ்
வருகை விரிவுரையாளர், தமிழ்த்துறை
பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி - 620 023.

பண்டைத் தமிழரின் வழிபாட்டில் முதன்மையான இடம் பெற்ற முருகன் வழிபாடு பற்றித் தொல்காப்பியர் "சேயோன் மேய மைவரை உலகம்" - என்று சுட்டுகின்றார். சேயோன் என்பதற்கு இளையவன் என்ற பொருள் உள்ளது. இளமை எங்கெல்லாம் உள்ளதோ அங்கெல்லாம் அழகு நிறைந்து விளங்கும். மைவரை உலகம் என்பது மழை மேகம் சூழ்ந்த மலைப்பகுதியைக் குறிப்பிடுகின்றது. மலையும் மலை சார்ந்த பகுதியும் குறிஞ்சித்திணை எனப்படும். குன்று இருக்கும் இடமெல்லாம் குமரனாகிய முருகன் உறைகின்ற இடம் என இலக்கியங்கள் பகர்கின்றன. மக்கள் தோன்றிய காலமுதல் தங்களது கருத்துகளைப் பரிமாற்றம் செய்வதற்கும் மனித உறவுக்கும் பாலமாக அமைவது மொழி ஆகும். ஒரு சமுதாயத்தின் பண்பாடு, கலாச்சாரம், இலக்கியம், வரலாறு போன்ற அனைத்திற்கும் மொழி மிக இன்றியமையாததாகிறது. மனித உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பை அறிவதற்கு மொழியும் இறை உணர்வும் தேவையாகிறது என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

முருகனும் தமிழும்

தமிழ்மொழி என்றும் இளமை மாறாத மொழியாக இருப்பதுபோல எம்பெருமான் முருகனும் எப்பொழுதும் இளமையோடு இருப்பதாகக் கருதப்படுகிறது. தமிழும் முருகனும் ஒன்றே என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. முருகு + அன் = முருகன். முருகு என்பதற்கு அகில், அழகு, தேன், இளமை, கள், இளமை, குமரன், வாசனை, வெறியாட்டாளன் என தமிழ் மொழி அகராதி (ப. 1192) பொருள் தருகிறது. தமிழ் மொழியின் உயிர் எழுத்துக்கள் பன்னிரண்டாகும். முருகப்பெருமானின் தோள்கள் பன்னிரண்டாகும். முருகு என்ற சொல் மூன்றெழுத்து. தமிழ் என்ற சொல்லும் மூன்றெழுத்து தமிழ் என்ற சொல்லும் தமிழில் வல்லினம், மெல்லினம், இடையினம் என்ற மூன்று இனம் உண்டு முருகு என்ற சொல்லிலும் மூவினத்தையும் காணலாம். மு - மெல்லினம், ரு - இடையினம், கு - வல்லினம் எனவே தமிழையும் முருகனையும் பிரிக்க முடியாது. அதுமட்டுமல்லாது முருகனின் ஒவ்வொரு திருமுகத்திலும் மூன்று கண்களாக மொத்தம் பதினெட்டு கண்களைக் கொண்டுள்ளான் அதைப்போலத் தமிழில் மெய்யெழுத்துக்கள் பதினெட்டு ஆகும்.

முருகவேளின் முகங்கள் ஆறாகும். தமிழில் இன எழுத்துக்கள் ஆறாகும். வல்லினம், மெல்லினம், இடையினம் ஆகியவை ஆறாறு

எழுத்துக்களைக் கொண்டு விளங்குவதைக் காணலாம். ஆறு என்றால் வழி, தழுவுதல் எனப் பொருள்படும். முருகப்பெருமானை வணங்குபவர்களுக்கு நல்லவழி கிடைக்கும் என்று பொருள் தருகிறது. ஆறுமுகம் தொழிற்பெயராகும். முருகனுக்கு ஆய்தம் வேலாகும். பிற கடவுளிடம் இவ்வாறு ஒரு ஆயுதம் இல்லை என்பது போலத் தமிழில் ஆயுத எழுத்து வேல் வடிவில் அமைந்திருக்கும். ஆய்த எழுத்தைப் போன்ற வடிவம் வேறு எந்த மொழியிலும் இல்லை எனலாம்.

**சிரம் ஆறு உடையவன்**

'சிரமாறுடையான் - சிரம் ஆறு உடையவன் முருகப்பெருமானைக் குறிக்கின்றது. சிரமாறுடையவன் - மாறுபட்ட சிரத்தை உடையவன் என விநாயகப்பெருமானைக் குறிக்கின்றது. சிரம் ஆறுடையான் - திருவரங்கப் பெருமானைக் குறிப்பதாகும். சிரம் ஆறு உடையவன் - தலையில் கங்கை நதியைக் கொண்டவன் சிவபெருமான்' என்பதைச் செய்குத்தம்பி பாவலர் தமது பாடலொன்றில் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். சிவனுக்கு ஐந்து தலைகளாக ஈசானம், வாமதேவம், தத்புருஷம், அகோரம், சத்யோசாதம் என்றும் உமாதேவியின் ஒரு முகம் சேர்ந்து ஆறு முகமாக பிறந்துள்ளான் முருகன் என்பதைப் பண்டைய இலக்கியங்கள் வழி உணரலாம். தமிழ்த்தெய்வமாகிய முருகன் தமிழ் வடிவமாக விளங்குகிறான். முருகன் தமிழ்க்கடவுள். முருகனே தமிழ்மொழியை முதன்முதலில் அகத்தியருக்கு அறிவுறுத்தினான் என்பது பண்டைய வரலாறாகும். தந்தையாகிய ச் வபெருமானுக்குப் பிரணவப் பொருளைத் தமிழ் மொழியிலேயே உபதேசமும் செய்தார் முருகப்பெருமான் என்பதைக் கந்தபுராணம் மூலம் அறியமுடிகிறது.

**தமிழ் இலக்கியத்தில் முருகன்**

முருகப்பெருமான் தமிழர்களின் தெய்வம் என்பதற்குச் சங்க நூல்களே சான்றாகும்

'மென்தோள் நெகிழ்த்த செல்லல் வேலன்' (குறுந். 111)
'முருகயர்ந் துவந்த முதுவாய் வேல' (குறுந். 362)
'மடவை மன்ற வாழிய முருக' (நற். 34)
'அணங்கு என உணரக்கூறி வேலன்' (நற். 322)
'வேலன் வெறிஅயர் வியன்களம்' (அகம். 182)
'மணிமயில் உயிரின மாறாவென்றிப்' (அகம். 12)
பிணிமுக வூர்தி ஒண்செய் யோனும்' (புறம்)
'முருகு ஒத்தியே முன்னியது முடித்தலின்' (புறம்)

போன்ற பாடலடிகள் தமிழ்க்கடவுள் முருகன் என்பதற்கு உதாரணமாகும்.

**முருக அவதாரம்**

நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை அடக்கவும் தர்மத்தை நிலைநாட்டவும் இறைவன் யுகந்தோறும் திருஅவதாரம் , செய்கின்றான்.

இராவணனை அடக்க ராமன், கம்சனை அடக்குவதற்குக் கண்ணன், சூரனை வெல்வதற்கு வேலன் இப்படியாக இறைவன் பல வடிவங்களை எடுத்துள்ளான். கலியுகக் கடவுள் கந்தன் ஆவான். அவன் விரும்பி எழுந்தருளியிருக்கும் படைவீடுகளோ ஆறு: அந்த ஆறையும் நினைத்தால் ஆறுமே மனம் என்கிறது பண்டைய இலக்கியமாகிய திருமுருகாற்றுப்படை. ஆறுபடை கொண்டு விளங்கும் ஆறுமுகப்பெருமான் ஆறுமுகங் கொண்டு ஆயிரக்கணக்கான கோவில்களில் எழுந்தருளி நம்மைக் காத்தருள்கின்றார்.

இருள் படைத்த உலகம் ஒளி நிறைந்து விளங்கக் கதிர் விரித்து ஒளி தருகிறது ஒரு திருமுகம். சூரிய, சந்திர, அக்னி தேவர்களுக்கு ஒளிதரும் திருமுகம் நமது அறியாமையைப் போக்கும் அறிவுக் கதிர்களாகவும் விளங்குகின்றது. அன்பர்கள் ஏற்றுக்கொள்ளும்படியாக இசைந்து பொருந்தி இனிய தோற்றமளித்து மகிழ்ந்து அன்புடையோர்க்கு வரம் தந்தருள்கிறது வேலவனின் இரண்டாவது இன்முகமாகும். வேதமந்திர விதிக்கு இணங்கும் விதியிலிருந்து வழுவாது நடைபெறும் வேள்விகளைக் காப்பது கந்தனின் கருணைமிகும் மூன்றாம் திருமுகமாகும். நம்மால் உணர முடியாத ஐயப்பாடுகளை உணர்த்தி, அறிவுக்கு எட்டாத தகவல்களை விளக்கி அருள் புரியும் ஞான பண்டிதனின் அறிவு நிலவு பொழியும் நான்காம் திருமுகம் அண்டிவந்த அடியார்க்கும் அன்பர்க்கும் அந்தணரின் வேள்விகளைக் காப்பதற்கும் வீரத்தை விளங்க செய்யும் ஐயனின் வெற்றியான ஐந்தாம் திருமுகம். திருமுகன் தெய்வானை, வள்ளியம்மை என்னும் கிரியா சக்தி, இச்சா சத்தியர்களைக் கொஞ்சி மகிழ கோடி சூரியஒளி காட்டும் அழகுமுகம் ஆறாவது திருமுகமாகும். இவ்வாறு ஆறு திருமுகங்களைப் பெற்ற முருகப்பெருமான் பன்னிரண்டு திருக்கரங்களோடு நீலக்கடல் போல் விரிந்த தோகையுடைய நீல மயில்மீது விரும்பி எழுந்தருளி நம்மைக் காக்கின்றார்.

நாம் ஆணவத்தை அடக்கி, மனதை ஒடுக்கி மெய்யுருகிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி, ஓம் முருகா என்று ஒருமுறை அந்நாமத்தைச் சொன்னால் போதும் முருகப்பெருமான் மனம் குளிர்ந்து தனது அருட்பார்வையை நம் தலைமீது வைத்துப் பிரம்மனின் கையெழுத்தையே அழித்து விடுகிறான். நாம் வணங்க வேண்டியது அவனது தாளை ஆகும். அவன் அருள் பாலிப்பது நமது தலையை ஆகும். முருகன் நம் உள்ளத்தில ஒருமுறை குடிபுகுந்து விட்டால் அவன் என்றென்றும் நம்முடனேயே இருந்து விடுகிறான். அவனைப் பிரிக்க முடியாது. அவன் பிரியவும் மாட்டான் என்பதை உணரலாம்.

## சங்க இலக்கியம்

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நெடுங்காலம் தமிழ்நாட்டில் தமிழ்ச் சங்கம் தோன்றி வளர்ந்து வந்துள்ளது. சங்கத்தில் வளர்ந்த சங்கத்தமிழ், பாண்டிய அரசர்களால் வளர்க்கப்பட்டது. தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம் என்று முச்சங்கமாக அமைந்ததாகும். இச்சங்கத்தில் புலவர்கள் பலர் இருந்து தமிழை ஆராய்ந்தார்கள். தாங்களே பல நூல்களை இயற்றியதோடு பிற புலவர்கள் இயற்றிய சிறந்த நூல்களையும் ஆராய்ந்து

அரங்கேற்றம் செய்து தமிழை வளர்த்துள்ளனர். தமிழ் நூல்கள் அத்துனையும் சங்கத்தினால் ஏற்றுக்கொள்ளப்பட்ட பின்பே வெளிவந்துள்ளதையும் அறியலாம். இக்காரணத்தினால் தமிழைச் சங்கத்தமிழ் என்று கூறுவது வழக்கமாக உள்ளது.

தமிழர்களுக்கு எப்போதுமே கடவுள் பக்தி மாறாமல் இருந்து வருகிறது. நூல்களைப் பாடுங்காலத்தில் அந்த நூல்களில் கடவுள் வணக்கத்தை அமைத்துப் பாடினார்கள். எட்டுத்தொகை நூல்களில் ஒவ்வொரு நூலுக்கும் ஒவ்வொரு கடவுள் வாழ்த்தை அமைத்திருக்கிறார்கள். பத்துப்பாட்டு என்ற தொகுதியில் தனியே கடவுள் வாழ்த்து என்று இல்லாவிட்டாலும் முதலாவது பாட்டாக உள்ளது திருமுருகாற்றுப்படையே ஆகும். இந்நூல் அந்தத் தொகுப்புக்குரிய கடவுள் வாழ்த்தாக உள்ளது.

**திருமுருகாற்றுப்படை**

பத்துப்பாட்டு, எட்டுத்தொகை என்பது சங்க இலக்கியமாகும். இவற்றுள் பத்து நெடிய பாடல்களையுடைய தொகுப்பில் ஐந்து பாடல்கள் ஆற்றுப்படைகள், ஒருவனை ஒரு புரவலனிடத்தில் போகும்படியாக வழிகாட்டுவது ஆற்றுப்படையாகும். இவை திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, மலைபடுகடாம் என்ற கூத்தராற்றுப்படை என ஐந்தாகும். ஆற்றுப்படையில் முதலாவதாக அமைந்திப்பது திருமுருகாற்றுப்படையாகும். மற்ற ஆற்றுப்படைகள் ஆற்றுப்படுத்துபவன் பெயரால் அமைந்துள்ளன. ஆனால் திருமுருகாற்றுப்படை வீடுபேறு பெற்ற அடியார் ஒருவர் பிற அடியார்களுக்கும் வீடுபேறு பெறுவதற்கு முருகபெருமானிடத்து வழிப்படுத்துவதாக அவன் பெயரால் அமைந்துள்ளது. திருமுருகாற்றுப்படை பாட்டுடைத்தலைவன் பெயரோடு சார்ந்து விளங்குகிறது. மேலும் முருகனது பெருமையைக் கூறுவதாக உள்ளது. முருகன் சங்க நூல்களில் முதலில் வைத்துப் போற்றப்படுகின்றான்.

*பாவுள் முந்துற வந்து நிற்கும்*
*முருகாற்றுப் படைமொ ழிந்தான்*

என்று சிவப்பிரகாசர் கூறுகின்றார். திருமுருகாற்றுப்படை சங்க இலக்கியத்தைச் சார்ந்தது எனினும் முருகனது அடியார்கள் மனப்பாடம் செய்யும் நூலாகவும் விளங்குகிறது. சைவத் திருமுறைகளில் பதினோராந் திருமுறையில் உள்ள நூல்களில் ஒன்றாகவும் திகழ்கிறது.

**தமிழரின் முருக பக்தி**

முருகனைச் செந்தமிழ்க் கடவுள் என்று சொல்வது மரபாகும். தமிழ்நாட்டவர்களாலே நன்றாகத் தெரிந்து கொள்ளப்பட்ட கடவுள் முருகனாகும். உலகம் எல்லாம் தன்னுடைய அருளாணையின் வழிபடுத்துகின்றவன் முருகன். இதனைக் கருதியே முருகனைத் தமிழ்க் கடவுள் என்று கூறுவார்கள். பிற தெய்வங்களான சிவன், திருமால், கலைமகள், திருமகள், சூரியன் போன்ற தெய்வங்களை வழிபட்டாலும் தமிழ்இலக்கியங்கள் முருகனுக்கு என்று தனிச்சிறப்பு அளித்துள்ளதைக் காணலாம்.

**ஐந்து திணைகள்**

தமிழர் நிலங்களை ஐந்து பகுப்பாகப் பிரித்துள்ளார்கள். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்பனவாகும். - திணைகளில் உள்ள பொருள்களைக் கருப்பொருள் என்று சொல்வார்கள். கருப்பொருளில் முதலில் நிற்பது தெய்வம். உலகம் தோன்றும் போது முதலில் தோன்றியது மலை என்று சொல்வார்கள்.

*கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு*
*முன்தோன்றிய மூத்தக்குடி*

என்று தங்கள் குடியின் பழமையைக் கூறுவதைக் காணலாம். அவ்வாறு தோன்றிய திணையாகிய குறிஞ்சிக்குத் தலைவனாக முருகனை வைத்துள்ளார்கள். தமிழர்கள் முருகப்பெருமானை மிக உயர்ந்த இடத்தில் வைக்க வேண்டுமென்று கருதி மலைகளில் வைத்து வணங்குவதை அறியலாம். எனவே முருகனை மலைகிழவோன் என்றும் குறிஞ்சித் தலைவன் என்றும் போற்றி வணங்குகின்றனர்.

**கடியுண் கடவுள்**

குறிஞ்சி நிலத்தில் வாழ்கின்ற குறவர்கள் பிற தெய்வங்களை வணங்கினாலும் வணங்காவிட்டாலும் முருகனை வழிபடுவதை நிறுத்தமாட்டார்கள். அவர்களுடைய மலையில் எந்தப்பொருள் விளைகிறதோ அந்த விளைச்சலை முருகனுக்கு முதலில் படைத்து வழிபடுவார்கள். புனத்தில் முற்றிய தினைக் கதிரை அவன் கோவிலில் கட்டுவிடுவார்கள். இப்படிப் புதிதாகத் தோன்றியவற்றையெல்லாம் இறைவனுக்குக் காணிக்கையாக செய்த தமிழர்கள் 'கடியுண் கடவுள்' என்ற பெயராலும் முருகன் அழைக்கப்பட்டான். புது விருந்துண்ணும் மாப்பிள்ளை என்று அழைப்பது போல முருகனை அழைத்துள்ளனர். கடியுண் கடவுள் என்று குறுந்தொகை பாடல் (115) பகர்கின்றது. கடி - புதுமை. புதிதாகத் தோன்றியவற்றையெல்லாம் முருகன் ஏற்றுக் கொள்கிறான் என்று கூறுவார்கள்.

**திருவடிச் சிறப்பு**

இறைவனுடைய திருமேனியில் மிகச்சிறந்த உறுப்பு எது? இறைவனைக் காட்டிலும் அவன் திருவடி சிறந்தது என்பதைப் பரிபாடல் கூறுகிறது.

*நின்னிற் சிறந்தநின் தாளிணையவை*

என்ற அடியில், அடியவர்களுக்குப் பற்றுக்கோடாக இருப்பது அவனுடைய தாள். அவன் மிக உயரமானவன். அவனைப் பற்றிக் கொள்வது எளிய செயலல்ல. தேவர்களுக்கு எல்லாம் சிறந்த தேவனாக முருகன் இருக்கிறான் என்பதை,

*உறுநர்த் தாங்கிய மதன்உடை நோன்தாள்*

என்கிறது. இறைவனுக்குப் பலவகை உறுப்புகள் இருந்தாலும் அவற்றை எல்லாம் அடியவர்கள் கண்டு இன்புற்றாலும் அவர்கள் பெரும்பயன் பெறுவது அவனுடைய திருவடியில்தான். அடியார் என்ற பெயரே அதனைக் குறிக்கின்றது.

**முனிவர் இடர் தீர்க்கும் கைகள்**

ஒரு முகம் உடையவருக்கு இரண்டு கைகள் இருக்கின்றன. நான்கு முகமுடைய பிரமனுக்கு எட்டுக்கைகளாகும். சிவபெருமானுக்கு ஐந்து திருமுகங்களும் பத்துக் கரங்களும் உள்ளன. முருகன் ஆறுமுகம் உடையவன். தெய்வங்களில் அதிகமான முகங்களும் அதிகமான கரங்களும் உடைய பெருமான் முருகன் ஆவார். ஆறுமுகங்களுக்கு ஏற்றபடி பன்னிரண்டு திருக்கரங்களோடு விளங்குகிறார் என்பதை,

*ஏறுமயில் ஏறிவிளை ஆடுமுகம் ஒன்றே*
*ஈசனுடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே*
*கூறும் அடி யார்கள் வினை தீர்க்குமுகம் ஒன்றே*
*குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே*
*மாறுபடு சூரரை வதைத்தமுகம் ஒன்றே*
*வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே*
*ஆறுமுகம் ஆனபொருள் நீ அருளல் வேண்டும்*
*ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே.*

என்று பாடிடுவதைக் காணலாம்.

**முடிவுரை**

முருகப்பெருமான் ஐம்பொறிகளில் ஒன்றான மாசில்லாத நெருப்பில் இருந்து தோன்றியவன். பிறமொழிகளைக் காட்டிலும் பழமையானதும், உயர்ந்ததும், அன்பின் மொழியாகவும், பக்தி மொழியாகவும் உள்ள மொழி தமிழ்மொழி ஆறுமுகனை வணங்கினால் மன ஆறுதல் கிட்டும் என்பது ஆன்றோர் பொன்மொழி. தனக்கு ஒப்பாரில்லாப் பெருமையுடையோனாய் விளங்கும் தமிழ்க்கடவுளான முருகனின் திருவடிகள் அடையும்போது மனக்கவலைபோக்கும். இம்மை மறுமையில் நல்வாழ்வு அருளும் மனைவி மக்களோடு இறைவன்பால் அன்பு செய்து வீடுபேறு அடைய தமிழும் ஆறும் துணைசெய்யும் என்பது உண்மை.

## திருச்செந்தூர் முருகன்

முனைவர் மா. தெய்வானை
வருகை விரிவுரையாளர், தமிழாய்வுத்துறை
பெரியார் ஈ.வெ.ரா. கல்லூரி (தன்னாட்சி)
திருச்சிராப்பள்ளி - 620 023.

'குன்று இருக்குமிடமெல்லாம் குமரன் இருப்பான்' என்பது சான்றோர் மொழியாக இருந்தாலும் திருச்செந்தூர் மட்டும் கடல் அலைகளுக்கு அருகில் காட்சியளிக்கும் தலமாக அமைந்திருப்பது தனிச்சிறப்பாகும். முருகனது அறுபடை வீடுகளில் பிற தலங்கள் யாவும் மலைகளாகவே விளங்குவதை அறியலாம். அறுபடை வீடுகளுள் திருச்செந்தூர் இரண்டாம் படைவீடாக அமைந்துள்ளது. அருணகிரிநாதர் திருச்செந்தூர் முருகனின் தோற்றத்தையும், பெருமையினையும் எண்பத்து மூன்று பாடல்களில் பாடியுள்ளார். இத்தலத்தைச் சுற்றியுள்ள இயற்கை அழகினையும் முருகனின் வீரத்தினையும் வெளிப்படுத்துவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### திருச்செந்தூர்

முருகப்பெருமானின் வரலாறு முதன் முதலாகச் சங்க இலக்கியமான பத்துப்பாட்டில் உள்ள திருமுருகாற்றுப்படையில் உள்ளது. முருகன் கோயில் கொண்டுள்ள ஆறு தலங்களைப் பற்றி நக்கீரர் அப்பாட்டில் எடுத்துக் கூறுகின்றார். அவற்றுள் இரண்டாம் படைவீடு திருச்செந்தூர் என்பதாகும். 'திரு' என்றால் மேன்மை என்று பொருளாகும். மேன்மை தங்கிய பொருளுக்கும், இடங்களுக்கும் மட்டும் திரு என்ற அடைமொழி வழங்கப்பட்டு வருகின்றது. திருச்செந்தூர் மேன்மை பொருந்திய திருத்தலமாக கருதப்படுகிறது. திருச்செந்தூர் என்ற சொல்லிற்குப் புனிதமும் வளமும் பொருந்திய வெற்றி நகர் எனவும் செல்வமும், வெற்றியும் அருளவல்ல தலம் எனவும் கூறப்படுகிறது. மேலும் 'சீரலைவாய்' எனவும், 'திருச்சீர் அலைவாய்' எனவும் 'செந்தில்' எனவும், 'செந்தூர்' எனவும் பண்டைய இலக்கியங்களில் வழங்கப்பட்டு வந்துள்ளதைக் காணலாம். திருமுருகாற்றுப்படையில் அலைவாய் என்ற பெயர் குறிப்பிடப்பட்டுள்ளதை,

*'உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்*
*அலைவாய்ச் சேரலும் நிலைஇய பண்பே"* (திருமுருகா - 124 - 125)

*"திருமணி விளக்கின் அலைவாய்ச்*
*செருமிகு சேயொடு உற்ற சூளே"* (அகம். 266)

*"வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தில்*
*நெடுவேள் நிலைஇய காமன் வியன்துறை"* (புறம். 55)

என்ற அகநானூறு, புறநானூறு பாடலடிகள் அலைவாய் என்றும் செந்தில் என்றும் குறிக்கப்படுவதைக் காணமுடிகிறது.

சூரனை வெற்றி பெற்று அமராவதியைத் தேவர்களுக்கு மீட்டுத்தந்த இடமாகிய வெற்றி மாநகர் என்னும், பொருளில் 'ஜெயந்திபுரம்' என்றும் அழைக்கப்படுகிறது. முருகன் சூரனுடன் போர் செய்த இடம் படைவீடு என்றும் செவ்வேளாகிய முருகன் உறையும் இடம் செவ்வந்திபுரம் என்றும் அழைக்கப்பட்டுவந்துள்ளன. பின்னர் செவந்திபுரமானது செந்தில், செந்தூர் என மருவி திருச்செந்தூர் எனத் தற்போது அழைக்கப்படுகின்றது.

**அருணகிரியாரும் திருச்செந்தூரும்**

அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் பிறந்தவர். இளமையில் காமவலையில் கிடந்து துன்பப்பட்டவரை முருகன் ஆட்கொண்டு மீட்டதால் மதுரை மாநகரிலிருந்து மயில்வழி காட்டத் திருந்செந்தூர் வந்தார். திருச்செந்தூர் முருகனைப் புகழ்ந்து எண்பத்து மூன்று திருப்புகழ்ப் பாடல்களைப் பாடியுள்ளார். செந்தில் முருகன் இவருக்காக நடனமாடினான் என்றும் அருணகிரியார் திருச்செந்தூரில் கந்தரனுபூதி, கந்தரலங்காரம் ஆகிய நூல்களைப் பாடினார் என்றும் அறிஞர் கூறுவர்.

**தலச்சிறப்பு**

'அறுபடை வீடுகளில் ஒன்றாகவும், அதர்மத்தை அழித்து நீதியை நிலைநாட்ட முருகன் தேர்ந்தெடுத்த இடமாகவும், கடல் அலைகள் ஆர்ப்பரித்து முருகனை வணங்கிச் செல்லும் புனிதத் தலமாகவும் திகழ்வது திருச்செந்தூராகும். திருச்செந்தூர் என்று அன்பினால் ஒருமுறை அழைத்தாலும் கங்கை, யமுனை, சரஸ்வதி ஆகிய புனித நதிகள் கூடும் இடத்தில் நீராடிய பலன் இங்குக் கிடைக்கும் என்று தலபுராணம் கூறுகின்றது. முப்பெருந் தேவர்களுக்கும் கடவுளான முருகப்பெருமான் குறத்தி மகள் வள்ளியைத் திருமணம் செய்து கொள்ள யானை வடிவினனான கணபதியின் உதவியுடன் வேடன் வடிவங்கொண்டு வள்ளியிருக்கும் தினைப்புனத்திற்கே சென்று வேடர்குலக் கொடியுடன் உரைநிகழ்த்திக் கொண்டு இருக்கையில் வேடர்கள் சூழ வள்ளியின் தந்தை நம்பிராஜன் அங்குவரவே ஆறுமுகப் பெருமான் அச்சம் அடைந்தவரைப் போல இளவேங்கை மரமாகி நின்றார். வேதங்கள் அம்மரத்தின் வேர்களும் அடியுமாகி, சிவாகமங்கள் நடுப்பாகமாகிப் பலவித கலைகள் கிளைகளுடன் கூடிய மந்திர வடிவமாகி நின்றார் என்பதை,

*"ஆங்கது காலை தன்னிலடி முதன் மறைகளாக*
*வேங்கிய நடுவளெல்லா முயர் சிவநூல தாகப்*
*பாங்கமர் கவடு முற்றும் பல்கலை யாகத் தானோர்*
*வேங்கையி னுருவமாகி வேற்படை வீரன் நின்றான்"* [1]

என்று கந்தபுராணம் கூறுவதைக் காண முடிகிறது. திருச்செந்தூரில் உள்ள சந்தனமலை பல இடங்களில் சிறப்பிக்கப்படுகிறது. இந்திரனும் புகழும் திருவருள் படைத்த திருச்செந்தூரில் சோலைகள் நிறைந்த சந்தனமலை காணப்படுகிறது. இங்கு மேகங்கள் தவழ்ந்து செல்லும். இங்குள்ள சோலைகளில் தெய்வமகளிர் உலா வருவர் என்பதை,

*"எல்லாவரும் போற்ற இலங்கு திருச்செந்தூர்"*
*"திருச்செந்தூர் நல்ல வளமறுகு நான்கும்"*
*"செந்தமிழ்ச் சீர்மன்னுந் திருச்செந்தில்"*
*"குன்றியவர் சந்தவரைக் கோயில்"* [2]

என்றெல்லாம் திருச்செந்தூர் தலம் போற்றப்பட்டுள்ளது. இத்திருத்தலமே ஆறுமுகக் கடவுளையும் வள்ளியையும் இணைத்த தலம் ஆகையால் அப்பர் பெருமான் இத்தலத்தை, *"நஞ்செந்தில் மேய வள்ளி மணாளன் தாதை கண்டாய்"* [3] என்று பாடியுள்ளார்.

**இயற்கை வளம்**

திருச்செந்தூர் சங்க காலத்திலேயே பேரும் புகழும் பெற்றிருந்த தலமாக விளங்குகிறது. இத்தலத்தில் வளமும் இயற்கை வனப்பும் நிறைந்து காணப்படுகின்றன. கடற்கரையில் எழுகின்ற அலைகள், அக்கோயிலின் கோபுர மதில் சுவரில் மோதுகின்றன. அத்தகைய அலைகள் நிறைந்த திருநகரில் கடல் வளமும் பிற வளங்களும் கண்ணைக் கவருவனவாக அமைந்துள்ளன. இத்தலத்தினை அருணகிரியார், *"செழிப்பு மிக்க செந்தில் மாநகர்"* [4] என்று வருணித்துள்ளதைக் காணலாம். மேலும் திருச்செந்தூரின் இயற்கை அழகுடன் செயற்கை அழகினையும் காணமுடிகிறது. வானளாவிய சோலைகளும், செண்பகக் காடுகளும் பெரிதும் வளர்ந்தோங்கிய மலைகளும் உள்ளத்தைக் கவரும். பெரிய மதில்கள் பாதுகாப்பாக அமைந்திருப்பதுடன் அழகுக்கு அழகு செய்வது போலவும் காணப்படுகின்றன. மதில் சூழ்ந்த செந்தூர், சோலை சூழ்ந்த செந்தூர், சுந்தரமான செந்தில், அழகிய செந்தில் எனப் பலவாறாக இத்தலத்தைப் பாராட்டிப் பாடுகின்றார்.

**சோலை**

திருச்செந்தூர் சோலைகளில் மணம் கமழ்கிறது. உயர்ந்த தென்னைகள் திரண்டு காணப்படுகின்றன. நீர்நிலைகளில் தாமரை முதலிய மலர்கள் மலர்ந்து காணப்படுகின்றன. அம்மலர்களுக்கிடையே வண்டுகள் நடனமாடுவதும், சோலைகளுக்கிடையே குரங்குகள் நடமாடுவதும் காண்போரை மகிழ்விக்கின்றன. இவ்வழகுகள் அனைத்தும் முருகவேளின் அழகினையே குறிக்கின்றன என்பதை,

*"மன்றல் கமழ் பூசு தெங்குதிரள் சோலை*
*வண்டுபடு வாவி புடைசூழ*
*மந்திநட மாடு செந்தினகர் மேவு*
*மைந்த அமரேசர் பெருமானே"* [5]

என்ற அருணகிரியார் பாடல் மூலம் உணரலாம்.

**கடல்**

திருச்செந்தூர் தலமானது கடற்கரையில் அமைந்துள்ளது. இப்புண்ணியத் திருத்தலத்தில் நீராடினால் செய்த பாவங்கள் தொலைந்து

புண்ணியம் விளையும் என்பது நம்பிக்கையாக உள்ளது. கடல் மகள் தன்னையும் அழகுப்படுத்திக் கொண்டு இத்திருத்தலத்தையும் மிக நேர்த்தியாக அழகுபடுத்தியுள்ளாள். இத்தலத்தில் அலையோசை இடியோசை போன்று அடியவர்கள் காதில் எப்போதும் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. கடலானது தன் அலையோசையால் இத்திருக்கோயில் இசைக்கருவிகளின் பணியைச் சற்றே குறைத்துள்ளது. கடல் அலைகள் ஆர்ப்பரித்து முருகனை வணங்கிச் செல்லும். இங்ஙனம் ஆர்ப்பரிக்கும் கடல் அலைகள் திருக்கோயில் கோபுரக் கலசத்தின் மீதும், மதில் மீதும், தலத்தின் மேலும் இசையுடன் மோதிச் செல்வதால் அலைகளிலிருந்து முத்துக்கள் கரையோரங்களில் சிதறிக் கிடப்பதை,

*“சிகர கோபுரத் தினுமதி ளினுமேற்*
*செம்பொற் தம்பத் தளமீதும்*
*தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்*
*செந்திற் கந்தப் பெருமாளே”* [5] என்று குறிப்பிடுகின்றார்.

**இறைவனின் சிறப்பு**

சைவ சமயக் கடவுளர்களில் சிவனுக்கு அடுத்து முருகப்பெருமானுக்குச் சிறப்பான இடம் உண்டு. சுக்கை மிஞ்சிய மருந்துமில்லை. சுப்பிரமணியனை மிஞ்சிய கடவுளுமில்லை என்னும் பழமொழி முருகப்பெருமானின் சிறப்பை உணர்த்துகிறது. முருகன் என்றாலே அழகன் என்பது பொருள். ‘முருகு’ என்பது பல பொருள் குறிக்கும் சொல்லாகும். இளமை, அழகு, மணம், கடவுட்டன்மை என்று அகராதி பொருள் தருகிறது. இறைமகனாரில் முருகன் இளையவன். “இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே” என்பது நக்கீரர் வாக்காகும். இளையோன் அழகன் என்னும் இரு பொருள்பட முருகனுக்குக் குழகன் என்னும் பெயரும் உள்ளது. ‘சேயோன் மேய மைவரை உலகம்” என்று தொல்காப்பியர் குறிஞ்சி நிலக் கடவுளாகச் சுட்டியுள்ளார். இதனால் குறிஞ்சிமகன், குறிஞ்சிநாதன், குறிஞ்சிக்கிழவன், குறிஞ்சி வேந்தன், குறிஞ்சிக் கடவுள் என்றெல்லாம் நிகண்டுகள் குறிப்பிடுகின்றன.

**முருகனின் தோற்றம்**

முருகன் சிவபெருமானின் நெற்றிக் கண்ணிலிருந்து பிறந்து சரவணப் பொய்கையில் தவழ்ந்து அறுமீன் எனப்படும் கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவர். ஆறுதிருஉருவமாக உள்ள பெருமானை உமையம்மை அணைத்தெடுத்ததால் ஒன்றாகி ஆறுமுகக் கடவுளானான் என்று கூறுவர். முருகப்பெருமானுடைய உருவம் திருவுள்ளத்தில் வந்து நின்றவுடன் மனதில் ஒரு குளிர்ச்சி உண்டாகும். மழை பெய்தால் உடனே வெப்பம் மாறிக் குளிர்ச்சி உண்டாவது போல் கருணையே வடிவமாகிய முருகப்பெருமான் மனதில் வந்து காட்சி கொடுத்தவுடன் அங்கே உள்ள தாபங்கள் மாறிக் குளிர்ச்சி உண்டாகிவிடும். மேலும் முருகன் அழகும், இளமையும் உடையவன்

மட்டும் அல்லன். தெய்வீக மணமும் பொருந்தியவன் ஆறுமுகனை நினைத்தால் ஆறுமே மனம் என்றும் ஆன்றோர் புகழ்வர்.

## முருகன் பெருமைகள்

முருகனுடைய பெருமை ஒவ்வொரு பாடலிலும் இரண்டு விதங்களில் இணைத்துக் கூறப்பட்டுள்ளது அறியலாம். ஒன்று அவன் தேவியருடன் இணைத்துப் பெருமையாகக் கூறுவதாம். மற்றொன்று அவனது வீரச்சிறப்பைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளன. பெருமை பொருந்திய திருச்செந்தூர் முருகனே! ஒப்பற்ற மயில் மீதேறி உலகை வலம் வந்தவனே! கிரவுஞ்சம் துளைபடவும், தேவர்கள் தொழவும் திருக்கரத்தினின்று வேலாயுதத்தைச் செலுத்தியவனே, வேகத்தோடு செல்லும் மயிலை வாகனமாகக் கொண்ட வீரனே, அலை வீசுகின்ற கடலில் நின்ற சூரனுக்குக் காலனாயிருந்தவனே, மயிலை வாகனமாகக் கொண்ட சந்தனம் அணிந்த அழகிய மார்பனே, குறத்திமாட்டு உள்ளம் தளர்ந்தவனே என முருகனது பெருமைகளாகப் பல வீரச்செயல்களைப் போற்றுகின்றனர். பக்தர்களுக்கு அருள்பாலிப்பவன், பொல்லாத அசுரர் குலத்தவரோடு போர் புரிபவன். நல்லவரைக் காத்தளிக்கும் திருவிளையாடல்களைக் கொண்டவன். முக்தி பெறும்படி உபதேசிக்கும் திருவார்த்தைகளை உடையவன். முத்தமிழை ஆய்ந்த மேம்பாட்டைக் கொண்டவன். மேகங்கள் தாவிச் செல்லும் மதில்களைக் கொண்ட திருக்கோயிலை உடையவன் என்றெல்லாம் அருணகிரியார் முருகனது பெருமைகளை வியந்து பாடுவதைக் காணலாம்.

## முருகனை வணங்குவதால் கிட்டும் பயன்

'உன்னை வணங்குவதால் என் தலை பயன் பெறும். கைகூப்பித் தொழுவதால் கைகள் பயன் பெறும். கடம்ப மாலை சூட்டுதலால் பூக்கள் பயன் பெறும் சிவமாம் தன்மை பெறும், தவநிலை பேறும் தருவோனே' என்று அடியார் முருகனை வணங்குவதால் கிட்டும் பயன்களை உணரலாம். அறுபடை வீடுகளில் திருச்செந்தூர் கோயில் அமைப்பு அடியார்கள் கீழிறங்கி வழிபட்டு மேலேறி வருவதைக் கொண்டு வாழ்விலும் மேன்மை பெறுவர் என்பது நம்பிக்கை என்ற கூற்றையும் உணரமுடிகிறது.

## சான்றெண் விளக்கம்

1. கிருபானந்தவாரியார், திருப்புகழ் விரிவுரை ப. 517
2. அ.பாஸ்கரபால்பாண்டியன், திருச்செந்தூர் (சிறப்புத்தொகுதி) ப. 91
3. வ.சு.செங்கல்வராயபிள்ளை, முருகவேள் பன்னிரு திருமுறை, ப. 52
4. மேலது, ப. 62.
5. மேலது, ப. 63.

# முருகனின் அறுபடைவீடுகள்

அ. தேன்மொழி,
உதவிப் பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
பாத்திமா கல்லூரி, மதுரை - 652 018.

தமிழர்களின் கடவுளாகக் கருதப்படுபவர் முருகப்பெருமான். தொல்பழங்காலம் முதல் முருக வழிபாடு தமிழ் இனத்தில் வேரூன்றி உள்ளது. முருக வழிபாடு முதன்மையான வழிபாடு. திருமுருகாற்றுப்படை முருகனை மக்கள் அனைத்து இடங்களிலும் கண்டு வணங்கினர். தமிழ் மக்களிடையே கோயில்கள் பண்பாட்டுக் களமாக அமைந்துள்ளன. முருகனுக்கு உரிய படை வீடுகள் ஆறு. இந்த ஆறு படைவீடுகளும் ஒருமித்து அறுபடைவீடுகள் என்று அழைக்கப்படுகிறது. முருகப்பெருமானின் ஆறு படைவீடுகளும் மிகவும் புகழ் பெற்றவை, அருட்சிறப்புடையவை. அவை, 1. திருப்பரங்குன்றம் 2. திருச்சீரலைவாய் 3. திருவாவினன்குடி 4. திருவேரகம் 5. தணிகைமலை 6. பழமுதிர்சோலை. இந்த முருகனின் படைவீடுகளை அடியார்கள் திருக்கூட்டம் வலம் வந்து வணங்குதல் அன்றாட நிகழ்வாகக் காணப்படுகிறது.

**திருப்பரங்குன்றம்**

முருகப்பெருமானின் படைவீடுகளில் முதலாவதாகத் திகழ்வது திருப்பரங்குன்றம். திருப்பரங்குன்றம் மதுரைக்குத் தெற்கே அமைந்துள்ளது. திருப்பரங்குன்றம் - திரு+ பரம்+குன்றம். பரம் என்றால் பரம் பொருளாகிய சிவபெருமான். குன்றம் என்றால் குன்று(மலை). திரு என்பது அதன் சிறப்பை உணர்த்தும் அடைமொழி. இத்திருத்தலம் லிங்க வடிவில் இருப்பதால் சிவபெருமானின் பெயரைத் தாங்கி திருப்பரங்குன்றம் எனப் பெயர் பெற்றது. திருப்பரங்குன்றம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் என்று அழைக்கப்படுகிறது. முருகன் தெய்வயானையைத் திருமணம் செய்துக்கொண்ட தலம் என்பதால் முருகன் இங்குக் கல்யாணக்கோலத்தில் காட்சி அளிக்கிறார். சங்க காலத்திலயே திருப்பரங்குன்றம் முருகனின் கோயிலாய் விளங்கியதைச்,

*சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமிகு முருகன் தண்பரங் குன்றம்* (அகநானூறு)

*கொடி நுடங்கு மறுகிற் கூடற் குடாஅது*
*பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய*
*ஓடியா விழவின் நெடியோன் குன்றம்* (அகநானூறு)

என்ற சங்க அகநானூற்றுச் செய்யுள்களால் அறியலாம். திருப்பரங்குன்றம் சோலைகளும் அருவிகளும் சூழ காணப்பட்டதால் அது தண்பரங்குன்றம் எனப்பட்டது. இத்திருத்தலத்திற்கு மேலும் தென்பரங்குன்று, பரங்குன்று, பரங்கிரி, திருப்பரங்கிரி பரமசிவம், சத்தியகிரி, கந்தமாதனம், கந்தமலை என்று பல்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன.

பாண்டிய மன்னன் தன் அரசமாதேவியரோடும், அமைச்சர்களோடும் திருப்பரங்குன்றத்தில் உள்ள முருகனை வழிபடச்சென்றான். அவனுடன் வந்த யானைகளும், குதிரைகளும் மலை அடிவாரத்தில் கட்டப்பட்டன. இது காண்பதற்குப் பாண்டியனின் பாசறைபோல் அமைந்ததை பரிபாடல்,

*சூடரெடு சூல்வரு தாரகை மேருப்*
*புடைவரு சூழல் புலம் மாண் வழுதி*
*மட மயில் ஓரும் மனையவரோடும்*
*கடன் அறி காரியக் கண்ணவரோடும் நின்*
*சூர் உறை குன்றின் தட வரை ஏறி மேல்*
..............................................................................
*பரி நிமிர் தானையான் பாசறை நீர்த்தே*
*குருகு எறி வேலோய்! நின் குன்றக் கீழ் நின்ற*
*இடை நிலம் யாம் ஏத்தும் ஆறு!* (பரிபாடல்)

என்று குறிப்பிடுகிறது. திருமுருகாற்றுப்படையில், மதுரைக்கும் பரங்குன்றத்திற்கும் இடையே உள்ள சோலையின் அழகு கூறப்படுகிறது (அடிகள். 70 - 77). இக்கோவிலின் அர்த்தமண்டபம் (கருவறை) மலையைக் குடைந்து அமைக்கப்பட்டது. அர்த்தமண்டத்தை அடைய ஆறுபடிகளைக் கடந்து செல்ல வேண்டும். இப்படிகள் சடாட்சரப் படிகள் என்று அழைக்கப்படுகிறது. மூலவராகிய முருகப்பெருமான் இக் கருவறையில் திருமணக்கோலத்தில், உயர்ந்த இடத்தில் எல்லா தெய்வங்களும் சூழ காட்சி அளிக்கிறார். முருகப்பெருமானின் திருமணச் சடங்கிற்கு அனைத்துத் தெய்வங்களும் வந்து சூழ்ந்துள்ளதைப் போன்று கருவறை அமைக்கப்பட்டுள்ளது. இக்கோயில் தெற்குப் பகுதியில் தென்பரங்குன்றம் என்னும் குடைவரைக் கோவில் அமைந்துள்ளது. இது உமையாண்டவர் கோவில் என வழங்கப்படுகிறது. மலையின் மேற்குப்பகுதியில் பஞ்சபாண்டவர் படுக்கை என்னும் குகை அமைந்துள்ளது. மலையினது உச்சியில் சிக்கந்தர் பாஷா என்னும் முகமதியப் பெரியாரின் சமாதியும் மண்டபமும் அமைந்துள்ளது.

**திருச்சீரலைவாய்**

இத்தலம் முருகனின் அறுபடைவீடுகளுள் இரண்டாவது படைவீடாக அமைந்துள்ளது. இது திருநெல்வேலி மாவட்டத்தில் கடற்கரையில் காயற்பட்டடினத்திற்குத் தெற்கில் உள்ளது. இத்தலம் மன்னார்குடாக் கடல் அலைகளால் தொடர்ந்து வருடப்படுவதால் அலைவாய் என்னும் பெயர் பெற்றது. பின்னர் *திரு* என்னும் அடைமொழியுடன் *திருச்சீரலைவாய்* என்று வழங்கப்படுகிறது. இலக்கியங்களில் புகழப்பெற்ற திருத்தலங்களுள் இத்தலமும் ஒன்று. இதனை,

*அலைவாய்ச் சேறலும் நிலைஇய பண்பே* (திருமுருகாற்றுப்படை)

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்* (சிலம்பு. குன்றக்குரவை)

*திருமணி விளக்கின் அலைவாய்க் செருமிகு சேஎய்* (அகநானூறு)

*வெண்டலைப் புணரி மலைக்கும் செந்தில்*
*நெடுவேள் நிலைஇய காமர் வியன்றுறை* (புறநானூறு)

*சீரலைவாய்வரு சேயைப் போற்றுவோம்* (கந்தப்புராணம்)

*செந்தமிழ் மணக்கும் திருச்செந்தில்* (திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ்)

என்று இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இத்தலம் சூரபத்மன் மீது போர்தொடுத்து, அவனை மறக்கருணையால் ஆட்கொண்ட தலமாக விளங்குகிறது. அதன் பின் தேவர்களைச் சிறைமீட்டு தேவர்களின் வழிபாட்டை முருகன் ஏற்றுக்கொண்ட தலம் என்பது இத்தலத்தின் வரலாறு. முருகன் சூரபத்மனை அழிக்க வேல் எறிந்த போது கடல் அஞ்சிப் பின்வாங்கியதை,

*மலைமாவு சிந்த அலைவேலையஞ்ச*
*வடிவேலெறிந்த அதிதீரா* (திருப்புகழ்)

என்று கூறுகிறது திருப்புகழ். ஐந்து வயது வரை வாய்பேசாதிருந்த குமரகுருபரர் நாவில் முருகன் வேலினால் எழுதினார். அதன் பின் குமரகுருபரர் பேசத்தொடங்கி, முருகன் மீது கந்தர் கலி வெண்பா பாடினார். இந்நிகழ்வு நடைபெற்றது இத்திருத்தலமே. கடுமையான வயிற்றுவலியால் பாதிக்கப்பட்டிருந்த பகழிக்கூத்தர் தன் நோய் நீங்க திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ் பாடினார். இக்கோயில் கடற்கரை மணல்மேட்டில் மூன்று பிரகாரங்களுடன், அழகிய ராஜகோபுரத்துடன் அமைந்து உள்ளது. இக்கோயில் கருவறை ஆதியில் சந்தனசைலம் என்னும் குன்றைக் குடைந்து கட்டப்பட்டது. கருவறையில் உள்ள மூலவர் ஆறுமுகநயினார் எனப் போற்றப்படுகின்ற ஆறுமுகப் பெருமான் வள்ளி தெய்வானையுடன் காட்சி தருகிறார்.

**திருவாவினன்குடி**

திருவாவினன்குடி என்னும் இத்திருத்தலம் இன்று பழநி என்ற பெயரில் வழங்கப்படுகிறது. நாரதர் கொடுத்த பழத்தைச் சிவபெருமான் தனக்கு வழங்காமையால் சினம் கொண்ட முருகன் இம்மலையில் வந்து தங்கினார். சிவனும் உமையும் இம்மலையில் எழுந்தருளி, பழம் நீயாக இருக்கையில் உனக்கு வேறு பழம் எதற்கு? என்று கூறி அன்பு பாராட்டினர். அவர்கள் கூறிய ***பழம் நீ*** என்பதே பின்னர் பழநி என்றாகியது. பழநியின் மலையில் தண்டாயுதபாணி திருக்கோவிலும், நகரத்துள் தேவியருடன் இருக்கும் வேலாயுத சுவாமி கோவிலும் அமைந்துள்ளது. மலையில் உள்ள கோவில் பழநி என்றும், நகரத்தில் உள்ள கோவில் ஆவினன்குடி என்றும் வழங்கப்படுகிறது. இப்பழநி மலையைத் திருமுருகாற்றுப்படையில் நக்கீரர் ஆவினன்குடி என்று குறிப்பிடுகிறார். இங்கு தேவர்கள் முதலிய பலரும் வந்து வணங்கியதை,

*உறுகுறை மருங்கிற்றும் பெறுமுறை கொண்மார்*
*அந்தரக் கொட்பினர் வந்துடன் காணத்*

*தாவில் கொள்கை மடந்தையொடு சின்னாள்*
*ஆவினன் குடி அசைத்தலும் உரியன்* (திருமுருகாற்றுப்படை)

என்று குறிப்பிடுகிறது திருமுருகாற்றுப்படை. இங்கு முருகன் ஆண்டிக்கோலதில் இருப்பதாக நக்கீரர் குறிப்பிடவில்லை. மாறாக வள்ளியோடு சில நாட்கள் தங்கியிருந்து இயங்கிய ஆவினன்குடி என்று குறிப்பிடுகிறார். எனவே நக்கீரர் குறிப்பிடும் ஆவினன்குடியும் இன்று நாம் குறிப்பிடும் பழநியும் வேறு வேறு என்ற கருத்தும் உண்டு. நக்கீரர்க்குப் பின் வந்த போகரால் உருவாக்கப்பட்டதே இப்பழநி திருக்கோவில் என்று கருதப்படுகிறது. இவ்வூர் சங்ககாலத்தில் பொதினி என்று வழங்கப்படுள்ளது.

*முருகன் நற்போர் நெடுவேள் ஆவி*
*அறுகோட் டியானைப் பொதினி* (அகநானூறு)

*முழவுறத் திணிதோள் நெடுவேள் ஆவி*
*பொன்னுடை நெடுநகர்ப் பொதினி* (அகநானூறு)

என்றெல்லாம் அகநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன.

சங்க காலத்தில் பழநி மலை நாட்டை ஆவியின் குடியினர் ஆண்டுவந்தனர். அவர்களுள் ஒருவன் பேகன். கடையெழு வள்ளல்களில் ஒருவன். மயிலுக்குப் போர்வை தந்த பேகன் பிறந்த குடி ஆவியர்குடி. இவர்கள் ஆட்சி புரிந்த இடம் கான் ஆவினன்குடி. இங்குள்ள முருகன் கோவில் பிற்காலத்தில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. இன்றுள்ள பழனி என்னும் தலத்தில் மலையடி வாரத்தில் உள்ள கோவிலே *ஆவி நன்குடி* என்னும் ஊரைச் சேர்ந்த பழைய கோவில் மலைமீதுள்ள கோவில் பிற்காலத்தது என்கிறது பழனித்தல வரலாறு என்னும் நூல். இத்திருத்தலத்தில் உள்ள கோவில் கருவறையில் முருகன் பாலமூர்த்தியாக, கோவணாண்டியாக, தண்டாயுதபாணியாக நின்று அருள்புரிகிறார். ஒரு கரத்தில் தண்டு ஏந்தி, மற்றொரு கையை இடையில் வைத்து, மேற்கு நோக்கி காட்சி அளிக்கிறார்.

**திருவேரகம் (சுவாமிமலை)**

திருவேரகம் கும்பகோணத்திற்கு மேற்கே அமைந்துள்ளது. *ஏரகம்* என்பது இத்தலத்தின் பெயர். இதனுடன் *திரு* என்ற அடைமொழி சேர்த்து திருவேரகம் என்று அழைக்கப்படுகிறது. தற்போது இத்திருத்தலம் சுவாமிமலை என்ற பெயரில் வழங்கப்படுகிறது. திருக்கைலாயத்தில் பிரம்மன் முருகனைச் சிறுவன் என்று வணங்காமல் செல்ல, முருகன் பிரம்மனை அழைத்து பிரணவமந்திரத்தின் பொருள் கேட்டான். பிரம்மன் பதில் கூற இயலாது திகைத்தான். எனவே முருகன் அவரைச் சிறையில் இட்டு படைத்தல் தொழிலைத் தானே மேற்கொண்டான். இதனை அறிந்த சிவன் பிரமனை விடுவிக்குமாறு வேண்ட அவ்வேண்டுதலை ஏற்று பிரமனை விடுதலை செய்தான் முருகன். பின்னர் சிவன் அப்பிரணவ மந்திரத்தின் பொருளை அறிய விரும்பி முருகனிடம் கேட்க, முருகன் குருவாக இருந்து தந்தைக்கு அதன் பொருளை

உணர்த்தி குருமூர்த்தியாக நின்றார். சுவாமிநாதன் என்னும் பெயரும் பெற்றார். எனவே இத்திருத்தலம் சுவாமிமலை என்ற பெயரும் பெற்றது. பத்துப்பாட்டில் ஒன்றான திருமுருகாற்றுப்படையில் இத்திருத்தலத்தில் எழுந்தருளி உள்ள முருகப்பெருமானைப் பல்வேறு திறத்தினரும் ஆறெழுத்து மந்திரத்தை நாவில் உச்சிரித்து, நறிய மலர்களைக் கொண்டு அருச்சனை புரிந்ததை,

*ஆறெழுத்து அடக்கிய அருமறைக் கேள்வி*
*நாவியன் மருங்கின் நவிலப் பாடி*
*விரையுறு நறுமலர் ஏந்திப் பெரிதுவந்து*
*ஏரகத்து உறைதலும் உரியன்* (திருமுருகாற்றுப்படை)

என்று குறிப்பிடுகிறது. சிலப்பதிகாரத்தில் இத்திருத்தலம்

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும் நீங்கா இறைவன்* (சிலம்பு - குன்றக்குரவை)

என்று போற்றப்படுகிறது. இத்திருத்தலத்தில் கருவறையில் முருகன் சுமார் ஆறு அடி உயரத்தில் வலக்கரத்தில் தண்டம் பற்றியும், இடக்கரத்தைத் தொடைமீது அமர்த்தியும் யோககுருவாகப் பக்தர்களுக்குக் காட்சி அளிக்கிறார்.

**தணிகைமலை**

அரக்கோணத்திற்கு வடக்கே தணிகைமலை அமைந்துள்ளது. முருகன் மணம் புரியும் பொருட்டு தங்கிய மலை தணிகைமலை. முருகன் சூரபத்மன் முதலிய அவுணர்களை அழித்து வெற்றி கொண்டு, பின்னர் செருத்தணியுமாறு வந்து தங்கிய மலை தணிகைமலை. இத்தலமே திருத்தணிகை என்று அழைக்கப்படுகிறது. கந்தபுராணம் இத்தலத்தை செருதணி என்று வழங்குகிறது. கந்தபுராணம், மலர்களில் சிறந்தது தாமரை, நதிகளில் சிறந்தது கங்கை, பதிகளில் சிறந்தது காஞ்சி, மலைகளில் சிறந்தது தணிகைமலை என்று குறிப்பிடுகிறது. திருப்புகழ் இத்தலத்தின் சிறப்பைக் கூறுமிடத்து,

*"புவிமீதே பிரபலமுள்ள சுத்தத் தணிமலை"*
*"இமையவர் பணி திருத்தணி பொற்பதி"*
*"எத்திக்கு முற்ற புகழ் வெற்றித் திருத்தணி"*
*"திரைகடல் சூழும் புவிக்குயிராம் திருத்தணி"* (திருப்புகழ்)

என்று போற்றுகிறது. முருகன் இத்தலத்தின் சிறப்பினை உணர்த்த வள்ளியிடம் கூறுங்கால்: "பல குற்றங்களைச் செய்தவராயினும் அவர்கள் அன்போடு தணிகை மலையை வந்து அடைவாரேயானால், பிரம்மன், திருமால், இன்னும் சிறந்தோரை விடவும் மேலானவர்" என்று கூறுகிறார். இதனைப்,

*பாதகம்பல செய்தவ ராயினும் பவங்கள்*
*ஏதும் கைவலும் புரிபவ ராயினும் எம்பால்*
*ஆதரங்கொடு தணிகைவெற் படைவரேல் அவரே*
*வேதன் மாலினும் விழுமிய ரெவற்றினு மிக்கார்* (கந்தப்புராணம்)

என்கிறது கந்தப்புராணம். வள்ளியை மணந்து இத்திருத்தலத்தில் முருகன் அருள் புரிகிறான். இத்திருக்கோவிலில் முருகன் சுந்தர வடிவினனாய், இடக்கரத்தைத் தொடையில் வைத்து, வலக்கரத்தில் வேலினைத் தாங்கி காட்சியளிக்கிறார்.

### பழமுதிர்ச்சோலை

மதுரைக்கு வடக்கே இத்தலம் அமைந்துள்ளது. இது அழகர்கோவில் என்று வழங்கப்படுகிறது. இத்திருத்தலம் முருகனின் தலமாக சைவத்தின் பெருமைகளையும், திருமாலின் தலமாக வைணவத்தின் பெருமைகளையும் கொண்டு விளங்கிறது. இது இத்தலத்தின் சிறப்புகளுள் ஒன்று. சங்க இலக்கியங்களில் இத்தலம் அழகர்கோவில் என்றும், திருமாலிருங்குன்றம் என்றும், சோலைமலை என்றும், திருமாலிருஞ்சோலை என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. பரிபாடலில் இத்தலம் மாலிருங்குன்றம் என்று குறிப்பிடப்படுகிறது. சிலப்பதிகாரம் இத்தலத்தைத் திருமால் குன்றம் என்று குறிப்பிடுகிறது. ஆழ்வார்கள் பலரும் இத்தலத்தை திருமால் குன்றம், மாலிருஞ்சோலை என்று குறிப்பிடுகின்றனர். பழமுதிாச்சோலை என்பது பழம் + முதிர்+ சோலை என அமைத்து பழங்கள் முதிர்ந்த சோலை என்னும் பொருளையும், பழம் + உதிர் + சோலை என அமைத்து பழங்கள் உதிர்ந்த சோலை என்னும் பொருளையும் குறிக்கும். இத்தலத்தில் முருகன் தமிழ் மூதாட்டி ஔவைக்கு சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா? என்று கேட்டுப் பழங்களை உதிர்த்த மலை ஆதலின் இத்தலம் பழமுதிர்ச்சோலை என பெயர் பெற்றது. இத்தலத்தில் முருகப்பெருமான் கோவில் முன்பு வேலின் சிலாவடிவம் நடப்பட்டு வழிபாடு செய்யப்பட்டு வந்ததாகக் கூறப்படுகிறது. இக்கோவிலில் எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமான் திருவுருவம் எழில் மிக்கதாக அமைந்துள்ளது.

### முடிவுரை

தமிழர்கள் பல தெய்வங்களை வழிபட்டு வந்தாலும் தமிழ்க் கடவுளாகிய முருகப்பெருமான் தமிழரின் தனிப்பெரும் தெய்வமாக விளங்குகிறான். சில குலங்களுக்கும், குழுக்களுக்கும் இல்லுறை தெய்வமாக முதன்மை தெய்வமாக முருகப்பெருமான் விளங்குகிறான். குன்று உள்ள இடத்தில் குமரன் இருப்பான் என்பதற்கு ஏற்ப இந்த அறுபடை வீடுகளும் குன்றின் மேல் அமைந்துள்ளன. இந்த அறுபடைவீடுகளிலும் முருகனுக்கு நாள்தோறும் வழிபாடுகளும், உரிய காலங்களில் திருவிழாக்களும் கொண்டாடப்பட்டு வருகின்றன. பக்தர்கள் முருகனை இந்த அறுபடைவீடுகளுக்கும் வழிநடை பயணமாகச் சென்று பெரும்பாலும் வழிபடுகின்றனர்.

# முருகன் படைவீடுகளின் சிறப்புகள்

மோ. தேன்மொழி
முனைவர் பட்ட ஆய்வாளர்
இலக்கியத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 10

முருகன் என்ற சொல்லுக்கு அழகு என்பது பொருளாகும். ஓம் என்னும் பிரணவப் பொருளைப் போதித்த நாதனே! நான்முகன் திருமால் ஆகிய இருவருக்கும் மற்றும் முப்பத்து முக்கோடி தேவர்களும் போற்றும் பெருமானே! என்று அனைவரும் போற்றக்கூடிய கடவுளாக முருகப்பெருமான் காட்சியளிக்கின்றார். மேலும், தமிழ்க் கடவுள் முருகனுக்கு அறுபடை வீடுகளும் இருக்கின்றன என்பதை இக்கட்டுரையின் வாயிலாக அறிந்துக்கொள்வோம்.

**முதலாவது படைவீடு — திருப்பரங்குன்றம்**

இது மதுரைக்குத் தெற்கில் 5 கி.மீ. தொலைவில் உள்ள திருத்தலமாகும். முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகளில் முதற்படை வீடாகும். மலைமுகடு எனப் பருத்த எழில்மிக்க தளதளத்த தனங்களில் அழகிய மணிவடம் தரித்த குறமகளாகிய வள்ளி நாயகியாரை உடைய வடிவேலனே! தனது அங்கங்களின் அசைவால், அழகிய தனங்கள் திறந்து எதிரில் வரும் இளைஞர்களின் உயிர் வருந்துமாறு மயல் செய்து ஐந்து மலர்க்கணைகளைச் செலுத்தும் மன்மதனே!

ஐராவதம் என்னும் தேவலோகத்து யானையால் வளர்க்கப்பெற்ற தெய்வானை என்னும் பிராட்டியாரைத் திருமணம் புரிந்த பெருமானே இவ்வாறு முதல்படை வீடான திருப்பரங்குன்றத்தில் முருகப்பெருமான் சிறப்பு கூறப்படுகின்றது.

**இரண்டாவது படைவீடு — திருச்செந்தூர்**

இதனைத் திருச்சீரலைவாய் என்னும் திருச்செந்தூர் என்பர். இத்தலம் திருநெல்வேலிக்குக் கிழக்கே 40 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. இது கடற்கரைக் கோயிலாகும்.

*"விதிபோலும் உந்த விழியாலும் இந்து*
*நுதலாலும் ஒன்றி இணைநோர்*

*தம்விரிவான சிந்தை உருவாகி நொந்து*
*விறல் வேறு சிந்தை வினையாலே"*

என்ற வரிகளுக்கு இணங்க மூன்றாம் பிறைச் சந்திரனைச் சடையில் சூடியவரும் தேவருலகம் வாழும் பொருட்டு ஆலகால விடத்தை உட்கொண்டு காத்தவரும்

எதிர்காலத்தை நினைந்து போற்றும் அடியவர்களிடம் விளங்குபவரும் சிவபெருமானின் குமாரரே! மாயையில் வல்ல அசுரர்களை அழிப்பதற்குக் கூரிய வேற்படை கொண்டு போர்செய்த வீரரே! அழகிய மயிலின் மீது அமர்ந்து திருச்செந்தூரிலே மகிழ்வுடன் விளங்கும் பெருமையுடையவரே என்று போற்றப்படுகின்றார்.

**மூன்றாவது படைவீடு – திருவாவினன்குடி – பழநி**

சோழ மண்டலமானது அறநெறி ஓங்க அறம் புரிதலும் அன்புடன் கோலாகலமான பூஜையும் மறைகளை ஓதலும் ஆசார ஒழுக்க சீலத்திலும் இரக்கத் தன்மையிலும் குருமூர்த்திகளுக்குத் தொண்டு புரிதலும் எதிர்காலத்தில் மறக்காமல் காக்கும் சிறப்பு அன்பின் உருவாகிய ஆரூரர் என்னும் சுந்தரர் தோழமை கொண்ட சேரமான் பெருமாள் நாயனார் முன்நாளில் குதிரையின் மீது ஏறி அமர்ந்து கயிலை மலையில் சென்று திருக்கயிலாய ஞான உலா என்கின்ற ஆசு கவி பாடியருளினார்.

மலைமகளாகிய பார்வதி தேவியாரின் குமாரனே! மறைகள் போற்றும் நானப்புங்கவரே! சேவற்கொடியை அழகிய கரத்தில் கொண்டு விளங்குபவரே! திருவாவினன்குடியில் விளங்கி அருள்புரியும் பெருமை உடைய பெருமானே! என்றெல்லாம் மூன்றாவது படைவீடான பழநியில் புகழப்படுகின்றார்.

**நான்காவது படை வீடு – திருவேரகம் - சுவாமிமலை**

இதனைச் சுவாமி மலை என்றும் வழங்குவர். இத்திருத்தலம் கும்பகோணத்துக்கு மேற்கே 5 கி.மீ. தொலைவில் உள்ளது.

நறும்புகையூட்டிய உடலில் அணிந்த சுகலீலா சூரபன்மனை அழித்த கதிர்வேலா பொன்மலையில் வாழும் மயில் வீரனே! திருவேரகத்தில் அமர்ந்த பெருமையுடையவரே சூரியனைப் போன்று ஒளி பொருந்திய திருவடி மலரை நாள்தோறும் வழிபட்டுத் துதிப்பதற்காகத் தமிழ் மொழியை உலகிற்கு அருளிச் செய்த மயில் வீரனே! திருவருட் செயல்கள் மிக்கு விளங்குகின்ற பழநி மலை மீது எழுந்தருளியிருக்கின்ற அழகனே! உம்முடைய திருவடி மலரானது ஆன்மாக்கள் ஒடுங்கி இலயத்து நிற்கும் ஆலயமாகும்.

அழிவைத் தருகின்ற தீயவர்களுடைய வாயிற்படிகளில் சென்று மிகவும் மனம் வருந்தி நொந்து தடுமாற்றம் கொண்டு ஆழத்தில் அழுந்தி மெலியாதவாறு, உலகெல்லாம் தொழும் உம்முடைய புகழில் ஏதாவது ஒன்றையாகிலும் சொல்லிச் சுகத்தைப் பெற்று பெருமையுடைய திருவடி மலர்களைப் பணிந்து விளங்குபவனே!

முருகப் பெருமானின் அளவற்ற புகழில் ஒன்றை உரைத்தாலும் சுகம் வாய்க்கும் என்பதாகும். அடியேனுடைய நாவானது நறுமணம் கமழும் உம்முடைய புகழ்ப் பாக்களைப் பாடித் திருவடியைப் போற்றவும் தொண்ணூற்றாறு தத்துவங்களால் ஓதப்பெறும் யாவும் உம்மையே பற்றுக்கோடாகக் கொள்ளவும் அமையப்பெறுகின்றன.

**ஐந்தாவது படை வீடு – குன்றுதோறாடல்**

முருகப் பெருமான் எங்கெல்லாம் குன்றின் மீது எழுந்தருளியுள்ளாரோ அங்கெல்லாம் சென்று வழிபடும் திருத்தலமாகும். பலமலை உடைய பெருமானே என்று இதன் வாயிலாக தெரிய வருகின்றது.

யானையும் சிங்கமும் வாழும் புனத்தின் கண் உலவும் வேடர்கள் சேர்ந்து வழிபட்டு வெறியாட்டம் கொள்ளவும் அவ்வாறு வணங்கிய அக்குன்றில் உள்ளவர்க்கு நல்வாழ்வு தந்தும் அவர்களுடன் குன்றுகள் தோறும் திருவிளையாடல் புரியும் பெருமை உடையவரே!

உம்முடைய திருவடித் தாமரைகளையும் கீதம் ஒலிக்கும் கழலையும் நறுமணம் பொருந்திய கடப்ப மாலையையும் திறன்மிக்க வேற்படையையும் அழகிய மயிலையும் திருமுகங்கள் ஆறினையும் செந்தமிழால் நாளும் ஓதி உயர்ந்திடுமாறு ஞானம் ஊறுகின்ற செங்கனி போன்ற சிவந்த திருவாயால் ஒரு சொல் அருள்வாயாக என்று போற்றப்படுகின்றார்.

*"இருப்பவல் திருப்புகழ்*
*விருப்பொடு படிப்பவர்*
*இடுக்கினை அறுத்திடும்*
*இசைத்தமிழ் நடத்தமிழ்*
*எனத்துறை விருப்புடன்*
*இலக்கண இலக்கிய*
*தரிப்பவர் உரைப்பவர்"*

கரும்பு வில்லை வளைத்து அழகிய மலர்க்கணை தொடுத்த மன்மதனை நெற்றியில் உள்ள நெருப்புக் கண்ணால் எரித்தவரும் உமாதேவியை இடப்பாகத்தில் கொண்டு விளங்குபவருமான சிவபெருமானின் புதல்வனே! நிலைத்து நிற்கும் தேவரீருடைய திருப்புகழை விருப்பத்துடன் படிப்பவர்களின் துன்பத்தினைப் போக்கிடும் என்றெல்லாம் போற்றப்படுகின்றார்.

**ஆறாவது படை வீடு – பழமுதிர் சோலை**

தேவர்களுக்கெல்லாம் தலைவனாகிய தேவேந்திரன் தியானித்து மகிழ்ந்து இன்புறும் அழகனே! காட்டில் வசிக்கும் வேடன் செய்யும் பூசையை மகிழ்ந்து ஏற்று கதிர்காமத்தில் எழுந்தருளியிருப்பவனே! உலகில் நிகழும் குற்றங்களை எல்லாம் தகுதிமி என்னும் தாளமிட்டு அழித்து ஆடுகின்ற மயிலை வாகனமாக உடையவனே!

தெவிட்டாத அமுதம் போன்ற தெய்வானையின் கணவனே! ஆறுமுகங்களும் பன்னிரண்டு கண்களும் உடையோனே! வினைவயத்தால் வந்த பிறவியானது இவ்வுலகின்கண் எமன் நெருங்காது, நற்கதிக்காண திருமாலும் நான்முகனும் முன்பு அறியாத ஞானத் திருநடத்தைப் புரிந்து வருவாயாக பிறவியை அறுக்கும் தன்மையில் இப்பிறவியானது வாய்க்கப்பெற்றது என்னும் உண்மையானது.

இறைவனின் புகழானது உலகப் பற்றினைப் போக்கவல்லது என்பதனால் அப்பரம்பொருளையே பற்றி நின்று ஆன்மாவானது சிறப்பினை அடைதல் வேண்டும்.

*"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்*
*பற்றுக பற்று விடற்கு"*

என்கிறார் வள்ளுவர். அதாவது எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன் ஓதிய வீட்டு நெறியை இதுவெ நன்னெறி என்று மனத்துக்கொள்க என்பதாக கருதப்படுகின்றது.

**முடிவுரை**

இக்கட்டுரையின் வாயிலாக முருகனின் அறுபடை வீடுகள் அவற்றின் சிறப்புகள் அனைத்தும் எடுத்துக் கூறப்படுகின்றது. முருகன் என்ற கடவுள் அனைத்து மக்களின் மனதில் நின்று நிலைத்திருப்பார். மேலும் முருகப் பெருமான் குன்றுகளிலும் மலைகள் மீதும் வாழ்ந்ததாக இவற்றின் மூலம் அறிந்து கொள்ளப்படுகின்றது. எனவே அனைவரும் முருகனை வழிபடுவோம் ஆசிர்வாதம் பெறுவோம்.

## பத்துப்பாட்டில் முருகன்

லெ. நளினி
கௌரவ உதவிப் பேராசிரியர்
கல்வியியல் மற்றும் மேலாண்மையியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

சங்க இலக்கியங்களில் பத்துப்பாட்டு என்ற பெயரே, பத்து நூல்களின் தொகுப்பு என்பதைச் சுட்டுகின்றது. ஒவ்வொரு பாட்டின் இறுதியிலும் தனி வெண்பாக்கள் சில உள்ளன. செம்மொழி எனும் தகுதி நம் கன்னித் தமிழுக்குப் பெருமையை மேலும் கூட்டியுள்ளது. நம் தமிழ்மொழி, இனியதும் கூட! முத்தமிழ், வண்டமிழ், தண்டமிழ், செந்தமிழ், பைந்தமிழ் என்றெல்லாம் புலவர் பெருமக்களால் பாராட்டப்படுவது ஆகும்.

### பத்துப்பாட்டு

சங்க இலக்கியத்தில் கலித்தொகை, பரிபாடல் தவிர, பெரும்பான்மையும், ஏனைய பாடல்கள் ஆசிரியப்பாவால் ஆனவை. மூன்றடி முதல் முப்பத்தொரு அடிவரையுள்ள பாடல்களை எட்டுத்தொகையில் தொகுத்தனர். 100 அடிகளுக்கு மேலுள்ள ஆசிரியப்பாவால் அமைந்த பாடல்கள் பத்தினைப் பத்துப்பாட்டு எனத் தொகுத்தனர். இதனைத் தொகுத்தவர். தொகுப்பித்தவர் யார் எனத் தெரியவில்லை. பாட்டும் தொகையும் என்பது பழங்கால உரையாசிரியர் வழக்கு. நச்சினார்க்கினியர் உரைச்சிறப்புப் பாயிரத்தில்,

*ஆன்றோர் புகழ்ந்த அறிவினில் தெரிந்து*
*சான்றோர் உரைத்ததண் தமிழ்தெரியல்*
*ஒருபது பாட்டும்*

எனக் கூறப் பெறுவதும்,

*பத்துப்பாட்டு ஆதிமனம் பற்றினார் பற்றுவரோ*
*எத்துணையும் பொருட்குஇசையா இலக்கணமில் கற்பனையே*

எனும் மனோன்மணீயம் சுந்தரனாரின் கருத்தும் பத்துப்பாட்டின் பெருமையை உணரப் போதுமானவை. பத்துப்பாட்டைப் பற்றிய பழைய வெண்பா

*முருகு, பொருநாறு, பாண்இரண்டு, முல்லை,*
*பெருகு வளமதுரைக் காஞ்சி, மருவினிய*
*கோல நெடுநல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்*
*புகலை கடாத்தொடும் பத்து*

1. திருமுருகாற்றுப்படை, 2. பொருநர் ஆற்றுப்படை, 3.சிறுபாண் ஆற்றுப்படை, 4. பெரும்பாண் ஆற்றுப்படை, 5. முல்லைப்பாட்டு, 6. மதுரைக்காஞ்சி, 7.

நெடுநல்வாடை, 8. குறிஞ்சிப்பாட்டு, 9. பட்டினப்பாலை, 10. மலைபடுகடாம் என்பன பத்துப் பாட்டுக்கள் முல்லைப்பாட்டு குறிஞ்சிப்பாட்டு என்பன பாட்டு என்றே அழைக்கப் பெறுகின்றன. இவற்றுள் 1, 2, 3, 4, 10 ஆகிய ஐந்தும் ஆற்றுப்படை நூல்கள் ஆகும்.

திருமுருகாற்றுப்படை

முருகனிடம் வழிப்படுத்துதல் என்பது பொருள். ஆற்றுப்படைக்கு இலக்கணம் தொல்காப்பியம் கூறியுள்ளது.

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பேற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச்*
*சென்று பயன்எதிரச் சொன்ன பக்கமும்* (தொல்.1937:3-9)

கூத்தனோ, பாணனோ, தான்பெற்ற செல்வத்தைக் கூறி எதிர்வந்த கூத்தன், அல்லது பாணனிடம் அவ்வள்ளலை நாடினால் நீயும் என்னைப் போன்று செல்வம் பெறலாம் என்று வழிப்படுத்துவது ஆற்றுப்படை. ஆறு-வழி, படை-படுத்துதல், பத்துப்பாட்டில் ஏனைய ஆற்றுப்படை நான்கும் இந்நிலையில் அமைந்தன. யாரை ஆற்றுப்படுத்துகிறானோ அவர்பெயரால்தான் அவ்வாற்றுப்படை பெயர் அமையும். சிறுபாணனை ஆற்றுப்படுத்தியதால் சிறுபாணாற்றுப்படை, பொருநரை ஆற்றுப்படுத்தியதால் பொருநராற்றுப்படை, திருமுருகாற்றுப்படை பெயர் அவ்வாறு அமையவில்லை. முருகனிடம் ஆற்றுப்படுத்துவதால் முருகாற்றுப்படை. பாட்டுடைத்தலைவன் முருகனே. பத்துப்பாட்டிற்குக் கடவுள் வாழ்த்துப் போன்று திருமுருகாற்றுப்படை அமைந்துள்ளது. நக்கீரரால் பாடப்பெற்றது. 317 அடிகளை உடையது. இவ்வாற்றுப்படை காலத்தால் பிந்தியது என்ற கருத்தும் உண்டு. சைவத் திருமுருறைகளுள் பதினோராம் திருமுறையிலும் இவ்வாற்றுப்படை சேர்க்கப் பெற்றுள்ளது. சைவர்கள் நாள்தோறும் பாராயணம் செய்யும் நூல். இதனை ஓதினால் பயன்கிடைக்கும் என்பதைப் பிற்காலத்தெழுந்த வெண்பா கூறுகிறது.

*நக்கீரர் தாம்உரைத்த நன்முருகாற்றுப் படையைத்*
*தற்கோல நாள்தோறும் சாற்றினால் முற்கோலி*
*மாமுருகன் வந்துமனக் கவலைதீர்த் தருளித்*
*தான்நினைத்த எல்லாம் தரும்.*

திருமுருகாற்றுப்படையில் ஆறுபடை வீடுகளின் சிறப்பும், அவற்றில் நடைபெறும் செயல்களும் கூறப்பெற்றுள்ளன. திருப்பரங்குன்றம் பகுதியில் அவன் திருவுருவச் சிறப்பும், சூரரமகளிர் ஆடலும், சூரசம்காரமும், செல்வார் பெறும் பரிசிலும் கூறப்பெற்றுள்ளன. திருச்செந்தூராகிய திருச்சீர் அலைவாயில் அவன் யானையின் இயல்பையும், ஆறுமுகங்களும், பன்னிரு கைகளும் ஆற்றும் செயல்களையும் கூறியுள்ளார். திருவாவினன்குடிப் பகுதியில் முனிவர்களின் செயல்பாடுகள், தேவர், தேவமகளிர் இயல்பு போன்றவை உள்ளன. திருவேரகத்தில் மந்திரம் ஓதுவார், அர்ச்சகர்நிலை, முருகன் இருத்தல்

போன்றவற்றைக் காண்கிறோம். குன்றுதோறாடலில் குன்றக் குரவை ஆடும் மகளிர்நிலை பேசப்பெற்றுள்ளது. பழமுதிர்ச்சோலைப் பகுதியில் வெறியாட்டு இழைத்தல், முருகனைப் புகழ்ந்துபாடுதல், அவன் அருள் செய்து பரிசில் நல்குதல் போன்றவற்றுடன் பழமுதிர்ச்சோலை மலையழகும் கூறப்பெற்றுள்ளன. முருகனைப் போற்றும் முனிவர் அறிவை.

**பொருநர்ஆற்றுப்படை**

சோழன் கரிகாற் பெருவளத்தானைப் பாடியுள்ள பாடல்கள் பத்துப்பாட்டில் இரண்டு. அவற்றுள் ஒன்று முடத்தாமக் கண்ணியாரால் பாடப்பெற்ற 248 அடிகளைக் கொண்டது. இவ்வாற்றுப்படை குதிரைகள் பூட்டிய தேரினைத் தந்து, பொருநனின்பின் ஏழடி வந்து வழியனுப்புகின்றான்.

*பால்புரை புரவி நால்குடன் பூட்டிக்*
*காலின் ஏழடி பின்சென்று, கோலின்*
*தாறு களைந்து ஏறுஎன்று ஏற்றி* (பொருந.165-167)

பட்டினப்பாலையிலும் கரிகாற் பெருவளத்தானின் சிறப்பினைக் காணலாம்.

**சிறுபாண் ஆற்றுப்படை**

சிறிய யாழைக்கொண்டு பாடும் பாணனை வழிப்படுத்திய பாடல். பரணர், யாழ்ப்பாணர், இசைப்பாணர், மண்டைப்பாணர் எனப் பல வகைப்படுவர். இப்பாடலில் வரும் பாணன் சிறிய யாழை உடைய பாணன், 'இன்குரல் சீறியாழ் இடவயின் தழீஇ' (35) என்பதால் அறிகிறோம். கடைஏழு வள்ளல்கள் காலத்திற்குப் பிற்பட்டவன் இவன் என்பது தெளிவாகிறது. கடைஏழு வள்ளல்கள் பூண்ட கொடைநுகத் தடியைத்தான் ஒருவனாகப் பூண்டான் எனப் புலவர் இவனைப் பெருமைப்படுத்துகிறார். விறலியின் வருணனை தொடைநயம் படித்து இன்புறத்தக்கது,

*சேர்ந்து உடன்செறிந்த குறங்கின், குறங்குஎன*
*மால்வரை ஒழுகிய வாழை, வாழைப்*
*பூவெனப் பொலிந்த ஓதி, ஓதி*
*நளிர்சினை வேங்கை நான்மலர் நச்சி*
*கனிச்சுரும்ப அரற்றும் கணங்கின், கணங்குபிதிர்ந்து*
*யாணர்க் கோங்கின் அவிர்முகை எள்ளி*
*பூண்அகத்து ஒடுங்கிய வெம்முலை*

**பெரும்பாண் ஆற்றுப்படை**

பேரியாழை வாசிக்கும் பாணனை வழிப்படுத்திய பாடல். பரிசில் பெற்றுவரும் பெரும்பாணன், பரிசில்பெறச் செல்லும் இராவனான பெருமையைப் பேசும் பாட்டு தொண்டைமான் இளந்திரையனின் பெருமையேப் பேசும் பாட்டு தொண்டைமான் இளந்திரையன், வெண்வேல்கிள்ளி என்ற சோழனுக்கும், பீலிவளை என்ற நாகக் கன்னிகைக்கும் பிறந்தவன் என்று மணிமேகலை

கூறுகிறது. காஞ்சி மாநகரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செலுத்தியவன் அவன். 500 அடிகளைக் கொண்ட இப்பாடலைப் பாடியவர் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாணாறு என்ற பெயரும் இப்பாட்டுக்கு உண்டு.

யாழின் வருணனை ஐந்திணைகள், வருணனை, ஐவகை நிலத்தில் வாழும் மக்களின் இயல்பு, அவர்கள் விருந்து உபசரிக்கும் முறைகள், இளந்திரையனின் செங்கோல் முறையால் வழிப்போவாருக்கு விலங்குகள் கூடத்துன்பம் செய்யாமை, உப்பு வாணிகன் இயல்பு, எயிற்றியர் செயல், வீரக்குடிமகள் இயல்பு, மறவர்வீரம், இடையர் குடியிருப்பின் தோற்றம், ஆய்மகள் செயல், இடையரின் பண்புகள், உழவர் குடியிருப்பின் அமைப்பு, உழவர் செய்கை, மருத நிலத்தின் நிகழ்ச்சி, வலைஞர் குடியிருப்பின் இயல்பு, அந்தணர் ஒழுக்கமுறை, உணவு முறைகள், நீர்ப்பெயற்று என்னும் ஊரின் பெருமை. பட்டினத்தின் சிறப்பு, கலங்கரை விளக்கத்தின் மாண்பு, திருவெ.்.காவில் திருமால் பள்ளி கொண்டுள்ள நிலை, இளந்திரையனுடைய வீரம், கொடை போன்றவற்றின் சிறப்புக்கள் அனைத்தும் கூறப்பெற்றுள்ளன. எயினர் இருப்பிடத்தை 'ஈத்திலை வேய்ந்த எய்ப்புறக் குரம்பை (88) எனவும் உழவர் குடியிருப்பைக் 'கருவை வேய்ந்த கவின்குடிச் சீறூர் (191) எனவும், 'புதுவை வேய்ந்த கவிகுடில் முன்றில்' (225), எனவும் 'ஊகம் வேய்ந்த உயர்நிலை வரைப்பின்' (122) எனவும் சுட்டியுள்ளது.

**மலைபடுகடாம்**

மலையில் படுகின்ற ஓசை என்பது பொருள். மலைக்கு யானையை உவமித்து அதன் மதம் பொழியும் நீராகிய கடாத்தை ஓசையென ஆகுபெயராக்கி மலைபடுகடாம் என இப்பாட்டிற்குப் பெயர் தந்துள்ளனர்.

*மலைபடு கடாஅம் மாதிரத்து இயம்ப* (348)

என்ற கூற்றைக் கொண்டு, பாடலில் வரும் சிறந்த தொடராகிய மலைபடுகடாஅம் என்பதையே பாடலுக்கப் பெயராக்கியுள்ளனர். பதிற்றுப்பத்துப் பாடல் தலைப்புக்கள் அனைத்தும் இவ்வாறு அமைந்தவை. நிலப்பரப்பு அனைத்துமுள்ள செங்காந்தள் மலர் இதழ்கள் நெருப்புப் போன்று காட்சி தருகின்றன. இவ்வருணனைக் காட்சி படித்து இன்புறத்தக்கது,

*தீயின் அன்ன ஒண்செங் காந்தள்*
*தூவல் கலித்த புதுமுகை ஊன்செத்து*
*அறியாது எடுத்த புன்புறச் சேவல்*
*நெருப்பின் அன்ன பலஇதழ் தாஅய்*
*வெறிக்களம் கடுக்கும் வியல்அறை* (145-150)

**முல்லைப்பாட்டு**

முல்லை ஒழுக்கத்தைப் பற்றிய பாட்டு இருத்தலும் இருத்தல் நிமித்தமும் முல்லைக்குரிய உரிப்பொருள் தலைவி, தலைவனுக்காக அவன்

கூறிச்சென்ற காலம் கடந்த பின்பும் பொறுமையுடன் இருக்கிறாள். தலைவனும் போர்ப் பாசறையில் இவளை எண்ணிக் கொண்டிருக்கிறான். முல்லை நிலம், கார்காலம், மாலைக்காலம் போன்ற முல்லைத்திணைச் செய்திகள் இப்பாடலில் உள்ளன. இது அகப்பாடல்,

*மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்*
*சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்* (தொல்.1000)

என்ற தொல்காப்பிய இலக்கணத்திற்குத்தக இப்பாட்டுடைத் தலைவன் பெயர். இது அகப்பாடல் ஆதலால் குறிக்கப்பெறவில்லை.

**நெடுநல்வாடை**

நீண்ட நல்ல வாடை என்பது பொருள். காற்றினைப் பற்றிக் கூறும்போது தெற்கிலிருந்து வருவது தென்றல், குணக்கலிருந்து (கிழக்கு) வருவது கொண்டல், குடக்கிலிருந்து (மேற்கு) வருவது கோடை, வடக்கிலிருந்து வருவது வாடை எனக் கூறுவர். வடக்கிலிருந்து வரும் வாடைக் காற்றால், மக்கள், விலங்குகள், பறவைகள் குளிரால் துன்புறுகின்றன. தலைவனைப் பிரிந்த தலைவியும் வாடைக் காற்றால் துன்புறுகிறாள்.

**குறிஞ்சிப்பாட்டு**

குறிஞ்சி ஒழுக்கம் பற்றிய பாடல் குறிஞ்சி பாடுவதில் வல்ல கவிஞரான கபிலர் பாடிய பாட்டு ஆரிய அரசன் பிரகந்தனுக்குத் தமிழ்ப் பண்பாட்டினைத் தெரிவிப்பதற்குப் பாடிய பாடல். 261 அடிகளைக் கொண்ட பாடல். இது அகத்திணைப் பாடல். குறிஞ்சிக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் மூன்றையும் கொண்ட இப்பாடல் அறத்தொடு நிலைத்துறையைச் சார்ந்தது. தோழி, செவிலியிடம் நடந்தவைகளைக் கூறுகிறாள். சுனைநீராடல், 99 வண்ண மலர்களைக் குவித்து மகிழ்தல், தலைவனது அழகைக் கூறல், தலைவி, தலைவன் காதல் உணர்வுகள், மாலைக் கால வருணனை, தலைவன் வரும் வழியின் அருமை போன்றவை தரப்பெற்றுள்ளன. மலர்ப் பண்பாடு, உலகப் பண்பாடு, உலகம் முழுவதும் பெரியோரை வரவேற்று மகிழ மலர்க்கொத்துத் தருகின்றனர். முல்லை மலர் கற்பைக் குறிப்பதாகக் கூறுவர். ஒரு நாட்டின் பண்பாட்டை உணர்த்துவது அந்த நாட்டின் மலர்களே. ஆதனால்தான் குறிஞ்சிப் பாட்டில் தமிழ்நாட்டு மலர்களின் 99 வகைகளைக் கூறுகிறார் கபிலர்.

*ஒன்செங் காந்தள், ஆம்பல், அனிச்சம்,*
*தண்கயக் குவளை, குறிஞ்சி, வெட்சி,*
*செங்கோடு வேரி, தேமா, மணிச்சிகை*
. . . . . . . . . . . . . . . .
*மாஇரும்குருந்தும், வேங்கையும்பிறவும்* (92-95)

என மலர் வகைகளை அடுக்குகிறார். வேங்கை மலர்ந்தால் மணத்திற்குரிய காலம் வந்துவிட்டது என்பது பொருள். மலர் மலர்வதைக் கொண்டு பொழுதைக் கணக்கிட்டனர் நம் மகளிர். மலர்களின் பங்கு மனித வாழ்க்கையில் மிக

முக்கியமான ஒன்று. மலருக்கு மணம் போன்று வாழ்க்கைக்கு மணம் தருவது திருமணம். அதையும் தருவதாகச் சொல்கிறான் தலைவன்.

*தேர்இறை முன்கை பற்றி, நுமர்தர*
*நாடுஅறி நல்மணம் அயர்கம், சில்நாள்*
*கலங்கல் ஓம்புமின், இலங்குஇழை யீர்என*
*ஈர நல்மொழி தீரக் கூறுகிறான்* (231-234)

**பட்டினப்பாலை**

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் தேட நினைக்கிறான். துலைவியின் மிகுதியான அன்பு அவ்வெண்ணத்தைத் தடைசெய்கிறது. தன்நெஞ்சிற்குச் சொல்கிறான்,

*முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வார்இரும் கூந்தல் வயங்குஇழை ஒழிய*
*வாரேன் வாழிய நெஞ்சே. . .* (218-220)

*அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்*
*திருமா வளவன் தெவ்வர்க்கு ஓக்கிய*
*வேலினும் வெய்ய கானம் அவன்*
*கோலினும் தண்ணியது தடமென் தோளே* (298-301)

சோழனது வேல் போன்றது கடுமையானது காடு. இப்பாட்டில் பாண்டியன் படையெடுப்பு, போர் நிகழ்ச்சிகள், பகை நாடுகளைப் பாழாக்குதல், வேந்தர் எழுவரை வெற்றி கொள்ளல், பாண்டிய நாட்டின் ஐவகை நிலங்களின் செய்திகள், அங்குக் கிடைக்கும் பொருள்கள், மதுரையின் மாட்சி, மன்னனின் வளமிக்க ஆட்சி ஆகியன கூறப்பெற்றுள்ளன.

*திரையிடு மணலினும் பலரே உரைசெல*
*மலர்தலை உலகம் ஆண்டுகழிந் தோரே*

என்று நிலைபெறாத வாழ்க்கை பற்றிப் பேசி, நிலைபெறுவனவற்றைச் செய்யுமாறு கூறுகிறார் புலவர். பாட்டியல் பாதி மதுரைநகர் பற்றிப் பேசுவதால் 'மாநகர்ப் பாட்டு' என்றும் கூறலாம். பத்துப்பாட்டில் ஐந்து ஆற்றுப்படைகள், இவை புறத்திணைப் பாடல்கள், இவற்றொடு மதுரைக்காஞ்சியும் புறத்திணைப் பாடலே. ஏனைய முல்லைப்பாட்டு, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை நான்கும் அகத்திணைப் பாடல்கள் ஆகும்.

**முடிவுரை**

இவ்வாறாக பண்டைய தமிழரின் நாகரீகம் வாழ்வியல் நெறிகள் வழிபாட்டு முறைகளை இயற்கை எழிலோடு இறையுணர்வையும் வரலாற்றுக் கருவூலத்தோடு கலை சமயம் பொருளாதாரம் முதலிய பல செய்திகளின் களஞ்சியமாய்ப் பத்துப்பாட்டு நூல்கள் திகழ்கின்றன.

# வண்ணச்சரபர் வகுத்த கௌமார வகைகள்

பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்
கௌமார மடாலயம்
கோவை 49.

இப்பொழுது இந்துமதம் என வழங்கப்படும் வைதிக சமயம் வழிபடு கடவுளின் அடிப்படையில் சௌரம், சைவம், சாக்தம், வைணவம், காணாபத்தியம், கௌமாரம் என ஆறு உட்பிரிவுகளைக் கொண்டுள்ளது. அறுவகைச் சமயம் எனப்படும் இவை முறையே சூரியன், சிவபெருமான் ஆகியோரை முழுமுதற் கடவுளாக ஏற்று வழிபடுவன ஆகும். கடவுளர்களின் பெயர்களும் வடிவங்களும் வேறுவேறு ஆகக் கூறப்பட்டாலும் எல்லாம் ஒரே பரம்பொருளின் நாமரூப பேதங்களே என்பதனை அனைத்துப் பிரிவைச் சேர்ந்த மெய்யியல் ஞானிகளும் ஏற்றுக் கொள்கின்றனர். "ஏகம் சத் விப்ராஹு பஹீதா வதந்தி" என்னும் இருக்கு வேத வாக்கியம் இதற்கு மேல்வரிச் சட்டமாக இலங்குகிறது. இந்த அறுசமய வழிபாட்டு முறை கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த ஆதிசங்கரரால் ஏற்படுத்தப்பட்டது எனச் சொல்லப்படுகிறது.

இந்த ஆறுசமயங்களுள் முருகவழிபாடாகிய கௌமாரம் தமிழகத்திற்கே சிறப்புரிமை வாய்ந்தது எனக் கூறுவது சற்றும் மிகையாகாது. தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்தே தமிழ்நாட்டில் முருக வழிபாடு செழித்திருந்து வருகிறது. தமிழர்கள் முருகவேளைக் குறிஞ்சித்திணைக் கடவுளாகவும், தமிழ்மொழிக்கும் வாழ்வு நெறிக்கும் முதல்வனாகவும்,மட்டும் கொள்ளாமல் பரம்பொருளாகவே போற்றுகின்றனர். முருகப்பெருமானைத் தமிழ்க்கடவுள் என்றே பெருங்காதலுடன் நேசித்துப் பூசிக்கின்றனர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளும் சங்கராசாரியரைப் போல ஆறு வழிபாட்டுச் சமயங்களையும் சமமாகப் பாவித்து நேசிப்பவர் ஆயினும் அடிப்படையில் முருக வழிபாட்டாளர் ஆகிய ஒரு கவுமாரர்தான். பொது நெறி பற்றி அவர் இயற்றியிருக்கும் சாத்திரப் பனுவல்களுக்குக் கூடக் கௌமார முறைமை, கௌமார விநோதம் கௌமார தீபம், கௌமாரநூல் என்பன போலவே பெயரிட்டுள்ளார். சுவாமிகளே தன்னைப் பற்றிக் கூறும்போது,

*" பொரு இல ஆம் ஆறுவகைச் சமயங் கட்கும்*
*பொதுவே நான்; என்றாலும் புவியோர் ஒப்பார்;*
*குருபரம் என்று உணர்த்து கவுமாரம் தொட்டே*
*குறிகண்டேன்; அபிமானக் குணமும் உண்டே"*

கௌமார முறைமை- 45

என்கிறார். வண்ணச்சரபம் சுவாமிகள் ஒரு பரம்பொருளின் ஆறு பண்புகளே ஆறு வடிவங்களாக உருவகிக்கப்படுகின்றன; அவை ஏற்றத்தாழ்வு இல்லாதவை எனத் தெளிவாகக் கூறுகிறார்.

*" பரம்பொருளின் பிரகாசம் பரிதிப் புத்தேள்;*
*பல உலகும் ஒடுக்குகின்ற பண்பே ஈசன்;*
*கரந்தவற்றை உதவுவது சக்தி; யாவும்*
*காப்பதுமால்; அடியவர்தாம் கருதும் செய்கைக்கு*
*உரம்கொடுத்து முடித்திடுதல் கணேசன்; ஞான*
*உபதேசம் புரிந்திடுதல் ஒள்வேற் கையான்;*
*வரம் பெறும்மட்டு உபாசித்துப் பெற்றோர் இந்த*
*வகை உணர்வார்; மற்றையர்க்கு வம்பு ஆம்; அன்றே.*

(கௌமார முறைமை, 99)

என்பது அவர் வாக்கு - இக்கருத்தின்படி ஞானதேசிகராக விளங்கி உபதேசிக்கும் குருத்துவமே கௌமாரம் ஆகிறது. எந்தச் சமயத்தில் குருநாதர் இல்லை? எனவே எல்லாச் சமயங்களும் கௌமாரத்திற்கு நெருங்கியதுதான் என்பது சுவாமிகளின் விளக்கம்.

*" ஆரிய நூல் தலைவர் உரை சமய பேதம்*
*ஆறும் எங்கள் கவுமாரத்து அணித்து ஆம் அன்றே"*

(கௌமார முறைமை, 21)

என்பது அது. கொலைபுலையை ஏற்காத சமயம் எதுவாக இருப்பினும் ஆன்ம ஈடேற்றத்திற்கு வழிவகுக்குமேல் அதனைக் கவுமாரம் தழுவி ஏற்றுக் கொள்ளும் என்கின்ற சுவாமிகள் தான் உபதேசிக்கின்ற கௌமார சமயத்திற்கும் ஆறு உட்பிரிவுகளை வகுத்துள்ளார். வழிபடுவோரின் பக்குவத்திற்கேற்பவும் மெய்யியற் கொள்கைக்கு ஏற்பவும் இவை அமைந்துள்ளன எனலாம். இவ்வகைப்பாடு கௌமார விநோதம் என்னும் நூலுள் கூறப்பட்டுள்ளது.

கௌமார விநோதம் என்பது வண்ணச்சரபரால் இயற்றப்பட்டுள்ள சாத்திர நூல்களுள் ஒன்று ஆகும். அது பாயிரமாக 6 செய்யுள்கள் நூலாக 18 எண்சீர் விருத்தங்கள் நூற்பயன் ஒன்று ஆக மொத்தம் 25 பாடல்களால் ஆனது. நூல் குருவருள் எனத் தொடங்கி அந்தாதித் தொடை பெற்று நடந்து குருவாவானே என மண்டலித்து முடிகிறது. இந்தக் கௌமார விநோதத்தின் பதினொன்றாம் விருத்தத்தில் இருந்து 18 ஆம் விருத்தம் வரை கௌமார சமயத்தின் ஆறு வகைகள் கூறப்படுகின்றன. பதினொன்றாவது விருத்தம் ஆறுவகைகளின் பெயர்களை அறிமுகப்படுத்துவதாக அமைகிறது.

*"உள்ளபடி சொல்லுகின்றேன் ஆறு பேதம்*
*உடைய கவுமரத்தில் உலகம் ஒன்று;*
*தள்ளரிய மகாவிரதம்; துவிதம்; அப்பால்*
*தாங்கரிய அத்துவிதம்; சகலர் தம்பால்*
*விள்ளரிய சமரசம்; பின் அனைத்தும் ஒன்றா*
*விளங்குகின்ற அதீதம் என்பது ஆறும் பேர் ஆம்;*
*எள்ளரிய நிலைஉணர்ந்த பெரியோருக்கு ஆகும்;*
*இகதலத்தில் பிறந்து இறப்பார் ஏற்றி டாரே."* (11)

இதனால் உலகாயத கவுமாரம், மகாவிரத கவுமாரம், துவித கவுமாரம், அத்துவித கவுமாரம், சமரச கவுமாரம், சமயாதீத கவுமாரம் என்பன இவற்றின் பெயர்களும் வரிசையும் ஆகும். சில வகைகளுக்குச் சுவாமிகள் கொடுத்துள்ள அடைச்சொற்கள் கூர்ந்து நோக்குதற்கு உரியன ஆகும்.

தள்ளரிய மகாவிரதம்: முருகப்பெருமானைப் புராண நெறியில் ஏற்றுக் கொண்டு துறவு வேடமும் பூண்டு உலகியல் ஆசாபாசங்களைத் துறக்கமுயன்றும் முற்றிலும் முடியாதவர்களாக இருப்பவர்களே இந்நெறியினர். முருகப் பெருமானின் புராண வரலாறும், தீவிர உபாசனைக்கு ஆன முயற்சியும் மிகமிக இன்றியமையாதன ஆதலின் தள்ளரிய என்றார். பௌராணிக கௌமாரம் என்பதும் இதுவே.

தாங்கரிய அத்துவிதம்: எல்லா பேதங்களையும் தாண்டி எங்கும் எதிலும் இறைவனாகக் குமரவேளைக் காண்பது எளிய செயல் ஆகாமல் மிக முயல வேண்டியது ஆதலின் தாங்கரிய என்றார். அத்துவித கவுமாரர்களின் அணுகுமுறை பக்தியோடு அதிகம் அறிவையும் சார்ந்த ஒன்று.

சகலர்தம்பால் விள்ளரிய சமரசம்: மலங்களோடு உலகியல் தொடர்பு உள்ளவர்கள் யான் எனது என்னும் உணர்வில் மேம்பட்டு இருப்பர். இவர்கள் மற்றவர்களின் கருத்தையோ செயல்களையோ எளிதில் ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். எனவே அவர்களிடத்தில் இந்தச் சமரச கௌமாரக் கோட்பாட்டைக் கூறுவதே சற்று சிரமமானதுதான்; அவர்கள் செவிகொடுத்துக் கேட்பார்களோ முற்றிலுமாகப் புறக்கணித்து விடுவார்களோ என்ற தயக்கம் இருக்கும். எனவே சொல்லுவதற்க்குக் கூட அரிதாகிய என அடை புணர்த்தார்.

தொடர்ந்து இந்த அறுவகைக் கௌமாரத்தையும் சுருக்கமாக அறிமுகம் செய்துகொள்வோம். ஈகை, இரக்கம், கொலைபுலை இன்மை முதலிய தலையாய நற்பண்புகள் இந்த ஆறு கௌமார நெறிகளுக்கும் இன்றியமையாதன என்பதை அழுத்தமாக மனத்தில் நிறுத்துக் கொள்ள வேண்டும்.

**1. உலகாயத கவுமாரம்**

முருகப்பெருமான் ஆலயங்கள் பல இருப்பினும் மலைக்கோயில்களையே தேடி வழிபடுவோர், தெய்வநம்பிக்கையும் வழிபாடும் உள்ள அனைத்துத் தொண்டர்களுக்கும், வேலாயுதத்தை ஏந்தியுள்ள குமரக்கடவுளே நன்மை தருபவர் என உணர்ந்து தெளிவடைந்து, தம் உடல் வருந்தும்படி பணிபுரிபவர்கள் உலகியல் கவுமாரர் எனப்படுவர். இவர்கள் உலகியல் இன்பவேட்கையை நீக்காதவர் ஆவர்.

**2. மகாவிரத கவுமாரம்**

மகாவிரத கவுமாரர் என்போர் காவி உடை அணிந்து, தலையில் சடை வளர்த்து, திருநீற்றைத் தண்ணீரில் குழைத்துப் பூசிக்கொண்டு, முருகனைச் சிவபெருமானின் நெற்றிக்கண்ணில் உதித்தவர், சூரனை வென்றவர், இந்திரனுக்கு வாழ்வளித்தவர், பன்னிரண்டு கைகளை உடையவர், ஆறு

முகங்களைப் பெற்றவர், கார்த்திகை மகளிரால் வளர்க்கப்பெற்றவர், ஆறு குழந்தைகளாக இருந்து ஒன்றாகச் சேர்க்கப்பட்டவர் என அடையாளம் கண்டு வழிபடுவார்கள். இவர்கள் உலகியல் ஆசைகளிலிருந்து ஓரளவு விடுபட்டும் முழுவதும் விடுபடாதவர் ஆவர்.

3. துவித கவுமாரம்

ஒரு திருமுகம், நான்கு கைகளோடு வேற்படை தாங்கியுள்ள இவரே பரம்பொருள்; வேறு தெய்வம் இல்லை என்றும், நன்மைகள் அனைத்தையும் பெற்றுள்ளவராகிய சிவகுருநாதன் இவரே என்னும் கொள்கையை உடையோர் துவித கவுமாரர் எனப்படுவர். இவர்கள் முருக பரத்துவத்தை நிலைநிறுத்த அஞ்சாத சேவல் போன்ற போர்க்குணத்தை உடையவர்கள்.

4. அத்துவித கௌமாரம்

முருகன் என்னும் பெயரும் வடிவும் பெற்று விளங்குவது தனியான ஒரு கடவுள் அல்ல; அது பரம்பொருளே என்றும், போர்வெற்றி முதலிய சிறப்புக்களால் புகழப்படும் அனைத்துத் தெய்வங்களும் ஒரு முருகனின் மாற்று வடிவங்களே என்றும் திருநீற்றைத் தண்ணீரில் குழைத்துப் பூசுபவர்கள் சமயநெறி பிறழ்ந்தவர்கள் என்றும், எல்லாச் சித்தர்களும் அவரே என்றும் கருதுபவர்கள் அத்தவித கவுமாரர் ஆவர். இவர்கள் முருகன் சூரனை அழித்தது ஒரு நிகழ்வு அல்ல; ஆணவ மலத்தை அழிப்பதன் உருவகமே என்பார்கள். இப்பரம்பொருள் அடியவர் விரும்பியவை அனைத்தையும் தரவல்லது என்பதும் இவர் கோட்பாடு ஆகும். இந்த நிலையில் புராணங்களையும் உருவ வருணனைகளையும் கடந்து அருவபாவனை தலைப்பட்டு விடுதலைக் காணலாம்.

5. சமரச கவுமாரம்

சமரச கவுமாரர்கள் என்போர் ஞானத்தில் நாட்டம் மிக்கவர்கள்; முழு நீறு பூசுபவர்கள். கைகளில் ஒரு தண்டை ஏந்தியிருப்பர்; வேலாயுதத்தை மிகவும் விரும்புவார்கள். அதாவது வேற்படையை முருகப்பெருமானின் அரு உருவத் திருமேனியாகக் கொண்டு வழிபடுபவர்கள். பொதுவாக மக்களால் கூறப்படும் புராணக்கதைகளில் நாட்டம் செலுத்தாதவர்கள். உலகம் முழுவதிலும் எங்கும் கொலைபுலை இல்லாமை செய்பவன் எவனோ அவனே குமாரன் என்று கூறத்தக்கவன் என்னும் கொள்கையர். இவர்கள் காமத்தை வென்றவர்கள். இந்த வரைவிலக்கணத்தின்படி வண்ணச்சரபர் தண்டபாணி சுவாமிகளை ஒரு சமரச கவுமாரராகக் கூறலாம் எனத் தோன்றுகிறது.

6. சமயாதீத கவுமாரம்

சமரச கௌமாரத்தைக் கடைபிடித்து ஒழுகிப் பக்குவம் பெற்ற பின்பு சமயாதீத கவுமார நிலை தானே ஏற்படும்; இது முயன்று அடைவது அல்ல; இயல்பான வளர்ச்சியாக வருவது. இந்த நிலை எய்தியவர் எல்லா அணிகலன்களையும் மூலமாகிய பொன்னாகவே நோக்குவதுபோலத் தெய்வ

நாமரூபங்கள் அனைத்தையும் ஒரு பரம்பொருளின் மாற்று வடிவங்களாகவே உணர்வார்கள். இந்நிலையில் இறை தன் அடியார்களுக்குச் சித்தாடும் வல்லமையையும் தவறாமல் அளிக்கும் என உறுதியாகக் கூறுவார்கள்.

இவ்வாறு சமயாதீத நெறியால் சித்தி வல்லமை பெற்றவர்கள்தான் கடவுளின் குமாரராகக் கருதப்படுவார்கள்.அதனால் இவர்களே உண்மையான கௌமாரர் ஆவர். இந்தச் சமயாதீதமாகிய குமார நிலையை எய்துவதற்கு வழிகாட்டும் ஞானமே கௌமார தரிசனம் ஆகும். இந்த ஆறுவகையும் ஒரு சாதகனை ஈடேற்றும் படிநிலைகள் ஆகும். இவற்றுள் மேல்கீழ் இல்லை. அனைத்தும் இன்றியமையாத நிலைகளே. இதனை அடுத்துக் கௌமார விநோதத்தின் ஏழு பாக்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

புடவியில் பற்பல கோயில் இருக்கக் கண்டும்
பொருப்பிடத்துக் கோயில்கட்கே போய்வந்து எந்தக்
கடவுள்தம் அடியார்க்கும் இனிய தெய்வம்
கதிர்வேற்கைக் குமரன் எனக் கண்டு தேறி
உடல் வருந்த விரதம் உற்றுத் தொண்டுசெய்வது
உலகத்தோர் கவுமாரம் உரைசெய்தேனே.

செய்யநிறக் கலைபூண்டு சடையோர் ஆகித்
திருநீற்றைக் குழைத்து அணிந்து, சிவனார் நெற்றி
மையம் உறும் விழிப்பொறியா வந்தான் சூர்மா
மடியவென்றான் தேவர்பிரான் வாழச் செய்தான்
கை அணி முந்நான்கு உடையான் முகம் ஆறு உள்ளான்
கார்த்திகைப் பொண்ணார் வளர்த்த கந்தன் என்பார்;
வையமயல் கடந்து நின்றும் கடவாதார் ஆம்
மகாவிரத கவுமார மார்க்கத் தோரே

ஓர் முகத்தான் நாலுகையான் சருவ சித்தி
வடிவம் ஆம் வடிவேல் ஒன்று உடையான் அன்றி
யார் முதல்தேவு? இவன் சந்நிதானத்து
எண் இறந்த சிவன் தோன்றி இறந்தான் என்பார்
சீர்முழுக்கத் தன் உடைமை ஆம் என்று ஓதும்
சிவகுருவே தஞ்சம் என்பார் செந்நீர் ஓடும்
போர்முகத்தில் சேவல் ஒப்போம் என்பார்; அஞ்சார்
புகழ்த் துவித கவுமாரம் பொருந்தி னோரே

பொருந்தும் அத்துவிதக் கவுமாரத் தோர்க்கு எல்லாம்
பொருள் ஒன்றே; வேல் எடுத்துப் பொருவோர் எல்லாம்
திருந்தும் அறிவுடையவர்க்கு முருகன் என்பார்;
திருநீற்றை நனைப்போரே தீயோர் என்பார்;
முருந்து அனைய நகைமடவார் விரும்பும் சித்தர்
முழுமையும் மற்று அவன் என்று மொழிவார் யாவும்

தரும்திறமை உறும் அவன் தன் பகைஆம் சூரன்
தவிர்க்கரிய ஆணவநோய் தான்என் பாரே

பாருலகில் சமரசம் ஆம் கவுமாரத்தோர்
பழிக்கரும்சீர்ப் புலமைநலம் பற்றும் மேலோர்
சீருடைய முழுநீறும் தண்டும் கொண்டு
திருத்தண்டபாணி எனத் திகழ்வார்; அப்பால்
கூர் உலவாத் திருக்கைவேற்கு ஆசை கொள்வார்;
குவலயத்துக் கதைசிறிதும் குறியாக் கொள்ளார்
ஆரும் உயிர் கொன்று அருர்தா நலம்செய்வோனே
அழகிய குமாரன் என்றே அறைவார் தாமே.

தாமநறும் குழல்மடவார் தமக்கும் அஞ்சாச்
சமரசம் ஆம் கவுமாரம் தானே முற்றில்
கா மன் என் உம்பர்க்கு அறியாது ஒளிர் அதீதக்
கவுமாரம் தோன்றும்; அதைக் கண்டால் அன்றி
ஏமம் அன்றிப் பணிஅல்லா வாறுபோலே
எவ்வகைத் தெய்வமும் தான் ஆம் இயல்பும் தோன்றா;
மா மகிமைச் சித்திசெய்வோன் குமரன் என்ன
மயங்காமல் பேசுதற்கு வாய்வாராதே.

வாய்வலியான் பேசுகின்ற சமயத்து எல்லாம்
மருவுகின்ற கடவுளுக்கு மைந்தர் ஆவோர்
தேய்வனைய சித்திஉள்ளார் பலரும் ஆகும்
தெளிந்தோர்க்கே இதுமெய்யாம்; சிறியோர்க்கு எல்லாம்
ஆய்வளிக்கும் கொடும்சொல்லாம்; இந்த ஞாயம்
அறிந்தவர்க்கே விகற்பங்கள் அனைத்து நீங்கும்
கூய்வருந்திச் சிந்திப்போர் மனம்போல்த் தோன்றும்
குமாரனே யாவருக்கும் குரு ஆனானே.

(கௌமார வினோதம் 12- 18)

# திருமுருகாற்றுப்படையில் முருகனின் மகத்துவம்

முனைவர் மு. நாகராஜன்,
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி
கோவை – 641029

தமிழக மக்களின் தொன்மை வழிபாடாகக் கருதப்படுவது முருக வழிபாடு ஆகும். தமிழர்கள் முருக வழிபாட்டை அன்பு நெறியோடு உலகிற்கு உணர்த்தி வாழ்ந்தனர் எனில் மிகையன்று மறுக்க முடியாத உண்மையே. தமிழ் தோன்றிய நாள் எப்போது என்பது சிந்திப்பதற்கு உரியதாகவும் ஆராய்ச்சிக்கு உரியதாகவும் உள்ளது. அப்படிப்பட்ட பழமையான அம்மொழிக்கு உரிய கடவுளாக முருகனைப் போற்றி வணங்கி வருகின்றனர் தமிழர் எனில் முருகனின் மகிமை சொல்லாமலே விளங்கும். தமிழே முருகன் முருகனே தமிழ் என்று இணைத்துப் போற்றினர் முன்னோர். முதலில் இயற்கையைக் கண்டு அஞ்சி வணங்கி வந்த மக்கள் இயற்கைக்கு உருவம் கொடுத்து குன்றின் உச்சியில் கோயிலை அமைத்துக் குன்றிருக்கும் இடம் எல்லாம் குமரன் இருக்கும் இடம் என்று வணங்கினர். பெரும்பாலும் ஆற்றுப்படுத்துவோரின் பெயரிலேயே நூல்களின் பெயரும் அமைந்திருக்கும். ஆனால் திருமுருகாற்றுப்படை யாரிடம் ஆற்றுப்படுத்துகிறாரோ அவரின் பெயராலேயே திருமுருகாற்றுப்படை என வழங்கப்படுகிறது எனில் முருகனின் சிறப்பு எளிதாக அனைவருக்கும் புலனாகும்.

## முருகன்

முருகு என்ற தமிழ்ச்சொல்லிலிருந்து முருகன் என்ற திருநாமம் பிறந்திருக்கிறது. இது தமிழ் மொழியில் உள்ள மெய்யெழுத்துக்கள் மூவினத்தினுள் மெல்லினத்தில் உள்ள ம வுடன் இடையினத்தில் உள்ள ர கூட்டி வல்லினத்தில் உள்ள க் சேர்ந்து இவற்றுடன் உயிரெழுத்தாகிய உ கரத்தைப் புணரச் செய்து முருகு என்ற நாமம் பிறந்தது. ம் + உ= மு; ர்+ உ= ரு; க் + உ= கு முருகு எனவும் தமிழில் முருகு என்றால் அழகு, இளமை, இனிமை, நறுமணம், வலிமை, ஆண்மை, தொன்மை என்று பலபொருள்களைக் குறிக்கும். முதிராத இளமையும் அழியாத அழகும் தெய்வ மணமும் தூய கடவுள் தன்மையையும் முருகனைக் குறிக்கும் என்பது இதிலிருந்து வெளிப்படுகிறது.

## முருகனின் அழகு

முருகனே அழகின் உருவானவன். ஆகையால் தான் அவனை வடிவேலன், முத்துக்குமரன் என்று மக்கள் அழைக்கின்றனர். அவ்வழகிய தோற்றத்தை இயற்கையில் காணலாம். அவனது பேரழகை நக்கீரர் பின்வருமாறு வெளிப்படுத்துகிறார்.

*"கைபுனைந்து இயற்றாக்கவின் பெறு வனப்பின்"*

கைகளால் புனையப்பட்டவை செயற்கை அழகு என்றும், கைகளால் புனையப்பெறாத இயற்கையின் பேரழகை முருகன் பெற்று விளங்குவதை இப்பாடலில் பதிவு செய்துள்ளார். தமிழ்த்தென்றல் திரு.வி.கவும் முருகன் அல்லது அழகு என்று குறிப்பிடுவதில் இருந்து குமரனின் அழகு நன்கு வெளிப்படும் என்பதை உணருங்கள். இயற்கையைக் கண்டு அஞ்சிய மனிதன் தான் பின் அதனை வழிபாடாகக் கருதினான் எனில் மனித ஆற்றலைச் சிந்திக்க வேண்டும். சிந்தனையே செயலின் வெற்றிக்குக் காரணம் என்பதைத் தமிழன் உணர்ந்ததால் தான் உலகிலே தலைச்சிறந்து விளங்கினான். இயற்கையோடு இயைந்த அழகிய குமரனை வணங்கி நாமும் நல்வளம் பெற்று வளமுடன் வாழ்வோம். மற்றவர்களை வாழவைப்போம். விடியற்காலையில் நெடுந்தொலைவில் அடிவானத்தில் கீழ்க் கடற்பரப்பின் மேல் பகலவன் ஆன ஒளிப்பிழம்பு காணப்படுவது போல நெடுந்தொலைவில் மயில் மீது பேரொளிப் பிழம்பாக முருகன் அன்பர்களுக்குக் காட்சியளிப்பான். இதனை,

*உலகம் உவப்ப வலன் ஏர் திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல் கண்டாஅங்கு*
*ஓ அற இமைக்கும் சேண் விளங்கு அவிர் ஒளி*

என்னும் பாடலில் நக்கீரர் பதிவு செய்துள்ளார். நீலக்கடலின் அடிப்பரப்பில் இருந்து சூரியன் எழும் அழகைக் காண ஆயிரம் கண்கள் கூட போதாது. இருளை கொஞ்சம் கொஞ்சமாக மறையச் செய்து உலகில் மகிழ் ஒளியை உண்டாக்கும் பரிதிபோல நீலவண்ண மயில் மீது ஏறி முருகப்பெருமான் அருள் ஒளியோடு உயிர்களின் அறியாமை இருளைப் போக்கத் தோன்றிய அழகை ஒப்பிட்டுச் சொல்வது சாலச்சிறந்ததாக உள்ளது. அறியாமை இருளில் அகப்பட்டுக் கிடக்கும் தமிழ்ச் சமுதாயத்தை மீட்டெடுக்க அவனது தெய்வீக ஒளியும் ஆற்றலும் தேவை என்பதை உணருங்கள். ஆனந்தத் தாண்டவமாட வேண்டும் என்றால் உடலில் சாந்தம் தேவை என்பதில் மனித இனம் புரிந்து கொள்ள வேண்டும். மனித மனங்களுக்குச் சாந்தத்தைக் கொடுக்கும் அவனது அழகினை வெளிப்படுத்த தமிழால் முடியுமா என்பது சிந்திக்கத்தக்கதாக உள்ளது.

**ஆறு முகங்களின் இயல்புகள்**

மயில் மீது வீற்றிருக்கும் முருகன் ஆறு திருமுகங்களைக் கொண்டு காட்சியளித்து அருள்பாலிக்கின்றான். முருகப்பெருமானின் ஆறுமுகங்களும் ஒவ்வொரு இயல்பைக் கொண்டு விளங்குகின்றன. உலகம் இருளால் மறைக்கப்பட்டுள்ளது. அவ்விருளை அகற்றும் பொருட்டுப்பல சுடர்களைக் கொண்டு விளங்குகிறது முருகனின் ஒரு முகம். தனது உண்மையான அடியார்களின் அன்பினை ஏற்று வரமளிப்பது மற்றொருமுகம். மந்திரத்தினால் மெய்ந்நூல் உரைத்த முறைமையிடத்துத் தப்பாத அந்தணருடைய வேள்விகளுக்கு இடையூறு நேராதபடி காக்கின்றது ஒரு முகம். வேத

நூல்களால் காட்ட முடியாது எஞ்சிய பொருள்களைத் தம் அன்பர்கள் பாதுகாப்பெய்தும் வண்ணம் ஆய்ந்து உணர்த்தித் திங்கள் போன்று விளங்கும் முகம் ஒன்று. அசுரனை அழித்து மறக்கள வேள்வியை விரும்பி நிற்கும் முகம் ஒன்று. ஆறாவது முகம் குறவருடைய மேன்மை பொருந்திய பூங்கொடி போன்ற வள்ளியுடன் சிரித்து மகிழ்தலை விரும்புவது என நக்கீரர் முருகனின் ஆறுமுக இயல்புகளைத் தம்பாடலில் பதிவு செய்துள்ளது மிகப்பெரிய வியப்பினை உண்டாக்குகிறது. தவிப்பவர்களின் துன்பத்தைப் போக்கும் கொடையாகவும் தவறு செய்பவர்களைத் தண்டிக்கும் செங்கோலாகவும் முருகன் விளங்குகிறான். இல்லற வாழ்வில் ஈடுபட்டு அன்புடன் ஆனந்தமாக அனைவருக்கும் அடைக்கலமாக முருகன் உள்ளான் என்பதை நம்மால் மறுக்க முடியாது.

**முருகனின் அறுபடை வீடுகள்**

ஆறுபடைவீடுகள் என்ற குறிப்பைப் பத்துப்பாட்டில் ஒன்றான திருமுருகாற்றுப்படை என்ற நூலின் மூலமே காணமுடிகிறது.

**திருப்பரங்குன்றம்**

பரம் - தலைசிறந்த, குன்றம் - மலைக்குன்று. பெருமையும் சிறப்பும் நோக்கி ஒருசேரத் திருப்பரங்குன்றம் என்ற பெயர் வந்தது. முருகனின் முதல் படைவீடு. இதனைப் பரங்கிரி என்றும் வழங்குவர். திருஞானசம்பந்தரும், சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இத்தலச் சிவனைப் பாடிப் போற்றியுள்ளனர். பரங்குன்றத்தை கோத்திட்டை என்று அழைப்பர். கோ – பெரிய, திட்டை – மேட்டு நிலம். கோத்திட்டை – பரங்குன்றம் எனக் கூறப்படுகிறது. மதுரை மாநகரின் மேற்றிசையில் உள்ளது திருப்பரங்குன்றம். அங்குக் கரிய சேற்றினை உடைய அகன்ற வயலில் விரிந்து மலர்ந்த முள் பொருந்திய தாள்களையுடைய தாமரை மலரில் இரவெல்லாம் உறங்கி வைகறைப் போதில் மணம் கமழ்கின்ற நெய்தல் மலரில் தோன்றிய பின்னர் மகளிரின் கண்கள் போல மலர்ந்த அழகிய சுனைப் பூக்களை நாடும் அழகிய சிறகுகளையுடைய வண்டுக்கூட்டம் ஆரவாரிக்கின்ற வளம் நிறைந்தது திருப்பரங்குன்றம். அக்குன்றினிலே மிக்க விருப்புடன் கோயில் கொண்டு அருளி உறைபவன் முருகன் என்பதைக்,

*"குன்று அமர்ந்து உறைதலும் உரியன் அதாஅன்று"*

என்னும் பாடல் வரியில் நக்கீரர் பதிவு செய்துள்ளார். முருகனிடத்தில் அன்பு பூண்டு அவனுடைய திருவடியை அடைய வேண்டுமென்று விரும்பும் ஒரு புலவனைப் பார்த்து முருகனின் அருளைப் பெற்ற மற்றொரு புலவர் அன்பு பூண்டு அவனிடம் சென்றால் அவனைக் கண்டு மகிழ்ச்சியுறலாம் என்று சொல்லும் அளவிற்குத் திருமுருகாற்றுப்படை அமைந்திருக்கிறது.

**திருச்சீர் அலைவாய் (திருச்செந்தூர்)**

நக்கீரர் ஆற்றுப்படுத்தும் இரண்டாம்படைவீடு. பெருங்கடலானது தன் கைகளாகிய பெருமை கொண்ட அலைகளுடன் வேலவனின் திருவடியைப்

போற்றுகிறது. எப்போதும் அலை மோதுகின்ற இடத்தில் கோயில் கொண்டு அமைந்து இருப்பதால் அலைவாய் என்ற பெயரும் அடைமொழியுடன் திருச்சீர் அலைவாய் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. அலைகின்ற மனதினை அடக்கி நல்வழியில் செல்ல திருச்செந்தூர் செல்வோம்.

**திருவாவினன் குடி(பழநி)**

நக்கீரர் மூன்றாவதாகக் கூறும் படை வீடே திருவாவினன் குடி இன்று பழநி என்று அழைக்கப்படுகிறது. இதன் அருகில் ஆய்க்குடி என இருக்கும் ஊர் ஆவிகுடி என்பதன் மருஉ. இப்பகுதியைக் கல்வெட்டுக்கள் வையாவி நாடு என்று குறிக்கின்றன. பழநி மலை மேல் முருகன் தண்டபாணியாக நிற்கிறான். இம்மலைக்குச் செல்லும் முன்பு சரவணப் பொய்கை அருகே திருவாவினன் குடி கோயில் இருக்கிறது. இது சங்க காலத்தில் பொதினி என்ற பெயருடன் ஆவி என்னும் வேளிர் தலைவனுக்கு உரியதாய் இருந்தது.

**திருவேரகம் (சுவாமி மலை)**

முருகனின் நான்காம்படை வீடு என அழைக்கப்படுகிறது. தந்தைக்கு உபதேசம் செய்யும் இத்தலம் சுவாமிமலை. இங்குதான் முருகன் தம் தந்தைக்குப் பிரணவப் பொருளைக் கூறினார். இம்மலை முருகன் தகப்பன்சாமி, சுவாமிநாதன் என்னும் பெயரில் அழைக்கப்படுகிறார். 13 அடியில் சுவாமிமலையின் பெருமையை நக்கீரர் தமது பாடலில் பதிவு செய்துள்ளார். தந்தைதான் ஒவ்வொருவருக்கும் குருவாக இருப்பார். ஆனால் தந்தைக்கே குருவாக முருகன் விளங்கினான் எனில் இந்த உலகில் யாரும் உயர்ந்தவர் இல்லை. அதே நேரம் தாழ்ந்தவர் யாரும் இல்லை என்பதை முருகன் உணர்த்துகிறான் என்பதை உணருங்கள்.

**குன்றுதோறாடல்(திருத்தணி)**

நக்கீரர் கூறும் ஐந்தாம் படைவீடு குன்று தோறும் ஆடல் நடைபெறும். கற்களால் ஆன மலை இருக்கும் இடத்தில் தான் குமரன் இருப்பான். முருகன் சினம், பகை, நீங்க நின்ற இடமே செருதணி திருத்தணி என்று அழைக்கப்படுகிறது. நீண்ட மூங்கில் குழாய்களில் ஊற்றி நெடுநாள் வைத்து முற்றி விளைந்த தேனால் ஆன கள்ளின் தெளிவை மலையிடத்துள்ள சிற்றூரில் வாழும் தம் சுற்றத்தாருடன் உண்டு மகிழ்ந்து தங்கள் குறிஞ்சி நிலத்துக்கு உரிய தொண்டகம் என்னும் பெயருடைய சிறிய வாத்தியத்தை அடித்து அதனது தாளத்திற்கு ஏற்பக் குரவைக் கூத்தை ஆட முருகக்கடவுள் அதனைக் கண்டு களிக்க எழுந்தருளியுள்ளான் என்பதை நக்கீரர்

*குன்றச் சிறுகுடிக் கிளையுடன் மகிழ்ந்து*
*தொண்டகச் சிறுபறைக் குரவை அயர*

என்னும் பாடலில் பதிவு செய்துள்ளார்.

**பழமுதிர்ச்சோலை**

நக்கீரர் கூறும் ஆறாம் படைவீடு மதுரைக்கு வடக்குத்திசையில் உள்ளது அழகர்மலை என்ற வைணவத்தலம் மலை அடிவாரத்தில் உள்ளது. அழகர் மலையின் மேல் பழமுதிர்ச்சோலை அமைந்துள்ளது.

*சிறுதினை மலரொடு விரைஇ மறி அறுத்து*
*வாரணக் கொடியோடு வயிற்படநிறீஇ*

தினை அரிசியைப் பூக்களோடு கலந்து வைத்தும் ஆட்டை அறுத்தும் கோழிக்கொடியை விழாவிற்குரிய இடத்திலே நிறுத்தியும் வைப்பார்கள். முருகன் திருவிழா நடத்துபவரின் அன்பை உணர்ந்து அவ்விழா நடக்கும் இடங்களிலே முருகன் இருப்பான். குறமகள் வெறியாடும் இடங்களிலும் அவனின் திருப்பெயரை அழைக்கும் இடங்களிலும் ஓடோடி வந்து காப்பவன் கந்தன் என்பதை உணர்ந்தவன் தமிழன்.

**கருத்துரை**

ஆபத்துக் காலங்களில் நமக்கு உதவுபவனை உண்மையான நண்பன் என்று அழைப்போம். மனித வாழ்வு நிலையற்றது என்பதை உணருவதற்கே இந்த பிறவி தேவைப்படுகிறது என்பதை நமது முன்னோர்கள் இலக்கியத்தில் பதிவு செய்தனர். ஆபத்துக் காலங்களில் கந்தா என்றால் ஓடோடி வந்து நம்மைக் காத்து நமக்கு நற்கதி அளிக்கும் கந்தவேலனை ஒரு போதும் மறக்கக் கூடாது. அவனது ஆறுமுகங்களும் நமக்கு ஆறு வகையான பாவனைகளை உணர்த்துகிறது. நல்லோருக்கும், திக்கற்றவர்களின் வார்த்தைகளுக்கும் முருகன் கொடுக்கும் முக்கியத்துவமும், பகைவர்களை அழிக்கும் சூரனின் உள்ள உறுதியையும் சிந்தித்தல் வேண்டும்.

ஆறுபடை வீடுகளில் இருந்து பக்தர்களைக் காக்கும் அன்பு திருமுருகாற்றுப்படையில் பதிவாக்கப்பட்டுள்ளது. திருமுருகன் நம்மை ஆற்றுப்படுத்தி அறியாமையாகிய இருளை அகற்றும் ஞானச்சுடராக உள்ளான் என்பதை மறவாதீர். இல்லறவாழ்வில் அகப்பட்டு துன்பத்தில் உழன்று இறுதியில் முருகனை நாடாமல் அவனைச் சரணடைந்து நல்வழியில் நற்பழக்கத்தைக் கடைபிடித்து அதனை மற்றவர்களுக்கும் எடுத்துக்கூறினால் இந்த பிறவியே மகத்தானது தான் என்பதை மறுக்கவும் மறைக்கவும் முடியாது. அனுதினமும் கந்தவேளை மறவாதே. அவனது அன்பினை விட்டு விலகாதே மனமே. மாய உலகிலே உறுதியானது அவனது அன்பு தான் மனமே இக்கருத்தை உறுதியாகக் கடைபிடித்த முன்னோரை வணங்கி தமிழரின் பெருமையை உரக்கச் சொல்வோம் உலகிற்கு.

**துணை நின்ற நூல்**

1. சங்க இலக்கியம், பத்துப்பாட்டு முதற்பகுதி மூலமும் உரையும், இரா.மோகன்(உ.ஆ), ஐந்தாம் பதிப்பு, அக்டோபர் 2014, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை-600 098.

## சங்க காலத்திற்கு முன்பே தொடங்கிய தமிழர்கள் வேல் வழிபாடு

முனைவர் ந. நித்தியானந்தபாரதி
நிறுவனத் தலைவர்
கணபதி தமிழ்ச் சங்கம்
கோவை.

முந்து முந்து முருகவேல் என்னுள் முருகவேலாய் முந்து வெஞ்சமரில் அஞ்சேல் என வேல் தோன்றும் முருகா என்று ஓதுவார் முன் என்ற பாடல் வரி வேலை போல் ஆழமாக மனதில் உள்ளது. அதுமட்டுமா வேலை பார்க்கும் போதுதெல்லாம் நானே முருகனின் தோளில் சாய்ந்து கொண்டு இருப்பது போல் ஒரு உணர்வு எனக்குள் இருக்கிறது. இந்த உணர்வு நீங்களும் பெறச் சங்க காலத்துக்கு முன்பே தொடங்கிய தமிழர் வேல் வழிபாடு உலகில் தமிழர்கள் எங்கு எல்லாம் வாழ்கிறார்களோ அங்கு எல்லாம் வேல் வழிபாடு நடக்க வேண்டும். பல நூறு ஆண்டுக்கு முன் தமிழர் வீடுதோறும் இருந்த வேல் மீண்டும் வைக்கவேண்டும். வேல் வழிபாடு புத்துயிர் பெறவேண்டும் என்று இரண்டு ஆண்டாய் வேல் வழிபாட்டை முன் எடுத்து இருக்கிறோம்.

### தமிழர் பெருமிதம் வேல்

ஆயிரம் ஆயுதங்கள் இருப்பினும் தமிழ் மன்னர்களின் தனித்த பெருமிதம் *'வேல்'* தான். வேல் ஏந்திய மன்னன் யானை மீது ஏறி வீதி உலா வந்தாலும் சரி போர்களத்துக்குச் சென்றாலும் சரி அந்தக் கம்பிரமே தனிதான். வேல் என்றால் வெல் என்ற பொருள் தருகிறது. *"வேலைத் தொட்டவன் வெல்வான்"*. வேல் என்றால் வெற்றி என்றால் மகிழ்ச்சி. வெல் என்ற வினைச்சொல்லை நீண்டு வேல் என்ற பெயர்ச்சொல் ஆகிறது. ஆகவே வேல் என்றால் வெற்றி.

*சூர் மருங்கு அறுத்த சுடர் இலை நெடு வேல்*
*சினம் மிகு முருகன் தண் பரங் குன்றத்து*
*அறுந்துவன் பாடிய சந்து கெழு நெடுவரை* (அகம். 59-)

வேலின் தண்டு இலகுவாகவும் தண்டின் உட்புறம் உள்ளிடற்று (hollow)ஆக இருக்கும் (பழங்காலத்தில்) தண்டு (உடல்) கெட்டியாக இருக்கும்). வேலின் முகம் பளு கூர்மை உடையதாக இருக்கும்.

### வேல் எந்த உலோகத்தில் செய்ய வேண்டும்

பல ஆயிரம் ஆண்டு முன் தமிழர்கள் கல்லைக் கூர் தீட்டி வேல் செய்து நெடுமரத்தில் பொருத்திப் பயன்படுத்தினார்கள் (கல்வேல்). கடினமாகவும் உடையதாகவும் உள்ள மரத்தில் வேல் செய்தார்கள். இரும்பை உருக்கிப் பின்நாளில் வேல் செய்தார்கள். கோவில்களில் முருகனுக்குக் கொடுக்க

அழகுக்காகச் செய்யப்படும் வேல் "தங்கவேல்", "வெள்ளி வேல்", "வைரவேல்", "செம்புவேல்" தற்போது ஸ்டென்லி **"SS"** வேல் செய்கிறார்கள்.

**வேல் ஓர் போர் கருவி**

இலக்கைச் சரியாக தாக்க கூடியது வேல். ஆம். பெருமை மிக்க போர் கருவி. போருக்குச் செல்லும் வேல் எ்.கினால் செய்யப்பட்டது. எ்.கு ஒரு கலப்பு உலோகம் இரும்பு கரிமம் குறிப்பிட்ட அளவில் கலந்து அதிக வெப்பத்தில் உலைக்களத்தில் வடிக்கப்படும் உறுதி மிக்க போர்க் கருவி. யானைப்படை வைத்து இருக்கும் மன்னர்களும், ஈடு இல்லா போர் திறமைமிக்க மன்னர்களும், படைத்தலைவர்களும் எ்.கு வேல் ஏந்தவேண்டும். மிக சிறந்த பகைவர்களை நோக்கி வேல் எறிய வேண்டும்.

**வேலின் சிறப்புப் பெயர்கள்**

அன்புவேல், அறிவுவேல், ஈர்க்கும் வேல், கூர்வேல், நெடுவேல், சுடர்வேல், வீரவேல், வெற்றிவேல், விண்ணோர் சிறை மீட்ட தீர வேல், செவ்வேள் திருக்கை வேல், வாரி குளித்த வேல், கொற்றவேல், சூர் மார்பும் குன்றும் துளைத்த வேல் அப்பப்பா.... இப்படி சொல்லிக் கொண்டே போகலாம்.

**வேல் வழிபாடு எப்போது தோன்றியது?**

முருகன் தோன்றும் போது வேலும் தோன்றியது. தமிழர்கள் சங்ககாலத்திற்கு முன்பு இருந்தே வேல் வழிபாடு செய்து கொண்டு இருக்கிறார்கள் கல் ஆல் செய்யப்பட்ட வேலை வணங்கி இருக்கிறார்கள். வேல் வழிபாட்டை ஆண், பெண் என்ற வேறுபாடு இன்றி மனிதகுலத்தில் உயர்வு தாழ்வு என்ற வேறுபாடு இன்றி, இறைவனுக்கு நமக்கு நடுவில் இடைதரகர் இன்றி நேரடியாக நாமே இறைவனை வணங்கும் வழக்கம் தமிழர் உடையது.

**இலக்கியத்தில் வேல் வழிபாடு**

உலகில் வேறு எவரும் படைக்காத உலகில் எந்த மொழியில் இல்லாத பொருள் அதிகாரம் தந்த தொல்காப்பியம் இதற்கு என ஓர் தனிதுறை ஒதுக்கி வேல்லோடு முருகனுக்கு உரிய காந்தள் பூச்சூடி ஆடுவதைச் சிறப்பாக சொல்லி இருக்கிறார்.

*வெறி அறி சிறப்பின் வெவ் வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும்* (தொல்.பொருள்.களவியல்)

முருகனுக்காகப் படைக்க பெற்ற தனிபெரும் பழைமையான நூல் திருமுருகாற்றுப்படையில் முருகர் பக்தரான நக்கீரர் வேலைப் பற்றி மிகச் சிறப்பாகப் பாடி இருக்கிறார்.

*வேல் கெழு தடக்கைச் சால்பெருஞ்செல்வ*
*சூர்முதல் தடிந்த சுடர் இலை நெடுவேல்*

(திருமுருகாற்றுப்படை)

தமிழ் இசையின் பெருமையை உலகினுக்கு எடுத்துக்காட்ட பல ஆயிரம் பாடல் கொண்ட காப்பியம் முழுவதும் தமிழ் இசையை நுட்பமாகச் சிலப்பதிகாரம் படைத்த இளங்கோவடிகள் வேலின் பெருமையை மிக அழகாகச் சொல்லி இருக்கிறார்.

*சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்*
*ஏரகமும், நீங்கா இறைவன் கை "வேல்" அன்றே*
*சூர்மாதடிந்த சுடர் இலைய வென் வேலே!*
*குருகு பெயர்க் குன்றம் கொன்ற நெடு வேலே!*
*இணை இன்றித் தான் உடையான் ஏந்திய வேல் அன்றே!*
*திருமுலைப்பால் உண்டான் திருக்கை வேல் அன்றே!* (சிலப்பதிகாரம்)

**வேல் பற்றி பழந்தமிழ் இலக்கியத்தில்**

*பொய்யா மரபின் ஊர்முது வேலன்*
*கழங்கு மெய்ப்படுத்துக் கன்னம் தூக்கி*
*முருகு என மொழியும் ஆயின்*
*கெழுதகை கொல்? இவள் அணங்கியோற்கே* (ஐங்குறுநூறு கபிலர்)

*வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்*
*கடவுள் ஆயினும் ஆக*
*மடவை மன்ற வாழிய முருகே!* (நற்றிணை 34)

**குன்றிய வேல் வழிபாடும் தமிழர் ஆட்சி இழப்பும்**

இப்படி எல்லாம் பெருமையுடன் வணங்கப்பட்டு வந்த பழந்தமிழர் வேல் வழிபாடு படிப் படியாகக் குறையத் தொடங்கியது. பல புதிய மதங்கள் தமிழ் நாட்டுக்கு வந்தால் ஆட்சி மாற்றம் ஏற்பட்டுப் புதிய மதம் ஆட்சிக்கு வந்து கோவிலுக்கு உள்ள தமிழ்மொழியைப் புறம் தள்ளிவிட்டு வடமொழி உள்புகுந்து தமிழும் தமிழர் வாழ்வியலும் நிலை குலைந்து போல ஆட்சியாளர்களால் தமிழ், முருகன், வேல் என அனைத்தையும் ஒதுக்கி விட்டுப் புதிய மதம் புதிய மொழி ஆட்சி வந்தது. தலைநகர், மாநகர், எங்குத் தமிழும் தமிழர்களும் இல்லாமல் போனார்கள். தமிழும் தமிழனும் கானகத்துகுள் சென்று வாழும் நிலை ஏற்பட்டது. மீண்டும் தமிழர்கள் ஆட்சிக்கு வந்தனர். ஆனால் கோவிலுக்கு உள்ளே தமிழ்மொழி நுழைய முடியவில்லை. ஆனால் மக்கள் மனதில் முருகனும் வேலும் தொடர்ந்து பயணித்துக் கொண்டே இருந்தது. 15ஆம் நூற்றாண்டில் மீண்டும் ஆட்சி மாற்றம் தமிழர்கள் கையில் இருந்து வேல் பறிக்கப்பட்டது. அந்நியர் ஆட்சி வாழும் நிலை தமிழனுக்கு ஏற்பட்டது.

**வேலோடு தமிழ் வழிபாட்டை மீட்க அருணகிரிநாதர் வருகை**

கோவில்களில் வடமொழி அதிகம் செய்து கொண்டு இருந்த காலத்தில் வடமொழியை எதிர்த்தால் "நந்த"னைப் போல் எரிந்துக் கொன்று விடுவார்கள் என்ற பயம் இருந்தது. அதை எதிர்க்கவும் முடியாமல் தமிழைக் கோவிலுக்குள்

நூழைக்கவும் முடியாமல் தொலைந்து போன வேல் வழிபாடு தமிழ் வழிபாட்டை மீண்டும் முன்னிறுத்த அருணகிரிநாதர் செய்த முயற்சிகள் சொல்லில் அடங்கா? வடமொழியைப் பகைத்துக் கொள்ளாது. அதனோடு கூடவே சென்று சிறுகச் சிறுகத் தமிழை நுழைத்தார். அதில் வெற்றி கண்டார்.

இதற்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் ஆழ்வார்கள். சில நூற்றாண்டுக்கு முன்பு தமிழர் முல்லை நில கடவுளும், முருகனின் தாய் மாமன் ஆகிய திருமால் கோவில் உள்ளே இருந்த வடமொழியை அகற்றி விட்டுத் தமிழைக் கருவறைக்குள் நுழைத்தார்கள்.

தமிழை முன்னெடுக்க நூற்றுகணக்கான வைணவர்கள் தங்கள் இன் உயிரை இழந்து உடைமை இழந்து சொல்லில் அடங்காத் துன்பப்பட்டுக் கருவறைக்குள் நுழைந்து தமிழில் பாடப் பாட இறைவனே தமிழின் பின்னால் வந்தான் என்று தெரிந்து கொண்ட அருணகிரிநாதர் அதே வழியைக் கையாண்டார்.

அவர் செய்த முதல் வேலை முருகன் கோவில்களில் "வேல் வகுப்பு" நடத்தினர் "வேல் விருத்தம்" பாடினார் வேல்வழிபாட்டை முன்நிறுத்தி தமிழை முருகனே முன்னெடுத்து சென்றார். *அருணகிரிநாதர் வழியை பின்பற்றி* பாம்பன் சுவாமிகள் "வேல் மாறல்" வள்ளிமலை சுவாமிகள் "வேல் பதிகம்" என இடைவிடாது தொடர்ந்து பாரதியார் வரை பாடி கொண்டே இருந்தார்கள்.

**பலமுருகன் கோவில் மூலவர் வேல்தான்**

பழமுதிர் சோலை, திருச்செங்கோடு, ஈழத்துச் செல்வர் கோவில் மலேசியா பத்துமலை குகைக்கோவில் என பல முருகனின் கோவில்கள் மூலவர் வேல்தான் பல ஊர்கள், காடுகள், தோட்டங்கள் இன்றும் மரத்தடியில் சிறிய மேடை அமைத்து வேல் நிறுவி இருப்பார்கள். வேல் வேறு, முருகன் வேறு அல்ல என்ற பொருள் இதன் மூலம் நமக்குத் தெரிகிறது.

தலை நிலமாம் தமிழர் நிலம் குறிஞ்சி தந்த தலைவன் முத்தமிழ் முருகன் ஏந்திய தமிழ் தொன்மத்தின் பெருமை மிகு அடையாளமான வேலினைத் தமிழர் நிலம் முழுவதும் நிறுவுவோம் என்று சூல் உரைப்போம்.

**வேல் நிறுவ வழிகாட்டும் வழிமுறைகள்**

தைப்பூசத்துக்கு 5 நாள் முன்பு நமது வீட்டில் உள்ள வாசலில் தைப் பொங்களுக்குப் பொங்கல் வைக்கும் இடத்தில் பச்சைக் குடில் அமைத்து உற்றார் உறவினர் அழைத்து குடில் நடுநாயகமாக வேல் நிறுத்தி வழிபடுவோம் ஐந்தாம் நாள் தைப்பூசம் அன்று வேல் எடுத்துக் கொண்டு சுற்றத்தார் உடன் அருகே உள்ள முருகன் கோவிலுக்குச் செல்வோம்.

**குடில் அமைத்தல்**

தென்னை அல்லது பனை ஓலையைக் கொண்டு 6 அடி முகப்பும் 8 அடி உயரம் தேவைப்படும் அளவுக்கு அமைத்து கொள்ளவும் நிலமும் (6

X 8) கொண்ட அளவில் பச்சை ஓலை கொண்டு குடில் அமைக்கவும் முகப்பில் 6 அடிக்கு 2 அடி என்ற அளவில் பதாகை வைக்கவேண்டும். அதில் தைப்பூசம் தமிழ் முருகன் பெருவிழா வேல் வழிபாடு என எழுதி வைக்கவும். உள்பகுதியில் 6 அடிக்கு 6 அடி என்ற அளவில் முழுவதும் முருகன் படம் தாங்கிப் பதாகை அமைக்கவேண்டும்.

**முதல் நாள் வழிபாடு**

மாலை 6 மணியளவில் வேல் நிறுவப்பட்டு இருக்கும் குடிலின் அருகே இருக்கும் உற்றார் உறவினர் அழைத்து, குடில் நடுவில் மண் தொட்டி வைத்து அதன் நடுவில் வேல் நிறுத்தி நமது விழாவிற்கு வந்தவர்களிடம் வேல்மீதும் சிறுதானியம் தூவி ஓர் கைபிடி மர விதை கலந்த மண்ணை வேல் நிறுத்தி இருக்கும் மண் தொட்டியில் போட சொல்லவேண்டும். அந்த மண் தொட்டி நிறையும் வரை போட்டு மரவிதை, சிறுதானியம் போடுவது ஏன் என்ற விளக்கத்தையும் சொல்ல வேண்டும். பின் பச்சை துணிஎடுத்து அந்த மண்தொட்டியை மூடி மேடைபோல் அமைத்துக் கொள்ளவேண்டும். வேலுக்குத் திருநீறு, சந்தனம், குங்குமம் இட்டு, மாலை போட்டு வேல் போற்றி, முருகன் போற்றி, தமிழ் போற்றி என போற்றிகளை ஒருவர் சொல்ல மற்றவர்கள் பின் தொடர்ந்து சொல்லவும் அப்போது உதிரிப் பூக்களைக் கொண்டு போற்றி சொல்லும்போது போடவும். போற்றி முடிந்த பின் கற்பூரம் ஏற்றி வேலுக்குச் சுடர் காட்டவும் இந்த வழிபாடு ஆண், பெண் வேறுபாடு இன்றி யார் வேண்டுமானாலும் செய்யலாம். வழிபாடு முடிந்த பின் தமிழர் உணவுகள் தரவேண்டும். தேன் தினைமாவு, முருக்கு அதிரசம் போல் அல்லது தமிழர் சிற்றுண்டி உணவு தரவும்.

**இரண்டாம், மூன்றாம் நாள் வழிபாடு**

காலையில் அந்த இடத்தை தூய்மைபடுத்தி வேலுக்குத் திருநீறு, சந்தனம், குங்குமம் இட்டு கற்பூரச் சுடர் காட்டி வழிபாடு செய்யவும். ஒருவர் மட்டும் குடியில் இருந்து கொண்டு காலை முதல் மாலை வரை வரும் பக்தர்கள் வேலுக்கு வழிபாடு செய்து திருநீறு தரவும் மற்றவர்கள் வேலைக்குச் சென்று விடவும் மாலை 6 மணிக்கு அனைவரும் ஒன்று கூடி வேலை எடுத்துக் கொண்டு குடியில் அருகாமையில் இருக்கும் பக்தர்களின் வீட்டுக்குச் செல்லவும் அவர்கள் வீட்டில் வைத்து பூசை செய்தபின் மற்றோருவர் வீட்டுக்குச் செல்லவும். போகும் வழி வரும் வழி எல்லாம் முருகன் பாடல், வேல்பாடல், தமிழ் தமிழர் பற்றிய பாடல் பாடிக் கொண்டே செல்லவும் இரவு குடில் திரும்பி வேலைப் பாதுகாப்பான இடத்தில் வைத்து விட்டுச் செல்லவும்.

**ஐந்தாம் நாள் வழிபாடு தைப்பூசம் அன்று**

காலையில் குடிலைத் தூய்மை செய்து வேலும், திருநீறு, சந்தனம், குங்குமம் இட்டு உற்றார் உறவினர்களிடம் போற்றி சொல்லி பூசை செய்து விட்டு வேலை எடுத்துக் கொண்டு அனைவரும் அருகே உள்ள முருகன்

கோவிலுக்குச் சென்று வேல் வைத்து போற்றி சொல்லி வணங்கி விட்டு வேலை எடுத்துக் கொண்டு வீடு திரும்பவேண்டும். பின் வேலை நமது வீட்டில் சாமி படத்துக்கு அருகே சுவற்றில் ஒட்டி ஆணி அடித்து நிறுத்தி விடவேண்டும். மீண்டும் அடுத்த ஆண்டு பயன்படுத்திக் கொள்ளலாம்.

**பெண்கள் இருக்கும் வீட்டில் வேல் வைக்கலாமா**

வேல் சக்தியின் வடிவம், முருகன் தாய் கொற்றவை தனது முழு சக்தியைத் திரட்டி வேலாக மாறி எதிரியை அழிக்க முருகன் கை நிற்கிறார். முருகனின் தாய் ஆன வேலை. பெண்கள் எல்லா காலங்களிலும் வணங்கலாம் தீட்டு இல்லை. பெண்கள் வேலுக்குப் பூசை செய்வதை நமது பழந்தமிழ் இலக்கியங்களில் பல இடங்களில் உள்ளது. அவள் வேல் எடுத்து ஆடும்போது ஆணுக்கு நிகர் பெண் என்று போற்றப்படுகிறாள்.

*கடியுண் கடவுட்கு இட்ட செழுங்குரல்*
*அறியாதுண்ட மஞ்ஞை ஆடு மகள்*
*வெறியுறு வனப்பின் வெய்துற்று நடுங்கு*
*சூர் மலை நாடன் கேண்மை*
*நீர்மலி கண்ணொடு நினைப்பாகின்றே* (குறுந்தொகை 105, நக்கீரர்)

**வேல் வழிபாடு மூலம் நமக்கு கிடைக்கு நன்மைகள்**

உலக மொழிக்கு எல்லாம் தாய்மொழியான தமிழ்மொழி உயிரோடு இருக்கும். தமிழர் இறையியல் காக்கப்படும். தமிழர் அறத்தின் வழி நிற்க துணை புரியும். தமிழர் பழக்க வழக்கம் புத்துயிர் பெறும். தமிழர் நலன் காக்கப்படும். தமிழர் இயற்கை வாழ்வியல் வலுப்பெறும். கோவில்களில் தமிழ் வழிபாடு மட்டுமே இருக்கும். தமிழர்கள் கருவறைக்குள் செல்லும் வாய்ப்பு ஏற்படும். தமிழை முன்நிறுத்திப் பல கண்டு பிடிப்புகளும் புதிய இலக்கியம் படைக்கப்படும். தமிழ் ஆட்சி மொழி ஆகும். வழிபாட்டில் ஆண் பெண் வேறுபாடு உடைத்து எறியப்படும்.

## அருணகிரிநாதரும் முருக வழிபாடும்

சி. பத்மநாபன்,
முனைவர் பட்ட ஆய்வாளர்
அரசு கலைக்கல்லூரி,
அரியலூர் - 621713

### முருக வழிபாட்டுத் தொன்மை

பழந்தமிழ் நூல்களின்படி இவ்வுலகம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், என்ற நான்கு பகுதிகளைக் கொண்டதாக அமைந்துள்ளது. மலையும், மலையைச் சார்ந்த பகுதியும் குறிஞ்சி நிலம் என்று அழைத்தனர். 'சேயோன் மேய மைவரை உலகமும்' என்று தொல்காப்பியர் இக்குறிஞ்சி பற்றிக் குறிப்பிடுகிறார். இந்நிலத்தின் கடவுள் முருகன். இதனால் குன்றுதோறாடும் குமரன் என்று முருகனை வழிபடுவது தமிழர் மரபு. தமிழில் முருகு என்றால் அழகு என்று பொருளாகும். எனவே தமிழ்க் கடவுளை முருகன் என்று அழைத்தனர். இவ்வாறு தோன்றிய ஆறுமுகப் பெருமான் தமிழ்க் கடவுள் முருகனாக திகழ்கிறார்.

### அருணகிரிநாதர் சிறப்பு

சைவ நெறியில் நின்ற அருணகிரிநாதர் சைவ சமயச் சான்றோர்களிலிருந்து சில நோக்கில் வேறுபட்டு விளங்குகிறார். வைணவ சமயத்தையும் சைவ சமயத்தோடு இணைத்துப் பார்க்கின்ற பொதுநோக்கத்தைக் கொண்டிருந்தார். சைவ வைணவ சமயம் மூலம் பிளவுபட்டிருந்த தமிழ் மக்களை முருக வழிபாட்டின் மூலம் ஒற்றுமைப்படுத்த அருணகிரிநாதர் முயன்றவர். திருவண்ணாமலையில் தோன்றியவர் அருணகிரிநாதர் சிற்றின்பத்தில் மூழ்கி நோயால் பாதிப்படைந்து தற்கொலை முயற்சியில் ஈடுபட்டபொழுது முருகன் தடுத்தாட்கொண்டதாகக் கூறுவர். பாடுமாறு கட்டளையிட்ட முருகனிடம் எவ்வாறு பாடுவேன் என வினவ 'முத்தைத் திருபத்தித் திருநகை' என அடியெடுத்துக் கொடுக்கத் திருப்புகழ் பாடியதாகக் கூறப்படுகிறது. இவர் பாடிய திருபுகழ் 16000 பாடல்களைக் கொண்டது. ஆனால் கிடைத்தவை 1307 பாடல்கள் அனைத்தும் முருகன் புகழைப் பாடுவனவாகும். கந்தரலங்காரம், கந்தரனுபூதி, திருவகுப்பு, வேல் விருத்தம், உடற்கூற்று வண்ணம், மயில்விருத்தம், திருவெழுகூற்றிருக்கை முதலியன இவருடைய நூல்களாகும்.

### அருணகிரிநாதர் கூறும் ஆறுபடை வீடு

முருகப் பெருமானுக்கு நம் நாட்டில் திருக்கோயில்கள் அமைக்கப்பட்டுள்ள தலங்கள் ஏராளமாயினும் ஆறு தலங்கள் சிறப்பாகக் கூறப்படுகின்றன. இவை படைவீடுகள் எனப் போற்றப்படுகின்றன. இப்படை வீட்டில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானின் அருட்சிறப்பையும்

அத்தலங்களின் சிறப்பையும் அருணகிரிநாதர் வியந்து பாடியுள்ளார். திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்), திருவாவினன்குடி (பழநி), திருவேரகம் (சுவாமிமலை) திருத்தணி, பழமுதிர்ச்சோலை (அழகர் கோயில்) ஆகிய ஆறுதலங்களே ஆறுபடை வீடுகள் எனப் போற்றப்படுகின்றன.

படைவீடு என்றால் பொதுவாகப் பகைவர்களுடன் போராடுவதற்காகத் தளபதி படைகளுடன் தங்கியிருக்கும் இடம் என்பது பொருள். முருகப் பெருமான் சூரபத்மனுடன் போர் புரிவதற்காகச் சென்று தங்கியிருந்த இடம் என்று பொருள் கொள்ளலாம். ஆனால் முருகப் பெருமான் அவ்வாறு படைவீடு அமைத்துக்கொண்ட இடம் திருச்செந்தூர் ஒன்றே. மற்ற திருத்தலங்களும் படைவீடுகள் என்றே அழைக்கப்படுகின்றன.

அருணகிரிநாதரும் திருப்பரங்குன்றமும்

திருப்பரங்குன்றம் முருகப்பெருமானது ஆறுபடை வீடுகளில் முதல் படை வீடாகத் திகழ்கின்றது. இத்திருத்தலத்தில் அருணகிரிநாதருக்கு முருகப் பெருமான் காட்சி தந்து தமது புகழைப் பாடு என்று பணிந்து முத்தைத்தரு என்று அடியெடுத்து கொடுத்தார். அதன்பின் அருணகிரிநாதர் 'முத்தைத்தரு பத்தித் திருநகை அத்திக்கிறை சத்திச் சரவண, முத்திக்கொரு வித்து குருபர எனவோதும்' என வருகின்ற பாடலைப்பாடி முருகப்பெருமானின் சிறப்பை வெளிப்படுத்தியுள்ளார். பந்தம், பாசம், நட்பு, சுற்றம் இவற்றிலிருந்து விடுபட்டு உயிருக்கு உறுதுணையாய் கந்தனிடம் அன்பு செலுத்த வேண்டும் என்பதை இத்தலத்தில் மூலம் முருகப் பெருமானின் புகழை அருணகிரிநாதர் அழகுறப்பாடியுள்ளார். வண்டுகள், உறையுளும், உணவும் பெற்று இன்பமாக வாழும் இடமாகவும் திருப்பரங்குன்றம் விளங்கும் மாண்பினை அருணகிரிநாதர் தம் பாடல்களின் மூலம் சிறப்பாகக் காட்டியுள்ளார்.

திருச்சீரலைவாய் (திருச்செந்தூர்)

திருச்செந்தூர் தேவருக்கும் மூவருக்கும் மற்றும் யாவருக்கும் முழுமுதற் கடவுளாகிய முருகக் கடவுள் திருக்கோயில் கொண்டு எழுந்தருளித்திகழும் ஆறுபடை வீடுகளில் திருச்செந்தூர் என்னும் திருத்தலம் இரண்டாம் படை வீடாகும். அருணகிரியார் இத்தலத்திற்கென எண்பத்து மூன்று பாடல்கள் அருளியுள்ளார். இத்தலத்து இறைவனை அவன் அடியார்க்கு எளியவன், தமிழுக்கு முதல்வன் இத்தலத்திலே உகந்து உறைபவன் என்று தம் பாடல்களில் போற்றியுள்ளார். முருகன் புகழ்பாடிய அருணகிரிநாதர் அம்முருகனிடம் தனது குறைகளை எல்லாம் கூறி அவற்றைத் தீர்த்துத் தமக்கு அருள்புரிய வேண்டும் என அம்முருகப் பெருமானிடம் வேண்டுகிறார்.

திருவாவினன்குடி (பழநி)

முருகப்பெருமான் படைவீடுகளுள் திருவாவினன்குடி மூன்றாவது படைவீடாக அமைகிறது பொதினி ஆவினன்குடி என்னும் பெயர்கள் இத்திருத்தலத்தின் பழம் பெயர்களாகும். அருணகிரிநாதர் தொண்ணூற்றேழு

பாடல்களை இத்தலத்திற்கென இயற்றியுள்ளார். பழநிப் பெருமானே எல்லா வரங்களையும் தந்தருளும் சிந்தாமணி என்று நினைவில் கொண்டு வழிபடுபவர்களுக்கு எல்லாப் பொருள்களும் சித்திக்கும் என்பதை அருணகிரிநாதர் 'வரதா மணி நீ' எனத் தொடங்கும் பாடலில் அழகாகக் கூறியுள்ளார். இயற்கைப் பொலிவோடு விளங்குகின்ற பழநி மலை முருகனிடம் அன்புகொண்ட மக்களுக்கு மட்டுமல்லாது விலங்கினங்களுக்கும் பாதுகாப்புத்தரும் புகலிடமாக அமைந்துள்ளது.

திருவேரகம் (சுவாமி மலை)

ஆறுமுகப் பெருமானின் படைவீடுகளில் நான்காம் படைவீடாக அமைந்து விளங்குவது திருவேரகம். இத்திருத்தலம் இந்திரன், நாராயணன் நான்முகன் ஆகிய மூவரும் அன்புடன் வணங்குகின்ற பெருமை உடையது. இத்தகு சிறப்புடைய சுவாமிமலையில் முருகன் வாழ்கிறான் என்பதை அருணகிரியார் சுராதிப திமாலயனுமாலொடு சுவாமி, சுவாமிமலை வாழும் பெருமாளே என்ற அடிகளில் கூறுகிறார். சுவாமிமலை என்னும் இத்திருத்தலம் நன்மையை விரும்புகின்ற ஞானத்தவசீலர்கள் வாழ்கின்ற புனிதமான திருத்தலம் என்று கூறுகிறார்.

திருத்தணி

ஆறுபடைக் குமரப் பெருமானின் ஐந்தாம் படைவீடு திருத்தணி. அருணகிரிநாதர் திருத்தணியில் வீற்றிருக்கும் முருகப்பெருமானையும், இயற்கை வனப்பையும் வியந்து பாடியுள்ளார். இயற்கை பொலிவு அமையப்பெற்ற தலமாய் திருத்தணியைப் பல பாடல்களில் சுட்டுகிறார்.

பழமுதிர்சோலை

ஆறுமுகப் பெருமானின் ஆறாவது படைவீடாக விளங்குவது பழமுதிர்ச் சோலையாகும். பழமுதிர்ச்சோலை குறித்துப் பதினாறு பாடல்கள் பாடியுள்ளார். இத்தலத்தில் கோயில் கொண்டுள்ள முருகப்பெருமானின் புகழினைச் 'சூர்கிளையேதடித்து பார முடியேயர்ந்து நூல்கள் படநிறு கண்ட வடிவேலா' என்ற அடிகளில் குறிப்பிடுகின்றார். எழுத்துகளில் முதன்மை பெற்ற அகர எழுத்தாகவும் எல்லா உலகங்களுக்கும் தலைவராகவும், எல்லாவற்றிக்கும் மேம்பட்டவராகவும், நான்முகனாகவும், திருமாலாகவும், உருத்திரமூர்த்தியாகவும் அம்மூவருக்கும் மேம்பட்டவராகவும் விளங்குகிறார். முருகப்பெருமான் என்பதை அகர முகமாகிய யதிபனுமாகிய யதிகமுகமாகி அகமாகி என்ற அடிகளில் குறிப்பிடுகிறார். மொழி சமயம் ஆகியவற்றில் சமரச நிலை கண்டு மக்களுக்குச் சமய ஒற்றுமையுணர்வினையூட்டி உயர்நெறி காட்டிய மெய்யுணர்வாளராக அருணகிரிநாதர் விளங்குகிறார். இதன் மூலம் அவரது பாடல்களில் ஆறுபடை வீடுகளின் தனிச்சிறப்பு திருமுருகாற்றுப்படைக்குப் பிறகு வியந்து போற்றப்பட்டுள்ளது.

ஏனைய தலங்கள்

முருகப்பெருமானின் திருவருள் பெருகி மணக்கும் திருத்தலங்களுள் குறிப்பிடத்தக்க சிறப்பு மிக்க தலம் விராலி மலைத் தலமாகும். அருணகிரிநாதர் இத்தலத்துக்கு வந்து தன்னை முருகனுக்கு அன்பு செய்யும் தொண்டனாக ஏற்று அருள்புரிய வேண்டும் என்று வழிபட்டார். அவ்வாறு வேண்டிய பொழுது இளைஞராக இருந்தார். என்றும் முருகன் அவருக்கு ஞானோபதேசம் செய்து சந்தனக் கோட்டம் என்னும் மண்டபத்தில் அருட்பேறு காட்டி வயலூருக்கு வருமாறு பணித்ததாகவும் திருப்புகழிலிருந்து அறிய முடிகின்றது. குன்றக்குடித் தலத்தின் இயற்கை வளத்தைக் குறிப்பிடும் பொழுது தேனாறு பாய்கின்ற வளமுடைய மலைத்தலம் என்று குறிப்பிடுகிறார். முருகப்பெருமானை அகத்தும் புறத்தும் கண்டு வழிபடுவதற்கென்று அமைந்த தலம் திருமலைத்தலமாகும்.

## தத்தகிரி முருகன் கோவில்

க. பரிமளா
முனைவர்பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

நாமக்கல் நகரத்திலிருந்து 10 கி.மீ தொலைவிலுள்ள கிராமமான சேந்தமங்கலம் அருகில் தத்தகிரி முருகன் கோவில் ஒரு சிறிய மலையின் மீது அமைந்துள்ளது.

இந்த கோவிலில் உள்ள கடவுள் பிரம்மாஇ விஷ்ணுஇ சிவன் ஆகியோரின் சித்திரத்திலிருந்து உருவாக்கப்பட்டவர். இங்கு உள்ள முருகப்பெருமானுக்கு கருவறையுடன் கூடிய சன்னதி உள்ளது. பிரம்மாஇ விஷ்ணு மற்றும் சிவனில் இருந்து உருப்பெற்ற கடவுள் தத்தாத்ரேயர் என அழைக்கப்படுகிறார்.

கோவிலுக்கு சில தூரங்கள் வாகனத்தால் பயனித்தாலும் கோயிலை அடைய 50 அடிகள் மலை மீது ஏற வேண்டும். கோவில் முதன்மையாக முருகனையும்இ தத்தாத்ரேயரையும் கொண்டு மிக அழகான கட்டமைப்புடன் விளக்குகிறது.

கோவில் வளாகத்தை சுற்றி வர ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளது. கோவிலின் அடிவாரத்திலும் சிலைகள் அமைத்துள்ளன. இக்கோவிலில் வனதுர்க்கைஇ ஐயப்பன்இ தட்சிணாமூர்த்திஇ ஆஞ்சநேயர்இ ஐந்து முகங்களை கொண்ட விநாயகர்இ இடும்பன்இ நவகிரக சுவாமிகள் எங்கும் காணக்கிடைக்காத சிறப்பு அம்சமாக அமைந்துள்ளது. ஒரு சுற்று பயணம் போல சுற்றிவர வேண்டும்.

இந்த சிலைகள் மிகச்சிறந்த கலைத்திறனுடன் அமைக்கப்பட்டுள்ளது. வனதுர்க்கை சிலை கண்கொள்ளா காட்சி அளிப்பதாக உள்ளது.

கோங்கு மண்டலம் மலைகளில் அதிகமான முருகன் கோவில்களுடன் அமைந்துள்ளது. நுாமக்கல் மாவட்டத்திலுள்ள சேந்தமங்கலம் அருகே ஒரு சிறிய மலையில் அமைந்துள்ள மற்றொரு பிரபலமான கோவில் இதுவாகும்.

**கோவில் வழி**

நாமக்கல் நகரிலிருந்து 10 கி.மீ தொலைவில் சேந்தமங்கலம் அமைந்துள்ளது. (வழி நாமக்கல்-அக்கியம்பட்டி-சேந்தமங்கலம்-இராசிபுரம்)

சேந்தமங்கலம் மிக அருகில் அக்கியம்பட்டி என்னும் கிராமத்தில் மலை மீது அமைந்துள்ளது. மற்றும் ஒரு சிறப்பம்சமாக இங்குள்ள தத்தாத்ரேயர்

மூன்று முகத்துடன் காட்சியளிக்கிறார். இங்கு அமைந்துள்ள ஸ்வயம் பிரகாச ஸ்வாமிகளின் ஜீவ சமாதியில்இ வருகை தரும் பக்தர்கள் அமைதிக்காக தியானம் செய்வதும் உண்டு.

**ஸ்வயம் பிரகாச ஸ்வாமிகள்**

*காதலற்ற ஊசியும் வாராது காண் கடைக்கண் வழிக்கசே* என்ற திருவாக்கைப் படிதளவில் தீடிரெண்டு துறவறத்தை மேற்கொண்டு சிவபோகத்தை வளர்ப்பதிலேயே நாட்டம் கொண்டார். பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை ஆகிய மூன்று ஆசைகளையும் அறவே நீக்கிய ஸ்வாமிகளின் உள்ளத்தில் இவை எதுவும் சிறு சலனத்தைக் கூட ஏற்படுத்தவில்லை.

"தோன்றாசை மூன்றுந் தொடர்ந்து வந்து சுற்றாமல்
ஊன்றாசை வேரையடி ஊடறுப்ப தெக்காலம்"

என்ற பத்திரிகிரியாரும்இ

"பொன்னை மாதரைப் பூமியை நாடிடேன்
என்னை நாடிய என்னுயிர் நாதனே
உன்னை நாடுவன் உன்னருள் தூவெளி
தன்னை நாடுவன் தன்னந் தனியனே"

என்ற தாயுமானவரும்.

"ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"

என்ற திருமூலர் செய்த போதனையும் ஸ்வாமிகள் நினைவுக்கு வந்தபடியால் அவர் இல்லறத்தை விரும்பவில்லை.

**குருவின் உபதேசம்**

ஸ்வாமிகள் காசியம்பதியை அடைந்தவுடன் அங்கே நமக்கு நல்ல ஞான மார்க்கங்களைப் போதிக்கத்தகுந்த ஆசிரியரை நாடினார். எவ்வளுவுதான் ஒருவர் கல்வி கற்றிருந்தாலும் சாஸ்திரங்களை குரு மூலமாகத்தான் கற்க வேண்டும். குரு இல்லாத வித்தை குருட்டு வித்தையாகவே முடியும். காசியில் ஹனுமான் கட்டத்தில் கல்வி பயின்று மேதாவியாக விளங்கிய திருவண்ணாமலை ஸ்ரீதட்சிணாமூர்த்தி ஸ்வாமிகள் என்னும் பெரியாரை நம் ஸ்வாமிகள் தரிசித்தார். பெருங்கருணைக் கடலாகிய ஸ்ரீதட்சிணாமூர்த்தி ஸ்வாமிகளிடம் மூன்று வருடகாலம் பயின்றார். ஒரு மௌன ஸ்வாமிகளை அனுகி அவரிடம் ஆறுமாத காலம் சிஷ்யராக இருந்தார். அதன் பிறகு உனக்கு சகல சித்திகளையும் கொடுக்கும் என்று ஆசிபெற்றார்.

**துறவு பூனல்**

ஸ்வாமிகள் காசியிலிருந்து ஆடுதுறைக்கு வந்து சேர்ந்தார். அங்கிருந்து மதுரை ஜட்ஜ் ஸ்வாமிகள் என்றும் சதாசிவப் பிரமேந்திர என்றும் பெயர்

பெற்ற மகானைச் சந்தித்தார். ஸ்வாமிகள் அவர்களைக் கண்டு என்னை சீடனாக ஏற்றுக்கொண்டு துறவறம் தரவேண்டும் என்று பணிவுடன் வேண்டிக் கொண்டார்.

ஜட்ஜ் ஸ்வாமிகள் உபதேசம் செய்து நீ இடையில் ஏக வஸ்த்திரத்துடன் தாயிடம் சென்று மூன்று முறை அவர்களை வலம் வந்து அங்கே மூன்றே முக்கால் நாழிகை அவர்களிடத்தில் இருந்து அப்பால் அங்கயே அவதூதம் மௌனமும் கொள்ளலாம் என்று ஆணையிட்டார்.

உடனே ஸ்வாமிகள் குருநாதரைப் பணிந்துஇ விடை பெற்றுக்கொண்டு 72 கல் தூரம் நடந்து காணப்பேட்டை அடைந்து அன்னையின் இடம் அடைந்தார். அன்னையை அழைத்து மும்முறை வலம் வந்து பணிந்து எழுந்தார். அப்பொழுது தாம் தரிசித்திருந்த ஆடை நழுவி விழ அதனை எடுத்தெறிந்துவிட்டுப் புறப்பட்டார்.

ஸ்வாமிகள் இவ்வாறு அவதூதம் பெற்றது விகாரி வருஷம் ஆனி மாதம் பௌர்ணமி ஆகும். அப்பொழுது அவர்க்கு வயது இருபத்தெட்டு. ஸ்வாமிகள் ஆஸ்ரமம் ஏற்றபின் அவர் கால்நடையாக தஞ்சாவூர்இ கும்பகோணம்இ விருத்தாச்சலம்இ சிதம்பரம் முதலிய திவ்ய சேத்திர தரிசனமும் செய்தார். பிறகு அவர் திருவண்ணாமலைக்கு சென்று ஸ்ரீரமண மகரிஷியை சந்தித்தார். பின்பு கொல்லிமலைச் சாரலுக்குச் செல்ல நாட்டம் கொண்டார்.

சேந்தமங்கலம் அடைதல்

ஸ்வாமிகள் வெகு வேகமாக நடப்பார். காடுமலைகளையும் காற்று மழை வெயிலையும் கவனியாமல் எந்திரம் போல் நடந்து சேலம் மாநகரை அடைந்தார். அங்கே தெருக்களில் அலைந்து வருகையில் இந்த வாலிப வயதில் ஆடையின்றிச் செல்வது கூடாது. இது சட்ட விரோதமான செயல் என்று கூறி காவல்துறையினர் ஸ்வாமிகளை கைது செய்துவிட்டார்கள்.

சேலம் மேட்டு தெருவில் வசித்த வந்த கிருஷ்ணசாமி ஐயர் என்ற வழக்கறிஞர் இவரை விடுவித்து அவர்கள் வீட்டில் தங்கவைத்து வழிபட்டு வந்தார்.

பிறகு ஸ்வாமிகள் அங்கிருந்து புறப்பட்டு சேந்தமங்கலத்திற்கு தெற்கே ஒரு ஏரியுண்டு அதன் அருகில் ஒரு கரடு இருக்கிறது. இந்த கரட்டில் ஒரு குகையுண்டு. அதில் அடிக்கடி சாமியார்கள் வந்து தங்குவார்கள் அதனால் இக் கரட்டிற்கு சாமியார் கரடு என்று பெயர் ஏற்பட்டது.

சேந்தமங்கலம் வாசிகளான சில மெய்யன்பர்கள் ஸ்வாமியை தரிசித்து வந்தார்கள். சேலம் சுந்தரஞ் செட்டியாரும் பல அன்பர்களும் ஸ்வாமிகளை சாமியார் கரட்டில் தங்கும்படி பிரார்த்தித்துக் கொண்டனர்.

தேய்வீக எழிலுடன் ஒளி வீசும் குன்றின் குகையில் ஸ்வாமிகள் தங்கியிருக்கும் போது முன்பக்கத்தில் கட்டிடம் கட்டி விஸ்தாரப்படுத்தி

பந்தல் அமைத்து வெளிபக்கத்தில் கம்பி கதவும் அமைத்துத் தாளிட்டுப் பூட்டவும் திறக்கவும் வசதி செய்தனர்.

“கங்காளன் பூசங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூசி மகிழ்வீரே யாமாகில்
தங்கா வினைகளும் சாரும் சிவகதி
சிங்காரமான திருவடி சேர்வரே” -திருமந்திரம்

என்று விபூதியின் பெருமையைக் கூறி விபூதி பிரசாதம் அளித்து வந்தார். குகை பூட்டப்பட்டிருந்த போதும்இ வெளியே காடுகளில் காணப்படுவாராம். பிறகு குகைக்குள் நிஷ்டையிலும் இருப்பாராம்.

மூன்று அல்லது நான்கு மாதங்களுக்கு ஒரு முறை குகையை விட்டுப் புறப்பட்டு ஒரு மாதம் சஞ்சரிப்பதும் பிறகு மீள்வதுமாக இருந்து வந்தார்.

**பூப்ரதிரிணம்**

இவ்வாறு இரண்டு வருட காலம் சென்ற பிறகு சார்வாரி வருஷம் உத்தராயணத்தில் பூப்ரதிரிணம் செய்யக் கருதி புறப்பட்டு கால் நடையாகவே கிளம்பி தென்னாட்டை கடந்து வடநாட்டை அடைந்து பல புண்ணிய சேத்திரங்களுக்கும் சென்று விட்டு தென்னாடு நோக்கி பதினேழு வருஷ காலம் பூப்ரதிரிணம் செய்தபின் சேந்தமங்கலத்தை அடைந்துஇ சாமியார் குன்றையே தம் கோயிலாகக் கொண்டு அங்கயே தங்கினார்.

அக்கரட்டை தவிர வேறங்கு செல்லவில்லை அவரை நிறைய சிஷ்யர் வந்து அவருக்கு சேவை செய்து வந்தவர்கள் சங்கரானந்தர்இ சந்தானந்த ஸ்வாமிகள்இ கிருஷ்ணாந்த ஸ்வாமிகள் ஆவார். சாந்தாநந்தர் தத்தகிரி மலையில் ஸ்ரீமுருகப்பெருமானை பிரதிஷ்டை செய்து 20.01.1985 ஆம் ஆண்டு மகா கும்பாபிஷேகம் செய்தார். 28.01.1985 ஆம் ஆண்டு சபா மண்டபத்தில்இ மகா கணபதிஇ இடும்பன்இ தத்தகங்கைஇ வனதுர்க்கைஇ சனீஸ்வரர்இ பஞ்சமுக ஆஞ்சநேயர்இ தட்சிணாமூர்த்திஇ கருப்பண்ணசாமிஇ ஐயப்பன் போன்ற விக்ரகங்களை பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகத்தை நடத்தி கொடுத்துள்ளார்.

அங்கு தத்தகிரிக்கு அருகே தத்தாசரமத்தில் இவரது அதிஷ்டானம் இருக்கிறது ஸ்வாமிகள் தத்தாத்ரேய விக்ரகத்தை வேத விதிபடி பிரதிஷ்டை செய்து வெகு சிறப்பாகக் கும்பாபிஷேகம் செய்து வைத்தார். வருடந்தோறும் மார்கழி மாதத்தில் தத்தஜெயந்தி வெகு விமர்சையாக நடைபெற்று வருகின்றது. வைகாசி மாதம் 18ந் தேதி 31.05.1936 ஞாயிற்றுகிழமை மகா கும்பாபிஷேகம் செய்து வைத்தார்.

பௌர்ணமி தினங்களில் அவரிடம் உபதேசங்கள் கேட்கவும் பெருந்திரளாக மக்கள் கூடுவர். ஸ்வாமிகள் உடலை உதறித் தள்ளும் காலம் வந்த விட்டதை உணர்ந்த அன்பர்கள் ஸ்ரீதத்தாத்ரேய சந்திக்கும்

கீழே முதல் மாடியில் தன் சமாதிக்கென இடத்தைக் காட்டியிருந்தார். ஸ்வாமிகள் சர்வதாரி வருஷம் மார்கழி கிருஷ்ணபட்ச சதுர்த்தி அன்று 29.12.1948 ஸ்வாமிகள் மகா சமாதியில் ஆழ்ந்தார்.

அவர் காட்டிய இடத்தில் அவரது திருமேனியை அடக்கம் செய்து சிவலிங்கத்தை பிரதிஷ்டை செய்து அவரது திருவுருவத்தையும் பிரதிஷ்டை செய்து வழிபட்டு வருகிறார்கள்.

"அந்தமில் ஞாணி அருளை அடைந்தக் கால்
அந்த உடல் தான் குகை செய்திருத்திடில்
சுந்தர மன்னரும் தொல் புவியுள்ளோரும்
அந்தமி லின்ப அருள் பெறுவாரே" -திருமந்திரம்

சாமியார் கரடு தத்தகிரியின் முருகனை பிரதிஷ்டை செய்து தத்தகிரி முருகன் கோவில் ஆனது.

**தத்தகிரியின் சிறப்பு நிகழ்ச்சிகள்**

மாதந்தோறும் ஸ்ரீமுருகப்பெருமானுக்கு கிருத்திகை அன்று அபிஷேகம் மற்றும் தீபாராதனை நடைபெறும். வளர்பிறை சஷ்டி அன்று அபிஷேகம் மற்றும் தீபாராதனை நடைபெறும் மேற்கண்ட நாட்களில் பக்தர்களுக்கு அன்னதானம் வழங்கப்படும்.

தைப்பூசத்தன்று வாத்தியங்கள் முழுங்க காவடி ஆட்டம் நடைபெற்று கிரிவலம் வந்து முருகனுக்கு அபிஷேகம் தீபாராதனை நடைபெறும். மாலையில் ஸ்ரீமுருகபெருமான் வள்ளி தெய்வானையுடன் தத்தகிரி சுற்றி வலம் வரும் காட்சி கண்கொள்ளாகாட்சியாகும். வாணவேடிக்கை நடத்தப்பட்டு அன்னதானம் வழங்கப்படும்.

பங்குனி உத்திரப்பெருவிழா அன்று 108 பால் குடத்துடன் காவடி ஆட்டம் நடைபெறும். மலையைச் சுற்றி வந்து சன்னிதானம் அடைந்து பாலாபிஷேகம் மற்றும் தீபாராதனை நடைபெறும்.

நீண்ட தொலைவிலுள்ள மக்கள் வந்து செல்கிறார்கள். திருமணம் அதிகமாக நடைபெறுகிறது. இங்கு வந்து வேண்டி கொண்டு சென்றால் அனைத்தும் நடைபெறுகிறது என்கிறார்கள். கிருபானந்த வாரியார் அதிக முறை அமைதிக்காக வந்து சென்ற இடம். இவ்வாறு தத்தகிரி முருகனின் அருள் பரந்து சென்று கொண்டிருக்கிறது.

**வழித்தடம்**

நாமக்கல் சேந்தமங்கலம் பஸ் மார்க்கத்தில் தத்தகிரி பஸ் ஸ்டாப். நாமக்கலில் இருந்து 11 கி.மீ தூரத்தில் தத்தகிரி ஸ்ரீமுருகன் கோவில் உள்ளது.

## ஊத்துக்குழிகதித்தமலைவெற்றிவேலாயுதசுவாமி திருக்கோவில்

க.ச. பவானி,
உதவிப் பேராசிரியர் (தமிழ்த்துறை),
அவினாசிலிங்கம் மனையியல் மற்றும்
மகளிர் உயர் கல்விநிறுவனம்,
கோயமுத்தூர் – 43

மக்களை நன்னெறிப்படுத்தி வாழ்வாங்கு வாழச் செய்வதில் கோவில்கள் முக்கிய இடத்தைப் பெற்று விளங்குகின்றன. பல்லவர் காலத்தில் தோன்றிய பக்தி இயக்கத்தால் நாயன்மார்களும் ஆழ்வார்களும் சைவசமயத்தையும் வளர்க்கும் வகையில் தலம் தலமாகச் சென்றுபாடியுள்ளனர். அவர்களால் பாடப்பட்ட தலங்களில் எல்லாம் சைவவைணக் கோவில்கள் சிறப்பாகக் கட்டப்பட்டுள்ளன. இவ்வாறு சமயங்களின் அடிப்படையில் கோயில்கள் பல தோன்றி வளர்ந்துள்ளன. இத்தகைய சிறப்புமிக்க கோயில்களின் ஒன்றானமுருகப்பெருமான் குடிகொண்டுள்ள ஊத்துக்குழி கதித்தமலை வெற்றிவேலாயுதசுவாமி திருக்கோயில் குறித்த செய்தியினைக் காட்டுவனவாய் இக்கட்டுரை அமைகிறது.

**முருகனின் பிறப்பும் சிறப்பும்**

மாதொரு பாகனின் மகனாகக் குறிக்கப் பெறும் முருகன் அழகும், அறிவும், வீரமும் பொருந்தியவனாய் அடியார்க்கு அருள் புரிகின்றவனாய் இலக்கியங்களில் போற்றப்படுகிறான், சிவபெருமான் தமதுநெற்றிக் கண்ணிலிருந்து ஆறு தீப்பொறிகளைப் படைத்து அக்கினித் தேவனிடம் கொடுத்தார். அதை அக்கினி வாயுதேவனிடம் கொடுக்கத் தீப் பொறிகளைத் தேவர்கள் உண்டு சகிக்காது சூரநோய் கொண்டு மேருமலைச் சாரலையடைந்து கங்கையில் இட்டனர். அக்கரு ஆறு குழந்தைகளாக மாறி கார்த்திகைப் பெண்டிர் அறுவரிடம் பால் குடித்து வளர்ந்தது. ஒருநாள் உமையம்மை அங்கு வந்து ஆறு குழந்தைகளை அனைத்தபோது ஆறு குழந்தைகளும் ஒன்றாகக் கூடி ஒரே குழந்தையாக மாறியது. இவ்வாறு முருகனின் பிறப்பு பற்றிக் கூறப்படுகிறது. பொதுவாகத் தமிழ்க் கடவுள் எனக் கொண்டாடப் பெறும் முருகப் பெருமானே பெறும்பான்மையான சங்கப் பாடல்களில் இடம் பெறும் நாயகராகிறார். பத்துப் பாட்டின் ஒன்றான திருமுருகாற்றுப்படை முருகனின் புகழைப் பாடும் தனிநூலாக இலங்குகின்றது. கடல் கலங்கச் சென்று மாமரமாய் நின்ற சூரனை அழித்த வேலேந்திய முருகனைச் சிவந்த மேனியைக் கலித்தொகையில்,

*"மாகடல் கலக்குறமா கொன்றமடங் காப்போர்*
*வேல் வல்லான நிறன்"* (முல்லைக்கலி பா.எ.4)

என்று முல்லைக் கலிபாடல் கூறுகிறது.

*"இருகை திரிப்ப, ஒருகை விளங்க, ஒருகை*
*ஒருகை பொலிய, ஒருகொட்ட, ஒருகை இரட்ட,*
*ஒருகை பொலிய, ஒருகை சூட்ட, ஒருகை ஐயர்க்கேந்த,*
*ஒருகை உக்கஞ் சேர்ந்த, ஒருகை கடாவ, ஒருகை அசைந்தது"*

(திருமுருகு: பா.வரிகள்-96-117)

என்று முருகப்பெருமானின் பன்னிருகரங்கள் பற்றிநக்கீரர் அழகாக வெளிக்காட்டியுள்ளார்.

*"இளங்குமரன் தன்னை பயந்து இமையவர்"*

(2-ம் திருமுறை,பதிகம்-73 பா.7-1)

என்று ஞானசம்பந்தர் தேவார ப்பாடல் வரியிலும்,

*"முருகவேள் தன்னைப் பயந்தாய் போற்றி"*

(6-ம் திருமுறைபதிகம்-5 பா.எ.10)

என்றதிருநாவுக்கரசர் தேவாரப்பாடல் வரியிலும்,

*"குமரனை பயந்தவார்த் தயங்கிய முலைமடமானன"*

(7-ம்திருமுறை-பதிகம்-62 பா.எ.4)

என்ற சுந்தரர் பாடல் வரிகளிலும் முருகன் பற்றிய செய்தி வருவதைக் காணலாம். சேந்தன், குமரவேள், காளை, மைந்தன், இளங்குமரன் போன்ற பெயர்களால் திருமுறைகளில் போற்றப்பெரும் முருகனை நம் கதித்தமலையின் திருத்தலத்தில் வெற்றி வேலாயுதசுவாமியாகப் போற்றப்படுகின்றார்.

**கதித்தமலை**

குன்றுதோறாடும் குமரன் திருத்தலங்களில் கதித்தமலையும் ஒன்று. 'கதித்தமலைக்கு எதுத்தமலை இல்லை' என்று பலரும் இம்மலையின் பெருமை பற்றிக் கூறுவர். இக்கோயிலில் எந்தக் கோயிலிலும் இல்லாத சிறப்பு அமைந்துள்ளது. இந்தமலைக் கோயிலானது மேல்மலை கீழ்மலை என்று இரு பிரிவாக அமைந்துள்ளது. கதித்த வெற்றி வேலாயுதசுவாமி கோயில் என்று உருவானது என்று சொல்வதற்குச் சரியான ஆதாரம் இல்லை. அருணகிரிநாதர் திருப்புகழில் கதித்தமலையைக் குறிப்பதால் ஏறக்குறைய 600 ஆண்டுகட்கு முன்பே கோயில் ஏற்பட்டுள்ளது என்றுக ருதலாம். 23.09.1763 அன்று விசயமங்கலம் ஐந்து பங்குக் கவுண்டர்கள் இணைந்து முன் திருப்பணி செய்தனர். புதுக்கோயில் ஒன்றைக் கட்டுவதைவிட முன்னோர் கட்டிய பழைய கோயிலைப் புதுப்பித்தும், பாதுகாப்பதும், பழுதுபார்ப்பதும் நான்கு மடங்கு புண்ணியம் தரும் என்று பழைய புராணங்கள் கூறுகின்றன. காஞ்சிப்புராணம் நூலில் சிவபுண்ணியப் படலத்தில்,

*"முரிந்து வீழ்ந்தன வெடித்தன உடைந்தன முதிய*
*நேரிந்த வாகிய கோபுர நெடுமதின் பிறவும்*
*தெரிந்து முன்னையில் சீர்பெறப் புதுக்குவோர் பண்டு*
*புரிந்துள் ளோர்பெறும் புண்ணியம் நான் மடங்கு உறுவர்"*

(முதற்காண்டம் பா.எ.411)

என்று கூறுகிறது.

**கதித்தமலை அமைந்துள்ள இடம்**

ஊத்துக்குழி கதித்தமலை வெற்றி வேலாயுதசுவாமி திருக்கோயில் குறுப்பு நாட்டில் முதன்மைத் தலமாக விளங்குகிறது. கொங்கு நாட்டில் தென்குறுப்பு நாட்டைச் சார்ந்ததாய் ஊத்துக்குழி விளங்குகிறது. ஈரோடு மாவட்டம் விஜயமங்கலத்திலிருந்து 10 கிலோமீட்டர் தொலைவில் உள்ளது. ஊத்துக்குழி என்ற பெயரில் மூன்று ஊர்கள் உள்ளன. அவை பொள்ளாச்சி வட்டத்தில் ஒன்றும், ஈரோடு மாவட்டத்திலும், பெருந்துறை வட்டத்தில் ஒன்றும் உள்ளது. கதித்தமலை கோயில் அமைந்துள்ளது ஊத்துக்குழி பெருந்துறை வட்ட புஞ்சை ஊத்துக்குழி ஆகும்.

**கதித்தமலைகோயில் அமைப்பு**

கோயில் என்ற சொல் கோ + இல் எனப் பிரிக்கலாம். 'கோ' என்றால் இறைவன் அல்லது அரசன் என்றும், 'இல்' என்றால் உறைவிடம் என்றும் பொருள் கொண்டால் கோயில் என்பதற்கு இறைவனது உறைவிடம் அல்லது அரசனது உறைவிடம் என்று பொருள் என்பதனை கழகத் தமிழகராதி குறிப்பிடுகிறது. (பக்.106) கதித்தமலை கோயில் அமைப்பு அலங்கார வளைவுடன் மலைக்குச் செல்லும் பாதை துவங்குகிறது. மலையின் மேல் செல்லும் படிக்கட்டுப் பகுதியில் மலையின் அடிவாரப் பகுதியில் பாலவிநாயகர் திருக்கோயில் அமைந்துள்ளது. அகலமான படிக்கட்டு வழிச் சென்றால் மலைக்குமேல் வெற்றி வேலாயுதசுவாமி திருக்கோயில் அமைந்துள்ளது.

**கோபுரம்**

கோபுர தரிசனம் கோடிபுண்ணியம் என்பார்கள் அப்பர், சுந்தரர் காலத்திலேயே கோபுரங்களும், விமானங்களும், மதில்களும், தீச்சுற்றுக்களும் இருந்தன என்பதை அவர்கள் தேவாரமும், சேக்கிழார் பெரியபுராணமும் தெரிவிக்கின்றன.

*"கோபுரஞ் சூழ்மணிக் கோயில்"* (திருஅலவாய்பதிகம்: பா.எ.4)

என்று சம்பந்தர் தேவாரத்திலும்,

*"கோலக் கோபுரக் கோகரணம்"* (திருவங்கமாலை பா.ப.9)

என்று அப்பர் தேவாரத்திலும்,

*"பண்பயில் வண்டறை சோலை குழுங்காழிப்*
*பரமர்! திருக்கோ புரத்தைப் பணிந்துள் புக்கு*
*விண்பணிய வோங்கு வெருவி மானந் தன்னை*
*வலங்கொண்டு தொழுது"*

என்று சேக்கிழார் புராணத்திலும் கோபுரம் பற்றிய முதப்பட்டுள்ளது இவர்கள் கூறியுள்ளபடி கதித்தமலை கோயிலின் உட்செல்வதற்கு முன்பே கோபுரம் 5 கலசம் கொண்டு உயர்ந்து ஓங்கி அமைந்து உள்ளது. ஐந்து நிலை கொண்டு கம்பீரமான நிலையில் இராசகோபுரம் அமைந்துள்ளது. இக்கோயிலில்

கொடிமரம், தலமரமாக வில்வமரமும், வசந்தமண்டபம், மகாமண்டபம், அர்த்தமண்டபம், கருவறை விமானம், சுற்றுப்பிகாரம், இடும்பன் கோயில், சுப்புராயர் கோயில், காளை வாகத்திருவடி வள்ளிதெய்வானை கோயில், கக்குமலையான் கோயில் என்ப் பல உள்கோயில்கள் இடம் மலையில் உள்ளன.

**கதித்தமலைபற்றிசெவிவழிச் செய்திகள்**

1. கதித்தமலையின் வடசரிவில் உள்ள காளை வாகனத் திருவடிச் சந்நிதிக்கு ஒருகதை கூறுகின்றனர். முருகன் ஞானப்பழம் இடைக்காததால் கோபம் கொண்டு பழனி மலைக்குச் செல்வதற்கு முன்பு இம்மலையில் வந்து நின்றதாகவும்,அவரின் கோபம் தணிக்கச் சிவனும், பார்வதியும் காளை வாகனத்தில் வந்து நின்றதாகவும், அவர்கள் வந்து நின்ற இடத்தில் காளையின் காலடிச் சுவடு இன்றும் காணப்படுகிறது என்றும் அந்த நம்பிக்கையில் அந்தக் காலடிச் சுவட்டினை வணங்கி வருகின்றனர் என்றும் கூறப்படுகிறது.

2. மயூராசுரன் என்பவன் இப்பகுதியில் வாழ்ந்து வந்தான். அவன் ஆறு மாதம் அரக்க குணத்துடன், ஆறு மாதம் தேவர் குணமும் கொண்டிருப்பவன். அரக்ககுணம் கொண்ட காலத்தில் மக்களுக்கு பெரும் துன்பம் விளைவித்ததால் முருகப் பெருமானால் அழிக்கப்ட்டான். அப்போத உடல் பிரிந்த உயிரானது முருகனிடத்தின் தான் தேவகுணம் கொண்டு சமயத்தில் மக்களுக்குச் செய்த நன்மைக்கும் இதுதான் பரிசா என்று வினாவினான். அதைப் புரிந்த முருகன் நல்ல ஆன்மாவிற்கு முத்தி தந்து அவர் குடிகொண்டுள்ள கதித்தமலைக்குக் காவல் தெய்வமாக இருக்கச் சொன்னார் மற்ற முருகன் கோயில் இடும்பனே காவல் தெய்வமாக இருப்பான் இக்கோயில் புற்றுக் கோயிலே காவல் தெய்வம் ஆகும்.

**கதித்தமலை வெற்றிவேலாயுதசுவாமி குறித்த இலக்கியங்கள்**

கதித்தமலை இலக்கியங்கள் பதிக வடிவும், பாமாலை வடிவிலும், சிந்து அமைப்பிலும், தனிப்பாடல்களாகவும் அமைந்து உள்ளன.

“பதிகம் என்பது தெய்வத்தைப் பற்றிப் பெரும்பாலும் 10 செய்யுளால் பாடப்படும். பிரபந்தம், பாயிரம், பதியம் ஆகிய பொருள்களைக் குறிக்கும் சொல்லாகும்” தமிழ் இலக்கியவகையும் வடிவும் என்று பதிகம் பற்றி சுப்பிரமணியம் ச.வேதம் நூலில் கூறுகின்றார். (தமிழ் இலக்கிய வகையும் வடிவமும் ப.452) கதித்தமலை வெற்றிவேலாயுதசுவாமிக்கு இரண்டு புலவர்கள் பதிகம் பாயுள்ளனர். 1. நாகப்ப கவுண்டர், 2. வண்ணாசரபம் தவத்திரு தண்டபாணி சுவாமிகள். நாகப்ப கவுண்டர்

“*விண்ணவர் சிறையை மீட்டவன் நீயே*”

(கதித்தமலைமுருகன் பதிகம், 2)

என்றும்,தண்டபாணிசுவாமிகள்,

*"கருப்புமதன் நாணுறம் வாகா*
*ஆதித்த மலைவாழ் குகவேள"* (கதித்ததலைபதிகம், 3)

என்றும், மேலும் முருகன் அழகை

*"சிவந்த திருமேனிய னானே*
*செருச்செய் துயர்சேவலு ளானே"* (கதித்தமலைபதிகம்,6)

என்றும் அழகாக எடுத்துப் பாடுகின்றன.

தங்கச்சிந்து

சிந்தடி என்பது மூன்று சீர்களைக் கொண்ட அடியாகும். கதித்தமலை முருகனுக்குத் தங்கச் சிந்து பாடியவரும் நாகப்ப கவுண்டரே.

தன்னை வேண்டுவோருக்கு வினை தன்னை அகற்றித் தன் அடியில் சேர்போன், சேவலைத் தன் கொடியாகக் கொண்டவன், அசுரர்களை அழித்த வீரம் மிக்கவன் என்று முருகனின் புகழை,

*"பக்தர் வினைய கற்றிப் பரமபதம் கொடுப்போன*
*சிந்து பரிக தித்தமலை–தங்கம்*
*சேவல் கொடியேனடி"* (கதித்தமலைதங்கச்சிந்து, 7)

என்று பாடலடிகளில் பாடியுள்ளார்.

*"முனிக்குஅருள் புரிந்தோன் முத்திடதரும் நாதன்"*
(கதித்தமலைசிந்து பா.12)

எ'று முருகன் முத்திதருபவன் என்றும் கூறுகிறார்.

இவர்கள் போல் புலவர் ந.இராமச்சந்திரன் கதித்தமலை முருகன் மீது காவடிச் சிந்தும், பாமாலை திருப்புகழும், முருகன் மீதுகாவடிச் சிந்தும், கதித்தமலை பெருமான் மாலையும், தி.சு.சோமசுந்தரம் பிள்ளை மீது கும்பிப் பாடல்களும் கவியமுதம் பாடியுள்ளார்.

"கதித்தமலை வாழும் முருகனடி-அவன்
கால்களில் தாமரை பூத்தடி
செந்தமிழ் மொழியைத் தந்தவண்டி-மணித்
திருப்புகழ் மாலைஅணிந்த வண்டி"

என்றும் முருகனை கும்மிப் பாடலால் புகழ்ந்து கூறியுள்ளார். பண்டையக் காலந்தொட்டு இன்றுவரை தமிழகத்தில் கோயில்கள் சிறப்புற்று விளங்கி வந்துள்ளன. அவற்றில் முருகன் தலங்கள் போற்றுதலுக்கரியன பலவாகும். இக்கட்டுரை முருகனின் பிறப்பும் தோற்றச் சிறப்புகளையும், இலக்கியங்களில் முருகன் பற்றிச் செய்திகளையும். முருகனின் திருத்தலங்களில் ஒன்றான ஊத்துக்குழி கதித்தமலை வெற்றிவேலாயுதசுவாமி கோயிலினைப் பற்றியும் தொகுத்துக் காட்டியுள்ளது.

## கல்வெட்டுகளில் கந்தன்
### (சோழர் கல்வெட்டுகள் - ஒரு சிறப்புப் பார்வை)

முனைவர் மா. பவானி
உதவிப் பேராசிரியர்,
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

*'நாள் என் செயும் வினை தான் என் செயும்*
*எனை நாடு வந்த கோள் என் செயும்*
*கொடுங்கூற்று என் செயும்*
*குமரேசன் பாதமும் தண்டையும் சதங்கையும்*
*தோளும் கடம்பும்*
*சண்முகமும் என் முன் நிற்கையில்!* (அருணகிரிநாதர்- திருப்புகழ்)

இத்தகைய வினை தீர்க்கும் வேலவனின் பெரும்புகழை நக்கீரர் முதற்கொண்டு அருணகிரியார், பாம்பன் ஸ்வாமிகள், கிருபானந்தவாரியார், போன்ற புலவர்களும் பக்தர்களும் பாடிப் பரவி வந்துள்ளனர். தமிழக வரலாற்றுத் துவக்க காலம் முதல் இறைவழிபாடு தொடங்கப்பெற்ற காலம் முதல் முழுமுதற் தெய்வமாகவும் வெறியாடும் வேலனாகவும் முருகக்கடவுள் திகழ்ந்துள்ளார். 'சேயான் மேய வண்டுறை உலகம்' என முருகனை குறிஞ்சி நிலத்தலைவனாக சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. 'கோழிச் சேவற் கொடியோன் கோட்டம்' எனக் கோழியையும் சேவலையும் கொடியாகக்கொண்ட குமரனுக்கு கோட்டம் இருந்தை சிலம்பு கூறுகிறது. 'வேலன் வெறியாட்டு' முருகனை வழிபடும் முறைகளுள் ஒன்றாக அகப்பாடல்கள் குறிப்பிடுகின்றன. முருகனுக்கு சசிதரண், ஸ்கந்தன், சேனாதிபதி, சுப்பிரமணியன், கஜவாகனன், சரவணபவன், கார்த்திகேயன், குமரன், சண்முகன், தாரகாரி, சேனானி, பிரம்மசாஸ்தா, வள்ளி கல்யாணசுந்தரர், பாலசுவாமி, கிரௌஞ்சபேதன், சிகிவாகனன், என பல உருவங்கள் இருப்பதாக கச்சியப்ப முதலியார் அருளிய தணிகைப்புராணத்தில் பேசப்பெறுவதாக கயிலை மணி அண்ணாமலை குறிப்பிடுகிறார்[1]. இலக்கியங்கள் முருகனின் உருவங்களையும் சிறப்புக்களையும் பலவாறாகக் குறிப்பிடுகின்றன. எம்துறை 'கல்வெட்டு', ஆகையால் கல்வெட்டுகள் முருகனைப் பற்றிக் கூறும் செய்திகளை தொகுத்துக்கூறின் புதிய முயற்சியாகயிருக்கும் என்ற கருதுகோளின் அடிப்படையில் 'கல்வெட்டுகளில் கந்தன் (சோழர் கல்வெட்டுகள் ஒரு சிறப்புப்பார்வை' என்ற தலைப்பில் இந்த ஆய்வுக்கட்டுரை அமைகிறது.

**சங்க காலக் கல்வெட்டுகள்**

இலக்கியங்களைப்போல் கல்வெட்டுகள் முருகனின் சிறப்புகளையோ, உருவங்களையோ பற்றிப் பேசவில்லை. முருகனின் பெயரில் ஆட்பெயர்களே

(personal names) கிடைக்கபெற்றுள்ளன. இவையே இங்கு ஆராயப் பெறுகின்றன.

சங்க கால கல்வெட்டுகளை இரு வகையாகப் பகுக்கலாம். ஒன்று சமணர் வாழ்ந்த குகைகளில் காணப்பெறுபவை. மற்றொன்று சங்க மறவரின் வீர மரணத்தினை நினைவாக எடுக்கப்பெற்ற வீர கற்கள் (hero stones) முன்னர் சுட்டயவை இதுவரை 95 கல்வெட்டுகள் கிடைத்துள்ளன. வீர கற்கள் 5 மட்டுமே கிடைத்துள்ளன. அவற்றுள் புதுக்கோட்டை மாவட்டம் பொற்பனைக்கோட்டையில் கிடைத்த கல்வெட்டொன்றில் முருகனின் பெயர்களுள் சிறப்பானதாகக் கருதப்பெறும் 'குமரன்' என்ற பெயர் இடம்பெறுகிறது[2].



பொற்பனைக்கோட்டை நடுகல்

4) அங்கப்படை தணயன் கணங்

5) குமாரன் கல்

**பல்லவர் காலக் கல்வெட்டுகள்**

பல்லவ மன்னன் முதலாம் மகேந்திர வர்மனின் வல்லம் கல்வெட்டு (செங்கல்பட்டு மாவட்டம்) காலத்தால் முற்பட்ட தமிழ் எழுத்துப்பொறிப்புக் கல்வெட்டுகளாகும். இது பொ.ஆ 7ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது இதில் மகேந்திரவர்மனின் விருதுப்பெயர்கள் குறிப்பிடப்பெற்றுள்ளன. இக்கல்வெட்டு தேவகுலம் (கோயில்) அமைத்ததைப் பற்றிக் குறிப்பிடுகிறது. (SII, vol.2, no.1) கோயிலைக் கட்டியவர் பெயர் கந்தசேனன் என்பதாகும். இவ்வெழுத்துக்களை மேல் கொடுக்கப்பெற்ற வரைப்படத்தில் காணலாம். இவர் மகேந்திரனின் அடியானாகிய (அரசர் மேல் கொண்டுள்ள பற்றை வெளிப்படுத்துகிறது. இவர் அரசர்க்கு அடுத்த நிலையிலுள்ள உயர் அலுவலராகலாம்.) வயந்த பிரியரசர் என்பவரின் மகனாவார்.

**சோழர் கல்வெட்டுகள்**

சோழர் கல்வெட்டுகளில் தான் அதிக அளவிலான ஆட்பெயர்கள் இடம்பெறுகின்றன (personal names).

**சுப்ரமணியர்க்கு செப்புத்திருமேனி**

தஞ்சாவூர் ராஜராஜீஸ்வரத்தைக் கட்டிய முதலாம் இராஜராஜன் தமது 29ஆம் ஆட்சியாண்டில் சுப்ரமணியர் செப்புத்திருமேனி ஒன்றை செய்தருளியுள்ளார். (SII, vol.2,no.49). இத்திருமேனி பாதஅடிமுதல் முடிவரை (பாதாதி கேசாந்தம்) 10 விரல் 5 தோரை உயரமுள்ள நான்கு திருக்கரங்களுடன் உள்ளீடற்று அமைக்கப்பெற்றுள்ளது. இதற்கு 10 விரல் அகலம் 11 விரல் நீளத்தில் ஒரு பீடமும் 3 விரல் உயரத்தில் ஒரு பத்பமும் அமைக்கப்பெற்றுள்ளது. இதுப்போன்ற முருகனின் திருவுருவம் அமைக்கப் பெற்றதைப் பற்றிக் குறிப்பிடும் கல்வெட்டுகள் அருகியே உள்ளன. பிற அனைத்தும் முன்னர் சுட்டியதைப்போல் ஆட்பெயர்களில் முருகன் பெயர் இடம்பெற்றிருக்கும் கல்வெட்டுகளேயாகும்.

**சோழர் கல்வெட்டுகளில் முருகன் பெயர்கள்**

முருகனுக்கு ஆயிரக்கணக்கான பெயர்கள் இருப்பினும் அவரது பெயர்களுள் கந்தன், கடம்பன், குமரன், முருகன் என்ற நான்கு பெயர்களையே சோழர் கால மனிதர்கள் தங்கள் பெயர்களில் சூட்டியுள்ளனர். சோழர் கல்வெட்டுகளில் 78 (கல்வெட்டுகள்) பெயர்கள் இடம்பெறுகின்றன. அப்பெயர்கள் வ.எண், நோக்கீடு, அரசன் பெயர், காலம், கல்வெட்டுக்களில் இடம்பெறும் பெயர்கள் என்ற வகையில் அட்டவணையிடப்பெற்றுள்ளன. இந்த அட்டவணை தயாரிப்பதற்கு Concordance of the Names in Chola inscriptions என்ற நூல் அடிப்படைச் சான்றாகப் பயன்படுத்தப்பெற்றுள்ளது.[3] அதனடிப்படையில் South Indian Inscritptions தொகுதிகளில் இடம்பெற்றிருக்கும் கல்வெட்டுப்பாடங்களும் முதன்மைச் சான்றுகளாக பயன்பட்டுள்ளன. இந்த அட்டவணையின் அடிப்படையிலேயே செய்திகள் இங்கு வழங்கப்பெற்றுள்ளன.

**முருகன்**

முருகனின் பெயரில் 'முருகாற்றுப்படை' என்ற ஒரு தனி இலக்கியமே சங்க காலத்தில் நக்கீரரால் இயற்றப்பெற்றுள்ளது. ஆற்றுப்படை இலக்கியங்கள் சற்றே காலத்தால் பிற்பட்டதாக கருதப்பெறுகிறது. முருகாற்றுப்படையில் அங்குசம், முகம் போன்ற சமஸ்கிருத வார்த்தைகள் பயின்று வருவதால் இவை பிற்சேர்க்கை என்று ஆய்வாளர் கருதுகின்றனர். பிற்சேர்க்கையாயின் இது கடைசியில் இடம்பெற்றிருக்கவேண்டும் . பத்துப்பாட்டுகளில் முதலாவது இடம்பெறும் முருகாற்றுப்படை பிற்சேர்க்கையாக இருப்பதற்கு வாய்பில்லை. கி.பி. 2, 3ஆம் நூற்றாண்டுகளிலேயே தமிழல் வடமொழிக் கலப்பு ஏற்பட்டுவிட்டது என்று கே.கே.பிள்ளைக்குறிப்பிடுகிறார். எனவே இவர் முருகாற்றுப்படைக்கு கி.பி.2, 3ஆம் நூற்றாண்டு என காலம் கணிப்பதாகக்கொள்ளலாம்.[4]

கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், மறுபதிப்பு, 2008, பக்.91 – 92.

78 பெயர்களுள் 5 கல்வெட்டுகளில் முருகன் என்ற பெயர் இடம்பெற்றுள்ளன. முதலாம் ஆதித்தன் காலம் முதல் முதலாம் இராஜேந்திரன் காலம் வரையில் இப்பெயர் இடம்பெறுகிறது.

**கந்தன்**

கந்தன் என்ற பெயர் 7 முறை இடம்பெறுகிறது. உத்தமசோழன் காலம் முதல் இரண்டாம் இராஜேந்தின் காலம் வரையில் அதாவது ஆம் நூற்றாண்டு முதல் 13 ஆம் நூற்றாண்டு வரையில் காணப்பெறுகிறது.

**கடம்பன்**

முதலாம் பராந்தகன் காலந்தொட்டு (பொ.ஆ 925) மூன்றாம் இராஜராஜன் காலம்வரை (பொ.ஆ. 1245) கிட்டத்தட்ட சோழர் காலம் முழுவதும் வழங்கப் பெற்றுள்ளது 27 முறை கடம்பன் இடம்பெற்றுள்ளது. ஆண் பெயர்கள் மட்டுமின்றி கடம்ப மாதேவி என்ற பெண் அரசியின் பெயருரிலும் 'கடம்ப' என்ற முன்னொட்டுள்ளது.

**குமரன்**

கல்வெட்டுகளில் அதிக அளவு எண்ணிக்கையில் கிடைப்பது 'குமரன்' என்ற பெயரேயாகும். 39 கல்வெட்டுகளில் இப்பெயர் இடம்பெறுகிறது. இராஜகேசரி, பரகேசரி என்றும் அரசரின் பெயர் இடம்பெறாமல் இடம்பெறும் கல்வெட்டுகள் சோழர் காலத்தில் முற்பகுதியைச்சேர்ந்தது. பொது ஆண்டு 845 என இதற்கு காலம் கணிக்கப்பெற்றுள்ளது. பொ.ஆ. 845முதல் 9ஆம் நூற்றாண்டு முதல் இரண்டாம் ராஜாதிராஜன் காலம் வரை (1175) 12ஆம் நூற்றாண்டுவரையில் இப்பெயர் கிடைக்கிறது.

முன்பே சுட்டியதுபோல் சங்க காலக் கல்வெட்டிலும் 'குமரன் ' என்ற பெயர் இடம்பெற்றுள்ளது. அதைத் தொடர்ந்து வந்த களப்பிரர்காலத்தைச் சேர்ந்த பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் 'குமாரம் போந்தை' என்பவர் உலவியப்பெருந்திணையாக (கணக்கதிகாரி) குறிப்பிடப்பெறுகிறார்,[5]

எனவே குமரன் என்றே பெயரே கல்வெட்டுகளிலும் இலக்கியங்களிலும் தொன்மையானதாகக் குறிப்பிடப்பெறுகிறது. 'வேலன் வெறியாடல்' என்பதில் வேலன் என்ற பெயரை தொகை இலக்கியங்கள் (அகம், பா.எண1, .202, புறம் 16:12 குறுந்தொகை பா. எண்.53) குறிப்பிடுகின்றன. ஆனால் இவற்றின் காலம் உறுதியாக குறிப்பிடப்பெறவில்லை.

**முடிவுரை**

கந்தன் (ஸ்கந்தன்), கடம்பன், கார்த்திகேயன், சண்முகம், சுப்ரமணியம், குகன், போன்ற ஆயிரக்கணக்கான பெயர்கள் இறைவன் முருகனுக்கு

வழங்கப்பெற்றாலும் கந்தன், கடம்பன், குமரன், முருகன் என்ற நான்கு பெயர்களே கல்வெட்டுகளில் ஆட்பெயர்களாக இடம்பெற்றுள்ளன. இவை அனைத்தும் தமிழ்ப் பெயர்கள் என்பது சுட்டத்தக்கது. இப்பெயர்களைத் தாங்கியவர்களில் பலர் அரசுக்கு அடுத்த உயர் நிலை வகித்துள்ளனர். இருப்பினும் தகுதி கருதி சமஸ்கிருத பெயரை வைத்துக்கொள்ளவில்லை என்பதை மேற்சுட்டிய பெயர்கள் உணர்த்தும். அதுமட்டுமின்றி சிவஸுப்ரமண்யம், ஸுப்ரமண்யம், கார்த்திகேயன் போன்ற சமஸ்கிருத பெயர்களெல்லாம் சோழர் காலத்தில் ஆட்பெயர்களாக இல்லை என்றும் தெரியவருகிறது. இலக்கியங்களை அனைவரும் ஆராய்வர். எனவே என்னை கல்வெட்டுகளில் முருகன் குறித்து ஆராயுமாறு ஆலோசனை வழங்கிய இக்கருத்தரங்கின் ஒருங்கிணைப்பாளர் மோ.கோ. கோவைமணி அவர்களுக்கும் , குறுகிய காலத்தில் தரவுகள் சேகரிப்பில் உதவிய மாணவிகள் முத்துமீனாட்சி, மற்றும் விஷ்ணுப்பிரியா ஆகியோருக்கும். பார்க்க வேண்டிய இலக்கியங்களை தொலைப்பேசி வழி அறிவித்த புலவர் அருளாளன் து. இராசகோபால் ஐயா அவர்களுக்கும் நன்றிகள் பல.

அடிக்குறிப்புகள்

1. கயிலைமணி ஓம் ஆ. இராம் அண்ணாமலை, 'முருக வழிபாட்டின் தொன்மை', *பழந்தமிழர் வாழ்வும் வரலாறும், (அறம்), செம்முதாய் பதிப்பகம், 2016, பக். 113 - 116.*
2. சு. இராஜவேலு, 'பொற்பனைக்கோட்டை தமிழி நடுகல்', *ஆவணம்*, இதழ்,24, பக்18 -19.
3. Noburu Karahsima ,Y. Subbarayalu etal., Concordance of the Names in Chola Inscriptions, vol, I, II, III, Sarvodaya Ilakkiyap Pannai, Madurai, 1978
4. கே.கே. பிள்ளை, தமிழக வரலாறு, மக்களும் பண்பாடும், உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், மறுபதி, 2008, பக்.91 – 92.
5. மா. பவானி, *தொல்லெழுத்து ஆவணங்கள் (கல்வெட்டுகளும் செப்பேடுகளும்)*, 2017, பக்14 – 24.

# தொல்காப்பியத்தில் முருகப் பெருமான்

முனைவர் ஞா. பழனிவேலு
இணைப்பேராசிரியர்
அயல்நாட்டுத் தமிழ்க்கல்வித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010

மனிதன் தன்னுடைய நிலையிலிருந்து தாழ்நிலைக்குச் செல்லாமல் உயர்நிலைக்குச் செல்ல உதவும் நெறிகளுள் முதன்மையானது சமய நெறி. சமயம் என்பது பக்குவப்படுத்துதல் என்று பொருள் பெறும். உணவுப் பொருள்களை உண்ணும் நிலைக்குப் பக்குவப்படுத்தும் தன்மைக்குச் சமைத்தல் என்று பெயர். அதுபோல ஆன்மாவை முக்தியடையப் பக்குவப்படுத்துவது சமயம். இச்சமயம் சைவம், வைணவம், சௌரம், கௌமாரம், காணாபத்தியம் என்ற வகைகளில் பகுக்கப்பட்டுள்ளன. இச்சமயத்தில் இவ்வழிபாடுகளில் கௌமாரம் என்பது முருகப் பெருமானை முழுமுதற் கடவுளாகக் கொண்டது. இவ்வழிபாடானது தமிழ் மக்களின் வழிபாட்டு முறைமைகளில் பெரும்பங்கு வகிக்கிறது. முருகு என்ற சொல்லுக்கு அழகு என்பது பொருள். ஆண்பால் விகுதியாகிய அன் உடன் இயைந்து முருகன் என்றாயிற்று. எனவே அழகுடன் அமைந்த திருவுருவத்திற்கு முருகன் என்று பெயர். முருகன் என்ற சொல் பழங்காலத்தொட்டு சூர்ப்பகை, செட்டி, குமரன், வேள் முதலான பல பொருள்களில் கையாளப்பட்டு வருகின்றது. இது

*"முருகன் சூர்ப்பகை, செட்டி, குமரன்*
*...... வேள் எனச் செப்புவர்."*

(திவாகரமுனிவர், சேந்தன் திவாகரம் பக்.எண் - 4)

என்ற பாடல் வழி அறியலாகிறது. என்றும் இளமையோடு இருப்பவன், வெறியாட்டாளன் என்ற பெயரிலும் அழைக்கப்பட்டான் என்பது முருகன் - இளையோன் குமரன், வெறியாட்டாளன் (கழகத் தமிழகராதி – பக்.எண்.776) என்ற அகராதித் தொடரால் அறியலாகிறது. கையில் வேலுடனும் இளமைத் தோற்றத்துடனும் இருக்கும் கடவுளை முருகன் என்றழைத்தனர்.

தமிழ்ச் சான்றோர்கள் இதனை விளக்கும் வண்ணம் "இயற்கை மணமும் மாறா இளமையும் எல்லாப் பொருளையும் கடந்து ஒளிரும் தன்மையும் அழியா அழகும் இறைவனிடத்தில் இலங்குவது கண்டு அப்பொருள்கள் முறையே உறைகள் இடம்பெற்றுள்ள முருகன் என்னும் அவ்விறைவனுக்குப் பழந்தமிழ் மக்கள் சூட்டியதன் திறமையை நோக்குழி அவர்களது கூர்ந்த மதி புலனாகிறது. இதிலிருந்து முருகன் என்ற சொல்லிற்குரிய பொருளும் சிறப்பும் பெறப்படுகின்றது. இச்சிறப்புடைய முருகப் பெருமானைத் தொல்காப்பியரின் வழி நின்று விளக்குவது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

மக்களின் பண்பாட்டில் சிறப்பிடம் பெறுவது அம்மக்களின் மொழியில் தோன்றிய இலக்கிய, இலக்கணங்களாகும். அம்மக்களின் வாழ்க்கைமுறை, அரசியல், ஆன்மீகம் முதலானவற்றை அறிந்துகொள்வதற்கு அக்காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்கள் சான்றாக அமைகின்றன. தமிழரின் வாழ்வியலை அறிந்துகொள்ள தொல்காப்பியம் முதலான இலக்கண நூல்களும் சங்க இலக்கியம் முதலான இலக்கியங்களும் துணைநிற்கின்றன. அவ்வகையில் முருகவழிபாட்டினைப் பற்றியும் தமிழ் இலக்கிய இலக்கண நூல்கள் விளக்குகின்றன.

**தொல்காப்பியத்தில் முருகப் பெருமான்**

முழுமுதற் கடவுளான முருகப் பெருமானைத் தொல்காப்பியர் 'சேயோன்' என்னும் சொல்லில் சுட்டுகிறார். குறிஞ்சி நிலப்பகுதியையும், அந்நிலப் பகுதிக்குரிய தலைவனையும் தொல்காப்பியர்,

*"சேயோன் மேயமைவரை உலகமும்"*

(தொல்.பொருளதிகாரம், அகத்திணையில் - நூ.எண் - 5)

என்று குறிக்கின்றார். மலையும் மலை சார்ந்த இடமும் குறிஞ்சிப் பகுதியாகும். இப்பகுதிக்குரிய கடவுள் சேயோன். இங்குச் சிவந்தன் என்னும் பொருள் தரும் 'சேயோன்' என்பது முருகப்பெருமானைக் குறிக்கிறது. முருகப்பெருமானின் திருப்பெயர்களுள் இதுவும் ஒன்று. முருகனுக்குச் 'சேய்', 'செவ்வேள்' என்னும் திருப்பெயர்களும் உண்டு. குறிஞ்சி நிலத்துக் கடவுள் முருகன் ஆதலின் அப்பெருமானுக்கு மலையில் உள்ள மயிலை ஊர்தியாகவும், சேவலைக் கொடியாகவும், கடம்பமலரை அடையாள மலராகவும், பழங்காலத்தில் அமைத்துப் போற்றினார்கள்.

தொல்காப்பியர் குறித்த 'மைவரை உலகமும்' என்பது 'மேகம் தவழும் நிலம்' என்று பொருள்படும். மை என்பது மேகத்தையும், வரை என்பது குறிஞ்சி என்பதையும், உலகம் என்பது நிலத்தையும் குறிக்கும். தொல்காப்பியர் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றையும் முருகவழிபாட்டிற்கு உரியனவாகச் சுட்டுகிறார்.

**கொடிநிலை, கந்தழி, வள்ளி**

கொடிநிலை, கந்தழி, வள்ளி இம்மூன்றும் முருகவழிபாட்டில் சிறப்பிடம் பெறுகின்றன. இதனைக்,

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"*

(தொல்.பொருளதிகாரம். புறத்திணையியல், நூ.எண் - 27)

என்ற நூற்பா வழி அறியலாகின்றது.

நச்சினார்க்கினியார் தம் உரையில் கொடிநிலையை ஞாயிறு என்றும், கந்தழியைப் பற்றுக் கோடின்றி நிற்கும் தத்துவம் கடந்த பொருள் என்றும், வள்ளியைத் திங்கள் என்றும், கடவுள் வாழ்த்தை அமரர் வாழ்த்தும் என்றும் கூறுகின்றார். (தொல்காப்பியம்-நச்சினார்க்கினியர் உரை — பக்.எண் - 401).

**கொடிநிலை**

கொடிநிலை வழிபாடே தொன்மை வழிபாடாகும். வெற்றியும் மிடுக்கும் உடையவர்கள் கொடிகட்டிக் கொள்வார்கள் என்ற வாக்கிற்கேற்ப முருகன் சேவல் கொடியைக் கொண்டவனாக விளங்குகின்றான். கொடிநிலைக் காட்சி பெற விரும்பும் அன்பர்களுக்கு அவரவர் வரைந்து கொண்ட வடிவில் இறைவன் மணிமிடற்றோனாகிய சிவபெருமானாகவும், பலராமனாகவும், முருகனாகவும், வருபவன் என்பதைக் குறிக்கவே திருவள்ளுவர் முதற்குறளில் இறைவனைப் பகவான் எனக் குறித்தனர். வீரத்தின் மிக்கது சேவல். வீரமூர்த்தியாகிய முருகன் வீரப்பறவையாகிய சேவலைக் கொடியாக உடையவன். சேவல் குரல் எழுப்பும் பாணியில் வீரமும் வெற்றியும் கலந்து இருப்பதை உணர்ந்த மனிதன் வீரத்திற்கும் வெற்றிக்கும் அடையாளமாக அச்சேவலைக் கொடியாக்கி வணங்கினர். இத்தகைய சேவல் தீய சக்திகளை அழிக்கும் ஆற்றலுடையது என்பது,

*“கலகமிடும் அலகைகுறள் மிகுபணிகள் வலிமையொடு*
*கடினமுற வரில் அவைகளைக்*
*கண்ணைப்பிடுங்கியுடல் தன்னைப் பிளந்துசிற*
*கைக்கொட்டி நின்றாடுமாம்”*

(அருணகிரிநாதர், சேவல்விருத்தம், பா.எண்-1)

என்ற பாடல்வழி அறியலாகின்றது. எனவே பழந்தமிழ் இலக்கியங்களின் அடிப்படையில் நோக்கும் போது முருகனது கொடி சேவல் கொடியே என்ற எண்ணம் வலுப்பெறுகின்றது. பழந்தமிழர் இயற்கையோடு இயைந்த வாழ்வு நடத்தினர். இயற்கையையே கடவுளாக வணங்கினர். இயற்கையில் தோன்றும் சூரியனின் செம்மையில் சேயோனைக் கடவுளைக் கண்டனர். இங்ஙனம் முருகனைச் சேயோனாய், கண்ட மக்கள் இச்சேவலோடு அவரைத் தொடர்புபடுத்திக் கொடிநிலை வழிபாட்டை தோற்றுவித்தனர்.

**கந்தழி**

தமிழ்க்கடவுளான கந்தனைத் தொல்காப்பியர் ‘கந்தழி’ எனக் குறித்துக் காட்டினார். கந்தழி என்பது கந்து + அழி எனப் பிரிந்து, பற்றுக்கோட்டினை அழிப்பது எனப் பொருள்படும். அம்முதற் பொருள் ஒவ்வொர் அணுவிலும் உள்ளீடாய் விளங்கி மனிதனுக்குப் பற்றுக்கோடாகி தனக்கொரு பற்றுக்கோடாக யாதுமின்றி, ஆதியும் அந்தமும் இல்லாத அருட்பெருஞ் சோதியாகவும், எப்பொருளையும் தன்னுள் தோற்றி அழிப்பதுமாகிய ஓர் ஒப்பற்ற சக்தியாகவும் நின்று விளங்குவதாகும்.

பழங்காலத்தில் சிறுகம்பங்களையும் முளைகளையும் நட்டு அவற்றையே தெய்வமாக வழிபட்டு வந்தார்கள். அவற்றைக் கந்து அல்லது கந்தம் என்று சொல்வார்கள் கந்து என்பதற்கு நடுதறியென்றும், பற்றுக்கோடென்றும் பொருள். சிவலிங்கம் அருவம், உருவம் என்ற இரண்டையும் இணைந்த நிலையாகும். அதுபோன்ற அருவுருவம் கந்து ஆகும். கன்றாப்பூர் என்ற தலத்தில் இறைவன் நடுதறியாகவே காட்சியளிக்கின்றான்.

*"கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே"*

(தி.நா,தே. ஆறாம் திருமுறை, கன்றாப்பூர் பதிகம், பா.எண்-1)

என்ற பாடலடியால் விளக்கம் பெறுகின்றது. ஆதலின் உலக வாழ்க்கையின் பற்றுக்கோட்டினை நீக்குகின்ற மெய்யியல் தன்மையும் முருகனின் தன்மையும் இணைந்து பெறப்படுகின்றது.

**வள்ளி**

வீட்டின்பம் வழங்கும் வள்ளன்மையுடைய கடவுள் நிலையே வள்ளி எனப்படும். வள்ளிநிலை என்பது அறத்தைக் குறிக்கும். குறிப்பாக ஈதல் அறத்தைக் குறிக்கும்.

தமிழ் இலக்கண நூல்களில் மிகவும் பழமை வாய்ந்த தொல்காப்பியம் முருகனைச் 'சேயோன்' எனவும் 'கந்தழி' எனவும் சுட்டுகிறது. அவர் கூறும் 'கொடிநிலை', 'கந்தழி', 'வள்ளி' என்ற மூன்றையும் முருக வழிபாட்டுடன் தொடர்புபடுத்திக் காண முடிகிறது.

மொழியானது நிலைபெற்று விளங்க முக்கிய காரணங்களுள் ஒன்று இலக்கிய மற்றும் இலக்கண வளங்களாகும். அவ்வகையில் நம் தமிழ்மொழியைச் சங்க காலம் முதல் இக்காலம் வரை பல இலக்கியங்கள் வளப்படுத்தி வருகின்றன. சங்க இலக்கியங்கள் அகம் மற்றும் புற வாழ்க்கையோடு வழிபாட்டு நிகழ்வுகளையும் விளக்குகின்றன.

**துணை நின்ற நூல்கள்**


1. கலியாண சுந்தரனார், *முருகன் அல்லது அழகு*, திருவரவ புத்தக நிலையம், சென்னை, 2003.
2. தொல்காப்பியர், *தொல்காப்பியம், பொருளதிகாரம்,* முல்லை நிலையம், சென்னை, 2000.
3. தொல்காப்பியர், *தொல்காப்பியம், நச்சினார்க்கினியர் உரை,* தமிழ்மண் பதிப்பகம், சென்னை, 2003.

# தமிழ்க்கடவுள் முருகன்

ஆர். பாக்கியஸ்ரீ
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை,
கே.எஸ்.ராஜா கலை மற்றும் அறிவியல் மகளிர் கல்லூரி,
செஞ்சி

தமிழ் இலக்கியத்தில் தொன்றுதொட்டு முருகன் வழிபாடு நிலவி வருகிறது. 'சேயோன் மேய மைவரை உலகு' எனத் தொல்காப்பியத்தில் தொடங்கி இருபத்தோராம் நூற்றாண்டின் முதல் கலம்பகமான காளிப்பட்டி கந்தசாமி கலம்பகம் வரையிலான இலக்கியங்களும் பாடல்களும் முருகனின் பெருமையைச் சொல்லிக்கொண்டுதான் இருக்கின்றன. குறிஞ்சித்திணையின் தலைவனாக இருந்தவன் யாவருக்கும் பொதுவான தெய்வமானான். சிவனின் மகனானான். கௌமாரத்தின் தலைவனானான். கந்தபுராணத்தின் தலைவன் ஆனான். பரிபாடலில் செவ்வேளாக நின்றவன் திருமுருகாற்றுப்படையில் வழிபடும் கடவுளாகக் காட்சி தந்தான். அறுபடை வீட்டையும் தனதாக்கிக்கொண்டான். அழகுக்கு உருவமாக முருகனைப் பழந்தமிழர்கள் அடையாளப்படுத்தினர். முருகு என்றால் அழகு இளமை மணம் கடவுட்தன்மை' என்பர் திருவி.க.[1] மேலும் பண்டைத் பழந்தமிழர்க் கடவுளாம் முருகனை இயற்கை அழகு வாயிலாகக் கண்டுணர்ந்த தமிழ்ப் புலவோர் தாம் பாடிய முருகனின் கவின்மிகு தோற்றத்தினை வருணிப்பர். பார்க்கடலில் நிவந்தெழும் காலைக்கதிரோன் தோற்றத்தை நீலமயிலின் மீது அமர்ந்திருக்கும் செவ்வேள் தோற்றமாகக் கண்டு மகிழ்வர்.

சங்ககால மக்கள் வழங்கிய கொடைகளுள் ஒன்றாக முருக வழிபாடு இன்றளவும் விளங்கி வருகிறது. சுங்ககாலத்தின் முதன்மை தெய்வமாக முருகன் திகழ்ந்துள்ளான். அன்புத் தெய்வமாகவும், காதல் தெய்வமாகவும், அழகுத் தெய்வமாகவும் விளங்கியுள்ளமையைச் சங்க பாடல் வழி அறியமுடிகிறது. முருகனைச் செவ்வேள், செய்யோன், வேள், குறிஞ்சிக்கிழவன், வேலன் ,கொற்றவை சிறுவன், பகையோன் கிழவி எனப்பல பெயர்களாலும் அழைத்துள்ளனர். 'முருகு புணர்ந்த இயன்ற வள்ளி'[2] என்று முருகனின் காதல் மனைவியாகிய வள்ளியைப் பற்றி நற்றிணை குறிப்பிடுகின்றது முருகனது பிறப்பையும் தாய்வழி உரிமையையும் பற்றி பெரும்பாணாற்றுப்படை குறிப்பிடுமிடத்து பைம்பூட்சேய் பயந்த மா மோட்டுத் துணங்கையஞ் செல்வி என்று குறிப்பிடுகின்றது.

எட்டுத்தொகை நூல்களில் முருக வழிபாடு பற்றிய பதிவுகள் காணக்கிடைக்கின்றன. நற்றிணையில் மூன்று பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

*கார் நறுங்கடம்பின் கண்ணி சூடி*
*வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்*

*கடவுள் ஆயினும் ஆக*
*மடவை மன்ற வாழி முருகே![3]* (நற்-34)

என்ற பாடலில் களவுக் காலத்தில் தலைவன் பிரிவினால் வேறுபட்ட தலைவியின் நிலைக்கு இரங்கி வெறியாட்டு எடுக்கும் நிகழ்வைக் குறிப்பிடுமிடத்து இப்பதிவு இடம்பெறுகிறது. மேலும்,

*வெறி என உணர்ந்த உள்ளமொடு மறி அறுத்து*
*அன்னை அயரும் முருகு(நற்-)[4]*
*'இந்நோய்*
*என்னினும் வாராது மணியின் தோன்றும்*
*அம்மலை கிழவோன் செய்தனன் இது'* (நற்-)

என்றும் பதிவுகள் காணப்படுகின்றன. இது போன்று குறுந்தொகையில் நான்கு பாடல்கள் முருகனைப் பற்றிய பாடல்கள் இடம்பெற்றுள்ளன. முருகனின் வடிவத்தை அழகுறச் சிறப்பிக்கின்றது. தாமரை போன்ற மலர்ப் பாதங்களும் பவளம் ஒத்த சிவந்த தேகமும் குன்றிமணியினைப் போன்ற ஆடையையும் சூரனை அழிக்கும் முன் அவனுக்கு அரணாக இருந்த கிரௌஞ்ச மலையை அழித்த ஒளிபொருந்திய நெடிய வேற்படையைக் கையில் கொண்டும் சேவற் கொடியேந்தியும் முருகன் காத்தல் தொழிலைச் செய்து வருவதாலே இவ்வுலகில் உயிர்கள் துன்பமில்லாமல் இன்புற்று வாழ்கின்றன என்பதனை,

*"தாமரை புரையுங் காமர் சேவடி*
*பவழத்து அன்ன மேனி திகழ் ஒளிக்*
*குன்றி ஏய்க்கும் உடுக்கை, குன்றின்*
*நெஞ்சு பக எறிந்த அம்சுடர் நெடுவேல்*
*சேவல் அம் கொடியோன் காப்ப*
*ஏம வைகல் எய்தின்றால் உலகே![5]*

என்று வாழ்த்துப் பாடலில் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடுகிறார். குன்றத்தில் வாழும் மக்கள் தங்கள் எத்துயரானும் முருகனே தீர்த்து வைப்பான் எனத் திடமாக நம்பினர். ஒரு தம்பதியினருக்குப் பிள்ளைச்செல்வம் நெடுங்காலமாக இல்லாமல் இருந்தது. எச்செல்வம் இருந்து என்ன பயன் இட்டும் தொட்டும் கவ்வியும் துவழ்ந்தும் நெய்யுடை அடிசிலை தாய்தந்தையர் மீது விதிர்க்கும் மயக்குறு மக்களைப் பெறாதவர்களுக்கு வாழ்நாளில் எந்த பயனும் இன்பமும் இல்லை. ஆதலால் முருகனை நினைந்து தவம் செய்து பிள்ளைவரம் பெற்றனர். இச்செய்தியைக்,

"குன்றக் குறவன் கடவுள் பேணி
இரந்தனன் பெற்ற வெல்வளைக் குறுமகள்"[7]

என்று ஐங்குநுறூறு குறிப்பிடுவதிலிருந்து இதனை அறியமுடிகிறது. பரிபாடலில் முருகனைச் செவ்வேளாகக் குறிப்பிடப்படுகிறது.

*திருமாற் கிருநான்கு செவ்வேட்கு முப்பத்*
*தொருபாட்டுக் காடுகிழாள் ஒன்று - மருவினிய*
*வையை இருபத்தாறு மாமதுரை நான்கென்ப*
*செய்ய பரிபாடல் திறம்* [8]

என்னும் பழம்பாடல் பரிபாடல் பற்றி விளக்கினாலும் இன்று இருபத்திரண்டு பாடல்களே கிடைக்கின்றன. அதில் செவ்வேள் பற்றி எட்டுப் பாடல்களே உள்ளன. 5,8,9,14,17,19,21 ஆகிய பாடல்கள் முருகன் பற்றிய பாடல்களாகும். கடுவன் இளவெயினனார் எனும் புலவர் முருகனின் ஆற்றல் தோற்றப் பொலிவு, முருகனின் பிறப்பு வெற்றிச் சிறப்புகளைக் குறிப்பிட்டுள்ளார். பிணிமுகம் என்னும் யானையின் மீதேறிச் சென்று வேற்படையாலே கிரௌஞ்ச மலையை உடைத்ததையும் மாமரமாகிய சூரபத்மனை வெட்டி வீழ்த்தியதையும் சுட்டுகின்றார்.

*"மூவிரு கயந்தலை முந்நான்கு முழுவுத்தோள்*
*ஞாயிற்றேர் நிறத்தகை நளினத்துப் பிறவியை"*[9]

என்று ஆறு தலைகளுடனும் பன்னிரண்டு தோள்களுடனும் சூரியனை ஒத்த அழகுடனும் தாமரைப் பூவின்கண் பிறந்தவன் முருகனாகத் திகழ்கிறான் என்று குறிப்பிடுகிறார். மேலும் குழந்தைப் பருவத்திலே இந்திரனை விளையாட்டாகப் போர் ஆற்றி வெற்றி பெற்றமையால் தேவர்கள் முருகனுக்குப் பல பரிசுகளைத் தந்தனர். தீக்கடவுள் கோழியைத் தந்தான் இந்திரன் மயிலைத் தந்தான், இயமன் வெள்ளாட்டு மறியைத் தந்தான், பிற தேவர்கள் வில்லும் வாளும் வேலும் ஈட்டியும் கோடரியும் தந்தனர் எனக் குறிப்பிடுகிறார். (பரிபாடல்-5 -55-62)

நல்லந்துவனார் பாடிய எட்டாம் பாடலில் திருப்பரங்குன்றத்து சிறப்பினைப் பாடியுள்ளார். திருமாலும் சிவபெருமானும் பிரமனும் ஆதித்தர் பன்னிருவர் அசுவனி மருத்துவர் இருவரும் வசுக்கள் எண்மரும் உருத்திரர் பதினொருவரும் திக்குப் பாலகர் எண்மரும் ஏனைத் தேவர்களும் அசுரரும் முனிவரும் உன்னைக் காணும் பொருட்டு மண்ணுலகின்கண் வந்து உறையும் இடமாக திருப்பரங்குன்றம் உள்ளதென்றும் அது " இமயக்குன்றத்தை ஒக்கும் எனவும் குறிப்பிடுகின்றார்.

ஆற்றுப்படையின் முதல்நூலாகவும் வழிபடு நூலாகவும் உள்ளது திருமுருகாற்றுப்படை பழங்காலத்தில் முருகவழிபாடு எங்ஙனம் இருந்தது என்பதை அறிந்து கொள்ள இந்நூல் முழுமையாகப் பயன்படுகிறது.

*உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டாங்கு*
*ஓவற இமைக்குஞ் சேண் விளங் கவிரொளி"* [10]

என தொடக்கத்திலே திருமுருகப்பெருமானின் இறைத்தன்மையைச் சுட்டுகிறார். திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய் திருவேரகம், திருவாவினன்குடி, குன்றுதோர்

ஆடல், பழமுதிர்ச்சோலை எனும் ஆறு தலங்களையும் அங்கு எழுந்தருளியிருக்கும் முருகப்பெருமானின் சிறப்பையும் அடியவர் வழிபடும் தன்மையையும் குறிப்பிடுகின்றார் நக்கீரர்.

முருகனடியாரை ஆற்றுப்படுத்தும் விதமாக நக்கீரர் ஆற்றுப்படுத்த திருப்பரங்குன்றத்தைத் தலைமையிடமாகக் கொண்டு ஆற்றுப்படுத்துகிறார். திருப்பரங்குன்றத்தில் தேவயானையின் கணவனாகவும் கடப்பமாலை அணிந்த மார்பினனாகவும் வரும் பக்தர்களுக்கு அருள் தருபவனாகவும் காட்சி தருவதை,

*"மால்வரை நிவந்த சேணயர் வெற்பிற்*
*கிண்கிண் கவைஇய ஒண்செஞ்சீறடிக்க*
*கணைக்கால் வாங்கிய நுசப்பின் பணைத்தோள்*
*கோபத்தன்ன தோயாப் பூந்துகில்*
*பல்காசு நிரைத்த சில்கா ழல்குல்*
*கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பின்*
*நாவலொடு பெயரிய பொலம்புனை அவரிழைச்*
*சேணிகந்து விளங்குஞ் செயிர்தீர் மேனி"* [11]

ஏன்று வர்ணிக்கிறார். திருச்சீரலைவாயில் எழுந்தருளியுள்ள முருகப்பெருமானின் ஆறு திருமுகங்கள் செய்யும் செயலை நக்கீரர் குறிப்பிடுமிடத்து பேரிருளைப் போக்க கதிர்விரிந்திருப்பது போல ஒளி தந்தது ஒருமுகம். தும்மை நினைந்து அன்பு செய்யும் அடியவர் வேண்டும் வரம் தந்தது ஒருமுகம். மந்திர நூல்களின் விதிமுறைப்படி பிறழாது ஓதும் அந்தணர் வேள்விக்கு இடையூறு வராத வண்ணம் காத்தது ஒருமுகம். வேதநூல்களில் மறைந்து கிடக்கும் ஞான மறைபொருளை அறிந்துகொள்ளும் விரும்பும் உத்தமர்க்குச் சந்திரனைப்போலக் காட்சி தந்தது ஒருமுகம். வஞ்சனை செய்யும் அவுணர்களைச் சம்காரம் செய்து களவேள்வி செய்தது ஒருமுகம். குறவர் குடியில் பிறந்த வள்ளியை மணந்து மகிழ்ச்சி பொருந்தி நின்றது ஒருமுகம் என முருகப்பெருமானின் திருமுகச் செயல்களைப் பதிவிடுகிறார். இதனை,

*மாயிரு ஞாலம் மறுவின்றி விளங்கப்*
*பல்கதிர் விரிந்தன் றொருமுகம் ஒருமுகம்*
*ஆர்வலர் ஏத்த அமர்ந்தினி தொழுகிக்*
*காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே ஒருமுகம்*
*மந்திர விதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வியோர்க்கும்மே ஒருமுகம்*
*எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்*
*திங்கள் போலத் திசைவிளக் கும்மே ஒருமுகம்*
*செறுநர்த் தேய்த்த செல்சம முருக்கிக்*
*கறவுகொள் நெஞ்சமொடு களம்வேட் டன்றே ஒருமுகம்*
*குறவர் மடமகள் கொடிபோல் நுசப்பின்*
*மடவரல் வள்ளியோடு நகையமர்ந் தன்றே"* [12]

என்று பாடுகின்றார் நக்கீரர். மேலும் பன்னிரு திருக்கைகளின் செயல்களையும் விளக்குகிறார். திருவாவினன்குடியில் கந்தர்வர், தேவர்கள், பதினெண் கணங்கள் முதலானோர் வழிபடுவதைச் சுட்டுகிறது. திருவேரகத்தில் அந்தணர்கள் தாங்கள் வழிபடுவதற்குரிய காலமறிந்து முப்புரிநூலையும் புலராத ஆடையையும் அணிந்து கொண்டு தலைமேல் குவித்த கையினராய் மந்திரங்களை ஓதிக்கொண்டு மணமிக்க மலர்களைத் தூவி முருகப்பெருமானுக்கு வாழ்த்துச் சொல்லி வணங்குகின்றனர்.

தொல்காப்பியம் தொட்டு வழிபாட்டுக்குரிய இறையாக விளங்கி வந்த முருகப்பெருமான் பின்னர் தனிப்பெருந் தெய்வமாக விளங்கியதோடு மட்டுமல்லாது தனிசமயத்தின் கடவுளாகவும் பரிணமித்தார். தமிழ்நாடு மட்டுமன்றி உலகத்தில் தமிழ்ர் எங்கெலல்லாம் வாழ்கின்றனரோ அங்கெல்லாம் முருக வழிபாடு பரவத் தொடங்கியது மட்டுமல்லாது அங்கு வாழும் மக்களையும் வணங்க வைத்த தெய்வமாக விளங்குகிறான்.

அடிக்குறிப்புகள்

1. முருகன் அல்லது அழகு ப -09
2. நற் -82
3. நற் 34 9-12வரி
4. நற் -47
5. நற் -173
6. குறுந் -கடவுள்வாழ்த்து
7. ஐங்குறு -257
8. பரி-4
9. பரி -5
10. திருமுருகு 1-3
11. திருமுருகு 12-19
12. திருமுருகு 91-102.

# தத்துவ நோக்கில் வேல்

முனைவர் தி. பார்த்திபன்
உதவிப்பேராசிரியர்,
மெய்யியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 10

*"அறிவற்றம் காக்கும் கருவி செறுவார்க்கும்
உள்ளழிக்கல் ஆகா அரண்."*
குறள் - 421

என்பது அறிவு, அழிவு வராமல் காக்கும் கருவியாகும். மேலும் அது பகைவராலும் உள்புகுந்து அழிக்க முடியாத பாதுகாப்பு அரணாகும் என்னும் தமிழ் வேதத்தின் கருத்துப்படி பிரணவ சொருபியான, தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானிடம் மும்மூர்த்திகளுமே அடக்கம். அதாவது காக்கும் கடவுளாகிய 'முகுந்தன்' அழிக்கும் கடவுளாகிய 'ருத்ரன்' படைக்கும் கடவுளாகிய 'கமலோற்பவன்' ஆகிய இந்த மூன்று மூர்த்திகளின் திருநாமங்களின் முதல் எழுத்துகளின் ஒப்பற்ற வடிவமே "முருகா" என்பதே இப்பெயரின் சிறப்பு. முருகப் பெருமானுக்கு முருகன், குமரன், குகன், வேலன், போன்ற பல சிறப்புப் பெயர்கள் உண்டு. குறிஞ்சி நிலத்தின் கோமகனே — கடவுளே இந்த முருகன்தான். தமிழர்கள் அறிவியல் வல்லுநர்கள் மட்டுமல்ல. அறிவியல் முன்னோடி என்பது உலகம் அறிந்த உண்மை. ஐவகை நிலமாக, நிலத்தைப் பாகுபடுத்தி அந்த ஐவகை நிலத்தில் குறிஞ்சியை முதலில் வைத்துக் குறிஞ்சியின் தெய்வமாக முருகனை வைத்துப் போற்றும் மரபு தமிழரின் வாழ்வியல் நுட்பமாகக் காட்டுகிறது.

தமிழில் முருகனைப் பற்றி ஏராளமான நூல்கள் உள்ளன. அவை பரிபாடல், திருமுருகாற்றுப்படை, தேவாரம், திருப்புகழ், கந்தபுராணம் போன்றவை ஆகும். மேலும் வால்மீகி இராமாயணத்திலும், காளிதாசரின் குமாரசம்பவத்திலும் இடம்பெற்றுள்ளன. சங்க நூல்களிலும், முருகனைப் பற்றிய செய்திகள் கூறப்படுகின்றன. பெண்களின் காதல் நோய் குறித்து நிகழ்ந்து வந்த 'வெறி ஆடல்'களில் முருகக்கடவுள் - பூசாரி மூலமாக ஆவேசித்து நிற்பர். இன்னும் இவ்வெறியாடல் 'வேலனாடல்' என்று வழங்கப்பட்டதாக அறிய முடிகிறது. இவ்வாறு பல சிறப்புப் பெற்ற தமிழ்க் கடவுள் முருகனின் கையில் உள்ள வேலாயுதம் அல்லது வேல்படை என்று அழைக்கப்படுகின்ற வேல் பற்றிய சிறப்பையும் அதன் நோக்கத்தையும், தத்துவக் கருத்தையும், பற்றிக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## கௌமாரம்

ஆறுசமயக் கடவுள் வேறு வேறின்றி யான் ஒருவனே அங்கு அங்கிருந்து அன்பர்க்கு முத்திதரு வித்தென்று யாவர்க்கும் அறிவித்த

வதனமணியே என்று திருப்போரூர்ச் சந்நிதி முறை கூறுகின்றது. சிவபொருமான் திருமால், பிள்ளையார் சக்தி, சூரியன் எனப்படும் தெய்வங்களைப் போற்றும் சைவம், வைணவம், காணாபத்யம், சாக்தம், சௌரம் ஆகிய சமய நெறிகளெல்லாம் முருகனை வழிபடும் கௌமார நெறியில் அடங்கும்.

*ஒழியாத புவனத்து உயிர்க்குயிரதாய் நிற்ப*
*ஒரு தெய்வம் உண்டென எடுத்து*
*உரையால் உணர்த்துவதை ஒழிய எவர் எவர்கட்கும்*
*ஊன்கண் ஊக்கண்ணதாம்*
*விழியாக முன்னின்று தண்ணெளி சுரந்தவர்கள்*
*வேண்டிய வரம் கொடுப்பாண்*
*மெய்கண்ட தெய்வம் இத்தெய்வ மல்லாற்*
*புவியில் வேறில்லை*

என்று முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழில் குமரகுருபரர் இத்தெய்வத்தின் பெருமையை விளக்குகின்றார். மேலும் முருகன் திருக்கரத்தில் விளங்கும் வேல் ஒப்பற்றது.

*வீரவேல் தாரைவேல் விண்ணோர் சிறைமீட்ட*
*தீரவேல் செவ்வேள் திருக்கைவேல் - வாரி*
*குளித்தவேல் கொற்றவேல் சூர்மார்பும் குன்றும்*
*துளைத்தவேல் உண்டே துணை*

என்று இந்த வேலாயுதத்தின் பெருமையைப் பேசுவர். இந்த வேற்படை சிவபெருமான் பாகமாய் அமர்ந்த உமையம்மை அளித்த ஆயுதமாகும். அன்னை பராசக்தி சூரனை வெல்வதற்காக இந்த வேற்படையை முருகப்பெருமானுக்கு அளித்தாள். அருணகிரிநாதப் பெருமான் இந்த வேலாயுதப் பெருமையை வேல்விருத்தத்தில் போற்றுகின்றார்.

*வெங்காள கண்டர்கைச் சூலமும் திருமாயன்*
*வெற்றிபெறு சுடராழியும்*
*விபுதர்பதி குலிசமும் சூரன்குலம் கல்வி*
*வெல்லா எனக்கருதியே*
*சங்கராம நீசயித் தருள்ளனத் தேவரும்*
*சதுர்முகனும் நின்றிரப்பச்*
*சயிலமொடு சூரனுடல் ஒரு நொடியில் உருவியே*
*தனியாண்மை கொண்ட நெடுவேல்*
*கங்காளி சாமுண்டி வாராகி இந்திராணி*
*கௌமாரி கமலாசனத்*
*கன்னி நாரணி குமரி த்ரிபுரை பயிரவி அமலை*
*கௌரி காமாட்சி சைவ*
*சிங்காரி யாமளை பவானி கார்த்திகை கொற்றி*
*த்ரியம்பகி அளித்த செல்வச்*

*சிறு அறுமுகன் முருகன் நிருதர்கள் குலாந்தகன்*
*செம்பொன் திருக்கை வேலே*

என்று பாடுவதால் இந்த வேலாயுத்தின் பெருமை அறியலாம். ஞானசக்தியே வேலாக்கப்பட்டிருக்கிறது. திருத்தலத்தில் பெருமானும் ஞானபானுவாய் விளங்குகின்றார். அறியாமையை அகற்றும் ஞான மூர்த்தியாக அவர் தோற்றம் தருகிறார்.

**வேல் சிறப்பு**

ஆறுமுகக் கடவுள் ஞானத்தைத் திருவுருவாகப் பெற்றுள்ளார் என்பதால், ஞானத்தைப் பெற்றவர்கள் ஆறுமுகக் கடவுளைப் பெற்றவர்கள் ஆகின்றனர். ஞானம் என்பதற்கு "அறிவு" என்று பொருள். அறிவு பெறுவதற்கு ஆறுமுகக் கடவுளின் அருள் பார்வை வேண்டும் என்பதால் அதனைத் தனக்குத் தந்தருளுமாறு வேண்டுவதை,

*'நீயான ஞான விநோதந்தனை என்றுநீ அருள்வாயே'*

என்னும் கூற்று வெளிப்படுத்துகின்றது. உலக மக்களின் ஐயங்களை எல்லாம் போக்குபவன், சிவனுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளை உணர்த்தியவன், அன்பர்களுக்குத் திங்கள் போன்று தண்ணொளி செய்வதற்கென்றே ஒரு முகத்தை உடையவன் என்பது,

*'ஒருமுகம் எஞ்சிய பொருளை*
*ஏமுற நாடித் திங்கள் போல திசைவிளக் கும்மே'*

என்பதன் மூலம் அறியமுடிகின்றது. அன்பர்களுக்கு அருள் செய்யும் ஆறுமுகக் கடவுள், பகைவர்களுக்குக் கூற்றுவனாகக் காட்சியளிக்கின்றான். போர்க்களத்தில் நேருக்கு நேர் நின்று போரிட்டப் பகைவர்களை வெல்லும் ஆற்றல் ஆறுமுகத்திற்கு உண்டு. போர் செய்யும்போது போர் முறைகளைப் பின்பற்றவேண்டும் என்பது புலப்படுகின்றது. அசுரர்களும் அவர்களின் சுற்றத்தார்களும் அஞ்ஞானத்திற்கும், இழிகுணத்திற்கும் உரிமை பூண்டவர்கள் போன்று செயல்படுகின்றனர். அதனால், அவர்களை ஆறுமுகக் கடவுள் அழித்துள்ளார். இவரிடம் சிவபெருமான் உபதேசம் பெற்றுள்ளமையால், 'புரந்தார்க்குக் குருபூத வேலவன்' என்று அருணகிரிநாதர் போற்றுகின்றார். முருகப் பெருமானுடைய திருக்கையில் இருப்பது வேற்படை, அது ஞானத்தின் திருவுருவம், ஞானசக்தி, நீண்டு அகன்று கூர்மையாக உள்ள அறிவன் அடையாளம். அசுரர்கள் அவிச்சை அல்லது அறியாமையின் உருவம். அறியாமையை இருள் என்றும் கூறுவர், இருளில் பொருள்களின் வடிவமும் வண்ணமும் தெரியாமல் இருப்பது போல, அறியாமை காரணமாக உண்மை புலனாகாமல் இருக்கும். இருளிலே செயல் புரிபவர் அசுரர்கள், நிசாசரர்கள் என்பது அவர்களுக்குப் பெயர். அவர் உடல் கறுப்பு, உள்ளம் கருப்பு, செய்கை கருப்பு, அவர்களுக்குரிய காலம் ஒளியில்லா இரவு முருகனுடைய வேல் அசுரர்களை மாய்த்தது, இது புறத்தே அமைந்த வீரச்செயல்.

அறியாமையை அழித்துத் தூய இன்பத்தை நிலை நாட்டும் ஞானமாதலின் ஒளியுடைய வேலாக நிற்கிறது. அதைத் தியானித்தால் நெஞ்சில் இருள் போகும், கவலை நீங்கும் துன்பம் ஒழியும் என்பது அனுபூதிமான்களின் கூற்று.

**முடிவுரை**

முருகன் வேற்படையை எறிந்தே தான் ஆற்றிய வீரச் செயல்களில் பொரும்பாலானவற்றைப் புரிந்தான். அவன் கிரவுஞ்ச மலையைப் பொடிப் பொடியாக்கினான். அவனுடைய திருக்கை வேலே அந்தக் காரியத்தைச் செய்தது. மாயையின் மகனாகிய சூரனையும் அவனுடன் சேர்ந்திருந்த அசுரர்களையும் வலி குன்றும்படி போரிட்டதும் அந்தத் திருக்கை வேல்தான். அறியாமை அல்லது அஞ்ஞான மயமாக நின்றவர்கள் அசுரர்கள். வேலோ ஞான சக்தி. அஞ்ஞான சக்தியை அழிப்பதற்கு ஞான சக்திக்குத்தான் வலிமை இருக்கிறது. ஆதலின் அஞ்ஞானப் பரப்பாகிய அசுரர்களோடு செய்த போரில் வேல் அவர்களை அடியோடு அழித்து வெற்றியுடன் விளங்கியது, சில தலங்களில் வேல் மட்டும் வைத்து வழிபாடு செய்கிறார்கள் வேல்தான் முருகன் என்று என்னி அதற்குச் சிறப்பு வழிபாடும் நடத்தப்படுகிறது. உதாரணமாக ஆறுபடை வீடுகளில் குடவரைக் கோயிலாக விளங்கும் திருப்பரங்குன்றத்தில் இன்றும் வேலுக்கு அபிஷேகம் செய்யப்படுகிறது. சூரபத்மனை வென்ற வேல் என்பதால் முருகனின் வேலுக்கு இங்குச் சிறப்பான இடம் அளிக்கப்பட்டுள்ளது. மேலும் இது ஒரு குடவரைக்கோயில் என்பதால், இங்கு மூலவருக்கு அபிஷேகம் கிடையாது. எனவே முருகன் கையில் உள்ள வேல் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ஆண்டுதோறும் புரட்டாசி மாதம் கடைசி வெள்ளிக்கிழமையன்று, வேலுக்குச் மிகச்சிறப்பான அபிஷேகம் செய்யப்படுகிறது.

வேலின் நுனியில் இலை இருக்கும், அதற்கு நீண்ட காம்பு இருக்கும், ஆகவே அது நெடுவேல், தாரைவேல் என்ற சிறப்புப் பொயர்கள் உண்டு. அதுபோல மனிதனாய்ப் பிறந்த அனைவரும் வேல் போன்ற தெளிவான, கூர்மையான நீண்ட ஞானம் பெறவேண்டும் என்பதே முருகன் கையில் இருக்கும் வேல் தத்துவம். இதுபோன்ற தெளிவான ஞானம் பெற்றால் அதுவே நமக்குச் சிறந்த பாதுகாப்பு அரண் என்று தமிழ் வேதம் உணர்த்துகிறது. முருகனுடைய திருவருளால் அறிவு பெற்றுத் தெளிவு உண்டானால் கவலையும் துன்பமும் நீங்கும். இருள் நிறைந்த மனத்திலே பற்றிக்கொண்ட துன்பங்களைப் போக்க நம் உள்ளத்தில் அவன் திருக்கை வேலை அவனருளால் தியானம் செய்ய வேண்டும் என்பது இந்தக் கட்டுரையின் முடிவாகும்.

**துணைநூற்பட்டியல்**

1. திரு. குணத்தொகை, திருக்குறள் மூலமும் உரையும். பக.96.
2. டாக்டர் இராச. வசந்தகுமார், பதினொன்றாம் திருமுறை, பக்.934-941.
3. டாக்டர் கு.வெ. பாலசுப்பிரமணியன், சுவாமிமலைத் தலவரலாறு, பக்.14-16.
4. முனைவர் ம.சா. அறிவுடைநம்பி, பக்தி மலர்கள், பக்.59,153.

# முருகன் திருக்கோயில் தல விருட்சங்களின் மருத்துவப் பயன்கள்

மருத்துவர் பெ. பாரதஜோதி
உதவிப்பேராசிரியர்
சித்தமருத்துவத்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

இந்து சமயம் மிகவும் தொன்மையான கலாச்சாரங்களையும் பழக்க வழக்கங்களையும் கொண்டது. இந்துக்கள் இறைவனையும் அவனது படைப்புகளான காற்று, நீர், ஆகாயம், நெருப்பு, மண் போன்ற பஞ்ச பூதங்களையும் மரம், செடி, கொடிகள் போன்றவற்றையும் வழிபட்டு வந்தனர். இயற்கையோடு இணைந்தே ஆதி காலத்தில் மனிதன் வாழ்ந்து வந்தான்.

நம் முன்னோர்கள் மரம், செடி, கொடி போன்றவற்றை மருந்தாகவும், உணவாகவும், ஆடையாகவும் பயன்படுத்தி வந்தனர். அந்த வகையில் தங்களுக்கு ஏற்படும் பிணிகளைத் தங்களைச் சுற்றியுள்ள மருத்துவ மூலிகைகளைக் கொண்டு குணப்படுத்திக் கொண்டனர். இவ்வாறு நம் வாழ்வில் பயன்படும் தாவரங்களை நாம் அழியாமல் பாதுகாக்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு நம் முன்னோர்கள் கோவில்களில் தாவர இனங்களைத் தல விருட்சங்களாக வளர்த்து வழிபட்டு வந்தனர். பழங்காலத்தில் மருத்துவமனைகள், பள்ளிக்கூடங்கள் போன்றவை மரத்தடியிலே செயல்பட்டு வந்தது. அதெற்கென தனியாகக் கட்டிடங்கள் இல்லை. மக்கள் அனைவரும் மரத்தடியில் ஒன்று கூடி முக்கிய முடிவுகளை மேற்கொண்டனர். மரங்களின் மகிமையை அறிந்த முனிவர்களும், சித்தர்களும் அதனடியில் அமர்ந்து தியானம் செய்து ஞானம் பெற்றனர். மனிதன் இன்புற்று வாழ மன நலனும் உடல் நலனும் அவசியம் தேவைப்படுகின்றது. கோவிலுக்குச் சென்று நாம் இறைவனை வணங்கும்போது நம் மனம் அமைதியடைகின்றது. கோவில்களில் காணப்படும் தல மரங்களின் மருத்துவ குணங்களால் நம் உடல் நோய்கள் நீங்குகின்றது.

இவ்வாறு பல சிறப்புகளை உடைய பல மரங்கள் முருகன் திருக் கோயில்களில் தல விருட்சங்களாக உள்ளது. முருகன் திருக்கோயில்களில் உள்ள தல விருட்சங்களின் முக்கியத்துவத்தை உணரச் செய்வதுடன் அவற்றின் அறிவியல் ஆய்வுகள் மற்றும் மருத்துவப் பயன்களைப் பதிவு செய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**பழமுதிர்ச்சோலை**

பழமுதிர்ச்சோலை மதுரை மாவட்டத்தில் அமைந்துள்ள முருகனின் ஆறாவது படைவீடாகும். அறுபடை வீடுகளில் இங்கு மட்டுமே வள்ளி

தெய்வானையுடன் காட்சி தருகின்றார். முருகப் பெருமான் ஔவைப் பிராட்டியின் ஞானத்தைச் சோதித்த திருத்தலமாகும். மாடு மேய்க்கும் சிறுவனாக வந்து ஔவைப் பாட்டியிடம் *"சுட்ட பழம் வேண்டுமா? சுடாத பழம் வேண்டுமா?"* என்ற கேள்வியைத் தொடுத்த இடமாகும்.

**தலவிருட்சம்**

தல விருட்சமாக நாவல் மரம் விளங்குகின்றது. *Syzygium cumini* என்று தாவரவியல் வல்லுநர்களால் அழைக்கப்படுகின்றது. இது Myrtaceae என்ற தாவர குடும்பத்தைச் சேர்ந்த மரமாகும். வண்டல் மண் நிறைந்த ஆற்றுப் படுகைகளில் அதிகமாகக் காணப்படுகின்றது. இதில் வெள்ளை நாவல், கொடிநாவல், கருநாவல், சம்பு நாவல் எனப் பலவகையுள்ளது. நாவல் மரம் துவர்ப்பி (Astringent), சிறுநீர்ப்பெருக்கி (Diuretic), உடல் உரமாக்கி (Tonic), குருதிப்பெருக்கடக்கி (Styptic) போன்ற செய்கைகளை உடையது. பொதுவாக நாவல் மரங்களில் ஆடி, ஆவணி மாதங்களில் மட்டும் பழம் காணப்படும். ஆனால் இத்திருக்கோயிலில் உள்ள நாவல் மரத்தில் முருகனுக்குச் சிறப்புடைய சஷ்டி மாதமான ஐப்பசியில் நாவல் பழம் பழுத்துக் காணப்படும்.

**அறிவியல் ஆய்வுகள்**
**தாவரவேதிமச் சத்துகள் (Phytochemical constituents)**

நாவல் மரத்தில் கீழ்க்கண்ட தாவர வேதிமச் சத்துக்கள் காணப்படுவதாக அறிவியல் வல்லுநர்களின் ஆய்வுகள் நிருபிக்கின்றன.

நாவல்பட்டை : betulinic acid, ß--sitosterol, gallic acid, myricetine friedelin, kaempferol, ellagic acid, gallotannin and ellagitannin and myricetine

நாவல்பழம் : anthocyanins, delphinidin, petunidin

நாவல் இலை : crategolic acid, noctacosahol, ß-sitosterol, betulinic acid, mycaminose, crategolic (maslinic) acid, myricetin, myricitrin

விதை : Jambosine, gallic acid, ellagic acid, corilagin, quercetin, ß-sitoterol (Sagrawat *et al.*, 2006, Kumar *et al.*, 2009, Suriyavathana *et al.*, 2010).

**மருந்தியல் ஆய்வுகள் (Pharmacological studies)**

இரைப்பைப் புற்று (Stomach Cancer) நோயைத் தடுக்கும் ஆற்றல் உடையது என்று ஆய்வுகள் மூலம் உறுதி செய்யப்பட்டுள்ளது (Goyal *et al.*, 2010). மதுமேக (Diabetes mellitus) நோய்க்கு எதிராக செயல்படுகின்றது என்று ஆய்வுகள் மூலம் நிருபிக்கப்பட்டுள்ளது (Haslem, 1989). வலி நீக்கியாகப் (Analgesic activity) பயன்படுகின்றது (Kumar *et al.*, 2009). நுண் உயிர் எதிர்ப்புத் திறன் (Antimicrobial activity) உடையது (Gowri *et al.*, 2010).

**மருத்துவப் பயன்கள்**

*வாத மறுங்கரப்பான் மாறும் விரணமொடு*
*ஓதமுறு நீரிழிவு முந்துரத்த – சீதமுங்காய்*
*மாவன சுரமும் வளர்மேக மும் போகும்*
*நாவலன் வேரதனை நாடு.* (அகத்தியர் குணவாகடம்)

நாவல் மரத்தின் வேரினால் வாத நோய்கள், கரப்பான், புண், நீரிழிவு, குருதிக் கழிச்சல் போன்ற நோய்கள் தீரும்.

பட்டையை அரைத்து அடிபட்ட வீக்கம், கட்டிகளில் வைத்துக் கட்டி வந்தால் அவை குணமாகும். நாவல் பட்டையைக் குடிநீரிட்டு அருந்தி வர நீரிழிவு நீங்கும். நாவல் கொட்டையைத் (விதை) தூளாக்கி காலை, மாலை 2 கிராம் அளவு கொடுத்து வர நீரிழிவு நீங்கும். Jamboline எனும் கிளைகோசைடு, டானின்கள் போன்ற தாவர வேதிம சத்துக்கள் இருப்பதால் இரத்தத்தில் சர்க்கரையின் அளவைக் கட்டுப்படுத்துகின்றது. பட்டையின் சாற்றை அதி உதிரப் போக்கு(Over bleeding) எனும் பெரும்பாடு நோய்க்கு வழங்கலாம். பட்டையின் குருதிப் பெருக்கடக்கி செய்கையால் இரத்தப் போக்கு கட்டுப்படுத்தப்படுகின்றது. நாவற் கொழுந்தை ஏலத்துடன் சேர்த்துரைத்து ஆட்டுப்பாலில் கலந்து கொடுக்க செரியாக் கழிச்சல் நீங்கும்

**நஞ்சு முறிவு**

அதிக அளவில் பழங்களை உண்பதால் ஏற்படும் நஞ்சினை நீக்க நெல்லிக்காயை மென்று தின்று குளிர்ந்த நீர் அருந்த வேண்டும் என்று அகத்தியர் தனது நஞ்சு முறிவு நூலில் குறிப்பிட்டுள்ளார்.

**இலக்கியங்களில் நாவல் மரம்**

பல சங்க இலக்கியங்களில் நாவல் மரம் சிறப்பித்துக் கூறப்படுகின்றது.

*குன்றே யமர்வாய் சொலையார் புலியின்*
*தன்தோ லுடையார் சடையார் பிறையாய்*
*வென்றாய் புரமுன் றைவெண்நா வலுளே*
*நின்றா யருளாய் எனும்நே ரினயுயே* (அகத்தியர் குணவாகடம்)

எனத் திருஞானசம்பந்தர் தேவாரத்தில் குறிப்பிட்டுள்ளார். *"காலின் உதிர்ந்த கருங்கனி நாவல்"* என மலைப்படுகடாம் குறிப்பிடுகின்றது.

**மருதமலை**

மேற்குமலைத் தொடர்ச்சியில் அமைந்துள்ள முருகன் திருத்தலமாகும். கோயமுத்தூர் மாவட்டத்தில் அமைந்துள்ளது. இம்மலையில் மருதமரங்கள் அடர்ந்து காணப்பட்டதால் மருதமலை என அழைக்கப்படுகின்றது. இங்குப் பதினென் சித்தர்களின் ஒருவரான பாம்பாட்டிச் சித்தரின் குகை காணப்படுகின்றது.

**தலவிருட்சம்**

மருதமரம் தல விருட்சமாக அமைந்துள்ளது. *Terminalia arjuna* என்ற தாவரவியல் பெயரால் அழைக்கப்படுகின்றது. மருத மரம் Combretaceae என்ற தாவரக் குடும்பத்தைச் சார்ந்தது. மருத மரத்தின் பட்டை, இலை, விதை, பழம் போன்ற பாகங்கள் மருந்தாகப் பயன்படுகின்றது. உரமாக்கி (Tonic), தமரக வெப்புண்டாக்கி (Cardiac Stimulatnt), துவர்ப்பி (Astringent) போன்ற செய்கைகளை உடையது. துவர்ப்புச் சுவையை உடையது. பழங்காலத்தில் காடுகளில் மருத மரத்தின் இருப்பிடத்தைக் கொண்டு நீர் ஊற்று இருப்பதைக் கண்டறிந்தனர்.

**அறிவியல் ஆய்வுகள்**

**தாவரவேதிமச் சத்துகள் (Phytochemical constituents)**

மருதமரப் பட்டையில் arjunin, catechin, gallocatechin, epicatechin போன்ற டானின்களும், arjunglucosides-I, arjunetoside, terminolitin போன்ற கிளைகோசைன்களும், quercettin, kaempferol, luteolin போன்ற ப்ளேவனாய்டுகளும் தாமிரம், கால்சியம், மக்னீசியம் போன்ற தாதுப்பொருட்களும் உள்ளன (Singh *et al*, 1995).

**மருந்தியல் ஆய்வுகள் (Pharmacological studies)**

வலி நிவாரண மாத்திரைகளால் ஏற்படும் வயிற்றுப் புண்ணை (Antiulcer activity) விரைவில் குணமாக்கும் தன்மை உடையது (Devi *et al*., 2007). மருதமரப் பட்டையின் சத்து இருதய நோய்களில் சிறப்பாகச் செயல்படுகிறது. (Maulik, 2010, Shukla *et al*., 2011). மருதமரப் பட்டையின் சத்து கல்லீரல், சிறுநீரகம், கணையம் ஆகியவற்றின் செயல்களைத் தூண்டி நீரிழிவு நோயில் சர்க்கரையின் அளவைக் குறைக்கிறது. (Biller *et al*., 2008). வீக்கத்தைக் குறைக்கும் (Antiinflammatory action) தன்மை உடையது (Halder *et al*., 2009, Muruganantham *et al*., 2001).

**மருத்துவப் பயன்கள்**

*ஓதமெனு நீரிழிவை யோட்டும் பிரமேகங்*
*காதமென வோடக் கடத்துங்காண் - போத*
*மயக்க மொடுதாக மாறாச் சுரத்தின்*
*தயக்கமறுக் கும் மருதஞ் சாற்று.*

மருதமரம் நீரிழிவு, வெள்ளை, தாகம், பெருநோய், வயிற்று நோய்கள், தமரக நோய்கள் போன்றவற்றைக் குணப்படுத்தும்.

மருதமரத்தின் இலைகளைப் பாலில் அரைத்து மூன்று நாட்கள் இருவேளை பாலில் உண்டு வர பித்த வெடிப்பு நீங்கும். பட்டையைக் குடிநீரிட்டுக் குடித்துவர இருதயத்தின் நோய்களை நீக்கி இதயத்தை வன்மைப்படுத்தும். மருதம் பட்டை தமரக வெப்பமுண்டாக்கி (Cardiac

stimulant) செய்கை உடையதாலும், இதன் பட்டையில் கால்சியம் தாது இருப்பதாலும் இதயத் தசைகளைச் சுருங்கி, விரிய உதவுவதன் மூலம் இச்செயலை உண்டாக்குகிறது. பழங்களை அவித்துப் பிசைந்து புண்களின் மீது வைத்துக் கட்டி வர புண்கள் எளிதில் குணமாகிவிடும். மருத மரத்தின் இலை மற்றும் பட்டையைக் குடிநீரிட்டு அருந்திவர நீரிழிவு நீங்கும்.

**பழநி (மூன்றாம் படைவீடு)**

தனது பெற்றோரான சிவன் பார்வதியிடம் இருந்து ஞானப்பழம் கிடைக்கவில்லை என்ற காரணத்தால் கோபம் கொண்டு தனியே வந்து அமர்ந்த மலை பழநி மலையாகும். முருகப் பெருமானைப் பார்த்து ஔவையார் "பழம்நீ" என்று கூறியதால் பழநி என அழைக்கப்படுகின்றது. பதினென் சித்தர்களுள் ஒருவரான போகர் எனும் சித்தர் நவ பாடாணங்கள் கொண்டு மூலவரான பாலதண்டாயுதபாணி சிலையை வடிவமைத்து பிரதிஷ்டை செய்தார் என்பது புராண வரலாறு.

**தலவிருட்சம்**

நெல்லி மரம் தலவிருட்சமாகக் காணப்படுகின்றது. இதன் தாவரயியல் பெயர் *Phyllanthus emblica* என்பதாகும். Euphorbiaceae என்ற தாவரக் குடும்பத்தைச் குடும்பத்தைச் சார்ந்தது. தென்னிந்தியாவில் அதிக அளவில் வளரும் மரமாகும். இலை, பூ, பட்டை, வேர், காய், விதை போன்ற அனைத்து பாகங்களும் மருந்தாகப் பயன்படுகின்றது. இனிப்பு, புளிப்பு, துவர்ப்பு ஆகிய முச்சுவைகளை உடையது. துவர்ப்பி (Astringent), மலமிளக்கி (Laxative), சிறுநீர் பெருக்கி (Diuretic), குளிர்ச்சியுண்டாக்கி (Refrigernat) போன்ற செய்கைகளை உடையது. சித்த மருத்துவத்தில் "திரிபலா" (கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்) என்றழைக்கப்படும் மூன்று துவர்ப்புகளில் நெல்லியும் ஒன்றாகும்.

**ஆறிவியல் ஆய்வுகள்**

**தாவர வேதிமச் சத்துகள் (Phytochemical constituents)**

Phyllantidine, phyllantine போன்ற ஆல்கலாய்டுகளும் emblicanin A, emblicanin B pedunculagin போன்ற டானின்களும் gallic acid, ellagic acid, chebulinic acid, quercetin, chebulogic acid போன்ற அமில வகைகளும் காணப்படுகின்றன. அதிக அளவில் வைட்டமின் 'சி' உள்ளது. கால்சியம், பாஸ்பரஸ், இரும்பு போன்ற தாதுக்கள் உள்ளன (Rahman, 2007).

**மருந்தியல் ஆய்வுகள் (Pharmacological studies)**

நீரிழிவு (Anti diabetic activity) நோய் வராமலும், வந்தபின் சர்க்கரையின் அளவைச் சமநிலையில் வைத்திருக்கவும் பயன்படுகின்றது (Sabu *et al.*, 2002). கண் நோய்களைக் குணப்படுத்தி, கண்பார்வையை அதிகரிக்கச் செய்கின்றது (Biswas *et al.*, 2001). நம் உடலில் உள்ள நஞ்சுகளை வெளியேற்றும் தன்மை உடையது (Zany *et al.*, 2000).

உடல்நலத்திற்குத் தீங்கு தரும் பூஞ்சை மற்றும் பாக்டீரியாவை அழித்து (Antimicrobial activity) நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரிக்கச் செய்கின்றது (Dutta, 1998). தோல்புற்று (Skin Cancer), கல்லீரல் புற்று (Liver Cancer) போன்ற புற்று நோய்களை அழிக்கவல்லது என்று நிருபிக்கப்பட்டுள்ளது (Garima *et al.*, 2005, Sarwat *et al.*, 2008). நுரையீரல் புற்று, மார்பகப்புற்று, கருப்பைப்புற்று நோய்களில் கட்டியின் வளர்ச்சியைக் கட்டுப்படுத்தி அழிக்கும் தன்மை உடையதாகக் கண்டறியப்பட்டுள்ளது (Ngamkitidechakul *et al.*, 2010).

**மருத்துவப் பயன்கள்**

நெல்லிக்காயில் அதிக அளவு வைட்டமின் ‘சி’ இருப்பதால் இதனை உண்டுவர வைட்டமின் சி குறைபாடுகளால் ஏற்படும் ஸ்கர்வி (பல் ஈறுகளில் இரத்தம் வருதல்), பித்தப்பை கற்கள் போன்ற நோய்களைக் குணமாக்கும். இரத்தத்தைச் சுத்திகரிக்கும் தன்மை உடையதால் தோல் நோய்களை விரைவில் நீக்கும். நெல்லி மரத்தின் இலைக்கொழுந்துகளை அரைத்து மோரில் அருந்த சீதபேதி (Dysentery) கழிச்சல் (Diarrhoea) நீங்கும். இதற்கு இவற்றில் உள்ள துவர்ப்பு செய்கையே காரணமாகும். நாவிற்கு சுவையூட்டக் கூடிய நெல்லிக்காய் வாந்தியைப் போக்கி பசியைத் தூண்டும். மேலும் குன்மம் (Peptic Ulcer), தோல் நோய்கள், பாண்டு (Anaemia) மற்றும் பீனிசம் (Sinusitis) போன்ற நோய்களைக் குணப்படுத்தும் தன்மை உடையது. நெல்லியின் சாறு சிறுநீரைப் பெருக்கி, சிறுநீர் எரிச்சல், சிறுநீரகக் கற்கள் போன்ற நோய்களை நீக்கும்.

**முடிவுரை**

நம் முன்னோர்கள் அரிய மருத்துவப் பயன்களைக் கொண்ட மரங்களை அதன் மகத்துவம் அறிந்து, அதனைப் பாதுகாத்து கோவில்களில் தல விருட்சங்களாக வளர்த்து மருந்தாகப் பயன்படுத்தி வந்தனர். மேலும் தல மரங்களின் பயன்களைத் தற்கால அறிவியல் ஆய்வு முடிவுகளுடன் ஒப்பு நோக்கும் போது நமது முன்னோர்கள் செயல் வியப்பைத் தருகின்றது. எந்த அறிவியல் உபகரணங்களும் இல்லாத முற்காலத்தில் அவற்றின் பயன்களை அறிந்திருந்த நம் முன்னோர்கள் தீர்க்கதரிசிகளே யாவர்.

முருகன் என்ற திருநாமத்தை நாம் உச்சரிக்கும்போதே நம் உடம்பில் உள்ள நோய்கள் எல்லாம் அகன்றுவிடும். அவ்வளவு சக்தி வாய்ந்த முருகனின் திருக்கோயில்களில் உள்ள தல மரங்களை நாமும் வழிபட்டு நமது சந்ததியினருக்குப் பயன்படும் வண்ணம் பாதுகாத்திடுவோம்.

# தொன்மத் திறனாய்வுப் பின்புலத்தில் அருணகிரிநாதர் இறைநெறி

பி. பிரதீப் குமார்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை, அரசுக் கல்லூரி,
சித்தூர், கேரளம்.

கடவுள் நம்பிக்கைகள், அந்நம்பிக்கைகளுக்கேற்றவாறு வழிபாடுகள் என்பது மனிதனின் பண்பட்ட நாகரிகச் சிறப்பினைக் காட்டுகிறது. இவ்வழிபாடுகள் ஏதோ ஒரு காலத்தில் திடீரெனத் தோற்றம் பெற்று, மக்களால் நிகழ்த்தப்பட்டதல்ல. தொன்மைக் காலத்து கடவுள் நம்பிக்கைகள், வழிபாடுகள் என்பது குழு வாழ்க்கை வாழத் தலைப்பட்ட மனித காலத்திலேயே நிகழ்த்தப்பட்டது. நிலம், பொழுது என்பதை ஒட்டியே வகுக்கப்பட்ட திணை அமைப்புமுறை சார்ந்த வாழ்வியலைக் கொண்டிருந்த சங்க காலத்தில் வழிபாட்டு முறை என்பது ஒரு சமூகவியல் கூறாகவே கருதப்பட்டிருக்கிறது. இவ்வழிபாட்டு முறையில் முருக வழிபாடு என்பது தமிழகத் தொன்மை வழிபாட்டு முறைகளில் ஒன்றாக அடையாளப்படுத்தலாம். ஏனெனில் தமிழ்க் கடவுளாக முருகனையே சங்க இலக்கியங்கள் பதிவு செய்திருக்கின்றன. பிற்பாடு ஊடாட்டம் பெற்ற ஆரிய மரபு முருகப் பெருமானை 'ஸ்கந்தன்' என்ற ஆரியவாக்கம் செய்து வழிபட்டதை வேறுதளத்தில் ஆராய வேண்டியதாகிறது. 'சேயோன் மேய மைவரை உலகமும்' (தொல்.பொருள்.அகம்.5) என்று தொல்காப்பியம் பதிவு செய்வதிலிருந்து பண்டைத் தமிழ்ச் சமூகம் முருகனைத் (சேயோன்) தங்களது கடவுளாகக் கண்டிருந்ததை உறுதிசெய்ய முடிகிறது. மேலும் குறிஞ்சி நிலத்திலிருந்து தான் தமிழர் வாழ்வியல் துவக்கம் பெறுகிறது என்பதும் அந்நிலத்திற்குக் கடவுளாக முருகன் வைக்கப்பட்டிருப்பதும், தமிழர் கடவுள் முருகன் என்பதை நிறுவுகிறது. அவ்வாறு அன்றிலிருந்து இன்றுவரை முருக வழிபாடு தொடர்ந்து கொண்டே இருக்கிறது. அவ்வகையில் முருக அடியார்கள் தங்களின் இறைத்தொண்டைச் சமூகக் கடமையோடும், ஈடுபாட்டுடனும் நிகழ்த்தியிருக்கின்றனர் என்பதை அவர்கள் இயற்றிய இலக்கிய ஆக்கங்களிலிருந்து நாம் புரிந்து கொள்ளலாம். அப்பின்புலத்தில் முருக அடியார்களில் ஒருவரான அருணகிரிநாதரின் இறைத் தொண்டையும் நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். புலனின்ப வாழ்வே பெரிதென நினைத்து வாழ்ந்து, பிறகு நோய்கண்டு, பிறரால் புறக்கணிக்கப்பட்டவர் அருணகிரியார். முருகப் பெருமானின் அருளால் அவர் மீண்டெழுந்து, அவரைப் பூசித்து முக்தி அடைந்தவர். அவரது திருப்பாடல்கள் பக்தியோடு வாழ்வியல் நிதர்சனங்களையும் பேசுகின்றன.

முருக வழிபாடும் அது சார்ந்த இறை நம்பிக்கைகளும் தமிழகத்து சைவ நெறியைப் போற்றி வளர்ப்பதில் தம்முடைய பங்களிப்பைச் செய்துள்ளன.

முருக இலக்கியங்கள் நுவலுகின்ற பொருளோடு அது பயன்படுத்தியிருக்கின்ற தொன்மங்களையும் இறைவழிபாட்டின் அடுத்தகட்ட நகர்த்தலுக்கு உதவும் காரணியாகளாகவே நாம் காண வேண்டும். அவ்வகையில் இக்கட்டுரை அருணகிரியாரின் இறைநெறியை தொன்மைத் திறனாய்வு வழி கண்டறிய முற்படுகிறது.

தொன்மம் என்ற சொல் தமிழிலக்கியச் சூழலில் 'புராணம்' என்ற சொல்லுக்கு இணையாகப் பயன்படுத்தப்படுகிறது. 'புராணம்' என்ற சொல் வடமொழிச் சொல்லாக இருப்பதாலும், வெவ்வேறு சூழலில் வெவ்வேறு பொருள்களைத் தருவதாலும், தெளிவுகருதி 'ஆலவா' என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாகத் 'தொன்மம்' என்ற சொல் வழங்கப்படுகிறது. இச்சொல்லிற்கு Standard Dictionary of Folklore> Mythology and Legend என்ற அகராதி, 'தொன்மம் என்பது தொன்மைக் காலத்தில் உண்மையாக நிகழ்ந்தது போன்று சொல்லக்கூடிய ஒருகதை. பிரபஞ்சத்தையும், ஓர் இனமக்களின் தெய்வங்களையும் வீர நாயகர்களையும் பண்பாட்டுக் கூறுகளையும் சமய நம்பிக்கைகளையும் விளக்கக்கூடியது. இது அறிவியலுக்கு முற்பட்ட காலத்தின் அறிவியலாகக் கருதப்படுகிறது. மேலும் இது சடங்குகளும் காரணங்களும் எவ்வாறு தோன்றி இன்றுவரை நிலைபெற்றிருக்கின்றன என்பதையும் விளக்குகிறது' என்று கூறுகிறது.

பழம்பெரும் நாகரிகங்களைக் கொண்ட இந்தியா, எகிப்து, கிரேக்கம் முதலிய நாடுகள் எல்லாம் பல்வேறு வகைப்பட்ட தொன்மங்களின் உற்பத்திக் களங்களாகவும் அவற்றைத் தொடர்ந்து போற்றிக் கொண்டாடுபவையாகவும் விளங்குகின்றன. ஏனெனில் தொன்மங்கள் யாவும் மனித இயல்பையும், இருப்பையும் தக்க வைத்துக் கொள்வதற்கான வெளியாக இருப்பதே. அதுமட்டுமல்ல ஆரம்ப காலத்து மனிதம், தான் எதிர்கொண்ட இயற்கையைத் தன் காலத்திய அறிவினால் புரிந்து கொள்ள முயன்ற முயற்சியின் வெளிப்பாடே இத்தொன்மங்களாகும்.

அறிவியல் யுகமாகக் கருதப்படும் 18, 19ஆம் நூற்றாண்டுகளில் தர்க்கம், பகுத்தறிவு என்ற பேரில் தொன்மங்களுக்கு எதிரான கருத்தாக்கங்கள் உருவாக்கப்பட்டன. இவற்றைப் 'பொய்க்கதைகள்' எனக் கருதியது இந்தக் காலகட்டம். தமிழ்ச் சூழலிலும், நவீனத்துவ சிந்தனைகள்பரவலாகிய காலத்தில் இத்தொன்மங்களுக்கு எதிரான ஓர் இயக்கமே பெரியாரால் முன்வைக்கப்பட்டது. ஆனால் இதற்கு இணையாகத் தொன்மங்கள் மதங்களின் பரப்பலுக்கு இன்றியமையாத ஒன்றாகக் கருதப்பட்ட மற்றொரு போக்கும் இதன் ஊடே தமிழகத்தில் நடந்து கொண்டிருந்தது. சைவ, வைணவ மடங்கள் இத்தகைய போக்கினை ஊக்குவித்தன. அருணகிரிநாதர், குமரகுருபரர், பாம்பன் சுவாமிகள், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என கௌமார பக்தி இயக்கத்தில் ஆட்பட்டோர் பலராவர். அவர்களுள் அருணகிரிநாதரின் வாழ்வியல் மனித வாழ்க்கையின் சகல நிலைகளையும் பாடுகிறது. பெண்ணாசையால் தன் வாழ்வை இழந்த அவர், முருகனின் அருளால் பெருமை அடைகிறார். தனக்கான

இறைநெறியை அவர் இனிய தமிழால் அறிவித்துக் கொண்டார். அதனாலேயே 'வாக்கிற்கு அருணகிரி' என்றாகிறார். அவரது இறைநெறி எத்தகையது என்பதை அவர் பயன்படுத்திய தொன்மங்களின் வாயிலாக இக்கட்டுரை பதிவு செய்கிறது.

*வேதம் வேண் டாசகல வித்தைவேண் டாகீதே*
*நாதம்வேண் டாம்ஞான நூல்வேண்டா - ஆதி*
*குருப்புகழை மேவுகின்ற கொற்றவந்தாள் போற்றும்*
*திருப்புகழைக் கேளீர் தினம்.* (சிறப்புப் பாயிரம், திருப்புகழ்)

என்ற பாடலிலேயே அருணகிரியாரின் இறை ஈடுபாட்டை நாம் புரிந்து கொள்ளலாம். இவரது பாடல்களில், சிவபெருமான், திருமால், அரக்கர்களுக்கும் தேவர்களுக்குமான பகை என பல்வேறு தொன்மக் கதைகள் பரவலாகக் கையாளப்பட்டுள்ளமையைக் காண முடிகிறது. அவ்வகையில் முருகப் பெருமானின் தோற்றத்தை விவரிக்கையில், இறை அருளின் ஊடாக இறை சார்ந்த சில தொன்மங்களைச் சொல்லும் பாங்கு வியக்கத்தக்கது.

*ஏறுமயி லேறிவிளை யாடும்முகம் ஒன்றே*
*ஈசருடன் ஞானமொழி பேசுமுகம் ஒன்றே*
*கூறுமடி யார்கள்வினை தீர்க்குமுகம் ஒன்றே*
*குன்றுருவ வேல்வாங்கி நின்றமுகம் ஒன்றே*
*மாறுபடு சூரரைவதைத்தமுகம் ஒன்றே*
*வள்ளியை மணம்புணர வந்தமுகம் ஒன்றே*
*ஆறுமுக மானபொருள் நீயருளல் வேண்டும்*
*ஆதியரு ணாசலம் அமர்ந்த பெருமாளே.* (திருப்புகழ் 1328)

இந்தப் பாடலில் வரும், 'ஈசருடன் ஞானமொழி பேசும் முகம்' என்ற குறிப்பு, சிவபெருமானுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளை ஓதிக் கொடுத்த முருகப் பெருமானின் ஞானத்தை, அவரது அறிவைப் பேசுகிறது. 'மாறுபடு சூரரைவதைத்தமுகம்' என்பது சூரர் ஐவரோடு நின்று போர் புரிந்த ஆண்மையைப் பறை சாற்றுகிறது. தேவர்களுக்கும் சூரர்களுக்கும் இடையே நிகழ்ந்த போர், முருகப் பெருமான் போரிட்ட முறை என ஒட்டுமொத்த நிகழ்வையும் இந்த ஒரு வரியிலேயே அருணகிரியார் விவரிக்கிறார். தொன்மக் கூறுகளை உள்ளடக்கியதோடு மட்டுமின்றி கனிவு, ஞானம், அருள், தன்மை, வீரம், அன்பு என முருகப் பெருமானின் ஆறு முகத்திற்கும் தக்கவாறு ஒவ்வொரு இயல்பையும் இணைத்தே அருணகிரியார் இப்பாடலை உருவாக்கியுள்ளார். குமரக் கோட்டத்தில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானை அருணகிரியார் பாடுங்கால்,

*குறவர்கூட் டத்தில் வந்து கிழவனாய்ப் புக்கு நின்று*
*குருவியோட் டித்திரிந்த தவமானைக் குணம தாக்கிச் சிறந்த*
*வடிவுகாட் டிப்புணர்ந்த குமர கோட்டத் தமர்ந்த பெருமாளே.*

என்கிறார். முருகப் பெருமான் குறவர் கூட்டத்தில் கிழவன் வேடம் பூண்டு வந்து தினைப்புனத்தில் குருவியோட்டிக் காவல் புரிந்து நின்ற இளமான்

போன்றவளாகிய வள்ளியை விரும்பி, பிறகு தமது உண்மை உருவைக் காட்டி திருவிளையாடல் புரிந்த நிகழ்வை இங்குப் போற்றுகிறார். இந்தத் தொன்மத்தின் வாயிலாக அடியவர்களைக் காண வேண்டி முருகன் எவ்வித உருவிலும் வருவான் என்றும், அந்நிகழ்ச்சியை ஞாபகப்படுத்துவதின் வாயிலாக சாதிய அடையாளமற்ற சமத்துவ மனோபாவம் நமக்குள்ளும் உருவாக வேண்டும் என்பதை உறுதி செய்கிறார்.

இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ள தொன்மத்திலுள்ள தொல்படிவங்கள் ஒரு கருத்தை மற்றொரு கருத்தோடு இணைக்கும் குறியீடுகளைக் கொண்டிருக்கும். இக்குறியீடுகள் இலக்கிய உலகை ஒருமுனைப்படுத்த உதவும். எனவே தான், "உலகப் புகழ்பெற்ற படைப்புகள் எல்லாம், புதிதாகக் கதையை உருவாக்கிப் படைக்கப்பட்டவைகளைவிட பழைய தொன்மங்களின் மேல் மறுபடைப்புச் செய்யப்பட்டவைகளாகவே இருக்கின்றன" என்கிறார் ரெனிவெலாக். (க.பஞ்சாங்கம், இலக்கியமும் திறனாய்வுக் கோட்பாடுகளும், பக்.158). அருணகிரிநாதரும் அவ்வாறே தனக்கு முன்னர் படைக்கப்பட்ட பக்தி இலக்கிய கருத்தாடல்களைத் தனக்குள் மெருகேற்றியுள்ளார். அதன் வெளிப்பாடே திருஞானசம்பந்தரைப் பற்றிய செய்திகளைத் தன் பாடல்களில் ஆங்காங்கே சொல்லியிருப்பது (சான்று: திருப்புகழ், பழனி, பாடல் எண்.4).அருணகிரியார் பயன்படுத்தும் இறைத் திருவிளையாடல்கள், முருகனின் பெருமையைப் பறைசாற்றுவதோடு அடியவர்களுக்கு இறை நிகழ்த்தும் அறிவுரையும் பகிரப்படுகிறது.

*காளகண்டம காதேவ னார்தரு முருகோனே*
*ஆரணன்றனை வாதாடி யோருரை*
*ஓதுகின்றென வாராதெ னாவவ*
*னாணவங்கெட வேகாவ லாமதி லிடும்வேலா*

(திருப்புகழ், பழனி, பா.3)

என்ற பாடல், படைப்புத் தொழில் காரணமாகத் தருக்குற்று நின்ற பிரம்மதேவனோடு வாது புரிந்து, ஓம் என்னும் பிரணவ மந்திரத்தின் தத்துவப்பொருளை விளக்கச் சொல்கிறார் முருகப் பெருமான். பிரம்மன் அதில் தவறிவிட, அவரது நான்கு தலைகளும் தொங்குமாறு குட்டிச் சிறையில் பிரம்மனைச் சிறை வைத்து, முத்தொழிலையும் முருகவேளே புரிந்து மூவர்க்கும், முத்தொழில்களுக்கும் தாமே தனிப்பெருந் தலைவர் என்பதை உலகம் உணர்ந்து கொள்ள உணர்த்தினார். இந்தத் தொன்மக் கதை வழி ஆணவம் கொண்டவர்கள் உலகில் நிலைபேற்றை அடைய மாட்டார்கள் என்பதை அருணகிரியார் உணர்த்த முற்படுகிறார்.

முருகப் பெருமான் தமிழ் மொழிக் கடவுள். அக்கடவுளுக்கு வழங்கியுள்ள பெயர்களின் மூலத்தை ஆராய்ந்தாலே அக்கடவுளுக்கும் மொழிக்கும் உள்ள தொடர்பினைப் புரிந்து கொள்ளலாம். முருகு என்ற சொல்லே பலபொருட்களைக் குறிக்கும் சொல்லாகும். அவற்றுள் சிறப்பானவை மணம், இளமை, கடவுட்தன்மை, அழகு என்பன. இந்நான்கும் முருகப்

பெருமானுக்கும் பொருந்துவிதமாகவே உள்ளது. பெயரோடு மட்டுமல்ல, தமிழ் இலக்கியங்களுக்கும் முருகப் பெருமானுக்கும் தொடர்பு இருக்கிறது. முதற் சங்கத்தில் ஒரு புலவராக அவர் வீற்றிருந்திருக்கிறார் என்று இறையனார் களவியலுரை பகர்கிறது. அப்பின்புலத்தில் முருகனுக்கும் தமிழுக்கும் இருந்த தொடர்பைச்,

*சநகர்க் குமகஸ்த் யபுலஸ்த் யசநற்*
*குமரர்க் குமநுக் க்ரகமெய்ப் பலகைச்*
*சதுபுத் துநவப் புலவர்க் கும்விபத் தியில்ஞான*
*படலத் துறலக் கணலக் யதமிழ்த்*
*த்ரயமத் திலகப் பொருள் வ்ருத்தியினைப்*
*பழுதற் றுணர்வித் தருள்வித் தகசற் குருநாதா* (மேலது, பா்.15)

என்கிறார் அருணகிரிநாதர். முருகப் பெருமான் மதுரையில் செட்டி மகனாகப் பிறந்து வந்து சங்கப் பலகையின் மீது அமர்ந்து சங்கப் புலவர்களது கலகத்தைத் தீர்த்த கதை இங்குப் பாடப்படுகிறது. இது தமிழ் மீது முருகனுக்கு இருந்த பற்றைக் காட்டுவதோடு மட்டுமின்றி, கல்வியினால் கற்றவர்கள் செருக்குறலாகாது என்ற கருத்தையும் அறிவுறுத்துவதாக உள்ளது. இவ்வாறு தன்னுடைய மொழியாளுமையால், அருணகிரிநாதர் தன்னை ஆட்கொண்ட முருகப் பெருமானுக்குப் பக்தி மாலை சூட்டுகிறார்.

## முடிவுரை

கீழை நாட்டில் இந்துக்களும் பௌத்தர்களும் வரலாற்றையே புராணங்களாகவும், ஜாதகக் கதைகளாகவும் உருமாற்றினர். அவற்றின் ஊடே தங்களது சமயத்தின் தத்துவங்களையும் குடியமர்த்தினர். அருணகிரியாரும் அதையே தான் செய்திருக்கிறார். தான் சார்ந்த கௌமாரத் தொன்மக் கதைகளையும் தத்துவங்களையும் அதன் அழகியலோடு தன்னுடைய திருப்பாடல்களில் பயன்படுத்தியுள்ளார். தொன்மங்களின் வரும் கடவுளர்கள், இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் முதலியவற்றை இலக்கிய 'உத்திகள்' என்றே கொள்ள வேண்டும். அவ்வகையில் அருணகிரியார் தன்னுடைய பாக்களில் தொன்மத்தை இலக்கிய உத்தியாகவே கையாண்டிருக்கிறார் என்பது மேற்சுட்டிய பாடல்களிலிருந்து தெளிவாகிறது. முருகப் பெருமானைப் போற்றுவதனால் மானுட வாழ்விற்குக் கிடைக்கும் பயன் என்ன என்பதையும், நாள்தோறும் அவரை வழிபடுவதால் துன்பங்கள் நீங்கி, இன்பம் பெருகும் என்பதும் அவரது திருப்புகழ்ப் பாடல்கள் விவரிக்கின்றன. அதுமட்டுமன்றி இறை பக்தியோடு அடியார்களுக்கு அறிவுரையையும் ஒருங்கே வழங்கியிருக்கிறார். தன் பாடல்களில் தொன்மங்களை நிரல்படுத்துவதின் வழி இறை வழிபாடு பெருகும் என்பதும் முருகப் பெருமானின் தத்துவம் பரவலாக்கப்படும் என்பதும் அருணகிரியாரின் இறை நெறி என்பது இங்குத் தெளிவாகிறது. உண்மையில் தொன்ம நிகழ்வுகள் ஒரு கலைக் களஞ்சியத்திற்கு உரிய குணத்தோடு விளங்குகின்றன என்பது இதன் வழி தெளிவாகிறது.

## கு.வெ.பாலசுப்பிரமணியன் படைத்த திருமுருகன் பஞ்சகம்

முனைவர் ஜெ.பிருந்தாஸ்ரீ
தமிழ் உதவிப் பேராசிரியர்
மன்னர் சரபோசி அரசுக் கல்லூரி
தஞ்சாவூர் - 5

தமிழ் இலக்கிய மரபில் கடவுளைப் பாடுதல் தொன்று தொட்டு வருவதாகும். பின்னாளில் பக்தியிலக்கிய வகையாகவும் இம்மரபு உருப்பெற்றது. சங்க இலக்கியம், காப்பியம், சிற்றிலக்கியம், பக்தி இலக்கியம், புராணம் இதிகாசம் என்று காலந்தோறும் கடவுளைப் பற்றி எழுந்த இலக்கியங்கள் அவ்வக்காலச் சூழலுக்கு ஏற்பப் படைக்கப்பெற்றன. எனினும் நாயன்மார்களின் பன்னிரு திருமுறையும் ஆழ்வார்களின் நாலாயிரப் பாசுரங்களும் பக்தியின் பல நிலைகளையும் உள்ளடக்கிய சிறப்புயர் இலக்கியங்களாகும். இருப்பினும் தொடர்ந்து இறையடியார் அருளாளர் பலர் பக்தி இலக்கியப் பாக்களைப் படைத்து அளித்தவண்ணம் உள்ளனர். அவ்வகையில் தமிழ்க் கல்வியுலகில் கு.வெ.பா என்று அன்போடு குறிக்கப்பெறும் கும்பகோணம் வெங்கடாசலம் பாலசுப்பிரமணியன் அவர்கள் படைத்தளித்த திருமுருகன் பஞ்சகம் குறித்து இக்கட்டுரை ஆய்கின்றது

கு.வெ.பா.

அண்ணல் காந்தியடிகளின் நெறியைப் பேணும் இவர் பலராலும் பாராட்டப்பெறும் பேராசிரியர் ஆவார். ஐம்பதாண்டுகளுக்கும் மேலாகக் கல்லூரிகளிலும் பல்கலைக்கழகங்களிலும் கற்பித்தல் மற்றும் ஆராய்ச்சிப் பணி ஆற்றியவர். மிகச்சிறந்த இலக்கியச் சொற்பொழிவாளரான இவர் ஐந்து கவிதை நூல்களையும் ஏழு சிறுகதை நூல்களையும் ஐந்து நாடக நூல்களையும் மூன்று வாழ்க்கை வரலாற்று நூல்களையும் படைத்துள்ளார். மேலும் சங்க இலக்கிய சமய இலக்கிய நூல்களுக்கு உரைகளும் வரைந்தவர்.

கு.வெ.பா படைத்த கயற்கண்ணி நூலிற்குத் தமிழக அரசின் சிறந்த நாடக நூல் விருதும் வண்டார் குழலி நூலிற்கு அரசின் சிறந்த கவிதை நூல் விருதும் சங்க இலக்கியத்தில் கலையும் கலைக்கோட்பாடும் என்னும் நூலிற்குச் சிறந்த திறனாய்வு நூல் விருதும் துண்டு என்னும் சிறுகதை நூலுக்கு லில்லிதேவசிகாமணி அறக்கட்டளை விருதும் இலக்கியச் சிந்தனைகள் என்னும் நூலுக்கு கலை இலக்கியப் பெருமன்றத்தாரின் ஆய்வு நூல் விருதும் கிடைத்துள்ளமை ஆசிரியருடைய படைப்பாளுமையைக் காட்டுவன. மேலும் எஸ்.ஆர்.எம், நிகர்நிலைப் பல்கலைக்கழக பரிதிமாற் கலைஞர் விருது பெற்றவராகக் கு.வெ.பா விளங்குகின்றார்.

## திருமுருகன் பஞ்சகம்

இறைவனைப் பாடும் பல்வேறு முறைகளில் ஒன்று குறிப்பிட்ட தலத்தில் வீற்றிருக்கும் இறைவனைப் பாடுதலாகும். இவ்வகையில் நாயன்மார்களும் ஆழ்வார்களும் பல்வேறு தல இறைவனைக் கண்டு பக்திமிக்க பாடல்களை அருளியுள்ளனர். இவ்வகையான பாடல்கள் இறைவன் வீற்றிருக்கும் தலத்தின் வளம், இறைவன் தோற்றம், பெருமை, அருட்செயல்கள் ஆகியவற்றைப் பாடுதல் என்ற முறையில் சிறப்புடன் அமையும். இத்தகைய மரபில் கு.வெ.பா. அவர்கள் தஞ்சாவூர் பூக்காரத் தெருவில் குடிகொண்டு அருள்பாலிக்கும் முருகப்பெருமான் மீது பாடியருளிய நூலே திருமுருகன் பஞ்சகம் ஆகும்.

ஒரு பொருண்மையில் ஒரே யாப்பில் ஐந்து பாடல்கள் கொண்ட இலக்கிய வகை பஞ்சகம் ஆகும். முருகப்பெருமான் மீது பதினான்குசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தால் பாடப்பெற்ற ஐந்து பாடல்களுடையதால் இந்நூல் திருமுருகன் பஞ்சகம் எனப்பெயர் பெற்றது. மூன்று பாடல்கள் மலரடியென் தலைவைத்தருளே என்ற மகுடம் பெற்றும் இரு பாடல்கள் சேவடியென் தலைவைத்தருளே என்று மகுடம் பெற்றும் அமைந்துள்ளது.

## முருகன் திருப்பெயர்கள்

இறைவன் திருப்பெயர்களைப் பக்தியுடன் சொல்வதே இறைவழிபாட்டு முறைகளில் ஒன்றாகும். இறைவன் திருநாமங்கள் மந்திரத்தின் மகிமையை உடையவை. அவ்வகையில் திருமங்கையாழ்வார் நாடிக் கண்டுகொண்டேன் நாராயணா என்னும் நாமம் என்று கூறுவதுடன் அந்த நாமம் குலம் முதலான பலவற்றையும் தரும் என்கிறார். அவ்வகையில் தான் வணங்கும் கடவுளை வழிபட பாதயாத்திரையாகச் செல்வோர் வழியிடைத் துன்பம் மறக்க இறைவன் திருப்பெயர்களைத் துதித்துப் பாடுவர். கு.வெ.பா. அவர்கள் திருமுருகன் பஞ்சகத்தில் வேலை உறுபடையாய்த் தாங்கு முருகா, உவப்புடனே நின்ற கந்தா, அன்பார் குமரா, திருவார் கடம்பா, வள்ளிமகிழ் மணவாளா, அருள் பாலா, கந்தப்பன், ஞான வடிவேலா, மயில்வாகனா என்று இறைவன் திருநாமங்களைப் பாடல்தொறும் சுட்டிச்செல்கின்றார்.

## முருகன் தோற்றம்

முருகப்பெருமானின் திருத்தோற்றத்தைச் சங்கப்பாக்கள் தொடங்கி இன்றுவரை குறிப்பிட்ட மரபிற்கு உட்பட்டு இலக்கியங்கள் வெளிப்படுத்தியுள்ளன. இலக்கிய மரபைப் பெரிதும் போற்றும் கு.வெ.பா. அவர்கள் வேலை ஏந்தியவன், அணிசேவல் மயிலேறியவன், வள்ளியொடு தெய்வானை மணந்தவன், காக்கும் கரம் - கருணை பூக்கும் விழி - ஆறுமுகம் - குழந்தை முகம் உடையவன் என்று முருகன் வீற்றிருக்கும் தலங்களில் எல்லாம் பல தோற்றம் கொண்டவனாகத் திகழ்வதைக் குறிப்பிடுகின்றார்.

**அருள் வழங்கும் திருத்தலம்**

முருகன் தமிழர் கடவுள் எனினும் தமிழ்நாடு மட்டுமின்றி ஏனைய பாரதப் பகுதிகள், இலங்கை, தாய்லாந்து, மலேசியா, அமெரிக்கப் பகுதிகள் என உலகெங்கும் கோயில்கொண்டு அருள்பாலிப்பவன். உலகெங்கிலும் முருக வழிபாடு நிகழ்ந்தாலும் முருகனின் ஆறுபடைவீடே முதன்மைத் திருத்தலங்களாக இலக்கியங்கள் சுட்டுகின்றன. அவ்வகையில் கு.வெ.பா. அவர்கள் முருகனின் அறுபடை வீட்டை,

*அலைதழுவும் செந்தூரும் ஆர்ப்புடைய பரங்குன்றும்*
*அருட்பழனி மலையும் ஈங்கோர்*
*ஆரமணி ஏரகமும் நீருவிக் குன்றுகளும்*
*அணிசோலைப் பதியும் வாழ்வாய்*

என்று அழகுற எடுத்து இயம்புகின்றார். மேலும்

*வயலூரில் திருத்தணியில் வள்ளிமலை கதிர்காமம்*
*மருதமலை சிக்க லெங்கும்*
*வரமருள வந்துநின்ற மாதேவன் பூமதலாய்!*
*வாடுபயிர் கண்டு வாடும்*
*தயவுநிறை வள்ளலார்க்கு மயல்நீங்கக் கந்தக்கோட்டம்*
*தரிசினம் தந்த நிறைவே!*
*தஞ்சைநகர்ப் பூக்காரத் தெருவினுறை வடிவேலா*
*மலரடியென் தலைவைத் தருளே*

என்றும் பல திருத்தலங்களைச் சுட்டிப் பூக்காரத் தெருவிலுறை முருகனை வணங்குகின்றார். அத்திருத்தலங்களில் இறைவன் எவ்வகையான அருளை வழங்குபவனாகத் திகழ்கின்றான் என்பதும் முருகனருளால் சித்தி பெற்ற வள்ளலார், அருணகிரியார் ஆகியோரைக் குறிப்பிட்டும் முருகனருள் தன்மையைக் கவிஞர் புலப்படுத்துகின்றார். இத்தலங்களுடன் பூக்காரத் தெருவில் வீற்றிருக்கும் சிறப்பை

*மலர்மாலை தொடுக்கும் தஞ்சை*
*வளமார்ந்த பூக்காரத் தெருவினுறை வடிவேலா*
*சிவபாலன் பூக்காரத் தெருவினுனை வணங்கிடவே*
*திருக்காட்சி அருளும் பேறே*
*திருவார்த்த தஞ்சையில் திகழ்ஞான வடிவேலா*
*செண்டோடு மலர்மாலை திகழ்ந்தோங்கு பூக்காரத்*
*தெருவிலுறை ஞான ஒளியே*
*திகழ்தஞ்சை மாநகரே புகழ்கின்ற வடிவேலா*

என்பதன் மூலம் தஞ்சை மாநகர மலர்ச்சந்தைச் சிறப்பையும் இணைத்துப் பாடுகின்றார்.

### புராணச் செய்தி

இறைவன் பாட்டுடைத் தலைவனாக அமைந்த இலக்கியங்களில் அவ்விறைவன் தொடர்புடைய புராணச் செய்திகள் இடம்பெறல்மரபு. அவ்வகையில் குவெ.பா. அவர்கள்

*அதிசூரன் விதிமுடிய அணிசேவல் மயிலேறி*
*ஆட்கொண்ட திருவார் கடம்பா*
*கடலிடையே ஒருசூரன் கரந்துநிற்கக் கைவேலால்*
*கடிந்தவனைத் தடிந்த கூற்றே*

என்று பலபட எடுத்துரைக்கின்றார். மேலும் முருகன் கார்த்திகைப் பெண்கள் அறுவர்க்கும் குழந்தையாகித் தாய்மைப் பேறு அருளியவன் என்பதை

*தவமாதர் அறுவரவர் தாய்மையெனும் பேறெய்த*
*செம்பொருளாய் வந்த தேவே*
*செகம்யாவும் யுகம்யாவும் முகமாறு கொண்டநீயே*
*திருவருளைக் கூட்டு வாயே*

என்னும் அடிகள் உணர்த்தும்.

### முருகனின் திருமுகங்கள்

ஆறு திருமுகம் கொண்டு திகழ்பவன் முருகவேள்; முருகவேளின் திருமுகச் சிறப்பைத் திருமுருகாற்றுப்படை உலகம் ஒளிபெறவும், அடியார்க்கு அருள் தரவும் அந்தணர் வேள்வி ஓர்க்கவும் திங்கள் போலத் திசை விளக்கவும் பகைவரை அழிக்கவும் வள்ளியொடு நகையாடவுமாகத் திருமுகங்கள் விளங்கின என்பதை

*மா இருள் ஞாலம் மறு இன்றி விளங்க,*
*பல் கதிர் விரிந்தன்று, ஒரு முகம்; ஒரு முகம்,*
*. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .*
*ஆங்கு, அம் மூஇரு முகனும், முறை நவின்று ஒழுகலின்*
(முருகு.91-103)

என்ற அடிகளில் கூறும். அருணகிரியாரும் அறுமுகத்தின் செயல்களை

*ஏறு மயில் ஏறி விளையாடும் முகம் ஒன்று*
*ஈசனுடன் ஞான மொழி பேசும் முகம் ஒன்று*
*கூடும் அடியார்கள் வினை தீர்க்கும் முகம் ஒன்று*
*குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்று*
*மாறு படு சூரரை வடித்த முகம் ஒன்று*
*வள்ளியை மணம் புணர வந்த முகம் ஒன்று*

*ஆறுமுகமான பொருள் நீ அருள வேண்டும்*
*ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமானே*

என்று குறிக்கின்றார். இம்மரபில் கு.வெ.பா. அவர்கள்

*மயிலூர்தி பயில்கோலம் அயில்வேலைத் தாங்குகோலம்*
*ஆகமங்கள் மொழியும் கோலம்*
*வள்ளியொடு தெய்வானை மணந்தவொரு திருக்கோலம்*
*மாமரத்தைப் பிளந்த கோலம்*
*வெயின்மறைக்கும் குலகிரிகள் வியனுச்சித் துளைபடவே*
*வேலெறிந்து நின்ற கோலம்*
*வேண்டுகின்ற அடியவர்க்கு விழைவெல்லாம் விரைந்தளிக்கும்*
*மழை முகிலாய் விளங்கு கோலம்*

என்று பாடுகின்றார். இது முன்னைய இலக்கியச் செல்நெறியில் ஈடுபாடுடைய ஆசிரியரின் புலமைத்திறத்தைக் காட்டும்.

இனிய சந்தம், ஓசைச்சிறப்பு, எதுகை முதலான தொடைநயங்கள் ஆகியன கொண்டு இலக்கியமாகக் கற்போர்க்கு இலக்கியமாகவும் பக்திப் பனுவலாகக் கருதிப் போற்றுபவர்க்கு சிறந்த துதியாகவும் திருமுருகன் பஞ்சகம் விளங்குகின்றது. புராணச் சிறப்புகள் அடங்கிய சிறந்த நூலாகவும் இந்நூல் அமைகின்றது.

## சங்க இலக்கியங்களில் வேலன் வெறியாட்டு

ச. பிரேமகுமாரி,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜாபேட்டை, வேலூர் மாவட்டம்.

சங்க கால மலைவாழ் மக்கள் குடும்பத்தில் வேலன் எனப்படும் முருக வேளின் துணையுடன் வெறியாட்டு என்னும் நிகழ்வின் மூலம் தாயிற்கும் மகளுக்கும் உள்ள மனப்போராட்டங்களைச் சத்தமின்றி வெளிக்கொணரும் நற்றாயின் உளவியல் பாங்கினைக் குறித்து இக்கட்டுரை ஆராய்கிறது.

### குறிஞ்சி ஒழுக்கம்

குறிஞ்சி நிலம் மலையும் மலைசார்ந்த இடமாகும். இந்நிலவாழ் மக்கள் வேடர், குறவர், கானவர் எனப்படுவர். இம்மலை நிலத் தலைவன் பொருப்பன், வெற்பன், சிலம்பன் எனப்படுவான். இம்மலைக்குரிய கடவுளாக விளங்குபவர் முருக வேளாவார். இதனைச்,

*'சேயோன் மேய மைவரை உலகமும்'* (தொல்.பொருள்.அகத்.5)

முருகன் விரும்புகின்ற மேகம் சூழ்ந்த மலையினையுடைய குறிஞ்சி நிலமும் என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இங்குச் சேயோன் என்பது முருகனைக் குறிப்பதாகும். 'கழல்தொடிச் சேஎய்ங் குன்றம்' (குறுந்.1) என்பதாலும் அறிய முடிகிறது. குறிஞ்சி நிலத்தில் சிறப்பாகக் கருதப்படுவது காதல் எனப்படும் களவு ஒழுக்கமாகும்.

ஒருவனும் ஒருத்தியுமாக இல்லறஞ் செய்துழி, அவ்விருவரையும் மறுபிறப்பினும் ஒன்றுவித்தலும், வேறாக்குதலுமாகிய இருவகை ஊழினும் இருவுள்ளமும் பிறப்புத்தோறும் ஒன்றி நல்வினைக்கண்ணே நிகழ்ந்த ஊழினது ஆணையின் ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்பது களவாகும். எனவே களவு நிகழ்தற்குக் காரணமாக இருப்பது ஊழாகும். ஊழினால் ஒன்று கூடிய தலைமக்களின் களவொழுக்கம் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு முதலான படிநிலைகளைக் கடந்து அன்னை மேற்கொள்ளும் உபாயமான வெறியாட்டினைத் தொடர்ந்து தோழியின் அறத்தொடு நிற்றலுக்கு ஏதுவாக அமைந்து கற்பொழுக்கத்திற்கு வழிவகுக்கிறது. இவற்றுள் இக்கட்டுரையானது வெறியாட்டு குறித்தும் வெறியாட்டில் அன்னையின் உளவியல் குறித்தும் ஆராய்கிறது.

### வெறியாட்டு

அன்னை தன்மகளின் உடல்வேறுபாட்டினைக் கண்டு தெய்வமான அணங்கினால் வந்த நோயாக உணர்ந்து, முருகனின் பூசாரியான வேலனை

அழைத்து ஆடு பலிகொடுத்து நிகழ்த்தப் பெறும் சடங்கு வெறியாட்டாகும். அணங்குடை முருகன் (புறம்.299:6), நெடுவேல், அணங்குறு மகளிர் (குறிஞ்சிப்பாட்டு 174-175) என்னும் குறிப்புகளினால் அறியலாம். முருகனை வேண்டிச் செய்யும் வழிபாடுகளை முருகாற்றுப்படுத்தல் (அகம்.22:11), முருகு அயர்தல் (குறுந்.362:1), வெறி (ஐங்.243:2) என்பதால் அறிய முடிகிறது. வெறி என்பதற்குத் தெய்வம் என்பது பொருள். இங்கு வெறியாட்டு என்னும் பொருளிலும் ஆளப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது.

*'வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்,*
*வெறியாட் டயர்ந்த காந்தள்'* (தொல்.பொருள்.அகத்.63)

வெறியாடலின் சிறப்பினை அறிந்த கொடிய வாயினையுடைய வேலன் ஆடிய காந்தளும் என்று வெறியாட்டு குறித்து புறத்திணை கூறுகிறது. இதற்குக் 'காந்தள் என்பதனை மடலேறுதற்குப் பெயராகக் கூறுவாருளராகலின், வெறியாட்டு அயர்ந்த காந்தள் என்றாள். அன்றியும், காந்தள் என்பது மடலேறுதலான் அத்துணை ஆற்றாளாகிய பெண்பால் மாட்டு நிகழும் வெறி காந்தள் எனவும் பெயராம். இதனானே காம வேட்கையின் ஆற்றாளாகிய பெண்பாற் பக்கமாகிய வெறியும் அந்நிலத்தார் வென்றி வேண்டி ஆடும் வெறியும் கொள்ளப்படும். இவ்வெறி இந்நிலத்திற்குச் சிறந்தமை அறிக' என்று வெறியாட்டு குறித்து இளம்பூரணர் விளக்கமளிக்கிறார்.

*வெய்ய நெடிதுயிரா வெற்பன் அளிநினையா*
*ஐய நனிநீங்க ஆடினாள் - மையல்*
*அயன்மனைப் பெண்டிரோடு அன்னைசொல் அஞ்சி*
*வியன்மனையுள் ஆடும் வெறி* (இருபாற் பெருந்திணை.10)

இது காமவேட்கை தோற்றாமல் தலைமகள் முருகு மேல் நிறீஇ ஆடியது என்று உதாரணமும் தருகிறார். அவ்வகையில் தலைவி தனது களவொழுக்கம் கற்பொழுக்கமாகத் திகழ்வதற்குத் தானே வெறியாடியதை அறியமுடிகிறது.

**கட்டினும் கழங்கினும் வெறியாடல்**

சங்க இலக்கியத்துள், குறிபார்த்துக் கூறுபவளைக் 'கட்டுவிச்சி' என்றும் வெறியாடி உரைப்பவனை 'வேலன்' என்றும் உரையாசிரியர்கள் குறிப்பிடுகின்றனர். தொல்காப்பியர்,

*கட்டினும் கழங்கினும் வெறியென விருவரும்*
*ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்*

(தொல்.பொருள்.கள.113)

என்று குறிப்பிட்டுள்ளார். இதற்கு நச்சினார்க்கினியர், 'கட்டுவிச்சியும் வேலனும் தாம் பார்த்த கட்டினாலும் கழங்கினாலும் தெய்வத்திற்குச் சிறப்புச் செய்யாக்கால் இம்மையில் தீராதென்று கூறுதலின் அவ்விருவரும் தம்மின் ஒத்த திறம் பற்றியதனையே செய்யும்' என்று உரைவிளக்கம் கூறுதலின் இவற்றைப் பற்றிய குறிப்புகள் சங்கப் பாடல்களில் காணமுடிகிறது.

தன் மகளின் மேனி நாள்தோறும் மெலிவதைப் பார்த்துத் தாய் கவல்கின்றாள். உண்மையான காரணம் வெளிக்கொணர ஓர் உபாயத்தினை மேற்கொள்கிறாள். இம்மெலிவு முருகனால் வந்தது என்று நம்பி, முருக பூசை செய்யத் துணிகின்றாள். வீட்டில் நல்லதோர் இடத்து நடுயாமத்துப் பூசை தொடங்குகிறது. முருக பூசாரி வேலன் எனப்படுவான். அவன் திணையை இரத்தித்திற் கலந்து எறிந்து முருகனைக் கூவி அழைத்து, வெறியாட்டு என்னும் ஆவேசக் கூத்தை ஆடியும், கழற்சிக் காயிட்டுப் பார்த்தும் 'இவள் நோய்க்குக் காரணம் அணங்காகிய முருகன் (அகம்.22,ஐங்.249) என்றும் இவள் முருகேறப்பட்டவள் என்றும் தாய்க்குக் கூறுகின்றான். இவ்வாறு தலைவியிடம் நேர்ந்துள்ள உடல்வேறுபாடு அணங்காகிய தெய்வத்தால் நேர்ந்தது என்று குறிசொல்லும் பெண்டிர் கூறியுள்ளதனைச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.

*நெடுவேட் பேணத் தணிகுவள் இவளென*
*முதுவாய் பெண்டிர் அதுவாய் கூற* (அகம்.22.6,7)

என்று குறிசொல்லும் பெண்டிர் கூறத் தாயானவள் வெறியாட்டு நிகழ்த்துகின்றாள். கட்டுவிச்சியாகிய குறிசொல்லும் பெண்டிரை அழைத்துப் பசலை நோய்க்குக் காரணம் வினவும் தாயரை (நற்.285) அகப்பாடல் காட்டுகின்றது.

*மென்றோன் நெகிழ்த்த செல்லல் வேலன்*
*வென்றி நெடுவே ளென்னும் அன்னை* (குறுந்.111:1,2)

என்னும் கூற்று, தலைவியின் உடல் வேறுபாட்டிற்கு முருகனே காரணம் என்று கூறும் தாயினைக் காட்டுகின்றது.

தாயானவள் அறியாமை உடையவளாக இருந்துள்ளாள் என்பதாக வெறியாட்டு நிகழ்வுகள் குறிப்பிடுகின்றன.

*அறியா மையின் வெறியென மயங்கி*
*அன்னையு மருந்துய ருழந்தனள்* (ஐங்.242:1,2)
*அறியா தயர்ந்த அன்னைக்கு வெறியென*
*வேலன் உரைக்கும் என்ப* (குறுந்.360)
*வெறியென உணர்ந்த அரிய அன்னை* (நற்.173:4)
*நம்முறு துயரம் நோக்கி யன்னை*
*வேயற் றந்தனள்* (ஐங்.241:1,2)

என்றெல்லாம் அன்னையின் அறியாமை பேசப்பட்டுள்ளது.

*வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்*
*கடவு ளாயினு மாக*
*மடவை மன்ற வாழிய முருகே* (நற்.34:9-11)

என்பதால் வேலன் அறியாமை உடையவனாக இருந்துள்ளமை தெரிகிறது.

*அருநோய்*
*காதலன் தந்தமை அறியாது உரைத்த*

*அணுங்குறு கழங்கின் முதுவாய் வேலன்* (நற்.282)
*வெறியென உணர்ந்த வேலன் நோய் மருந்தறியான்*
*ஆகுதல் அன்னை காணிய* (குறுந்.360)
*அறியா வேலன் வெறியெனக் கூறும்* (ஐங்.243:2)

என்று வேலனாகிய வெறியாட்டாளனும் அறியாமை உடையவனாகக் கருதப்பட்டுள்ளான். எனவே வெறியாட்டுச் சூழலில் அன்னை, கட்டுவிச்சி, வேலன், வேலனாகிய வெறியாட்டாளன் ஆகியோரின் அறியாமைகள் பேசப்பட்டுள்ளன.

**வாலிழையோர் வெறியாட்டு**

புறப்பொருள் வெண்பாமாலை வெறியாட்டு பற்றிக் குறிப்பிடுகிறது. இ∴து வெற்றி வேண்டி நிகழ்த்தப்பெறும் நிரைமிட்டலின் ஒரு துறையாகும்.

*வாலிழையோர் வினை முடிய*
*வேலனொடு வெறியாடின்று* (வெட்சி.வெறியாட்டு)

மறக்குடி மகளிர் தம் கணவர் மேற்கொண்ட தொழில் வெற்றி பெற முருகக் கடவுளைத் தன்னுடைய உடம்பின் மீது நிறுத்தி வள்ளிக் கூத்து ஆடுவதனை,

*காணில் அரனும் களிக்கும் கழல்மறவர்*
*பூண்இலங்கு மென்முலைப் போதரிக்கண் - புறம்திளைப்ப*
*தான்முருகு மெய்ந்நிறீஇ தாமம் புறம்திளைப்ப*
*வேல்முருகற்கு ஆடும் வெறி* (வெட்சி.வெறியாட்டு.19)

என்னும் பாடல் புலப்படுத்துகிறது. புறத்திணையில் நிகழ்த்தப்பெறும் வெறியாட்டு வெற்றி வேண்டியும் அகத்திணையில் நிகழ்த்தப்பெறும் வெறியாட்டு காதலை மையப்படுத்தியும் நிகழ்த்தப் பெற்றுள்ளது. இவ்விரு வெறியாட்டுகளிலும் முருகக்கடவுள் சிறப்பிடம் பெறுவது தெளிவாகிறது.

**நிறைவுரை**

சங்க கால நற்றாய், மகளின் மனநிலையினை, அவளது உள்ளக் கிடக்கையினை அறிந்தவளாகவும் அவளது உடல் மெலிவிற்கான காரணங்களை உணர்ந்தவளாகவும் இருந்திருக்க வேண்டும். சங்க காலச் சமூகச் சூழல் ஆண்மகனைச் சார்ந்தும், அறம்புரி சுற்றமொடு கிழவனும் கிழத்தியும் சிறந்தது பயிற்றல் இறந்ததன் பயனே (தொல்.பொருள்.கற்.190) என்னும் உத்தியிலும் வாழ்ந்து சிறந்துள்ளனர். எனவே தனது மகளின் களவொழுக்கத்தினைத் தன் கணவனுக்குத் தெரிவிக்கும் முயற்சியில் எடுக்கும் முதல் படிநிலை வெறியாட்டு விழாவாகும். இவ்விழாவினால் தனது மகளின் நிலையினைத் தன் கணவனுக்குக் குறிப்பினால் உணர்த்தி விடுதல், தோழி அறத்தொடு நிற்பதற்கு வழிவகை செய்தல், தன் மகளின் தலைவனை அறிந்துகொள்ள முயற்சித்தல், தலைவன் விரைந்து மணந்துகொள்ள தாமே ஏதுவாகல் முதலிய படிநிலைகளில் வேலன் என்னும் குறிஞ்சி நிலக்கடவுள் துணையுடன் வெறியாட்டு என்னும் உத்தியை மேற்கொள்ளும் நற்றாயினைச் சங்க இலக்கியங்கள் காட்டி நிற்கின்றன.

## அயல்நாடுகளில் முருக வழிபாடு

க. புண்ணியமூர்த்தி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அயல்நாட்டுத் தமிழ்க்கல்வித் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

அயல்நாடுகளுக்குச் சென்ற தமிழர்கள் பிறமொழிபேசும் மக்களுக்கு இடையே வாழ்ந்து கொண்டு எப்படி தங்களது மொழியான தமிழையும் அது சார்ந்த சமயப் பண்பாடுகளையும் தக்கவைத்துக்கொண்டு வாழ்ந்துவந்தனர். அவ்வாறு அயல்நாடுகளுக்குச்சென்ற தமிழர்களை இரு வகையினராக பிரிக்கலாம். அவை தாங்கள் குடியேறிய நாட்டில் செல்வாக்கு செலுத்திவருகின்ற சமயப் பழக்கவழக்கங்களால் தங்கள் சொந்தச் சமயத்தையும் பண்பாட்டையும் பாதுகாக்கப் போராடி வருபவர்கள் முதல் வகையினர். இரண்டாவது வகையின மக்கள் காலங்காலமாகப் பின்பற்றி வந்த சமயத்தைத் தொடர்ந்து பேணிப் பாதுகாத்து வந்தவர்கள்.

தமிழர் வாழும் பகுதிகளான மொரீசியசு, ரீயூனியன், பிஜித்தீவு, இந்தோனேசியா, சீசெல்சு போன்ற நாடுகளில் தமிழர்கள் தங்களின் சமயப் பண்பாட்டுப் பழக்கவழக்கங்களைத் தக்கவைத்துக்கொள்ளப் போராடி வருகின்றனர். மேலும் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், (மியான்மர்), பர்மா முதலான நாடுகளில் வாழும் தமிழர்கள் தங்களின் பாரம்பரிய சமய நெறிகளை இயல்பாகப் பின்பற்றி வருகின்றனர். ஆனால் அயல்நாடுகளில் சில பகுதிகளில் வாழும் இளந்தலைமுறையைச் சார்ந்த தமிழர்கள் மொழியை மறந்துவிடும் சூழலிலும் தங்களது சமய நெறிகளை மறவாமல் பின்பற்றி வாழ்ந்து வருகின்றனர் என்பது நிதர்சன உண்மையாக அறியமுடிகிறது. அவ்வகையில் அயல்நாடுகளில் காணப்படுகின்ற தமிழ்க்கடவுளான முருகன் பற்றிய முருக வழிபாட்டை முறையே இக்கட்டுரையில் காண்போம்.

### இலங்கையில் முருக வழிபாடு

இலங்கையில் உள்ள புகழ்பெற்ற முருகத்தலம் கதிர்காமம் ஆகும். கதிர்காம முருகனைக் கட்டர் காமதேவா என்று சிங்களத்தவர் அழைப்பர். இது கொழும்பிலிருந்து சுமார் ஏறத்தாழ 200 மைல் தொலைவில் உள்ளது. இக்கோயிலின் வாசற்சுவரில் சிற்ப உருவங்களாக மயிலும் யானையும் ஏராளமாக அமைந்துள்ளது. கோயிலின் உள்ளே மண்டபத்தை அடுத்து பெரிய மேடையில் திரைச்சீலை தொங்கும். அத்திரையில் முருகன், வள்ளி, தெய்வானை ஆகியோரின் உருவங்கள் வரையப்பட்டு காட்சிக்காக தொங்கவிடப்பட்டிருக்கும். முன்பு இக்கோயிலில் தமிழர்களே அர்ச்சகர்களாக இருந்தனர். இப்பொழுது சிங்களவர்களே பூசை செய்கின்றனர். இங்கு

ஆடித்திருவோண பௌர்ணமி அன்று ஆடிவேல் உற்சவம் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றது. சிங்களவர், ஆங்கிலேயர் என அனைவரும் ஒன்று சேர்ந்து முருகனுக்கு காவடி எடுத்து பூக்குழி இறங்குவது (தீமிதிப்பது) சமய நல்லிணக்கத்திற்குச் சான்றாக விளங்குவதை இங்குக் காணமுடிகின்றது.

**யாழ்ப்பாணம் கந்தசாமிக் கோயில்**

இலங்கையிலுள்ள இன்னுமொரு புகழ்பெற்ற முருகன் கோயில் யாழ்ப்பாணம் கந்தசாமி கோயிலாகும். இக்கோயில் கி.பி.15 ஆம் நூற்றாண்டில் யாழ்ப்பாண மன்னர் செண்பகப்பெருமாள் என்பவரால் கட்டப்பெற்று கதிர்காம முருகனுக்காக அர்ப்பணிக்கப்பெற்றதாகும். இக்கோயிலின் மூலவிக்கிரகம் வேலாகும். கர்ப்பக்கிரகத்தில் வேல் வடிவில்தான் மூலவர், வள்ளி, தேவசேனா சமேதரராகக் காட்சியளிக்கின்றார். இங்கு மகாமண்டபத்தில் சண்முகர் வள்ளிதேவ சேனாதிபதியாக மயில் மீதமர்ந்து காட்சி தருகிறார் முருகப் பெருமான். திறந்த மண்டபத்தில் அழகிய முத்துக்குமாரசுவாமி குறவள்ளிக் கந்தனாய்த் தேவகுஞ்சரி மணாளனாய் வீற்றிருந்து பக்தர்களுக்கு அருள் பாலிக்கின்றார்.

**வழிபாட்டு முறை**

இங்கு நல்லூர்க் கோயிலில் ஆறுகாலப் பூசைகள் காலம் தவறாது நடைபெற்று வருகின்றது. பிரம்மோற்சவம் ஆடிமாதத்தில் 25 நாட்கள் நடைபெறும். 22-ஆம் நாள் திருவிழா தண்டாயுதபாணி உற்சவமாகக் கொண்டாடப்படுகின்றது. 24-ஆம் நாள் தேர்த் திருவிழா நடைபெறும். தீர்த்தத் திருவிழா 25-ஆம் நாள் நடக்கின்றது. பூங்காவனத் திருவிழா 26-ஆம் நாள் நடக்கின்றது. இவை குறிப்பாக வள்ளித் திருமணத்தை நினைவூட்டுவதாக அமைகின்றது. திருவிழாவின்போது தண்ணீர்ப்பந்தல்களில் தொடர்ச்சியான சொற்பொழிவுகள் நடப்பது புதுமையான நிகழ்வாக உள்ளன. பஜனை குழுக்கள் நான்குப் புறவீதிகளில் வலம் வந்து கந்தனது புகழ்பாடிச் செல்கின்றனர். இத்திருவிழா நிகழ்வுகளை இலங்கை வானொலி நல்லூர்க் கந்தன் பாமாலை, கோபுர தரிசனம், இசைச்சித்திரம் போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி முருகனின் புகழைப் பறைசாற்றுகின்றன.

**மலேசியாவில் முருக வழிபாடு**

உலகின் பலநாடுகளுக்கும் தமிழர்கள் சென்று வசிக்கின்றனர். ஆனால் மலேசியாவில் மட்டுமே தமிழர்கள் வாழ்கின்றனர் என்ற கூற்றுக்கேற்ப மலேசியாவில் வாழும் தமிழர்களிடையே சமய வழிபாட்டு மரபுகளும் வேரூன்றி நிற்கின்றன. முருக வழிபாடு மலேசியாவில் சிறப்பான இடம் பெற்றிருக்கிறது. கோலாலம்பூரில் செந்நூல் என்னும் பகுதியில் தண்டாயுதபாணி கோயில் அமைந்துள்ளது. இக்கோயில் 120 ஆண்டுகளுக்கு முன்னர் நகரத்துச் செட்டியார்கள் கட்டியதாகும். இங்கு வெள்ளிக்கிழமை தோறும் சிறப்பு வழிபாடு நடைபெறும், இக்கோயிலுக்கு வெள்ளித்தேர், வெள்ளியாலான மயில்வாகனம் ஆகியன முருகப்பெருமானுக்குக் கொடையாக வழங்கப்பட்டுள்ளன.

மலேசியாவில் உள்ள மற்றுமொரு புகழ்பெற்ற முருகன் திருத்தலமாக விளங்கக்கூடியதாக பத்துமலை முருகன் கோயில் திகழ்கின்றது. இப்பத்துமலை முருகன் கோயிலானது கோலாலம்பூரின் எல்லையில் 9.கி.மீ. தொலைவில் உள்ளது. மலை அடிவாரத்திலிருந்து மலையுச்சியிலுள்ள பெரிய குகைக்குச் செல்ல இரு வரிசைப் படிக்கட்டுகள் உள்ளன. தலைமைக் குகையின் நுழைவாயிலில் மயிலின் வடிவம் பொறிக்கப்பட்டுள்ளன. மலைப்பகுதியில் எங்கும் மயில்கள் ஆடி அசைவதை இங்குக் காணலாம். இக்கோயிலில் தைப்பூசத் திருவிழா சிறப்புடன் வெகுவிமர்சையாகக் கொண்டாடப்படுகின்றது. இங்கு இலட்சக்கணக்கில் மக்கள் திரண்டுவந்து முருகப்பெருமானின் அருளைப்பெறுகின்றனர்.

## வழிபாட்டு முறை

பத்துமலை முருகனுக்கு ஆயிரக்கணக்கான காவடிகள் எடுத்து தைப்பூச நாளன்று செலுத்தப்படுகின்றன. மேலும் பக்தர்கள் முருகனுக்குத் தேர் இழுத்து ஏராளமான காணிக்கைகளான காசு, பணம் பிறப்பொருட்களை இக்கோயிலில் கொட்டிக் குவிக்கின்றனர். இவ்விழாவினை மலேசிய அரசு மலேசியாவின் தேசியத் திருவிழாவாகப் போற்றி வழிபடுகின்றனர்.

## மலாக்காவில் முருக வழிபாடு

முருகப்பெருமானை லிங்க வடிவில் வழிபடப்படும் கோயிலாக சன்னாசி மலைக்கோயில் உள்ளது. இது மலாக்காவிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. தைப்பூசம், மாசிமகம் ஆகியன இங்குச் சிறப்பாகக் கொண்டாடப்படுகின்றன. பெரும்பாலும் மலேசியாவில் திருவிழா காலங்களில் தமிழர், மலேசியர், சீனர் என அனைத்து தரப்பினரும் கலந்துகொண்டு திருவிழாவினைச் சமய நல்லிணக்கத்திற்குச் சான்றாகக் கொண்டாடி மகிழ்கின்றனர்.

## சிங்கப்பூரில் முருக வழிபாடு

முருக வழிபாடு சிங்கப்பூர் தமிழ் மக்களின் பேராதரவைப் பெற்றிருக்கிறது. குளம் சாலையிலுள்ள தண்டாயுதபாணி கோயில் ஒரு முக்கிய கோயிலாகும். பணக்காரச் செட்டிமார்களால் இக்கோயிலை 1859 ஆம் ஆண்டு கட்டினார்கள். இக்கோயிலின் இராசகோபுரம் மீண்டும் 1903 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் கட்டப்பட்டது.

## வழிபாட்டு முறை

சிங்கப்பூர் முருகனுக்குக் காவடி எடுத்தல், அலகு குத்துதல், கரக ஆட்டம் முதலிய சடங்குகளை மக்கள் பக்தியுடன் பின்பற்றிவந்தனர். தைப்பூசத் திருவிழாவின்போது காவடிகளைத் தூக்கிக் கொண்டு பக்தர்கள் செரன்கூனில் உள்ள பெருமாள் கோயிலிலிருந்து குளம் சாலையிலுள்ள தண்டாயுதபாணி கோயில்வரை செல்வார்கள். இக்காவடி மயில் தோகைகளால் அலங்கரிக்கப்பட்ட மரவில் வளைவு அமைப்பை உடையது. சில முருக பக்தர்கள் உலோகத்தால்

செய்யப்பட்ட காவடிகளைத் தூக்கிச் செல்வர். கன்னவாய், உடம்பு, நாக்கு இவற்றில் அலகுகளைக் குத்திக் கொண்டு முருகப்பெருமானை வழிபட்டு காணிக்கைகளையும் செலுத்தி கொண்டாடி வருகின்றனர்.

பர்மா(மியான்மர்)வில் முருக வழிபாடு

பர்மாவில் நாற்பதுக்கும் மேற்பட்ட இந்துக் கோயில்கள் இருக்கின்றன. தாட்டனில் உள்ள தண்டாயுதபாணிக் கோயில் 1888 ஆம் ஆண்டு கட்டப்பட்டது. 1933 வரை பர்மா, செட்டியார்களின் பேராதரவுடன் பல தண்டாயுதபாணிக் கோயில்களைக் கட்டினார்கள். இரங்கூனில் அகன்ற பெரிய மோகுல் தெருவில் உட்கட்ட தண்டாயுதபாணி ஆலயத்தை அமைத்தனர். பசுமந்தானில் இதுபோல் தண்டாயுதபாணிக் கோயிலுக்கு அரசகோபுரம் 1900 இல் கட்டப்பட்டது. இது 1942 ஆம் ஆண்டு போரில் சேதமடைந்தது. 1967 இல் மீண்டும் இக்கோபுரம் புதுப்பிக்கப்பட்டது. மோல்மீனில் முதலாம் செட்டியார் குடியேற்றம் ஏற்பட்டபோது வேல்முருகன் ஆலயம் அமைக்கப்பட்டது. இது மலைக்கோயிலாகவும் சிவன்தலமாகவும் உருமாறி தைப்பூசக் காவடி, வேலாட்டம் முதலியன பெருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இது பர்மாவின் மிகப்பெரிய இந்து ஆலயமாக உள்ளது. மேலும் 32 ஊர்களில் தண்டாயுதபாணிக் கோயில் நாட்டுச் செட்டியார்களால் நிர்வகிக்கப்படுகிறது. மேலும் பர்மாவின் மினிக்கோன் சுப்பிரமணியர் ஆலயம் தமிழ்ப் பணியையும் ஆற்றி வருகிறது. சாமி வீதியுலாவின்போது பக்தர்கள் தீபாராதனை தட்டுகளை ஏந்தி வழிபட்டு அர்ச்சனை செய்து திருநீற்றை நெற்றியில் வழிபாட்டு உணர்வோடு அணிந்து கொள்கின்றனர்.

இந்தோனேசியாவில் முருக வழிபாடு

தமிழர்கள் கொண்டாடும் தனி விழாவாகத் திகழ்வது தைப்பூசமாகும். பபுரா நதிக்கரையில் அமைந்துள்ள காளி கோயிலிலிருந்து காவடி எடுத்துவரப்பட்டு அன்று இரவு இரதத்தில் முருக பெருமானுடன் மேடான் நகரத்துத் தெருக்களை வலம் வருவார்கள். 1918 இல் நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் கட்டப்பட்ட தண்டாயுதபாணிக் கோயிலே புகழடைந்து வருகிறது. இக்கோயிலில் இன்றளவும் தொடர்ந்து வழிபாடு நடைபெற்றுவருகின்றது.

பிஜித்தீவில் முருக வழிபாடு

பிஜித்தீவில் தைப்பூசத் திருவிழா கிறிஸ்துமஸ் போதோ மற்றும் புத்தாண்டு தொடக்கத்தின் போதோ, பத்துநாட்கள் கொண்டாடப்படுகின்றது. விழாவின்போது முதலில் கொடியேற்றப்படும், ஒருசிலர் முருகனிடம் பக்தி செலுத்தி குறிப்பிட்ட காலம் வரை உண்ணாநோன்பு இருப்பார்கள். மயில் பீலியால் அலங்கரித்த காவடி, பூக்கள், பால்குடம், சர்க்கரை முதலியவைகளை ஊர்வலத்தில் அமைதியாக எடுத்துச்செல்வர். சூரியன் மறைவுக்குப் பின்னரே முருகனை இரதத்தில் வைத்து வீதியுலா காட்சியினை நிகழ்த்துகின்றனர். முருகபெருமானுக்கு அர்ச்சனை, ஆராதனை செய்து வழிபடுவர். அந்நாட்களில்

பிரசாதம் அளிக்கப்படும். தீவின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் இத்திருவிழாவின்போது இக்கோயிலை நாடி வருவார்கள். ஏனெனில் முருகனை வழிபாடு செய்பவர்களுக்கு இதுதான் தேசியக் கோயிலாக இருக்கின்றது.

### மொரீசியசில் முருக வழிபாடு

மொரீசியசில் தைப்பூசக்காவடி மிகப்பெரிய திருவிழாவாகக் கொண்டாடப்பட்டு வருகின்றது. இதை அரசு விடுமுறை தினமாக அறிவித்துள்ளது. கொடியேற்றி விரதம் எடுத்து காவடி எடுப்பர். மக்கள் அதனோடு மாவிளக்கு, பால்குடம் எடுப்பவரும் உண்டு. காவடி எடுத்தலில் ஆண், பெண் அனைவரும் காவி மற்றும் மஞ்சள் நிறங்களில் ஆடைகளை அணிவர். மேலும் அலகுகளைக் குத்தியும் காலில் ஆணிநிறைந்த காலணி அணிந்தும் ஊர்வலமாக வழிநெடுகிலும் முருகப் பெருமானின் புகழ்நிறைந்த பாடல்களான காவடிபாடல் பாடி, வேல் வேல், அரோகரா என்று சொல்லிச் செல்கின்றனர். இங்குள்ளவர்கள் தீவிர முருக பக்தர்கள் ஆவர். ஆனால் இவர்கள் கந்தசஷ்டி, பங்குனி உத்திரம் கொண்டாடுவதில்லை. இவர்களது காவடியில் பூசக்காவடி, சித்திரைக்காவடி, வைகாசிக்காவடி சிறப்பாகத் தமிழ்ப்பண்பாட்டோடு கொண்டாடப்படுகின்றன. இங்குப் பொதுவாக முருகனுக்கு பூக்காவடி, இளநீர்க்காவடி, பால்காவடி எடுத்துச் சிறப்பாக வழிபடுகின்றனர்.

### முடிவுரை

அயல்நாடுகளில் வாழும் தமிழர்களில் பெரும்பான்மையோர் முருகனைத் தமிழ்க் கடவுளாகவும், தேசியக் கடவுளாகவும் பெரிதும் வழிபட்டு வருகின்றனர். சிறுபான்மைத் தமிழர்கள் தங்கள் முன்னோர் வழிபட்ட சிறுதெய்வ வழிபாட்டை மறவாமல் போற்றி வருவதையும் மிகச்சில இடங்களில் காணமுடிகின்றது. பொதுவாக அயல்நாடுகளிலுள்ள அனைத்துத் தமிழர்களும் முருக பக்தர்களாக இருக்கின்றனர். உலகத்தமிழ்ப் பண்பாட்டின் சின்னமாக முருகன் விளங்குகிறான். ஏனெனில் தமிழ்க்கடவுள் முருகன் என்பதை அயல்நாட்டுத் தமிழர்களும் தங்களது வழிபாடுகளின் மூலமாக உறுதி செய்துள்ளமையை இங்குக் கண்கூடாகக் காணமுடிகிறது.

# குறிஞ்சிப்பாட்டில் முருகர் வழிபாடு

ரு.மு. பூர்ணிமா,
இளங்கலை கணினி அறிவியல்,
கோபி கலை அறிவியல் கல்லூரி,
கோபிசெட்டிபாளையம்-638453

தமிழின் சிறப்பு வாய்ந்த இலக்கியங்கள் சங்க இலக்கியங்களாகும். இவை 2000 வருடங்களுக்கு முந்தியதாகக் கருதப்படுகிறது. நமது சங்க இலக்கியம் என்பது பத்துப்பாட்டு, எட்டுத்தொகை ஆகும். இது பல புலவர் பெருமக்களால் பாடப்பெற்றது. பட்டினப்பாலை தவிர மீதி அனைத்தும் ஆசிரியப்பாவால் பாடப்பெற்றது. இவற்றுல் 8-வதாக இருப்பது பெருங்குறிஞ்சிப் பாட்டு. இவற்றைப் பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் என்றழைக்கின்றோம்.

**நூற்பா – வெண்பா**

*"முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை*
*பெருகு வளமதுரைக் காஞ்சி – மருவினிய*
*கோல நெடு நல்வாடை கோல்குறிஞ்சிப் பட்டினப்*
*பாலை கடாத்தொடும் பத்து."*

**நூலின் சிறப்பு**

ஆரிய அரசன் பிரகதத்தனுக்குத் தமிழின் சிறப்பைக் கூறுவதற்காக கபிலர் பாடியது. மலையும் மலை சார்ந்த பகுதியான குறிஞ்சி நிலத்தின் வளங்களையும் மக்களின் வாழ்க்கை முறையையும் வர்ணிக்கும் மிகச்சிறந்த மொழி நடையில் 261 அடிகளையுடையது. இதில் முதல் கரு, உருபொருள்களைப் பற்றி வர்ணித்துக் கூறப்பட்டுள்ளது. தெய்வ நம்பிக்கை, வழிபாடு, மறுபிறப்பு, நம்பிக்கை, தினைப்புனம் காத்தல், பூக்களைப் பறித்து விளையாடல், கழைக் கூத்தாடல், விருந்தோம்பல் என்ற தலைப்பில் பாடல்கள் இயற்றப்பட்டுள்ளன.

**ஆசிரியரின் சிறப்பு**

உயரிய சிறப்பும் தமிழ் ஞானமும் கொண்ட கபிலரே "பெருங்குறிஞ்சி"ப் பாட்டின் ஆசிரியர் ஆவார். திருவாதவூர் என்னும் மூதூரில் அந்தணர் குலத்தில் பிறந்தவர். இவரைப் புறநானூற்றில் புகழ்ந்து கூறுகின்றனர்.

*"அந்தணன் புலவன் கொண்டுவந் தனனே"* (புறம் 201)

*"புலனழுக் கற்ற அந்தணாளன்"* (புறம் 126)

இவர் காலத்தில் வாழ்ந்த பாரி என்ற அரசனின் நெருங்கிய நண்பனாகவும் அரசவை புலவராகவும் விளங்கினார். அயிரமலை,

கொல்லிமலை, பறம்புமலை, முளிமலை முதலிய மலைகள் பற்றியும் அதிகம் பாடியுள்ளார். மலையும் மலை சார்ந்த நிலத்தைப் பற்றி அதிகம் பாடியதால் "குறிஞ்சிக்குக் கபிலர்" எனப் போற்றப்படுகிறார்.

**மக்களும் பண்பாடும்**

குறிஞ்சி நில மக்கள் சிலம்பன், குறுவன், வெற்பன், வேட்டுவர், கானவர், குன்றவர் என அழைக்கப்பட்டனர். மூங்கிலரிசி, தினை, மலை நெல், தேன், கிழங்குகள் ஆகியனவும் உணவாக பயன்பட்டன. சேயோன் ஆகிய முருகப்பெருமானே இவர்களின் கண்கண்ட தெய்வமாக விளங்குகிறார். இதைத் தொல்காப்பியர்,

*"சேயோன் மேய மைவரை உலகமும்"* (தொல். 5)

பறை, தொண்டகப்பறை குறிஞ்சியால் இசைக்கப்பட்டது. வள்ளிக்கூத்து குறிஞ்சி நிலத்திற்குரிய ஆட்டக்கலையாகும்.

**தெய்வம்**

குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகப்பெருமானைக் குறித்துக் கூறும் வரிகள்,

*"சுடர்ப் பூண் சேஎய்',* *(174)*
*ஒன்னார்க்கு ஏந்திய இலங்கிலை எஃகின்"*
*"நெடுவேள் அணங்குறு மகளிர்"*
*"பிறங்கு மலை மீமிசைக் கடவுள்"*

(209)

குமரனைச் சேயோன், முருகவேள், அழகன் என்று அழைக்கின்றனர்.

**வழிபாடு**

தொழ என்ற வளையலை அணிந்த குறிஞ்சி நில மகளிர் மாலையில் முருகனை விளக்கேற்றி வழிபாடு செய்தனர். இதன் பிறகே அவர்களின் மாலை வேலைகளைத் தொடங்கினர். இதை இன்றும் கார்த்திகை மாதத்தில் தீபத்திருநாளாக முருகனைப் போற்றும் நாளாக தமிழர்கள் வழிபடுகின்றனர். இதைக் குறிஞ்சிப்பாட்டிலும் நெடுநல்வாடையிலும் கூறப்பட்டிருப்பதைக் காணலாம்.

*"இரும்பு செய் விளக்கின் ஈர்ந்திரி கொளீஇ*
*நேல்லும் மலரும் தூவக் கை தொழுது"* (நெடுதல் 42-43)

*"பூந்தொ.ழ மகளிர் சுடர்தலைக் கொளுவி"* (குறிஞ்சிப் 224)

**தலைவனின் வஞ்சினம்**

தலைவனும், தலைவியும் களவியில் ஒழுகுங்கால், ஒருவருக்கொருவர் பிரிவதில்லை என்ற சூளுரையுடன் களவு வாழ்வைத் தொடங்குவர். இவ்வாறு தலைவன் சூளுரையாக கபிலர்,

*"மீமிசைக் கடவுள் வாழ்த்திக் கைதொழுது*
*ஏமுறு வஞ்சினம் வாய்மையின் தேற்ற*
*அம்தீம் தெள்நீர் குடித்திலின் நெஞ்சு அமர்ந்து"*

(குறிஞ்சிப் 209-211)

என்பதில் குறிஞ்சி நிலத்திற்குரிய தெய்வமாகிய முருகனைக் கைதொழுது வணங்கி, தலைவியை நிறுத்தி சூளுரைத்ததோடு அருவி நீர் குடித்தும் அதனை உறுதி செய்தான் என்பதை அறிய முடிகிறது.

**வெறியாடல் - இலக்கணம்**

வெறியாட்டு என்பது முருகனைக் கருதி வேலனால் இயற்றப்பெறும் சடங்கியல் நிகழ்வாகும். தொல்காப்பியர் அகத்திணைக் கண்ணும் புறத்திணைக் கண்ணும் வெறியாட்டு இடம் பெறுதலைக் குறித்துள்ளார்.

*"வெறியறி சிறிப்பின் வெவ்வாய் வேலன்*
*வேறியாட்டு அயர்ந்த காந்தளும் உறுபகை"* (தொல்.பொருள் 63)

என்ற நூற்பா வெறியாட்டை மொழிகின்றது.

**வெறியாடுதல்**

சங்ககாலத் தமிழர்களிடம் தெய்வ நம்பிக்கை மிகுந்திருந்தது. நோய் நீங்கும் பொருட்டு தெய்வத்தை வேண்டுவர். மலர்களையும், வாசனைப் பெ நள்களையும் கொண்டு தெய்வத்தை வணங்கினார்.

கடவுளுக்குப் பலியிட்டுப் பூசை செய்வதே வெறியாட்டுதல் ஆகும். நோய் ஏற்பட்டாலும், உடல்நலம் கெட்டாலும், தெய்வத்தின் குறையாகவே கருதிப் பூசை செய்வது குறிஞ்சி மக்களின் வழிபாடாக இருந்தது.

*"அன்னாய் வாழி வேண்டு அன்னை ஒள் நுதல்*
*ஒலி மென் கூந்தல் என் தோழி மேனி*
*விறல் இழை நெகிழ்த்த வீவு அருங் கடு நோய்*
*அகலுள் ஆங்கண் அறியுநர் வினாயும்*
*பரவியும் தொழுதும் விரவு மலர் தூயம்*
*வேறு பல் உருவின் கடவுட் பேணி"*

(குறிஞ்சி 1-6)

தலைவியின் மேனி மெலிவைக் கண்டு, அழகு நலன் கெட்டு அணிகலன்கள் கழலப் பெறுகிறாள். இந்நிலையைக் கண்ட தாய், தலைவிக்கு வெறியாட்டு நிகழ்த்துகிறாள் என்பதைக் கபிலர் பாடல்வழி ஒப்பு நோக்கத்தக்கது.

**முருகன் மீதான ஆணை**

நீ வருவோர்க்கெல்லாம் விருந்துபசரித்து அவர்கள் உண்டது போக மீதம் இருப்பதை நீ கொடுக்க, உன்னோடு நான் உண்பதும் உயர்ந்ததே, இன்பமானதே. அத்தகைய இல்லறத்தில் உன்னை இறத்துவன்,

விட்டுவிடமாட்டேன், கலங்காதோ கண்ணே என்று ஆறுதல் கூறுகின்றான். மலைத் தெய்வமான முருகன் மீத ஆணையிடுகிறான். மேலும்,

*"நேர் இறை முன்கை பற்றி நுமர் தா*
*நூடு அறி நன் மணம் அயர்கம்"* (குறிஞ்சி 231,232)

உன் பெற்றோர் உன் கைபிடித்துத் தர ஊரறிய உன்னை மணப்பேன் என்று முருகனின் மீது உறுதி கூறிச் செல்கின்றான்.

முடிவுரை

இயற்கை வளம் கொஞ்சும் மலையும் மலைசார்ந்த பகுதியான குறிஞ்சி நிலத்தில் மலரும் பூக்களின் தன்மை அதன் சிறப்புக்களையும் மலையில் கிடைக்கும் மருத்துவ பொருள்களை நோய் தீர்க்கும் முறைகளையும் கபிலர் அழகாகக் கூறியுள்ளார். மேலும் மக்களின் வாழ்க்கை நெறிமுறைகளையும் களவு கற்பு வாழ்வின் ஒழுக்கத்தையும் மனதில் ஏற்படும் பிரச்சனைகளின் தீர்வாக முருகன் நின்று காப்பான் என்பதனையும் மக்கள் நம்பினர்.

ஆரியர்களின் வருகைக்கு முன்னே குறிஞ்சி மக்களின் இயற்கை தெய்வமாக மனதைப் பண்படுத்தும் தெய்வமாக ஞானத்தைப் போதிக்கும் தெய்வமாக முருகன் விளங்கினான். இவர்களின் வாழ்வில் ஒன்றாய் கலந்த முருகன் ஆரியர்களின் வருகைக்குபின் பெருந்தெய்வமாக போற்றப்பட்டது. கதைகளும் புராணங்களும் இதைச் சார்ந்தே தோன்றியிருக்கும் என்பதை இக்கட்டுரை வழியாக அறிகிறோம்.

துணைநூற் பட்டியல்

1. பேரா.முனைவர் வெ. இராமு, பேரா. இரா.சங்கர், பக்தி இலக்கியங்களில் பண்பாட்டுக் கூறுகள், தேசியக் கருத்தரங்கக் கட்டுரைகள்-2017.
2. முனைவர் இரா.ஜெகதீசன், முனைவர் க.முருகேசன், முனைவர் வேல். கார்த்திகேயன், பத்துப்பாட்டு ஆய்வுக்கோவை, குறிஞ்சிப்பாட்டு, குறிஞ்சி பதிப்பகம், ஆம்பூர் 635802.

## திருமுருகாற்றுப்படை இலக்கணப் பொருத்தம்

கா. பெரியகருப்பன்
முனைவர்ப்பட்ட ஆய்வாளர்
தமிழ்த்துறை
தியாகராசர் கல்லூரி, மதுரை-09

தமிழ் இலக்கிய வரலாற்றில் இலக்கியப் பாகுபாடு என்பது பலரால் பலவிதமாக பகுக்கப்பட்டுள்ளது. அவற்றுள், சங்கஇலக்கியம் என்பதுவும் ஒன்றே. அதன் அடிப்படையில் சங்ககால இலக்கியங்கள் என்று கூறப்படும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகிய இரண்டும் இன்றளவும் தமிழர் வாழ்வையும் பண்பாட்டையும் பறைசாற்றுவனவாக திகழ்கின்றன எனில் மிகையல்ல. இத்தகு சிறப்புமிகு தமிழ் இலக்கியங்களில் இருக்கும் நன்மை தீமைகளைக் கண்டு தெளிவதும் அதன் உண்மைத்தன்மையை அறிவதுமே ஆய்வாளர்களின் கடமை என்பதை உணர்ந்து திருமுருகாற்றுப்படை இலக்கியத்தின் இலக்கணப் பொருத்தம் குறித்து ஆய்வதே இவ்வாய்வின் நோக்கமாகக் கைக்கொள்ளப்படுகிறது.

### பாகுபாடு

பதினெண்மேற்கணக்கு, பதினெண்கீழ்க்கணக்கு என்ற பாகுபாடு காலத்தால் பகுக்கப்பட்டவை என்பது நாம் அறிந்தவையே. இத்தகைய பாகுபாடுகள் பல்வேறு முரண்பாடுகளுக்கிடையே நிகழ்த்தப்பெற்றிருக்கலாம். இத்தகு கண்ணோட்டத்தோடே பத்துப்பாட்டை ஆராயும் நோக்கில், அதன்கண் இறைவணக்கம் போன்று திகழ்கின்ற திருமுருகாற்றுப்படை குறித்து நாம் அறியலாகும் பல்வேறு செய்திகள் வாயிலாக அதன் இலக்கணப் பொருத்தம் குறித்தும் பல்வேறு முரண்பாடுகள் கண்டறியப்பட்டதன் விளைவே இவ்வாய்வுக் கட்டுரை.

### ஆற்றுப்படை இலக்கணப் பொருத்தப்பாடு

"இலக்கியம் கண்டதற்கோர் இலக்கணம்" என்ற கூற்று ஒரு புறம். இலக்கண நூல்கள் குறிப்பிடும் இலக்கியத்திற்கான இலக்கணங்கள் ஒரு புறம். ஆய்வின் வழி அறிஞர்கள் சொன்ன இலக்கணப் பொருத்தப்பாடு ஒரு புறம் என்று பல்வேறு நிலைகளில் திருமுருகாற்றுப்படையின் இலக்கண, இலக்கியப் பொருத்தப்பாட்டை உற்றுநோக்குங்கால் ஆற்றுப்படை என்பது ஆறு -வழி; படை - படுத்துவது எனவே, வறியவரை வலியவர் ஆற்றுப்படுத்துவது ஆற்றுப்படை நூல்களென பல்வேறு இலக்கிய வரலாற்று நூல்கள் சான்று பகர்கின்றன. ஆனால், பிற ஆற்றுப்படை இலக்கியப் பொருண்மையை உற்றுநோக்கும்போதும் திருமுருகாற்றுப்படையின் செய்திகள் வாயிலாக, அதன் பொருண்மையை உற்றுநோக்கும்போதும் பல்வேறு வேறுபாடுகள் இருப்பது

வெளிப்படையாகின்றன. மேலும், அதன் பா வகை, இலக்கண நூல்கள் காட்டும் ஆற்றுப்படை இலக்கியத்திலிருந்து வேறுபடுதல், பொருண்மை அடிப்படையில் வேறுபடுதல், மையப் பொருள் அடிப்படையில், மாற்றம் பெற்றமை போன்ற காரணங்களை ஆராயும் போது பெயரளவிலேயே இது சற்று முரணாகவே தோன்றுகின்றது. பின்னாளில் பதினோராம் திருமுறையில் இது சேர்க்கப்பட்டதும் இதனை உறுதி செய்யும் நிகழ்வாகவே இருக்கிறது.

**இலக்கண நூலார் சுட்டும் ஆற்றுப்படை இலக்கணம்**
**தொல்காப்பியம்**

*கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்*
*சென்று பயனெ திரச்சொன்ன பக்கமும்"*

(தொல்.பொருள். நூ.1037)

என்ற தொல்காப்பியர் கூற்றுப்படி, நாம் ஆற்றுப்படை நூல்களை அணுகினோமானால் ஆற்றுப்படை நூல்களாக தற்போது உள்ள ஐந்து நூல்களுள், கூத்தராற்றுப்படை, பொருநர் ஆற்றுப்படை, பாணர் ஆற்றுப்படை, விறலி ஆற்றுப்படையுமே ஆற்றுப்படை பாடல்கள் என்பதை நாம் தெளிவாக உணரமுடியும். இவ்வாறு வெளிப்படையான கருத்து இருக்கையில் திருமுருகாற்றுப்படை என்ற நூலானது, ஆற்றுப்படை இலக்கணத்திற்கு மறுதலைப்பட்டது என்பதை உணரவேண்டும்.

காரணம், கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் என்று கூறினாரே தவிர இவர்களுடன் பிறரும் என்று குறிப்பிடவில்லை. ஆகவே தொல்காப்பியர் காலத்தில் மேற்சொன்ன நான்கு ஆற்றுப்படை நூல்களே அமைந்திருந்தன என்பதும், பிற ஆற்றுப்படை நூல்களை அவர் ஏற்கவில்லை என்பதும் இங்கு வெளிப்படை.

**பன்னிருபாட்டியல்**

தொல்காப்பியத்தை அடியொற்றி அதன்பின் எழுந்த பாட்டியல் நூல்களும் ஆற்றுப்படை இலக்கணங்கள் கூறுகின்றன.

*புரவலன் பரிசில் கொண்டு மீண்ட*
*இரவலன் வெயில்தெறும் இருங்கா னத்திடை*
*வறுமை யுடன்வருஉம் புலவர் பாணர்*
*பொருநர் விறலியர் கூத்தர்க் கண்டப்*
*புரவலன் நாடூர் பெயர்கொடை பார்அய்*
*ஆங்குநீ செல்கென விடுப்பதாற் றுப்படை*
*அதுதான் அகவலின் வருமே"* (பன்னிரு.பா., நூ.202)

தன்னிடம் பரிசில் பெற்று மீண்ட வறியவராகிய பாணர், பொருநர், விறலியர், கூத்தர் ஆகிய நால்வரும் தன்போன்ற பிற வறியவரை ஆங்கொரு

புரவலன் நம் வறுமைப்போக்கும் வள்ளலாக இருக்கிறான் அவனிடத்தே சென்று உன் வறுமையைப் போக்கிக்கொள் என்று ஆற்றுப்படுத்தும் பொருண்மையே ஆற்றுப்படைக்கான இலக்கணமென பன்னிருபாட்டியல் இயம்புகிறது. ஆனால், திருமுருகாற்றுப்படையானது புலவரை ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது.

**வெண்பாப்பாட்டியல்**

*"ஒன்றா அகவலா லொண்புலவர் யாழ்ப்பாணர்*
*குன்றாத சீர்ப்பொருநர் கூத்தரே - என்றிவரை*
*ஆங்கொருவன் னாற்றுப் படுத்த பரிசறைந்தால்*
*பாங்காயஆற்றுப்படை"* (வெண்.பா.நூற்-52)

குணவீரபண்டிதர், தொல்காப்பியர் போல் இல்லாது பாணர், பொருநர், கூத்தர் இவர்கள் ஆற்றுப்படுத்துவது போல் ஆசிரியப் பாவால் புலவன் இயற்றுவதே ஆற்றுப்படையின் பாற்படும் என இயம்புகிறார். நக்கீரர், இறை அருள்வேண்டி புலவன் மற்றொரு புலவனை ஆற்றுப்படுத்துவதாக திருமுருகாற்றுப்படையை இயற்றியுள்ளார்.

**நவநீதப்பாட்டியல்**

*"...... புலவர்கள் வாழ்த்து நலம்*
*நிறைந்த பொருநரைப் பாணரைக் கூத்தரை நீணிதியம்*
*பெறும்படி யாற்றுப் படுப்பன வாசிரியம் பெறுமே"* (நவநீ.பா.நூ.-53)

நவநீதநாடன், பொருநரும் பாணரும் கூத்தரும் மன்னனிடம் அளவில்லாத (அழியக்கூடிய) பொருட்களைப் பெற்று வருமாறு, தம் இனத்தாரைத் தாம் வழிப்படுத்துவதாகவும் ஆசிரியப்பாவிலும் அமைவதே ஆற்றுப்படையாகும் என விளம்புகிறார்.

**சிதம்பரப்பாட்டியல்**

*"கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும்*
*ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப்*
*பெற்ற பெருவளம் பெறாஅர்க் கறிவுறீஇச்*
*சென்று பயன் றெரிந்த ஆற்றுப்படை"* (சித.பா.நூற்-34)

தொல்காப்பியரும் சிதம்பரப்பாட்டியல் ஆசிரியரும் ஆற்றுப்படை குறித்த ஒத்த கருத்தினையே மொழிகின்றனர். மேலும், 'பத்துப்பாட்டுஆராய்ச்சி' என்ற நூலில், மா.இராசமாணிக்கனார் திருமுருகாற்றுப்படை குறித்துக் கூறும் கூற்றானது "சில ஆற்றுப்படைகளில் காணப்படும் ஆற்றுப்படுத்தப்படுபவனின் நிலையை விவரித்தல், ஆற்றுப்படுத்தப்படுவோன் தனது பழைய நிலையை விளக்குதல், பரிசில் பெற்ற முறையைக் கூறுதல் என்பன தெளிவாகச் சுட்டப்பெறவில்லை" (பத்து.ஆராய்ச்சி-ப.57)எனக் கூறும் கூற்றின் அடிப்படையிலும் இதனை அறியலாம்.

**திருமுருகாற்றுப்படைப் பொருண்மையில் பொருத்தப்பாடின்மை**

திருமுருகாற்றுப்படையில் ஆற்றுப்படுத்தபடுபவனின் நிலைகளாக,

1. முதல் பகுதியில் ,திருப்பரங்குன்றம் என்ற மலைக்கோவில், இயற்கை வளம், திருக்கோலம், சூரனுடன் செய்த போர் முறை போன்றன குறிப்பிடப்பட்டு உள்ளன. சான்றாக, "மால்வரை நிவந்த சேணுயர் வெற்பிற்" (திருமுருகு.-12) எனும் இவ்வரி இயற்கை வளம் குறித்துக் கூறுகிறது.

2. இரண்டாம் பகுதியில், முருகனின் ஆறுமுகம் பற்றிய குறிப்புகள் - பன்னிரு கைகள் - திருச்செந்தூர் சிறப்புகள் சொல்லப்பட்டுள்ளன. சான்றாக, "மனன்நேர்பு எழுதரு வாள்நிறம் முகனே" (திருமுருகு.-90) எனும் இவ்வரி முருகனின் திருமுகங்கள் குறித்துக் கூறுகின்றன.

3. மூன்றாம் பகுதியில், முனிவர்களின் பெருமை, முருகனின் சிறப்புகள் பேசப்படுகின்றன. சான்றாக, "காமமொடு கருஞ்சினம் கடிந்த காட்சியர்" (திருமுருகு.135 ) எனும் அடி முனிவர்கள் அவாவொடு கூடிய சினத்தையும் போக்கின அறிவினையுடையவர்கள் என்று முனிவர்களின் சிறப்புகளைக் கூறுகிறார் நக்கீரர்.

4. நான்காம் பகுதியில், பழனிக்கு வரும் வழிபாட்டுப் பெண்மாந்தர்களின் இயல்பு எடுத்தோதப்படுகிறது. சான்றாக, "புலராக் காழகம் புலர உடீஇ" (திருமுருகு. 184) முருகனை வழிபடும் மகளிர் ஈரம் புலராத ஆடையொடு வழிபாடு நடத்தினர் எனும் காட்சிகளை ஆசிரியர் எடுத்தியம்புகிறார்.

5. ஐந்தாம் பகுதியில், குன்றுதோராடலில் மக்கள் நிலை - குரவைக்கூத்து போன்ற நிகழ்வுகள் சொல்லப்படுகின்றன. சான்றாக, "மயில் கண்டன்ன மடநடை மகளிரொடு" (திருமுருகு.205) இவ்வடி குரவைக்கூத்து ஆடும் மகளிரின் நடை குறித்துக் கூறப்படுகிறது.

6. ஆறாம் பகுதியில், பழமுதிர்ச்சோலையின் சிறப்பு, அருவியின் வருணனை கூறப்படுகிறது. சான்றாக, "நன்பல ஆசினி முதுசுளை கலாவ" (திருமுருகு.301) இதில், பழமுதிர்ச்சோலையின் இயற்கை வருணனை குறிப்பிடப்பட்டுள்ளது.

இவ்வாறு நக்கீரர்- முருகன், அவரை வழிபட வரும் முனிவர், மகளிர் இயல்பு மற்றும் தலச்சிறப்புகளையும் எடுத்துக் கூறுகிறார். மேலும், அழிவில்லாத அருள்நிலை பெறுவதையே மையமிட்டு எடுத்துரைக்கிறார். ஆனால் இதில், நீணிதியம் எனப்படக்கூடிய பொருட்செல்வம் குறித்து யாங்கேனும் ஓரிடத்தில் கூட இயம்பவில்லை என்பது புலவரது திருமுருகாற்றுப்படை செய்தியின் வழி வெளிப்படை.

**மையப்பொருள் அடிப்படையில் வேறுபட்டு நிற்றல்**

புரவலனிடம் பரிசு பெற்று வலியவனாகப் பெற்றவன், தன் போன்ற வறியவனை ஆற்றுப்படுத்துவதே ஆற்றுப்படை இலக்கணம். ஆனால் இதில் வறியவன் பெறும் பொருளானது அழியக்கூடியது,நிலை இல்லாதது, அளவானது. அத்தகு மையப்பொருண்மையுடையதே ஆற்றுப்படை என எல்லா நூல்களும் இயம்புகின்றன. இந்நிலையில் இருந்து திருமுருகாற்றுப்படையானது முற்றிலும் மாற்றம் எய்தி நிற்கிறது என்பது மேற்கண்ட செய்திகளின் வழி வெளிப்படை.

**முடிவுரை**

திருமுருகாற்றுப்படையானது முருகனிடம் ஆற்றுப்படுத்தப்படுவதால் அவனது அருள்வேண்டி ஆற்றுப்படுத்துவதாகவே கொள்ள வேண்டும். அவ்வகையில், நோக்கும்போது இரவலனிடம் முருகன் தரும் அருளானது நீங்காதது. அது, அளவிட முடியாதது. ஆனால், பிற ஆற்றுப்படை இலக்கியங்களானது நிலையில்லாத, அழியக்கூடிய, அளவிடக்கூடிய செல்வத்தைப் பெற்ற இரவலன் தன் போன்ற இரவலன் அப்பரிசிலைப் பெறுவதற்கு ஆற்றுப்படுத்தும் பொருண்மையில் பாடப்பெற்றுள்ளது. அதுவே, ஆற்றுப்படை இலக்கணமென தொல்காப்பியம் முதலாக பின்னெழுந்த பாட்டியல் நூல்களும் இயம்புகின்றன.

எனவே திருமுருகாற்றுப்படையானது, ஆற்றுப்படை இலக்கணத்திற்கு அப்பாற்பட்ட ஓர் இலக்கண மரபை ஒட்டி நக்கீரரால் எடுத்தியம்பப்பட்டுள்ளது என்பதே இவ்வாய்வின் முடிந்த முடிபு.

**முதன்மை சான்றாதாரங்கள்**

1. நக்கீரர், திருமுருகாற்றுப்படை (உரைவிளக்கம்), முனைவர் ம.பெ.சீனிவாசன், 2009.
2. ஆறுமுகநாவலர், திருமுருகாற்றுப்படை, முல்லை நிலையம், 2010.

**துணைமை சான்றாதாரங்கள்**

1. சிங்காரவேலு முதலியார் - அபிதான சிந்தாமணி
2. மா. இராசமாணிக்கனார் - பத்துப்பாட்டு ஆராய்ச்சி
3. மது.ச. விமலானந்தம் - தமிழ் இலக்கிய வரலாறு
4. இளம்பூரணர் - தொல்காப்பியம் (பொருளதிகாரம்)

# ஆதியும் அந்தமும் முருகனே

சி. பொதுவுடை மூர்த்தி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

ஆதியும் அந்தமுமில்லா சோதியனே! சுந்தரனே முருகா கேள்!" எனும் பாடல் வரிகள் முருகன் என்று தோன்றியவன் என்பதே உய்த்து உணரயிலா இயல்பினன் என்று எடுத்தியம்புகின்றன. அந்தாதியாய் நின்று அருளும் அடியவர்களின் அந்தரட்சகனாய் முருகன் தொடர்வதை இக்கட்டுரைக்கண் காண்போம்.

## சோதிடமும் - செவ்வாயும்

வீரபத்திரன் தட்சனது யாகம் அழித்து குருவால் நவக்கிரமாக மாறிய நாள் செவ்வாய்க்கிழமை என்கிறது புராணம். நவக்கிரகங்களில் சூரியனுக்கு அடுத்தப்படியாக பராக்கிராமம் மிக்க, செயலாற்றலுள்ள கிரகம் செவ்வாய் பகவான்.

## செவ்வாய் பகவானது ஆளுமைகள்

ஆற்றல், ஆதிக்கம், பராக்கிரமம், வீரதீர செயல்கள், அதிகாரம் செலுத்துதல், ஆளுமைத்திறன், நம்பிக்கை, வளைந்து கொடுக்காத தன்மை, தர்மம், நேர்மை, நியாயம் போன்ற தோற்றத்தில் கம்பீரம், நடையில் மிடுக்கு, குரலில் அதிகாரத்தை ஏற்படுத்தக்கூடியது செவ்வாய்க்கிரகம்.

## செவ்வாய் - அதிபதி

காவல், இராணுவம், தீயணைப்புத்துறை, உயர்பதவிகள், சகோதர உணர்வுகள், மண், மனை, வீடு, நிலம், தோட்டம், எஸ்டேட் போன்றவற்றுக்கு அதிபதி செவ்வாய். போட்டி, பந்தயங்கள், உடல்திறன், சாகச நிகழ்ச்சிகள் போன்றவற்றில் புகழ் பெறவும், ரியல்எஸ்டேட், பில்டிங் கான்ட்ராக்ட், சிவில் இன்சினியரிங், அறுவை சிகிச்சை செய்யும் டாக்டர்கள், நெருப்பு சம்பந்தமான தொழில்கள் சிறக்கவும் செவ்வாயின் அருள் அவசியம் தேவை. ஐ.ஏ.எஸ், ஐ.பி.எஸ், ஐ.எ.ஃ.ப்.எஸ் போன்ற அரசுயர் பதவிக்கு அனுக்கிரகம் செய்வதும் செவ்வாய்தான். செவ்வாய் உடலில் இரத்தம் மற்றும் வெப்ப நிலைக்குக் காரனமாக இருப்பவர். இவர் பலம் பெறின் உடலின் இரத்த ஓட்டம் சீராக இருக்கும். மூளைக்கு ஆற்றலும், சக்தியும் தரும் கிரகம் செவ்வாய். பெண்கள் பூப்பெய்வதற்குக் காரண கர்த்தா இவர். செவ்வாய் பலம் குறைந்தால் உடலில் இரத்த சம்பந்தமான நோய்கள் தோன்றும். குறைந்த இரத்த அழுத்தம் மற்றும் அதிக இரத்தம் போன்றவற்றை ஏற்படுத்தக் கூடியவர்.

ஒவ்வொரு கிரகத்துக்கும் ஒவ்வொரு காரகம் கொடுக்கப்பட்டுள்ளது. அந்த வகையில் செவ்வாய்க்குச் சகோதரக் காரகன் என்ற சிறப்பு ஏற்பட்டது. ஒருவருக்குச் சகோதர, சகோதரிகள் உண்டா? அவர்களால் ஒருவருக்கொருவர் ஆதாயம் ஏற்படுமா? சகோதரப் பிரச்சனைகள் உண்டாகுமா? பூர்வீகச் சொத்தில் உரிய பங்கு கிடக்குமா? என்பனவற்றெல்லாம் தீர்மானிக்கக் கூடியவர். சொந்தமாக வீடு, நிலம், தோட்டம், எஸ்டேட், பங்களா போன்றவை செவ்வாய் பகவானின் பரிபூரண தயவு இருந்தால்தான் நம்மால் பெறமுடியும். அதேபோல ரியல்எஸ்டேட் என்ற நிலம் வாங்கி விற்கும். தொழில், கட்டிடத்தொழில், சிவில் இன்ஜினியரிங் போன்றவற்றின் புகழும், பணமும் குவியும்.

**பிறந்த இலக்னமும், செவ்வாய்தரும் யோகமும்**

எந்த லக்னம் ராசியில் பிறந்தவர்களுக்குச் செவ்வாய் எந்த வகையான யோகங்களைத் தருவார்?

| | |
|---|---|
| மேஷ லக்னம், இராசி | - தலைமைப்பதவி, அதிகாரம், ஆட்சிபீடம் |
| ரிஷ பலக்னம், இராசி | - மனைவிவழியில் கூட்டுத்தொழில்மூலம்யோகம். |
| கடக லக்னம், இராசி | - தொழில், பூர்வ புண்ணிய அமைப்பு, குழந்தைகளால் செல்வாக்கு. |
| சிம்ம லக்னம், இராசி | - நிலபுலங்கள், தந்தை வழியில் பூர்வீக சொத்து மூலம் கல்வி, செல்வம் மற்றும் வெளிநாட்டு தொடர்புகளால் யோகம். |
| துலா லக்னம், இராசி | - சொல்லாற்றல், மனைவி வகையில் யோகம். |
| விருச்சிக லக்னம், இராசி | - உயர்பதவி, ஆட்சி, அதிகாரத்தால்யோகம். |
| தனுசு லக்னம், இராசி | - பூர்வ புண்ணிய பலத்தின்படி யோகம், திடீர் அதிர்ஷ்டங்கள், பிள்ளைகளால் யோகம் |
| மகர லக்னம், இராசி | - தாய், தாய்வழி உறவுகளால் யோகம், நிலபுலங்கள், கல்வி செல்வத்தால் யோகம். |
| மீன லக்னம், இராசி | - பூர்வீக சொத்துகள், தந்தை வழியில் சொல்லாற்றல் மூலம் அதிர்ஷ்டம். |

மீதமுள்ள மிதுனம், கன்னி, கும்பலக்னம் ராசியில் பிறந்தவர்களுக்குச் செவ்வாயின் பலத்தை வைத்து யோகங்கள் கிடைக்கும். எந்த லக்னம், ராசியில் பிறந்தாலும் செவ்வாய் நீச்சமாக 6,8,12 ஆகிய இடங்களில் இருக்கவேண்டும். அதேபோல் 6,8, 12 ஆகிய கிரகங்களுடன் சேராமலும் இருக்கவேண்டும்.

**செவ்வாயும், திருமணமும்**

செவ்வாய்க்கும் திருமணத்திற்கும் மிக நெருங்கிய தொடர்பு உள்ளது. செவ்வாய் தோசம் என்பது பரவலாக எல்லாருக்கும் தெரிந்த ஒன்றாகும். செவ்வாய் தோஷம் பற்றி அச்சப்படும்படி பலவிதமான கருத்துக்கள் சொல்லப்பட்டாலும் அவைவெறும் வதந்திகள்தான். பழமையான ஜோதிட

நூல்களில் செவ்வாய் தோஷம் இருப்பின் திருமணம் தாமதமாகும் என்றுதான் குறிப்பிடப்பட்டுள்ளது. செவ்வாய் லக்னத்திற்கு 2, 4, 7, 8, 12ல் இருந்தால் தோஷமாகும். இப்படி [illegible] ஜாதகத்தை அதேபோன்று தோஷமுள்ள ஜாதகத்துடன் சேர்க்கவேண்டும். ஏதேனும் பரிகாரம் [illegible] நிவர்த்தியாகிவிட்டது என்பதற்காக முற்றிலும் தோஷம் இல்லாத ஜாதகத்துடன் சேர்க்கக்கூடாது.

**செவ்வாயும் நல்ல நாளே**

'கிழமை' என்ற சொல்லுக்கு 'உரிமை' என்று பொருள் செவ்வாய் கிரகத்திற்கு உரிய நாள் செவ்வாய்க்கிழமை என்று அழைக்கப்படுகிறது. 'செவ்வாய் என்ற சொல்லுக்கே மங்களம் என்றுதான் பொருள். கோயில்களில் முக்கிய பரிகார பூஜைகளைச் [illegible] ஆகையால் செவ்வாய்க் கிழமையை ஒதுக்க வேண்டிய அவசியம் அறவே இல்லை. நம்நாட்டில் தென்பகுதி, வடபகுதிகளில் மாறுபட்ட பழக்கவழக்கங்கள் உள்ளன. இங்கு நாம் செவ்வாய்க்கிழமையைக் காரணமே இன்றி தவிர்க்கின்றோம். வடநாட்டில் மங்கள நிகழ்ச்சிகள் சர்வ சாதாரணமாக நடக்கின்றன. அவர்கள் செவ்வாயை 'மங்கள்வார்' என்று குறிப்பிடுவர். இந்நாளில் சுபநிகழ்ச்சிகளைச் செய்தால் யோகத்தை விருத்தி செய்யும் என்று நம்புகின்றனர்.

செவ்வாய்க் கிழமை மற்றும் செவ்வாய் ஓரையில் செய்வதற்கென்றே சில சுபநிகழ்ச்சிகள் உள்ளன. இந்நாளில் சொத்துகள் வாங்குவது விற்பது பற்றிப் பேசலாம். இடம், தோட்டம், நிலத்தைப் போய்ப் பார்க்கலாம். ஒப்பந்தங்களில் கையெழுத்திடலாம். சகோதரர்களுக்கிடையே பிரச்சனை இருந்தால் இந்நாளில் பேசித் தீர்க்கலாம். வேலையில் சேரலாம். பூமி பூஜை போடலாம். வீடு மாறலாம். புதுவீட்டில் பால் காய்ச்சலாம். இந்நாளில் மற்றும் செவ்வாய் ஓரைவரும் நேரத்தில் வாங்கிய கடனை அடைத்தால் மீண்டும் கடன்படாத நிலைமைக்குக்கூட வாய்ப்புண்டு. இந்நாளில் முருகன் கோயிலில் சென்று வழிபட்டால் நாளும், வினையும் நம்மை எதுவும் செய்யாது. செவ்வாய்க் கிழமைகளில் செய்கின்ற சுப நிகழ்ச்சிகளில் நிலைத்து நின்று பலன் தரும்.

கால புருஷ தத்துவத்திற்கு முதல் வீட்டிற்கும் (மேஷம்) எட்டாம் வீட்டிற்கும் (விருச்சிகம்) அதிபதியாக வரும் செவ்வாய் பகவான் உயிர், ஆயுள், தனது வாழ்க்கைத் துணையின் மூலம் அதிர்ஷடம் பெரும் அமைப்பு, உடல் ஆரோக்கியம், வீரம், குடியிருக்கும் வீட்டின் தன்மை, ஜாதகரின் குண இயல்பு, ஒழுக்கம், போராட்டக்குணம், அதனால் வரும் நன்மை, திடீர் மக்கள் செல்வாக்கு, மன உருதி, வாழ்க்கையில் வரும் திடீர் முன்னேற்றம், அயராத உழைப்புத்திறன், தொழில்நுட்ப ஆற்றல், தொழில்துறையில் சிறந்து விளங்கும் ஆற்றல், சிறந்த நிர்வாகத்திறமை, மற்றவர்கள் வாழ்க்கையில் சிறந்த முன்னேற்றத்தைத் தரும் அமைப்பு போன்ற விஷயங்களை 100 சதவிகிதம் விருத்தி செய்துதரும் அமைப்பைப் பெற்றவர் ஆகிறார். செவ்வாய் பகவான்

நல்ல நிலையில் ஒரு ஜாதக அமைப்பில் அமரும் பொழுது மேற்கண்ட பலன்களை விருத்தி செய்து தருவதில் செவ்வாய் பகவானுக்கு நிகர் அவரே!

செவ்வாய் பகவானால் நன்மை அனுபவிக்கும் சில அமைப்பைப் பற்றி, இப்பதிவில் காணலாம். சிலர் செவ்வாய் பகவான் லக்னத்திற்கு 2,4, 7, 8, 12 ஆம் பாகங்களில் அமரும்போது செவ்வாய் தோஷம் தரும் என்ற பலனை நிர்ணயம் செய்கின்றனர். இது எந்தளவிற்கு உண்மை என்பதை பற்றிச் சற்றே சிந்திப்போம். எந்த லக்கினம் என்றாலும் செவ்வாய் பகவான் தனது வீடுகளான மேஷ, விருச்சிக பாவங்களுக்கு 2, 5, 6, 8, 9, 12 வீடுகளில் அமர்ந்தால் மட்டுமே மேஷம், விருச்சிக ராசிகள் எந்த பாவக அமைப்பைப் பெறுகிறதோ எந்த பாவக வழியில் இருந்து ஜாதகம் தீமையான பலனை அனுபவிக்க வேண்டி வருகிறது. மேலும் அந்த பாவங்களைச் சரராசியாகவோ, பாதக அமைப்பை பெறும்பொழுது மட்டுமே ஜாதகர் எவ்வகையிலிருந்து தீமையான பலனை அனுபவிக்க வேண்டி வருகிறது.

சான்றாக

மேஷ இலக்கின ஜாதகருக்கு, செவ்வாய் லக்கனத்திலிருந்து 2-ல் அமரும்போது தனம், கும்பம், வாக்கு என்ற அமைப்பில் தீமையான பலனைத் தரும்.

5-ல் அமரும் பொழுது பூர்வீகம், குழந்தை பாக்கியம், பரதேச ஜீவனம் என்ற அமைப்பில் தீமையான பலனைத் தரும்.

6-ல்கடன், உடல்நோய், மனநோய், உடல் உபாதை, சிறு இழப்பு என்ற அமைப்பில் தீமையான பலனைத் தரும்.

8-ல் திடீர் பேரிழப்பு, விபத்து, எதிர்பாராத இழப்புகள், தற்கொலை செய்து கொள்ளும் மனநிலை என்ற அமைப்பில் தீமையான பலனைத் தரும்.

9-ல் பொதுக்காரியங்களில் கெட்டபெயர், மரியாதையின்மை, பொதுமக்களால் பாதிப்பு, சமுதாயத்தில் பெயருக்குக் களங்கம் என்ற தீமையான பலனைத் தரும்.

12-ல் விரக்திமனநிலை, மனப்போராட்டம், உணர்ச்சி வசப்படுவதால் இழப்பு தூக்கமின்மை, சரியான வயதில் எவற்றையும் அனுபவிக்கும் யோகம் அற்றநிலை, அனைத்திலும் தாமதம் என்ற அமைப்பில் தீமையான பலனையும் ஜாதகர் அனுபவிக்க வேண்டிவரும்.

அதிலும் குறிப்பாக இந்த லக்னத்திற்கு 5-ஆம் பாவகத்திலும், 8-ஆம் பாவகத்திலும் செவ்வாய் அமரும் பொழுது பலன்களைக் கொஞ்சம் கடுமையானதாகவே இருக்கிறது.

லக்கினாதிபதி என்றாலும் ஜாதகருக்கு இந்தப் பாவக அமைப்பிலிருந்து 100 சதவிகிதம் தீமையான பலன்களைத் தருகிறார். மற்ற

பாவங்களில் அமரும் செவ்வாய் ஜாதகருக்கு மிகசிறப்பான யோக பலன்களைத் தருவதில் தவறுவதில்லை. மேற்கண்ட முறையில் மற்ற இலக்கின அமைப்பில் செவ்வாய் பகவானால் பாதிக்கப்படும் அமைப்பைப் பெற்றவர்கள். பழனி முருகனை வழிபடுவதே சிறந்தது. எனவே செவ்வாய் பகவானால் தோஷம் என்ற அமைப்பு ஒருமாயையயே.

லக்னத்திற்கு 2, 4, 7, 8, 12 ஆம் பாகங்களில் அமரும் பொழுது செவ்வாய் தோஷம் என நிர்ணயம் செய்வதும் தவறான விஷயமே. அந்த அமைப்பைப் பெற்ற ஜாதகத்தைக் கொண்டவர்களுக்குச் செவ்வாய் மிகச்சிறந்த நிர்வாகத் திறனையே வாரிவழங்குகிறார் என்பதே உண்மை.

தனது பாவகத்திற்கு எட்டில் சரராசியில் செவ்வாயில் அமர்ந்தால் மட்டுமே ஜாதகர் விபத்தில் சிக்கவேண்டி வருகிறது. அதுவும் சம்பந்தப்பட்ட எட்டாம் வீட்டின் பலனை, நடப்பு திசை, புத்தி, அந்தரம், சூட்சமம் நடத்தினால் மட்டுமே இருக்கும்.

முருகனும் - செவ்வாயும்

முருகனைப் போன்று சிவனது நெற்றிக் கண்ணில் தோன்றிய பொறியே வீரபத்திரன் எனும் செவ்வாய் எனப் புராணம் கூறுகிறது. முருகன் தோன்றிய நட்சத்திரம் விசாகம். 'விசாகம்' என்ற சொல்லுக்கு அறியாமையை விளக்குவது என்று பொருள். மேலும் அழகு, புலி, நாய், பூனை, வேல், ஈட்டி, அபிஷேகம், விபூதி, பஞ்சாமிர்தம், கற்பூரம், கோபம், வெண்பட்டு, வீரபாகு, குன்று, மொட்டையடித்தல், வெற்றிவேல், மருதமரம், சந்தனக்காவடி போன்றன. முருகன் அருள் 'சந்தானகடாட்சம்' என்பர். அதாவது, 'பிள்ளைப்பேறு' ஆகையால்தான் பிள்ளைகளைத் தத்துக்கொடுத்தல், பெறுதல் போன்ற செயல் முருகன் தலங்களில் நிகழும். முருகனுக்கு அதிகார நிறம் சிவப்பு. இக்கதிர்கள் அதிகம்படும் இடம் பழனி.

அங்காரகன்

நிறம் - சிவப்பு, தந்தை - பரத்வாசர், தாய் - விசாகினி (எ) தேவக்கன்னிகை, வளர்ப்புத்தாய் - பூமாதேவி, அதிகாரத்துவம் - இரத்தம், மலர் - செண்பகம் (அ) சிவப்புஅரளி, வாகனம் - அன்னம், தெய்வம் - சுப்ரண்யர், நவரத்னம் - பவளம், உடல்பகுதி - மூளை, சுவை - துவர்ப்பு, பஞ்சபூதம் - பூமி, பூமாதேவிக்கு 'வாஸ்து' எனும் மகனும் உண்டு. ஆகையால் ஆண் கிரகம் செவ்வாய்க்குச் 'சகோதரக்காரகன்' எனும் பெயரும் உண்டு.

வழிபாடு - பரிகாரம்

செவ்வாய்க்குரிய கடவுள் முருகப்பெருமான். எல்லா முருகன் தலங்களும் செவ்வாய் பரிகாரத் தலங்களே. அறுபடை வீடுகளுக்குச் சென்று முருகப்பெருமானை வணங்குவதால் செவ்வாயால் உண்டாகும் பிரச்சனைகள் விலகும். பழனியில் தண்டாயுதபாணி செவ்வாயாகவே அருள் பாவிக்கிறார்.

மயிலாடுதுறை அருகே உள்ள வைத்தீஸ்வரன்கோவில் முக்கிய பரிகாரத்தலமாக விளங்குகிறது. அறுவை சிகிச்சை செய்வதற்கு முன்பும் பின்பும் இங்கு வந்து வழிபடுவது சிறப்பாகும். நவ திருப்பதிகளில் திருக்கோளஹர் செவ்வாய் தலமாகும். இத்தலத்திலுள்ள பெருமாளைத் தரிசித்தால் சொத்துப் பிரச்சனைகள் தீரும். தினமும் கந்தசஷ்டி கவசம், கந்தகுரு கவசம், திருப்புகழ், முருகன் துதிப்பாடல்களைப் பாடி முருகனையும் செவ்வாய் எனப்படும் அங்காரகனையும் வணங்கி வழிபட்டால் புத்திர யோகம், பூமி பாக்யம் முதலான சகல யோகங்களும் வளங்களும் பெருகும்.

வளர்பிறை செவ்வாய்க்கிழமை அன்று மாலை 4 மணிக்கு பழனி மலைக்கு சென்று பாலதண்டாயுதபாணிக்குப் பால் அபிசேகம் செய்து 6 மணிக்குமேல் இராஜ அலங்கார தரிசனம் செய்து வரும் அனைவருக்கும் செவ்வாய் பகவானால் வரும் கடுமையான பாதிப்புகள் நிச்சயம் குறையும்.

போகர் ஜீவ சன்னதியில் அமர்ந்து தியானம் செய்யும் பொழுது ஜாதகருக்குச் செவ்வாய் பகவான் சகல வளங்களையும் நலங்களையும் நிச்சயம் வாரி வழங்குவார் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. மேலும் எல்லாவித செவ்வாய் பாதிப்புகளிலிருந்து ஜாதகரை விரைவில் மீட்டெடுத்து பரிபூரண நல்வாழ்வு ஜாதகருக்கு வழங்குகிறது இந்த திருத்தலம்

முடிவுரை

செவ்வாய்க்கிரகம் ஜோதிடத்தில் முதல் இராசியும், எட்டாவது இராசியும் தனக்கென கொண்டு விளங்குவது சிறப்பாக அமைகிறது. முதல் குழந்தை உருவாகுவது முதல் எட்டாவது ஆயுள் தீர்மானிக்கும் என்பதால் செவ்வாய் அதிதேவதை முருகன் என்பதால் முதலும், முடிவும் அவனே, முருகன் ஒருவனே உயிர் கொடுப்பதற்கும், உயிரை எடுப்பதற்கு அவரிடமே அனுமதி பெற வேண்டும். ஊரில் ஓர் பழக்கம் உண்டு குழந்தை இல்லை என்றால் முருகனுக்குப் பால் அபிஷேகம் குழந்தை பிறந்த பிறகு உயிருக்கு ஆபத்து வரும் என்றால் முருகனுக்குத் தத்துக் கொடுக்கும் பழக்கமும் உண்டு.

## அருணகிரிநாதரும் பாம்பன்சுவாமிகளும்

ச. பொன்மணி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ் மொழித்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை.

முருக வழிபாடு தமிழகத்தின் முதன்மை வழிபாடாகப் பன்னெடுங் காலம் தொட்டே இருந்து வந்துள்ளது. தமிழ் இலக்கியங்களே இதற்குச் சான்றாக உள்ளன. பழம் பெரும் இலக்கண நூலான தொல்காப்பியம் "மாயோன் மேய காடுறை உலகமும்" என்று குறிஞ்சி நில மக்களின் வழிபாட்டுத் தெய்வமாக முருகனைக் காட்டுகிறது. சிலப்பதிகாரம், *வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்த நீலப்பறவை மேல் நேரிலை தன்னோடும் ஆல் அமர் செல்வன் புதல்வன் வந்தான்* என்றும், *அறுமுகச் செவ்வேல் அணிதிகழ் கோயிலும்* என்றும்; திருமந்திரம், *தந்தை தன் முன்னே அச்சண்முகம் தோன்றலால்* என்றும் குறிப்பிடுகின்றன. சங்கநூல்களாகிய பத்துப்பாட்டு எட்டுத்தொகை நூல்களிலும் முருக வழிபாடு பற்றிய குறிப்புகள் உள்ளன. பத்துப்பாட்டின் முதல் பாட்டாகிய திருமுருகாற்றுப்படை அறுபடை வீட்டின் சிறப்புரைத்துப் புலவரை முருகனிடம் ஆற்றுப்படுத்துவதாக அமைந்துள்ளது. மருதன் இளநாகனார் பாடிய புறநானூற்று பாடலில், *வெண்டலைப் புணரி அலைக்கும் செந்தில்* என்றும், குறுந்தொகை *செஞ்சுடர் நெடுவேல் சேவலங் கொடியோன் காப்ப* என்றும்; பரிபாடலில் குன்றம் பூதனார் பாடல் *நயத்தகு மரபின் வியத்தகு குமர* என்றும், கேசவனார் பாடல் "ஆறுமுகத்து ஆறிரு தோளால் வென்றி நறுமலர் வள்ளிப் பூ நயந் தோயே "என்றும் ,நல்லழிசியார் பாடல், *மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடிப் பிணி முகம் ஊர்ந்த வெல்போர் இறைவ* என்றும், குன்றம் பூதனார் பாடல், *செருவேல் தானைச் செல்வ* என்றும், நப்பண்ணனார் பாடல், *கடம்பு அமர் அணிநிலை பகர்ந்தோம்* என்றும், நல் அச்சுதனார் பாடல், *வென்றிக்கொடி அணி செல்வ* என்றும் முருகப்பெருமானைக் குறிப்பிடுகின்றன. மேல் கீழாய் மாறிச் சுழன்று வரும் காலச் சக்கரத்தில் காலம் தோறும் கஞன்ற பெருமையுடன், முருக வழிபாடு காலத்தையும் வென்று நிலைத்த புகழுக்கு உரியதாகத் திகழ்கிறது. முருகன் மீது பாடப்பட்ட பாடல்கள் எல்லாம் அவரது மெய்யடியார்களின் உண்மை அனுபவ வெளிப்பாடாகும். முத்தமிழ்ச் சங்கத்தின் முழுமைப் பொருளாய் இருந்து சங்கம் வளர்த்த தலைவனாய், தமிழோடு அழகனாய்த் தழைத்து வளரும் தன்மைக்குரியவராக முருகப்பெருமானும் அவரது அருள்பெற்ற மெய்யடியார்களும் திகழ்கிறார்கள். முருகனின் அருள் பெற்ற அருளாளர்கள் சிறந்த தத்துவ ஞானியராகத் திகழ்ந்திருக்கிறார்கள். நக்கீரர், அகத்தியர், அருணகிரிநாதர், குமரகுருபரர், பகழிக்கூத்தர், சிவப்பிரகாசர், சாந்தலிங்கர், தத்துவராயர், தாயுமானவர், பட்டினத்தார், வள்ளலார், தேவராய சுவாமிகள்,

பாம்பன்சுவாமிகள், தண்டபாணி சுவாமிகள், சிதம்பர சுவாமிகள் ஆகியோர் அதில் சிறப்பாகக் குறிப்பிடத்தகுந்தவர்கள். இவர்களுள் அருணகிரிநாதரும் பாம்பன் சுவாமிகளும் பற்றி ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

அருணகிரிநாதர்

"வாக்கிற்கோர் அருணகிரி" என்னும் சிறப்பிற்குரியவர் அருணகிரிநாதர். மனிதப்பிறவி எடுத்த ஒவ்வொருவரும் தத்தம் ஒழுக்கநெறியில் நின்றும் பிறழாமல் இறைவன் வழிபாட்டில் நிற்றல் வேண்டும் என்பதை உலகிற்கு உணர்த்திய அருளாளர். திருப்புகழ் என்னும் தெய்வத் தீந்தமிழ்ப் பாடல்களை முருகன் மீது மட்டுமே பாடி அதனைக் காலம் தோறும் மக்கள் போற்றும் வேதம் ஆக்கியவர். முருகனால் தடுத்து ஆட்கொள்ளப்பட்ட பெருமைக்கும் போற்றுதலுக்கும் உரியவர். திருப்புகழ் (1307 பாடல்கள்), கந்தர் அந்தாதி (102 பாடல்கள்), கந்தர் அலங்காரம் (108 பாடல்கள்), கந்தர் அநுபூதி (52 பாடல்கள்), திருவகுப்பு (25 பாடல்கள்), சேவல் விருத்தம் (11 பாடல்கள்), மயில் விருத்தம் (11 பாடல்கள்), வேல் விருத்தம் (11 பாடல்கள்), திருவெழுக்கூறிருக்கை (1 பாடல்) என்று முருகன் மீது காலத்தால் அழியாத காவியம் படைத்தவர்.

முருகனைத் தான் மட்டும் கண்டதோடன்றி திருவண்ணாமலையில் பிரபுடதேவ அரசனோடு மற்றவரும் காண வழி செய்தவர். பக்தியில் ஈடுபடுவோர்க்கு மட்டுமின்றி இலக்கிய மெய்யுணர்வு நோக்கில் ஆய்வு செய்வோர்க்கும் அவரது பாடல்கள் பெரு விருந்தாய் அமைந்துள்ளன. மெய்யுணர்வுக் கருத்துக்கள், யோகா நுட்பங்கள், இலக்கிய நயங்கள், சொல்லாட்சித் திறன்கள், என்று *பயில் தோறும் நூல்நயம் போல்* என்னும் பான்மைக்குப் பகிர்வாய் அமைந்துள்ளன.

பாம்பன் சுவாமிகள்

பிரப்பன் வலசை சுடுகாட்டில் தவமிருந்து முருகப்பெருமானை அகத்தியர், அருணகிரி நாதரோடு தரிசிக்கும் பாக்கியம் பெற்றவர். முருகப்பெருமானாலேயே உபதேசம் செய்யப் பெற்றவர். அறுமுகச் சிவன் என்று முருகனைக் குறிப்பிட்டு ஏக தெய்வ வழிபாடாக முருகனை மட்டுமே பாடி வணங்கியவர். முருகப்பெருமான் மீது மட்டும் 6666 பாடல்கள் பாடியவர். 32 உரை நூற்கள் எழுதியவர். சாத்திரப்பாடல்கள், தோத்திரப்பாடல்கள் என்று அனைவரும் ஏற்றுத் துதிக்கும் வகையில் தனது பாடல்களை அமைத்தவர். இன்றைய நாளில் இவரது சண்முகக் கவசம், குமாரஸ்தவம், பகை கடிதல், பஞ்சமிர்தவண்ணம் ஆகியவை ஒலிக்காத திருக்கோவில்களும் அன்பர் மனக் கோவில்களும் இல்லை என்று உரைக்கும் அளவிற்கு மக்கள் மனதில் பரவி இடம் பிடித்துள்ளவர்..

இருவருக்குமுள்ள ஒப்புமைகள்

இல்வழித் துறவறம்:- இருவருமே இல்லறத்தில் இருந்து துறவறம் மேற்கொண்டவர்கள். துறவு ஏற்ற பின்னர் அதை முழுமையாகக் கொண்டு

அதில் வழுவுதல் இல்லாமல், இருக்கும் இடம் தேடி அருளின் தூண்டுதலால் உணவு வந்தால் மட்டுமே ஏற்றனர். எவரிடமும் எதையும் இரங்கிப் பெற்றதில்லை. இதனால் துறவு நெறிக்கே இலக்கணமாகத் துலங்கினர். பாம்பன் சுவாமிகள் துறவுக்குப் பின்னர் தனது பிறந்த மண்ணைத் திரும்ப மிதிப்பதில்லை என்ற விரதத்தை முழுமையாகக் கடைப்பிடித்ததோடு, தனது தம்பி, மகன், தாய் இறந்தது தெரிந்தும் செல்லாமல் முருகனிடமே அதையும் ஒப்டைத்து அவர்களது ஆன்ம சாந்திக்காக வேண்டியவர்..

முருக தரிசனம்

இருவருமே முருகனின் நேரடித் தரிசனமும் உபதேசமும் பெற்றவர்கள். அவ்வுபதேசப் பேருண்மைகளைப் பாடல்களில் மக்கள் அனைவரும் பயனடையும் வகையில் கொண்டு சேர்த்தவர்கள்.

முருகனை மட்டுமே பாடியவர்கள

இருவருமே முருகனை மட்டுமே தனது பாடல்களில் பாடியவர்கள். பாம்பன் சுவாமிகளின் ஆசிரியர் குந்துக்கால் என்னும் இடத்தில் இருந்த முனுசாமியைப் பாடச் சொல்லி சுவாமிகளை வற்புறுத்தியபோது கூட அவரையும் முருகனாகவே உவமித்துப் பாடியவர். வழிபடும் நிலையிலும், பாடுபொருள்நிலையிலும், யாவையுமாய் விளங்கும் நிலையிலும் அறுமுகச் சிவனாம் குகப்பெருமானே தங்களது நாயகன் என்பதை உணர்த்தியவர்கள்.

வடசொற்கள் பயன்படுத்தல்

இருவரது பாடல்களிலும் வடமொழி சொல்லாட்சிகள் உள்ளன. மொழிக்காழ்ப்பு என்பது இல்லாத நிலையில் தனித்தமிழின் சிறப்பையும் நிலை நாட்டும் வகையில் தனித்தமிழ்ச் சொல்லாட்சியையும் பயன்படுத்தி உள்ளனர். பாம்பன் சுவாமிகள் தனித்தமிழில் "சேந்தன் செந்தமிழ்" என்னும் ஐம்பது வெண்பாக்கள் கொண்ட தனி நூலினைப் படைத்து தனித்தமிழ் இயக்கத்தின் முன்னோடியாகத் திகழ்ந்துள்ளார்.

அற்புதங்கள்

முருகப்பெருமான் நிகழ்த்திய அற்புதங்கள் இருவர் வாழ்விலும் நிகழ்ந்துள்ளன. அருணகிரிக்கு ஜெபமாலை வழங்கியது போன்று பாம்பனாருக்குக் காவி உடை காசியில் கிடைக்கிறது. சம்பந்தாண்டானின் பல்லக்கு உடைந்தது, வில்லிபுத்தூரார் கண்ணொளி இழந்து திரும்பப் பெற்றது, கவி புனையும் ஆற்றல் பெற்றது, முத்தைத்தரு என முருகனே அடியெடுத்துக் கொடுத்தது என்று அருணகிரியாரின் வாழ்வில் நிகழ்ந்த எண்ணற்ற அதிசயங்கள் போன்றே பாம்பன் சுவாமிகளுக்கும், வழக்கில் வென்றது, புகைவண்டி புறப்படாமல் நின்றது, முருகனே அடியவர் உருவில் குமரக்கோட்டம் காட்டியது, ஒடிந்த கால், மருத்துவர் வியப்புறும் வகையில் திரும்ப ஒன்று சேர்ந்தது, போன்ற பலவகை அதிசயங்கள் முருகன் அருளால் அடியவர் பெருமையை அனைவரும் அறியும் வண்ணம் நிகழ்ந்துள்ளன.

### தல யாத்திரை

முருகப்பெருமானால் ஆட்கொள்ளப்பட்ட பின்னர் இருவருமே முருகன் குடி கொண்டு இருக்கும் கோவில்களுக்குத் தல யாத்திரையாகச் சென்று உள்ளனர். அவ்வாறு செல்கின்ற இடத்தில் கோயில் கொண்டுள்ள குமரப்பெருமான் மீது பாடல்கள் பாடியுள்ளனர். அருணகிரியாரின் பாடல்கள் அந்தந்த ஊர்த் திருப்புகழாகச் சிறப்பு பெற்றன, பாம்பன் சுவாமிகளின் பாடல்கள் அவரது 6666 பாடல்களுக்குள் இடம் பெற்றுள்ளன. அவை யாவும் அவராலேயே ஆறு மண்டலங்களாகப் பகுக்கப்பட்டுள்ளன.

### அனுபூதிச் செல்வர்கள்

இருவருமே முருகப்பெருமானின் அனுபூதிச் செல்வர்கள் என்னும் பெருமைக்குரியவர்கள். அனு - உடன், பூதி - ஆதல். அனுபூதி என்பது உடனாதல் ஆகும். முருகப் பெருமானுடன் உடன் ஆகும் தன்மை வாய்த்ததால் இருவருமே அனுபூதிச் செல்வர்கள் ஆகிறார்கள். "பேசா அனுபூதி பிறந்ததுவே " என்ற கந்தர் அநுபூதி வரிகள் இதனை மெய்ப்பிக்கும்.

### சந்தப்பாடல்கள்

சந்தப்பாடல்கள் இருவரது தனிச்சிறப்பாகும். அருணகிரியார் எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை என்ற ஆறு உறுப்புகள் கொண்ட பாவிலக்கணத்துடன் ஓசை என்ற உறுப்பையும் புதிதாகச் சேர்த்து தமிழிசைப் பாடல்களைப் பாடினார். அருணகிரியார் பாடிய 16000 பாடல்களில் 1307 மட்டுமே கிடைத்துள்ளன என்பர். பாம்பன் சுவாமிகளும் அருணகிரியாரைப் பின்பற்றிப் சந்தப் பாடல்களும் பாடியுள்ளார். தனது திருவலங்கற்றிரட்டு என்னும் பாடல் தொகுப்பு நூலுக்குப் " பல்சந்தப் பரிமளம்" என்று பெயரிட்டதோடு பல்வகையான சந்தங்களில் பாடல்களையும் அமைத்துள்ளார். ஒரே பாடலில் பல்வகைச் சந்தங்கள் அமையும் வண்ணம் அமைத்த பாடலும் ஒவ்வொரு வரிக்கும் 64 சீர்கள் வீதம் நான்கு அடிகளில் அமைத்து 125 வகைகளில் பொருள் கொள்ளும் படி அமைத்த "பஞ்ச விம்சதி அதிக சதபங்கி" என்னும் பாடலும் படிப்போர் வியப்புறும் வண்ணம் முருகன் அருள் வெளிப்பாடாக இருப்பன.

### குருவாய் குகன்

மானிடர் எவரையும் குருவாக ஏற்காமல் தாம் ஆத்ம நாயகனாக ஏற்ற பரம்பொருளாகிய ஆறுமுகச் சிவத்திடமே உபதேசம் பெறவேண்டும் என்ற உறுதியில் நின்று இருவருமே முருகப்பெருமானிடம் உபதேசம் பெற்றவர்கள். அத்தோடு பாம்பன் சுவாமிகள் அருணகிரியாரைத் தனது வாக்கிற்குக் குருவாக ஏற்றுக்கொண்டு சம்பந்தர் தனது ஒவ்வொரு பதிகத்திலும் 8,9 பாடல்களில் முறையே இராவணன் மற்றும் சமணர் பௌத்தர்களைப் பற்றிக் குறிப்பிடுவது போல பாடலின் இறுதியில் அருணகிரியாரின் பெயரைக் குறிப்பிட்டு பாடலை முடிக்கும் தன்மையைக் கையாண்டுள்ளதால் அருணகிரியின்

அருள்நெறி நின்றவர் பழுத்த மனத்துப் பாம்பன் அடிகள்" என்று போற்றுகின்றனர்..

சைவசித்தாந்தம்

சைவ சித்தாந்தத்தின் 36 தத்துவங்களை ஒப்புக்கொண்டு இருப்பதாலும், சுத்தாத்துவித முக்தியைப் பற்றி விளக்கிய வகையிலும் சைவசித்தாந்தத் தத்துவ விளக்கங்கள் இருவரது பாடல்களிலும் செறிந்து உள்ளன. பாம்பன் சுவாமிகள் அத்தியாச்சிரம சுத்தாத்துவித வைதிக சைவ சித்தாந்த ஞானபானு என்று அழைக்கப்பட்டார்.

மதிப்பீடு

"அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்னும் திருவாசக வரிகளுக்கேற்ப முருகப்பெருமான் அருளால் அவனை வணங்கித் துதிக்கும் பெரும்பேறு பெற்றவர்கள் அலைவாய் கடற்கரை மணலினும் அதிகமாவர். அவர்களது உள்ளக் கிடக்கையும் ஒழிவில்லா வாழ்க்கையுமே உலகம் இன்னும் நேர் வழியில் பயணித்து அறம் தழைக்க உதவும் ஆணிவேராகிறது. அவ்வேருக்கு நீராய் இருந்து காத்து வருபவன் வெற்றிவேல்முருகன். அவரைப் பரவிப் பணிந்து ஏத்திய அருளாளர்களில் அருணகிரியாரும் பாம்பன் சுவாமிகளும் அடியார்களின் உள்ளச் சிம்மாசனத்தில் ஒளியோடு திகழ்பவர்கள். அதனால் தான் ஆய்வாளர்கள் பாம்பன் சுவாமிகளில் பாடல்களில் அருணகிரிப் பெருமானின் சொல்வளம், பட்டினத்து அடிகளின் பற்றின்மைப் பாங்கு, தாயுமானவரின் தத்துவ வளம் மூன்றும் திரண்டு வடிவேடுத்தால் எப்படி இருக்கும்? பாம்பன் சுவாமிகளின் பாடலாகக் காட்சி அளிக்கும் என்கின்றனர்.

எங்கே இருந்தாலும் என்னுள் இருந்தே நீ
பங்கம் வாராமல் பார்க்கிறாய் - தங்கமாய்
அங்கம் அணிந்தாலும் ஆழமே புதைந்தாலும்
மங்காப் புகழாய் மலர்ந்து. (வேலவன் வெண்பா)

## கந்தர் கலிவெண்பா உணர்த்தும் சைவ சித்தாந்தம்

முனைவர் இரா. பொன்னி
உதவிப் பேராசிரியர்
தமிழ் உயராய்வு மையம்
பாத்திமா கல்லூரி
மதுரை

தமிழகத்தில் தொன்மை வாய்ந்த கடவுளாகக் கூறப்படுபவர் தமிழ்க்கடவுள் முருகன். அதற்குச் சான்றாக அக்காலந்தொட்டே முருகனைப் பற்றிய இலக்கியங்கள் வலம் வரத் தொடங்கின. செவ்வேளாகவும், அறுபடைக் கடவுளாகவும் பேசப்பட்ட முருகன் பிற்காலத்தில் சைவ சமயத்தின் ஒரு அங்கமான கௌமார வழிபாட்டுக்குரியவரானார். கந்தபுராணம், கந்தரனுபூதி, திருப்புகழ், கந்தர் அலங்காரம் போன்ற நூல்களும் முருக இலக்கியங்களாக வெளிவந்தன. தனிப்பட்ட நிலத்திற்குரிய கடவுளாக இருந்த முருகன் சைவ சமயக் கடவுளாக மாறிய போது இவ்விலக்கியங்கள் தோற்றம்பெற்றன. இவை முருகனது அறக்கருணை மறக்கருணை மட்டுமன்றி சைவ சமயக் கொள்கைகளையும், சித்தாந்தக் கருத்துக்களையும் உள்ளடக்கியதாய் விளங்குகின்றன.

சிற்றிலக்கியங்களில் கலிவெண்பா சிறப்புப்பெற்ற இலக்கிய அமைப்பாகும். இரண்டிரண்டு அடிகளில் தனிச்சொல்லும் பெற்றுக் கண்ணி அமைப்பில் இயற்றப்பெறுவது கலிவெண்பாவாகும். கலிவெண்பாவில் அமைக்கப்பெற்ற குமரகுருபரர் இயற்றிய திருச்செந்தூர் கந்தர் கலிவெண்பா 'குட்டிக் கந்தபுராணம்' என்னும் சிறப்புப்பெற்றதாகும். இந்நூல் சித்தாந்தக் கருத்துக்களை உள்ளடக்கிய கருவூலமாகத் திகழ்கிறது. சிவபெருமானுக்கு உகந்தவையெல்லாம் முருகனுக்கும் பொருந்தும் என்பதனால் முதல் முப்பத்தாறு கண்ணிகளும் சிவசொரூப நிலையை மையமிட்டு உள்ளன.

நாதம் என்பது தூய அறிவாலான பரம்பொருளின் முழுமையான நனவிலி நிலை. இதுவே பரசிவ வடிவம் ஆகும் என்பர். பிரமனும் தெளிவதற்கரிய வேதங்களும் இனிமை நிறைந்த நாத தத்துவமானவன். நாதத்தின் உண்மைப் பொருளுமானவன். நித்தியம் ஆனந்தம் போதம்: இம்மூன்றும் சச்சிதானந்தமெனப்படும். எக்காலத்தும் அழியாமல் ஒரே தன்மையுடையதாய் இருக்கின்ற பேரின்ப அறிவு. பேரறிவாகவும், ஆனந்த வடிவாகவும் இருப்பவன்.

பஞ்ச பூதங்களின் வடிவமாக முருகன் தோற்றம் பெற்றுள்ளான் என்பதைப் பல நூல்கள் பறைசாற்றுகின்றன. மேலும் ஐந்து தொழில்களுக்கும் அப்பாற்பட்டவன். படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற சிவசக்தியினால் நடைபெறும் செயல்பாடுகளும் முருகனுக்கு உரியவை.

மனம், வாக்கு, காயம் என்னும் முக்கரணங்களுக்கும் அப்பாற்பட்டவன். இதனை வலியுறுத்தும் பாடல் வரிகள் :

*-அறிவுக்கு*
*அனாதியாய் ஐந்தொழிற்கும் அப்புறமாய் அன்றே*
*மனாதிகளுக்கு எட்டா வடிவாய்த் . . . . . . -"*

இறைவன் அருவமாகவும், உருவமாகவும் அரு உருவமாகவும் எங்கும் நிறைந்திருப்பவன் என்பது சைவ சமயக் கோட்பாடுகளில் ஒன்று. சிவபெருமான் ஆன்மாக்களுக்கு வினைப்பயனை அளித்து மறைத்து அருளுகிறான். அதே போல் முருகனின் திரு உருவங்கள் யாவும் ஆன்மாக்களின் பிறப்பை ஒழித்தற்காகக் கொண்ட கருணை வடிவங்களாகும்.

உரு வடிவம் – சகளத் திருமேனி – மகேசன், உருத்திரன், திருமால், பிரமன்
அரு வடிவம் – நிட்களத்திருமேனி – சிவம், சித்தி, நாதம், விந்து
அருவுரு - சகளநிட்களத் திருமேனி – சதாசிவம்

இவற்றை 'நவந்தருபேதம்' என்று கூறுவர். இவை மூன்று மட்டுமல்லாது அடியார்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப கொள்ளப்பெறும் பல வடிவங்களாயும் காட்சியளிக்கிறான். உலகில் வாழும் எண்ணிறந்த உயிர்கள் அறியாமை என்னும் ஆணவ மலத்துள் விழாது முத்தி அளித்தற் பொருட்டு அருளுகிறான்.

*-ஏகத்து*
*உருவும் அருவும் உருவருவும் ஆகிப்*
*பருவ வடிவம் பலவாய் – இருள்மலத்துள்*
*மோகமுறும் பல்லுயிர்க்கு முத்திஅளித் தற்குபல*
*பாகமுற வேகடைக்கண் பாலித்துத்"*

இதனையே,

*உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*உருவாய் அருவாய் அருள்வாய் குகனே*

என்னும் கந்தரனுபூதி பாடல் வரிகள் புலப்படுத்தும். இவ்வாறு முத்திபேற்றைக் கொடுக்கும் பொருட்டு ஆணவமலம் பக்குவம் அடைய அருள் கூர்ந்து அவ்வுயிர்கள் உடலைப் பெற முப்பத்தாறு தத்துவங்களை அளிப்பதற்குக் காரணமாக அருவுரு பெறுகிறான் முருகப்பெருமான். மண் முதலாகக் கூறப்படும் தத்துவங்கள் முப்பத்தாறு ஆகும். அவை:

மண், நீர், தீ, வளி, வெளி – ஐம்பூதங்கள்
சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் – தன்மை ஐந்து
மெய், வாய், கண், மூக்கு, செவி – புலன்கள் ஐந்து

வாய், கை, கால், எருவிடுங்குழி, கருவிடுங்குழி – செயற்பொறிகள் ஐந்து மனம், சித்தி, புத்தி, அகங்காரம் – அந்தக் கரணங்கள்
மாயை, காலம், நியதி, கலை,வித்யை, அராகம், புத்தி என ஏழு –வித்தியா தத்துவம் (ஆன்மாக்களுக்குச் சிற்றறிவை எழுப்புவது) சிவம், சக்தி, சதாசிவம்,ஈஸ்வரம், சுத்தவித்தை என ஐந்து – சிவதத்துவம் (ஆன்மாக்களுக்குப் பேரரறிவும் பெருந்தொழிலும் உண்டு பண்ணுவது) ஆங்காரம், அவா, ஆசை, கோபம் என்ற எல்லாக் காரியங்களும் தன்னிடம் வந்து ஒடுங்குவதற்கும், தன்னிடத்தினின்று தோன்றுவதற்கும் காரணமாய் இருப்பவன் இறைவன். இவை மாயை எனப்பெறும். அவை சுத்த மாயை, அசுத்த மாயை, பிரகிருதி மாயை என விரிகிறது. இதனை,"தேகமுறத் தந்த அருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினி மான் பெந்த முறவே பிணிப்பித்து" என்ன்னும் வரிகள் வலியுறுத்தும்.

*'அண்டமாய் அவனியாகி அறியொணாப் பொருளதுவாக*
*தொண்டர்கள் குருவுமாக துகள் அறு தெய்வமாக'*

வீற்றிருப்பவன் முருகன் எனக் குமரகுருதாச சுவாமிகள் பாடுகிறார். உலகம் நீர், நிலம், காற்று, நெருப்பு மற்றும் வான் என்ற பஞ்சபூதங்களால் ஆனவை என்றும், உடலும் பஞ்சபூதங்களால் ஆனவையேயாம். 'அண்டத்தில் உள்ளதே பிண்டம். பிண்டத்தில் உள்ளதே அண்டம். அண்டமும் பிண்டமும் ஒன்றே' என்று சட்டைமுனி சித்தரின் வரிகள் இதனை மெய்ப்பிக்கிறது. வினைப்பயன் விளைவுக்குக் காரணமான மந்தரம் முதலா ஆறு அண்டத்து அத்துவாக்கள் உயிர்களின் மல அவத்தைகளைப் போக்கி முத்தியடையச் செய்யும் சிந்தனையை முன் வைக்கிறார் குமரகுருபரர்.

மந்திராத்துவா (11), பதாத்துவா (81),வன்னாத்துவா (51) – சொல் வடிவம் புவனாத்துவா (224), தத்துவாத்துவா (36), கலாத்துவா (5) – பொருள் வடிவம்.

உலகில் உயிர்களைத் தோற்றுவித்து உயிருக்குள் உயிராய் அவற்றுள் நிலைபெற்றிருப்பவன் இறைவனே ஆவான். இங்குக் குமரகுருபரர் ஈரிரண்டுத் தோற்றம் அதாவது நால்வகைத் தோற்றம் குறித்தும் உயிர்களின் எழுவகை பிறப்புக் குறித்தும் பாடுகிறார்.

சரியை கிரியை யோக மார்க்கங்களில் வழிபட்ட பின் தான் சிவனோடு ஒன்றி உலகத்திலிருக்கும் சாலோக நிலையையும், சிவனுக்குச் சமீபத்தில் இருக்கும் சாமீப நிலையையும், சிவன் திருவுருவத்தைப் பெற்றிருக்கும் சாரூப நிலையையும் உயிர்கள் பெற்று வாழுமாம்.

| அண்டசம் | சுவேதசம் | உற்பிச்சம் | சராயுசம் |
|---|---|---|---|
| முட்டையில் | வேர்வையில் | மேற்பிளந்து | கருப்பையில் |
| தோன்றுவன | தோன்றுவன | தோன்றுவன | தோன்றுவன |
| (தேரை), | (மீன்,பறவை,பல்லி) | (மரம்,செடி,கொடி) | (மானுடர்,விலங்கு) |
| இயங்கியற்பொருள் | இயங்கியற்பொருள் | நிலையியற்பொருள் | இயங்கியற்பொருள் |

இந்த நால்வகைப்பட்ட தோற்றங்களில் தாவரம் (20 இலட்சம்), நீர்வாழ்வன, (10 இலட்சம்) ஊர்வன(11 இலட்சம்), நடப்பன(10 இலட்சம்), பறப்பன(10 இலட்சம்), மனிதர்(9 இலட்சம்), தேவர்(14 இலட்சம்) என்ற எழுவகைப்பட்ட பிறப்புகளிலும் மாறி மாறி வினைகளுக்கு ஏற்ப எண்பத்து நான்கு நூறாயிரம் (84 இலட்சம்) கரு வேறுபாடுகள் கொண்டு உயிர்கள் பிறப்பெடுப்பதாய் குமரகுருபரர் கூறுகிறார்.

*"மக்களாம் விலங்குமாம் மாசில் வானிடைப்*
*புக்குலாம் பறவையாம் புல்லு மாம்அதில்*
*மிக்கதா வரமுமாம் விலங்கல் தானுமாந்*
*திக்கெலாம் இறைபுரி தேவும் யாவுமாம்"*

என்று கந்தபுராணமும் இதனை விளக்குகிறது.

'சிவனே குகன் குகனே சிவன்' என்பர். சிவபெருமான் உலகத்தில் ஆன்மாக்களுக்கு அருள் செய்யும் பொருட்டு ஆன்ம அறிவுக்கு அறிவாகி, அவ்வறிவுக்கும் எட்டாத நிலையில், கருணை உரு கொண்டு குமரகுருபரனாய் எழுந்தருளியுள்ளதை,

*"அறிவுக்கு அறிவாகி அவ்வறிவுக்கு எட்டா*
*நெறியிற் செறிந்தநிலை நீங்கிப் – பிறியாக்*
*கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்*
*குருபரனென்று ஓர் திருப்பேர் கொண்டு"*

என்ற வரிகள் புலப்படுத்தி நிற்கும். இறைவன் ஊழ்வினையைப் போக்கி, உடல் குணங்கள் ஒன்பதும், ஆறு அத்துவாக்களும் ஒழிய, ஆணவ மலம் கிழிய, மெய்ஞ்ஞானம் காட்டி பேரின்பப்பொருளைக் கொடுத்தருளுகிறான். யான் எனது அற்ற இடமே இறைவன் திருவடியாம். ஆன்மாக்களை அடிமை கொண்டு முத்தியடையச் செய்வதற்கே இறைவன் குருபரனாய் உருவெடுத்துள்ளான் என்னும் சைவ சமயக்கருத்து இந்நூலின்கண் நன்கு வலியுறுத்தப்படுகிறது.

சைவ சித்தாந்தக் கருத்துக்கள் நிரம்பக் கொண்டு கந்தர் கலிவெண்பா இயற்றப்பெற்றுள்ளன. அவற்றுள் ஒரு சில மட்டுமே இங்குக் கோடிட்டுக் காட்டப்படுள்ளன. அன்பைப் பெருக்கி உள்ளத்தையும் உணர்வையும் உயிரையும் உருக்கி, இறையுடன் கலந்து இன்புறுவதே சைவ சித்தாந்தத்தின் முடிந்த முடிபாம் என்று கூறுவர். அவ்வகையில் 'சைவத்தின் மேற் சமயம் வேறில்லை' என்னும் கருத்தை மெய்ப்பிக்கும் வண்ணம் இந்நூல் அமைந்துள்ளது போற்றத்தக்கது.

# இலங்கையில் [illegible]ன அறுபடை வீடுகள்

ம. மணிகண்டன்,
முனைவர்பட்ட ஆய்வாளர்,
அயல்நாட்டு தமிழ்க் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

அன்றாட தமிழ் இலக்கியங்களில் சங்க காலங்கள் முதலே இலக்கியங்களுக்கென சில தெய்வங்களைக் குறிப்பிட்டு வருகின்றனர். அதேபோல் தமிழ்க் கடவுள் முருகன் எனவும் கொள்கின்றனர். குறிஞ்சி நில தெய்வமாகவும், முருகன் மலைமீது அமர்ந்திருப்பதனாலே இப்பெயர் பெற்றவர். "முருகப் பெருமான் குன்று இருக்கு இடமெல்லாம் குடி இருப்பார் என்பது ஆன்றோ[illegible] முருகன் கோயில் திருத்தலங்கள் [illegible]டான இலங்கையில் அமைந்திருக்கும் [illegible] செல்வச் சந்நிதி ஆலயம், கதிர்காமம் ஆலயம், கல்லடி [illegible] திரு[illegible]கின்றது. முருகன் ஆலயம், சிதம்பரபுரம் ஈழத்துப் பழனி முருகன் ஆலயம், திருப்படை ஆலயம், உகந்தை ஸ்ரீ முருகன் ஆலயம் என முருகனின் ஆலயங்கள் இலங்கையில் இடம்பெற்று வருகின்றன.

## செல்வச் சந்நிதி ஆலயம்

ஈழ நாட்டில் காணப்படும் திருத்தலங்களில் வரலாற்றுச் சிறப்புமிக்கத் தலமாக அமைவது செல்வச் சந்நிதி ஆலயமாகும். இவ்வாலயம் தொண்டைமானாறு என்னும் கிராமத்தில் ஆற்றங்கரையில் அமைந்துள்ளது. இதன் தோற்றம், அமைப்பு அனைத்தும் தனித்துவம் வாய்ந்ததாக அமைகிறது. இங்கே முருகன் "பூரணம்" என்று கூறும்படியாக பத்திரசத்தி முகூர்த்தத்தில் அமைந்திருக்கிறார். இதைபார்த்த வேதநாயகம்பிள்ளை,

*செல்வச் சந்நிதி மேவிய பூரணனே*
*செல்வச் சந்நிதி போற்றிய பூரணனே*
*பூரணமாஞ் செல்வச் சந்நிதி மேனிப் புவன முய்யும்*

என்று கசிந்துருகிப் பாடியுள்ளார். இவ்வாலயத்தின் வரலாற்றை நோக்கினால் இது அரசியலுக்கு மேல் பொருளாதார சமூக வரலாற்றுடன் மிக நெருங்கிய தொடர்புடையதாகவும், பக்தி வரலாற்றுடன் தொடர்புடையதாகவும் அமைகிறது. தொண்டைமானாறு என்னும் இவ்வாறானது முன்பு கடலுடன் சங்கமிக்காது. "வல்லிநதி" என்ற பெயருடன் மிளர்ந்தது. இந்த ஆற்றங்கரையில் அமைந்திருக்கும் பூவரசு மரத்தடியில் வேல் ஒன்றை வைத்து பூஜை செய்து வழிப்படுவதுமுண்டு. இங்கு சித்தர்கள், யோகிகள், முனிவர்கள் தவம் செய்ததாகவும் கூறப்படுகிறது. 65 பூவரசு இலைகளில் பிரசாதம் படைத்து வழிபடுவது வழக்கமாகும். செல்வச் சந்நிதி முருகன் ஆலயத்திற்கு நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் பக்தர்கள் இங்கு கூடுவர். இலங்கையில் அதிகளவு அன்னதான மடங்களைக் கொண்ட ஆலயம்தான் செல்வச் சந்நிதி ஆலயம்.

இதனால் சந்நிதி முருகனுக்கு அன்னதானக் கந்தன் என்றும் அழைப்பர். இக்கோயிலைச் சுற்றி 45 மடங்கள் உள்ளன.

**திருவிழாக்கள்**

அன்னதானக் கந்தன் என்று அழைக்கப்படும் முருகப்பெருமானுக்கு ஆவணி மாதத்தில் வரும் பூரணையில் தீர்த்த உற்சவம் ஆண்டுதோறும் நடைபெறும் கோயில் கிணற்றுக்கு அருகே வள்ளிக்கொடி முளைக்கும்பொழுது கொடியேற்றி திருவிழா 15 நாட்கள் நடைபெறும். தேர்த் திருவிழாவின் போது சந்நிதி முருகனுக்கு முன்பாக, காவடி கரகாட்டம், பாற்காவடி, கற்பூச்சட்டி, தூக்குக் காவடி என்றும் தேரின் பின்னால் அங்கப் பிரதட்சணை செய்யும் அடியார்கள் இவற்றின் பின்னால் வரும் பஜனைக்குழுக்கள் எனத் திருவிழா பெரியளவில் நடத்தப்பட்டு வரும். கோவிலில் 54 அடி உயரமுள்ள ஆலய மணி சிறப்புமிக்கது. செல்வச் சந்நிதி ஆலயம் ஆகும்.

**கதிர்காமம் ஆலயம்**

கதிர்காம கந்தனின் சமசுகிருத மொழியில் உள்ளன. அவையெல்லாம் முருகனின் குணாதிசங்கள், லீலைகள், வீரதீரச் செயல்களை வெளிப்படுத்தும் பெயர்களாகும். இக்கோயிலில் அருள்பாலிக்கும் கந்தனை வழிபடச் செல்வதைக் கதிர்காம யாத்திரை என்பர். இக்கோயில் 2500 ஆண்டுகளுக்குமுன் தமிழ் மன்னனான எல்லாளனுடனான போரில் சிங்கள மன்னனான துட்டைகைமுனு இக்கோயிலில் நேர்த்திக்கடன் வைத்ததாகவும் போரில் வென்ற பின்னர், இக்கோயிலில் நேர்த்திக் கடனை நிறைவேற்றியதாகவும் கூறுகின்றனர். இக்கோயிலுக்கு நீண்ட வரலாறும் உள்ளதாகவும் குறிப்பிடுகின்றனர்.

இக்கோயிலின் அமைப்பு ஏழுமலைகளில் ஒன்றின் மீது கதிர்காம கந்தனாகவும் காட்சி கொடுத்து வள்ளியை மணம் புரிந்ததைக் குறிக்கும் முகமாக அமைகிறது. இக்கோயில் முக்கால் ஏக்கர் நிலப்பரப்பும் சுற்றுமதில் சுவர் 6 அடி உயரத்தில் செங்கட்டியால் கட்டப்பட்டது. கணபதிக்கும் தெய்வானைக்கும் தனித்தனிக் கோயில்கள் உண்டு. பக்கத்தில் அழகிய அரச மரமும் அமைந்துள்ளது. தெற்கேயுள்ள பிரதான வாசல் வில் போன்ற வளைந்த அலங்கார முகப்பையும் கொண்டது இக்கோயில். கருவறையில் ஆதிமூல அறைக்குள் பக்தர்கள் யாரும் செல்ல முடியாது. திரையால் மூடி மறைக்கப்பட்டுள்ளது. காற்றே வெளிச்சமோ உட்புகாத முறையில் சாளரமோ இல்லாமல் கட்டப்பட்டுள்ளது. பூசகர்கள் மட்டுமே செல்லமுடியும். கதிர்காமக் கோயில் வருடாந்திர திருவிழாவின் போது தாமிரத்திலும், தங்கத்தட்டில் எழுதப்பட்ட பரம ரகசியமான மந்திர சக்தி வாய்ந்த யந்திரத்தைக் கொண்டே வெண்துகிலால் மூடிப்போட்டு யானை சுமந்த வலம் வரும் என்பதாகும். தீர்த்தப் பெருவிழாவும் நடைபெறும். அதனைத் தொடர்ந்து ஆடி அமாவாசையிலும், கார்த்திகை மாதத்தில் நடைபெறும் தீபத் திருவிழாவும் சிறப்பாகக் கொண்டாடப்படும். அருணகிரிநாதர் இத்தலத்தினை வணங்கி வழிப்பட்டு 25க்கு மேற்பட்ட திருப்புகழ் மாலைகளைப் பாடியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது.

**கல்லடி திருச்செந்தூர் முருகன் ஆலயம்**

ஈழத்து திருச்செந்தூர் என்று அழைக்கப்படும் மட்டக்களப்பு, கல்லடி திருச்செந்தூர் முருகன் ஆலயம். கிழக்கிலங்கையின் நீண்ட வரலாற்றினைக் கொண்ட இந்த ஆலயமானது மகாதுறவி சுவாமி ஓங்காரனந்தா சரஸ்வதி அவர்களால் உருவாக்கப்பட்டு ஒரு சித்த பீடமாக அடியார்க்கு அருள்பாலித்து வருகிறது. இலங்கையில் ஆகம முறைப்படி அமைக்கப்பட்ட ஆலயம் ஒன்றில் தமிழ் முறையில் வேதங்கள் ஓதப்பட்ட பூசைகள் செய்யும் ஆலயமாகவும் விளங்கி வருகிறது. இங்கு நடக்கும் திருவிழாக்கள் வருடாவருடம் நடக்கக்கூடியது. ஆண்டுதோறும் சித்திரை மாதம் திருவிழா 10 நாட்கள் நடக்கும். இதில் தேர் உற்சவம் மிகவும் சிறப்பு வாய்ந்ததாக அமையும். குதிரைகள் பூட்டப்பட்ட சித்திரைத் தேரைப் பெண் அடியார்கள் ஒருபுறமாகவும் ஆண் அடியார்கள் ஒருபுறமாகவும் வடம்பிடித்து இழுத்துவர முருகனின் வீதியுலா காட்சி நடைபெறுவது இக்கோயிலின் சிறப்புகளாகும்.

**சிதம்பரபுரம் பழனி முருகன்**

அறுபடை வீடுகளில் வவுனியாவில் உள்ள சிதம்பரபுரத்தில் அமைந்துள்ள பழனி முருகன் சிறப்பு வாய்ந்த தலமாகும். வடமாகாணத்தில் மிக உயரமான குன்றின் மீது அமைந்தது. கீழ்மட்டத்திலிருந்து 1500 அடிக்கு மேல் இவ்வாலயம் அமைந்துள்ளது. 420 படிகளை கொண்ட இந்த ஆலய யாத்திரிகம் சிறப்பு வாய்ந்ததாக விளங்குகிறது. இங்கு மூலிகைகளும் நல்ல செம்மை வாய்ந்த மலையாக திகழ்கிறது. அங்குள்ள விறகுகளைக் கல்பாறையில் வைத்து பொங்கல் வைத்து வழிபடுவது உண்டு. இக்கோயில் திருவிழாக்கள், தை மாதம் நடக்கும் தை பூசம், ஆடி அமாவாசை என பலவிதமான விழாக்கள் நடைபெறும். இவ்வாலயத்தில் சூரசம்கார நிகழ்வுகள் நடப்பது மிகவும் முக்கியமான ஒன்றாகத் திகழ்கிறது. சூரபத்மன் வதை படலம் மற்றும் முருகனின் பெருமைகள் இத்திருத்தலத்தில் நடைபெறும் என்பதாகும்.

**திருப்படை ஆலயம்**

கிழக்கிலங்கையின் மட்டக்களப்புத் தேசத்தை ஆண்ட சிற்றரசர்கள் கண்டி மன்னர்களும் புரக்கப்பட்ட சைவக் கோயில் ஆகும். பொதுவாகக் கூறப்படும் ஏழு திருப்படைக் கோயில்களில் தான்தோன்றீச்சரம் தவிர்த்த ஆறுமுகன் கோயில்கள் ஆகும். 'படை' என்பது படைவீட்டைக் குறிக்கிறது. திருப்படைக் கோயில்கள் பெரும்பாலானவை மூலவராக 'வேலையே' கொண்டிருக்கிறது. அவற்றில் பல "சித்திரவேலாயுத சுவாமி" ஆலயமாக குறிப்பிடத்தக்கது.

**ஏழுதிருப்படைக் கோயில்கள்**

திருக்கோயில், சித்திர வேலாயுத சுவாமி ஆலயம், கொக்கட்டிச் சோலை தான் தோன்றீச்சரம், கோயிற்போரதீவு சித்திர வேலாயுத சுவாமி ஆலயம், மாண்டூர் கந்தசுவாமி கோயில், வெருகலம்பதி சித்திர வேலாயுத சுவாமி கோயில், சித்தாண்டி சித்திர வேலாயுத சுவாமி கோயில், உகந்தை

முருகன் கோயில் என மேற்கூடிய பட்டியலில் முதல் மூன்று ஆலயங்களுமே 'மாகோன் வகுத்த வன்னிமை'ப்படி வழிபாட்டு நடைமுறைகளைக் கொண்டிருப்பதால் அவை மட்டுமே திருப்படைக் கோயில்கள் என்று கூறுகின்றனர். உகந்தை தவர்ந்த ஏனைய ஆறும் பண்டிதர் வீசி கந்தையாவால் திருப்படைக் கோயில்களாக வகைப்படுத்தப்பட்டு சிறப்புப் பெறுகின்றன.

உகந்தை ஸ்ரீ முருகன் கோயில்

இலங்கையில் காணப்படும் உகந்தை ஸ்ரீ முருகன் கோயில் ஆகும். உகந்தை அம்பாறை மாவட்டத்தில் கடற்கரை மற்றும் காட்டுப்பகுதியில் அமைந்துள்ள சிறிய கிராமம். இப்பகுதி உகந்தை மலை வேலாயுத சுவாமி கோயில் மற்றும் நீர்ச்சறுக்கு என்பவற்றால் நன்கு அறியப்படும். கதிர்காமம் செல்லும் யாத்திரிகர்கள் வழியில் இங்குள்ள கோயிலில் தங்கிச் செல்வர். இக்கோயில் கொத்துப்பந்தரின் கீழ்முத்துக்குமரன் வீற்றிருந்த இத்தலத்தில் யாழ்ப்பாணத்து மார்க்கண்டு என்னும் வணிகர் 1885 ஆம் ஆண்டு புதிய கோயிலை அமைத்தார் என்று வரலாறு கூறுகிறது. கதிர்காம விழாக்காலத்தை யொட்டியே இங்குத் திருவிழா முன்னெடுக்கப்படும். உகந்தைத் திருமுருகன் ஆலயத்தில் விருட்சம் வெள்ளை நாவல் மரம். ஆலயம் அருகேயுள்ள இரு குன்றுகளில் வள்ளியம்மனும் வேற்சாமியும் கோயில் கொண்டுள்ளனர். இவ்விரு குன்றுகளிலும் அமைந்துள்ள ஏழு நீர்ச்சுனைகளிலும் மூழ்கி நீராடினால் புண்ணியம் என நம்புகின்றனர். முருகன் திருவிழாக்காலங்களில் வள்ளியம்மனைத் திருட்டுத்தனமாக சந்திக்கும்"மலைத் திருவிழா" சிறப்புமிக்க விழாவாக அமைகின்றது. ஈழத்தைப் பொறுத்தவரை சிங்களவரும் தமிழரும் முருகனை தரிசிப்பது கதிர்காமமும் உகந்தை ஸ்ரீ முருகன் ஆலயமும் ஆகும். இந்த அனைத்துச் சிறப்புகளையும் கொண்டதாக அமைவது இவ்வாலயம்.

முடிவுரை

'அறுபடை வீடு' என்ற தொடர் தமிழ்நாட்டில் தோன்றியது. அதையொட்டியே இலங்கையிலும் அப்பெயர் உருவாயிற்று. முருகனை வழிபடும் 'ஆறு' தலங்கள் அறுபடை வீடு என இலங்கையிலும் உருவாக்கப்பட்டுள்ளன. அனைத்துத் தலங்களும் மலையின்கண் அமைந்துள்ளன. காவடி எடுத்தல் முதலான சிறப்பு வழிபாடுகள் இலங்கையிலும் நடைபெறுகின்றன. கோவில் அமைப்பு மட்டும் தமிழகத்திலிருந்து சிறிது வேறுபட்டுக் காணப்படுகிறது. திருமுருகாற்றுப்படையைப் போல (இலங்கை) முருகன் திருத்தலங்களைப் பாடும் நூல்கள் எழுந்துள்ளன. சமயப் பரவல் தமிழகத்தைப் போலவே நிகழ்ந்துள்ளது. பூசை முதலானவை தமிழகத்தைப் போலவே நிகழ்கின்றன. காலந்தோறும் தமிழர் சமய வரலாற்றை நிறுவுவனவாய் அறுபடை வீடுகள் காணப்படுகின்றன.

# திருவகுப்பு

முனைவர் இரா. மணிமேகலை
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை
கொங்கு நாடு கலை அறிவியல் கல்லூரி
கோவை – 641029

முருகப்பெருமானை முழுமுதற் கடவுளாய் வழிபட்டுப் பேறு பெற்ற மெய்ஞ்ஞானி அருணகிரிநாதர் ஆவார். தமிழ் மொழியில் வண்ணப்பாடல்கள் இவரால் பெரும் பொலிவு பெற்றன. திருவண்ணாமலையில் பிறந்தவர் என்றும் பிரபுட தேவராஜன் ஆட்சிக்காலமாகிய கி.பி15 இல் வாழ்ந்தவர் என்பதும் இவரது பாடல்களால் அறிய வருகின்றது. முத்தமிழ் வல்லவராகிய அருணகிரிநாதர் முருகப்பெருமானைப் பல்விதமான கவிதைகளில் பாடி மகிழ வேண்டும் என்ற பேராவல் கொண்டவர். இவரது பாக்களின் சந்த அழகு கண்டு கற்றோர்கள் இவரைச் *சந்தப் பாவலப் பெருமான்* என்று போற்றி மகிழ்கின்றனர். தமது முந்து தமிழ் மாலைப் பாடல்களினால் செந்தமிழ்க் கந்தனைப் போற்றும் அருணகிரிநாதர் ஞானநிலையில் நின்று பாடிய பலவகைச் சந்தப் பாடல்களையும் கற்றவர் கேட்டவர் உள்ளம் உருக்கும் தகையனவாகும்.

*பக்தர் கணப்ரிய நடித்திடும் பட்சி நடத்திய குகப்பூர்வ*
*பட்சிம தட்சண உத்திர திக்குள பக்தர்கள் அற்புதம் எனவோதும்*
*சித்ரகவித்துவ சத்த மிகுந்த திருப்புகழைச் சிறிது அடியேனும்*
*செப்பென வைத்துலகில் பரவ தெரிசித்த அனுக்கிரகம் மறவேனே*

என்று தாம் வாழ்ந்த காலத்திலேயே தமது பாடல்கள் நால்திசையும் பரவிச் செல்வாக்குடன் திகழ்ந்தமையைக் கூறுகின்றார். அருணகிரிநாதரின் புகழ் நாடெங்கும் பரவலாயிற்று. பெருந்தவ முனிவராகிய அருணகிரிநாதப் பெருமான் படைத்த நூல்கள் திருப்புகழ், கந்தரந்தாதிஈ கந்தரலங்காரம், திருவகுப்பு, கந்தரனுபூதி ஆகியனவாகும். நால்வகைக் கவி இயற்றுவதிலும் அருணகிரிநாதப் பெருமான் வல்லமை பெற்றவராவார். ஆதனால் நாற்கவிராஜர் என்று போற்றப்படுகிறார். அவர் இயற்றிய திருப்புகழ்ப் பாடல்களில் கிடைக்கப்பெற்று அச்சேறியுள்ளன 1307 பாக்களாகும். செந்தமிழ்ச் சந்தப்பாடல்களாகிய அப்பாக்களில் அமைந்துள்ள சந்தவகை 1008 என்று அறிஞர் பெருமக்கள் குறிப்பர். சொல்லமைப்பும் கவியழகும் நடைச்சிறப்பும் அருணகிரிநாதப் பெருமானின் பாடல்களில் கொஞ்சி விளையாடுகின்றன. மிகக் கடினமான செய்யுள் வகைகளும் எளிதில் அருள வல்ல வரகவியாகிய அருணைத் தவமுனிவர் முருகவேளிடம் வேண்டும் வரம் யாதெனில்,

*சகல துக்கமும் அறச் சகல சற்குணம் வரத்*
*தரணியிற் புகழ்பெறத் தகைமை பெற்றுனது பொற்*
*சரணம் எப்பொழுதும் நட்பொடு நினைத்திட அருள் தருவாயே*

என்பதாகும். அருணைப் பெருமானின் வேண்டுதலைக் கேட்ட ஆறுமுகப் பெருமான் சம்பந்தப் பெருமானது தாக்கு, அப்பரது சொல்லுறுதி, சுந்தரரது நயம், மணிவாசகரது கனிவு, நக்கீரரது நோக்கு என்று முன்னோர்களின் திறன்களையெல்லாம் ஒருங்கே அவர்க்கு அருளினான் எனலாம்.

திருவகுப்பு

ஒரே பொருளைப் பலவிதமாக வகுத்துத் தொகுத்துச் சொல்லும் நூல் வகைக்கு வகுப்பு என்று பெயராகும். அருணகிரிநாதர் இருபத்தைந்து வகுப்புகள் பாடியருளியுள்ளார். இவற்றுள் முதல் பதினெட்டுதான் அருணகிரிநாதரின் வாக்கு என்பது அறிஞர்களின் கருத்தாகும். மதுரைத் தலத்தில் முருகப்பெருமானை வணங்கிய போது அவரிடம் விண்ணப்பித்தார் அருணகிரிநாதர்.

*வரிசைதரும் அதுபாடி வளமொடு செந்தமிழ்*
*உரைசெய் அன்பரும் மகிழ வரங்களும் அருள்வாயே*

என்று வேண்டினார். பல்விதமான ஆசுகவி முதலாக முத்தமிழின் வளம் கொண்டு முருகவேளைப் பாட வேண்டும் என்ற ஆசை மட்டுமே அவரது உள்ளத்தில் இருந்தது. திருப்புகழ், அநுபூதி, அலங்காரம் எனும் நூல்களில் உலகியல் மயக்குகளில் இருந்து காத்தருள வேண்டும் வேண்டுதல்களும் இருக்கும். ஆனால் திருவகுப்பு சிவஞானத்தின் உச்சியில் நின்று பாடியதாக உள்ளது. மானுடயாக்கை நீத்து கிளி ரூபத்தில் இருந்து பாடியது திருவகுப்பு என்று கூறுவர்.

*ஏழையின் இரட்டை வினையாயதொருடற் சிறையில்*
*இராமல் விடுவித்தருள் நியாயக்காரனும்*

என்று வேளைக்காரன் வகுப்பில் பாடுகின்றார். கிளிரூபம் பெற்ற பிறகு திருத்தணிகையைக் குறித்துப் பல வகுப்புகளிலும் பாடுகின்றார். எனவே திருத்தணிகேசன் திருக்கரத்தில் தங்கி திருவகுப்புகள் பாடியிருப்பார் என்று தணிகைமணி சு.செங்கல்வராய பிள்ளை கூறுகின்றார். திருப்புகழைப் போலச் சந்தப்பாவால் அமைந்த திருவகுப்பு முருகப்பெருமானின் சீர்பாதப்பெருமை, அடியார் பெருமை, வேலாயுதத்தின் பெருமை, உபதேசப் பெருமை, பிரசாதப் பெருமை, கடைக்கண்நோக்கப் பெருமை, திருக்கரங்களின் சிறப்பு என்று வகுத்துக் கொண்டு பாடுவதால் திருவகுப்பு என்னும் பெயர் பெற்றது. திருப்புகழிலும் கந்தரந்தாதியிலும் தமிழாகரராகிய திருஞானசம்பந்தப் பெருமானை முருகப் பெருமானாகவே கருதி அபர சுப்ரமணியர்களில் ஒருவராக வைத்துப் பாடியுள்ள அருணகிரிநாதரிடம் கந்தரனுபூதி, கந்தரலங்காரம், திருவகுப்பு ஆகிய நூல்களில் இக்கொள்கைக் காணப்படுவதில்லை.

நோய்க்கு மருந்து

உலகியல் வாழ்வில் ஒருவர்க்கு நோய் ஏற்பட்டு விட்டால் மூன்று வகையான மருத்துவ சிகிச்சைகளை மேற்கொள்வர். அவையாவன மணி

மந்திரம் ஔஷதம் என்பனவாகும். மணி என்பது நோயாளியின் உடலில் ரட்சை, தாயத்து, மணிகள் போன்றவற்றைத் தரித்துக் கொள்ளுதல் ஆகும். மந்திரமாவது பெரியோர்களின் அருட்பாக்களைப் பாடுவது இறைநாமத்தைச் செபிப்பது என்பதாகும். ஔஷதம் என்பது நோய் தீர்வதற்கான மருந்துகள் கஷாயங்களை உட்கொள்வதாகும். இம்மூன்று முறைகளே உலகினரால் கைகொள்ளப்படும் சிகிச்சை முறைகளாகும். அதைப் போலவே திருவகுப்பு உலகியல் துன்பமுழன்று கலங்கிய மாந்தர்களுக்கு அருளியல் வாழ்வுக்கு வழியருள வல்லதாக உள்ளது.

**மணி**

பிறவி நோயை அகற்றுவதில் மணியாகத் திகழ்வது சீர்பாத வகுப்பாகும். இவ்வகுப்பு மிகவும் சிறப்பு வாய்ந்தது. முருகனின் சீர்பாதங்களைப் புகழ்வது இத்திருவகுப்பு.

*"நின்னிற் சிறந்த நின்தாள் இணையவை"*

என்று பரிபாடல் முருகனின் திருவடிப் பெருமையை உணர்த்துகிறது. மதுரைத் திருப்புகழில் வேண்டியதைப் போலவே திருவடியைப் பாடுகின்ற முத்தமிழைப் பெற வேண்டி

*நின்பதயுக ப்ரசித்தி என்பன வகுத்துரைக்க நின்பணி*
*தமிழ் த்ரயத்தை அருள்வாயே* (திருப்புகழ் 1233)

என்றும் பாடுவதினால் அறிய முடிகிறது. கடலிடத்தே நூறு கோடி சூரியர்கள் உதயமாவது போல யுகாந்த காலத்தில் மயில் மீது தோன்றி சோதி வீசுவது முருகப்பெருமானின் சீர்ப் பாதமேயாகும். சிவயோகத்தினர் தமது ஞானக்கண்ணில் நாடுவதும் பிறவிக் கடலைத் தாண்ட உதவும் தோணியாக இருப்பதும் முருகப்பிரானின் திருவடிகளேயாகும். இறைவனுக்கு உருவம் உண்டு என்றும் இல்லை என்றும் கூறி அலையும் சமயக்கலைகளின் கூச்சல் அடங்க உண்மைப் பொருளை உணர்ந்தவர்களின் அனுபவஞானமாய் விளங்குவதும் முருகவேளின் செந்தாமரையடிகளேயாகும். எனவே முருகப்பெருமானின் வழிவழியடிமை எனும் உரிமை கொண்டுள்ளதான் முழுது உலகும் அறியும் படி மழலை மொழி கொண்டு பாடுகின்ற ஆசுகவி முதலாக அழகிய முந்துதமிழ்க்கவி மாலைகளைச் சூடிக் கொள்வது முருகப்பிரானின் நறுமணம் மிகுந்த சிறந்த திருவடிகளேயாகும்.

**மந்திரம்**

மந்திரக் களஞ்சியமாகத் திகழ்வது அருணகிரிப்பெருமான் அருளிய தேவேந்திர சங்க வகுப்பாகும். இவ்வகுப்பில் அம்பிகையின் அழகுத் திருநாமங்கள் அணிவகுப்பதைப் போல வேறெங்கும் காணவியலாது. முருகப்பெருமானின் திருநாமத்தை மொழிபவர் இவரென ஆராய்ந்தறிந்து அவர்களைத் தேவேந்திரசங்கமும் வணங்கும் என்பது இவ்வகுப்பின் கருத்தாகும். அதாவது அடியார்களைத் தேவரும் வணங்குவர் என்பதாகும்.

ஔஷதம்

வேலின் பெருமையையும் ஆற்றலையும் கூறும் வேல்வகுப்பு பிணிக்கு உட்கொள்ளும் மருந்து போல உதவுகின்றது. புறநோய்களைத் தீர்க்கும் மருந்துகள் போலன்றி அகத்துறு நோயை அகழ்ந்து எடுக்கும் ஞான மருந்தாகும். வேல்வகுப்பின் பெருமைகளை இங்கு விரிவாகக் காண்போம்.

நூறு கோடி உதய சூரியர்களின் ஒளிக்கு நிகராகும். வேலின் ஒளி பன்னிரு சூரியர்களின் ஒளியை உருக்கி வடித்தது போன்ற மாசற்ற பேரொளி கொண்டதாகும். சூரியனின் வெப்ப ஒளியும் சந்திரனின் தண்ணொளியும் வடவைத் தீயின் கடிய ஒளியும் வேலின் ஒளிக்கு முன் பயந்து ஒளிந்து கொள்ளுமாம். வேலின் உக்கிரத்தைக் குறிக்கும் போது சினவடிவேல் , உக்ரவடிவேல் , இடி முழங்கிய வேல்படை, காலபாறுசக்தி என்று அருணகிரிப்பெருமான் கூறுகின்றார். தியானத்துக்குரிய குறியாக இருப்பதும் வேல் ஆகும். அதனால் மெய்ஞான அயில் மந்த்ரவேல் சிவமஞ்செழுத்து என்றும் கூறுகின்றார். படைக்கலமாக இருப்பதன்றி கூற்றை உதைக்கும் கொள்கை கொண்டதாய் வினைப்பகைக்கு எதிரியாய் இருப்பதினால் ஐந்தெழுத்தும் வேலும் ஒன்றாகும்.

வள்ளிப் பிராட்டியின் கண் போலக் கூரியதாய் நீண்டு ஒளிரும் வேல் வள்ளியின் கடைக்கண் பார்வை தருகின்ற பயனைத் தரும். எனவே தணிகை முருகனது வேல் மறச்சிறுமி வள்ளியின் விழிக்கு நிகராகும். ஐராவதம் என்னும் யானையை உடைய இந்திரனுடைய கால்களில் சூரனால் விலங்கு இடப்பட்டது. அந்தக் கால்விலங்கை அராவி எடுத்து நீக்கி அவனுக்கு வரமளித்தது தணிகைக் குகனது வேலாகும். ஒப்பற்ற தமிழ்ப்பாடல்களாகிய திருமுருகாற்றுப்படைக்கு மனம் உருகி நக்கீரர் அடைபட்டிருந்த மலைக் குகையை இடித்துத் தள்ளி வழி திறந்து வெளியேற்றியது. தணிகைக் குகனது வேலாகும்.

பசியினால் வருந்தும் பேய்க் கூட்டங்கள் மெலிவினால் அழுது உணவு வேண்டி முறையிடும். அப்பேய்களுக்கு அசுரர்களின் ரத்தம் , கொழுப்பு, நிணம் உண்ணும் படி அருள் பாலிக்கும் தணிகைக் குகனது வேல். தேவர்கள் மாதவர்கள் இந்திரன் பிரம்மன் திருமால் மனிதர்கள் ஆகியோருக்கு நேரிடும் துன்பத்தையும் சஞ்சித வினைகளையும் சாடுவது வீர வேலாகும். சூரியனும், நிலவும் , வடமுகாக்னியும் முருகனது வேல் ஒளிகண்டு இதன் ஒளி முன் நமது ஒளி எந்த மூலை என்று அஞ்சி ஒளிந்து மறையும். துதித்துப் போற்றும் அடியவர்க்கொருவர் கேடு செய்ய நினைத்தால் அப்பொல்லாதவர்களின் குலத்தையே அடியோடு அழித்துவிடும்.

சொல்லில் அடங்காத பெருமை கொண்ட திருப்புகழை எடுத்து உரைப்பவர்களின் பகைவர்களை அறுத்தெரிய கோபித்துக் கிளம்பி தருமத்தை நிலைநாட்டும். அக்கிரமத்தை அழிக்கும் வடி விக்கிரம வேலாகும். எமன் அகங்காரத்துடன் உயிர் பறிக்க வரும் போது சிவபிரானது திருவடிக்கு

நிகராகத் தணிகை குகனது வேல் உதவும். பூமியில் உள்ள உயிர்க் கூட்டங்கள் மகிழ்ச்சியடையும் அளவுக்கு உண்பொருளை வரவழைக்க வேண்டி வந்தால் திருக்கரத்தில் தங்கியிருக்கும் வேலின் நுனியைச் சற்று அசைத்தாலும் யாவும் விளையும். தனிவழி நடக்கும் அடியார்களின் இடமும் வலமும் முன்பும் பின்பும் தணிகைக் குகனது வேல் காவல் நிற்கும்.

**வேளைக்காரன் வகுப்பு**

வள்ளியம்மையொடு தமது வேளையைப் போக்குபவன் எனக் கூறி முருகன் பெருமையை நியாக்காரன் , அடையாளக்காரன் என்று பாராட்டுவது.

**பெருத்த வசன வகுப்பு**

முருகப்பெருமான் தமக்கு உபதேசித்த மௌனோபதேசத்தின் சிறப்பைக் கூறுவது.

**பூத வேதாள வகுப்பு**

முருகப்பெருமான் சூரன்மகனோடு போர் புரிந்த போர்க்களத்தில் ஆடிய அநேகவித பூத வேதாளங்களின் வருணனையைக் கூறுவது.

**செருகளத்தலகை வகுப்பு, போர்க்களத்து அலகை வகுப்பு**

சூரனை சம்காரம் செய்த போது போர்க்களத்தைப் பாடியது. பரணி நூல்களைப் போன்ற அமைப்பு உள்ளது.

**திருஞான வேழ வகுப்பு**

சிவஞானத்தின் செயலற்ற நிலையைக் கூறுவது.

**திருக்கையில் வழக்கம் வகுப்பு**

திருத்தணிகேசரது புகழைப் படிப்பவர்க்கு அப்பெருமானது திருக்கையால் அளிக்கப்படும் பிரசாதம் பற்றிக் கூறுவது.

**திருவகுப்பின் உள்ளுறைப் பொருள்கள்**

உடற்சிறையை நீக்கி சுத்த வெளியான பாழில் நிலைக்கச் செய்யும். காதி மோதி வாதாடும் சமய வாதிகள் சிதறி ஓட விரட்டும். நெஞ்சக் கல்லை நெகிழ வைத்து பேசா அநுபூதி பிறக்கச் செய்யும். மூவாசைகளும் ஆணவ அழுக்கும் தூளாகிப் போகும். பிறவிக் கடலில் இருந்து கரையேற்றும். போர் புரியும் காம குரோதங்களைச் சிதற அடிக்கும். இருவினைச் சங்கிலியை அறுத்தெறியும். யோகப் பயிற்சியின் இடையில் நேரும் அசதியை விரட்டும். இறைவனின் திருவருளில் பரிபூரணமாக திளைக்கச் செய்யும். சிற்றின்ப நாட்டத்தை ஒழிக்கும். மாயா உலகின் மருட்சியை வெல்லும். சினம் என்னும் தீயை அணைக்க பொறுமை நதியைப் பெருக்கும் அகம் பாவம் என்னும் காட்டு மரத்தை வேரொடு பறித்து சாய்க்கும் ராஜசம் , தாமசம் , சாத்வீகம் எனும் மும்மதில்களை இடித்து நிர்குண நிலையில் வைக்கும். பல மெய் ரகசியங்களை விளக்கும். திருத்தணி மலைக்கு இறையின் திருப்புகழ் பாடுபவர்களுக்கு எல்லா அருளையும் வழங்கி மகிழும்.

## சங்க இலக்கியங்களில் 'வேள்'

சு. மாதுகண்ணன்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 10.

மனிதன் தன் கருத்துக்களை, சிந்தனைகளை, உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கு மொழியைப் பயன்படுத்துகிறான். மொழியின் ஊடே தன் எண்ணங்கள் அனைத்தையும் வெளியிடுகின்றான். தான் விளைவிக்கும் பொருள்களுக்கு அம்மொழியின் வழியே சொற்களைக் கொண்டு பெயரிட்டுப் பயன்படுத்தும் திறனைப்பெற்றுள்ளான். அதனால் ஒரு சொல் இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்ப பல்வேறு பொருள்களை உணர்த்தும் மரபினைப் பெற்றுவிடுகின்றது. சில சொற்கள் குறிப்புப் பொருள் தருவனவாகவும். தனித்து பொருள்தருவனவாகவும், பெரும்பான்மை இணைந்தும் தொடர்ந்தும் நின்று பொருள் தருவனவாகவும் அமைகின்றன. இதனையே 'எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே' என்கிறது தொல்காப்பியம். மேலும் சொல்லிலணக்கத்திற்கு வரையறை செய்யும் தொல்காப்பியர் பெயர், வினை, இடை, உரி என்றும் செய்யுட்களை அமைத்துப் பொருள் தரும் இடங்களில் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடச்சொல் என்று வகைமை நோக்கில் பிரித்து பொருள் தருகிறார். இதன் அடிப்படையில் சங்க இலக்கியங்களில் முருகனைக் குறித்து வரும் இடங்களில் 'வேள்' என்ற சொல் பயின்றுவருகின்றது. எனவே 'வேள்' கூறும் பொருண்மையும், சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள தன்மையையும் எடுத்து இயம்புகிறது இக்கட்டுரை.

### அகராதிகள் தரும் விளக்கம்

அகராதி என்னும் சொல்லை 'லெக்சிகோகிராபி' எனக் குறிப்பர். இது 'Lexico', graphy என்ற இரண்டு சொற்களின் கூட்டுத் தொகையாகும். லெக்சிகோ என்பதற்கு 'சொல்' என்பது பொருளாகும். 'கிராபி' என்பதற்கு எழுதுதல் என்பது பொருளாகும். இதன் அடிப்படையில் 'லெக்சிகோ கிராபி' என்பதற்குச் சொற்களை அகரவரிசைப் படி எழுதுதல் என்பதாகும். மேலும் அகராதி அமைவதற்கு முதன்மையே தொல்காப்பியம் எனலாம். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் உரியியல் '120' சொற்களுக்கும் பொருள் விளக்கம் தருகிறார். மேலும் அதே அதிகாரத்தில் இடையியலிலும் ஒரு சார் சொற்களுக்கு உரிய பொருள்களைக் கூறியுள்ளார். பொருளதிகாரத்திலும் சொற்பொருள் கூறும் முறை அமைந்துள்ளது என்பது புலப்பாடு.

### தமிழ்மொழி அகராதி

'வேள்' என்னும் சொல்லிற்குத் தமிழ்மொழி அகராதி கீழ்கண்டவாறு கூறுகிறது, ஆசை, ஆண்மகன், உபகாரம், குமரன், மண், மன்மதன் என்பது அது.

தமிழ்லெக்சிகன்

'வேள்' என்னும் சொல்லிற்குத் தமிழ்லெக்சிகன் பின்வருமாறு பொருள் தருகிறது, Marriage : கல்யாணம், Desire ; விருப்பம், Kama ; மன்மதன், Skanda ; முருகக்கடவுள், One belonging to the velir class : வேளிர்குலத்தான், Calukya King : சளுக்குவேந்தன், Chief ; சிற்றரசன், Title given by ancient, Tamil kings to velalas ; பண்டைத் தமிழரசரால் வேளாளர் பெற்ற ஒரு சிறப்புரிமைப் பெயர். Illustrious or great man ; hero ; சிறந்த ஆண்மகன், Earth ; மண் என பத்துவகையான பொருண்மையைச் சுட்டுகிறது.

குறுந்தொகையில் 'வேள்'

தலைவியின் உடல்மெலிவு கண்டு தாயானவள் வேலனை அழைத்து வெறியாட்டு எடுக்கிறாள் என்பதைக் கூறுமிடத்தில் "வென்றி நெடுவேள்" (குறுந்.111) என்ற சொல் இடம்பெறுகிறது. முருகக் கடவுளுக்கு உரிய வேலைக் கையில் ஏந்தி, ஆவேசமுற்று ஆடுபவன் வேலன் ஆவான். இவ்வேலன் கையில் ஏந்தி இருக்கும் வேலைக் குறிப்பிடும் இடத்தில் வெற்றியையுடைய நெடிய முருகவேல் என்று பொருள் கூறுகின்றனர். தலைவியின் உடல் மெலிவு இந்த வென்றிநெடுவேலால் வந்தது என்கிறது. இதனை,

*'மென்தோள் நெகிழ்ந்த செல்வன், வேலன்*
*வென்றி நெடுவேள்' என்னும் அன்னையும்*
*அது உணரும் ஆயின்.*

என்ற குறுந்தொகை பாடல் எடுத்துக் கூறுகிறது. வேல் வைத்து ஆடும் ஆட்டத்தை 'வெறியாட்டு' என்பர். முருகனைப் போல வேடம் பூண்டு கையில் வேலேந்தி ஆடும் மலைநாட்டுப் பூசாரி வேலன் எனப்பட்டான். அவன் குறமகளது நோய் முருகனால் வந்ததென்று ஐயுறின், அக்கடவுளைத் திருப்தி செய்ய ஒரு களத்தை அமைத்துப் பூசையிட்டு ஆடிப்பாடி வழிபடுவது வழக்கம். அவன் ஆட அவனைப் பின்பற்றி கானவரும் ஆடுவர் என்று மா.இராசமாணிக்கனார் குறிப்பிடுகிறார். (பத்துப்பாட்டு ஆராய்ச்சி,ப.508) எனவே மலைப் பகுதி மக்கள் 'வேல்' என்ற கருவியைக் கடவுளாகக் கருதினர் என்பது புலப்பாடு.

அகநானூற்றில் 'வேள்'

காமக்கண்ணியார் பாடிய பாடல் ஒன்றில் 'நெடுவேட்' என்ற சொல் இடம் பெறுகிறது. தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் வரவு நீட்டித்தான் தலைவி துன்புற்று உடல் மெலிந்து துன்புறுகிறாள். அத்துன்பத்தினைக் கண்டு தோழி தலைவன் மேல் குறையினைக் கூறி பழிக்கிறாள் என்பதாக அமைந்த பாடலில், பெரிய கைகளையுடைய முருகனுக்கு வெறியாட்டு வழிபாடு செய்தால், இவள் தனக்குற்ற துன்பம் தணியப்பெறுவாள் என்று பெண்கள் கூறுவர். இதனை,

*'படியோர்த் தேய்த்த பல் புகழ்த் தடக்கை*
*நெடுவேட் பேணத் தணிகுவன் இவள்' என*
*முதுவாய்ப் பெண்டிர் அது வாய் கூற,* (அகம்.,பா.22)

என்கிறது அகநானூறு. இதில் வேலன், வெறியாடும் களத்தினை அமைத்து முருகனுடைய வேலிற்கு மாலை சூட்டினான். முருகனைப் பாடி பலியினையும் கொடுத்தான், சிவந்த தினையினைக் குருதியுடன் கலந்து தூவி முருகனை வழிபட்டான் என்று குறிப்பிடுகின்றனர்.(ப.65)

களிற்றுயானை நிரையில் இடம்பெறும் மாமூலனார் பாடிய பாடலில் தலைவனைப் பிரிந்து துன்புறும் தலைவியை நோக்கி 'நம்மைப் பிரியேம் என்று சொல்லிய சொல்லைத் தலைவர் மறந்தனரோ' எனக் கூறித் தன் ஆற்றாமையைப் புலப்படுத்துகிறது. இதில், 'முருகன் நற்போர் நெடுவேள் ஆவி' (அகம்.1) என்ற வரிகளில் 'ஆவி' என்பது பொதினி மலைக்குரியவன் 'நெடுவேள் ஆவி' என்றதனால் முருகனைப்போல் நல்ல வெற்றிச் சிறப்பு மிக்கவன் என்று பொருள் தருகின்றனர். இங்கு நெடுவேள் முருகனைக் குறித்து இடம்பெறுகிறது. மேலும் முழவினைப் போன்ற திண்ணிய தோளினையும் பெருந்தகுதிப் பாட்டையும் முருகனைப் போன்ற போர் ஆற்றல் உடையவன் என்று கூறும் இடத்தில் இவை இடம் பெறுகிறது.(அகம்.61) மலையின் தலைவனாக வேல் கருவியைக் கொண்டவன் ஆற்றல் மிக்கவன் என்று மக்கள் கருதுகின்றனர். இதேபோன்று,

*வேறுபல் குரல ஒருதூக்கு இன்இயம்*
*காடுகெழு நெடுவேட் பாடுகொளைக்கு ஏற்ப,*
*அணங்கு அயர் வியன்களம் பொலிய, பையத்*
*தூங்குதல் புரிந்தனர்.* (அகம்.382)

என்பதில் குறிஞ்சி நிலக் கடவுளான முருகனைப் பாடும் பாட்டிற்குப் பொருந்த வெறியாட்டு அயர்கின்ற அகன்ற தளம் அழகுறுமாறு, நம் அன்னையர் அனைவரும் வெறியாடுவதற்கு விரும்பினர் என்பதில் 'நெடுவேல்' என்ற சொல் இடம்பெறுகிறது. இயற்கை அழகைக் கண்டு மக்கள் வேலினைக் கண்டு வணங்கினர் ஆகையால் குறிஞ்சி நிலப்பகுதியில் எழுந்த இலக்கியங்கள் இச்சொல்லை மிகுதியாகக் கையாண்டு உள்ளது என்பதை இங்கு உணரமுடிகிறது.

**பதிற்றுப்பத்தில் 'வேள்'**

பதிற்றுப்பத்தில் இரண்டாம் பத்து பாடிய குமட்டூர்க் கண்ணனார் பாடிய பாடலில் இச்சொல் இடம்பெறுகிறது. சேரலாதனுடைய வீரச்செயல்களை விளக்குவதற்கு அமைந்த பாடலில் வேள் பற்றிய தகவல் இடம்பெறுகிறது.

*கடுஞ்சின விறல் வேள் களிறு ஊர்ந்தாங்கு*
*செவ்வாய் எஃகம் விலங்குநர் அறுப்ப,*
*அரு நிறம் திறந்த புண்உமிழ் குருதியின்*
*மணிநிற இருங்கழி நீர்நிறம் பெயர்ந்து* (பதிற்.2ம் பத்து)

என்ற அடிகள் கூற விழைவது, சிவந்த முனையினையுடைய வேல் எதிரே நின்று போர் செய்யும் பகைவரின் உடம்புகளைச் சென்று தைக்கும் பிறரால் துளைத்தற்கரிய மார்பினைத் துளைத்ததினால் உண்டான புண்கள் சிந்திய

இரத்தத்தினால் கழியிலுள்ள நீலமணி போன்ற நீர் தன் நீல நிறம் மாறிச் சிவப்பாயிற்று இதில் வேலின் தன்மை எடுத்துக் கூறப்பட்டுள்ளது.

பத்துப்பாட்டில் 'வேள்'

சங்க இலக்கியமான எட்டுத்தொகையை அடுத்து அமைந்துள்ள பத்துப்பாட்டில் முருகனைப் பற்றி ஆற்றுப்படை நூல்கள் பாடுகின்றன. "கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி" என்பது தொல்காப்பியம் எனவே தொல்காப்பியக் காலத்திற்கு முன்னமே 'ஆற்றுப்படை' இடம்பெற்றமையை அறியமுடிகிறது. பத்துப்பாட்டு ஆற்றுப்படை பாடல்கள் மட்டுமல்லாது பிற பாடல்களும் கொண்டுள்ளது. முருகன் அருள் புரியும் முறை, பழமுதிர்ச்சோலை வளம், முருகனை வழிபடும் மகளிர், ஆடுமகளிர், முருகனது பெருமைகள், ஆறுமுகச் செயல்கள், முருகனை வழிபடும் முனிவர் ஒழுக்கம், குன்றக்குரவை, பாடுமகளிர் நிலைகள், ஆற்றுப்படுத்தும் முறை, முருகன் எழுந்தருளியுள்ள இடங்கள், முருகன் சூரனை வென்றமை என அனைத்தும் இதில் இடம்பெற்றுள்ளன. அவ்வகையில் பெரும்பாணற்றுப்படையில் 'வேள்' என்ற சொற்கள் இடம்பெறுகின்றன. இதனைக்,

*கடம்புஅமர் நெடுவேள் அன்ன, மீளி,*
*உடம்பிடித் தடக்கை ஓடா வம்பலர்* (பெரும்.,பா.75)

என்ற இவ்வரிகள், கடம்பின்கண் அமர்ந்த முருகனை ஒத்த வீரத்தையும் வேலேந்திய கையினையும் கொண்டவர்கள் என்று கூறும் இடத்தில் 'நெடுவேள்' என்ற சொல் முருகனைக் கூறுகிறது. இன்று அச்சமில்லாத வீரத்தைக் கூறும்பொழுது மலையில் வேல் ஏந்தி இருக்கும் தங்கள் தலைவனோடு ஒப்பிட்டு வணிகர்கள் காட்டு வழியே செல்லும் பொழுது அவர்களுடைய தோற்றம் கூறுமிடத்திலும் இவ்வாறு கூறப்பட்டுள்ளது.

*கார் மலர்க் குறிஞ்சி சூடி, கடம்பின்*
*சீர் மிகு நெடுவேட் பேணி, தழூஉப் பிணையூஉ*
*மன்று தொறும் நின்ற குரவை* (மது.,பா.615)

என்ற மதுரைக்காஞ்சி பாடலில் வேலன் வெறியாடும் நிகழ்ச்சியும் குரவைக் கூத்தும் கூறப்பட்டுள்ளன. முருகனுக்கு உரிய வேலினை ஏந்தி வழிபடுபவன் வேலன். இவ்வேலன் தன்னை முருகனாகவே நினைத்துக்கொண்டு வெறியாட்டு ஆடுகின்றான். ஆடிக்கொண்டே கழங்கு வைத்துத் தலைவியின் வருத்தம் முருகனால் வந்தது எனக் கூறி வெறியாடுவான். இதே போன்று பட்டினப்பாலையில் வெறியாடும் நிகழ்ச்சி இடம்பெறுகிறது.

*சேறி தொடி முன்கை கூப்பி, செவ்வேள்*
*வெறி ஆடு மகளிரொடு செறியத் தாஅய்,* (பட்.,பா.154)

இதில் 'செவ்வேள்' என்ற சொல் வெறியாடும் மகளிர் வேலினை வணங்குவதைக் குறிப்படுகிறது. வேலினைக் குறிக்கும் இச்சொல் முருகனைக் குறித்தது என்று பொருள் கொள்வர்.

*கேள் இனி, வேளை நீ முன்னிய திசையே* (மலை., பா.94)
*மான விறல்வேள் வயிரியம் எனினே* (மலை.,பா.164)

மேற்கண்ட மலைபடுகடாம் பாடலில் வேள், விறல்வேள் என்ற சொற்கள் இடம்பெறுகின்றன. இச்சொற்கள் முருகனை வெளிப்படுத்துவதாக அமைகிறது. மலைப்பகுதியில் வசிக்கும் மக்கள் தங்கள் போர்த் தொழிலுக்கு முருகன் வைத்திருக்கும் வேலினை வணங்குவர். மலைபடுகடாம் பாடலில் நன்னனின் சிறப்பினையும் போர்திறமையையும் கூறும் இடத்தில் இவை இடம்பெறுகிறது.

முடிவுரை

சங்க இலக்கியங்களில் முருகன் குறித்த தகவல்கள் நிரம்ப கிடைக்கின்றன. முருகனைக் குறிப்பிடும் இடத்தில் வேள் என்ற சொல் இடம்பெறுகின்றன. இச்சொல் பல பொருண்மையில் பயன்படுத்தப்பட்டுள்ளது. பெரும்பான்மை இடங்களில் முருகனைக் குறித்து வருகின்றது. மலைப் பகுதியில் வசிக்கும் மலைவாழ் மக்கள் இயற்கை அழகைக் கண்டு 'முருகு' என்றழைக்கின்றனர். மலைப்பகுதி என்பதால் வேலினை ஆயுதமாகப் பயன்படுத்துவது மட்டுமல்லாமல் அதை தெய்வமாக வழிபட்டு வந்தனர். வேலினை நட்டு வழிபடும் வழக்கம் இதன்வழி வெளிப்படுவது புலப்பாடு. சங்க இலக்கியங்களான எட்டுத்தொகை பாடல்களில் தலைவியின் வருத்தம் வெளிப்படும் இடங்களில் வெறியாட்டு ஆடும் தகவல்கள் கிடைக்கின்றன. இவ்வகை வெறியாடுதலில் வேலினைக் கொண்டு ஆடும் வேலன் குறித்த செய்திகள் இடம்பெறுகின்றன. இது போன்ற இடங்களில் நெடுவேட், செவ்வேள், விறல்வேள், வேள் என்ற சொற்கள் பரவலாகக் காணப்படுகின்றது.

# கந்தரலங்காரத்தில் உபதேச வழி மனிதநேயம்

செ. மாலதி
முனைவர் பட்ட ஆய்வாளர்
அகராதியியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

அன்பின் ஐந்திணையில் தலையாகிய குறிஞ்சி நிலத்தின் கடவுள் முருகப் பெருமான் ஆவார். இத்தெய்வத்தினை அதிகம் வழிபடுபவர்கள் நம் தமிழர்கள். தமிழ்மொழி மீது மிகுந்த ஈடுபாடு கொண்ட கடவுளாக இவர் திகழ்வதால் தமிழ்க் கடவுள் என்றும் அழைக்கப்படுகின்றார். பண்டைக் காலத்தில் கௌமாரம் எனும் தனித்த மதமாக இருந்த முருகன் வழிபாடு பின்பு சைவ சமயத்துடன் இணைந்தது. இந்நெறிப்பாட்டுடன் முருகன் மீது தீராப் பக்திக்கொண்ட பல சான்றோர்கள் இனிய தமிழில் பல அற்புத நூல்களைப் படைத்துள்ளார்கள். இச்சான்றோர்களில் அருணகிரிநாதரும் ஒருவராவர்.

*"முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பான் முருகன்"* என்றவரும் இவராவார். இதுபோன்று ஆயிரக்கணக்கான பாடல்களைப் பல்வேறு இசைச் சந்தங்களில் பாடியுள்ளார். இவரின் பாடல்கள் மிகுந்த சொல்லழகும், கருத்தாழமும் இசைத்தானச் செறிவும் நிறைந்து காணப்படுவனவாகும். திருப்புகழ் போன்ற பல நூல்களைப் படைத்துள்ளார். இவருடைய நூல்கள் தேவாரம், திருவாசகம் போன்று மந்திர நூலாகவும், நாள்தோறும் இறைவனைப் போற்றிப் பாடப்படும் நூலாகவும் திகழ்கின்றது. இந்நெறியில் இயற்றியுள்ள கந்தரலங்காரத்தில் பல்வேறு உட்தலைப்புகளுடன் 107 பாடல்கள் கொண்டு அமையப்பெற்றுள்ளது. இப்பாடல்கள் அனைத்தும் முருகப் பெருமானின் பக்திநெறி மார்க்கத்தினைப் பற்றி உபதேசிப்பதாகும். இதோடுமட்டுமல்லாமல் ஒரு மனிதன் இவ்வுலகில் எவ்வாறு வாழவேண்டும் என்ற மனிதநேயக் கோட்பாட்டினைப் பற்றியும் எடுத்துரைக்கப்படுகிறது. பக்திநெறியில் மனிதநேயம் என்ற நோக்கில் இக்கட்டுரை அமையப்பெறுகிறது.

**உபதேசம்**

உபதேசம் என்பது நமக்குள்ளே மறைந்திருக்கும் ஓர் அற்புத இறை ஞானத்தால் மற்றவர்களுக்கு ஏற்படும் இன்ப துன்பங்களில், குறிப்பாக ஏழை எளியவர்களின் வாழ்வினில் நாம் மனதார செய்யும் உதவிகளே சிறந்த உபதேசமாகும். *"கடவுளுக்குச் செய்தால் ஏழைகளுக்குச் சென்று சேராது ஏழைகளுக்குச் செய்தால் ஆண்டவனுக்குச் சென்று சேரும்"* என்கிறார் திருமூலர். எந்தவிதமான பிரதிபலனையும் எதிர்ப்பார்க்காமல் மனிதருக்குச் செய்யப்படும் உதவியானது புண்ணியத்தில் சேருகின்றது இந்நிலையில் செயல்படுவதே சிறந்த உபதேசமாகும். உபதேசம் பற்றிக் கந்தரலங்காரத்தில் பத்தொன்பது பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

இப்பாடல்களில் மனிதப் பிறவியில் நாம் எப்படி வாழவேண்டும் என்பதற்கான பலவிதமான நெறிமுறைகளை அருணகிரிநாதர் வகுத்துள்ளார். இவர் பக்தியுடன் இருந்தால் மட்டும் போதாது பக்தியுடன் கூடிய மனிதத்தன்மையும் நம்மிடம் இருக்கவேண்டும் என்ற கொள்கை உடையவராகத் திகழ்கிறார். நாம் இவ்வுலகில் எப்படியெல்லாம் இருக்க வேண்டும் என்பதைப் பற்றிக் கீழ்க்கண்ட பாடல்கள் மூலம் உணர்த்தப்பட்டுள்ளன.

பிறவியின்றி வாழ்தல்

உலகில் எத்தனையோ உயிரினங்கள் பிறந்து வாழ்கின்றன. அவ்உயிரினங்கள் அனைத்திலும் உயர்ந்தது மானுடப்பிறவி. இம்மானுடப் பிறவியை அடைய நாம் புண்ணியம் செய்திருக்க வேண்டும். *"அரிது அரிது மானிடராய் பிறத்தல் அரிது"* என்று அன்றே அவ்வையார் பாடியுள்ளார். இப்பிறவியில் மனிதன் எவ்வாறு செயல்பட்டால் பிறவியின்றி வாழலாம் என்பதனைப் பற்றி அருணகிரிநாதர் பாடல் வழி விளக்கப்படுகின்றது.

*அழித்துப் பிறக்கவொட் டாவயில் வேலன் கவியையன்பால்*
*எழுத்துப் பிழையறக் கற்கின்றி லீரெரி மூண்டதென்ன*
*விழித்துப் புகையெழப் பொங்குவெங் கூற்றன் விடுங்கயிற்றாற்*
*கழுத்திற் சுருக்கிட் டிழுக்குமன் றோகவி கற்கின்றதே* (பாடல் 2)

மனிதப் பிறவியில் ஏற்படக்கூடிய ஆசையைப் பற்றை ஒழிப்பதற்கும், எப்பிறவியும் இன்றி வாழ்வதற்கும் முருகப் பெருமானின் திருப்புகழ்ப் பாடல்களை அன்புடன் ஏற்று, உள்ளங்குளிரப் பாடி எழுத்துப் பிழையின்றில் கற்றல் வேண்டும். இவ்வாறின்றி இருந்தாலும் பரவாயில்லை. நம்மீது கோபித்து வருகின்ற கொடியவராகிய எமதர்மராசன் விடும் பாசக் கயிற்றினை நம் கழுத்தில் சுருக்குமாட்டி இழுக்கின்ற அத்தினதிலாவது முருகனின் தோத்திரப் பாடல்களைப் பாடி மகிழுங்கள். முருகன் அருள்புரிந்து ஆசி அளிப்பார்.

*பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்* (குறள்.10)

என்பர் திருவள்ளுவர். எப்பிறவியும் இன்றி வாழ வேண்டுமென்றால் உலகப்பற்றினை அழித்துவிடவேண்டும். உலகப் பற்று ஏற்படாமல் இருப்பதற்கு இறைவனின் திருப்புகழ் பாடல்களைப் பாடினாலே மோட்ச நிலையை எய்தக்கூடும் என்பது குறிப்பிடத்தக்கது.

ஒரே நிலையில் இருத்தல்

ஒரு மனிதனின் சூழ்நிலை எப்பொழுதும் ஒரே நிலையில் இருப்பதில்லை காலத்திற்கேற்ப மாறுகின்றது. மாற்றம் என்ற சொல்லைத் தவிர மற்றவை அனைத்தும் மாறும் இந்நிலையில் ஒருவருக்கு ஏற்றத்தையும் மாற்றத்தையும் ஏற்படுத்துவது அவரவர்களின் செயல்பாடே. *'தீதும் நன்றும் பிறர்தர வாரா'* சங்க காலத்தில் புறநானூறு வழி உணர்த்தப்பட்டுள்ளது.

இக்கருத்தினைத்தான் அருணகிரிநாதரும் பக்தி நெறி மார்க்கத்துடன் முன்மொழிகின்றார்.

*தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்*
*இடுங்கோ ளிருந்தே படியிருங் கோளெபு பாருமுய்யக்*
*கொடுங்கோச் சூருடன் குன்றந் திறக்க தொளைக்கவை வேல்*
*விடுங்கோ னருள்வந்து தானே யுமக்கு வெளிப்படும்* (பாடல் 16)

தம்மில் எழும் வேகச் செயல்பாடுகளைத் தடுத்து கோபம் ஏற்படா வண்ணம் மனதை ஒருநிலைப்படுத்துதலே மிக அவசியம். இவற்றினைவிட சிறந்தது எந்நிலையிலும் வறியவர்களுக்கு தானம் செய்தல் வேண்டும். இங்ஙனம் திகழ்ந்தால் முருகனின் அருள் தானே நம்மிடம் வந்தடையும் என்பது சிறப்புக்குரியனவாகத் திகழ்கின்றது. கோபத்தைப் பற்றி நான்மணிக்கடிகை, திருக்குறள் கூறுவதாவது.

*என்றும் விடல் வேண்டும் தங்கண் வெகுளி* (நான்மணிக்.11)

*உள்ளிய தெல்லால் உடனெய்தும் உள்ளத்தால்*
*உள்ளான் வெகுளி யெனின்* (குறள்.309)

கோபமின்றி, என்றும் ஒரே நிலைப்பாட்டுடன் தக்க தருணத்தில் மற்றவர்களுக்கு உதவிப்புரிந்து செயல்பட்டாலே இறைவனின் அருள் தமக்கு என்றும் இருக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

**நிலையாமை**

உலகில் தோன்றும் அனைத்தும் நிலையற்றதாகும். இதனைத் தொல்காப்பியர்

*பாங்கருஞ் சிறப்பின் பல்லாற்றானும்*
*நில்லா உலகம் புல்லிய நெறித்தே* (தொல்.புறம்.23)

என்கிறார். மேலும், இந்நெறியில் உலகம் நிலையானதல்ல என்பதனை அருணகிரிநாதரும் இப்பாடல் வழி விளக்குகின்றார்.

*நீர்க் குமிழிக்கு நிகரென்பர் யாக்கைநில் லாதுசெல்வம்*
*பார்க்கு மிடந்தந்த மின்போலு மென்பர் பசித்துவந்தே*
*ஏற்கு மவர்க்கிட வென்னினெங் கேனு மெழுந்திருப்பார்*
*வேற்கும ரற்கண் பிலாதவர் ஞான மிகவுநன்றே* (பாடல் 66)

மனித உடலானது நீரில் தோன்றும் குமிழியைப் போலத் திடீரெனத் தோன்றி மறைந்துவிடும். அதுபோல, செல்வமும் மின்னல்போல் விரைவில் தோன்றி விரைவிலே மறைந்துவிடும். ஆகையால் ஒருவர் உதவி என்று கேட்கும் தருணத்திலே உதவுங்கள். இதுவே சிறந்த உதவியாகும். மேலும், தோன்றியது யாவும் மறைந்துவிடும் என்பது இயற்கை நியதி. மனித வாழ்க்கையும் அத்தன்மை உடையதே. இந்நிலையாமை குறித்து மணிமேகலையில் குறிப்பிடப்பட்டுள்ளதைப் பற்றி நாம் முன்னரே அறிந்திருப்போம்.

*இளமையும் நில்லா யாக்கையும் நில்லா*
*வளவிய வான்பொருள் செல்வமும் நில்லா*
*புத்தேள் உலகம் புதல்வரும் தாரார்*
*மிக்க அறமே விழுத்துணை யாவது . . .* (பாடல் 22)

மேலும், *நிலையாமை ஒன்றே நிலையான உண்மை* என்று கௌதம புத்தரும், *தோற்றம் உண்டேல் மரணம் உண்டு* என்று சுந்தரரும் நிலையாமைப்பற்றி உணர்த்துகின்றனர். ஆகவே உலக வாழ்வு நிலையற்றது. அவரவர் இயன்றவரையில் நல்லறம் செய்ய வேண்டும் அதுவே சிறந்த துணையாக நம்மை எப்போதும் காத்து நிற்கும் இவ்வாறு இருத்தல் முருகப்பெருமான் ஆசியுடன் சிறந்த ஞானத்தையும் பெற்றுத்திகழ்வர்.

**அறநிலையோடு தானம் செய்தல்**

மனிதர்கள் தங்கள் வாழ்க்கையைச் சிறப்பான முறையில் ஒருங்கிணைத்துக் கொள்வதற்காக உருவாக்கிக்கொண்டுள்ள நெறிகளும் நம்பிக்கைகளும் அறம் ஆகும். அறமானது மனதின் மாசினைப் போக்குவதாக அமைகிறது. இதனை,

*அழுக்காறு அவளவெகுளி இன்னாச்சொல் நான்கும்*
*இழுக்கா இயற்றது அறம்* (குறள்.35)

என்கிறார் திருவள்ளுவர். மேலும் அறத்தின் நிலைப்பாட்டினைத் திருமந்திரம் மணிமேகலையின் வாயிலாக மிகவும் நுட்பத்துடன் விளக்கப்பட்டுள்ளது.

*"நடமாடக் கோயில் நம்பர்க்கொன்றீயில்*
*படமாடக் கோயில் பகவற்க தாமே"*

*"யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி*
*உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத் தோரே"*

என்ற வரிகள் மூலம் உணர்த்தப்படுகிறது. அதாவது நடமாடும் கோயிலான மனிதனுக்கும் பயன் இல்லை, நடமாடும் ஏழைக்கும், பயன் இல்லை ஆகையால் உண்ண வழி இல்லாமல் தவிக்கும் ஏழைக்குப் பசித்து வற்றிப்போன வயிற்றை உடைய ஏழைக்கு, உணவு கிடைக்காமல் இறந்து கொண்டிருக்கும் ஏழைக்கும், உடுத்த உடை இல்லாமல் இருக்கும் ஏழைக்கும், அன்றாட வாழ்க்கைத் தேவையை நிறைவேற்ற முடியாமல் வருத்தப்பட்டுக் கொண்டிருக்கும் ஏழைகளுக்கும் உதவுங்கள். இதைவிட புண்ணியம் வேறு இல்லை. இந்நிலையைத்தான் அருணகிரியாரும் தம் பாடல்களின் மூலம் உணர்த்துகின்றார்.

*வையிற் கதிர்வடி வேலோனை வாழ்த்தி வறிஞர்க்கென்றும்*
*நொய்யிற் பிளவள வேனும் பகிர்மின்க ளுங்கட்கிங்ஙன்*

*(பாடல் 18)*

*மலையாறு கூறெழ வேல்வாங்கி னானை வணங்கியன்பின்*
*நிலையான மாதவஞ் செய்குமி னோநும்மை நேடிவருந்*
*தொலையா வழிக்குப் பொதிசோறு முற்ற துணையுங் கண்டீர்*
*இலையா யினும்வெந்த தேதா யினும் பகிர்ந் தேற்றவர்க்கே*
*(பாடல் 51)*

*பொருபிடி யுங்களி றும்விளை யாடும் புனச்சிறுமான்*
*தருபிடி காவல சண்முக வாவெனச் சாற்றிநித்தம்*
*இருபிடி சோறு கொண் டிட்டுண் டிருவினை யோமிறந்தால்*
*ஒரு பிடி சாம்பருங் காணாது மாயமை வுடம்பிதுவே* *(பாடல் 57)*

என்று தான நிலையினைக் குறித்துப் பல பாடல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. நாம் சேர்த்துவைத்துள்ள செல்வப்பொருள்கள் ஒன்றும் நாம் இறந்த பின்பு உதவாது. ஆகையால் உணவின்றிப் பசித்து வருபவர்களுக்கு எத்தகைய உணவு வகைகளாக இருந்தாலும் முருகனை நினைத்து மனதார உதவுங்கள். அறத்தோடு நின்று இறைவனைத் தியானித்து தானம் செய்தலே போற்றுதற்குரிய அறம் என்று அருணகிரிநாதர் கூறுகின்றார். மனிதர்கள் செல்வத்தையும் உணவையும் சேர்த்து வைத்தல் கூடாது. மற்றவர்களுக்குப் பயன்படும் வகையில் இருக்கவேண்டும். மனது நிறையும் படி செய்யும் உதவிகள் அனைத்தையும் கடவுள் ஏற்றுக்கொள்வார்.

பக்தி நெறியில் மனிதநேயம்

மனிதன் பிறப்பில் இருந்து தான் வாழ்நாளில் செய்திடும் நன்மைகள் பொறுத்தே இறைவனின் அருள் நமக்கு வாய்க்கும்.

*எல்லா உயிரும் தம்முயிர்போல் எண்ணி*
*இரங்கவும் நின் தெய்வ அருட்கருணை செய்யாப் பராபரமே*

என்கிறார் வள்ளலார்.

அனைத்து உயிரினங்களும் அதனதன் வடிவத்திலேயே இறைவனைக் காணுகின்றன. மனிதனும் தன் வடிவிலேயே இறைவனைக் காண்கின்றான். *“உள்ளம் பெருங்கோயில்”* என்பார் திருமூலர். ஆகவே அன்புள்ளத்தோடு திகழ்பவர்களே இறைவனுக்கு நிகரானவர்கள். ஒருவர் மற்றவரிடம் தூய்மையான அன்புடன் இருத்தல் மிகச்சிறந்த நெறியாகும். *“அன்பில்லாதவற்றை அறம் காயும்”* என்பார் திருவள்ளுவர். அன்பில்லாதவர்கள் அறத்தோடும் பக்தியோடும் திகழமுடியாது. ஆகையால் அன்போடு திகழுங்கள், அன்பே கடவுளாவார். இத்தகு அன்பு நெறியை பக்தி உணர்வின் வாயிலாக அருணகிரியார் உணர்த்துகின்றார்.

*சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்*
*வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்குவள்ளி*
*காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்*
*சாந்துணைப் போது மறாவ தவர்க்கொரு தாழ்வில்லையே*

(பாடல் 72)

*அராப்புனை வேணியன் சேயருள் வேண்டு மவிழ்ந்த அன்பாற்*
*குராப்புனை தண்டையந் தாள்தொழல் வேண்டுங் கொடியஐவர்*
*பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல் வேண்டுமென்றால்*
*இராப்பக லற்ற இடத்தே யிருக்கை யெளிதல்லவே*

(பாடல் 74)

இந்நிலைப்பாட்டுடன் திகழ்ந்தாலும் அனுதினமும் முருகனிடம் பக்திக்கொண்டு செயல்படுதல் சிறந்த பயனளிக்கும். இறைவனை மறவாதவர்களுக்கு ஒருபோதும் தாழ்வுநிலை ஏற்படாது. மேலும், வீண்பெருமை பேசி பொழுதினைப் போக்காமல் நான்தான் என்ற அகங்காரத்தன்மையின்றி இருத்தல் உண்மையை மட்டுமே பேசுதல் போன்ற நிலைப்பாட்டினை நாம் சரியாகப் பின்பற்றினாலே முருகனின் அருள்பெற்று வாழ்வில் எக்குறையும் இன்றி வாழ்வதற்குத் துணைப்புரிவார். பக்தியும் மனிதவளமும் பரபரப்பான இவ்வியந்திர வாழ்க்கையில் மனிதனின் மனதைப் பக்குவப்படுத்தி அவனின் வாழ்க்கைக்கு வளமூட்டுவதாக அமைந்து விளங்குவதே பக்தி உணர்வாகும். சமய நல்லுணர்வுகளை மையமாகவைத்தே சமுதாயத்தை மேம்படுத்தமுடியும் என்பார் சுவாமி விவேகானந்தர். பக்தி உணர்வானது நல்வழிகாட்டி மனிதனை மனிதனாக வாழ வழி செய்கிறது. இப்பக்தி உணர்வை நல்லமுறையில் நெறிப்படுத்துவதன் மூலம் மனிதவள மூலங்களை உயர்நிலை பெறச்செய்யலாம். இதனால் சமுதாய மேம்பாடும் தனிமனித மேம்பாடும் பக்தி உணர்வினால் வளர்ச்சியடையும்.

*“என்கடன் பணிசெய்து கிடப்பதே”* எனத் திருநாவுக்கரசரும், *“மக்கள் சேவையே மகேசன் சேவை”* என விவேகானந்தரும் பக்திநெறியோடு மனிதநேயம் என்று அருணகிரிநாதரும் வலியுறுத்தியுள்ளதுபோல மனிதராகிய நாமும் அன்புடன் கூடிய பக்தி நெறியோடும் மனித நேயத்தோடும் தொண்டுகள் பல புரிந்து வாழ்வோமாக.

## சங்க இலக்கியத்தில் முருகன்

ந. மாலதி
முனைவர் பட்ட ஆய்வாளர்
பாரதிதாசன் உயராய்வு மையம்
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி - 620024

உள்ளம் அள்ளும் உணர்வுகள் ஆழ்ந்த மனதில் எழும் ஏற்றமிகு எண்ணங்கள், வாழ்வின் முதிர்ந்த அனுபவங்கள், வாழ்விற்கு ஒளியாய் விளங்கும் குறிக்கோள் முதலியவை மொழியால் கற்பனை அழகோடு அமையும்போது இலக்கியம் என்றழைக்கப்படுகிறது. சங்க இலக்கிய நூல்களான எட்டுத்தொகையும், பத்துப்பாட்டும் முருகப் பெருமானின் புகழையும், அருளையும் பயனையும் காக்கும் தன்மையையும் வழிபடும் முறையினையும் நமக்குத் தெளிவுபடுத்தும் விதமாக அமைந்துள்ளது. திருமுருகாற்றுப்படை, கலித்தொகை, பரிபாடல், அகநானூறு போன்ற நூல்களின் மூலம் முருகபெருமானின் பல அரிய கருத்துக்களை அறிந்தும் அவரின் முழு ஆசீர்வாதத்தைப் பெற்று அருள் பெறுவதனையும் வழிபாட்டு முறையினையும் இக்கட்டுரையின் மூலம் அறியலாம்.

**ஆறு திருமுகங்கள்**

*"ஆதி சக்தி, இச்சா சக்தி, கிரியா சக்தி, பரா சக்தி, ஞான சக்தி, குடிலா சக்தி"*[1] என்றும் அ, உ, ம், நாதம், விந்து, சக்தி என்றும் சிவபிரானுடைய ஆறு திருமுகங்களாம் என்றும் ஈசன் திருமுகங்கள் ஐந்துடன் தேவி திருமுகம் ஒன்றும் சேர்ந்து ஆறு ஆயின என்றும் ஐஸ்வரியம், வீரியம், புகழ், திருஞானம், வைராக்கியம் என்னும் ஆறு குணங்களாம் என்றும் பலவகையாக முருகனின் அறுத் திருமுகங்கள் சொல்லப்படுகின்றன.

**என் கடவுள்**

*"உன்னை ஒழிய ஒருவரையான் நம்புகிலேன்*
*பின்னை ஒருவரையான் பின்செல்லேன் - பன்னிருக்கைக்*
*கோலப்பா வானோர் கொடியவினை தீர்த்தருளும்*
*வேலப்பா செந்தில் வாழ்வே"*[2]

(திருமுரு. 5)

மக்கள் அனைவரும் தனக்கென்று ஒரு பிரச்சனை வரும் போது தனக்கு மேல் ஒரு சக்தி உண்டு என்பதை நிருபிக்கும் வகையில் முறையிடுவார்கள். பன்னிரு கைகளையும், வானவரின் துன்பத்தை நீக்கி அருளிய வேற்படையையுடைய, அடியாரை பாதுகாத்து திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கின்ற முருகபெருமானே நாங்கள் உன்னையன்றி வேறு எவரையும் எம் கடவுள் என்றும் பொருள் வேண்டியும் செல்ல மாட்டோம். நீயே எம் கடவுள் என்பதை அறிந்து கொண்டோம்.

காக்கும் கடவுள்

*"காக்கக் கடவியநீ காவா திருந்தக்கால்*
*ஆர்க்குப் பரமாம் அறுமுகவா - பூக்கும்*
*கடம்பா முருகா கதிர்வேலா நல்ல*
*இடங்காண் இரங்காய் நீ!"*[3] (திருமுரு. 8)

அனைத்துப் புகழும் நிறைந்த ஆறுமுகம், கடம்பமலர் மாலையை அணிந்தவர், வேலைக் கையில் பெற்றுள்ளவர், அடியவரைக் காப்பவர். கடமை என்று கருதும் எங்கள் அனைவரையும் காத்து அருள் புரிவாயாக முருகப்பெருமானே - இதுவே தக்க தருணம் இதை நீ உணர்வாயாக என்று மக்கள் அனைவரும் வணங்குகின்றார்கள்.

பயன் தரும் கடவுள்

*"நக்கீரர் தாம் உரைத்த நன்முருகாற் றுப்படையைத்*
*தற்கோல நாடோறும் சாற்றினால் - முற்கோல*
*மாமுருகன் வந்து மனக்கவலை தீர்த்தருளித்*
*தான் நினைத்த எல்லாம் தரும்"*[4] (திருமுரு. 10)

மக்கள் அனைவரும் நக்கீரர் இயற்றிய திருமுருகாற்றுப்படை நூலைத் தினமும் தன் துயரத்தை நினைத்து மனதை ஒருமுகப்படுத்தி நாள்தோறும் வணங்கி ஓதி வந்தால் பெருமானின் அருளும். அவர் மக்கள் முன் தோன்றுவார். மக்களின் மனத்துயரத்தைத் தன் தூய மொழியினால் போக்கி அவர்கள் விரும்பிய பயனையும் தந்தருளுவார். அத்தெய்வத்தை வணங்கி முழு பயனையும் அடைதல் வேண்டுதல் என்பதை இப்பாடல் நமக்கு உணர்த்துகிறது.

அருள் தரும் பெருமான்

*"குறப் பிணாக் கொடியைக் கூடியோய் வாழ்த்துக்*
*சிறப்பு உணாக் கேட்டி செவி*
*உடையும் ஒலியலும் செய்யை மற்று ஆங்கே*
*படையும் பழக்கொடி நிறம் கொள்ளும்*
*உருவும் உருவத் தீ ஒத்தி முகனும்*
*விரி கதிர் முற்றா விரி சுடர் ஒத்தி*
*எவ்வத்து ஒவ்வா மாமுதல் தடிந்து*
*அவ்வரை உடைத்தோய் நீ இவ்வரை மருங்கில்*
*கடம்பு அமர் அணிநிலை பகர்ந்தேம்*
*உடங்கு அமர் ஆயமொடு ஏத்தினம் தொழுதே"*[5] (பரி. 19:95–105)

குறப்பெண்ணான பூங்கொடியைப் போன்ற வள்ளியை மனந்தருளிய முருகப் பெருமானே! எளிய மக்களாகிய எங்கள் வாழ்த்தைச் செவி சாய்த்து கேட்பீராக! உனது உடை, மாலை சிவந்த நிறத்தைப் பெற்றுள்ளது. நின் வேலும் பகைவர் குருதி தோயப் பெற்றுப் பவளக் கொடியின் நிறம் போல் செந்நிறத்தைப் பெற்றுள்ளது. உனது மேனியும் சிவந்த தீயை ஒத்தவன்

போல் காட்சியளிக்கிறது. மண்டிலத்தாலும் விடியற்காலத்தில் விரியும் கதிர்கள் முதிராத இளைய ஞாயிற்று மண்டிலத்தை ஒத்துள்ளது. உலகத்துக்குத் துன்பத்தைக் கொடுத்து அறத்துக்குப் பொருந்தாத சூரபன்மா என்ற மாமரத்தை வேருடன் அழித்து பகைமை பொருந்திய கிரௌஞ்ச மலையூடு வேற்படையைச் செலுத்தி அம்மலையை உடைத்த பெருமானைத் திருப்பரங்குன்றத்தில் கடம்ப மரத்தில் எழுந்தருளிய அழகிய அருள் நிலையை வாழ்த்தினோம். எம் வாழ்த்து இது. எம்முடன் அமர்ந்த எம் உறவினருடன் நாள்தோறும் நின் திருவடியைக் கைகூப்பி வணங்கி துதிக்கின்றோம். எங்களுக்கு அருள்வாயாக.

கற்புடைய மகளிர் வழிபாடு

*"கனவின் தொட்டது கை பிழையாகாது*
*நனவின் சேஎப்ப நின் ஒளிபுனல் வையை*
*வரு புனல் அணிக என வரம் கொள்வோரும்*
*கரு வயிறு உறுக எனக் கடம்படுவோரும்*
*செய் பொருள் வாய்க்க எனச்செவி சார்த்துவோரும்*
*ஐ அமர் அடுக என அருச்சிப்போரும்*
*பாடுவார் பாணிச் சீரும் ஆடுவார் அரங்கத் தாளமும்*
*மஞ்சு ஆடுமலை முழக்கும்*
*துஞ்சாக் கம்பலைப்*
*பைஞ் சுனைக் பாஅய் எழு பாவையர்*
*ஆய் இதழ் உண்கண் அலர் முகத் தாமரை"*[6] (பரி., 8:103–113)

கனவில் என் காதலரைக் கை தொட்டது பொய்யாகி விடாமல் நனவில் அடையும்படி நினக்குரிய மிக்க நீரையுடைய வையையாறு புதுநீரை உடையதாய் விளங்குக என்று வரம் வேண்டிக் கொண்டனர். எம் வயிறு கருப்பம் அடைந்தால் இன்ன இன்ன பொருள்களை உனக்குத் தருவோம். எம் கணவர் வினையில் செய்வதற்குரிய பொருள் நிரம்பத் தருவதாக திருச்செவியில் செல்லும் படி வழிபட்டனர்.

சில மங்கையர், "போருக்குச் சென்றுள்ள எம் கணவர் அப்போரில் பகைவரைக் கொன்று வெற்றி பெற வேண்டும்" என்று அருச்சனை செய்தனர். பெருமானை வாழ்த்திப் பாடுபவர், பாட்டிற்கேற்ற தாளம், கூத்தாட்டரங்கத்தில் ஆடுபவரின் தாளம் ஆகிய ஒலிகள் மேகம் தவளும். அம்மலையில் எழும் எதிரொலியும் அம்மலை கெடாத ஆராவாரத்தை உடையதாய் விளங்கியது. ஆகவே கற்புடைய மகளிரின் வழிபாட்டின் மூலம் பெருமானின் வழிபாட்டை அறிந்து கொண்டோம்.

பெருமானை துதித்தல்

*"இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கல் ஆற்றாக்கால்*
*தன் மெய் துறப்பான் மலை*
*என ஆங்கு*
*கூடி அவர் திறம்பாட, என் தோழிக்கு*

*வாடிய மென் தோளும் வீங்கின*
*ஆடு அமை வெற்பன் அளித்தக்கால் போன்றே"7* (கலித்.43:26–31)

வறுமையால் பொருள் இல்லாமையைக் கூறியவர்க்கு அப்பொருளை அவர்க்குக் கொடுக்க முடியாத போது தன் உடலைத் துறப்பவனது மலை அஞ்சாமையுடைய புலியினது அடியைப் போல் வாழை மரத்தின் வளைவான காய் குலைகள்தோறும் தொங்கும். யானும் தலைவியும் கூடித் தலைவனின் திறத்தையும் முருகனின் திறத்தையும் பாடினோம். என்னுடைய தோழிக்கு அசையும் மூங்கிலையுடைய மலையை உடையவன் அருளிய சமயம்போல் முன் அன்பு காட்டாததால் மெலிந்த மெல்லிய தோள்களும் சிறப்பாய் அமைந்தன என்று தன்னுள் கூறுபவளைப் போல் சிறைப்புறமாய் உள்ள தலைவன் கேட்பத் தோழி கூறினாள். எனவே வருத்த நிலையிலும் பெருமானை வழிபட்டால் தலைவிக்கு மகிழ்ச்சி கிடைக்கும் என்பதை இப்பாடல் தெளிவுறுத்துகிறது.

மன்னன் வழிபடுதல்

*"தன்சுடர் பிறந்த முத்தின் ஆரமும்*
*முனைதிரை கொடுக்கும் துப்பின், தன்மலைத்*
*தெறல் அரும்மரபின் கடவுட் பேணிக்*
*குறவர் தந்த சந்தின் ஆரமும்,*
*இருபேர் ஆரமும் எழில்பெற அணியும்*
*திருவீழ் மார்பின் தென்னவன் மறவன்"[8]* (அகம்.13:1–6 )

பாண்டிய மன்னன் தென்கடலிலே பிறந்த முத்தினை கோத்த ஆரத்தை அணிந்தவன். பகைவர் பணிந்து திறை கொடுக்கும் ஆற்றலினையுடையவன். பொதிய மலையில் கோயில் கொண்டு பிறரால் வெற்றி கொள்ளப்படுவதற்கு அரியவனுமாகிய முருகக்கடவுளை வழிபட்டுச், சந்தன ஆரத்தையும் அழகுற அணிந்தும் திருமகள் விரும்பும் மார்பினையுடையவன் அம்மன்னவன். பாண்டிய மன்னன் முருகக் கடவுளை வழிபட்டான் என்பதை இப்பாடலின் மூலம் நம்மால் அறிந்து கொள்ள முடிகிறது.

திருப்பரங்குன்றத்து மலை

*"சூர்மருங்கு அறுத்த சுடர்இலை நெடுவேல்,*
*சினம்மிகு முருகன் தண்பரங் குன்றத்து,*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை,*
*இன்தீம் பைஞ்சுனை ஈரணிப் பொலிந்த*
*தண்நறுங் கழுநீர்ச் சென்இயற் சிறுபுறம்*
*தாம்பா ராட்டிய காலையும் உள்ளார்"[9]* (அகம். 59:10–15)

சூரபன்மாவினை அவன் சுற்றத்தோடு அழித்த ஒளி சுடர் மிகுந்த நெடுவேலினையுடையவன், சினம் மிகுந்த முருகன். சினம் தனிந்து கோயில் கொண்டிருக்கும் தட்பம் வாய்ந்தது திருப்பரங்குன்றம் என்று நல்லந்துவனார்

பாடிய சந்தன மரங்கள் நிறைந்த உயரமான திருப்பரங்குன்றத்து மலையில் பசுமை வாய்ந்த சுனையில் பூத்த மணங் கமழும் செங்கழுநீர் மலரால் பொழிவுடன் ஒப்பனை செய்யப்பெற்ற கொண்டை அசையும் நின் முதுகினை நம் தலைவர் தாம் பாராட்டிய காலத்தினையும் நினைந்து பாராதவராக சென்றார். நம் தலைவர் நினைப்பார் அத்தகைய மலையை உடைய பெருமானை வணங்குவோம்.

முடிவுரை

சங்க இலக்கியத்தில் வாழ்ந்த மக்கள் கடவுளை வணங்கினார்கள். பெருமான் அருள் பெறாமல் எந்த செயலையும் அவர்கள் தொடங்கவில்லை ஆறு திருமுகங்கள் என் கடவுள் காக்கும் கடவுள் பயன் தரும் கடவுள் அருள் தரும் பெருமான் கற்புடைய மகளிர் வழிபாடு பெருமானைத் துதித்தல், மன்னன் வழிபடுதல் திருப்பரங்குன்றத்து மலை இவற்றின் பெருமையினையும் அருளையும், புகழினையும் வழிபடும் தன்மையினையும் ஆசிர்வாதத்தையும், மக்கள் வளர்ச்சி அடைந்த நிலையினையும் தன்னை வணங்கி வரும் மக்களுக்கு இல்லை என்று கூறாது அனைத்து பலனைக் கொடுத்த பெருமானைத் தெளிவாக அறிந்து கொண்டோம். அனைவரும் பெருமானின் திருவடிகளை வணங்குவோம்.

## புலவர் புராணத்தில் திருப்புகழ்ப் பெருமை

வே. முத்தமிழ்,
உதவிப்பேராசிரியர்,
அரசு மகளிர் கலைக் கல்லூரி(த),
புதுக்கோட்டை.

முருகப் பெருமானையே பரம்பொருளாகக் கொண்டு வழிபட்டுப் பேறுபெற்றவர் அருணகிரிநாதர். முருகன் புகழை அன்றி வேறு எதையும் பாடாத பக்தி உடையவராய் இன்றளவும் தெய்வபக்தி குறைந்தவர்கள் கூடத் தம் பாடல்களைப் பரவசமாகப் பாடும்படி செய்த பெரியார். அருணகிரிநாதர் இயற்றிய 'திருப்புகழ்' பாடல்களை அறியாத தமிழர்களே இல்லை எனுமளவிற்குச் சிறப்புடையன. அதற்குக் காரணம் இவருடைய பக்திப் பெருக்கும் பாடல்களின் சந்தப்பொலிவும் ஆகும். இன்றுவரை திருப்புகழ் படிக்கிற நூலாக மட்டுமல்லாமல் எல்லோரும் பக்திச் சுவையோடு பாடக்கூடிய நூலாகவும் திகழ்கின்றது. முருக பக்தரான வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளால் இயற்றப்பட்ட புலவர்களின் வரலாற்றைக் கூறும் புலவர்புராணம் எனும் நூலில் எடுத்துரைக்கப்பெறும் திருப்புகழின் பெருமைகளை இக்கட்டுரையில் காணலாம்.

### அருணகிரிநாதரும் தண்டபாணி சுவாமிகளும்

முருகன் திருவருளால் புலமை பெற்றுப் புதிய இலக்கிய நூல்களையும், இலக்கிய இலக்கண வகைகளையும் தமிழுலகிற்குத் தந்த புலமைமிக்கவர் அருணகிரிநாதரும் தண்டபாணி சுவாமிகளும். அருணகிரிநாதர் 15-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவராகவும் தண்டபாணி சுவாமிகள் 19-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவராகவும் உள்ளனர். அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ் 16 ஆயிரம் பாடல்கள் உடையது என்றும் தற்பொழுது வ.சு.செங்கல்வராயர் உரைப் பதிப்பில் 1304 பாடல்களே உள்ளன என்றும் மு. அருணாசலம் (தமிழ் இலக்கிய வரலாறு தொகுதி 9 ப.பி) குறிப்பிடுகிறார்.

தண்டபாணி சுவாமிகள் தம் புலவர் புராணத்தில் அருணகிரிநாதரின் வாழ்க்கை வரலாற்றையும் அவர்தம் திருப்புகழ்ப் பெருமையையும் 82 பாடல்களில் விவரித்துள்ளார். இதில் அருணகிரிநாதர் இயற்றிய திருப்புகழ் 36 ஆயிரம் (பு.பு 1135) பாடல்கள் உடையது என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் தண்டபாணி சுவாமிகள் தாமே முற்பிறப்பில் அருணகிரிநாதராக வாழ்ந்தமையை முருகன் தமக்கு உணர்த்தியதாகத் தம்முடைய பிற நூல்களில் பல இடங்களிலும் குறிப்பிட்டவாறே புலவர் புராணத்திலும் பாடியுள்ளார். அருணகிரி தன்னைக் குறித்துக் கூறியதாக,

*முருகோன் என் அறிவு சான்றா*
*எத்தனையோ தரம் ஒரு சொல் இசைத்துள்ளான்*

*அதைப் பல பாட் டிடத்தில் சற்றும்*
*சித்தம் ஒல்கா துரைத்தும் உள்ளேன்* (புலவர் புராணம் 1138)

என்கிறார். இச்செய்தியை,

*எல்லையில்லாக் களிப்பாய் மடிமீதில் இருக்கும் மென்னைத்*
*தொல்லை யருணகிரிதான் என்றன்னவன் சொன்ன துண்மை*

என்ற தனிப்பாடல் (தனிப்பாடல் திரட்டு 18 தமிழ் இலக்கியக் கொள்கை தொகுதி -6 ப. 254) வழியாகவும் அறியப்படுகிறது. திருப்புகழ் தோன்றிய காலம் முதலாகவே மக்கள் மனதில் பாடல்கள் நீங்கா இடம் பெற்றுவிட்டன. அதற்குக் காரணம்

*வாக்கில் உயர்ந்தோன் அருணகிரியே என்*
*றொரு புலவன் வகுத்துச் சொன்னான்"* (புலவர் புராணம் -1139)

என அருணகிரிநாதரின் வாக்கு வன்மையைப் பாராட்டுகிறார். தண்டபாணி சுவாமிகள் அருணகிரிநாதரின் பக்திப் பெருக்கும் சொல்நயம், சந்தநயம் தொடைநயம் முதலானவையும் முருகவேளிடம் ஈடுபாடுடைய மக்களிடம் பெரும் செல்வாக்குப் பெறக் காரணமாயின. இத்தகைய இனிமை பொருந்திய சந்தப் பாடல்களைப் பாடிய அருணகிரிநாதரின் புலமையைப் போற்றுகிறவர் களுக்குப் பேரின்பத்தையும், அவரை வசைபாடுவோருக்கு ஓயாத துன்பத்தையும் முருகன் கொடுத்தான் (புலவர் புராணம்) என்று தண்டபாணி சுவாமிகள் குறிப்பிடுகிறார்.

**புலவர் புராணத்தில் திருப்புகழ்ப் பெருமை**

சிற்றின்பத்தில் மூழ்கி நோயுற்று வருந்தி முருகன் திருவருளால் நலம் பெற்ற அருணகிரிநாதர் உலகோர் வியக்கும்படியாகத் திருப்புகழைப் பாடுகின்றார். அத்திருப்புகழ்ப் பாடல்கள் தேன்போன்று இனிய செந்தமிழில் இனிமையான பாடல்களாக கலைமகளின் அருளால் வெளிப்பட்டன. அருணகிரிநாதரின் வாலாற்றைக் கேள்வியுற்று அவரின் திருப்புகழ் பாடல்களின் இனிமையையும் இறைபக்தியையும் உணர்ந்த மக்கள் கூட்டம் தம்முடைய ஊழ்வினையால் வரும் துன்பங்கள் நீங்கத் திருப்புகழைப் பாடித் திருவண்ணாமலை முருகனைத் தரிசித்து அருள்பெற்றனர்.

*நோயினரும் குறையினரும் நூறுநூறா ச்சிகரிச்*
*சேயின் எதிர் இவன் சான்றாத் தெண்டனிட்டுப் பயன்எய்திக்*
*காயிகத்தொண் டியற்றுநரும் கனகம் முதலிய கொணர்ந்து*
*வாயிலினிற் குவிப்பாரும், மலிந்துபணி வாய்ந்ததுவே*
(புலவர் புராணம் 1083)

**திருப்புகழைக் கேட்கும் செவி**

'அருணகிரிநாதன் திருப்புகழ்' சந்தம் புகழ்ந்து உய்யலாம் என்று அந்தகக் கவி வீரராகவ முதலியாரும் 'அருணகிரிநாதர் கடலென மகிழ்ந்து

பாடும் திருப்புகழ்' என சிதம்பர முனிவரும் போற்றும் திருப்புகழைக் கேட்கும் செவியின் பெருமையைத் தனிப்பாடல் ஒன்று எடுத்துரைக்கும்.

*எல்லாரும் ஞானத் தெளிஞரே கேளீர் சொல்*
*கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாமோ - பொல்லாக்*
*கருப்புகழைக் கேட்குமோ கானமயில் வீரன்*
*திருப்புகழைக் கேட்கும் செவி*

இத்தனிப்பாடலை நினைவுகூரும் வகையில் தண்டபாணிப் புலவர் பின்வருமாறு பாடுகின்றார்.

*தேக்கிய சீர்த் திருப்புகழைக் கேட்கின்ற*
*செவித்திறம் ஓர் தெளிஞன் செய்யுள்*
*ஆக்கியவன் பகர்காப்பென் றறிவில்லார்*
*பலர் உரைப்ப அதனில் சேர்த்தான்*
*நாக்கிழத்தி மகிழ் வண்ணப் புலமை உளார்*
*நன்குணர்ந்து நவிலற் பாற்றே* (புலவர் புராணம் 1139)

அருணகிரியாரைக் குறைபேசுவார் அறிவில்லாதோரே; கலைமகளின் அருள்துணையால் புலமைபெற்ற யாரும் திருப்புகழைக் குறை கூறமாட்டார்கள். அதன் பெருமை உணர்ந்து போற்றுவர்.

**திருப்புகழைப் பாடுவதில் பிழைபொறுக்காத முருகன்**

ஏரகம் என்ற ஊரில் பாமரன் ஒருவன் வயிற்று வலியால் துன்புற்று திருப்புகழைப் பாடினால் தன் நோய் நீங்கும் எனக் கருதித் தினந்தோறும் திருப்புகழைப் பாடினான். அவன் பிழையோடு பாடியமையால் அதனைக்கேட்ட முருகன் பிழைபொறுக்க முடியாமல்

*'------------------ என் தொண்டன் பாடல்*
*சீரழியேல் இன்றுடன் உன் நோய் தீர்ந்தது*
*எனப்பகர்ந்து திருத்தி செய்தான்'* (புலவர் புராணம் 1142)

என்று முருகனே திருப்புகழ் சுவை கெடக்கூடாது என்பதற்காக உடனே பக்தனின் வயிற்றுவலி நீக்கியதாகச் சுவையான ஒரு நிகழ்வைத் தண்டபாணி சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார். சிவகாசி என்ற ஊரில் மிகச் சாதாரணமான ஒரு பாமரன் திருப்புகழைத் தினந்தோறும் துதித்து வந்தான். அவன் குலத்தலைவன் அவன் தலைமுடியை மழிக்க முயன்றபொழுது நீ சவம் ஆவாய் என அவன் கூறியும் கேளாமல் செய்ய முற்பட்ட அங்ஙனமே அவன் இறந்தான்.

*------------- அங்ஙன் செய்தால்*
*சவம் ஆவாய் என்றவன் சொல்லியும் முயன்றக்*
*கணம் இறந்தான் சரதம் மாதோ* (புலவர் புராணம் 1143)

திருப்புகழை இயற்றிய அருணகிரிநாதருக்கு மட்டுமல்ல; திருப்புகழைப் பாடினால் தொண்டருக்கும் இறையருள் தன்மையும் பேராற்றலும் கிடைக்கப்பெறும் என்ற கருத்தினை இந்நிகழ்வின் மூலமாக சுவாமிகள் எடுத்துக்காட்டுகிறார்.

### குமரகுருபரருக்குத் திருப்புகழ் அருள்

புலவர் புராணத்தில் 38-ஆவது சருக்கத்தில் குமரகுருபரர் வரலாறு விவரிக்கப்பட்டுள்ளது. முருக பக்தரான குமரகுருபரர் பிறந்தது முதல் ஐந்து வயது வரை பேசாமல் இருந்தார். அவருடைய பெற்றோர் திருச்செந்தூர் சென்று முருகனை வேண்டி ஒரு மண்டலம் உப்பில்லாத வெற்றன்னம் உண்டு, உறங்காமல் திருப்புகழ் போற்றி நோன்பிருந்தனர். 45 -ஆவது நாள் குமரகுருபரர் பேசும் திறமை பெற்றார்.

*உப்பிலா வெற்றன்னம் ஒருபோதுண்டு உறங்காராய்த்*
*திப்பிய செந் தமிழ் வண்ணத் திருப்புகழா தியாற் போற்றி*
- - - - - - - - - - - - -
*செப்பிய நாற் பதிற்றைந்தாம் தினம் உதிப்பக் கண்டனரே.*
(புலவர் புராணம் 1595)

குமரகுருபரரின் பெற்றோர் 'திருப்புகழ்' போற்றி நோன்பிருந்தனர் என்பது தண்டபாணி சுவாமிகள் கூறும் வரலாற்றில் மட்டுமே காணமுடிகின்றது. திருப்புகழின் மேன்மையை உலகோர்க்கு எடுத்துரைக்கும் மூலமாக இவ்வரலாற்றில் இச்செய்தியை இணைத்துள்ளார் எனக் கருத முடிகின்றது.

### முடிவுரை

தண்டபாணி சுவாமிகள் முருகனின் அருட்பேறு பெற்ற அருணகிரிநாதரைப் புகழ்வோர்க்கும், அவரியற்றிய திருப்புகழை மனமுவந்து பாடுவர்க்கும் கேட்பவருக்கும் பிறவித்துன்பங்கள் நீங்கும் என்ற கருத்தினைப் பல நிகழ்வுகள் மூலம் உணர்த்தியுள்ளார். இருப்பினும் திருப்புகழ் பெருமைக்கு ஒரு சில நிகழ்வுகள் மட்டும் எடுத்துக்காட்டுகளாகக் குறிக்கப்பட்டுள்ளன. இவைபோன்று எண்ணிலடங்கா அருட்செயல்கள் உள்ளன. அவையெல்லாம் தன்னால் சொல்லுதற்கரியன என்று தண்டபாணிப் புலவர் திருப்புகழ் பெருமைகளை வியப்புறப் பாடுகிறார்.

இன்னணம் செந் தமிழ்ச்சந்தக் கிளிப்புலவன்
குவித்துணை கொண்டிகத்தில் பல்லோர்
தன்னலம் உற்றன முழுதும் நவின்று
முடிப்பதற்கறியேன், நாளும் கோடி
அன்ன வண்ணம் நடந்துகொண்டே இருக்கும்:
அதனால் முருகோன் அருள் வேட்டுள்ளீர்
என்ன பட்டானாலும் அவற்றொன்றேனும்
பிழை அறச் சொற் றிறைஞ்சுவீரே!

என வேண்டுகிறார் தண்டபாணி சுவாமிகள்.

# தவத்திரு கந்தசாமி சுவாமிகள் வாழ்வும் வாக்கும்

அழ. முத்துப்பழனியப்பன்,
சிரவை ஆதீனப் புலவர்
மேனாள் உதவி ஆணையர்,
இந்து சமய அறநிலையத்துறை
வழக்கறிஞர், கோயம்புத்தூர்.

சமயம் என்ற ஒரு சொல்லுக்குப் பக்குவப்பட்டது என்று பொருள். சமையல் ஆகிவிட்டது என்றால் உண்பதற்கு உணவு பக்குவப்பட்டுவிட்டது என்பது பொருள். அதுபோன்று மனிதனை மனிதனாக, நெறியுள்ளவனாக, உயர்ந்தவனாக மாற்ற முற்படுவது எதுவோ அதுவே சமயம் எனப்படுகிறது. தமிழில் உள்ள 'கடவுள்" என்ற சொல் அருமையானது, எல்லாவற்றையும் கடந்து எல்லா பற்றின் உள்ளேயும் இருப்பது என்று பொருள்படும். இதுபோல் 'இயவுள்" என்ற சொல்லும் எல்லாவற்றையும் இயக்கி அதன் உள்ளே உள்ள பரம்பொருள் என்று பொருள்படும்.

தமிழர்தம் கடவுள் கொற்றவையும், கொற்றவை சேயும் என்பது சங்க இலக்கியம் நுதலும் செய்தி. கொற்றவை சேயான முருகனே தமிழர்தம் முதற்பெருங்கடவுள் என்பது வெளிப்படை. முருக வழிபாடு என்பது தனி வழிபாடு. தனிநெறி. தமிழர்தம் முதல் பக்தி இலக்கியம் திருமுருகாற்றுப்படையே என்பதால் இது தெளிவுறும்.

முருக வழிபாடு, தமிழகத்தில் தனித்த நெறியாகப் பரவியது. அருணகிரிநாதர் இதற்குப் பெரிய ஆக்கம் கொடுத்தார். அதன்பின்னர், அவரது வழியை ஒட்டிப், பல அருளாளர்கள் தோன்றினர். முருக நெறியை வளர்த்தும், பரப்பியும் தொண்டுகள் செய்தனர். அவற்றுள் முதன்மையானவர் தவத்திரு இராமானந்த சுவாமிகள் எனும் பெரியவர், கோயம்புத்தூர் - சரவணம்பட்டியில் தோன்றிய அருளாளர். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் வழிகாட்டுதலில், முருகனை வழிபடு கடவுளாக ஏற்றுக் கொண்டார். திருச்செந்தூர் முருகன் அருள் பெற்றவர். தனது சொத்துக்கள் அனைத்தையும், முருகனுக்கே அர்ப்பணித்து, கௌமார மடாலயம் என்ற மடாலயத்தை நிறுவினார்.

அவர் காலத்தில் அவருக்கு அடுத்த தோன்றலாகத் தோன்றியவர் கந்தசாமி சுவாமிகள். பூர்வாசிரமத்தில் இராமானந்த அடிகளின் தம்பி குமாரர். ஆயினும் இளவயதில், இராமானந்தரிடம் வந்து அவர் அடிபணிந்து, அவரது அணுக்கத் தொண்டராக விளங்கினார்.

இராமானந்த அடிகள் நிறுவிய கௌமார மடாலயம், கொங்கு நாட்டில் செய்த சேவை அளப்பரியது. கொலையும், புலையும் நிறைந்திருந்த கொங்கு நாட்டில் சைவ நெறியைப் பரப்பி வளர்த்த பெருமை இந்த மடத்திற்குரியது. இந்த மடத்தினுடைய அடியார்களாக வருபவர்கள் எவரும் புலால் உண்ணக்

கூடாது, உயிர்க்கொலை செய்யக்கூடாது என்ற கொள்கையை ஏற்றுக்கொள்ள வேண்டும். குருநாதருடைய இந்தக் கொள்கையை மிகத் தீவிரமாகப் பரப்பியவர் கந்தசாமி சுவாமிகள். தமிழ்ப் புலமைக்கும் வளத்துக்கும் கௌமார மடாலயம் ஒரு சிறந்த இடமாக விளங்கி வருகிறது.

கந்தசாமி சாமிகள் 18.04.1892 அன்று தோன்றினார். திண்ணைப் பள்ளிக்கூடங்களில் நீதி நூல்கள், தமிழ் நாவலர் சரிதை, நிகண்டு, எண்சுவடி ஆகியவற்றைக் கற்றுக் கொண்டார். சுமார் பனிரெண்டு வயதிலேயே, இவர் கௌமார மடத்திற்கு வந்து, இராமானந்த அடிகளிடம் அணுக்கத் தொண்டராக இருந்தார். திருமடத்தில் மலர்ச்சோலை ஒன்றை உருவாக்கினார். வேளாண்மைப் பணிகளை முனைந்து செய்தார். சுவாமிகளே, தான் இயற்றிய 'அலங்காரச் சிந்து" என்ற நூலில் உள்ள மூன்று நீண்ட சிந்துப் பாடல்கள், இப்பூங்காவைப் புகழ்கின்றன. இவர் இயற்றிய 'பக்தமான்மியம்" என்ற நூலில் தான் உருவாக்கிய இந்தப் பூங்காவைப் பற்றிப் பின்வருமாறு பாடுகிறார்.

*'தென்னை வாழை, மா, பலாத்திகழ் பொழில்களும் செழித்த*
*புன்னைகோங்கு, மந்தாரை, செண்பகநிரை, பூவின்*
*முன்னை நேர்இரோ சா, முல்லை மல்லிகை மருவித்*
*........ வாய்ந்திலங்கிய சிரவணபுரம்".*

கந்தசாமி சுவாமிகள் எந்தவொரு ஆசிரியரிடத்திலும் முறையாகப் பாடம் கேட்டதாக ஆதாரம் எதுவும் இல்லை. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் மைந்தரும், அவரது சீடரும் ஆகிய திரு.தி.மு.செந்தினாயகம் ஐயா திருவாமாத்தூரிலிருந்து வந்து சிரவை மடத்தில் மாதக்கணக்கில் தங்கியிருப்பார். அவரிடத்தில் கலந்து உரையாடி, யாப்பிலக்கணம், தமிழ் சிற்றிலக்கிய வகைகள் முதலியன பற்றி அறிந்துகொண்டார். மடாலயத்திற்கு வரும் வடமொழி அறிஞர்களிடமிருந்து வடமொழியைக் கற்றுக்கொண்டார். அன்பர் ஒருவரிடம் மலையாள எழுத்துக்களை மட்டும் நன்றாகக் கற்றுக் கொண்டு தாமாகவே புத்தகங்களைப் படித்து, அம்மொழியிலும் தேர்ச்சி பெற்றார். இவ்வாறு தமிழ், வடமொழி, மலையாளம் ஆகிய மூன்று மொழிகளிலும் புலமை பெற்றவராக கந்தசாமி சுவாமிகள் விளங்கினார்.

கந்தசாமி சுவாமிகளுக்கு இருபத்தியாறு வயது நடந்த பொழுது, தம்முடைய சொத்துக்கள் முழுவதையும் கௌமார மடாலயத்திற்கே உரிமையாக்கிவிட்டார். தான் தோட்டவேலைகள் செய்யும் போதெல்லாம், கவிதைகள் இயற்றிக் கொண்டிருப்பது அவரது வழக்கமாக இருந்தது. அவருடைய இருபதாவது வயதில், கௌமார மடாலயம் வெளியிட்ட 'ஆத்தும ராமசரித்திரம்" என்ற நூலுக்கு சுவாமிகள் திருப்புகழ்ப் பாவில் ஒரு சாத்துகவி கொடுத்துள்ளார். அதன்பின்னர், 1921ஆம் ஆண்டு 'சற்குரு சரித வண்ணக்கோவை" என்ற பெயரில் இராமானந்த சுவாமிகளின் மீது 'வண்ணக்கோவை" பாடியுள்ளார். இந்தக்கோவையினுடைய முன்னுரையில், இவர் பல பாடல்களை இயற்றியுள்ளார் என்று திரு.தி.மு.செந்தினாயகம் ஐயா தெரிவிக்கிறார்.

'இன்னும் இவரால் இயற்றப்பெற்றுள்ள பிரபந்தங்கள் சூரியமூர்த்தி சந்தப்பதிகம், சத்திமதத் திருப்புகழ், வைணவச் சந்தப் பதிகம், கணேசர் யமக வந்தாதி, மேற்படி சந்தம், சிரவணபுரம் ஸ்ரீதண்டபாணி மூர்த்தி சந்தம், மேற்படி யமகவந்தாதி, இரத்தினாசலக் குமாரர் யமகவந்தாதி, மேற்படி சந்தப்பதிகம் முதற் பலவாம்".

நூற்றுக்கும் மேற்பட்ட மாலைகள், யமக அந்தாதிகள், திருப்புகழ், தலபுராணங்கள், வண்ணப்பாக்கள், பிள்ளைத்தமிழ் நூல்கள் எனச் சுமார் 14,539 பாடல்கள் பாடியுள்ளதாக சிரவையாதீனப் பெரும்புலவர் திரு.ப.வெ.நாகராஜன் அவர்கள் தெரிவிக்கிறார்.

இவர் படைத்த பாவினங்களிலெல்லாம் தனித்துவம் மிக்கது 'பக்தமான்மியம்" என்பதாகும். மலையாள மொழியில் உள்ள 'பக்தமாலா" என்கிற உரைநடை நூலைத் தமிழில் காவியமாக்குமாறு குருநாதர் இராமானந்த அடிகள் ஆணையிட்டார். இந்த நூல் 7,371 பாடல்கள் அடங்கியது. வைணவ அடியார்களின் வாழ்வை விவரிக்கும் இந்நூல் ஒரு பெருங்காப்பியமாகும்.

இவருடைய இலக்கியத் திறமை குறித்து சிரவையாதீனப் பெரும்புலவர் திரு.ப.வெ.நாகராஜன் அவர்கள் கூறும்போது:

'இலக்கிய நுகர்ச்சியால் பெறப்படும் காவிய இன்பமே அதன் முடிந்த பயன் என்னும் கொள்கையின் சுவாமிகளுக்கு உடன்பாடு இல்லை. கற்றதனால் ஆய பயன் வாலறிவன் நற்றாள் தொழுவதுதான் என்னும் தமிழ்ப்பொதுமறை தான் அவருடைய அடிப்படைக் கோட்பாடு. தோத்திரப்பாடல்கள் இயற்றுவதை அவர் இறைவழிபாட்டின் ஒரு பகுதியாகவே கருதினார். தாம் மட்டுமின்றிப் பலரையும் ஆலய வழிபாட்டில் ஈடுபாடு கொள்ள வைக்க வேண்டும் என்பதற்காகத்தான் பதிகங்களாகவே பாடினார். தம் ஊர்க்கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவடிவத்தைக் கற்றவர், கல்லாதவர் அனைவரும் எளிமையாகப் பத்துப் பாடல்களைப் பாடி வழிபட வேண்டும் என்பதே சுவாமிகளின் விருப்பம். அதற்காகவே தம் பதிகங்கள் அனைத்திலும் முதல் செய்யுளை இறைவனி.ன் திருவுருவத்தை விளக்கிக் கூறும் தியான சுலோகம் போலவே இயற்றியுள்ளார். இப்பொழுது தெரிந்துள்ளபடி சுவாமிகள் 143 பதிகங்களை இயற்றியுள்ளார். (ஏறத்தாழ 1700 செய்யுள்கள்.) இந்தப் பதிக இலக்கியங்களிலும் ஆங்காங்குப் புலமைத்தன்மை வெளிப்படினும் விஞ்சி இருப்பன பக்திச் சுவையும் வைராக்கியமுமே ஆகும்".

அவருடைய பாடல்களில் பக்தி நெறியைக் கைக்கொள்ளவேண்டும் என்கிற வேட்கையே அதிகமாகத் தெரிகிறது. உலக நிலையாமை, செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை இவற்றைப் பற்றிய அழுத்தமான சிந்தனைகளை இவரது பாடல்களில் அதிகம் காணலாம். ஐம்புலன்களும் இறைவனைச் சிந்திக்க வேண்டும் என்பது இவருடைய சிந்தனையாக உள்ளது. அவிநாசிக் கருணாம்பிகையை வேண்டும்போது பின்வருமாறு பாடுகிறார்:

*'வாக்குஉன் திருப்புக ழேபாட, என்றன் மனம் நினைய,*
*நோக்கு உன் துணையடி நோக்க, செவிசொல் நுகர என்றன்,*
*மூக்குஉன் மணம்கொள, மெய்உன் பரிசத்தின் மூழ்கவுமே*
*ஆக்குஉன் பரம்காண் - அவிநாசி வாழ்கரு ணாம்பிகையே"*

யமகம், திரிபு, மடக்கு, சந்தம, சிலேடை முதலிய பாடல்கள் இவருக்கு கைவந்த கலையாக உள்ளன. நினைத்த மாத்திரத்தில் கவிதைகளை இயற்றும் வல்லமை இவருக்கு இறைவன் கொடுத்த கொடையாகவே தோன்றுகிறது.

ஒருதடவை, காரைமடையில் அரங்கநாதர் கோயிலில் 'அரங்கநாதர் மாலை" என்னும் 103 எழுசீர் விருத்தங்களால் ஆன பிரபந்தம் அரங்கேற்றம் நடைபெற இருந்தது. நூல் அப்பொழுது அச்சிடப்படவில்லை. எனவே, சுவாமிகளின் கையெழுத்துப்படியைக் கொண்டே விரிவுரை முடிந்ததும் அச்சிடலாம் என்பது ஏற்பாடு. அந்தக் காலத்தில் திருமடத்திலிருந்து காரைமடைக்கு மாட்டு வண்டியில் தான் செல்லவேண்டும். சுவாமிகளுக்கு அணுக்கத்தொண்டராக இருந்தவர் பிற்காலத்தில் கஜபூஜைச் சுந்தரசுவாமிகள் என்று புகழ் பெற்ற பெரியாராவார். அவரிடம், சுவாமிகள் கையெழுத்துப் படியை எடுத்துவரச் சொல்லி ஆணையிட்டுவிட்டு, மாட்டுவண்டியில் பயணமானார். சுவாமிகளோடு புறப்படும் அவசரத்தில், சீடர் சுந்தரசுவாமிகள், கையெழுத்துப் படியை எடுத்துக் கொள்ள மறந்துவிட்டார். செல்லும் வழியில் சுவாமிகளும் கேட்கவில்லை, சீடரும் நினைக்கவில்லை. அரங்கேற்றம் செய்வதற்காக மேடையில் ஏறியபொழுது, சீடரிடம் கையெழுத்துப் படியை கேட்டார். சீடர் அஞ்சி, கையெழுத்துப்படி எடுத்துவர மறந்துவிட்டதை மிகமெதுவாக உணர்த்தினார். சுவாமிகள், கொஞ்சம் கூடக் கோபம் கொள்ளவில்லை. மாறாக, மேடையிலேயே புதிய விருத்தங்களை இயற்றிப் பொருள் கூறி அந்த நூலை முறையாக அரங்கேற்றினார். இந்தச் செய்தியைத் தவத்திரு சுந்தரசுவாமிகளே பின்னாளில் பதிவு செய்துள்ளார். இவ்வாறு, மிகப்பெரும்புலவராகக் கந்தசாமி சுவாமிகள் விளங்கியுள்ளார். கொங்கு நாட்டை விட்டு அவர் அதிகம் வெளியில் செல்லாத காரணத்தினால், அவருடைய புகழும், பெருமையும் வெளிஉலகில் அதிகம் தெரியாமல் போனது. ஆகவே, இவரைக் கொங்கு நாட்டு கச்சியப்பர் என்று சொல்வதில் தவறில்லை.

கச்சியப்ப முனிவரைப் போல மிக அதிகமான, அற்புதமான பாடல்கள் இயற்றிய மாபெரும் கவிஞர் கந்தசாமி சுவாமிகள் என்பதில் ஐயமில்லை.

இவருடைய கொள்கை இரண்டு தான். மக்கள் உயிர்க்கொலை செய்யக்கூடாது, அனைவரும் திருக்கோயில் வழிபாடு செய்யவேண்டும். முருகன் வழிபாட்டை முதன்மையாகக் கொள்ளவேண்டும். இவற்றைப் பரப்பவே அவர் கொங்கு மண்டலம் முழுவதும், கிராமம் கிராமமாகச் சென்று விழாக்களில் பங்கேற்று, சொற்பொழிவாற்றி வந்திருக்கிறார். பல கிராமங்களில் கோயில்களில் பலியிடுவதற்காக, மற்றவர்களால் விலைக்கு வாங்கியிருந்த, ஆடு, கோழி போன்ற உயிரினங்களைப் பணத்தைக் கொடுத்து விடுவித்துவிடுவது உண்டு என்று சொல்லப்படுவது உண்டு. உலக மக்கள் அனைவரும் இன்பமாக

வாழவேண்டும், துன்பம் பெறக்கூடாது என்பது இறைவனிடத்தில் இவர் வைக்கும் விண்ணப்பமாக உள்ளது.

*'எள்ளைஒத் தெனினும் என்நலம் கருதாது*
*இகத்துஅமை உயிர்த்திரள் ஆம்உன்*
*பிள்ளைகட்கு உள்ளக் கவலைமுற்று ஒழிந்துஉள்ளம்*
*பெரிதுஉவந்து இச்சைதோய் பொருள்கள்*
*கொள்ளைகொள் ளையதாய்க் கொடுத்திட விழைந்தேன்*
*குணம்எனத் தோன்றில்எற்கு அருள்வாய்".*

இவ்வாறு பெரும்புலவராகவும், ஞானியாகவும், ஆதீனத் தலைவராகவும் இவ்வாறு பன்முகத்தன்மைக் கொண்ட பேரருளாளராக கந்தசாமி சுவாமிகள் திகழ்ந்திருக்கிறார். சுவாமிகளுடைய பாடல்கள் கொஞ்சம் கடின நடையில் இருக்கும். இவருடைய பாடல்கள் பலாப்பழம் போன்றது. சற்று அகழ்ந்ததும், ஆழமாகவும், திண்மையாகவும், அற்புதக் கருத்துக்கள் அடங்கியதுமான அரிய செய்யுட்களை இவருடைய படைப்பில் காணலாம்.

சுவாமிகளுக்கு, நீரிழிவு நோய் இருந்தது. அதனால் வலது காலில் ஒரு புண் ஏற்பட்டபோது, அது ஆறவில்லை. சுவாமிகளும் கவனிக்கவில்லை. இறுதியில் வலது காலை முழங்கால் வரை எடுத்துவிடவேண்டும் என்று மருத்துவர்கள் கூறினர். சுவாமிகளும் உடன்பட்டார். ஆனால் அறுவைச் சிகிச்சை செய்யும்பொழுது, தமக்கு மயக்க மருந்து எதுவும் கொடுக்கக்கூடாது என்று மருத்துவர்களிடம் கூறினார். மருத்துவர்களும் உடன்பட, மயக்க மருந்து கொடுக்கப்படாமலேயே இவரது கால் அறுவைச் சிகிச்சையின் மூலம் அகற்றப்பட்டது. சுவாமிகள் நினைவை வேறு ஒருபுறம் நிலைநிறுத்தி, நூல் ஒன்றைப் படித்துக் கொண்டிருந்தார். அறுவைச் சிகிச்சை முடிந்ததும், முடிந்ததா என்று வினவியிருக்கிறார். இனிமேல் உடல் வாழ்வு தேவையில்லை என்று கூறி, சமாதி நிலை எய்திவிட்டார். இந்தச் செய்தியை அவருடன் அப்போது சிறுவனாக இருந்த, துடியலூர் விசுவநாத கவுண்டர் என்பவர் பதிவு செய்துள்ளார். அப்போது சுவாமிகளுக்கு வயது 56 தான்.

இவ்வாறு, முருக நெறியையும், பக்தி நெறியையும் கொங்கு நாட்டில் வளர்த்து, மிகப்பெரும் கவிஞராக நூல்கள் பல படைத்த மகான் சுந்தசாமி சுவாமிகள். அவருக்குப்பின் இந்த ஞான பரம்பரை, கஜபூஜைச் சுந்தரசுவாமிகள், தற்போது தவத்திரு குமரகுருபர சுவாமிகள் என வாழையடி வாழையாகக் கௌமார மடாலயம் வளர்ந்து வருகிறது.

## அருணகிரியாரின் பக்தித்திறம்

முனைவர் மா. முத்துவிஜயலட்சுமி,
உதவிப் பேராசிரியர்
அருள்மிகு பழனியாண்டவர் மகளிர் கலைக்கல்லூரி,
சின்னக்கலையம்புத்தூர், பழனி.

*"உண்டோர் அதோமுகம் உத்தமம் ஆனது*
*கண்ட இச்சத்தி சதாசிவ நாயகி*
*கொண்ட முகம்ஐந்து கூறும் கரங்களும்*
*ஒன்றுஇரண்டாகவே மூன்று நால் ஆனதே"* (திருமந்திரம் – 1402)

சிவபெருமானிடம் அருவமாய் இருந்த அதோமுகம் வெளிப்பட்டு நிற்கக்கூடிய முற்றிய திருவும், மூவா இளநலமும், முடிவில்லாத ஆற்றலும், முதிர்ந்த இன்பமும், மூளும் ஞானமுமே முருகக் கடவுளின் அவதாரமாகும். இவன் இச்சா சக்தி, கிரியா சக்தி என்னும் இரண்டினையும் வள்ளி, தெய்வானை என்னும் இரண்டு மனைவியராகக் கொண்டவன். ஞானசக்தியினை ஒளிரும் வேற்படையாய் கைக்கொண்டு நிற்பவன். ஆணவம் என்னும் மயிலை வாகனமாக்கிக் கொண்டு ஊர்ந்தவன். சேவற் கொடியைத் தனக்குரியதாகக் கொண்டவன். அன்புக்கு எளியவனாய், அறிவினில் வெளிப்பட்டு கண்ணுக்கினியவனாய், கலியுக வரதனாய் நம்மை வாழ்விக்க வந்தவன் முருகக்கடவுள் ஆவார். அத்தகைய முருகப் பெருமானின் அருளைப் பெற்றவர் அருணகிரிநாதர் ஆவார்.

### அருணகிரிநாதரின் வாழ்வு நிலை

அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் நல்ல குடியில் பிறந்து நல்லொழுக்கத்துடன் வாழ்ந்து சைவ சமயத்தில் ஈடுபாடு மிக்க பெற்றோர்களுக்குப் புதல்வராகப் பிறந்தார். இளமையிலேயே தமிழ், வடமொழி இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தார். இறைவன் திருவருளால் நன்கு கவிபாடும் திறன் படைத்தவர். நற்குடிப் பிறப்பும், நற்பண்பும் உடைய பெண்ணைத் திருமணம் புரிந்து இல்லறம் நடத்தினார். ஊழ்வினையின் பயனாகத் தீய வழியில் சென்றார். திருவண்ணாமலைக் கோயில் கோபுரத்தின் உச்சியில் இருந்து 'முருகா' எனக் கூறிக்கொண்டே கீழே விழுந்தார்.

அத்தருணத்தில் முருகப்பெருமான் தடுத்தாட்கொண்டு 'சும்மா இரு சொல்அற' என்ற மௌன மந்திர உபதேசத்தை அளித்தவுடன் நிருவிகற்ப சமாதியில் அமர்ந்தார். உடனே கந்தவேல் காட்சித் தந்து 'முத்தைத்திரு' என்னும் முதல் அடியினை எடுத்துக்கொடுத்து 'திருப்புகழ் பாடுக' என அருள் புரிந்தார். அதன்பின் அருணகிரியார் திருப்புகழைப் பாடினார். மேலும் கந்தர் அலங்காரம், கந்தர் அந்தாதி, கந்தர் அநுபூதி, வேல் விருத்தம், மயில்

விருத்தம், திருவெழுக்கூற்றிருக்கை, திருவகுப்பு முதலான நூல்களையும் எழுதியுள்ளார்.

### திருப்புகழின் பெருமை

திசைகள் நான்கிலும் அன்பர்கள் அற்புதம் அற்புதம் என்று பெருமையோடு கூறும் சித்திர கவித்துவம் மிகுந்து அருளாலும், பொருளாலும், சந்தத்தாலும் ஓசையாலும் உயர்ந்தது திருப்புகழாகும். திருப்புகழை ஓதுவோருக்கு ஞானமும், சகல நன்மைகளும் வானம் அரசாள வரம் மட்டுமன்றி முக்தி வீடு பேறும் உண்டாகும்.

*'ஞானம் பெறலாம் நலம்பெறலாம் எந்நாளும்*
*வானம் அரசாள வரம் பெறலாம் – மோனவீ*
*டேறலாம் யானைக் கிளையான் திருப்புகழைக்*
*கூறினார்க் காமேயிக் கூறு'* (திருப்புகழ் – 3)

இவ்வுயர்ந்த திருப்புகழை மறவாமல் விருப்பத்தோடு பலகாலும் பாடிப் பரவும் அடியார்களுக்கு இறைவன் தண்ணருள் புரிகின்றான்.

### காலனை எதிர்த்து நிற்றல்

*"தண்டா யுதமும் திருசூல*
*மும்விழத் தாக்கியுன்னைத்*
*திண்டாட வெட்டி விழவிடு*
*வேன்செந்தில் வேலனுக்குத்*
*தொண்டா கியஎன் அவிரோத*
*ஞானச் சுடர்வடிவாள்*
*கண்டாய்அடா அந்த காவந்து*
*பார் சற்றெென் கைக்கெட்டவே"* (க.அலங்காரம் – 25)

செந்தில் ஆண்டவனுக்கு அடியவனாக இருப்பதால் காலனிடம் அச்சம் இல்லை. 'சற்றே என் கைக்கு எட்டவா' என அவர் கூறுவதில் இருந்து 'நான் உன் அருகே வரமாட்டேன்' என்றும், 'துணிவு இருந்தால் நீ வருவாயாக' என அழைப்பதில் இருந்து அருணகிரிநாதரின் முருகபக்தியும், அதனால் காலனுக்கு அவர் விடும் சவாலும் எளிதில் புலனாகும்.

*"சிந்தை வாரிச நடுவினு நெறிபல*
*கொண்ட வேதநன் முடியினு மருவிய"* (திருப்புகழ் 1:2-3)

வேதத்தில் கர்மநெறி, பக்திநெறி, யோகநெறி, ஞானநெறி எனப் பல நெறிகள் கூறப்படுகின்றன. பெரிய மாளிகையில் பல வழிகள் இருப்பது இயற்கையாகும். அதுபோல முக்தி என்னும் வீட்டிற்குச் செல்லும் நெறிகளும் பல உள்ளன. 'சேதாம் பலதுறை' எனக் கந்தர் அந்தாதியிலும் கூறியுள்ளார். ஒரு நெறி இருப்பதை விடுத்து பல நெறிகள் இருப்பது ஏன் என்னும் வினாவிற்குப் பெரிய கலாசாலையில் பல வகுப்புகள் இருப்பதைப் போன்று,

ஆன்மாக்களின் தன்மைக்கு ஏற்றவாறு நெறிகளும் பல இருக்கின்றது. வேதம் என்பது அறிவுநூல் எனப்படுகிறது. 'வித்' என்னும் பகுதியின் அடியாக அச்சொல் பிறந்தது. முருகவேள் திருவடியானது தேவருக்கும் மூவருக்கும் மற்ற யாவருக்கும் எட்டாதது. அத்தகைய அருட்பதம் அருணகிரியாருக்கு எளிதில் கிடைத்தது.

என்றும் மறவா நிலை

மறவாமையே பிறவாமைக்கு ஏதுவாகும். ஆதலினால் தான் இறைவன்பால் ஆன்றோர்கள் மறவாத வரத்தை வற்புறுத்தி வேண்டுகிறார்கள்.

*"எத்தான் மறவாதே நினைக்கின்ற மனத்துன்னை"*(7ம்திருமுறை, 1:2)

எனச் சுந்தரமூர்த்தி நாயனாரும்,

*"நெஞ்சம் உமக்கே இடமாக வைத்தேன்*
*நினையாது ஒருபோதும் இருந்தறியேன்"* (4ம் திருமுறை, 2:1-2)

எனத் திருநாவுக்கரசரும்,

*"கிண்கி ணீமுக விதபத யுகமலர்*
*தந்த பேரருள் கனவிலு நனவிலு மறவேனே"* (திருப்புகழ், 1:11-12)

என அருணகிரியாரும் கூறிய ஒருமைப்பாட்டை உணர முடிகின்றது. மறத்தல் இறத்தலுக்குச் சமமானதாகும். நினைத்தல் பிறத்தலுக்குச் சமமாகும். எனவே மறத்தலும் நினைத்தலும் இறப்பு, பிறப்பாகக் கருதப்படுகின்றது. ஒரு நாளைக்கு நாம் பலமுறை மறப்பதும் நினைப்பதுமாக இருக்கின்றோம். இருப்பினும் இறந்து இறந்து பிறக்கின்றோம். கணந்தோறும் இறக்கின்றோம். மீண்டும் மீண்டும் பிறக்கின்றோம். இந்த இறப்பு பிறப்பு வேண்டுமென்றால் நினைத்தலையும், மறத்தலையும் நீக்க வேண்டும் என்கிறார். இதனையே

*"கருதா மறவா நெறிகாண எனக்கு*
*இருதாள் வனசம் தர என்று இசைவாய்*
*வரதா முருகா மயில் வாகனனே*
*விரதா சுரசூட விபாடணனே"* (க.அநுபூதி -21)

நினைக்க முடியாததும் மறக்க முடியாததுமான ஒரு வழியைக் கண்டு கொள்ள உன் தாமரை மலரையொத்த இரு திருவடிகளை அடியேனுக்குத் தர எப்பொழுது திருவருள் புரிவாய் எனக் கேட்கின்றார். இதனையே தாயுமானவரும்,

*"மறக்கின்ற தன்மை இறத்தலொப் பாகும் மனமதொன்றில்*
*பிறக்கின்ற தன்மை பிறத்தலொப் பாகும்இப் பேய்ப்பிறவி*
*இறக்கின்ற எல்லைக் களவில்லை யேஇந்த சன்மஅல்லல்*
*துறக்கின்ற நாள்எந்த நாள்பர மேநின் தொழும்பனுக்கே"* (பா.எ.447)

உயிர்களின் மறக்கின்ற தன்மை இறப்புக்கு ஒப்பானதாகும். நெஞ்சமானது ஒரு பொருளை நினைக்கும் தன்மை பிறப்பதற்கு ஒப்பாகும். பேய்த்தன்மையை ஒத்த இந்தப் பிறவிகள் கழிந்து கழிந்து மீண்டும் மீண்டும் பிறப்பதற்கு ஓர் அளவு இல்லை. இந்தப் பிறப்புத் துன்பமானது உன் அடியேனுக்குத் துறக்கின்ற நாள் எந்நாளோ? என வேண்டுவதாக உள்ளது. இறைவனுடைய திருவருளைக் கனவிலும் நனவிலும் மறவேன் என்னும் அடிகளின் மூலமாக அருணகிரியாரின் பக்தித்திறம் வெளிப்படுகிறது.

**முருகன் அருளைப் பெறுதல்**

*"பரகிரியு லாவு செந்தி*
*மலையினுட னேயி டும்பன்*
*பழநிதனி லேயி ருந்த குமரேசா*
*பதிகள் பல வாயி ரங்கள்*
*மலைகள் வெகு கோடி நின்ற*
*பதமடியர் காண வந்த கதிர்காமா"* (திருப்புகழ், 2:13-18)

திருப்பரங்குன்றத்திலும் திருஉலாவானது இடையறாது நிகழக்கூடிய திருச்செந்தூர் என்ற சந்தன மலையிலும், இடும்பனால் கொண்டு வரப்பட்ட பழநி மலை மீதும் எழுந்தருளி இருக்கும் குமாரக் கடவுள் பல்லாயிரக்கணகான திருத்தலங்களிலும், கோடிக்கணக்கான மலைகளிலும் நிலைபெற்ற அவனது திருவடியைக் கண்டு அடியவர்கள் நலம்பெற்று சிறப்படைவதற்கு வந்து அருளிய கதிர்காமக் கடவுளாகத் திகழ்கின்றான் எனக் குறிப்பிட்டுள்ளார்.

*"ஆசாப சாசு மூடி மேலிட*
*ஆசார வீன னாகி யேமிக*
*ஆபாச னாகி யோடி நாளும மிந்திடாதே"* (திருப்புகழ், 5:4-6)

ஆசையாகிய பேய்ப் பிடித்ததனால் நன்மை இன்னதென்று அறியாமல், தீமையை நன்மையென்றும், துக்கத்தைச் சுகமென்றும் எண்ணித் துன்பப்படுவர், ஆன்றோர்கள் கூறியவற்றை மேற்கொள்ளாது நீராடாமல் உண்பதும், உடுத்திய உடையினையே மீண்டும் உடுப்பதும், எச்சில்பட்ட கலங்களில் உண்பதும் பலர் குடித்த பாத்திரங்களில் வாய்வைத்துக் குடிப்பதும், மது மாமிசங்களை உண்பதும், இது போன்ற தீயவற்றைச் செய்து துன்பப்படக்கூடிய மாந்தர் பலராவர். மனத்தால் தீயவற்றை நினைத்தும், வாக்கினால் தீயனவற்றை உரைத்தும், செயலால் தீயவைப் புரிந்தும் கெட்டகுணத்தை உடையவர்கள் இம்மை, மறுமை நலன்களைச் சேர்த்து இழந்துவிடுவர். மனம் தூய்மை பெறுவதற்குத் தியானமும், வாக்கு தூய்மை அடைய இறைவனைப் போற்றுதலும், உள்ளம் தூய்மை பெறவழிபாடும் செய்து இறைவனின் அருளைப் பெறுதல் வேண்டும்.

*"நானாவி கார புற்பு தப்பி றப்பற*
*ஏதேம மாயெ னக்க னுக்ர கித்ததும் மறவேனே"* (திருப்புகழ்,7:11-12)

பிறவி என்பது நீர்க்குமிழிக்கு நிகரானதாகும், அவை தோன்றி மறையும் இயல்புடையது. இந்த இழிவான பிறப்பிலிருந்து அருணகிரியாரை நீக்கி, மீண்டும் அங்கு செல்லாத நிலையினை வடிவேலன் வழங்கினார் என்ற கருத்தினை உணர்த்துகின்றது.

**முக்தி நிலை பெறும் வழி**

*"இரைகொ ளும்படி யூடே பாடே*
*மிகுதி கொண்டொழி யாதே வாதே*
*யிடைக ளின்சில நாளே போயே"* (திருப்புகழ், 8: 4-6)

பறவை, விலங்கு முதலியவற்றை உண்பதில் மனிதம் விருப்பம் கொள்ளக்கூடாது. ஏனைய உயிர்கள் இடைவிடாமல் உணவைத் தேடுவதையே வேலையாகக் கொள்ளும் அதிகமான உணவினை நாடுவதால் மனிதன் விலங்கினைப் போல் ஆகி விடுகின்றான். வீணாக வாழ்நாள் கழிந்து முதுமை உடையவனாக ஆகின்றான். இழந்தால் பெற முடியாதது இளமைப் பருவம் ஒன்றேயாகும். வள்ளுவரும்,

*"இழிவறிந் துன்பான்கண் இன்பம்போல் நிற்கும்*
*கழிபே ரிரையான்கண் நோய்"* (குறள் – 946)

அளவு குறைவாக உண்பவனிடம் இன்பம் நீங்காமல் இருப்பது போல், அளவுக்கு மிகுதியாக உண்பவனிடத்து நோயும் நிலைத்து இருக்கும் எனக் குறிப்பிட்டுள்ளார். சிலர் விலங்குபோல் அதிகமான உணவினை உண்ணும் காரணத்தினால் நோய்வாய்ப்பட்டு வருந்துவர். உடலை நெடுநாள் வைத்து இருக்க விரும்புபவர்கள் உணவை அளவறிந்து உடம்புக்கு ஏற்றாற்போல் உண்ணுதல் வேண்டும்.

*"காலன் வருமுன்னே கண்பஞ் சடைமுன்னே*
*பாலுண் கடைவாய் படுமுன்னே – ஓலஞ்செய்*
*துற்றார் அழுமுன்னே ஊரார் சுடுமுன்னே"* (பா.எ.379)

என்னும் வரிகளின் மூலம், கூற்றுவன் நம் உயிரைக் கவர்ந்து கொண்டு செல்ல வருவதற்கு முன்பே, நம் கண்கள் ஒளியிழந்து பஞ்சடைந்து போவதற்கு முன்பே, பருகும் பாலானது கடைவாய் வழியே ஒழுகிப் போவதற்கு முன், உறவினர் நம் உயிர் நீங்கியது என்று உணர்ந்து மேல் விழுந்து அழுவதற்கு முன், ஊரில் உள்ளவர்கள் இந்த உடலை எடுத்துச் சென்று சுட்டெரிப்பதற்கு முன்பே இறைவனின் திருநாமத்தைக் கூறிக் கொண்டிருக்க வேண்டும் எனப் பட்டினத்தடிகளாரும் குறிப்பிடுகின்றார். மேல் மாடியினை அடைவதற்கு ஏணி எவ்வளவு முக்கியமோ, அதுபோல முக்தி வீடு அடைவதற்கு இந்த உடம்பானது மிக இன்றியமையாததாகும். மாடி மீது ஏறி விட்டவன் ஏணியை விரும்பாததைப் போல் முக்திநலம் பெற்றவன் அழியக்கூடிய இந்த உடம்பினை விரும்ப மாட்டான்.

*"அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு*
*பெற்றான் நெடிதுய்க்கு மாறு"* (குறள் – 943)

இந்த மனித உடம்பினை நெடுங்காலத்திற்குக் காப்பாற்றும் வழி யாதெனின், முன்பு உண்டது செரித்தபின், உண்பதனை அளவாக உண்ணவேண்டும் என வள்ளுவர் எடுத்துரைக்கின்றார்.

*"........................ வயதாகி*
*நரைக ளும்பெரி தாயே போயே"* (திருப்புகழ், 8: 6-7)

எல்லாப் பிறப்புக்களிலும் மனிதப் பிறப்பு மிகவும் மேலானதாகும். அத்தகைய மனிதப் பிறப்புக்கு இறைவன் நரையை (முதுமைப் பருவத்தை) வைத்திருக்கின்றான். ஐந்தறிவு வரை உள்ள உயிர்கட்கு நரையில்லை. அவைகள் உண்ணவும், உறங்குவதற்கும் மட்டுமே உரியன. மனிதப் பிறப்பு அரிய, பெரிய தவம் செய்து பரம்பொருளை அடைவதற்குரியதாகும். அதனை மறந்து இருப்பவர்க்கு நினைவு படுத்தும் விதமாகவே இறைவன் நரையை மக்களுக்கு வழங்கி இருக்கின்றான். ஆகவே நரைக்கத் தொடங்கிய நிலையில் இருந்தாவது சிறிது தியான நெறியில் ஈடுபட்டு உயிருக்கு உறுதியினைத் தேடிக் கொள்ளவேண்டும்.

*"நரைவரும் என்றஞ்சி நல்லறி வாளர்*
*குழவி யிடத்தே துறந்தார்"* (நாலடியார், 11: 1-2)

என்னும் வரிகளின் மூலம் நல்ல விவேகம் உள்ளவர்கள் மூப்பு கட்டாயமாக வரத்தக்கது என்று நினைத்து இளம் பருவத்திலேயே இல்வாழ்க்கையை விட்டார்கள் என்ற கருத்து புலனாகின்றது.

இதன் மூலம் அருணகிரிநாதர் இறைவனை வணங்கிய தன்மையினையும், இறையருள் பெற்றநிலையையும் முக்தி நிலை அடைவதற்குரிய வழிமுறைகளையும் அறிந்து கொள்ளலாம். நாமும் அதைப்போல் முருகனை வணங்கினால் இறையருள் பெற்று சிறப்புடன் வாழலாம் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்க்
கருவாய் உயிராய் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகமே.

## ஆறுபடைவீடு (4,5,6 மட்டும்)

முனைவர் இரா.சு. முருகன்
உதவிப் பேராசிரியர்
மொழிபெயர்ப்புத்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்-613010.

முருகப்பெருமான் எல்லா உலகங்களிலும் நீக்கமற நிறைந்துள்ளவன் என்றாலும் அவன் சிறப்பாக வாழும் இடங்கள் ஆறு படைவீடுகளாகும் ஆறுபகைவர்களான காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சர்யம், ஆணவம் ஆகியவற்றை அழிக்கும் ஞான வீரனே முருகன் ஆவார். முருகனைப் போற்றிப் பாடிய இலக்கிய நூல்கள் பல உள்ளன. அவை அருணகிரிநாதரின் கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், திருப்புகழ் பாம்பன் சுவாமிகளின் பாடல்கள், கந்தபுராணம், திருமுருகாற்றுப்படை, பிள்ளைத்தமிழ் குமரகுருபரரின் கந்தர்கலி வெண்பா ஆகிய நூல்கள் முருகனின் புகழ் பேசக்கூடிய பக்தி இலக்கியங்கள் ஆகும். முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் நான்கு, ஐந்து மற்றும் ஆறாவது படைவீடுகளைப் பற்றி விளக்குவதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

### முருகப்பெருமானின் சிறப்புப் பெயர்கள்

குமரன் - என்றும் மாறா இளைய தோற்றத்தை உடையவன் வேலன், வேலை ஆயுதமாக ஏந்தியவன். கார்த்திகேயன், கார்த்திகைப் பெண்களால் வளர்க்கப்பட்டவன். குக்குடத்வஜன், சேவல் கொடியுடையவன். கௌரிதன்யன், அம்பிகையின் மைந்தன். கரிநிவாசன், மலையில் வசிப்பவன். ஞானபண்டிதன், ஞானமே வடிவானவன். கந்தன், துள்ளிக் குதிப்பவன். சரவணபவன், சரவணப் பொய்கையில் தோன்றியவன், சுவாமிநாதன், தகப்பனுக்குத் தலைவன் ஆகிய இன்னும் பல பெயர்கள் உள்ளன.

### சுவாமிமலை

தஞ்சாவூர் மாவட்டத்திலிருந்து 33 கி.மீ தொலைவிலும் கும்பகோணத்திலிருந்து 8 கி.மீ தொலைவிலும் சுவாமிமலை உள்ளது. முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் இது நான்காவது படைவீடாகும். தஞ்சாவூர் மாவட்டத்தில் மலைகளே இல்லாத இப்பகுதியில் சுவாமிமலை உள்ளது. குன்றுதோறும் இருப்பான் முருகக்கடவுள் என்பதற்கிணங்க இம்மலை மீது முருகப்பெருமான் அருள்புரிந்து வருகிறார்.

இக்கோயிலின் மேல் தளத்தை அடைய 60 படிகட்டுகள் உள்ளன. தமிழ் வருடங்களின் 60 பெயர்கள் அந்த படிகட்டுகளில் எழுதப்பட்டுள்ளன. தேவதைகள் சுவாமியைப் பிரார்த்தனை செய்து படிகளாக உள்ளதாக

கூறப்படுகிறது. தமிழ் ஆங்கிலப் புத்தாண்டு தினங்களில் இந்தப் படிகளுக்கு வத்திரம் சாத்தி, தேங்காய், பழம் வைத்து பாடல் பாடி பூசை செய்கிறார்கள். இந்தப் பூசைக்குத் திருப்படி பூசை என்று பெயர். இத்தலத்தில் படி பூசை முக்கிய அம்சமாக கருதப்படுகிறது.

சுவாமிமலை முருகன் கோயிலில் எப்போதும் திருவிழாக் கோலம் தான். இங்கும் ஆடிக்கிருத்திகை விழா, கந்தசஷ்டிவிழா, வைகாசி விசாகப் பெருவிழா, பங்குனி உத்திரப் பெருவிழா ஆகியவை மிகவும் சிறப்பாக நடக்கின்றன. இத்தலத்தில் உறையும் கதிர்வேலன், தனது தந்தை சிவபெருமானுக்குக் குருவாக இருந்து பிரணவ மந்திரத்தை உபதேசம் செய்ததாகப் புராணத் தகவல்கள் தெரிவிக்கின்றன. இதனால் இங்கு வீற்றிருக்கும் முருகப்பெருமானைச் சுவாமிநாதன், தகப்பன் சுவாமி என்று அழைக்கிறார்கள். இதன் காரணமாகவே இந்தத் திருத்தலம் சுவாமிமலை என்று அழைக்கப்படுகிறது.

இத்தலத்தைத் திருமுருகாற்றுப்படையும் சிலப்பதிகாரமும் திரு ஏரகம் என்று குறிப்பிடுகின்றன. முருகனின் சிறப்பு மிக்க அழகிய படைவீடு என்ற பொருளில் (ஏர், அகம்) ஏரகம் என்று அழைக்கப்படுகிறது. ஏர்த் தொழிலான விவசாயத்தில் சிறந்த பகுதியாக உள்ள அகம் என்ற பொருளைத் தருகின்றன.

திருத்தணி

திருவள்ளூர் மாவட்டத்தில் திருத்தணி உள்ளது. ஆறுபடை வீடுகளில் ஐந்தாவது படைவீடாகும். தேவர்களுக்குத் தீராத துன்பம் கொடுத்து வந்த சூரபத்மனுடன் போர் புரிந்து தேவர்களின் துயரத்தை நீக்கி வள்ளியை மணந்து கொள்ள விளையாட்டாகப் போர்புரிந்து கோபம் தணிந்து அமர்ந்த தலம் திருத்தணிகை. அடியார்களின் துன்பம், கவலை, பணி, வறுமை முதலியவற்றைத் தணிக்கும் இடம் திருத்தணி ஆகும். திருத்தணி முருகன் கோயில் மிகவும் பழமையானது. அருணகிரிநாதர் இத்தலத்தைப் போற்றி 63 திருப்பாடல்களைப் பாடினார். இத்தலம் 600 ஆண்டுகளுக்கு முன்பே புகழ்ப்பெற்று இருந்திருக்கிறது. 1000 ஆண்டுகளுக்கு முன்பே பல்லவ, சோழ மன்னர்களால் இத்தலம் போற்றப்பட்டுள்ளது. பாம்பன், குமரகுருதாச சுவாமிகள், வடலூர் இராமலிங்க அடிகள், கந்தைய தேசிகர், கச்சியப்ப முனிவர், கச்சியப்ப சிவாச்சாரியார் மற்றும் அருணகிரிநாதர் முதலிய சான்றோர்கள் இத்தலத்தைப் பெரிதும் புகழ்ந்துள்ளார்கள்.

ஆடிகிருத்திகை, தைகிருத்திகை மற்றும் மாசி கிருத்திகை முதலிய சிறப்பு நாட்களில் திருத்தணியில் பக்தக்கோடிகள் பூக்காவடி, பால்காவடி ஆகிய பிராத்தனையைச் செலுத்துகின்றனர். சிவபெருமான், திருமால், சீராமர், பிரம்மதேவர், கலைமகள் ஆகியோரும் திருத்தணி முருகனை வணங்கி வழிப்பட்டதாகப் புராணங்கள் கூறுகின்றன. தமிழகத்தின் வடக்கு எல்லையாக விளங்கும் ஊர் திருத்தணி. முருகப்பெருமானின் ஐந்தாம் படைவீடு என்ற பெருமை இத்தலத்திற்கு உண்டு. முருகப்பெருமானின் சக்தி வாய்ந்த

திருத்தலங்களில் ஒன்று. இக்கோயிலில் அமைந்திருக்கும் தங்க விமானம் கோயிலின் சிறப்பை மேலும் மெருகேற்றியுள்ளது. ஆண்டுக்காண்டு கோயிலுக்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கை தொடர்ந்து அதிகரித்து வருகிறது.

**பழமுதிர்ச்சோலை**

முருகப்பெருமானின் ஆறாவது படைவீடாகப் போற்றப்படுவது பழமுதிர்ச்சோலை. பழமுதிர்ச்சோலைக்குச் சோலைமலை என்ற பெயரும் உண்டு. இங்குள்ள முருகப்பெருமான் வெற்றிவேல் முருகன் என்று அழைக்கப்படுகிறார். பழமுதிர்ச்சோலை என்பதற்குப் பழங்கள் உதிர்க்கப் பெற்றசோலை என்று பொருள். எந்த முருகன் கோயிலுக்கும் இல்லாத தனிச்சிறப்பு இக்கோயிலுக்கு உண்டு. இத்தலம் அமைந்துள்ள மலையின் அடிவாரத்தில் கள்ளழகர் கோயிலும், மலை உச்சியில் முருகன் கோயிலும் உள்ளது.

ஆறாவது படைவீடான பழமுதிர்ச்சோலை மற்ற படைவீடுகளைப் போல பிரமாண்டமான கோயில் இங்குக் கிடையாது. முக்காலத்தில் வேல் வழிப்பாடு மட்டுமே இருந்துள்ளது. அண்மைக் காலங்களில் தான் தனி ஆலயமும் முருகனின் சிலையும் வைத்து வழிப்பாடுகளும் தோன்றியுள்ளன. குறிஞ்சிக் கடவுளான முருகன் முதியவராகத் தோன்றி நக்கீரனுக்குக் காட்சியளித்த இடம் பழமுதிர்ச் சோலையாகும்.

ஆரம்பக் காலத்தில் இங்கு வேல் மட்டுமே இருந்தது. பிற்காலத்தில் முருகப்பெருமான் வள்ளி, தெய்வானையுடன் ஞான தியான ஆதி வேலுடன் ஒரே பீடத்தில் நின்ற கோலத்தில் அருள்பாலிக்கும் சிலை அமைக்கப்பட்டுள்ளது. ஆறுப்படை வீடுகளில் இங்கு மட்டும் தான் முருகன் வள்ளி தெய்வானையுடன் காட்சியளிக்கின்றார். இந்தக் கோயில் கந்தசஷ்டி விழா முக்கிய விழாவாகக் கொண்டாடப்படுகிறது. தைப்பூசம், வைகாசி விசாகம், கிருத்திகை ஆகிய நாட்களிலும் சிறப்பு பூசைகளும் அபிஷேகங்களும் நடைபெறுகின்றன. ஆறுபடைவீடுகளில் மூலஸ்தானத்தில் தம்பதியருடன் காட்சி தரும் கோயில் பழமுதிர்ச்சோலை மட்டுமே. கந்தசஷ்டி விழாவின் தொடர்ச்சியாக அங்குத் திருக்கல்யாணம் நடத்தப்படுகிறது.

ஆறுபடைவீடுகள் ஒவ்வொன்றிலும் திருவிளையாடல் புரிந்த முருகன் அத்தலத்தில் மதுரையை நோக்கி சென்றுக் கொண்டிருந்த அவ்வையிடம் திருவிளையாடல் புரிந்ததாக இலக்கியங்கள் கூறுகின்றன. தனது புலமையால் புகழின் உச்சிக்குச் சென்ற அவ்வைக்குத் தான் என்ற அகங்காரத்தை விடுவிக்க எண்ணி மதுரைக்குக் காட்டு வழியாக நடந்து செல்லும் வழியில் ஆடு மேய்க்கும் சிறுவனாகத் தோன்றி நாவல் மரத்தில் ஏறி அமர்ந்துக் கொண்டான். அவ்வை அச்சிறுவனிடம் எனக்குப் பசிக்கிறது நாவல் பழங்களைப் பறித்து தரமுடியுமா? என்று கேட்டார். அதற்குச் சிறுவனாக இருந்த முருகன் சுட்டபழம் வேண்டுமா? சுடாதபழம் வேண்டுமா? என்று கேட்டார். இக்கேள்வி புரியவில்லை அவ்வைக்குப் பழத்தில் சுட்டபழம்,

சுடாதபழம் என்று இருக்கிறதா என்று எண்ணிக் கொண்டு விளையாட்டாக சுட்ட பழத்தையே கொடு என்றார். நாவல் மரத்தின் கிளை ஒன்றை சிறுவனாக இருந்த முருகப்பெருமான் அசைக்க நாவல் பழங்கள் கீழே விழுந்தன. அந்த நாவல் பழங்களைப் பொறுக்கிய அவ்வை மணல் ஒட்டி இருந்ததால் அவற்றை ஊதினார். இதைப் பார்த்துக் கொண்டிருந்த முருகன் என்ன பாட்டி பழம் சுடுகிறதா? என்று கேட்டார். சிறுவனின் இக்கேள்வியே அவ்வையின் அகங்காரம் பறந்து போனது. தன்னைச் சிந்திக்க வைத்த சிறுவன் மனிதனாக இருக்க முடியாது என எண்ணி குழந்தாய் நீ யாரப்பா? என்று கேட்டார். சிறுவனாக இருந்த முருகப்பெருமான் தனது சுய உருவத்தை அவ்வைக்குக் காண்பித்தார். உலக உயிர்களின் மீது உலகப்பற்று என்னும் மணல் ஒட்டிக் கொண்டுதான் இருக்கிறது. அதனைப் போக்க கல்வியறிவு மட்டும் போதாது இறைவனை அறியும் மெய்யறிவு தேவை என்பதை உணர்த்துகிறது.

முடிவுரை

பொதுவாகக் கடவுளர் அவதாரங்கள் அதர்மத்தை அழித்து தர்மத்தை நிலைநாட்டும் பொருட்டு உருவானதாகும். வசிஷ்டாத்துவைதம் கூட இறைவனின் ஐவகை நிலைகளைப் பற்றிக் கூறும்போது விபவம் என்ற நிலை தீமையை அழித்து உலகில் நன்மையை நிலைநிறுத்துவதைக் குறிக்கும். முருகன் அசுரர்களை வென்று அவர்களின் தீமையை நீக்கி அவர்களுக்கு மறக்கருணை என்னும் நல்லருள் புரிகின்றான். உலகில் உள்ள ஆண்மாக்கள் தவறு செய்தாலும் தம் தவற்றை உணர்ந்து இறையருளை வேண்டினால் நிச்சயம் இறையருள் கிடைக்கும் என்பதன் வெளிப்பாடுதான் இந்த ஆறுபடை வீடுகள் ஆகும். முருகப்பெருமானின் மேன்மையை உணர்த்துவதற்காகத்தான் ஆறுபடை வீடுகளும் தமிழ்நாட்டில் அமைக்கப்பட்டுள்ளன. அரசன் முதல் ஆண்டி வரை அனைவருக்கும் ஏற்றக் கடவுளாக முருகப்பெருமான் விளங்குகின்றார்.

**துணைநூல் பட்டியல்**

1. தமிழ் வழிபாடும் சிறுதெய்வங்களும் - தமிழ் ஐயா வெளியீட்டகம், திருவையாறு.
2. தமிழகத்துத் திருக்கோயில்கள் -தமிழ் ஐயா வெளியீட்டகம், திருவையாறு.
3. சமயங்களும் அடையாள உருவாக்கங்களும் - தொகுதி 1 ஆய்வுக் கோவை 2011 மதுரை காமராஜர் பல்கலைக்கழகம், மதுரை.

## முருகன் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் சமய உண்மைகள்

எச். மூர்த்தி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

"மனித உள்ளங்களை இன்ப அன்பின் விளைநிலமாகத் தகுதிப்படுத்திப் பக்குவப்படுத்தும் தத்துவத்திற்கு, வாழ்க்கை முறைக்குச் சமயம் என்பது பெயர். மனித வாழ்க்கையைச் சமைத்துப் பக்குவப்படுத்துவதே சமயத்தின் நோக்கம்" என்பார் குன்றக்குடி அடிகளார்.

உள்ளத்தை அறனல்லாத வழியில் செல்லாமல் தடுப்பதும், உள்ளத்தே மறைந்து கிடக்கின்ற பொறாமை, பொய்மை போன்ற பொல்லாங்குகளை நீக்குதலும், உலக உயிர்க்கு உறுதியினைத் தரக்கூடிய இன்ப அன்பினைப் பெறுவதற்கு உறுதுணையாக இருப்பதைச் சமயம் எனச் சுருங்கக் கூறலாம்.

சமயக் கருத்துகள் உலக இலக்கியங்கள் பலவற்றிலும் பரக்கக் காணலாம். அவை மக்களை மாக்கள் நிலையிலிருந்து விலக்கி மாண்புமிக்கவர்களாக, மனித நேயம் மிக்கவர்களாக, உலக உயிர்களை ஓம்பக்கூடியவர்களாக, உன்னதமானவர்களாக உருவாக்குகிறது. தத்தம் சமயங்கள் சார்ந்த கருத்துகளை வலியுறுத்தி உலக மக்களை ஒன்றுபடுத்தி மகிழ்ச்சியாக வாழ வழிவகை செய்கிறது. இன்ப அன்பு ஒன்றே இறைநிலை என வாதிடுகிறது. அவ்வகையில் முருகன் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் அமைந்த சமய உண்மைகளை ஆய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

### முருகன் பிள்ளைத்தமிழ்

முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ், திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ், சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ், திருமலை முருகன் பிள்ளைத்தமிழ், திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ் ஆகிய ஆறு பிள்ளைத்தமிழ் நூல்களுள் அமைந்துள்ள சமய உண்மைகள் குறித்துச் சுருக்கமாக இக்கட்டுரையில் ஆராயப்பெறுகின்றது.

### நூலும் நூலாசிரியரும்

#### (அ) முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்

திருநெல்வேலி மாவட்டம் ஸ்ரீகைலாசம் என்னும் பகுதியில், சைவ வேளாளர் குலத்தில் தோன்றி பதினேழாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் குமரகுருபர சுவாமிகள். இவர், புள்ளிருக்கு வேளூர் என்னும் வைத்தீஸ்வரன் கோயிலில் தங்கியிருந்தபோது பாடியருளிய பிரபந்தம் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழாகும்.

(ஆ) திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

சேதுமன்னர் ஆட்சிக்குட்பட்ட செம்பி நாட்டுச் சிற்றூரில் அந்தணர் மரபில் தோன்றி கல்வி கேள்விகளில் தலைசிறந்து விளங்கியவர் பகழிக்கூத்தர். இவர், திருச்செந்தூரில் எழுந்தருளியிருக்கும் திருச்செந்திலாண்டவனைப் போற்றிப் பாடிய நூல் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழாகும்.

(இ) திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ்

சோழநாட்டுக் காவிரித் தென்கரையில் உள்ள சிற்றூர் எண்ணெயூரில் கி.பி. 1815இல் தோன்றி 'பிற்காலக் கம்பர்' என அழைக்கப் பெற்றவர் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை. இவர், சோழநாட்டில் பொன்னியன்னைப் பொன் கொழிக்கும் பூம்புகாருக்கு அண்மையில் விளங்கும் திருவிடைக்கழி என்னும் ஊரில் எழுந்தருளியிருக்கும் முருகனைப் போற்றிப் பாடியருளிய நூல் திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழாகும். கி.பி. 1883இல் திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழ் பதிப்பிக்கப்பட்டது. டாக்டர் உ.வே.சா. அவர்கள் இப்பிரபந்தத் திரட்டை 1910இல் முதற்பதிப்பாகவும் 1926இல் இரண்டாம் பதிப்பாகவும் அச்சிட்டு சிறப்புச் செய்துள்ளார்கள்.

(ஈ) சேயூர் முருகன் பிள்ளைத் தமிழ்

17ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவராகக் கருதப்படும் பரராச சிங்கத்தின் காலப் புலவர்; விஜயநகர அரசின் அமைச்சராயிருந்த திம்மராஜா (கி.பி. 1526)வின் பரம்பரையில் தோன்றியவர் எனக் கருதப்படுபவர்; கண்ணொளி இழந்த பிறவிக் கவிஞர்,

*"கண்ணுடை யென்னும் குறட்கிலக்காகிக் கவின்றிலங்கும்*
*பண்ணுடைச் செல்வன் கவிவீரராகவன்"*

என டாக்டர் உ.வே.சா.வால் போற்றப்பட்டவர் அந்தகக்கவி வீரராகவ முதலியார். இவர், தொண்டை நாட்டில் மதுராந்தகத்தின் மருங்கு திகழும் சேயூரில் வீற்றிருக்கும் முருகப்பெருமான்மீது சேயூர் முருகன் பிள்ளைத்தமிழைப் பாடியருளினார். கற்குளம் குப்புசாமி முதலியாரால் பிலவங்க ஆண்டு தை மாதம் 28ஆம் தேதி (1902)யில் நூலாசிரியர் வரலாறு முதலியவற்றுடன் இந்நூல் பதிப்பிக்கப் பெற்றுள்ளது. இதன் பின்னர் திரு த.ச. மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் ஆராய்ச்சிக் குறிப்புடன் 1958இல் திருவாவடுதுறையாதீனம் இந்நூலை வெளியிட்டது.

(உ) திருமலை முருகன் பிள்ளைத் தமிழ்

தென்காசி வட்டத்து, இக்காலத்துப் 'பம்புழி' என்றும் 'பண்புழி' என்றும் வழங்கப் பெறுகின்ற பைம்பொழில் நகரத்தைச் சேர்ந்தது திருமலை என்னும் மலைத்தலம். அம்மலையில் வீற்றிருக்கும் முருகப் பெருமான்மீது, கவிராச பண்டாரத்தையா என்பவர் திருமலை முருகன் பிள்ளைத்தமிழைப் பாடியருளினார். இவ்வாசிரியர், செங்கோட்டையில் தோன்றியவர் என்றும் ஐயா

என்னும் அடைமொழி பெற்று பொய்யா வேளாளர்க்குக் குருக்களாயிருந்த எய்யாக்குடியில் வந்தவர் என்றும் நூற்பாயிரத்தால் அறிய முடிகிறது.

(ஊ) திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்

கி.பி. 17ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவராகக் கருதப்பெறுபவர்; நக்கீரரிடத்தும் அருணகிரிநாதரிடத்தும் மிகுந்த அன்புடையவர் மார்க்கசகாய தேவர். இவர், தொண்டை நாட்டில் பாலாற்றங்கரையில் உள்ள திருவிரிஞ்சிபுரம் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ள முருகன்மீது 'திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழ்' பாடியுள்ளார். இத்தலம் அசுரன் ஒருவன் வழிபட்டு தன் கழுதை முகம் போக்கிக் கொண்டமையால் கரனூர், கரபுரி எனவும் வழங்கப்பெறும்.

சமய உண்மைகள்

(1) சமயப் பிணக்கு

இறைவனை அடைதற்குரிய நெறிகளே சமயங்களாகும். அவை பல உள. தத்தம் நெறியே உயர்ந்த நெறி எனக் கூறிக்கொள்வதில் தயங்குவதில்லை. அவ்வாறு கூறுமுகத்தான் மயக்கநிலை ஏற்படுவது உண்டு. மணிவாசகரும், "சமயவாதிகள் தத்தம் மதங்களே அமைவதாக அரற்றி மலைந்தனர்" என்பார். இச்சமயப் பிணக்கினைக் குமரகுருபரர், தாமியற்றிய முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழில்,

*தந்தங் கருத்துக் கமைந்தபடி சாற்றிச் சாற்றி முழுமாயச்*
*சலதி மூழ்கித் தடுமாறும் சமயத்தவர் போல் தலைமயங்கும்*
*அந்தண் பழனக் கந்தபுரி.....* (பாடல் - 6)

என கந்தபுரி வாழும் கடைசி மகளிர் மூலம் விளக்கிக் காட்டுகின்றார்.

(2) இம்மை, மறுமை

இம்மை, மறுமை என இம்மை இன்பத்தையும், வீட்டின்பத்தையும் தரவல்லது சமயம். இதனைச் சுந்தரர்,

*"இம்மையே தரும் சோறுங்கூறையும் ஏத்தலாம் இடர் கெடலுமாம்*
*அம்மையே சிவலோக மாள்வதற்கு யாதும் ஐயுறவில்லையே"*

எனத் தெளிவுபடுத்துவார். இக்கருத்தையே பகழிக்கூத்தரும் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில், "இருமையும் உதவிய சிவபர சமயம்" என்று குறிப்பிடுகிறார்.

(3) பிறப்பறுத்தல்

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவ னடிசேரா தார்"*

என்று பிறவிப் பெருங்கடலை நீந்த இறைவன் துணை வேண்டும் என்கிறார் வள்ளுவர். பிறவாமை என்பதை வரமாக அடியவர் பலரும் ஆண்டவனிடம்

வேண்டுகின்றனர். அப்பரும், "அறு கயிறூச லானேன்" என்று பிறவித் துயரைப் பாடுகின்றார். "ஊசல் கயிறற்றால் தாய் தரையே யாந்துணையான்" என்று சிவஞானபோதமும் இதனை விளக்கும். உயிர்கள் ஐம்புலப் பற்றுக்களையும், அவற்றின் வழியாக வரும் பிறப்பினையும் கடக்கவே, இறைவன் துணையாக இருக்கின்றான். இதனைப் பகழிக்கூத்தர், "பந்தப் பிறப்பொழிய வந்தித் திருக்குமவர் பற்றாக நிற்கும் முதல்வா" என்று திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழில் பாடியுள்ளார். மேலும் இக்கருத்தினை வலியுறுத்தி,

*"பிறவிக்கடலில் வீழாமல் பேணி எடுத்து"* (53)

என்றும்,

*"இளைத்திடு பலவினை குளித்திடும் அடியரை*
*எடுத்திடும் ஒரு புணையாய்"* (60)

என்றும் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் மார்க்கசகாயர் பிறவிப் பெருங்கடல் நீந்த புணையாய் இறையருள் வேண்டும் என்றும், பிறவாமை வேண்டும் என்றும் வேண்டுகின்றார்.

**(4) வேதநெறி கடத்தல்**

"வேதநெறி தழைத்தோங்க" என்ற சேக்கிழார் பெருமானின் வாக்கிலும், "ஓரும் வேதாந்தம் எனும்" என்ற குமரகுருபரர் வாக்கிலும், "வேதாந்த சித்தாந்தச் சமரச" என்ற தாயுமானவர் வாக்கிலும் பயின்றிருக்கும் வேதாந்தம் என்னும் சொல் உபநிடதங்களையே குறிக்கின்றன. உபநிடதங்கள் குறிப்பிடும் கருத்துகளையும் கடந்து நிற்பவன் இறைவன் என்பதை மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை திருவிடைக்கழி முருகன் பிள்ளைத்தமிழில்,

*"பாராய் தரப் பொலியும் வேதாகமங்கள் நனி*
*பகர்குறி குணங்கடந்து*
*பரநாத பரவிந்துவும் கடந்தோங் கொளி*
*பரப்பியொளிர் பரமயோகி"* (அம்புலிப் பருவம், பா. 5)

என்று கூறியுள்ளார்.

**(5) இறையே குரு**

உயிர் தனதியல்பும், தலைவனது இயல்பும், தன்னைப் பிணிக்கும் மூன்று கட்டுக்களின் இயல்பும் தானாக உணர மாட்டாது. இறைவன் அதன் (உயிர்) மீது வைத்த அருளால் 'குருவாகி வந்து' அதனை ஐம்புல வேடரின் நீக்கி மலமகற்றித் தானாக்கி மலரடிக்கீழ் வைப்பன். இதனை,

*"ஆண்ட குரவன் உனதருளால்*
*அருள் முப்பொருளும் பிரித்தறிந்து அங்கு*
*அத்துவிதத்தின் உருவடைந்த அடியார்"* (71)

என திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் பண்டாரத்தையா குறிப்பிடுகின்றார்.

(6) மனமே கோயில்

இறைவன் கல்லிலும் செம்பிலும் இல்லை; எண்ணுபவர் மனத்தில் இருக்கின்றான். அதனால்தான் "உள்ளம் பெருங்கோயில்" என்றார் திருமூலர். "நினைப்பவர் மனமே கோயிலாக் கொண்டவன்" எனத் தேவாரம் இறைவனைக் கூறியது. "நினைப்பவர் மனக்கோயிலோ நித்தமும் உனக்கு இடம்" (39) என இறைவன் இருப்பிடத்தைச் சுட்டிக் காட்டுகின்றார் திருவிரிஞ்சை முருகன் பிள்ளைத்தமிழில் மார்க்கசகாயர். மேலும், "மனத்தினில் நினைந்துருகும் உத்தமர் உளத்தின்மிசை மலர்ச்சரணம் வைத்த குக" (11) என திருமலை முருகன் பிள்ளைத்தமிழில் கவிராச பண்டாரத்தையாவும் இக்கருத்தையே வலியுறுத்துகின்றார்.

இறுதியாக, சமயம் - மனிதனைப் பண்படுத்தி மேம்படுத்த வல்லது. இலக்கியங்களின் செழுமையால் சமயம் பொலிவுறுகிறது. நெஞ்சை நெகிழ்வித்து உடலை விதிர்விதிர்க்கச் செய்யும் உருக்கமும், அழகொழுகும், பெருமித நடையும் வாய்ந்த முருகன் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தால் சைவ சமயம் பரந்த நோக்கினை உடையதென்பதை அறிய முடிகிறது. "No cult in the world has produced a richer, devotional literature" என்ற டாக்டர் எல்.டி. பார்னெட்டின் கூற்றிற்கு ஒப்ப முருகன் பிள்ளைத்தமிழ் இலக்கியம் விளங்குகிறது. 'முருகன் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தில் சமய உண்மைகள்' குறித்து ஆய்வதற்கு நெடிய களம் உள்ளது.

பார்வை நூல்கள்

1. கட்டுரைப்பொழில், கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சாவூர், இரண்டாம் பதிப்பு, 1981
2. சிற்றிலக்கியச் சொற்பொழிவுகள், கழகம், திருநெல்வேலி, 1959.
3. திருமுருகாற்றுப்படை விளக்கம், கி.வா. ஜகந்நாதன், அமுத நிலையம் லிமிடெட், 1/45, இராயப்பேட்டை ஹைரோடு, சென்னை - 14. ஆகஸ்ட் 1970
4. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலர், 1980.

## ஆறு

எஸ் வி.ஆர். மூர்த்தி
பெங்களூர்

ஓங்கார வடிவமாக ஜோதி சுடர்ப்பிழம்பாய் உள்ளந் தோறும் உள்ளொளியாக உள்ள முருகனைக் குறித்து இக்கட்டுரையை எழுதுவதில் பெருமகிழ்வு கொள்கிறேன்.

### ஆறு

ஆறு என்றால் ஆறுமுகம் தான் நம் நினைவிற்கு வரும். "அஞ்சுமுகம் தோன்றில் ஆறு முகம் தோன்றும்". பஞ்சாட்சரம் - அஞ்செழுத்து நமசிவாய- சிவன் நமசிவாய - தூல பஞ்சாட்சரம். சிவாயநம - சூக்கும பஞ்சாட்சரம். சிவயசிவ - அதிசூக்கும பஞ்சாட்சரம். சிவசிவ - காரண பஞ்சாட்சரம். சி - மகா காரண பஞ்சாட்சரம். சடாட்சரம் - ஆறெழுத்து. சரவணபவ - முருகன் சிவபெருமானைக் காட்டிலும் முருகனுக்குப் பெருஞ்சிறப்பு உண்டு. பெம்மான் இறைவன் பிறப்பிறப்பிலான்.

ஆண் பெண் தொடர்பின்றி சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து ஆறு சுடராக எழுந்த ஆறு ஒளிக்கற்றைகள், வெம்மையைப் போக்கக் குழந்தைகளாகச் சரவணப் பொய்கையில் விடப்பட்டு, ஆறு கார்த்திகை பெண்களால் ஆராதிக்கப்பட்டு ஓர் நிலையில் அன்னை பார்வதியால் (சிவசக்தி) ஒன்றிணைக்கப்பட்டு - கந்து ஆனதால் (கட்டப்பட்டதால்) கந்தன் என்றும்; ஆறு முகங்கள் கொண்டதால் ஆறுமுகம் என்றும் அழைக்கப்பட்டான் முருகன். முருகனுக்குரிய படை வீடுகள் ஆறு. படை வீடு என்பது பகைவரோடு போர் புரியும் போர் வீரன் ஒருவன் தன் படைகளுடன் தங்கியிருக்கும் இடத்திற்குப் பெயராகும்.

ஆற்றுப்படுத்துவதை (வழிப்படுத்துவதை) ஆற்றுப்படை என்பர். பொருளைப் பெறுவது போல் அருளைப் பெற நம் முன்னோர் காட்டிய ஆறு (வழி) "ஆறு திருப்பதியில் வளர் பெருமாளே" சகலமும் முதலாகிய அறுபதி நிலைமேவிய தடமயில் தனிலேறிய பெருமாளே" என்று அருணகிரி நாதர் திருப்புகழிலும்.; ஆறு திருப்பதி கண்டு ஆறெழுத்தும் அன்பினுடக் கூறுபவர் சிந்தை குடி கொண்டேனே" என்று குமரகுருபரர் கந்தர் கலி வெண்பாவிலும் சிறப்பித்துக் கூறியுள்ளனர்.

எண்களில் ஆறு, ஐந்துக்கு அடுத்துள்ளது. ஆறு அறிவு : ஓரறிவு , ஈரறிவு, மூவறிவு, நாலறிவு, ஐந்தறிவு - பல உயிர்கள் இந்தப் பூவுலகில் உண்டு. ஆறாம் அறிவு எனப்படும் பகுத்தறிவு உள்ள உயிர் மனிதருக்கே உரியது. கூன், குருடு, செவிடு, பேடு நீங்கி மானிடராய்ப் பிறத்தல் அரிது என ஒளவைப் பாட்டியும் பாடியுள்ளார். மனிதன் இடைப்பட்ட நிலையில்

இருப்பவன் - தன்னறிவால் நன்று தீது பகுத்தறிந்து ஆன்ம நேய ஒருமைப்பாட்டுடன் வாழ்தலே மேல் (தேவ நிலை) நிலைக்கு அழைத்துச் செல்லும். அதற்கு மாறாக அன்பற்ற, பண்பற்ற வாழ்க்கை மனிதனைக் கீழ் (அரக்க நிலை) நிலைக்கு இழுத்துச் செல்லும்.

**சுவாமி மலை :** "ஓம்" ஆகிய வேதத்துக்குப் (பிரணவம்) பொருள் தெரியாததால் படைப்பாளி பிரமனைச் சிறையிட்டான் முருகன். சிறையிட்ட பிரமனை விடுவிக்க வந்த சிவபெருமானும் "ஓம்" என்ற சொல்லுக்கு உரிய பொருளைக் கூறாததால் முருகன் சிவனுக்குத் தமிழில் உபதேசம் செய்தார் என்பது புராணக்கதை ஆனாலும் பொருளுள்ள கதை. இதனைக் குறித்தே அமைந்த கோயில்- .அப்பனுக்குப் பாடம் சொல்லிய சுப்பையாவின் இரண்டாம் படைவீடான "சுவாமிமலை".

ஆறு ஆதாரங்கள் எனப்படும் ஆறு சக்கரங்கள் மனிதருக்கு ஆறு ஆதாரங்கள் சுழுமுனை நாடியில் குண்டலினி எனும் சக்தி மூலாதாரத்தில் "ஓஜஸ்" ஆக இருப்பிடர் பெயரிடப்பட்டு அமைதியாக அமைந்துள்ளது; அது எழுந்து 6 நிலைகளைச் சுழுமுனை நாடிமூலம் கடந்து இருபுருவ (இட, வல) நாடிகளுக்கு மத்தியில் சேர்ந்து, (சைவ சித்தாந்தில் சக்கரங்களைத் தாமரைமலருடன் ஒப்பிட்டு இதழ்கள் எண்ணிக்கையால் குறிப்பிடுவர்) 51 இதழ்களும் மேல் நோக்கிவிரிந்து குண்டலினி தேஜஸ் ஆக மாறும். இதன் சுருக்கமான விளக்கம்: ஆறு ஆதாரங்கள் (சக்கரங்கள்) (5 அறுபடை வீடுகள்) (தாம .ரைமலர் இதழ்கள் எண்ணிக்கை) ஒப்பிடல்: மூலாதாரம் (மலக்குழி) திருப்பரங்குன்றம் (4 இதழ்) சுவாதிட்டானம் (ஆண், பெண்குறி) திருச்செந்தூர் (6 இதழ்கள்) மணிப்பூரகம் (தொப்புள்குழி) பழநி (10இதழ்) அநாஹதம் (மார்புக்குழி) சுவாமிமலை (12இதழ்) விசுத்தி (தொண்டைக்குழி) திருத்தணிகை (16இதழ்) ஆக்ஞை (நெற்றி - பிரம்மந்திரா) பழமுதிர்ச் சோலை.

ஆறு சக்கரங்களையும் அநுதினம் பேணிக் காப்பதே யோக நெறிமுறை ஆகும். பிறவிப்பயனுமாகும். இதனைச் "சக்கர நெறி நில்" என்று சொல்லும் ஔவையாரின் ஆத்திச்சூடி. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் "உயிர்க் காந்தம்" (ஜீவ காந்தம்) உண்டு. பிறக்கும் போதுள்ள உயிர்க் காந்த சக்தியைக் கூட்டுவிப்பதே மகிழ்ச்சி யோகம். அழகு, அறிவு, ஆரோக்கியம் ஆயுள், அமைதி, ஆனந்தம் யோகம் அதிகப்படுத்துவது ஆறு சக்கரங்களின் முறையான, முழுமையான சிறப்பான இயக்கமே காரணமாகிறது பாதளச் சங்கிலியும் ஆறும்: கிணறு, சிறு குளம் ஆகிய நீர்நிலைகளில் ஏதேனும் கைப்பொருள் விழுந்து விட்டால் அதை வெளியே எடுப்பதற்கான எளிய வழி பாதளச் சங்கிலியைப் பயன்படுத்துவர்.

பாதளச் சங்கிலியின் வடிவ அமைப்பே ஆறு கூரிய இரும்பு முட்கம்பிகள் கொண்டது. (ஏறக்குறைய நங்கூரம் போலான அமைப்பு) இதனைக் கொண்டு இழந்த பொருளை மீட்டிடலாம். அவ்வாறே, ஆறு ஆதார சக்கரங்களை அழகுற அமைத்துள்ளான் இறைவன். அவற்றை முறையாகப் பயன்படுத்தினால் ஆறுமுகக்கடவுள் பிறவிக்கடலில் இருந்து நம்மை மீட்பான்.

**ஆறு சுவைகள்**

அறுசுவை எனப்படுவது மனிதரின் நாக்கு அறியக்கூடிய ஆறு வகை சுவைகளாகும். இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கசப்பு, கார்ப்பு. இரத்தம், தசை, கொழுப்பு, எலும்பு, நரம்பு, உமிழ்நீர் மற்றும் மூளை ஆக ஏழு முக்கிய தாதுக்களைக் கொண்டது உடல். அதனால் உடலை "யாக்கை" என்று கூறினர். ஏழாவது தாதுவான மூளை செவ்வனே செயல்பட ஆறு தாதுக்கள் தகுந்த அளவில் இருத்தல் வேண்டும். முதலில் குறிப்பிட்டுள்ள ஆறு தாதுக்களும் ஆறு சுவைகளுடன் தொடர்பு கொண்டது.

**சுவையும் தாதுவும் வருமாறு**

இனிப்பு - தசையை வளர்க்கிறது. புளிப்பு - கொழுப்பைக் கூட்டுகிறது. கார்ப்பு- எலும்பை வளர்க்கிறது. உவர்ப்பு - உமிழ்நீர் சுரக்கச் செய்கிறது. துவர்ப்பு - இரத்தத்தைப் பெருக்குகிறது. கசப்பு - நரம்புகளை உறுதிப்படுத்துகிறது. இதன் அடிப்படையில் தாதுக்களைச் சமன் செய்யும் உணவைத் தயாரித்தனர் நம் முன்னோர்கள். "உணவே மருந்து, மருந்தே உணவு"

**நவமணிகளில் ஆறு**

மாணிக்கம், முத்து, பவழம், மரகதம், கனகபுஷ்பராகம், வைரம், வைடூரியம், நீலம், கோமேதகம் ஆக நவரத்தினங்கள் ஒன்பது. ஆறுக்குரியது வைரம். நவக்கிரகங்களில் ஆறாவதாக வரும் கிரகம் சுக்கிரன் - வாரத்தில் ஆறாவதாக வரும். ஆறு பட்டை கொண்ட வைரத்திற்கு அத்தனைச் சிறப்பு உள்ளது. வைரத்தை அறுப்பது வைரக்கத்தி. ஆறுபடை வீடு கண்ட ஆறுமுகனான முருகன் தேவர்களின் சேனாதிபதி. அவனே சேனைத்தலைவன்; தானைத்தலைவன் தேவாசுரப் போரில் தேவர்களைக் காத்து அசுரர்களை அழித்தமைக்காக தேவராஜன் தன் மகள் தெய்வயானையைப் பரிசாக அளித்து, மணம் செய்வித்தது நான்காவது படை வீட்டில். அதுவே திருப்பரங்குன்றம். ஆறுக்கு அழிக்கும் சக்தி உண்டு. மனிதரின் ஆறு கெட்டகுணங்கள் மனிதனை அழிவுப்பாதைக்கு இழுத்தும் செல்லும் அவையாவன: காமம், குரோதம், கோபம், மதம், மாற்சரியம்.

**காமம்:** ஆசை அதிக ஆசை, அதிக நட்டம் என்பர். இதன் பொருட்டே "கிட்டாதாயின் வெட்டென மற" என்றார் கொன்றை வேந்தன் ஔவையார்

**குரோதம்:** சினம் தன்னையேச் சுடும் சினம் தவிர்க்கவேண்டும். இதனையே "தீராக் கோபம் போராய் முடியும்" எனக் கொன்றை வேந்தனிலும்; "ஆறுவது சினம்" என ஆத்திச் சூடியிலும் பாடியுள்ளார் ஔவையார்.

**லோபம்:** சுயநலமிக்கக் கருமித்தனம். ஆசையின் அடுத்த பரிமாணம் இது. "ஈயார் தேட்டை தீயார்க் கொள்வார்" கொன்றை வேந்தனிலும்; "ஈவது விலக்கேல்" என ஆத்திச்சூடியிலும் சொல்லியுள்ளார் ஔவையார்.

மோகம்: பேராசையால் வரும் மனமயக்கம் மோகமாகும். மோகம் 30 நாட்கள் ; ஆசை 60 நாட்கள் என்பது உலக வழக்கு. தன்னிலை மறக்கும் "மோகத்தை முனி" என்று ஔவையின் ஆத்திச்சூடி கட்டளையிடுகிறது.

மதம்: ஆணவம் ஆனைக்கு மதமேறினால் அனைத்தையும் அழித்து விடும். மனிதர்க்கு ஆணவம் தலை தூக்கினால் கண்ணை மறைத்து அறிவை துறக்கச் செய்யும்.

மாற்சரியம்: பொறாமை. அடுத்தவர் உயர்வினைக்கண்டு மனத்துக்கண் மாசாக பொறாமை கொள்வதும் தீய குணம். ஆக இந்த ஆறு குணங்களும் மனிதனின் நல்ல உள்ளத்தில் நஞ்சைக் கக்கி விடும்.

இந்த ஆறு பகைவர்களையும் (தீயகுணங்களையும்) வேரோடு வெட்டிச் சாய்க்கும் ஆயுதம் ஒன்றே வேல். வெற்றி வேல். வேல் : முருகனின் முதன்மையான ஆயுதம் வேல். வெல்லும் ஆயுதம் வேலாகும் அறிவின் அடையாளம் (சக்தியின் ஞான வடிவம்). வேலின் முனை கூர்மையானது (மேல் நோக்கியது). வேலின் நடுப்பகுதி அகன்றிருக்கும் (இடைப்பட்டது). வேலின் கீழ்ப்பகுதி ஆழ்ந்து நீண்டிருக்கும் (கீழ் நோக்கியது). மனிதரின் அறிவு கூர்மையாகவும், அகன்று விரிந்து பரந்ததாகவும், நுணிகி ஆயும் நுண்மையாகவும் இருக்க வேண்டும் என்பதை உருவகமாக அமைந்ததே வேல். ஞான வேல். வேலைக்கொண்டிருப்பவன் ஞானப் பண்டிதன். இதையே "கத்தியைத் தீட்டாதே தம்பி முத்திரைத் தீட்டு" என்றார்கள். சூரசம்மாரம் செய்த போது முருகனின் படையாட்களின் நீர் வேட்கையைத் தீர்க்கும் பொருட்டு முருகனால் வேல் கொண்டு உண்டாக்கப்பட்ட கிணறு திருச்செந்தூர் நாழிக்கிணறு. மயில் அஞ்ஞானத்தின் அடையாளம் மயில் .இருண்ட மேகத்தைப் பார்த்து ஆடும் மயில். ஞானவொளி வேல் அருகில் இருப்பதால் மனிதனிடமுள்ள தான் என்ற அகந்தை எனும் பாம்பை அடக்கி தீய எண்ணங்களை அழிக்கும் தத்துவார்த்த அமைப்பாகும்.

வள்ளி, தெய்வயானை

மனிதருக்கு நல் வாழ்வு வாழ வேண்டுவன : மூன்று ஒரு செயலைச் செய்யவிருப்பம் வேண்டும் - இச்சாசக்தி செயலாற்றும் திறன் வேண்டும் - கிரியா சக்தி செயலில் வெற்றி காண தெளிந்த நல்லறிவு வேண்டும் - ஞான சக்தி முருகனுக்கு வலப்புறமுள்ள வள்ளி இச்சாசக்தியின் உருவகம்; முருகனுக்கு இடப்புறமுள்ள தெய்வயானை கிரியா சக்தியின் உருவகம் நடுநாயகமாக வேலுடன் இருக்கும் முருகன் ஞான சக்தியின் உருவகம். .சோதிடம் - ஆறாமிடம் ஒருவரின் பிறந்த ஜாதகக் கட்டத்தில் இலக்கினத்திற்கு ஆறில் அமையும் இராசி வீடே ஆறாம் வீடாகும். பகை(சத்ரு) வீடு என்பர் ;ஜாதகருக்கு வரும் கடன் (ரோகம்) நோய் - இந்த வீட்டைக் கொண்டே உறுதி செய்வர்.

**ஆறின் அடையாளம்**

இருமுக்கோணங்களின் நேரெதிரான இணைப்பே ஆகும். கிருத்திகை நட்சத்திரம். 15 திதிகளில் ஆறாவது திதியாகிய சஷ்டி திதி முருகனுக்குரியது. கிரகங்களில் முருகனுக்குரிய கிரகம், கிழமை - செவ்வாய். மலர் - செவ்வரளி. இசை- ராகம் - சண்முகம் பிரியா. வாகனம்- மயில். கொடி- சேவற் கொடி. நிலம் - குறிஞ்சி (இன்று தோராடும் குமரன்).

**கந்தபுராணம்**

18 வடமொழிப் புராணங்களில் ஒன்றான ஸ்கந்த புராணத்தைத் தமிழ் வடிவில் கந்த புராணமாகத் தந்தவர் கச்சியப்ப சிவாச்சாரியார். முருகனின் தோன்றல் முதல் வள்ளித் திருமணம் வரை ஆறு(6) காண்டங்கள் கொண்டது கந்த புராணம்.

**ஆறு முகங்கள் சிறப்புகள்**

1. கதிரவனைப் போன்று குற்றமற்ற ஒளியுடனிருத்தல்.
2. அடியவர்க்கு வேண்டுவனக் கொடுத்தல்.
3. ஆகுதி வேள்வியை விரும்பி ஏற்றல்.
4. சந்திரனின் குளிர்ச்சியுடன் எட்டு திக்குகளையும் நோக்குதல்.
5. அதர்ம அநீதியை அடக்குதல்
6. பூவுலகர் இன்புற்று வாழ்தலைக் காண வள்ளியோடு இன்புற்று இருத்தல்.

**முருகனுக்குரிய நாட்கள் சிறப்பு**

சஷ்டி கவசம் : மக்களிடையே பாராயணமும்; சில தொலைக்காட்சி காலை, மாலை நிகழ்ச்சிகளில் ஒலிபரப்பும், மிகுந்த வரவேற்பும் பெற்றது பாலன் தேவராயன் பாடிய திருச்செந்தூர்க் கந்தர் சஷ்டி கவசம். தேவராய சுவாமிகள் மற்ற ஐந்து படை வீடுகளுக்கும் சஷ்டி கவசம் செய்துள்ளார். பாம்பன் சுவாமிகள் தினமும் 36 முறை கந்தர் சஷ்டி கவசம் தியானித்தாக ஒரு செவிவழிச் செய்தி உண்டு. பாம்பன் சுவாமிகள் இயற்றிய மொத்த பாடல்கள் எண்ணிக்கை: 6666.

**அறு சமயம்**

ஆறு சமயங்களில் முருகனை வழிபடுதல் "கௌமாரம்" எனப்படும்.

## எண்ணக் கண் கொண்டு இமை திறந்த சிற்பங்கள்...!

க. மோகன்ராஜ் ஸ்தபதி,
முனைவர்பட்ட ஆய்வாளர், சிற்பத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

அது கண்ணாடி கண்டு பிடிக்காத காலம். சூரிய ஒளி உள்ளவரை மட்டுமே உளிக்கு வேலை. மிக நுட்பமாக வேலைகள் பகல் பொழுதிலேயே மேற்கொள்ளப்படும். மிக அவசிய, அவசர காலத்தில் மட்டுமே விளக்கு ஒளியில் வேலை. விளக்கொளி என்றால் தீப்பந்த ஒளி. ஆலயத்திற்கு விளக்கு எரிக்க எந்த அளவு எண் தேவைப்பட்டதோ அந்த அளவு சிற்பிகளுக்கும் இரவு நேரத்தில் சிற்பங்கள் வடிக்க தீப்பந்தங்கள் தேவைப்பட்டிருக்கும். மட்டவேலை, பெருங்கொண்ட வேலை, துண்டு போடுதல் என மேலோட்டமான பெரும்அடி வேலை தேவைப்பட்ட காலத்தில் இரவு நேரத்தில் பார்த்து முடிக்கப்பட்டன. சூரியன் கண்விழிப்பதற்குள் உளிகள் துவைத்தல் அல்லது தோய்த்தல் எனும் கடினத்தன்மை ஏற்றி கற்பணிக்கு வேலை செய்ய தயாராகிவிட வேண்டும். இதற்கிடையே இரவுப் பொழுதில் வாய்மொழியாகச் சிற்ப சாஸ்திர சங்கேத பயிற்சி. அட்ஷரம் பிசகாமல் சொல்ல வேண்டும். சாஸ்திரப்படி எந்தச் சிலைக்கு என்ன அளவு? இவை எல்லாம் சில்ப சம்பாஷணைகள்.

இப்படியாக சிற்பிகளின் வாழ்க்கையில் இரவும், பகலும் கழியும். இவ்வாறாகவே மலை இல்லாத இடங்களுக்கு ம்லைகள் சிறு, பெரு கற்பாறைகளாக உருமாற்றம் பெற்று காவிரியின் தென்கரையும், காவிரியின் வடகரையுமாக இடம்பெயர்ந்தன.

கோச்செங்கட்சோழன் எனும் மன்னன் காலத்தில் செங்கற் கோயில்கள் கருங்கல் கோவில்களாக மாற்றம் பெற்றன என்பர். அதுபோன்ற காலங்களில் கலைகளை வெளிக்கொணர சிற்பிகள் அதிகமாக இருந்தனர். சிற்பிகளை ஊக்கப்படுத்தினர் அரசர் பெருமக்கள். உற்சாகப்படுத்தினர் ஊர்மக்கள். எனவே அவர்களால் உயிரோவியங்களைக் கல்லிலே படைக்க முடிந்தது. உலோகத்திலே வடிக்க முடிந்தது. ஒரே சிற்பி கல்லிலும், உலோகத்திலும் கை தேர்ந்து இருந்தார் என்பதற்கு ஆதாரமும் உள்ளது.

எட்டுக்குடி, எண்கண், சிக்கல் எனும் முருகனது கோவில்கள் அமைந்த ஊர்கள். உயிரோட்டமாக சிலை (முருகன் மயில்மீது அமர்ந்த கோலத்தில்) அமைந்து விட்டதால் மயில் பறக்க ஆரம்பித்து விட்டதாகவும், "எட்டிப்பிடி, எட்டிப்பிடி" என அங்குள்ள சிற்ப குழாமிடம் கூறி, தாவி அச்சிலையை எட்டிப்பிடித்து மயிலின் கால் விரலில் சிறு பின்னம் ஏற்படுத்திய பின், மயில் பறப்பது நின்று போனதாம். இது செவிவழிச் செய்தி.

கண் இழந்த சிற்பியிடம் சிலை செய்ய மக்கள் வேண்ட தமக்கு இருந்த நம்பிக்கையாலும், தெய்வபலத்தாலும் தன் எண்ணமே கண்ணாகக் கொண்டு முருகனுக்குச் சிலை செய்து முடித்த பிறகு அச்சிலைக்குக் கண்திறக்கும் போது, சிற்பி "என் கண், என் கண்" எனத் தனக்குக் கண் பார்வை கிடைத்ததைப் பதறி கூறிட அங்கே முருகன் கண்பார்வை கொடுத்ததாகவும், சிற்பிக்குக் கண் பார்வை தெரிந்ததாம். எட்டுக்குடிக்கும், எண்கண்ணுக்கும் இதுபோல செவிவழிச் செய்திகள் பல காலமாகக் கூறப்பட்டு பரவி வருகிறது. சிக்கலுக்குரிய செய்தி மட்டும் சிக்கவில்லை. இருப்பினும் அங்குள்ள சிற்பமும் அதே சிற்பிதான் செய்தார் எனவும் கர்ண பரம்பரை செய்திகள். எனவே, இந்தச் செவிவழிச் செய்திகளை ஆய்வு செய்து புதிய அய்வறிக்கையாக இது அமைகிறது.

ஒரு கோவில் கட்டப்படத் தொடங்குகிறது. அதற்குண்டான கற்கள், மலைகள் உள்ள பகுதிகளிலிருந்து பல்வேறு அளவுகளில் மக்கள் உருட்டுக் கட்டைகள் துணையோடும், மாட்டு வண்டிகள் உதவியோடும், யானைகள் துணையோடும் கொண்டு வரப்படுகின்றன. பல்வேறு சிற்பக் கலைஞர்கள் கோவில் பணியில் ஈடுபட்டு செய்து வருகின்றனர். தலைமை சிற்பியிடம் மூலஸ்தான முருகன் சிலையை வடித்துக் கொடுக்க கல் ஒதுக்கப்பட்டு அரசன் முன்னிலையும் பூசையும் போட்டு பணி துவங்கியாயிற்று.

அது கண்ணாடி கண்டுபிக்காத காலம். எனவே கற்களைச் செதுக்கி, சில்லுகள் பெயர்த்து, தேவையற்ற பகுதியை நீக்க வேண்டும். அவ்வாறு செய்யும்போது உடைந்து தெரிக்கும் சில்லிற்கு வேகம் அதிகம். சிற்பியின் உடலின் பல பாகங்களிலும் படும். கற்கால மனிதன் விலங்குகளை வேட்டையாடப் பயன்படுத்திய கற்களைப்போல ரக வாரியாக அளவில் பெரியதும், சிறியதுமாக இருக்கும். உடலில்பட்டு காயமும் உண்டாகும். வியர்வையோடு ரத்தமும் அவ்வப்போது எட்டிப்பார்க்கும். இவ்வாறு "கல்லால் அடிபட்டாலும் கண்ணில் மட்டும் அடிபடக்கூடாது" எனும் பழமொழி இங்குதான் அரும்பி இருக்கும். அப்படி ஒரு கல் துகள் சிலைவடித்த சிற்பியின் ஒரு கண்ணுள் புகுந்து விட்டது. சிற்பி இதனால் தன் ஒரு கண்பார்வையை இழந்தான். புகுந்த கல்லை எடுத்தான். எனவே ஒரு கண் குருடானது. சில நாள் அதற்கு ஓய்வெடுத்தான். கல் துளைத்தது போதாது என்று அரசவையிலிருந்து அவனை ஆள்மேல் ஆள் வந்து துளைத்து எடுக்கின்றனர். எப்போது சிலை முடியும்? மன்னர் கேட்கச் சொன்னார் என்ற கேள்விகளுடன் வந்து விசாரிக்கின்றனர். அரசனுக்குப் பயந்த அமைச்சர்கள் அல்லவா? "நீங்கள் குறிப்பிட்ட தேதியில் கொடுக்கவில்லை எனில் அரசர் எங்கள் கண்ணைத் தோண்டி விடுவார்" எனச் சிற்பியைப் பயமுறுத்த "எனது ஒரு கண் போனால் என்ன? மற்றொரு கண் உள்ளதே! எனவே குறித்த காலத்தில் முடித்து விடுவேன் குடமுழுக்கிற்குத் தேதியில் மாற்றம் செய்ய வேண்டாம்" எனக் கூற அவ்வாறே மன்னனுக்கும் தகவல் அளிக்கப்பட்டது. எனவே தன் தன்னம்பிக்கையினாலும், இறை அருளாலும் சிலையை எவ்வித குறைபாடுமின்றி மிக நன்றாகவே வடித்துக்கொடுத்தான் சிற்பி.

ஒரு கண் பார்வையில் விளைந்த அற்புத அழகன் என அனைவரும் முருகனை ஆர்வமுடன் கண்டு சென்றனர். கும்பாபிஷேகமும் நடைபெற்றாயிற்று. இந்தச் செய்தி கேட்டு அக்கம் பக்கம் ஊர்க்காரர்களும் வந்து பார்த்து மலைத்துப் போகின்றனர். சில மாதங்களில் மற்றொரு இடத்தில் முருகனுக்கு ஆலயம் நிர்மாணிக்க மக்கள் முடிவெடுக்கின்றனர். மன்னனுக்குத் தகவல் செல்லுகின்றது. "எங்களுக்கு அதேபோல முருகன் வேண்டும்" எனச் சிற்பியிடம் கேட்க தம்மால் இயன்றவரை செய்து தருகிறேன் எனக் கூற "உங்களால் முடியும் செய்யுங்கள்" என அவருக்கு ஊக்கமும், உற்சாகமும் கொடுக்க அந்தத் தெம்புடன் அவர் உளியை எடுத்தார்.

இம்முறை அவருக்கு வலி அவர் விழி(கண்ணில்)யில் அல்ல, கையில். ஆம் கனத்த பெரும் சுத்தியலைக் கொண்டு உளியைத் தாங்கி கல்லைப் பெயர்க்கும்போது அவரது கட்டைவிரல் அடிபட்டு வேலை செய்ய இயலாது போகிறது. அவரால் உளியைப் பலமாகப் பிடிக்க முடியவில்லை. தமது உதவியாட்களைக் கொண்டு சிலையினைச் செய்து, முன்னர் வடித்த அதே முருகனைப் போல இரண்டாவது முருகன் சிலையையும் வடித்து முடித்தார். என்ன ஆச்சரியம் இரண்டு சிலைகளும் ஒரே மாதிரியாக இருந்ததாம். ஊர் மக்கள் சந்தோஷத்தில் திளைத்தனர். முருகன் கொண்டாடப்பட்டார். சிற்பியின் தன்னம்பிக்கை வெற்றி பெற்றது. இத்துடன் கலைத்தொழில் பூர்த்தியடைந்து விட்டது. "நித்யகண்டம் பூர்ண ஆயுசு" என்பது போல ஆகிவிட்டது என ஏக்ச'ப் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தார்.

இப்படியாக நாட்கள் சில நகர்ந்தன. அடுத்து "எண்கண்" எனும் ஊரில் உள்ள ஆலய மூலவருக்கு உற்சவர் வடிக்க மக்கள் இவரை அழைத்தனர். தன்னால் முழு தைரியம் வரவழைத்துக் கொள்ள இயலவில்லை. எனவே ஒப்புதல் அளிக்கவில்லை. மக்களின் நம்பிக்கையும் உற்சாகமும் அவரைப் பேச வைத்தது. எனவே, "உதவி ஆட்களைக் கொண்டு செய்வோம்" எனப் பதில் கூறி அனுப்புகிறார்.

இவ்வாறு மூன்றாவது முருகப்பெருமானின் பணி தொடங்கப்பட்டு உதவியாள் துணையுடன் செய்து வருகிறார். சிற்பிக்கு அணுக்கத் தொண்டு செய்து வரும் பெண்ணின் உதவியுடன் சிலை பூர்த்தியாகிறது. அச்சமயம் சிற்பியின் பக்தியிலும் சிற்பத்தின் அழகிலும் தன்னையும் மறந்து விட அவள் வேலை செய்த உளி அவள் கரத்தில் தவறுதலாகப் பட்டு ரத்தம் பீறிட்டு சிற்பியின் கண்ணில் படுகிறது. அந்த ரத்தம் பட்ட மறுகணம் சிற்பியின் குருடான கண் பார்வை பெறுகிறது. உடனே "என்கண்!, என்கண்!!" என தன் கண்ணுக்குப் பார்வை கிடைத்ததைக் கூறி ஆர்ப்பரிக்கிறார். இறைவன் மனித வடிவில் வந்து உதவிசெய்து தனது ரத்தத்தைச் சிற்பக் கலைக்கு அவரது பக்திக்குக் காணிக்கையாக்கிட அப்போது சிற்பியின் கண் திறக்கப்பட்பது. சிற்பமும் கண் திறந்து வழிபாட்டுக்கு வைக்கப்பட்டது.

இவ்வாறு சிற்பியின் எண்ணமே கண்ணாகக் கொண்டு இமைதிறந்த சிற்பங்கள் எத்தனையோ! இம்மண்ணில்.

## தாலாட்டுப் பாடல்களில் முருகன்

அ. ரஞ்சனி,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி,
கோயம்புத்தூர் -641 029.

அழகு என்பது ஆணுக்கு வீரம் என்ற பொருளில் இனக்குழுத் தலைவன் முருகு என்று அழைக்கப்பட்டான். காட்டில் வேட்டையாடி, காட்டு வளங்களின் நுகர்வுக்குரியவனாக இனக்குழுத் தலைவன் முருகு திகழ்ந்தான். தமிழ் நாட்டுப்புறப் பாடல்களில் முருகன் வள்ளி காதல் கதை தான் விரிவாகத் தாலாட்டு, கும்மி, ஏற்றம், காவடி, கதைப்பாட்டு என அனைத்து வடிவங்களிலும் பேசப்படுகின்றது. 'பரத்திமகள் தெய்வானை' என்னும் தாலாட்டுப் பாடல்களில் ஈழம் வரை இக்கதை பரவி உள்ளது. நாட்டுப்புறப் பாடல்களில் முருகன் பெருந்தெய்வமாக மட்டுமல்லாமல் சிறு தெய்வமாகவும் விளங்குகிறான். காவடி எடுத்தல், பால்குடம் எடுத்தல், அலகு குத்துதல் போன்ற சடங்குகளோடு முருகன் வழிபாடு பரவலாக உள்ளது. இதே போன்று குன்றுதோறும் குமரன் குடியிருப்பான். திருப்பரங்குன்றம், திருத்தணி, பழனி, அழகர்மலை எனும் நான்கும் தான் குன்றுகள். சுவாமி மலை செயற்கை மலை. செந்தூரோ கடற்கரை. இவற்றுள் பழனி பஞ்சாமிர்தம் முருகனின் பிரசாதங்களுள் பிரசித்தி பெற்றது.

### தாலாட்டுப் பாடல்களில் தண்டபாணி

தாலாட்டு, குழந்தையைத் தூங்க வைப்பதற்கான பாட்டு. அப்போது குழந்தையைக் காப்பாற்றிடப் பல்வேறு தெய்வங்களைத் தாய்மார்கள் வேண்டினாலும், முருகனையும் வேண்டுகின்றனர். முருகன் குழந்தையாகவே தோன்றுகிறான்; குழந்தையோடு விளையாடுகிறான். முருகன் புராணத்தைக் குழந்தைக்கு உடனே புரியாமல் போனாலும் பிஞ்சு நெஞ்சிலே பதியும் என்று நம்பித் தாயனவள் பாடுகிறாள். அவளது தேர்வுகள் அவளையும், குழந்தையையும் பொறுத்து மாறுகின்றன.

*"சுப்ரமண்யர் கோயிலிலே – கண்ணே சொகுசான தேரிருக்கு*
*மோளங்களும் தாளங்களும் முழங்குதடி கோயிலிலே*
*ஆண்பிள்ளையும் பெண்பிள்ளையும்*
*கண்ணே அங்கே ஆடுறாங்க பாடுறாங்க*
*தாசிகளும் வேசிகளும் - கண்ணே அங்கே*
*தாளம் போட்டு ஆடுறாங்க*
*பறத் தெரு வீதியிலே பறச்சிகூடி நிற்கையிலே*
*வலைத்தெரு வீதியிலே வலைச்சி கூடி நிற்கையிலே"*

(கி.வா.ஜ., மலையருவி, ப.222)

*"கண்ணுமணி பொன்னுமணி கந்தருட வேலுமணி*
*வேலுமணி வேணுமின்னு வெகுநாதவசிருந்தேன்*
*ஆத்து மணலிலே - உன்னை பெற்றா அருந்தவசு செய்யயிலே*
*மைந்தனில்லை இன்னு சொல்லி — வேலவர்*
*மடிப்பிச்சை தந்தாரே"* (ஏட்டில் எழுதாக் கவிதைகள், பா.65)

இது செ.அன்னகாமு தொகுத்த தாலாட்டு; மதுரை மாவட்டத்தது "இதுபாவை நோன்பைக் குறிக்கிறது. பெண்கள் பையத்துயின்ற பரமனடி பாடி, நெய்யுண்ணாது, அதிகாலையில் நீராடி, மையிட்டெழுதாது, மலரிட்டு முடியாது, செய்யாதன செய்யாது, தீக்குறளைச் சென்றோதாது, ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் செய்து ஆற்று மணலிலே பாவையை உண்டு பண்ணி அதைச் சாற்றி நீராடிய தவத்தில் வந்த பாலகன் என்று குறிப்பிடுகின்றன" என்று அவர் விளக்கமும் கூறுகின்றார்.

*"காணிக்கை கொண்டு — நான்*
*கடைத் தெருவே போகையிலே*
*மாணிக்கம் போல — வேலவா!*
*மடிப்பிச்சை தந்தாரோ!*
*பழனிமலை ஆண்டவர்க்குப்*
*பாதம் பணிந்தாளோ"* (ஏட்டில் எழுதாக் கவிதைகள், பா.67)

என்( றல்லாம் மதுரை மாவட்டத்துத் தாலாட்டு நீளும், வேலவனின் மடிப்பிச்சை தான் குழந்தை. பழனிமலை ஆண்டவனின் பாதம் பணிந்து பெற்ற பிரசாதந்தான் பிள்ளை என்பது தாயின் எண்ணம்.

*"பந்தவனம் பூஞ்சோலை*
*நாலு பக்கம் உண்டு பண்ணிக்*
*கந்தர் சஷ்டி நோன்பிருந்து*
*காதலுடன் பெற்ற கண்ணோ"* (ஏட்டில் எழுதாக் கவிதைகள்.,பா.70)

தாலாட்டு என்பது, பிள்ளைக்காகத் தாய் மட்டுமன்றி தந்தையும் நோன்பிருப்பான்; நற்பணிகள் பல செய்வான் என்பதை இப்பாடல் கூறுகின்றது.

*"ஒரு மாங்கனிக்காக*
*உலகை வலம் வந்தவனோ*
*பெருமாள் மருகானோ*
*பெண்ரதிக்கு மாப்பிள்ளையோ*
*கரும்புக் கணையானோ*
*கன்னி வள்ளி நாயகனோ"* (ஏட்டில் எழுதாக் கவிதைகள்.,பா.76)

என்றும் இந்த வட்டாரத் தாலாட்டில் முருகனின் புராணக்கதை பொதிந்துள்ளது என்பதை அறியலாம். இவற்றில் மன்மதனும் கலக்கப்பட்டுள்ளான் என்று ஆசிரியர் கூறுகிறார்.

*"வையாபுரி அழகு*
*மலையைச் சுற்றித் தோப்பழகு*
*இடும்பன் குளத்தழகு — நான்*
*எங்குமே பார்த்ததில்லை*
*ஏலம் திறந்து இளநீரும் கண்திறந்து*
*பாலே மணக்குதய்யா பழனிமலைச் சந்நிதியில்*
*கட்டை தட்டிக் கால் இடறி - இடையர்*
*கணங்கால் பால் கவிழ்ந்து*
*வெட்ட வெட்டப் பாலூறம் - பழனி*
*முருகனது சந்நிதியில்"* (எட்டில் எழுதாக் கவிதைகள்.,பா.95)

"பழனி ஆண்டவனையும் பழனி மலையையும் வள்ளியையும், வள்ளி தெய்வானை மயிரு பிடி சண்டையையும் தாலாட்டு பாடல் விவரிக்கின்றது" என்று செ.அன்னகாமு கூறுகிறார். இதில் வையாபுரி, இடும்பன்குளம், தோப்பு, இளநீர் அபிசேகம், பாலாபிசேகம் முருகனுக்குப் படைக்கப்படுவதாக இதில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

*"கடலோரம் கோயில் கட்டி*
*கந்தன் என்று பேர் விளங்கி*
*அலையடிக்கும் நேரமெல்லாம் - வேலவர்*
*ஆண்டி வேஷம் கொண்டாரே"* (தமிழக நாட்டுப் பாடல்கள், ப.103)

இப்பாடல் நிலவளத்தால் உழவனுக்கு ஏற்படும் பெருமிதத்தைச் சிறப்பாக சொல்லுகின்றது. மலை சார்ந்த இப்பகுதியில் (சிவகிரி வட்டாரம்) பல மலைக் கோயில்கள் உள்ளன. குறிஞ்சி தெய்வமான வேலன் வள்ளி, தெய்வானையோடு பல சிற்றூர்களில் கோயில் கொண்டிருக்கிறான் என்பது புலப்படுகிறது. "இப்பகுதியிலுள்ள நிலத்தின் வளத்தைத் தாய் தன் குழந்தைக்கு எடுத்துக் கூறுகிறார்" என்பார் பேரா. நா. வானமாமலை (ப.107)

கடலோரம் கோயில் என்பது திருச்செந்தூரைக் குறிக்கின்றது. (வேலவர்) ஆண்டி வேஷத்தில் முருகன் பழனியில் காட்சியளிக்கிறார். இவை இரண்டையும் தாய் இணைத்துப் பார்க்கிறாள்.

*"ஆறாறும் பொன்னாலே*
*அந்தணரும் பொன்னாலே*
*தேர்மயில் ஏறிவரும்*
*தெய்வானை பொன்னாலே*
*வாகனத்து மேல் ஏறிவரும்*
*வள்ளியம்மை பொன்னாலே*
*ஏறுமயில் ஏறிவரும்*
*இறைவரும் பொன்னாலே*
*தோகைமயில் ஏறிவரும்*
*சுப்ரமணியரும் பொன்னாலே*

*வெள்ளி மயில் ஏறிவரும்*
*வேலவரும் பொன்னாலே தங்கமயில் ஏ"*

என்ற தாலாட்டுப் பாடல் திருநெல்லை ஆச்சியிடமிருந்து தொகுக்கப்பட்டிருக்கிறது. இவற்றில் திருவிழாவில் சாமி ஊர்வலம் வருகின்றது. அதில் முருகன், வள்ளி, தெய்வானை அனைவரது தங்கச் சிலைகளும் ஊர்வலமாகப் போகின்றது. இவர்கள் மூவரும் மயில் வாகனத்தில் வருவது நாம் பார்ப்பதற்குக் கண்கொள்ளாக் காட்சியாக விளங்குகின்றது.

*"திங்கள் முழுகி — என் கண்ணே*
*திருத்தணிக்குப் போகையிலே*
*திருத்தணி முருகா — என் கண்ணே*
*திருபுனத்தில் கொண்டாரோ*
*மாமயில் முருகரும் - என் கண்ணே*
*மனமகிழ்ந்து கொண்டாரோ"*

என்ற தாலாட்டு ஆறு.அழகப்பனின் தொகுப்பு. இதில் திருத்தணி முருகன் பிள்ளைவரம் தந்த கதையைச் சிறப்பாகக் கூறப்படுகிறது. முருகன் சிவனது மகன் என்றும்; திருமாலின் மருமகன் என்றும்; புராணக் கதைக் குறிப்புகளை இப்பாட்டில் ஆசிரியர் கூறுகின்றார்.

*"ஆச்சி அடித்தாளோ அமுதூட்டும் கையாலே*
*பேச்சி மனமம் பொறுத்து*
*சண்முகனே நித்திரை செய்"*
(செட்டி நாட்டுத் தாலாட்டுப் பாடல்கள், ப.373)

*"கண்ணை அடிச்சாரார்*
*கற்பகத்தைத் தொட்டாரார்*
*கூப்பிட்டு நான் கேப்பேன்*
*குமரேசா கண்ணுறங்காய்"* (மேலது, ப.374)

இந்தத் தாலாட்டுப் பாடலில் குழந்தை சண்முகனாகவும், குமரேசனாகவும் விளங்குகின்றார். தெய்வக்குழந்தை தெய்வத்தால் வந்த குழந்தை என்ற எண்ணம் இலங்கையில் ஆழமாகப் பதிந்துள்ளது என்று ஆசிரியர் கூறுகிறார். குழந்தை அழகு காவடியின் அழகு; குழந்தையின் அசைவு மயிலிறகின் அசைவு என்று முருகனின் ஆயுதத்தோடு ஒப்பிடுகிறார்.

*"வெள்ளிபோல் நிலவடிக்க*
*வேலவர் பந்தடிக்க*
*வேலவர் பந்தை நீ*
*எதிர்த்தடிக்க வந்தவனோ!"* (பேரா.ஆறு.அழகப்பன், தா.ஐ., ப.44)

ஆண் குழந்தை வேலவனோடு விளையாடும் என்பர். வேலவனும் குழந்தைதான். விளையாட்டு என்று வரும்போது குழந்தையும் தெய்வமும் ஒன்று தானே என்பது தெரிகின்றது.

*"முத்திடித்து மாக்கொழித்து – என் கண்ணே*
*முற்றமெல்லாம் கோலமிட்டு*
*கோலம் அழியாமே – கண்ணே*
*கும்பிடடி கோல வள்ளி!*
*வள்ளி என்றால் வள்ளி*
*மலைமேல் படரும் வள்ளி*
*கொடிபடர்ந்த வள்ளியர்க்குத்*
*துணைபடர வந்த கண்ணே"* (பேரா.ஆறு.அழகப்பன், தா.ஐ., ப.48)

பெண் குழந்தை வள்ளியை வழிபட கோலமிடுகிறாள். முத்துமாவால் ஆன கோலம் முற்றமெல்லாம் விரிகிறாள். வள்ளிக்குத் துணையிருக்கவும் வந்தவள் என்று கூறுவது கவனிக்கத்தக்கதாக இருக்கின்றது.

முடிவுரை

முருகன் தமிழ் நாட்டுப்புற மக்களின் தமிழ்த் தெய்வம் வள்ளியின் தலைமயிரைப் பிடித்து இழுக்கும் அளவுக்குத் தெய்வயானையின் பலம் கூடியுள்ளது. இது சமஸ்கிருத மயமாதலின் செல்வாக்கு என்பர். தெய்வானையைப் பரத்திமகள் என்று கருதுகிறார்கள் பரதவர் பெருமக்கள்.

நான்கு படைவீடுகளைப் பற்றிப் பரவலாகப் பாடப்பட்டுள்ளன. திருப்பரங்குன்றமும் பழமுதிர்ச்சோலையும் முழுமையாகப் பாடப்படவில்லை. காவடிப் பாடல்கள் பல மக்களால் பாடப்பட்டு வருகின்றனர். இதேபோன்று குழந்தைகளுக்குத் தாலாட்டுப் பாடல்களும் பாடப்பட்டு வருகின்றார்கள் என்பது அறிய முடிகின்றது. முருகனைப் பற்றியும் அவரது அழகினைப் பற்றியும் "ஏற்றப்பாட்டாக" தாலாட்டாக மக்கள் பாடி வருகின்றனர்.

முருகன் என்றால் அழகு, அது மட்டுமா அவனைச் சார்ந்த அனைத்தும் அழகுதான்.

*"அவனது வேல் அழகு*
*அவனது மயில் அழகு*
*அவனது வள்ளி அழகு*
*அவனது தெய்வானை அழகு*
*அவனது சேவல் அழகு*
*ஏன்? அவனது நாகம் கூட அழகுதான்"*

# புராணங்களில் முருகன்

ப. ரஞ்சனி
முனைவர் பட்ட ஆய்வாளர், வரலாற்றுத்துறை
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கலைக்கல்லூரி(த)
தஞ்சாவூர்-7

இப்பரந்த தேசத்தில் புராணங்கள் பெரும்பங்கு வகிக்கின்றன. புராணங்கள் இந்திய கலாச்சாரத்தின் சின்னங்களாகத் திகழ்கின்றன. இந்நாட்டில் சைவம், வைணவம், சாக்தம் (சக்தி வழிபாடு), சௌர்யம் (சூரிய வழிபாடு) காணபத்யம் (கணபதி வழிபாடு) மற்றும கௌமாரம் (குமரன் முருகன் வழிபாடு) என அறுவகை வழிபாடுகள் அந்த நாள் முதல் இந்த நாள் வரை நடைபெற்று வருகின்றன. குன்று இருக்குமிடமெல்லாம் குமரன் இருக்குமிடமாகக் குவலயத்தார் வழிபட்டு வருவது மரபு. புராணங்களில் முருகன் அன்பனுக்கு அன்பனாக, ஆறுபடை வீடு உடையவனாக, இன்பமய ஜோதியாக, ஈசனுக்கு அருள்புரிபவனாக, உலகநாத மருமகனாக, ஊமைக்கு உபதேசித்தவனாக, எட்டுக்குடி வேலவனாக, ஏறும் மயில் ஏறி வரும் முருகனாக, ஐங்கரனுக்கு இளையவனாக, ஒய்யார வள்ளி வேலனாக. ஓங்காரத் தத்துவமாக, ஔவைக்கு உபதேசித்தவனாகப் பல புலவர்களால் தமக்கே உரிய பாணியில் சித்த க்கப்பட்டு உள்ளான்.

## கந்தபுராணம்

பைந்தமிழில் கச்சியப்ப சிவாசாரிய சுவாமி அவர்கள் கந்த புராணத்தினை இயற்றி உள்ளார். மேலும், முருகனின் சிறப்பைக் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள்,

*"மாயையின் வலியோ னாகி மான்முத லோரை வென்றே*
*ஆயிர தோரேட் டண்டம் அரசு செய் துக நூற்றெட்டுக்*
*காயம் தமிழன் றாகிக் கடவுளர்க்கு அலக்கண் செய்த*
*தீயசூர் முதலச் செற்ற குமரன்றாள் சென்னி வைப்போம்"* (1)

தான் பெற்ற மாயையின் தன்மையினால் வன்மை பெற்று திருமால் உள்ளிட்ட அமரர்கள் அனைவரையும் வெற்றி வாகை சூடி, நூற்று எட்டு யுக காலம் ஆயிரத்து எட்டு அண்டங்களை ஆட்சி செய்து, தன் உடலானது அழிவு அற்றதாகி, அமரர்களுக்கு இன்னல்களை விளைவித்து வந்த தீயோனான சூரபத்மன் என்ற அசுரர் தலைவனை வீழ்த்திய முருகப்பெருமானின் திருவடி மலர்களைக் கரங்குவித்து சிரம் தாழ்த்தி வணங்குவோம். சூர பதுமனை அழிக்க முருகன் தோன்றினான் எனக் கந்தபுராணம் பகர்கிறது.

ஆசிரியர் பி.ஸ்ரீ. "பக்தி விசுவாசம், ஞான நெறியில் நடத்தல், உண்மை, இரக்கம், தற்புகழ்ச்சியின்மை. புலனடக்கம், அகத்தூய்மை,

அச்சமின்மை முதலிய பண்புகளைத் தேவசம்பத்து என்றும், செருக்கு, சினம் கொடுமை, பொய்ம்மை, ஒழுக்கமின்மை. இரக்கமின்மை, பெறாமை, அறியாமை முதலியவற்றை அசுர சம்பத்து என்றும் கூறுவதுண்டு. தேவ சம்பத்தும் அசுர சம்பத்தும் முரண்படுவன. ஒன்றுக்கொன்று பகைமை உடையன. இறைவனது அருள் கால போக்கில் அசுர சம்பத்தை அழித்துத் தேவ சம்பத்தை நிலை பெறச்செய்யும். இத்தகைய தத்துவத்தை – அதிசூட்சுமம் இயற்கை விதியை வசீகரமான கதை – உபகதைகள் வாயிலாக உள்ளத்தின் ஆழத்தில் பதியச் செய்யும் ஆற்றல் கந்தபுராணத்திற்கு உண்டு" என்பார். முருகப் பெருமானின் மேன்மை கந்தபுராணம், ஸ்ரீநாரதர் புராணம், குமாரசம்பவம். மாயூரப் புராணம். தணிகைப்புராணம், திருவேங்கடத் தலப்புராணம், திருமயிலைப்புராணம், இராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்களில் எடுத்து இயம்பப்பட்டுள்ளது.[1] கந்தபுராணத்துள் ஆறு காண்டங்கள் உள்ளன. அவற்றுள் முருகப்பெருமானின் மேன்மையினை வெளிப்படுத்தும் வண்ணம் பதினாயிரத்து முந்நூற்று நாற்பத்து ஐந்து செய்யுட்கள் அமைந்து உள்ளன. இதனை இயற்றிய கச்சியப்ப சிவாச்சாரிய சுவாமிகள் காஞ்சி மாநகரைச் சார்ந்தவர். 'கந்தபுராணம் நம் சொந்தப்புராணம்' என்ற கருத்து எங்கும் நிலவி வருகிறது. ஒரு முறை நான்முகன் பிரம்மா செய்த வேள்வியில் பங்கு கொள்ள அகத்தியர், வியாசர், நாரதர். சனகனாதியர், வால்மீகி. வசிட்டர். சுசுர் முதலியோர் கலந்து கொண்டனர் . –" அப்போது முனிவர்களிடம் நாரதர் சிறந்த சிவதலம் எது? என்று கேட்டார்கள்" அவர் சனக முனிவரிடம் கற்ற வியாசரைக் கேட்க, அவரும் முருகக் கடவுளிடத்து சகல கலையும் கற்ற அகத்தியரிடம் கேட்குமாறு கூறினார். பின் முனிவர்கள் அகத்தியரிடம் கேட்குமாறு கூறினார். பின் முனிவர்கள் அகத்தியரிடம் வினவிய போது சிறந்த சிவதலம் திருவாலவாய் எனும் மதுரை என்று கூறினார். இக்கருத்து திருவிளையாடற் புராணத்தில் இடம் பெற்றுள்ளது.[2]

*"தகிதம் பரிரவி சோபனே! பவிஷ்ய ப்ரியஸங்கமம் வபு:!*
*ரவிபீத ஜலா தபாஸ்யயே புனரோதேன வறி யுஜ்யதே நதி!!"*

ஏ, சுந்தரி, உனக்குப் பிரியமான சங்கமம் உறுதியாகக் கிட்டும். உனக்கு இந்த உடலை அச்சங்கமம் பொருட்டு காக்க வேண்டி உள்ளது. கோடைக் காலத்தில் நீர் இன்றி வறண்டு இருக்கும் நதியானது, மீண்டும் மழைக்காலத்தில் நீர் இரு கரைகளையும் தழுவிச் கொண்டு பாய்வது போல் நீயும் உனது கணவனை அடையவாய் என்று அசரீரியாக ஒலிக்கிறது. சிவனின் நெற்றிக் கண்ணிலிருந்து உருவான தீப்பொறியைக் கண்டதும் உமாதேவி உள்ளீட்ட அனைவரும் அஞ்சி நடுங்கினர். கங்கை நதியில் விடப்பட்ட அக்குழந்தை இமயமலைச் சாரலில் உள்ள சரவணப் பொய்கையினை அடைந்தது " ஜோதிப் பிழம்பே மேனியாகக் கருணை பொழியும் ஆறுமுகங்களுடன் பன்னிரு கைகளுடன் குமரக்கடவுள் அவதாரம் செய்தார்.

*'கருணை கூர் முகங்கள் ஆறும கரங்கள் பன்னிரண்டும் கொண்டே*
*ஒர திரு முருகன் வந்(து) ஆங்(கு) உதித்தனன் உலகம் உய்ய'*

குமரன் உதித்ததும் ஆகாய துந்துபிகள் முழங்கின. தேவர்களும் முனிவர்களும் பூ மழை பொழிந்தனர். உயிர்க்குலத்தின் இதயத்திலே மகிழ்ச்சி துளிர்த்தது. சரவணப் பொய்கையில் செந்தாமரை மலர் மீது இனிது அமர்ந்து இருந்தார். குமரக் கடவுள் சிறு குழந்தை போல" என்று கந்தபுராணம் பகர்கிறது. ஆறுமுகனின் மேன்மையினைப் பைந்தமிழ்.[3]

*'ஏறுமயில் ஏறி விளையாடும் முகம் ஒன்று*
*ஈசனொடு ஞானமொழி பேசும் முகம் ஒன்று*
*கூறும் அடியார்கள் வினை தீர்த்த முகம் ஒன்று*
*குன்றுருவ வேல் வாங்கி நின்ற முகம் ஒன்று*
*மாறுபடு சூரரை வதைத்த முகம் ஒன்று வள்ளியை*
*மணம் புணர வந்த முகம் ஒன்று*
*ஆறுமுகம் ஆன பொருள் நீ அருளல் வேண்டும்*
*ஆதி அருணாசலம் அமர்ந்த பெருமாளே'*

என்று போற்றிப் புகழ்கிறது. கவியரசு கண்ணதாசனும் தமக்கே உரிய பாணியில்' ஆறுமுகம் ஆன பொருள் வான் மகிழ வந்தான் அழகன் இவன் முருகன் எனும் இனிய பெயர் கொண்டான்' என்று பாடிப் பரவசமாகிறார்.[4]

திருவிளையாடற் புராணம்

*"தலமுதன் மூன்றும் சிறந்ததோர் சைவத்*
*தலமுரை என்ன நாரதன்றான்*
*தலமுழு துணர்ந்தசன ற்குமா ரன் பாற்*
*கற்றவன் வியாதனா மவன்பால்*
*நலமுறக் கேண்மினென அவன் கதிர்வேல்*
*நம்பியால் மறைமுத லனைத்தும்*
*அலைவத வுணர்ந்தோன் குறுமுனி யாகும்*
*அவனிடைக் கேண்மென விடுத்தான்"*

ஒரு முறை நாரதர் செய்த வேள்வியிலிருந்து வெள்ளாடு ஒன்று தோன்றி, பருத்த வடிவம் கொண்டு அனைவருக்கும் துன்பம் விளைவித்த வேளையில், தேவர்கள் முருகப் பெருமானிடம் முறையிட்டனர். முருகப்பெருமான் அவர்களுக்கு ஆறுதல் கூறி, வீரபாகுவை அழைத்து, - "நாரத வேள்வியிலே பிறந்த வெள்ளாடு பல நரபலிகளைச் செய்துவிட்டது. எனவே அதன் கொட்டத்தைப் போய் அடக்கித் தேவர் குறைதீர்த்து வை!" என்று கூறினார். வீரபாகுவும் இறைவன் ஆணையை ஏற்று வெள்ளாட்டை அடக்கித் தேவர்களின் துயர் தீர்த்தார்.[5]

திருமுருகாற்றுப்படை

திருமுருகாற்றுப்படை இயற்றிய நக்கீரர் முன்பு தோன்றிய முருகன்- "நக்கீரா! வேண்டியவற்றைக் கேட்பாயாக!" என்று சொன்னார். நக்கீரர் "குமரக் கடவுளே!" உலகத்தார் தங்களை என்றும் இளையோன் என வாழ்த்த வேண்டும்.

அடியேன் செய்த திருமுருகாற்றுப்படை என்ற பாமாலையை அன்போடு ஓதுபவர்களுக்கு வேண்டிய நலன்களைத் தந்தருள வேண்டும் என்று கேட்க முருகனாகிய என்றும் இளையோன் அப்படியே அருளினோம் என்று திருவாய் மலர்ந்தருளினார்".[6]

**குமாரசம்பவம்**

வடமொழியில் உவமைக் கவிஞர் காளிதாசன் குமாரசம்பவம் என்ற பெருங்காவியத்தில் முருகனின் மேன்மையினைச் சித்தரித்து உள்ளார்.[7]

தட்சன் மேற்கொண்ட யாகத்தில் சிவபெருமானுக்கு உரிய மரியாதை தராத காரணத்தினால் கோபம் கொண்டு தாட்சாயினி சோம குண்டத்தில் குதித்து விட சிவனும் பார்வதியினைப் பிரிந்து இமயமலையில் தவம் செய்யலானார். இந்திரலோகத்திற்குத் தாரகாசுரன் பெரிதும் சவாலாக விளங்கினான். சிவபெருமான் கயிலாயத்தில் எழுந்தருளியிருந்த போது, பார்வதி தேவி சிவபெருமானை நோக்கி – "தேவரீரை இகழ்ந்த தட்சனின் மகளாகித் தாட்சாயணி என்றும் பெயர் பூண்டிருந்த என் குறை ஒழிய வேண்டும் என்று விண்ணப்பித்துக் கொண்டார். அது கேட்ட சிவபெருமான், இமயமலையில் அரசன் தவம் புரிகின்றான், நீ அவன் மகளாய் வளர்ந்து வந்தால், நாம் வந்து உன்னை மணம் செய்து அழைத்து வருவோம் என்றார்" அவ்வாறே மலைமகளாக அவதரித்து மலையரசனாலும், அரசி மேனையாலும் எடுத்து வளர்க்கப்பட்ட மலைமகள் தனது ஐந்தாவது வயதில் தவச்சாலை ஒன்று வேண்ட. மலையரசனும் அருந்தவம் புரிய தவச்சாலை அமைத்துக் கொடுத்தனன். அது சமயம் சூரபத்மன் எனும் அசுரன் இந்திரனுக்குச் சிம்ம சொப்பனமாக விளங்கினான். ஐந்து வயது குழந்தை தவம் செய்ய இருப்பதனை உணர்ந்த அரசி மேனை 'உமா' அதாவது 'ஆ, வேண்டாம்' என்று பொருளில் கூறியதால் பார்வதி தேவிக்கு உமா என்ற பெயர் ஏற்பட்டதாகக் காளிதாசன் கூறுகிறான். மலையரசனை அணுகிய நாரதர் எதிர்காலத்தில் உமா சிவனின் துணைவியாவாள் என்று கூறுகிறார். மேலும், காளிதாசன் கூறுவது யாதெனில் இமயமலையில் சிவபெருமான் தவமிருக்கும் வேளையில் அங்கு அவருக்குப் பணிவிடை செய்ய பார்வதி வரும் நேரத்தில் வசந்த காலத்தில் இந்திரன் வேண்டுகோளுக்கு இணங்கி மன்மதன் காமபாணங்களை எய்த, உமாதேவியினைச் சிவன் நோக்க, உடனே ஆண் மகவு பிறக்கிறது. சிவன் நெற்றிக் கண்ணைத் திறந்து மன்மதனை எரிக்க, ரதிதேவி சிவனை வணங்க, சிவனும், 'தீர்க்க சுமங்கலி பவ' என ஆசீர்வதிக்க. அக்கணம் முதல் மன்மதன் ரதிதேவிக்கு மட்டும் தெரியும் வண்ணம் அமைந்து ஏனையோருக்கு அநங்கனாகத் திகழ்கிறான். இச்செய்தியினைக் காளிதாசர் ஆகாசவாணியாகத் தெளிவு செய்கிறார்.[8]

**வசிஷ்ட முனிவர்**

'சட்டியில் இருந்தால் அகப்பையில் வரும்' என்பது தமிழ்ப் பழமொழி. இதன் பொருள் யாதெனில் சஷ்டியில் விரதம் இருந்தால் அகப்பையில்

கருப்பப்பையில் குழந்தை வரும் என்பதாகும்" முருக பக்தர்களில் ஒருவனான முசுகுந்தச் சக்கரவர்த்தி ஒருநாள் வசிஷ்டரை வணங்கி, முருகக் கடவுளுக்குரிய விரதங்களை எனக்குச் சொல்ல வேண்டும் என்று கேட்டுக் கொண்டான். அதற்கு அம்முனிவர்,

*'வெள்ளி நாள் விரதந் தானே*
*விண்ணவர் உலகங் காத்த*

வள்ளல் தன் விரதமாகும் என்று கூறினார். அந்த விரதம் பக்தனுக்கு உள்ளத்தில் நினைத்தவைகளை நிறைவேறச் செய்யும் என்றும் வசிஷ்டர் தெரிவித்தார்.

பகீரதன் என்ற அரசனை அறியாதவர் யார்? பகீரதப் பெருமுயற்சி என்று சொல்லுகிறோமே, அத்தகைய முயற்சியில் நம்பிக்கை கொண்டிருந்த பகீரதனுக்கும் கந்த விரதத்தில் நம்பிக்கை ஏற்பட்டது. கோரன் என்னும் அரக்கன் தன் அரசாட்சியைக் கவர்ந்து கொண்டதும் பகீரதன் முருகக் கடவுள் அகமகிழுமாறு மூன்று ஆண்டுகள் வெள்ளிக்கிழமை விரதம் இருந்தான். இந்த விரத்தின் பயனாகத் தன் அரசுரிமையை அவன் மீண்டும் பெற்றதாக வசிஷ்டர் கூறினார். கார்த்திகை விரதம் இருந்து முருகக் கடவுளை வழிபடுவதும் நல்லது என்றார் வசிஷ்டர், சப்த முனிவர்கள் என்று சொல்லப்படும் ஏழு முனிவர்களில் சிவனடியாராகத் திகழ விரும்பினார் நாரதர். அதற்கு பன்னிரண்டு ஆண் டுகள் கார்த்திகை விரதம் அனுஷ்டித்தார் என்றார் வசிஷ்டர்"[9]

மகாபாரதம்

மகாபாரதத்திலும் முருகனின் சிறப்புகள் இயம்பப்பட்டுள்ளன. பீஷ்மரின் மறைவிற்குக் காரணமாக விளங்கிய அம்பை முருகப்பெருமானை வழிபட்டதாக மகாபாரதம் கூறுகிறது. பீஷ்மர் தனது தம்பியான விசித்திர வீரியன் திருமணம் முன்னிட்டு, காசி நாட்டு வேந்தனின் புதல்விகளான அம்பை, அம்பிகை, அம்பாலிகை ஆகியோரை சுயம் வரத்திற்கு வந்திருந்த வீரர்களை வென்று அஸ்தினாபுரம் அழைத்து வருகிறார். பீஷ்மரின் பேச்சை ஏற்று அம்பிகை, அம்பாலிகை விசித்திர வீரியனை மணக்க முன் வருகின்றனர். ஆனால், அம்பையோ சால்வ நாட்டு மன்னன் சால்வனை விரும்பியதாகக் கூறினாள். எனவே பீஷ்மர் அவளைச் சால்வனிடம் அனுப்புகிறார். ஆனால் சால்வனோ பீஷ்மர் பல அரசர்கள் பார்த்துக் கொண்டு இருக்கும்போது அம்பையைக் கவர்ந்து சென்று விட்டதால் பீஷ்மரையே மணம் செய்து கொள்ள வேண்டும் என்று கூறிவிடுகிறான். அம்பை பீஷ்மரை வற்புறுத்தவே பீஷ்மரும் பிரம்மச்சரிய விரதம் பூண்டு இருப்பதால் மணக்க மறுத்து விடுகிறார். அம்பையை – "ஒருவரும் ஏற்றுக் கொள்ளாமல் போகவே மலர் போன்ற கண்களை உடைய அப்பெண் பெரிதும் வருந்தினாள். இவ்வாறு ஆறு ஆண்டுகாலம் அவள் துன்பத்துடன் கழித்தாள். வேறு ஒரு வழியும் தோன்றாமல், நேரே இமயமலைச் சாரலுக்குச் சென்றாள். மனத்தை திடப்படுத்திக் கொண்டு அங்குள்ள பாகூத நதிக்கரையில் தவம் இயற்றத் தொடங்கினாள்.

அவளுடைய கடுமையான தவத்தைக் கண்டு தேவர்கள் நடுநடுங்கினர். அவளுடைய இரங்கத்தக்க நிலையையும், கடும் தவத்தையும் கண்டு ஆறுமுகக்கடவுள் ஆச்சரியம் அடைந்தார். அவளுக்கு நேரில் சென்று காட்சியளித்தார். பின், அம்மையே! அழகிய தாமரை மலர்கள் உள்ள இம்மாலையை உனக்குத் தருகிறேன். இது தேவலோகத்து மாலை, இம்மாலையை அணிந்து கொள்பவன் பீஷ்மரின் மரணத்திற்குக் காரணமாவாய் என்று சொன்னார்." இவ்வாறாக, புராணங்களில் முருகன் சித்தரிக்கப்பட்டு உள்ளான்.[10]

முடிவுரை

இருபதாம் நூற்றாண்டில் கிருபானந்தவாரியார் மற்றும் பாம்பன் சுவாமிகள் ஆகியோர் அனைத்துத் தர மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் முருகன் பற்றிய கருத்துக்களை எளிய நடையில் பழகு தமிழில் கூறியுள்ளனர். இவர்கள் தம் அனுபவங்களின் துணை கொண்டு தமது படைப்புகளில் முருகனின் பெருமைகளைச் சிறப்பாக எடுத்து இயம்பி உள்ளனர் என்று கூறினால் அது மிகையாகாது எனலாம்.

*'மனமே முருகனின் மயில் வாகனம் என்*
*மாந்தளிர் மேனியே குகன் ஆலயம் என்*
*குரலே செந்தூரின் கோயில் மணி அது*
*குகனே சண்முகனே என்றொலிக்கும் இனி'*

என்பதனை அறிய முடிகிறது.

அடிக்குறிப்புகள்

1. முனைவர் திருமதி. சு.ஜெயம் மற்றும் திருமதி சந்திரலேகா வைத்தியநாதன், தமிழ் இலக்கிய வரலாறு (1997), ஜனகா பதிப்பகம், சென்னை – 600 033, ப.189.
2. முனைவர் ச.வே.சுப்பிரமணியன், தமிழ் இலக்கிய வரலாறு (2006), மணிவாசகர் பதிப்பகம், சென்னை ப.144.
3. மேலது நூல், ப.144.
4. மேலது நூல், ப.186.
5. பேராசிரியர் எம்மார்.அடைக்கலசாமி, தமிழ் இலக்கிய வரலாறு, (2005), சென்னை, ப.188.
6. மேலது நூல், ப.117.
7. பேராசிரியர். கோ.இரவிச்சந்திரன, தமிழ் இலக்கிய வரலாறு (2002), கீர்த்தனா பதிப்பகம், வல்லம், திருக்கானூர் பட்டி (அஞ்சல்), ப.97.
8. மேலது நூல், பக்.216-217.
9. மு.வரதராசன், தமிழ் இலக்கிய வரலாறு (1972), சாகித்திய அகாதெமி, புது தில்லி, ப.234.
10. மேலது நூல், ப.147.

## நக்கீரர் காட்டும் முருக வடிவம்

முனைவர் ஆ. ரந்திர்குமார்
உதவிப்பேராசிரியர்
ம.தி.தா.இந்து கல்லூரி
திருநெல்வேலி-10

முருகன் தமிழ்க்கடவுள் "சேயோன் மேய மைவரை உலகமும்" (தொல்பொருள் அகத்.5) என முருகனை மலைசார் மக்கள் போற்றியதாகப் ஒல்காப் பெரும்புகழ் தொல்காப்பியர் குறிப்பிடுவார். பழந்தமிழர் முதல் இன்று வரை முருக தெய்வ வழிபாடு தமிழர் வாழிடங்களில் உலகமெங்கும் இருந்து வருகின்றது. முருக உருவம் இடத்துக்கு இடம் வேறுபடுகிறது. சிற்பியின் கற்பனைக்கு ஏற்றவாறு வடிவம் மாறியிருப்பது போன்று புலவர்களின் கற்பனையும் மாறி மாறி முருகனைப் பல்வேறு வடிவங்களில் வடித்துக் காட்டுவதை இலக்கியங்களில் காண முடிகின்றது. முருக வடிவம் நக்கீரர் கற்பனையில் தோன்றியமைத்த விதத்தை இக்கட்டுரை விளக்க முயல்கிறது.

### குறள் தரும் அடி வழிபாடு

சிற்பக்கலை உருவ வழிபாட்டை மெய்யுறுத்துகிறது. முருக சிற்பம் நக்கீரர் வழி படம் பிடிக்கப்பட்டிருப்பதைத் திருமுருகாற்றப்படைச் செய்யுள் வழிக் காண்பதே நோக்கம். தெய்வ வடிவம் மானிட வடிவத்தினின்று வேறுபட்டு விளங்கும் என்பதாலேயே கால் இரண்டாயினும் கைகள் பலவாகக் காட்டப்பட்டுள்ளன. திருவள்ளுவர் கால்களை மட்டுமே குறித்துள்ளார். வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும் என மானுடனுக்குச் சிறப்புத் தரும் குறளில் தெய்வ வடிவம் பற்றிக் குறிப்பிடும் போது, இணையடிகளையே குறிப்பிடப்பட்டுள்ளது.

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவன் அடிசேரா தார்.* (குறள் 10)

எனக் காலடிகளையே வள்ளுவர் கூறினார்.

முருகனை ஆறுமுகச் செவ்வேள் என்று புலவர் அழைப்பதன் மூலம் முகம் எனும் உறுப்பு ஆறு ஆகின்றது. பன்னிருகையன் எனும் போது கைகள் 12 என எண்ணிக் கூற வேண்டி உள்ளது. இவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ள இலக்கியச் சொற்றொடர்களின் மூலம் சிற்பி அறிந்தானோ அவனது கற்பனையில் தோன்றியதோ பக்தியின் பெருக்கோ இறையருளோ அவன் வடிக்கும் கல்லில் உலோகத்தில் முகங்கள் ஆறு கைகள் 12 இடம் பெற்றிருப்பதைக் காண முடிகின்றது. முருக இலக்கியங்களில் பலவடிவங்கள் கூறப்பட்டிருப்பினும் வள்ளுவர் உருவ வழிபாட்டினை முழுவதும் கூறாது சிலை வழிபாட்டை மட்டும் குறித்தார் எனலாம்.

முருக இலக்கியமாக முதலில் குறிப்பிடப்படும் பாட்டிலக்கியம் நக்கீரரின் திருமுருகாற்றுப் படைப்பே முருகனைப் பற்றிய புராணக் கதைகள் மக்களிடையே பரவிய பின் எழுதப் பெற்றிருப்பினும் பத்துப்பாட்டுக்குள் முதன்மையாக இடம் பெறுவது திருமுருகாற்றுப்படை, ஆற்றுப்படை இலக்கியத்துள் புதுமையானது.

பொருள் பெறுவதை முன்னிறுத்திப் பாடும் ஆற்றுப்படைகளிலிருந்து வேறுபட்டு அருள்பெற ஆற்றுப்படுத்தல் என்பது புதுமை முருகனுக்கும் அருளுக்கும் உள்ள தொடர்பினைலே இது சுட்டுகிறது.

*எய்யா நல்லிசைச் செவ்வேல் சோய்*
*சேவடி படரும் செம்மல்* (திருமுருகு : 61-62)

முருகன் கையில் வேல் ஏந்தியுள்ளான். வேலாயுதம் முருகனின் ஞான சக்தியாக உருவகிக்கப்பட்டுள்ளது. சேவடி சேய் என்பன செந்நிறம் சுட்டும் தொல்காப்பியரும் சேயோன் என நிறம் கட்டுதல் இங்கு நினையத்தக்கது. செந்நிற வடிவுடையன் முருகன்.

"இறைவனடி ஞானமே ஞானம் என்பர்" எனச் சிவஞான சித்தி கூறும். திருப்பரங்குன்ற முருகனின் வடிவத்தில் செவ்வேல் என்ற கடைமொழியால் கையும் சேவடியும் வடிவமைக்கப்படுவதைக் காண முடிகின்றது. திருச்செந்தூரில் ஆறுமுகங்களுடன் முருகன் காட்சி தருகின்றான். முகவருணனை 90 முதல் 100 அடி வரைக்கும் 12 கை வருணனை இடம் பெற்றிருப்பதையும் காணலாம்.

"மூவிரு முகனும் முறைநவின்று முகலின் இருமூன்று மூவிரு" எனப் பெருக்கல் வாய்ப்பாட்டினை நினைவுபடுத்திய பாடல் அடியினை அமைத்துள்ளார் நக்கீரர். சிற்ப சாத்திரம் அறிபவர்க்குக் கணிதமும் தெரிந்திருக்க வேண்டும் என்பதைச் சேவடி உணர்த்தும்.

*"மாயிருண் ஞாலம் மறுவின்றி விளங்கப்*
*பல்கதிர் விரித்தன் றொருமுக மொருமு*
*ஆர்வலர் ஏத்த வமர்ந்தினி தொழுகிக்*
*காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே ஒருமுகம்.*
*மந்திரவிதியின் மரபுளி வழாஅ*
*அந்தணர் வேள்வியோர்க்கும்மே ஒருமுகம்*
*எஞ்சிய பொருள்களை ஏமுறநாடித்*
*திங்கள்போலத் திசை விளக்கும்மே ஒருமுகம்*
*செறுநர்த் தேய்த்துச் செல்சம முருக்கிக்*
*கறுவுகொள் நெஞ்சமொடு களம்வேன்றே ஒருமுகம்"*

(திருமுருகு (91-00)

ஒவ்வொரு முகமும் வேறு வேறு உணர்ச்சியுடன் விளங்குவதை இவ்வடிகள் விளக்குகின்றன.

திருச்செந்தூர் முருகனுக்கு ஆறுமுகத்திற்குச் சிற்பம் பன்னிரு கைகள் உள. அக்கைகளின் செயல்களுக்கு ஏற்ப கட்டமைப்பு இருந்ததாகப் புலவர்கோன் பாடல் வரிகளைக் காட்டுகிறார்.

*வாண்புகழ் நிறைந்து வசித்து வாங்கு நிமிர்தோள்*
*விண்செலல் மரபினையர்க்கேந்திய தொருகை*
*உக்கம் சேர்ந்தியது ஒருகை*
*நலம்பெறு கலிங்கத்து குறங்கின்மிசை அசைஇயது ஒருகை*
*அங்குசம் கடாவ ஒருகை இருகை*
*ஐயிரு வட்ட மொடெ.: குவலந்திரிப்ப ஒருகை*
*மார்பொடு விளங்க ஒருகை*
*தாரொடு பொலிய ஒருகை*
*கீழ்வீழ் தொடியொடு மீமிசைக் கொட்ப ஒருகை*
*பாடின் படுமணிஇரட்ட ஒருகை*
*நீனிறவிசும்பின் மலிதுளி பொழிய ஒருகை* (திரு.மு.க.: 106-116)

கைகள் செய்யும் தொழில்கள் சுட்டப் பெற்றதால் சிற்பிகள் கைகள் சமைக்க வேண்டிய நிலைப்பாடுகள் விளக்கப்பட்டுள்ளன எனலாம். அமர்ந்த கோலத்தில் ஆறுமுகம் இருந்ததை ஒரு கையின் நிலை வழி விளக்குகிறார். எனவே தொடையின் மேலே கிடந்தது எனக் கூறுகிறார். சிற்பநிலை அமர்ந்த கோலமாகிறது.

முருகனின் பெருமைகளைப் பேசும் புராணக் கதைகளின்படி திருமேனி அமைந்திருப்பதைப் பாடலிலும் காண முடிகின்றது.

குடும்ப வழிபாடு

அறுவகைச் சமயங்களில் முருகனை முதலாவதாகவும், முதன்மையானதுமாகவும் கொண்டொழுகும் சமயம் கௌமாரமாகும் குமரப்பெருமானே கௌமாரன் கணபதியை முதன்மைக்கடவுளாகக் கொண்டது காணாபத்யம் சிவனை முன்னிலைப்படுத்துவது சிவமதம் அதுவே சைவ மதம். திருமால் ஒருவரே தெய்வம் எனக் கொண்டாடும் மதம் வைணவமாகும். சாக்தம் என்பது சக்தி வழிபாட்டைக் குறிக்கும். சிவமும் வைணவமும் இணைந்ததே இந்துவாம். அறுவகையும் இந்துக்குள் அடக்கம். தந்தைக்கு ஒன்று சிவமதம் தாய்க்குச் சாக்தம் மூத்த மகனுக்கு காணாபத்யம் இளைய மகனுக்குத் கௌமாரம் மைத்துனர் விஷ்ணுக்கு வைணவம் ஒரே குடும்பமாக இணைந்து ஒற்றுமையுடன் வாழ வழி வகுக்கிறது வழிபாடு. கௌமாரத்திற்கு-குமரனுக்கு முருகனுக்கே காப்பியம். இம்மால்மருகன் செந்தில் முருகன் என்பதைக் திருச்செந்திற் கலம்பகம் எனும் சிற்றிலக்கியத்தில், "…..செந்தில் நன்னகர் மேல் வியமான் மருகன் திருக்கரத்தேந்தியவேள் எடையே" (பா.நி) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கந்தபுராணக் காப்பியம் முதல் இக்கலம்பகம் வரை முருக இலக்கிய வளர்ச்சி இன்னும் வளர்ச்சியை நோக்கிச் செல்லும் என்பதையே காட்டுகிறது.

தெய்வங்களில் அதிகமான முகமும் அதிகமான திருக்கரங்களும் உடைய பெருமாள் ஆறுமுகச் செங்வேளான முருகனை ஆவான்.

செந்தில் முருகன் போர் செய்யும் நிலைப்பாடு உடையவன் கையிலுள்ள வேலாயுதத்தைக் கொண்டிருப்பது போன்ற வடிவம் ஆறுமுக வடிவில் காணப்பெறும். இதனை நக்கீரரே வருணித்துள்ளார். எதிராளியைத் தாக்க வேல் தன்னைக் காக்க கேடயம்.

"இருகை ஐயிருவட்டமொரு அஃகுவலம் தீரியே" என்று வரும் அடியில் வடிவ அமைப்பு உள்ளது வலக்கையில் வேல் இடக்கையில் கேடயம் ஐயிருவட்டம் என்பது கேடயமாகும். முருகு என்பது அழகுதான் செந்தில் முருகன் போர்வீரன் அவன் கைவேல் சூரனை வென்றது. சூரசம்கார விழா இன்றும் நடந்து வருவது தக்க சான்று. என் குணத்தானாகிய முருகனை வணங்காததால் சூரன் தலையை இழந்தான். குறிஞ்சி நிலக் கடவுளாக இருந்த முருக, வழிபாடு இன்று சைவ சமயத் கடவுளாக வளர்ச்சி அடைந்துள்ளது, சூரனாகிய பகையை வென்று உறுபசிபோக்கி பசிப்பிணி நீக்கி செறுபகையை வென்றவன் செந்தில் வேலவன். அவனுடைய பாண்டிய நாடு பல்வளம் பெருகி நிற்கிறது. மக்கட் பெயர்களில் எளிதில் பற்றுடையவனாக இருப்பவன் முருகன். ஆறுமுகம் என இருபாலிலும் ஆட்சி புரிகிறான்.

குறிஞ்சி மட்டுமல்லாது ஏனைய நிலங்களிலும் முருகன் போன்றப்பட்ட செய்தி குறுந்தொகை, புறநானூறு, மதுரைக்காஞ்சி, மருதக்கலி, பட்டினப்பாலை, பதிற்றுப்பத்து, நற்றிணை பெரும்பானாற்றுப்படை, பரிபாடல் ஆகியவற்றில் குறிப்புகளாக இடம் பெற்றுள்ளது. வெறியாட்டு எனும் சடங்கு வேலனை இணைக்கிறது.

# முருக வழிபாட்டில் காவடியாட்டம்

முனைவர் ம. ரமேஷ்
புரட்சித்தலைவர் டாக்டர் எம்.ஜி.ஆர்.
அரசு கலை மற்றும் அறிவியல் கல்லூரி
மாதனூர், வேலூர் - 635804

காவடி என்ற ஆட்டக்கருவியைத் தோளில் சுமந்து கொண்டு நையாண்டி மேளத்தின் இசைக்கேற்ப ஆடப்படும் ஆட்டம் காவடி ஆட்டம் ஆகும். காவடி என்பது முருகன் வழிபாட்டோடு தொடர்புடையதாகும். தைப்பூசம், பங்குனி உத்திரம் போன்ற விழா நாட்களில் பக்தர்கள் நேர்த்திக்கடன் செலுத்துவதற்காகக் காவடி எடுத்து அருளோடு கூட்டமாக ஆடி வருவது வழக்கமாக உள்ளது. இவ்வாறு முருகன் வழிபாட்டில் சடங்காக நிகழ்த்தப்பட்டு வரும் காவடி எடுத்தல் சடங்கே பின்னாளில் காவடியாட்டம் என்ற கலைவடிவமாக மாறி வளர்ந்துள்ளது. ஒருவரால் மட்டுமே நிகழ்த்தப்படும் ஆட்டக் கலையாக விளங்கும் காவடியாட்டம் தனித்த நிலையில் அல்லாமல் கரகாட்டத்தின் துணை ஆட்டமாக ஆடப்பட்டு வருகிறது.

**காவடியின் சில வகைகள்**

**பால்காவடி**

வில்வடிவில் அமைக்கப்பட்டு தலையிலும், தோளிலுமாகத் தாங்கப்பட்டுச் சிறியவர்கள் முதல் பெரியவர் வரை அனைவராலும் அதிகமாக ஆடப்படுகின்றது.

**தூக்குக்காவடி**

முற்கம்பினை, ஒருவரின் முதுகுத் தோலில் குத்தியெடுத்து பின் வண்டியொன்றின் மீது ஏற்றி அவரைச் சுமந்து ஊர்வலம் அழைத்துச்செல்வதாகும்.

**பறவைக்காவடி**

உடலின் பல்வேறு பகுதிகளில் வளைந்த வெள்ளி ஊசிகளைக் குத்தி அவற்றுடன் இணைக்கப்பட்ட கயிறுகளின் மூலம் காவடி எடுப்பவரைச் சில்லுகள் பொருத்தப்பட்ட வண்டிகளில் கட்டப்பட்ட உயர்ந்த அமைப்புக்களிலிருந்து முகம் கீழிருக்கும் படி படுக்கை நிலையில் தொங்கவிட்டபடி ஊர்வலமாகக் கொண்டு செல்வர். மேற்கண்ட மூன்றும் காவடி எடுக்கும் வகைகளில் சில குறிப்பிடத்தக்கவையாகும்.

**தமிழ்நாட்டில் காவடி ஆட்டம்**

கந்தக் கடவுளை வழிபடும் நிகழ்ச்சியாக தமிழ்நாட்டில் காவடியாட்டம் மிகவும் சிறப்பாக நடைபெற்று வருகின்றமை குறிப்பிடற்பாலதாகும்.

தமிழ்நாட்டிலுள்ள முருகன் ஆலயங்களில் நடைபெறும் திருவிழாக்கள் காவடி விழா எனக் கூறத்தக்க சிறப்புடையனவாக விளங்குகின்றன. தென்னை மட்டையில் இளநீர்க் குலைகளைக் கட்டித் தூக்கிக்கொண்டு எடுக்கும் இளநீர்க் காவடிகளைப் பழனித் திருத்தலத்தில் பங்குனி உத்தரத் திருநாளில் பார்க்கமுடியும். மேலும் திருப்பரங்குன்றம், திருத்தணிகை, திருச்செந்தூர் முதலிய முருகன் ஆலயங்களிலும் காவடி வழிபாட்டு முறை சிறப்பாக நிகழ்த்தப்படுகின்றது.

### மலேசியாவில் காவடி ஆட்டம்

முருக வணக்கம் சிறப்புற்று விளங்கும் மலேசியாவில் காவடியாட்டம் சிறப்புடன் விளங்குகின்றது. மலேசியாவில் உள்ள பத்துமலை முருகன் கோயில், சிகாமட் சிங்கார வடிவேலர் ஆலயம், கங்கைப் பட்டாணி ஸ்ரீசுப்பிரமணியர் ஆலயம், ஜோகூர்பாரு ஸ்ரீதண்டாயுதபாணி ஆலயம், காஜாங் சுப்பிரமணியசுவாமி கோவில், கெர்லிங் சுப்பிரமணியர் ஆலயம், பினாங்கு தண்ணீர்மலை ஸ்ரீபாலதண்டாயுதபாணி ஆலயம், ஈப்போ கல்லுமலை முருகன் ஆலயம், பாகங்கைச் சேர்ந்தரவூப் முருகன் ஆலயம் போன்ற முருகன் ஆலயங்களில் தைப்பூச தினத்தன்று காவடியெடுத்து கந்தக் கடவுளை வழிபட்டு வருகின்றனர். பினாங்கு தண்ணீர்மலை ஸ்ரீபாலதண்டாயுதபாணி ஆலயத்தில் நடைபெறும் தைப்பூச விழாவில் மலாய்க்காரர்களும் சீனர்களும் கூட காவடியெடுத்துக் கந்தனை வழிபட்டு வருகின்றனர்.

மலேசியாவில் உள்ள பத்துமலை முருகன் கோவில் தைப்பூச விழாவிற்கும் காவடி வழிபாட்டிற்கும் பெயர்பெற்று விளங்குகின்றது. தமிழ்நாட்டின் பழனிமலை எப்படியோ அதேபோல மலேசியாவில் பத்துமலை விளங்குகின்றது. பல லட்சக்கணக்கான மக்கள் கலந்துகொள்ளும் தைப்பூச விழாவன்று பத்துமலையில் உள்ள இருநாற்றி எழுபத்திரண்டு படிகளை ஏறிச் சென்று மலை உச்சியில் உள்ள குகையில் எழுந்தருளி இருக்கும் முருகப்பெருமானுக்கு பக்தர்கள் காவடி எடுத்துக் காணிக்கை செலுத்துகின்றனர்.

பாற்காவடி, பழக்காவடி, சர்க்கரைக்காவடி, இளநீர்க்காவடி, பஞ்சாமிர்தக்காவடி, எனப் பல காவடிகளை எடுத்துப் பக்தர்கள் கந்தன் புகழ்பாடி தத்தம் நேர்த்திக் கடன்களைச் செலுத்துகின்றனர். முருகனிடம் தான் கொண்டுள்ள பக்தியை எடுத்துக்காட்டுவதற்காக சிவகிரி, சக்திகிரி என்ற இரண்டு குன்றுகளைத் தன் தோளில் ஒரு தண்டத்தின் உதவியால் இடும்பன் தூக்கியதே தைப்பூசத்தின் வரலாறு என்று இக்கோயிலில் கருதப்படுவதன் காரணமாகவே தைப்பூசத்தன்று இடும்பன் தூக்கிய பிரம தண்டம் அல்லது காவடியை மக்கள் தூக்கிச் சென்று முருகனை வழிபட்டு வருகின்றனர்.

### சிங்கப்பூரில் காவடியாட்டம்

சிங்கப்பூரில் உள்ள தண்டாயுதபாணி ஆலயத்தில் தைப்பூசத் திருநாளும், கார்த்திகைத் திருநாளும், பங்குனி உத்தரமும் கோலாகலமாகக்

கொண்டாடப்படுகின்றன. தைப்பூசத் தினத்தன்று சுமார் ஆயிரக்கணக்கான பக்தர்கள் காவடிகள் எடுத்து கந்தனை வந்தனை செய்வது கண்கொள்ளாக் காட்சியாக அமைந்து வருகின்றது.

பண்டைத் தமிழர்கள் முருக வழிபாட்டில் சிறந்து விளங்கினார்கள். முருகனைக் கந்தன் என்ற பெயரில் வழிபடும் வழக்கம் தேவார காலம் முதலாக இருந்து வருகின்றது. கந்தனை வந்தனை செய்யும் வழிபாட்டு முறைகளுள் காவடியாட்டம் தனித்துவம் பெற்று விளங்குகின்றது. பண்டைத் தமிழரின் வேலன் வெறியாட்டத்துடன் கந்தனின் காவடியாட்டத்தை இணைத்து நோக்க முடிகின்றது. கந்தனுக்குக் காணிக்கைப் பொருட்கள் கொண்டு சென்ற காவுதடியே காவடி எனப் பெயர் பெற்றதென்ற அறிஞர் கருத்து ஏற்புடைத்தாகவுள்ளது. இடும்பன் தூக்கிய சிவகிரி சக்திகிரி என்ற இரண்டு மலைகள் பற்றிக் கூறப்படும் தெய்வீகக் கதையடியாகவே கந்தன் வழிபாட்டில் காவடியாட்டம் இன்றும் சிறப்புப் பெற்று விளங்குகின்றது.

தொகுப்புரை

காவடி வழிபாட்டு முறையானது தனிமனித வழிபாட்டு முறையாக மட்டுமன்றி குடும்ப வழிபாட்டு முறையாகவும் விளங்குகின்றது. பக்தர்கள் தத்தம் நேர்த்திக் கடன்களுக்கு ஏற்ற விதத்தில் வெவ்வேறு பெயர்களில் காவடிகள் எடுத்துக் கந்தனை வந்தனை செய்து வருகின்றனர். காவடியில் காணிக்கையாகக் கொண்டு செல்லப்படும் பால், தயிர், தேன், சக்கரை, பன்னீர், இளநீர், முதலான பொருட்கள் ஆண்டவனின் அபிஷேகத்திற்குப் பயன்படுத்தப்படுகின்றன. தூக்குக்காவடி, பறவைக்காவடி போன்ற காவடியாட்டங்கள் கடினமான கடவுள் வழிபாட்டு முறையாகக் காணப்படுகின்றன. அளவற்ற அன்பு நன்றியுணர்வு போன்றனவற்றை வெளிப்படுத்தும் வழிபாட்டு முறையாகவே காவடியாட்டம் நிகழ்த்தப்படுகின்றது. ஆன்மீக அனுபவங்களும் ஒரே அனுபவத்தினையே உணர்த்தி நிற்கின்றன என்பதனைக் காவடி வழிபாட்டு முறைகள் நன்கு விளக்கி நிற்கின்றன. அக்குபஞ்சர் என்ற சீனமருத்துவ சிகிச்சை முறையினைக் கடினமான காவடிகள் நினைவூட்டி நிற்கின்றன. காவடியை எத்தனை கலையுணர்வோடு அலங்கரித்திருப்பினும் காவடியில் காணப்படும் வேலும், மயிற் பீலிகையும் கந்தனை நினைவுபடுத்துவதாகவே விளங்குகின்றன.

## ஆறுபடைவீடு (1,2 ,3 மட்டும்)

சீ. ராணி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் - 613010

தமிழ் இலக்கணமான தொல்காப்பியம் தமிழில் நிலப்பரப்பைக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், மற்றும் பாலை என ஐந்து வகைகளாகப் பிரிக்கின்றது. குறிஞ்சி நிலமாகிய மலையும் மலையைச் சார்ந்த பகுதியின் கடவுள் முருகப்பெருமான் ஆவார். இந்நிலத்தில்தான் மக்கள் முதன் முதலாகத் தோன்றி வாழத்தொடங்கினர். முருகு என்னும் சொல் அழகு, இளமை, மனம் எனப் பொருட்களில் வரும். அழகு உறைக்கின்ற இடமெல்லாம் அம் முருகு கொலு வீற்றிருக்கின்றது. முருகு என்னும் இறைப்பொருள் உணர்த்தும் சொல்லோடு அன் என்னும் ஆண்பால் விகுதிபெற்று முருகன் என்று வழங்கப்பட்டுள்ளது. முருகனுக்குரிய ஆறுபடை வீடுகளும் தமிழகத்தில் அமைந்துள்ளன. முருகன் வள்ளியை மணந்த இடம் திருத்தணிகை, தெய்வானையை மணந்த இடம் திருப்பரங்குன்றம், சூரனை வென்ற இடம் திருச்செந்தூர், அன்பர்கள் விரும்பும் பழமாகக் கனிந்து மலை மீது நின்ற இடம் பழனி. வெற்றிவேலுடன் இருக்கும் இடம் பழமுதிர்ச்சோலை, அப்பனுக்கு அருள்செய்து சுப்பரமணியனாக அமர்ந்த இடம் சுவாமிமலை ஆகியவை ஆகும். இந்த ஆறுபடை வீடுகளில் முதல் மூன்று படை வீடுகளைப் பற்றி மட்டும் சுருக்கமாகக் காண்பதே இவ்வாய்வுக் கட்டுரையின் நோக்கமாகும்.

### திருப்பரங்குன்றம்

இயற்கை எழில் சூழ்ந்துள்ள அழகுமிக்க சிற்றூரில் முந்நூறு மீட்டர் உயரமுள்ள மலையின் அடிவாரத்தில் ஊரின் நடுவே குன்றே கோயிலாக எழுந்துள்ள எழில்மிகு திருக்கோயிலே திருப்பரங்குன்றமாகும். முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் முதற்படை வீடாகச் சிறப்புப்பெற்று விளங்குவதால் அவர் பெயராலே இத்திருக்கோயில் அருள்மிகு சுப்பிரமணிய சுவாமி திருக்கோயில் என்றே அழைக்கப்படுகின்றது.

### தலவரலாறு

தேவர்கள் தங்களைத் துன்புறுத்திய சூரபத்மனிடமிருந்து காக்கும்படி சிவனை வேண்டினர். அவர் தன் நெற்றிக்கண்ணிலிருந்து ஆறு பொறிகளை உண்டாக்கினார் அதிலிருந்து ஆறு முருகப் பெருமான் தோன்றினான். சூரனுடன் போரிட்டு அவனை மயிலாகவும், சேவலாகவும் மாற்றி ஆட்கொண்டார். இந்த நிகழ்வு திருச்செந்தூர் தலத்தில் நிகழ்ந்தது. சூரனை வெற்றி கொண்ட முருகனுக்கு இந்திரன் தனது மகளான தெய்வானையைத் திருமணம்

செய்துதர சம்மதித்தார். அவர்களது திருமணம் திருப்பரங்குன்றத்தில் நிகழ்ந்தது. திருமணத்திற்கு அனைத்துத் தேவர்கள், மகரிசிகள் என அனைவரும் வருகை புரிந்தனர். நாரதர் முன்னிலையில் முருகன் தெய்வானையின் திருமணம் நடந்தது. திருமணக் கோலத்தில் காட்சி கொடுத்ததால் இச்சுவாமிக்குச் சுப்பிரமணியசுவாமி என்று பெயர் சூட்டப்பட்டது.

முருகப்பெருமானின் ஆறுபடை வீடுகளில் முதற்படை வீடாகத் திருப்பரங்குன்றம் சிறப்புப்பெற்று விளங்குகிறது. முருகப்பெருமானின் வேலுக்குப் பாலாபிசேகம் செய்வது தனிச்சிறப்பு. நக்கீரர் வாழ்ந்த தலம். பராசரமுனிவரின் புதல்வர், நக்கீரர், சிபிமன்னன், பிரம்மா ஆகியோர் இறைவனை வழிபட்டு பேறுபெற்ற தலமாக விளங்குகிறது.

வைகாசி விசாகம், ஆடிக் கிருத்திகை, புரட்டாசி வேல் திருவிழா, கந்த சஷ்டி, திருகார்த்திகை, தைப்பூசம், பங்குனி உத்திரம் ஆகியவை இத்தலத்தில் முக்கியத் திருவிழாக்களாக கொண்டாடப்பட்டு வருகிறது.

திருப்பரங்குன்றத்தின் முருகன் கோயிலில் முருகன் குடைவரை மூர்த்தியாக உள்ளதால் அவருக்கு அபிசேகம் கிடையாது. புனுகு மட்டுமே பூசப்படுகிறது. சூரனை ஆட்கொண்டு வெற்றி வேலுடன் முருகன் இங்கு வந்து அமர்ந்ததால் வேலுக்கு முக்கியத்துவம் கொடுத்து அபிசேகம் நடத்தப்பட்டு வருகிறது.

திரு. செந்தூர்

குன்றுதோறும் கருணை வள்ளலாக நின்று காட்சி தரும் குமரக்கடவுளின் ஆறுபடை வீடுகளில் இரண்டாவது படைவீடு திருச்செந்தூர் ஆகும். சீராக அலைகள் வந்து கரை மோதுவதால் சீரலைவாய் என்று பெயர் ஏற்பட்டது. திரு எனும் அடைமொழிச் சிறப்புடன் திருச்சீரலைவாய் எனப்பட்டு பின்பு திருச்செந்தூர் என்றானது. திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி கோயிலில் வேறு எந்த கோயிலிலும் இல்லாத வகையில் ஒரே தெய்வமான முருகன் இரண்டு பெயர்களில் மூலவராக உள்ளார். கிழக்கே பார்த்து அருள்பாலிக்கும் சுப்பிரமணியசுவாமி தவக்கோலத்தில் கையில் உத்திராட்ச மாலையுடன் காட்சி அளிக்கிறார். தெற்கே பார்த்து அருள்பாலிக்கும் சண்முகர், வள்ளி தெய்வானையுடன் காட்சியளிக்கின்றார்.

இக்கோயிலின் திருப்பணியைச் செய்த துறவிகளான காசிசாமி, மவுனசாமி ஆகியோர் முக்காலமும் உணர்ந்த ஞானிகள் ஆவார்கள். இவர்கள் திருச்செந்தூர் சுப்பிரமணியசுவாமி கோயில் பகுதியில் கடல் சீற்றம் ஏற்பட்டால் அதனைத் தடுக்கும் முன்னேற்பாடாக முருகன் கோயில், வள்ளிக்குகை மற்றும் நாழிக்கிணறு பகுதிகளில் அரியவகை மரங்களை நட்டனர். திருச்செந்தூர், திருநெல்வேலி நெடுஞ்சாலையில் நாவல், புன்னை மற்றும் இலுப்பை போன்ற மரங்களை அதிகமாக நட்டுள்ளனர். துறவிகள் செய்த இந்த சமூக சேவை திருச்செந்தூர் மக்களைச் சுனாமியிலிருந்து காத்துள்ளது.

திருச்செந்தூர் கோயிலில் ஆவணித்தேரோட்டம், மாசித் திருவிழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஆவணித் திருவிழா உள்ளூர் திருவிழா என்றும், மாசித் திருவிழா மாபெரும் திருவிழா என்றும் அழைக்கின்றனர். இத்திருவிழாக்களில் தமிழக மக்கள் மட்டுமின்றி வெளிநாட்டு மக்களும் கலந்து கொள்கிறார்கள்.

பழனி

தமிழ்நாட்டிலுள்ள முருகனது தலங்களில் முதன்மையானதும் முருகனின் ஆறுபடை வீடுகளில் முக்கியமானதாகப் பெயர்பெற்று விளங்குவது பழனிமலை ஆகும். பழனி மலை முருகன் கோயில் ஆறுபடை வீடுகளில் மூன்றாவது படைவீடாகும். இம்மலை 137 மீட்டர் உயரம் உள்ளது. இம்மலையின் உச்சியில் தமிழகத் தெய்வம் முருகன் கருவறையில் ஆண்டிக் கோலத்தில் எழுந்தருளியுள்ளார். வலது கையில் தண்டகம் பிடித்திருப்பதால் தண்டாயுதபாணிசுவாமி என அழைக்கப்படுகிறார். பழனி மலைக் கோயில் காலவரையறைக்கு உட்படாத பழம்பெரும் கோயிலாக உள்ளது. போகர் என்ற சித்தர் கருவறையிலுள்ள இறைவனின் திருவுருவத்தை ஒன்பது வகை பாசணத்தை ஒன்று கூட்டி அமைத்து மலைக்கோயிலை உண்டாக்கினார் என்று கூறப்படுகிறது. போகர் சித்தரின் சமாதி பழனி மலை உச்சியில் முருகன் சந்நிதியின் தென்மேற்கு மூலையில் உள்ளது.

ஒரு காலத்தில் நாரதர் சிவபெருமானுக்கு மாம்பழம் (ஞானப்பழம்) ஒன்றைக் கொடுத்ததாகவும் அவர் அதை அவரது திருக்குமாரர்களான கணபதி, மற்றும் முருகனுக்குக் கொடுத்து உண்ணக் கூறினார். நாரதர் ஒருவர் தான் பழத்தை உண்ணவேண்டும் என்று கூற இந்த உலகத்தை யார் முதலில் சுற்றி வருகிறார்களோ அவர்களுக்குத்தான் ஞானப்பழம் என்று கூறினார். உலகத்தை தானே சுற்றி வரவேண்டும் இதோ ஒரு நொடியில் சுற்றி வருகிறேன் என்று கூறி முருகன் புறப்பட்டார். விநாயகர் உலகம் என்றால் என்ன? அம்மை அப்பன் என்றால் என்ன? என்று கேட்க உலகம் என்றால் அம்மை அப்பன், அம்மை அப்பன் என்றால் உலகம் என்று கூறினர். அம்மை அப்பனை சுற்றினால் உலகத்தைச் சுற்றியது போலத் தானே அர்த்தம் என்று கேட்க அனைவரும் ஒப்புக் கொண்டனர். விநாயகர் தாய் தந்தையை மூன்று முறை சுற்றி வந்து பழத்தைப் பெற்றுக் கொண்டார். முருகப்பெருமான் தனக்குப் பழம் கிடைக்காததால் தவக்கோலம் பூண்டு பழனியில் அமர்ந்தார். இதனால் சிவனும் உமாதேவியும் தங்கள் குமாரனின் கோபம் தணிய ஞானப்பழமாக நீ இருக்கும் பொழுது உனக்கு வேறு பழம் எதற்கு என்று கூறி அன்பு பாராட்டினார்கள். மலைக்கும் ஊருக்கும் பழம் நீ என வழங்கப்பட்டு பின் அச்சொல் மருவி பழநி அல்லது பழனி என அழைக்கப்பட்டு வருகின்றது.

தைப்பூசத் திருவிழா இத்தலத்தில் மிகச்சிறப்பாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. சிவனின் நெற்றிக் கண்ணில் இருந்து உதித்த ஆறு பொறிகளும் ஆறு குழந்தையாகத் தோன்றியது. ஆறு குழந்தைகளையும் ஆறு கார்த்திகைப் பெண்கள் வளர்த்தனர். முருகன் வளர்ந்ததும் ஆறு கார்த்திகைப் பெண்களும்

முருகனை விட்டுப் பிரிய மனமில்லாமல் இறைவனை வேண்டினர். இறைவன் இப்பெண்களுக்குச் சுடர் ஒளியாக சென்றால் எப்பொழுதும் பார்த்துக் கொண்டே இருக்கலாம் என்றார். தைப்பூசம் அன்று சூரியன் உதிக்கும் போது ஆறு கார்த்திகைப் பெண்களும் ஆறுகதிர்களாக நீல வண்ணத்தில் பழனிமலையில் ஒளி வீசுகிறார்கள். இவ்வொளி ஒளிவட்டமாக பழனிமலை உச்சியிலிருந்து பார்ப்பவர்களுக்குத் தெரியும். பழனிக்கு வரும் பக்தர்கள் இந்நீலவண்ண ஒளிவட்டத்தைப் பார்த்ததாகத் தெரிவிக்கின்றனர்.

பழனிமலை, முருகனின் இருப்பிடமாகவும் பெருமையும் சிறப்புடைய தலமாகவும் விளங்குகிறது. இக்கோயில் பக்தர்கள் பால் குடம், பூக்காவடி, அலகு குத்துதல் போன்றவற்றைச் செய்து தங்களது வேண்டுதலை நிறைவேற்றி வருகின்றனர்.

**முடிவுரை**

முருகன் என்றால் அழகன் என்று பொருள். முருகன் தமிழக் கடவுள் ஆவார். இந்து சமயத்தில் ஆறுவகைப் பிரிவுகளில் கௌமாரம் என்ற பிரிவைச் சார்ந்தது. கௌமாரத்தின் முழு முதல் கடவுள் முருகனே ஆவார். முருகனைப் போற்றிப் பாடிய இலக்கிய நூல்கள் பல உள்ளன. அவை அருணகிரிநாதரின் கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், திருப்புகழ் பாம்பன் சுவாமிகளின் பாடல்கள், குமரகுருபரரின் கந்தர்கலி வெண்பா ஆகிய நூல்கள் முருகனின் புகழ் பேசக்கூடிய பக்தி இலக்கியங்கள் ஆகும்.

முருகனின் ஆறுபடை வீடுகளும் தஞ்சாவூரிலேயே இருப்பதாக கணக்கிட்டுள்ளனர். முதல் படைவீடு தஞ்சாவூர் மேலவீதி, மேல அலங்கத்தில் உள்ளது. (திருப்பரங்குன்றம்) தஞ்சாவூர் பூக்காரத்தெருவில் உள்ளது. (திருச்செந்தூர்) தஞ்சாவுவூர் சின்ன அரிசிக்கடைத் தெருவில் உள்ளது. (பழனி) தஞ்சாவூர் ஆட்டுமந்தைத் தெருவில் உள்ளது. (சுவாமிமலை) தஞ்சாவூர் குறிச்சித் தெருவில் அமைந்துள்ளது. (திருத்தணி) தஞ்சாவூர் வடக்கு அலங்கத்தில் அமைந்துள்ளது. (பழமுதிர்ச்சோலை) இந்த ஆறுபடைவீடுகளும் நம் தமிழ்நாட்டில் இருப்பது போல் தஞ்சாவூரிலேயே இருப்பது நமக்கும் நம் மண்ணுக்கும் பெருமை என்றே கூறலாம்.

# முருகனின் செயல்களும் உவமைகளும் அறிவியல் உண்மைகளும்

வெ. ராமதிலகம்,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,
திருநெல்வேலி – 627 012.

பத்துப்பாட்டுகள் முதற்பாட்டாக இருப்பது திருமுருகாற்றுப்படை. பத்துப்பாட்டின் பத்து நூல்களுக்கும் கடவுள் வாழ்த்து போல அமைந்துள்ளது. வேறு எந்தத் தெய்வத்திற்கும் வேறு எந்த நூலிலும் இவ்வளவு நீண்ட பாடல் இல்லை.

*"வேல் உண்டு வினை இல்லை*
*மயிலுண்டு பயமில்லை"*

என்பதற்கு இணங்க திருமுருகாற்றுப்படைக்குப் புலவராற்றுப்படை என்றும் பெயர் உண்டு. அவற்றில் முருகனின் செயல்களில் கூறப்படும் உவமைகளில் அறிவியல் உண்மைகள் எவ்வாறு புதைந்துள்ளது. அவை மக்களுக்கு எவ்வாறு பயன்படுகின்றது. சிற்பிக்குள் முத்தாகவும் மண்ணுக்குள் வைரமாகவும் புதைந்து கிடக்கும் அறிவியல் உண்மைகளைக் காண்போம்.

## திருமுருகாற்றுப்படுத்துதல்

திருமுருகாற்றுப்படுத்துதல் என்னும் சொல் வழக்கு தொகை நூல்களிலேயே உண்டு அ) முருகனை ஆற்றுப்படுத்துதல் ஆ) முருகனிடம் ஆற்றுப்படுத்துதல் என இரு நிலைகளில் வழங்கப்பட்டது. 'வெறியாட்டு அயரும் வேலன்', 'கட்டுவிச்சி' ஆகியோர் தன் மீது முருகன் வந்து மேவுமாறு வேண்டுதல் முருகாற்றுப்படுத்துதல் என்று தொடக்க காலத்தில் குறித்தனர். இதனை,

*"முருகாற்றுப் படுத்து உருகெழு நடுநாள்"* (அகம்.22)

என்று கூறுகிறது. திருமுருகாற்றுப்படை காப்புச் செய்யுள் போல் அமைந்துள்ளது. நக்கீரர் ஆற்றுப்படை இலக்கணத்தை மாற்றி அமைத்தார். எனவே பிற்காலத்து எழுந்த புறப்பொருள் வெண்பாமாலை யாரும் இவற்றை,

*"இருங்கண் வானத்து இமையோர் உழைப்*
*பெரும் புலவனை ஆற்றுப்படுத்தன்று"*

என்று இலக்கணம் செய்தனர். இதுவே திருமுருகாற்றுப்படுத்துதலின் விளக்கமாகக் கூறப்படுகிறது.

## தெய்வயானையின் கணவன்

விடியற்காலையில் நெடுந்தொலைவில் கடற்புரம் அடிவாரத்தில் பகலவன் ஒளிப்பிழம்பு காணப்படும். மயில மீது பேரொளிப் பிழம்பாக முருகன்

காட்சி அளிப்பார். பின்னர் அன்பர்களின் இடம் நாடி வருவார் அறியாமையைத் தகத்தெரிவார். அன்பர்களுக்குத் தீங்கு செய்பவர்களைத் தகர்த்தெரிவார். முருகப்பெருமான் அப்பொழுது இடி, ஓசை போல கைகளின் செயல்கள் செயல்படும். கற்புடைய தெய்வானையை ஒரு பக்கம் கொண்டு கணவன் முருகன் வீற்றிருப்பாள் என்கின்றனர். இதனை,

*"உலவ உவப்ப வலன்ஏர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு,*
*ஓஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி,*
*........*
*செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை"*

இவற்றின் முருகனின் கைகள் இடி ஓசைபோல செயல்பட்டன என கூறப்பட்டுள்ளது. இங்ஙனம் தீவினையோரை அழிக்கும் செயலும் அருள் பற்றிய செயலேயாகும் என்பதை,

*"நீக்கிர கங்கள் தானம் நேசத்தால் ஈசன் செய்வது*
*ஆக்கிர மத்தாற் குற்றம் அடித்துத்தீர்த் தச்சம் பண்ணி"*

என சிவஞானசித்தியார் பாடலில் அறியலாம்.

கடப்பமாலை சூடிய முருகன் இருக்கும் இடத்தில் மழைப்பொழிதல்

*"கார்கோள் முகந்த கமஞ்சூழ் மாமழை*
*வாள்போழ் விசும்பில் வன்உறை சிதறி*
*.....*
*உருள்பூந் தண்கார் பரளும் மார்பினன்"* (பத்து.7-10)

கடல்நீர் முகந்தனால் சூல் கொண்டு எழுந்த மேகங்கள் ஞாயிறும் திங்களும் தோன்றுகின்ற விண்ணடத்தே நிறைந்து நின்று மழையை பொழிந்தன என்பதையும் செய்கடம்ப மரத்தில் பூத்த சக்கரம் போன்ற வட்ட வடிவமான பூக்களால் ஆன மாலையைச் சூடியிருந்தான் முருகன் என்பதையும், குளிர்ச்சி பொருந்திய மார்பினை உடையவன் முருகன் என்பதை அடையாளம் காட்டுகின்றது.

கடல்நீர் சூரிய ஒளிபட்டு ஆவியாகி மேலே போகின்றது. அதனால் குளிர்ச்சி பொருள்நதிய காற்றுப்பட்டு மழைப்பொழிந்து என்றும் அறிவியல் உண்மை புலனாகின்றது. மழையைக் குளிர்ச்சிக்கும் செங்கடம்ப மலரைச் சூரியனுக்கும் உவமையாக ஒப்பீட்டுள்ளனர். அறிவும் வேண்டும் என்பதையும் அந்த அறிவே அறியாமையான சூரனை வதம் செய்தன என்ற கருத்தும் புலனாகின்றது. இதனைச் சூரபதுமனைத் தன் சுடர்நெருப்பால் கொன்ற வரலாறு கந்தபுராணத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. இதனைச்,

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்"* (அகம்.49-10)

கூறுகின்றது.

**மாமரத்தை வெட்டிய வெற்றி உவமைகள்**

*"இரு பேர் உருவின் ஒருபேர் யாக்கை*
*அறுவே வகையின் அஞ்சுவர மண்டி*
*....*
*எய்யா நல்இசை, செவ்வேற் சேஎய்"* (பத்து.60)

மக்கள் வடிவும் விலங்கின் வடிவும் ஆகிய இரண்டு பெரிய வடிவில் கலந்து ஒன்றாகிய சூரபதுமனின் உடல் அற்று வேறு ஆகும்படி செய்து பின் மாமர வடிவமாக நின்ற சூரனைக் கொன்று வெற்றி பெற்றதையும் புகழ் அடைந்ததையும் உவமையாகக் கொண்டுள்ளது. அறிவியல் உண்மை மனிதன், விலங்கு, மரம் என்று மாறும் இக்கால அறிவியலில் பயன்படுத்தி வருகின்றனர். ர்லடிசனை தாவரங்களில் காய்கறிகள், பழங்கள் ஆகியவற்றை தயாரிக்கின்றனர் மக்கள் எதைப் போல என்றால் கெட்டவன் சூரனைப் போல ர்லடிசனை கள் அறிவியல் அழிவிற்கு உவமையாகக் கூறப்படுகிறது. நல்ல பழம் காய்களாகிய இயற்கைத் தெய்வமாகிய முருகன் தம்மைக் காப்பாற்றினார் என்பதற்கு அறிவியல் உண்மைக்கு உவமையாக புலப்படுத்தப்படுகின்றது. இயற்கைக்கு முருகனையும் செயற்கைக்கு ர்லடிசனைக்கு சூரனையும் உவமைப்படுத்தப்பட்டது.

**பன்னிரு கைகளின் தொழில்கள் உவமைகள்**

*"ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின்*
*செம்பொறி வாங்கிய, மொய்ம்பின், சுடர்விடு"* (பத்து.104-118)

முருகனின் ஆறு திருமுகங்களும் தத்தம் கடமைகளைப் பயின்று நடத்தலினால் அத்திருமுகங்களுக்கு ஏற்கும் வண்ணம் பொலியும் தோள்கள் பொன்னாலும் முத்தாலும் ஆன மாலைகள் தங்கிய அழகிய பெருமை மிக்க மார்பகங்களை உடையவன் முருகன் என்பதை ஒரு மனிதனுக்குக் ஹார்மோன்களின் உந்து சக்தி ஆறு முகமாகவும், ஆறு செயல்களாகவும் உருவாக்கி உள்ளன என்பதை அறிய முடிகின்றது. அதனால்தான் மனிதனுக்குள் ஆறு குணங்கள் கூட ஏற்படுகின்றன. இது ஹார்மோன்களின் செயல்பாடுகளே என்ற அறிவியல் உண்மை முருகனின் ஆறு முகங்கள் மூலம் பல நற்செயலைச் செய்வது போல சில மனிதர்கள் இறைவன் உருவமாகவும் இறைவனின் செயல்போல பேசுவார்கள். இதனை Multiple Disorder என்று உவமைப்படுத்துகின்றனர்.

**முடிவுரை**

அறிவியலை உவமையாகக் கொண்ட ஒப்பற்ற இறைவனே,

"ஒருநீ யாகித் தோன்ற விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி" (திரு.294-295)

குறிப்பிடுகின்றது. ஒப்பற்ற இறைவனே மக்களுக்கு மெய்ஞானத்தில் ஒரு விஞ்ஞானத்தைத் தந்துள்ளார் நன்மைக்குப் பயன்படுத்தினால் நன்மையே! தீமைக்குப் பயன்படுத்தினால் தீமையே ஏற்படும் என்பதை இக்கட்டுரையில் அறியலாம்.

## முருகனின் பெருமையும், அருட்சிறப்பும்

முனைவர் கு. ராஜலட்சுமி,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜாபேட்டை, வேலூர் மாவட்டம்.

தமிழ் மக்களின் வழிபாட்டுக்குரிய கடவுள் முருகனாவான். இம்முருகனை இலக்கியங்கள் செந்நிற மேனியன் என்றும், சேவற்கொடியை உயர்த்தியவன் என்றும் குறிப்பிடுகின்றன. இத்தகைய முருகக் கடவுளின் பெருமைகளையும், அருட்சிறப்புகளையும் இக்கட்டுரை ஆராய்கிறது.

### முருகனின் வேறு பெயர்கள்

சங்க இலக்கியங்கள் முருகனைச் சேயோன், செவ்வேள், நெடுவேள், சேவற் கொடியோன், வேலன், மலைகடவுள், விறல்வேள், கொற்றவைச் செல்வன், ஆலமர் செல்வன் முதலிய பெயர்களால் குறிக்கின்றன. முரு+அன் = முருகன். 'முருகு' என்பதற்கு அழகு, இளமை, மனம், கடவுள் தன்மை என்று பொருள்படும். முருகு என்ற சொல்லிலிருந்து வந்ததுதான் முருகன் என்பதாகும்.

*பெரும் பெயர் முருக* (பரிபாடல்)

*முருகு உறழ் முன்பொடு பொருதுகளஞ் சிவப்ப* (அகம்.181)

*முருகு உறழப் பகைத்தலை சென்று*
*அகல்விசும்பி னார்ப்பு எழ* (மதுரைக்காஞ்சி 181)

என்ற பாடல்வரிகள் முருகன், முருகு என்ற பெயரினைக் குறிப்பதோடு, முருகனைப் போர்க்கடவுளாகவும் குறிப்பிட்டுள்ளதை உணரலாம்.

*மூவெளியின் முருக்கி முரண்மிகு செல்வனும்*
(திருமுருகு.154)

*முறஞ்செவி வாரணம் முன்சம முருக்கிப்*
*புறஞ்சிறை வாரணம் புக்கென புரிந்தென்*
(சிலம்பு.10:247-248)

என்னும் பாடல்வரிகள் முருகன், முருக்கி என்ற சொற்களை எடுத்தாண்டுள்ளது. இவ்விரு சொற்களுக்கும் 'முரு' என்பதே வேர்ச்சொல்லாகும். எனவே இவ்விலக்கியங்கள் முருகனைப் போர்க்கடவுளாகவே சித்திரித்துள்ளதை உணர முடிகிறது.

### குறிஞ்சிக் கடவுள் முருகன்

*சேயோன் மேய மைவரை உலகம்* (தொல்.அகத்திணை.2)

மலையும் மலைச்சார்ந்த இடமும் குறிஞ்சி நிலமாகும். அந்த நிலத்திற்குரிய

கடவுள் சேயோன் என்று குறிப்பிடுவதை உணரலாம். இங்குச் சேயோன் என்பது முருகனைக் குறிக்கின்ற சொல்லாகின்றது.

*குருநெறி வேலோய் நின் குன்றக்கீழ் நின்ற* (பரிபாடல்19:36)

என்ற வரிகள் குன்றிலே வாழ்பவன் வேலன் என்று குறிப்பிட்டுள்ளது. 'வேலன்' என்ற சொல் வேலைக் கையிலே ஏந்தியவன் என்பதைக் குறிக்கிறது. எனவே (மலை நாட்டுக்குரிய) குறிஞ்சி நிலத்திற்கு உரிய கடவுள் முருகன் என்பது தெளிவாக உணர முடிகிறது.

**முருகனின் பெருமைகள்**

முருகனின் பெருமை குறித்து திருமுருகாற்றுப்படை செவ்வனே எடுத்துரைக்கின்றது.

*உலகம் உவப்பவலனேர்பு......*
*.........................*
*ஓவற இமைக்கும் சேன் விளங்கு அவிரொளி*
*உறுநர் தாங்கிய மதனுடை நோன்தாள்*
*செறுநர் தேய்த்த செல்லுறழ் தடக்கை* (முருகாற்றுப்படை:1-5)

முருகன் இயற்கை ஒளியாகியவன். வீட்டின்பத்தைக் கொடுக்கின்ற திருவடியை உடையவன். பெரிய கையினை உடையவன். தெய்வயானைக்குக் கணவன். செங்கடம்ப மாலை அசையும் மார்பினை உடையவன். கோழிக்கொடியை உயர்த்தியவன். செங்காந்தளின் கண்ணியைச் சூடிய திருமுடியை உடையவன். சூரனைக் கொன்ற சுடர் வேலை உடையவன் என்று முருகனின் பெருமையைத் திருமுருகாற்றுப்படை உணர்த்துவதை உணர முடிகிறது.

**1. முருகனின் திருமுகங்கள்**

முருகக் கடவுள் ஆறு திருமுகங்களை உடையவன் என்று திருமுருகாற்றுப்படை குறிப்பிடுகின்றது.

*ஐவேறு உருவின் செய்வினை முற்றிய*
*முடியொடு விளங்கிய முரணமிகு திருமணி*
*.........................*
*குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்*
*மடவரல் வள்ளியொடு நகையமர்ந் தன்றே* (திருமுருகு.83-102)

ஐந்து வெவ்வேறான உறுப்புக்கள் (தாமம், முகுடம், பதுமம், கிம்புரி, கோடகம்) உடைய தொழில்கள் கொண்ட கீரிடம் கொண்டவன். பல இரத்தினங்கள் பதிக்கப்பட்ட மின்னலைப் போன்ற பொன்னாற் செய்த் மகர குண்டலங்கள் உடையவன். செவிகள் பூரண சந்திரனைப் போன்ற அணிகலன்களைக் கொண்டவை.

ஆறு முகங்கள்

1. இருளுடைய உலகத்தை விளக்கப் பல கிரணங்களைத் தோற்றுவித்தது.
2. தம்மீது அன்புடையவர்களுக்காக வேண்டிய வரங்களைக் கொடுத்தது.
3. அந்தணர்களின் யாகங்களுக்குத் தீங்கு நேராது காப்பது.
4. திசைகளை விளக்கும்.
5. அசுரர்களைக் கொன்று போர்க்களத்தை விரும்பாது நிற்கின்றது.
6. வள்ளியம்மையுடன் சிரித்து மகிழ்தலைச் செய்கிறது.

முருகனின் கைகள்

முருகன் பன்னிரெண்டு கைகள் உடையவன். இதனைப் பின்வரும் வரிகள் உணர்த்துகின்றன.

*.........................ஐயர்க்கு ஏந்தியது*
*.........................*
*வானர மகளிர்க்கு வதுவை சூட்ட*
*ஆங்குஅப் பன்னிரு கையும் பாற்பட இயற்றி* (முருகு.107-108)

1. துறவிகளுக்குப் பாதுகாவலாக இருக்கின்றது.
2. முதற்கரத்திற்கு இணையாக இருக்கின்றது.
3. ஆடை அணிந்த துடையின் மீது வைக்கப்பட்டுள்ளது.
4. அங்குசத்தை உடையது.
5. பெரிய கேடயத்தை உடையது.
6. வேற்படையை உடையது.
7. முனிவர்களுக்குப் பொருளைக் கொடுப்பது.
8. மார்பின் மாலை சேர்ந்தது.
9. களவேள்விக்கு முத்திரை கொடுக்கின்றது.
10. ஓசையை உடைய மணியை ஒலிக்கின்றது.
11. மழையைப் பெய்விக்கின்றது.
12. தெய்வ மகளிர்க்கு மணமாலையைச் சூட்டியது.

என முருகனின் பனிரெண்டு திருக்கரங்களின் சிறப்பினைத் திருமுருகாற்றுப்படை உணர்த்துவதை உணர முடிகின்றது.

வேலன் வெறியாட்டு

சங்க இலக்கியத்தில் வேலன் வெறியாடல் என்ற ஒரு நிகழ்வு உண்டு. அது வேலன் வெறியாடல் என்று குறிப்பிடப்படுகிறது. அகப்பொருட் நூல்களில் வேலன் வெறியாடல் நிகழ்வு பரவலாக உள்ளதைப் பார்க்கலாம்.

தலைவனுக்கும் தலைவிக்கும் இடையே களவு ஏற்படும். இந்தக் களவு காலத்தில் தலைவன் தலைவியைச் சந்திக்காத நிலையில் தலைவி மனம் வருந்துவாள். மனம் திரிந்து சுய நினைவற்றவளாக இருப்பாள். தலைவி நிலைக் கண்டு, தோழி மற்றும் சுற்றத்தினர் வருந்துவர். மனம்

மாறுபட்ட தலைவிக்குச் சுய நினைவு வரும் பொருட்டு அங்குள்ள தேவராட்டியை (மூதாட்டியை) அழைத்து வேலன் வெறியாட்டுதலை மேற்கொள்ளுவர். அவ்வாறு நிகழ்த்தும்போது (முருகன்) வேலன் வந்து அருள்பாலிப்பான் என்ற நம்பிக்கை சங்ககால மக்களிடையே பரவலாகக் காணப்பட்டது. இந்நிகழ்வு சங்க இலக்கியங்களில் பரவலாக சொல்லப்பட்டுள்ளது.

*மின்னாது இடித்தென்ன அன்னை*
*கொண்டாள் வெறி விந்தை மங்கை* (தஞ்சை வா.கோ.225)

*அறியாமையான் ஒன்று கேட்கலுற்றேன்*
*உம்மை யாவாதொன்றும்*
*அறியா மறியுயிர் கொள்ள என்றோ குருதிபலிகூர்*
*வெறியால் இவள் உயிர் மீட்க என்றோ*
*வென்றி வேல் வலத்திர்* (தஞ்சை-வா-கோ-298)

என்ற பாடல் வரிகள் வேலன் வெறியாடல் நிகழ்வைச் சுட்டுவதன் மூலம் உணர முடிகிறது.

*அயன்மனைப் பெண்டிரோ டன்னைசொல் அஞ்சி*
*வியன்மனையுள் ஆடும் வெறி*
(புறம். வெண்பாமாலை-பெருந்திணை-29)

*அணங்கறி கழங்கிற் கோட்டங்காட்டி*
*வெறியென உணர்ந்த உள்ளமொடு மறியறுத்து*
(நற்றிணை:47)

என்ற வரிகள் தலைவிக்கு ஏற்பட்ட மாறுபாட்டை நீக்க வெறியாடுதலை மேற்கொண்டனர் என்பதை உணரலாம்.

**முடிவுரை**

இவ்வாறாக முருகனின் வேறுபெயர்களும், தோற்றங்களும், அற்புதங்களும் சொல்லப்பட்டுள்ளமையை இக்கட்டுரை மூலம் அறியமுடிகிறது.

# திருமுருக வடிவமும் வழிபாடும்

முனைவர் மு. ராஜஸ்ரீ,
விரிவுரையாளர், தமிழ்த்துறை,
அறிஞர் அண்ணா அரசு மகளிர் கலைக்கல்லூரி,
வாலாஜாபேட்டை, வேலூர் மாவட்டம்.

தமிழ்க் கடவுளாகப் போற்றப்படும் இறைவன் முருகன். போரில் சிறந்த திராவிடத் தெய்வம் என்றும் 'வெல்லும் போரை வல்ல முருகன்' எனவும் மலைபடுகடாம் (493) முருகனைச் சிறப்பிக்கின்றது. குறிஞ்சி நிலக் கடவுளாகிய முருகனே மக்களின் உள்ளத்தை மிகவும் கொள்ளை கொண்டவன். அவன் சேயோன் எனப்பட்டான். தமிழரால் விரும்பிப் போற்றி வணங்கப்படும் முருகக் கடவுளின் புகழினை ஆராயும் நோக்காக இக்கட்டுரை அமைந்துள்ளது.

## திரு உருவம் (வடிவம்)

முருகனின் திருவுருவம் ஆறு முகங்களும் பன்னிரண்டு கைகளும் உடையதாகக் கூறப்படுகின்றது. சிவனின் மகன் என்றும் ஆரியர் கற்பனையில் எழுந்த கார்த்திகேயன் என்றும் முருகாற்றுப்படை விளக்குவதைக் காண முடிகின்றது. ஒளி பொருந்திய முருகனின் ஆறு முகங்களும் தவம் இயற்றும் யோகிகளின் உள்ளத்தில் நீங்காமல் குடி கொண்டிருப்பான்.

## ஆறுமுகங்களின் சிறப்பு

திருமுருகப் பெருமானின் ஆறு முகங்களில் ஒருமுகம் தன்னுடைய எண்ணற்ற கதிர்களினால் உலகத்தைச் சூழ்ந்திருக்கும் அடர்ந்த இருளை அகற்றுகின்றது. ஒரு முகம் தன்மேல் அன்பு செய்தவர் துதிக்கக் கனிவுடன் வரங்கொடுக்கின்றது. மூன்றாவது முகம் மந்திரத்தை உடைய வேதங்கள் கூறும் விதிகளில் மாறாது நடக்கும் அந்தணர்களின் யாகங்களில் தீங்கு வராதபடி காத்து நிற்கும். நான்காவது முகம் எஞ்சிய பொருட்களை ஏமுற நாடித் திங்கள் போல திசை விளக்கும். ஐந்தாம் முகம் வைரங் கொண்ட திருவுள்ளத்தோடே பகைவர்களைக் கொன்று வெற்றியைக் களத்திலே கொண்டாடும். ஆறாவது திருமுகம் குறவர் மடமகளும் கொடிபோல் நுசுப்பினளுமாகிய வள்ளியோடு நகை அமர்ந்தாகும்.

*மாயிருன் ஞால மறுவின்றி விளங்கப்*
*பல்கதிர் விரிந்தன் றொருமுக மொருமுக*
*மார்வல ரேத்த வமர்ந்தினி தொழுகிக்*
*...........................*
*குறவர் மடமகள் கொடியோனுசிப்பின்*
*மடவரல் வள்ளியோடு நகையமர்ந்த தன்றே* (திருமுரு.91-102)

என்று முருகாற்றுப்படை முருகனின் ஆறுமுகங்களின் சிறப்பைப் புலப்படுத்துகிறது.

பன்னிரு கைகளின் அருட்சிறப்பு

திருமுருகப் பெருமானின் பன்னிரு கைகள் இயற்றும் வினைகள் போற்றத்தக்கதாக உள்ளன. ஒரு கை ஆகாயத்தின் கண் செல்லும் முறைமையை உடையோருக்காக உயர்த்தப்பட்டிருக்கின்றது. ஒரு கை இடுப்பில் அமைந்துள்ளது. இன்னொரு கை குலிசத்தைச் செலுத்துகின்றது. நான்காவது கை நலம் பெறு கலிங்கத்தினால் மூடப்பட்டு விளங்கும் தொடையின் மீது கிடக்கின்றது. இருகைகள் வட்டத்தையும் வேலையும் செலுத்துகின்றன. ஒரு கை மார்போடு விளங்குகின்றது ஒரு கை தாரோடு பொலிகின்றது. இன்னொரு கை வளைகள் கலகலப்ப போர் வினைக்கு வேண்டிய குறிப்பைச் செய்கின்றது. ஒரு கை மணி இரட்டித்து ஒலிக்கும்படி அதை அலைக்கின்றது. ஒரு கை நீலநிறமான வானத்திலிருந்து மழை பொழியச் செய்கின்றது. பன்னிரண்டாவது கை வானத்து மகளிர்க்கு வதுவை சூட்டுகின்றது. இதனை,

*விண் செலன் மரபினையர்க் கேந்திய*
*தொருகை யுக்கஞ் சேர்த்திய தொருகை*
*நலம் பெறு கலிங்கத்துக் குறங்கின் மிசையசைகிய*
*தொருகை*
.........................................
*வானற மகளிர்க்கு வதுவை சூட்ட*
*வாங்கப் பன்னிரு கையும் பாற்பட வியற்றி*

(திருமுருகு. 107-118)

திருமுருகாற்றுப்படை பன்னிரு கைகளின் அமைப்பின் வடிவையும் சிறப்பையும் எடுத்தியம்புகின்றது. இதனையே, நக்கீரர் திருமுருகாற்றுப்படையின் தொடக்கத்தில் முருகன் காட்சியைக் கூறும் போது,

*உலகம் உவப்ப வலனேர்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டாஅ ங்கு*
*ஓவற் இமைக்குஞ் சேண்விளங் கவிரொளி* (திருமுருகு.1-3)

இவ்வாற்றுப்படையில் முருகனின் ஆறுமுகங்கள், பன்னிரு கைகளின் செயல்களையெல்லாம் நக்கீரர் அழகுபடக் கூறுவது ஒப்புநோக்கத்தக்கது.

சமய வழிபாட்டு முறை

சங்க காலத்தில் மக்களிடையே சமய வழிபாட்டு முறை நிலவி வந்ததைச் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. பண்டைய தமிழ் மக்களின் வாழ்க்கையில் சமயக் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் சமய வாழ்வில் புகத் தொடங்கின. எனினும் பலகாலமாகத் தமிழர் சமயம் தனக்குரிய தனிச் சிறப்பியல்புகளை உடையதாகவே அமைந்துள்ளது. தமிழ் மக்கள் இறைவனை வழிபடும் முறை என்ற நிலையில் உற்று நோக்கும் போது இயற்கையை வழிபட்டுள்ளனர். சூரியன், சந்திரன் மழை, தீ என்று இவ்வாறாக வழிபட்ட முறையினை இலக்கியங்கள் எடுத்தியம்புகின்றன. வரலாற்றுக்கு

எட்டாத மிகத் தொன்மைக்காலத்தில் வெறியாட்டு என்ற நிலையில் முருகனை வழிபட்டு மகிழ்விக்கும் அளவிலும் தமிழர்தம் சமயம் அமைந்துள்ளதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

சங்க காலப் பகுதியில் தமிழ் நாட்டில் ஆரியர் சமய வாழ்க்கைப் பண்பு சிறப்புற்றிருந்தது. சங்க நூல்களில் ஆரியக் கடவுளாக விட்ணு, இந்திரன் கூறப்பட்டமை உண்மையாக இருந்தது என்றாலும் நில இயற்கைக்கு ஏற்ப அமைந்த முருகன் கொற்றவை போன்ற திராவிடத் தெய்வங்களே மிகவும் சிறப்புடன் வணங்கப்பட்டு வந்தனர் என்பதை இலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது. தமிழருக் கென்றே தனியாக அமைந்த வழிபாட்டு முறைகளையும் உணர முடிகின்றது.

அவ்வகையில் காலம் செல்லச் செல்ல தமிழருடைய வழிபாட்டிலே வெறியாட்டு முதலிய ஆட்டங்கள் முக்கிய இடம் பெற்றமை காணலாகின்றது. முருக வழிபாட்டு தலங்களில் இத்தகை கூத்துக்கள் வர்ணிக்கப்படுகின்றன. இவ்வழிபாட்டு முறையில் பூசாரிகள் இல்லை. வழிபடும் மக்கள் இறைவன் தம்மீது வந்து வெளிப்படுவான் என்னும் நம்பிக்கையுடன் கூத்தாடினர். குறமகள் கோடும் மணியும் ஒலிக்க யாவரும் அஞ்சத்தக்க முறையில் இசைக்கு ஏற்ப ஆடுதலைக் காணமுடிகிறது. இவ்வாட்டத்தில் பல இடங்களில் வேலினைக் கையில் ஏந்தி ஆடுவதால் வேலனென ஒருவன் முருகனை வாழ்த்தி ஆடுவான். அத்துடன் இனிய வாத்தியங்கள் ஒலிக்க, கார்காலத்து மலராகிய குறிஞ்சியைச் சூடி, கடம்பு அணிந்த முருகனைச் செவ்விதாகத் தன் மெய்க்கண்ணே நிறுத்தி வழிபடுவான். அவ்வாறு வழிபட, மகளிர் தம்முள் தழுவி கை கோர்த்து மன்றுகள் தோறும் நின்று குரவைக் கூத்து ஆடுவர் என்பதை

*அருங்கடி வேலன் முருகொடு வளைஇ*
*அரிக் கூன்னியங் களங்க நேர் நிறுத்துக்*
*கார்மலர்க் குறிஞ்சி சூடிக் கடம்பின்*
*சீர்மிகு நெடுவேள் பேணித் தழூஉப்பிணையூஉ*
*மன்றுதொறு நின்ற குரவை.* (மதுரைக்காஞ்சி 613-615)

வேலன் வெறியாட்டின் வழிபாட்டு முறையினை மதுரைக்காஞ்சி குறிப்பிட்டுள்ளது. இதனைத் தொல்காப்பியர்,

*வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட் டயர்ந்த காந்தளும்* (தொல்.பொருள்.63)

வெறியாட்டின் சிறப்பினைக் குறிப்பிட்டிருப்பது ஒப்பு நோக்கத்தக்கதாக அமைந்துள்ளது. தமிழ்நாட்டிலும் வடகிழக்குப் பகுதிகளிலும் இவ்வாறு தெய்வங்கள் வெளிப்பட்டுத் தோன்றும் என்ற நம்பிக்கை மக்களிடையே இன்றும் நிலவி வருவதைக் காண முடிகின்றது.

## வெற்றிச் செயல்கள்

தேவர்கள் முதலாக யாவருக்கும் துன்பம் கொடுத்து வந்த சூரபன்மாவை அழிப்பதற்காக முருகப் பெருமான் பிணிமுகம் என்னும் யானையின் மீதமர்ந்து போருக்குச் சென்றால் போரில் முருகப் பெருமான் விட்ட வேல் பரந்த குளிர்ச்சி பொருந்திய கடலில் புகுந்தது, பாறைகளைத் தூளாக்கியது. கடல் நீரை வற்றச் செய்தது அவ்வேல் சென்ற வேகத்தில் தீயையும் ஒலியையும் எழுப்பியது. தேவர்களுக்குக் கொடுமையைச் செய்த சூரபன்பன் கடலின் நடுவே மாமரமாகி நின்றான். அவனை வேருடன் வெட்டி வீழ்த்தியது வேலனது வேல்.

அவுணர்கள் பிற உயிர்களைக் கொன்று உன்னும் கொடுஞ் செயலுக்குச் சிறிதும் அஞ்ஞாதவர்கள். மாயங்களில் வல்ல அவுணரையும் அவர் தம் குலத்தவரையும் அழித்தது முருகனது வேல். முருகனின் வேல் குன்றினைப் பிறந்த செய்தியைக் குறுந்தொகைக்கு கடவுள் வாழ்த்துப் பாடிய பாரதம் பாடிய பெருந்தேவனார்,

*.................குன்றின்*
*நெஞ்சுபக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்* (குறுந்.6-1)

என்று குறிப்பிட்டிருப்பதைக் காணலாம். சிலப்பதிகாரம் குன்றக் குரவையில்,

*பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்*
*மணி விசும்பின் கோனேத்த வெள்வேலே*
(சிலம்பு.குன்றகுரவை.8)

என இளங்கோவடிகள் குறிப்பிட்டிருப்பது புலப்படுகிறது.

## நிறைவுரை

தமிழ் மக்கள் என்றும் போற்றும் தமிழ்க் கடவுளாகிய முருகப் பெருமானின் ஆறுமுகத்தின் தன்மை, பன்னிரு கைகளின் சிறப்புகளும், அன்பர்க்கு அருள் பொழிந்த வேலின் தன்மை, சமய வழிபாட்டு முறை முதலானவற்றைக் காணமுடிந்தது.

# தொல்லியல் நோக்கில் தமிழக் கடவுள் முருகன் - ஓர் ஆய்வு

வெ. ராஜேந்திரன்
உதவிப்பேராசிரியர்
வரலாற்றுத்துறை, அ.வ.அ. கல்லூரி (த),
மன்னம்பந்தல், மயிலாடுதுறை-5.

தமிழ் மக்களால் தமிழ்முதற் கடவுளாகப் போற்றப்படும் முருகப்பெருமான் ஐந்து வகை நிலத்தில் குறிஞ்சி நிலத்தின் தலைவனாகப் போற்றப்படுகிறார். இத்தகைய முருகனின் ஆறுபடை வீடுகளின் சிறப்பினை சங்க இலக்கியங்களின் துணைகொண்டு விவரிக்கப்படுகிறது. அதாவது முருகனின் சிறப்பு குறித்து தொல்காப்பியம், குறுந்தொகை, அகநானூறு, புறநானூறு, கலித்தொகை, பரிபாடல், திருமுருகாற்றுப்படை, பட்டினப்பாலை, மதுரைக்காஞ்சி, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற சங்க இலக்கியங்களை ஆதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளது. மேலும் தமிழகத்தில் பரவலாகத் தொல்லியல் அகழாய்வுகளில் பெறப்பட்ட சில அறிய சான்றுகளையும் ஆதாரங்களாகக் கொண்டும் முருகனின் வரலாறு பேசப்படுகிறது. வேதகாலம் தொட்டு தற்காலம் வரையிலான முருகனின் வழிபாட்டு நிகழ்வுகளையும் ஏனைய மற்ற சில தெய்வங்களுடன் தொடர்புப்படுத்தியும் விவரிக்கப்பட்டுள்ளது. முருகனின் வாகனங்களாகப் பயன்படுத்தப்பட்ட விலங்குகள் மற்றும் பறவைகள் குறித்தும் பேசப்பட்டுள்ளன. மேலும் வேலனுக்காக எடுக்கப்பட்ட விழக்களின் சிறப்பு குறித்தும் பேசுகிறது இந்த ஆய்வுக்கட்டுரை.

## ஸ்தல விருட்சத்தின் சிறப்பு

தமிழ் மக்களின் சிறந்த வழிப்பாட்டு கடவுளான முருகன் சிவபெருமானின் நெற்றிக்கண்ணிலிருந்து ஆறு தீப்பொறியாகத் தோன்றிய பின் ஆறு தீப்பொறியாகிய ஆறுமுகனை ஒரு தீப் பந்தாகச் சுமந்து சென்று சரவணப் பொய்கையில் சேர்த்தவர்கள் வாயு மற்றும் அக்னி தேவர்கள் ஆவர். இவ்வாறு தோன்றிய ஆறுமுகன் என்கிற சண்முகன், சங்க இலக்கியங்களில் குறிஞ்சி நிலத்தின் கடவுளாக தமிழ்மக்களால் போற்றப்படுகிறார். இத்தகைய முருகனுக்குத் தமிழகத்தில் பல வழிப்பாட்டுக் கோயில்கள் எடுக்கப்பட்டு அதற்கான ஸ்தலவிருட்சமாக பல மரங்களும் வைக்கப்பட்டு வழிபடலாயின. அதாவது மருதம், பன்னீர், புன்னை, நெல்லி, மகிழம், பலா, குரா, பாதிரி, வன்னி மற்றும் கால்அத்தி போன்ற மரங்கள் வழிப்பாட்டு மரங்களாக வணங்கப்படுகிறது. குறிப்பாக மருதமரம் கோயம்புத்தூர் மாவட்டம் மருதமலையில் உள்ள தண்டாயுதபாணிக் கோயில் ஸ்தல விருட்சமாகவும், பன்னீர்மரம் திருச்செந்தூர் கோயில் வழிபாட்டு மரமாகவும், புன்னைமரம் மயிலம் சுப்பிரமணியசுவாமி ஆலய ஸ்தல விருட்சமாகவும் வணங்கப்படுகின்றன.

புன்னைமரம் குறித்துப் பேசும் புராணம் இதனைப் புன்னகை வனம் என்கிறது. புன்னையின் பூச்சாறு பாலியல் நோய், சருமகட்டி, நரம்புத் தளர்ச்சி போன்ற நோய்களுக்கும், இவற்றின் பொடி ஞாபகமறதி மற்றும் தலைவலிக்கு மருந்தாகவும் பயன்படுத்தப்பட்டது போன்ற தகவலை அகர்வால் மற்றும் எப்.ஜே.தசர் போன்றோர் தங்களின் ஆய்வில் குறிப்பிடுகிறார்கள். மகிழம் மரம் காஞ்சிபுரம் மாவட்டம் திருப்போரூர் ஸ்ரீகந்தசாமி கோயில் மற்றும் மதுரை பூம்பாறை ஸ்ரீகுழந்தை வேலு ஆலய ஸ்தல விருட்சமாகவும் போற்றப்பட்டு வணங்கப்படுகிறது. மேலும் குராமரம் நாகப்பட்டினம் மாவட்டம் திருவிடைக்கழி குமாரசாமி ஆலயத்தின் ஸ்தல விருட்சமாகவும், காஞ்சிபுரம் அருகில் உள்ள திருப்பருத்திக்குன்றம் வர்தமாணிஸ்வரர் ஆலயத்தின் ஸ்தல விருட்சமாகவும் வணங்கப்படுவது போற்றத்தக்கவை. ஆனால் கால்அத்தி மதுரை மாவட்டம் திருப்பரங்குன்றம் சுப்பிரமணியசுவாமி கோயில் வழிபாட்டு மரமாகவும், பலாமரம் சேலம் மாவட்டம் கொல்லிமலை ஆறுமுருகப்பெருமான் கோயில் வழிபாட்டு மரமாகவும் மக்களால் வழிபடப்படுகிறது. பாதிரிமரம் கடலூர் மாவட்டம் திருப்பாதிரிபுலியூர் பாடலிஸ்வரர் கோயில் ஸ்தல விருட்சமாகவும் கொண்டு மக்களால் வணங்கப்பட்டு வருகிறது. மேற்சொன்ன அனைத்து மரங்களும் மருத்துவக் குணம் நிறந்தவை என்பது சிறப்பாகும். சராகர், சுஸ்ருதர் மற்றும் வராகமிகிரர் போன்ற பண்டைய மருத்துவர்கள் பாதிரி மரத்தின் பல பாகங்களைக் கொண்டு வயிற்று வலி, இருமல், இரத்தசோகை, வயிற்றுப்போக்கு மற்றும் இரத்தப்போக்கு போன்ற நோய்களைத் தீர்த்துள்ளனர். வன்னிமரத்தின் சிறப்பு குறித்து ரிக்வேதம், இராமாயணம் மற்றும் மகாபாரதம் போன்றவை பேசுகின்றன. இவை வேத பிராமணர்கள் வன்னிமர கம்புகளையும், அரசமரக்கிளைகளையும் யாகத்திற்குப் பயன்படுத்தியுள்ளனர் என்பதை விவரிக்கின்றன. இதன் பயன்பாடு குறித்து மேக்டோனல் மற்றும் கீத் போன்ற அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். வன்னிமரத்தின் பாகங்கள் ஆயுர்வேதத்திற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது என்ற அறிய தகவல்களையும் இவர்களின் மூலமாக அறியமுடிகின்றது.

**தொல்லியல் சான்றுகள்**

தமிழகத்தில் முருகனின் வழிபாடு கி.மு.2000-ஆம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடங்கிருக்கிறது என்பதற்குச் சில தொல்லியல் ஆதாரங்களைக் கொண்டு முடிவுக்கு வரமுடிகிறது. இதற்குச் சான்றாக சைபிரஸ் நாட்டின் என்குமியில் முருகனின் வேல் போன்ற கருவிகள் கல்லறை அமைப்பு கொண்ட கட்டடப் பகுதிகளிலிருந்தும், பாலஸ்தீனம் மற்றும் காசா போன்ற இடங்களிலிருந்தும் தொல்லியல் அறிஞர்களால் உலகிற்கு வெளிக்காட்டப்பட்டது. இது தென்தமிழகத்தின் ஆதிச்சநல்லூரில் இருந்து பெறப்பட்ட வேல் கருவிக்கு இணையானதாகக் கருதப்பட்டது. இதன் மூலமாக தமிழ்மக்கள் மேற்கத்திய நாடுகளுடன் வணிகத்தொடர்பு கொண்டிருந்த நாட்களில் முருகனை வழிபடும் எண்ணம் அங்கிருந்து தொடங்கியிருக்கலாம் என நம்பப்படுகின்றது. இதிலிருந்து முருகன் மக்களின் விவசாயத்திற்கு உரிய கடவுளாகப் போற்றப்பட்டதையும் உகிக்கமுடிகிறது. கி.மு.8000 முதல்

7000 ஆண்டுகள் வரை வேல் என்ற கருவியை வைத்தே மத்திய ஆசியநாட்டு மக்கள் நிலத்தினை உழுதார்கள் என்ற கருத்தை கு.கி. கிருஷ்ணமூர்த்தி தனது நூலில் குறிப்பிடுகிறார். ஆனால் கி.மு.4000-ஆம் ஆண்டுகளில் சுமேரிய மக்கள் யூப்ரடிஸ்-டைக்ரிஸ் நதிப் பள்ளதாக்குகளில் விலங்குகளைப் பயன்படுத்தி ‘ஏர்’ என்ற கருவியின் மூலமாக உழ ஆரம்பித்துள்ளனர். அவர்கள் பயன்படுத்திய கருவி வேலாக இருக்கலாம் என ஊகிக்க முடிகிறது. இப்படியாகத் தமிழ் நாட்டிலும் உழுகின்ற வழக்கம் வந்திருக்கலாம் என நம்பப்படுகிறது.

கே.ஏ. நீலகண்ட சாத்தியார் தைத்ரைய ஆர்ணயஹம் மற்றும் உபநிடதங்கள் போன்ற சமஸ்கிருத இலக்கியங்கள் முருகனைச் சுப்ரமணியன் என்று அழைக்கப்பட்டதைக் குறிப்பிடுகிறார். மேலும் முருகனின் வாகனத்தோடு தொடர்புப்படுத்தும்போது பெர்சிய மொழியில் கோழிமுர்க் என்று அழைக்கப்பட்டதாகவும் கூறுவார். ஆதிச்சநல்லூரிலிருந்து பெறப்பட்ட வெண்கல கோழி உருவம், இரும்பு வேல் மற்றும் தங்கத்தாலான இலை போன்றவை வழிபாட்டின் எச்சங்களாகவும் கூறுவர். இவை ஆதிச்சநல்லூரில் இராபர்ட் புருஸ்போர்ட் என்பவரால் கி.பி. 1899-1905 ஆம் ஆண்டுகளில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்விலிருந்து பெறப்பட்ட அறியத்தக்க சான்றாகக் கருதப்படுகிறது. மேலும் இதற்குச் சான்றாக மகாபலிபுரம் அருகில் சாளுவன்குப்பம் என்ற இடத்தில் சங்ககாலத்து முருகன் கோயில் தொல்லியல் அறிஞர்களால் கி.பி.2004-ஆம் ஆண்டு கண்டறியப்பட்டது. இங்கு முருகனின் வேல் போன்ற எச்சங்கள் கண்டறியப்பட்டு தமிழ் மக்களின் வழிப்பாட்டுச் சிறப்பை வெளிக்காட்டியது. இதே ஆண்டு நாகை மாவட்டம் மயிலாடுதுறை வட்டத்தில் செம்பியன்கண்டியூர் என்ற இடத்தில் கி.மு.1500-க்கு முற்பட்ட புதிய கற்கால கைக்கோடாரி கண்டுபிடிக்கப்பட்டது. இதில் மொஹஞ்சாதரோ, ஹராப்பா பண்பாட்டுக்கால எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டறிந்தனர். இந்த எழுத்துப்பொறிப்பு முருகு என்று கூறப்பட்டது. இக்கருவியில் உள்ள தொன்மை எழுத்துக்களை ஆய்வு செய்த பிராமி எழுத்து ஆய்வுப்பேரறிஞர் திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் “இக்கருவி 3000 ஆண்டுகள் பழமையானது, காவிரிக் கரையில் இருந்த தமிழரின் தொன்மை நாகரிகம் இதனால் புலனாகிறது. இது சிந்துவெளி நாகரிகத்திற்கு இணையானது” என்ற கருத்தையும் குறிப்பிட்டுள்ளார். இதன் மூலமாக முருகக்கடவுளின் வழிபாடு என்பது தொன்மைக் காலம் தொட்டு தமிழகத்தில் இருந்துள்ளதை அறியமுடிகிறது. ஆனால் சங்க இலக்கியங்களின் அடிப்படையில் நோக்கும்போது சங்ககால இலக்கியங்கள் சிலவற்றில் தான் முருகன் பற்றிய குறிப்புகள் பரவலாக ஆங்காங்கே காணக்கிடைக்கின்றது.

### முருகனின் கோயில்கள்

திருமுருகாற்றுப்படை முருகன் இருந்த கோயில் கட்டுமானம் குறித்துச் சில அறிய தகவல்களை மட்டுமே தருகிறது. ‘நளிமலைச் சிலம்பின் நன்னகர் வாழ்த்தி’ என்னும் வரியால் மலைக்கோயில் ஒன்று இருந்ததையும்

'முருகாற்றுப் படுத்த உருகெழு வியன்நகர்' என்னும் பாடல் வரியால் முருகன் அழைக்கப்பட்ட இடம் கோயிலானதையும் குறிக்கும் முருகாற்றுப்படை, முருகன் இருக்கும் இடங்களாக வெறிக்களம், காடு, ஆறு, குளம், ஊர்கள், சதுக்கம், சந்தி, பூத்த கடம்பு, மன்றம், பொதியில், கந்து (அடி. 224:26) என்பனவற்றை வரிசைப்படுத்துகிறது. ஆனால் ஐங்குறுநூற்றின் குறிஞ்சிப் பாடலொன்று மலையில் அமைந்திருந்த கோயிலைக் கடவுள்குளம் என்று அழைக்கிறது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டுக்கள் இறைவனின் கோயிலைத் தேவகுலம் என்ற சொல்லால் விவரிக்கும்.

அகநானூற்றுப் பாடல் 'அணங்குடை நகரின் மணந்த பூவின்' என்ற வரியால் கோயில்கள் நகர் என்று அழைக்கப்பட்டதை உணர்த்தும். முருகனை வழிப்பட்ட சங்க கால மக்கள் சில வேண்டுதலை முன்வைத்தே வணங்கியுள்ளனர். அவை காதல், ஆரோக்கியம், வீரம், பொருள், குழந்தை பாக்கியம் சார்ந்த விசயமாகவே இருந்துள்ளது. பட்டினப்பாலை கூறும்போது, கிராமங்கள் ஏற்படுத்தப்பட்டபோதே கோயில்களும் கட்டப்பட்டிருந்தன என்பதை 'கோயிலொடு குடி நிறீஇ' என்ற பாடல் வரியால் உணர்த்தும். முருகனின் வாகனங்கள் குறித்தும் இலக்கியங்கள் பேசும்போது, முருகன் போருக்குச் செல்லும்போது பிணிமுகம் என்ற யானையின் மேல் ஊர்ந்து செல்வார் என்று கூறுகிறது. இதனைத் திருமுருகாற்றுப்படை பாடல் வரி, "வேழமேல் கொண்டு", "அங்குசங் கடாவ வொருகை", "ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி" (முருகு. 82:110:247) என்று விவரிக்கிறது. வேலன் கையில் ஈட்டி அல்லது வேல் வைத்திருப்பார் ஆகவே முருகன், வேலன் என்று அழைக்கப்படுகிறார். இதற்குச் சான்றாக திருச்செந்தூரில் முருகன் போாக் களத்தில் மாமரமாக நின்ற சூரபத்மனைத் தனது வேலால் இரண்டாகப் பிளந்து சேவலாகவும், மயிலாகவும் மாற்றினார். பின்னர் சேவலை தனது கொடியாகவும் மயிலை தனது வாகனமாகவும் கொண்டார். இந்திரனின் வேண்டுகோளுக்கு இணங்க மயில் வாகனத்தில் திருப்பரங்குன்றம் சொன்றார் முருகன். பின்னர் இந்திரனின் மகள் தெய்வானையை இங்குத் திருமணம் செய்துக்கொண்டார். அதன் பின்னர் திருத்தணியில் விநாயகப்பெருமானின் துணையோடு வள்ளியைத் திருமணம் செய்துக்கொண்டார். இதனை நற்றிணைப் பாடல்,

> *"முருகு புணர்ந்து இயன்ற வள்ளிபோல நின்*
> *உருவுகண் எறிப்ப நோக்கல் ஆற்றலெனே"* (நற். 82:4-5)

எனும் குறிப்பால் உணர்த்தும். இங்கு முருகனும் வள்ளியும் களவுக் காதலராய்க் காட்டப்பட்டுள்ளனர் என்பது தெளிவு. திருநாவுக்கரசர் தனது தேவராத்தில்,

> *"நஞ்செந்தில் மேய வள்ளி மணாளற்குத் தாதை கண்டாய்*
> *முறைகாட் டுறையும் மணாளன் தானே"*

என்று பாடியுள்ளார். திருச்செந்தூர் கோயில் குறித்துச் சிலப்பதிகாரம் கூறும்போது 'சீர்கெழு செந்தில்' என்று விவரிக்கும். மேலும் கிராம மக்களின் வழிபாட்டுக் கடவுளர்களில் ஒருவரான வேலனுக்கு வெறியாட்டம் நிகழ்த்தப்பட்ட போது

மாமிச உணவும், மதுபானமும் வைத்துப் படையல் செய்தது குறித்துப் பேசுகிறது என்ற செய்தியை நா. சுப்பிரமணியன் தனது நூலில் தெரிவிக்கிறார். சிலப்பதிகாரம் பேசும் போது அருகன், முருகன், சிவன், திருமால் போன்ற கடவுளர்கள் மக்களால் வணங்கப்பட்டதைக் கூறும். பூம்புகாரில் சிவபெருமான் கோயில் முதல் சதுக்கப்பூதம் வரை பல கோயில்கள் இருந்தன என்றும் அவை இந்திரன், பலராமன், சூரியன், சிவபெருமான், முருகன், வச்சிராயுதம், மாசாத்தான், சந்திரன், சமணர் முதலிய பல தெய்வங்களின் கோயில்கள் இருந்தன என்றும் இரா. நாகசாமி அவர்கள் கூறுவார். ஆனால் பரிபாடல் திருமாலும் முருகனும் மக்களின் வழிபாட்டில் சமமாக கருதியதை விவரிக்கும். அகநானூறு பழநி முருகன் குடிகொண்டு கோயில் அமர்ந்த இடத்தை,

*'முழவுறத் திணி தோணொடு வேளாவி-*
*பொன்னுடை நெடுநகர்ப் பொதினி'*

என்று கூறும். இங்குத்தான் முருகன் ஞானப்பழம் கிடைக்காமல் வந்து ஆண்டிக்கோலம் பூண்டார் என அறியப்படுகிறது. ஆனால் தனது தாய் பார்வதியினால் 'பழம்நி' என்று இக்குன்றுக்குப் பெயர் சூட்டப்பட்டது. பழம்நி என்பது முருகனுக்கு உமையவள் ஈட்ட பெயராகும். மலையடிவாரத்தின் நகரமே திருவாவினன் குடியாகும். இத்தகைய சிறப்பிற்குரிய முருகன் சுவாமிமலையில் தான் தன் தந்தை சிவனுக்குப் பிரணவ மந்திரத்தின் பொருளை உபதேசித்தார். இதன் பின்னர் முருகனுக்குச் சுவாமிநாதன் என்ற பெயர் உண்டாயிற்று. பின்னர் குருநாதன், தகப்பன்சுவாமி என்றும் பெயர் பெற்றார். பழமுதிர்ச்சோலையில் முருகன் ஔவைக்கு நாவல் பழங்களால் நுண்ணறிவை புகட்டினார். இதனால் புலமை பெற்ற ஔவையார் முருகனைக்,

*"கருங்காலிக் கட்டைக்கு நாணாக் கோடாலி*
*இருங்கதலித் தண்டுக்கு நாணும்-பெருங்கானில்*
*காரெருமை மேய்க்கின்ற காளைக்கு நான்றோற்ற*
*தீரிரவு துஞ்சாதென் கண்"*

என்று பாடினார். இத்தகைய சிறப்பிற்குரிய முருகனின் உடம்பைப் பற்றிப் பட்டினப்பலை கூறும்போது *"முருகமார்பூ முரண்கிடக்கை"* (பட்டின. 1:37) என்று கூறும்.

## முருகனின் வாகனங்கள்

சிவனின் நெற்றிக்கண்ணில் தோன்றிய ஆறுமுகன் அக்கினிப் பொறியாய் அவதரித்ததால் 'அக்னி கர்ப்பன்' என்றும், கங்கையில் தவழ்ந்தமையால் 'காங்கேயன்' என்றும்இ சரவணப் பொய்கையில் தோன்றியதால் 'சரவணபவன்' என்றும் திருப்பெயர்கள் விளங்க அவதரித்தார். ஆறு கார்த்திகைப் பெண்களால் ஆறுமுகன் வளர்க்கப்பட்டதால் 'கார்த்திகேயன்' என்றும் அழைக்கப்பட்டார். இத்தகைய சிறப்பிற்குரிய வேலனின் வாகனங்களாக ஆட்டுக்கிடா, யானை, மயில் கூறப்படுகிறது. சேவல் உருவம் கொடியின் அடையாளமாக உள்ளது.

இளமைப் பருவத்தில் ஆட்டுக்கிடாவில் பயணித்து உலகின் சில இடங்களுக்கு வளம் வந்த முருகன், பிணிமுகம் என்ற யானையின் மேல் ஊர்ந்து சென்று போர் செய்ததைத் திருமுருகாற்றுப்படை கூறும். திருச்செந்தூரில் சூரபன்மனை வதம் செய்த பின் மயிலை வாகனமாகக் கொண்டு திருப்பரங்குன்றம் சென்ற முருகன், ஞானப்பழத்திற்காக மயிலின் துணைகொண்டு உலகையே சுற்றினார் என்பதும் நாம் அறிந்ததே. வேலன் சூரபன்மனின் ஒரு பாதியைச் சேவல் கொடியாகவும் கொண்டதும் சிறப்பே.

முடிவுரை

முருகக்கடவுளின் சிறப்பை எடுத்துரைக்கும் சங்க இலக்கியங்கள் தனிகோயில் இருந்ததைப் பற்றி முழுமையாக விவரிக்கவில்லை என்றாலும், தமிழ் மக்களின் வழிபாட்டு கடவுள்களின் முக்கிய இடத்தை முருகன் என்கிற வேலன் பிடித்துள்ளார் என்பதைக்காட்டின. முருகனின் பக்தியை வெறியாட்டம் என்ற வகையில் மக்கள் தங்களின் தேவைகளைக் கேட்டறிந்து குறை தீர்க்கும் கடவுளாக்கினர் என்பதற்கும் சங்க இலக்கியங்கள் துணைநின்றன. காதல் கடவுளாக மட்டுமின்றி போர்க்கடவுளாகவும் முருகன் பாராட்டப்பட்டதை இலக்கியங்கள் சுட்டிக்காட்டின. வேலனின் புகழிடமாக மலைக்குன்றுகள் சிறப்புற்றன என்பதையும், திருப்பரங்குன்றம் முதல் புகழிடமானது குறித்தும் பேசின. சங்க இலக்கியங்கள் வேலனின் இல்லற சிறப்பைப் பற்றியும் ஆங்காங்கே சில குறிப்புகளாக விவரித்தன. இவ்வாறு தமிழ் மக்களின் எண்ணங்களில் குடியேறிய முருகனுக்காக ஆட்டம், பாட்டம் கொண்டாட்டம் என இசை முழங்க காவடியாட்டம் மக்களால் அரங்கேற்றபட்டு, சூரபன்மனைச் சம்ஹாரம் செய்கின்ற நிகழ்ச்சியும் ஆண்டுதோறும் திருச்செந்தூரில் நிகழ்த்தப்படுகிறது போன்ற கருத்தினையும் கூறின. இத்தகைய சிறப்பிற்குரிய வேலனுக்காக தமிழ்நாட்டுச் சிவாலயங்களில் தனிச்சிறப்பிடம் வழங்கப்பட்டிருப்பது தமிழ் மக்களின் பக்திக்கான மிக முக்கிய காரணமாகக் கருதப்படுகிறது. மேலும் முருகனின் வழிபாடுகள் குறித்த சில தொல்லியல் சான்றுகளின் அடிப்படையிலும் ஆதாரங்களைக் கொண்டு விவரித்தன. இத்தகைய சிறப்பிற்குரிய முருகனின் பக்தி மேலும் பரவலாகப் பெருக்கெடுக்கும் என்பதில் ஐயமில்லை.

# கந்தபுராணம் உணர்த்தும் பக்திநிலை

ச. ராஜேஸ்வரி
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

அன்பே கடவுளின் வடிவம் என்று உலகத்துச் சமயங்கள் எல்லாம் இசைந்துரைக்கின்றன. எனவே அன்பு வடிவாகிய கடவுளை அறிவதற்கும் அவர் அருளைப் பெறுவதற்கும் அன்பையே ஊடகமாகக் கொள்ள வேண்டும் என்பது புலனாகிறது. பேரன்பின் முதிர்ச்சியே பக்தி எனப்படும். இப்பக்தியினை மேற்கொண்டோர் பக்தரெனப்படுவார். பக்தி என்பது வரம்பிலாத அன்பினால் உண்டாவது. கடவுளிடம் மனிதனுக்கு ஏற்படும் அன்பே பக்தி எனப்படுகிறது. புராணக் கதைகளை மக்கள் படிக்கபடிக்க அவர்கள் மனதில் பக்தியுணர்வும் தோன்ற ஆரம்பிக்கிறது எனலாம்.

## கந்தபுராணத்தில் பக்தி

பக்தி இலக்கியம் தழைத்து வந்த காலத்தில் தான் கந்தபுராணம் தோன்றியது. இதனைப் பக்தி இலக்கியம் என்றும் கொள்ளலாம். கச்சியப்ப முனிவரால் படைக்கப்பட்ட கந்தபுராணம் முருகக்கடவுளின் சிறப்பைக் கூறுவதாக அமைந்துள்ளது. ஆறு காண்டங்களாகப் பகுக்கப்பட்டிருக்கும் கந்தபுராணத்தின் முதலாவது உற்பத்திக் காண்டத்தில் 1783 பாடலங்களும் 26 படலங்களும் அமைந்துள்ளது. இரண்டாவது அசுர காண்டத்தில் 1929 பாடல்களும் 43 பாடல்களும் 21 படலங்களும் உள்ளன. மூன்றாவது மகேந்திரக் காண்டத்தில் 1178 பாடல்களும் 21 படலங்களும் இருக்கின்றன. நான்காவதான யுத்த காண்டத்தில் 2967 பாடல்களும் 16 படலங்களும் இடம் பெறுகின்றன. ஐந்தாவதான தேவகாண்டத்தில் 421 பாடல்களும் 5 படலங்களும் பாங்குடனடைகின்றன.

ஆறாவதான தட்ச காண்டத்தில் 2067 பாடல்களும் 24 படலங்களைத் தன் பால் கொண்டிருக்கும் இப்புராணத்தின் சிறப்புக் கூறுகளுள் பக்தி கூறுகளைப் பெற்றிலங்கும் படலங்களும் பாடல்களும் மிகச் சிலவேயாகும். யுத்த காண்டத்தில் தேவர்கள் போற்று படலம் தட்ச காண்டத்தில் தகான் சிவபூசை செய்படலம், தந்த விரதப்படலம் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். கந்தபுராணத்தில் பக்திச் சுவை அங்கொன்றும் இங்கொன்றுமாக பக்தியுணர்வைப் புலப்படுத்தும் பக்திக் கூறுகள் காணப்படுகின்றன.

முருகன் சூரபன்மனை வென்று அவனை அழிக்கின்றான் எனக் கந்தபுராணம் கூறுகிறது. இதனைப் படிக்கும் பொழுது சூரபன்மனைப் போன்ற தீமைகளை வெல்ல வேண்டும் என்றால் முருகக் கடவுளைத் துணையாகக்

கொள்ள வேண்டும் என்ற எண்ணம் வளர்கிறது. இந்த இறை நம்பிக்கை மக்களிடையே பக்தி வளர உறுதுணை புரிகிறது எனலாம்.

பக்தி என்பது கடவுற்பால மாந்தர் கொள்ளும் அன்பு ஆகும். மிகவுயர்ந்த உண்மை மிக்க அன்பே பக்தியாகும். இறைவனிடம் நாம் கொள்ளும் அன்பைப் பக்தி எனக் குறிக்கலாம் வயது மூத்தவர்களாக இருந்தால் அவர்களிடம் ஏற்படும் அன்பு மரியாதை கலந்ததாக இருக்கும். நம்மை ஆளும் இறைவன் அல்லது நாம் வணங்கி வழிபடும் கடவுள் எனும் பொழுது அவரிடம் கொள்ளும் அன்பு பக்தி நிலையாக மாறுகிறது. ஒரு சிலரிடம் இப்பக்தி அதிகமாக ஏற்படுவதால் இறைவனோடு அவர்களுக்கு நெருக்கம் அதிகமாக ஏற்படுகிறது. இதுவே அவர்கள் முக்தி பெறுவதற்கு வழிகோலுகிறது.

இறைவனிடத்து உள்ள பக்தியை இறைவனைக் குறித்து மனதில் ஏற்படும் எண்ணங்களை எழுத்து வடிவில் வெளிப்படுத்துகின்றனர் சான்றோர் அவர்களின் எண்ணங்கள் பக்தி பாசுரங்களாகவும் புராணங்களாகவும் மக்களிடையே பரவுகின்றன. இவ்வாறு ஏற்படும் பக்தியை இறைபக்தி, குருபக்தி எனப் பலவாறு பிரித்துக் கொள்கின்றனர். தேவாரம் பாடிய மூவரில் அப்பர் தாம் சிவனிடம் கொண்ட அன்பை மிக உருக்கமாகத் திருமுறைகளில் எடுத்துக் கூறுகிறார். இறைவனின் திருவுருவத்தைக் காண நேர்ந்தால் இந்த உலக வாழ்க்கையும் விரும்பத்தக்கதே என அவர் பாடுகிறார். இவ்வாறு கூறுவதன் மூலம் இறைவனிடம் அவர் கொண்டிருந்த பக்தியின் அருஞ்சிறப்பை உணரலாம்.

**கச்சியப்பரின் பக்தி**

கந்தபுராணத்தில் பக்திச் சுவையின் கூறுகள் மலிந்துள்ளன. கந்தபுராணம் இயற்றப்பட்டமைக்கே ஏது எதுவெனில் கச்சியப்பர் குமரக் கோட்டத்துக் கடவுள் மீது அளவு கடந்த பக்தி கொண்டிருந்தமையே எனல் பொருந்தும். கந்தபுராண நூல் அரங்கேற்றத்தின்போது கச்சியப்ப சிவாச்சாரியார் அரங்கேற்றவையில் தனது முதல் பாடலைப் பாட அவையோர் அதற்கு மறுப்புத் தெரிவித்தனர். பிறகு அப்பாடலுக்குரிய விளக்கத்தை முருகப் பெருமானே நேரில் வந்து விளக்கியதை அறிந்த அவையோர் கச்சியப்பரின் பக்தித் திறத்தைப் போற்றிப் பாராட்டினர் என்பர்.

முருகப் பெருமானின் பெருமையை விளக்கும் நூல் கந்தபுராணம். கந்தபுராணத்தின் கதைத் தலைவனாகிய குமரக் கடவுள் எவ்வாறெல்லாம் தன்னைக் காக்கவேண்டும் என்பதைப் பாயிரத்தில் கூறியுள்ளமை கச்சியப்பர் முருகக் கடவுள் மீது கொண்டுள்ள நம்பிக்கைக்கும் பக்திக்கும் சிறந்த சான்றாகும்.

*மாவடி வைகும் செவ்வேள் மலரடிபோற்றி அன்னான்*
*சேவலும், மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி*

இப்பாடலில் கச்சியப்பர் உலகத்துயிர்களை இன்பத்துடனும் பாதுகாப்புடனும் வாழ்விக்கும் செவ்வேளின் ஆறு திருமுகங்களையும், பன்னிரு கரங்களையும், செவ்வேலையும், மயிலையும் போற்றி உய்வோம் என்கிறார்.

**தேவர்கள் முருகனைப் போற்றுதல்**

முருகக்கடவுள் சூரபன்மனைக் கொன்றான் சூரனுடைய ஆணவத்தைப் போக்கி அடிமை கொண்டான். அதைக் கண்டு திருமால், நான்முகன் முதலிய தேவர்கள் முருகக் கடவுளைப் பலவாறு போற்றலாயினர்.

*கார்தடிந்து துய்க்கும் கனைகடலின் நீர்வறப்பப்*
*போர் தடிந்து செல்லும் புகர்வேல் தனைவிடுத்துச்*

மேகங்கள் மின்னிக் குடிக்கின்ற ஆரவாரத்தை உடைய கடல் நீர் வற்றும்படி புள்ளியுடைய வேலை விடுத்துப் போரிட்டு அப்போரில் சூரபன்மனைக் கொன்றதாகக் கூறப்படுகிறது.

*ஈண்டே எமருக் கிடர்செய் அவுணரெலாம்*
*மாண்டே விளியும் வகைபுரிந்து காத்தனையால்*

இங்கு எங்கட்குத் துன்பம் செய்த அசுரர்கள் எல்லாம் மாண்டு விடுமாறு போர் செய்து எங்களைக் காத்தருளினீர். அதனால் நாங்கள் எதையும் விடுப்போம். மேலான உன் திருவடிகளுக்கு அடிமையானோம். அதனால் மற்றவர்களை வணங்கமாட்டோம் என்று தேவர்கள் கூறும்படி இப்பாடல் அமைந்துள்ளது.

**முருகக்கடவுள் நோன்பின் சிறப்பு**

முன் ஒரு காலத்தில் முசுகுந்தச் சக்கரவர்த்தி முருகக் கடவுள் நோன்பினைக் கடைபிடித்துச் சிறப்படைந்தான். முகுந்தன் வசிட்டரை வணங்கி போற்றி முருகக் கடவுளுக்குரிய நோன்புகள் எல்லாவற்றையும் எனக்குக் கூறியருளும் என்று வேண்டிக் கொண்டான். வசிட்டர் கூறுவார். ஏழு கிழமை நோன்புகளுக்குள்ளே வெள்ளிக்கிழமை நோன்பானது (சுக்கிர வார விரதம்) முருகக் கடவுளுடைய நோன்பாகும். அதனைக் கடைப்பிடித்தவர்கள் உள்ளத்தில் எண்ணியவற்றையெல்லாம் எண்ணியவாறே அடைவார்கள். பகீரதன் என்னும் அரசன் வெள்ளிக்கிழமை நோன்பை மேற்கொண்டு கோரன் என்னும் அரக்கனை வென்று இழந்துபோன தன்னுடைய அரசுரிமையைத் திரும்பப் பெற்றான்.

**வெள்ளிக்கிழமை நோன்பு**

வெள்ளிக்கிழமை விரதத்தைத் தொடங்குங்கால் ஐப்பசி முதல் வெள்ளியில் தொடங்குதல் வேண்டும். வைகறையில் எழுந்து புண்ணிய நீராட வேண்டும். நாட் கடன்களை முறையாக முடித்து முருகனைத் தியானித்தல் வேண்டும். வீட்டில் தூய்மையான ஓர் இடத்தில் நெல்லைப் பரப்பி அதன்மேல் நீர்நிறைந்த வெண்கலத்தை வைத்து மாவிலை தருப்பை, கூர்ச்சம், மாலை,

ஆடை முதலியவற்றால் அலங்கரித்துப் பொன்னால் செய்த முருகன் திருமேனியை வைத்து விதிப்படி வழிபடுதல் வேண்டும். அன்று மாலை முருகன் கோயில் சென்று வழிபாடு செய்தல் வேண்டும். மறுநாள் நீராடி, கடன்களை முடித்துக் கொண்டு கும்பத்தையும் முருகனையும் பூசித்து அவைகளை அந்தணர்களுக்குத் தானம் செய்தல் வேண்டும். பின் சிவனடியார்களுடன் இருந்த ஒன்பது நாழிகைக்குள் உணவு கொள்ளுதல் வேண்டும். என இதற்குரிய விதிமுறைகள் வகுக்கப்பட்டுள்ளன. ஐப்பசி மாதத்திற்கு விதிவிலக்காக சித்திரை மாதம் முதல் வெள்ளிக்கிழமை தொடங்கி இவ்விரதத்தை மேற்கொள்ளுதலும் ஆகும். நோன்புகளுக்குள்ளே வெள்ளிக்கிழமை நோன்பானது (சுக்கிரவார விரதம்) முருகக் கடவுளுடைய நோன்பாகும். அதனைக் கடைப்பிடித்தவர்கள் உள்ளத்தில் எண்ணியவற்றை எல்லாம் எண்ணியவாறே அடைவார்கள். பகீரதன் என்னும் அரசன் வெள்ளிக்கிழமை நோன்பை மேற்கொண்டு கோரன் என்னும் அரக்கனை வென்று இழந்து போன தன்னுடைய அரசுரிமையைத் திரும்பப் பெற்றான்.

**கார்த்திகை நோன்பு**

கார்த்திகை விரதத்தை மேற்கொள்வோர் கார்த்திகை நாள்மீனுக்கு முன்னுள்ள பரணிப் பொழுதில் பின்னுள்ள உரோகினி நாளிலும் பகல் பொழுதில் மட்டுமே உணவு கொள்ளுதல் வேண்டும். பரணி நாளில் மேற்கொள்ளும் நிலை கார்த்திகை விரதத்தைத் தொடங்குவதற்குரிய நிலையாகும். பின்னுள்ள உரோகினி நாள் விரதம் கார்த்திகை விரதத்தை நிறைவு செய்வதற்குரிய நிலையாகவும் கருதப்படுகின்றது. கட்டிய ஆடையுடன் குளத்தில் மூழ்கி வெள்ளை ஆடை உடுத்தி குற்றமற்ற நியமங்களைச் செய்து முருகனுடைய பாதங்களைச் சென்னி மேற்கொண்டு செவ்வேளுக்கு வழிபாடாற்றுதல் வேண்டும். கையினால் குவித்து எடுக்கப்பட்ட தண்ணீரை ஒரு கை அளவு உண்டு தருப்பைப் புல்லால் செய்யப்பட்ட பாயில்படுத்து புணர்ச்சி தவிர்த்து முருகனை நினைத்து உறங்காதிருத்தல் வேண்டும். உரோகிணி நாளில் முருகனுக்கு வழிபாடு முதலியவற்றை முடித்து அடியார்களுடன் உணவு கொள்ளுதல் வேண்டும். உரோகினி நாளன்று பகலில் தூங்கக்கூடாது என்பது செய்யப்படுகின்ற உண்ணா நோன்பு பெரிய பதங்களைப் பெறுவதற்கு வழிகோலுகின்றது.

இவ்விரதத்தை நாரத முனிவர் மேற்கொண்டு முனிவர்களின் மேலான பதவியைப் பெற்றார். அந்தணன் ஒருவன் மேற்கொண்டு மறுமன்னனாகி உலகாண்டான். மற்றொரு மறையவன் நோற்று நினைத்த யாவும் நிறைவேற்றப் பெற்றான் என்று கூறப்பட்டுள்ளது.

**சஷ்டி விரதம்**

ஐப்பசி மாதம் தொடங்கிய ஆறாம் நாள் முருகன் சூரனை வென்ற நாள். அந்நாளைச் சஷ்டி நாள் எனக் குறிப்பிடுவர். ஐப்பசி அமாவாசையில் தொடங்கி ஆறுநாள் அளவும் நோற்கின்ற நோன்பாக இது கருதப்படுகின்றது.

ஆறு நாட்களிலும் புண்ணிய நீராடி இரண்டு ஆடைகளை உடுத்திக் காலையிலும் மாலையிலும் சந்திகளில் வணக்கம் செய்து திருமேனி வடிவிலும் கும்ப வடிவிலும் முருகனை ஆவாகணம் செய்து வழிபடுதல் வேண்டும். இரவில் வெல்லக் கட்டியோடு நெய் சேர்த்து சமைக்கப்பட்ட மோதகத்தை முருகனுக்கு நிவேதித்து விதிப்படி வழிபாடு செய்து முருகனின் திருப்புகழைக் கேட்டு சிறிதளவு நீர் அருந்தி உண்ணா நோன்பு இருத்தல் வேண்டும். ஏழாம் நாள் பகலில் உணவு கொள்ளுதல் வேண்டும். இவ்விரதத்தை இயற்றுவதற்குக் கால அளவுகள் குறிப்பிடப்படவில்லை. எனவே ஆயட்காலம் முழுமையும் பின்பற்றப் படவேண்டிய உண்ணா நோன்பாக இதனைக் கருதலாம்.

ஐப்பசி மாதத்தில் மேற்கொள்ளப்படுகின்ற இவ்வுணர்வை நோன்பு அமாவாசை பிரதமை தொடங்கி சூரனை வெல்லும் திருவிழா ஈறாக பலராலும் இன்றும் மேற்கொள்ளப்படுகின்றது என்பது கருத்தில் கொள்ளத்தக்கது. இவ்விரதத்தை மேற்கொள்ளுகின்றவர்கள் ஆறு நாட்களிலும் உண்ணாமலே இருந்து நோன்பை முடிக்கின்றனர். ஒருசிலர் ஆறு நாட்களிலும் பகலில் ஒருவேளை உணவு கொண்டு இந்நோன்பை மேற்கொள்கின்றனர். பல குடும்பங்களில் தீபாவளித் திருநாள் அன்றைக்கு மறுநாள் நோன்பு நோற்றல் என்னும் ஒருவகையான சடங்கினைச் செய்கின்றனர். இது ஆறு நாட்களிலும் நோன்பு மேற்கொள்வதற்குரிய தொடக்கமாக இருந்திருக்க வேண்டும் பின்னாட்களில் ஒருவேளை மட்டுமே நோன்பு நாளாகக் கருதி நடைமுறைப்படுத்தியிருத்தல் வேண்டும்.

## முடிவுரை

முருகன் சேயோன் என இயற்கைப் பெயரால் அழைக்கப்பெற்றான். காடு, சோலை, ஆற்றிடைக்குறை, சதுக்கம், சந்தி போன்ற இடங்கள் முருகன் உறையும் இடங்களாகக் குறிக்கப்பட்டுள்ளமை கருத்தில் கொள்ளத்தக்கது. தேவர்கள் இறைவனை வழிபட்ட நிலையைக் கொண்டு வழிபாட்டு முறைகள் வகுக்கப்பட்டுள்ளன. வழிபாட்டில் நாள் வழிபாடு, சிறப்பு வழிபாடு, திருக்குடமுழுக்கு என மூன்று வகை விதிமுறைகளை ஆகம நூல்கள் வகுத்துரைத்துள்ளன. வழிபாட்டுக்குரிய காலங்களாக பன்னிரண்டு காலங்கள் சுட்டப்படுகின்றன. எனினும் நடைமுறையில் அவ்வளவு காலங்கள் வழிபாடு செய்யப் பெறவில்லை என்பது கருத்தில் கொள்ளத்தக்கது.

# முருகனின் அழகுக்கலைகள்

முனைவர் மு. ருக்மணி
தமிழ்த்துறை, உதவிப்பேராசிரியர்
கொங்குநாடு கலை அறிவியல் கல்லூரி
கோயம்புத்தூர்-29

ஆய கலைகள் 64 என்பார்கள் .இக்கலைகள் மனித வாழ்வை மேன்மையடைச் செய்கின்றன. கலை என்பது உணர்வின் வெளிப்பாடு அது உணர்வை வெளிப்படுத்துவதுடன் பிறருக்கும் அவ்வுணர்வை ஏற்படுத்தும் தன்மையுடையது. இவ்வுலகில் வழங்கும் கலைகளைக் கவின் கலைகள் என்றும் பயன்கலை என்றும் பகுத்துக் கூறுவர். கண்ணையும் செவியையும் கவர்ந்து அவற்றின் வாயிலாக மனதிற்கு இன்பம் ஊட்டும் கலைகள் கவின்கலைகளாகும். மக்கள் வாழ்க்கைக்குப் பயன்படும் பல திறப்பட்ட பொருள்களை ஆக்கிக் கொள்வதற்குச் சாதனமாகிய கலைகள் பயன்கலைகள் என்று தற்காலத்தில் வகைப்படுத்தி வைத்துள்ளனர். பண்டைய மக்கள் தங்களின் வாழ்வியலோடு இணைந்து அனைத்தையுமே கலை என்று கொண்டிருந்தனர்.தமிழர் பண்பாட்டில் ஆடை அணிகலன்களும் அலங்காரங்களும் அழகு கலைகளாகும். அதன்கீழ் அழகுபடுத்துதல் என்னும் கலை சிறப்பிடம் பெறுகிறது. அவ்வாறிருப்பின் நக்கீரர் தனது திருமுருகாற்றுப்படையில் கந்தருவர் மற்றும் குறிஞ்சி நில மக்களின் செயல்பாடுகளைக் கூறுகையில் அவர் தம் ஆடை அணிகலன் அலங்காரங்களை மிகச்சிறப்பான முறையில் எடுத்தியம்புகிறார்.

## குறிஞ்சி நில மக்களின் கலைகள்

குறிஞ்சி நில மக்களின் தெய்வமான முருகனை அடிப்படையாக கொண்டே அவர்களின் கலைகள் விளங்குகின்றன. அவற்றை இரண்டு வகைப்படுத்துவர். ஒன்று கூத்து வகையாகவும் மற்றொன்று ஆட்ட வகையாகவும் காணப்படுகின்றது. அவை வள்ளிக்கூத்து, வெறியாடல் என்று அழைக்கப்படுகின்றன. சங்க காலத்திலும் சங்க மருவிய காலத்திலும் நாடகமானது கூத்து மற்றும் ஆடல் என்றே அழைக்கப்பட்டது. நாடகம் நடத்தப்படும் போது மேற்கொள்ளப்பெற்ற உத்தி முறையே இவ்வகைப் பெயர் மாற்றத்திற்கான காரணமாகும்.

## குறிஞ்சி நிலம் தெய்வம்

முதற்பொருள்களுள் ஒன்றாகிய நிலம் பற்றித் தொல்காப்பியம்,

*“மாயோன் மேய காடு உறை உலகமும்*
*சேயோன் மேய மை வரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*

*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையான் சொல்லவும் படுமே"* (தொல் பொருள் -5)

என்று கூறுகின்றது மலையும் மலை சார்ந்த இடங்களும் குறிஞ்சி நிலம் என்றும் இந்நிலத்திற்குரிய கடவுள் முருகன் என்றும் மேற்கண்ட நூற்பாவின் மூலம் அறிய முடிகின்றது.

**வள்ளிக்கூத்து**

நாடகம் நடைபெறும் போது நாடகக் கதை நிகழ்வினை முக்கியப் படுத்தி நடித்துக் காட்டுகையில் அது கூத்து என்றழைக்கப்பட்டது. கூத்து என்பது கதையைத் தழுவி அமைந்து வரும். புராணக் கதையைக் தழுவி நாடகமாக ஆடிய கூத்துகளில் வள்ளிக் கூத்து என்பது மிகப் பழைமையானது ஆகும். முருகக் கடவுள் குறிஞ்சி நிலத்தில் வாழ்ந்த வள்ளியை மணந்த வரலாறே வள்ளிக்கூத்தின் முக்கியக் கருவாகும். ஆநிரைகளைக் கவரச் செல்லும் பொழுது நாட்டிற்கு வளமும் வெற்றியும் தருமாறு வள்ளிக் கூத்தினை வீரர்கள் ஆடுவர். வாடும் இயல்புடைய வள்ளிச் செடியிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்டுவதற்காக தொல்காப்பியம்

*"வாடா வள்ளி வயவர் ஏத்திய"* (தொல்.பொருள்.63)

என்று கூறியுள்ளது. மேலும்,

*"வாடா வள்ளியின் வளம் பல தருஉம்நாடு"* (பெரும்.370)

என்று பெரும்பாணாற்றுப்படைப் பாடல் வரியும் விளக்குகின்றது. முருகக் கடவுளின் அழகினையும் திறனையும் வெற்றி வேண்டியும் அவனைப் போற்றும் விதமாக குறிஞ்சி நில மக்களால் வள்ளிக்கூத்து என்னும் கலை நிகழ்த்தப்பட்டு பரவலாக வளர்ந்து வந்துள்ளது என்பதனை இதன் மூலம் அறிய முடிகின்றது.

**வெறியாடல்**

ஒரு நாடகம் நடைபெறும் போது நடன அசைவுகளை முதன்மைப் படுத்தி நிகழ்த்தும் போது அது ஆடல் என்று அழைக்கப்படுகின்றது. வெறியாடல் என்பதே ஆடல் வடிவத்திற்கென அறியக் கிடைக்கும் முதல் வடிவம் என்பர். வெறியாடல் என்ற சொல்லே ஆடலின் வேகத்தினை முதன்மைப்படுத்துவதைக் காணலாம்.வெறியாடல் என்னும் ஆடல்கலை சங்க காலத்தில் சிறப்புற்று விளங்கியது மலைப்பாங்கான இடங்களில் முருகனது அருள் பெற்றவனாக வேலன் வேகமாக ஆடத்தொடங்குவான். அவன் நோய்களை குறிப்பாக பெண்களுக்கான நோய்களை நீக்கும் வல்லமை பெற்றவனாகக் கருதப்பட்டான்.

*"வேலன் வெறி அயர்களத்து"* (அகம்.114-2)

என வேலன் வெறியாடல் என்னும் ஆடற்கலை குறித்து அகநானூறு குறிப்புத் தருகிறது.

அகம் புறம்

*"வெறி அறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும்"* (தொல்.பொருள்.63)

அகம் புறம் என்ற இரு திணைகளிலும் முருகனுக்கு வெறியாடல் சடங்கு நடத்தப்பட்டுள்ளது என்பதை மேற்கண்ட நூற்பாவின் மூலம் அறியமுடிகின்றது. அகத்தில் வெறியாடலை நடத்தும் வேலன் குறிஞ்சிப் பூவையும் புறத்தில் வெறியாடலை நிகழ்த்தும் வேலன் காந்தள் பூவையும் சூடுவது மரபு என்பர். சங்க இலக்கியத்தில் காணப்படும் பெருவழக்கு வெறியாடல் ஆகும் தலைவி காதல் வயப்பட்டு தன்னிலை மறந்து இருத்தலைத் தாய் தன் பெண் மீது ஏதோ தெய்வம் உறைந்து விட்டதாகத் தவறாக நினைத்து விடுகிறாள். தன் மகளைப் பிடித்தக் காதல் நோயைப் பேய் அல்லது தெய்வம் பற்றியதாகக் கருதி விடுகிறாள். ஒரு தவறான புரிதல் சார்ந்த சடங்கு முறையே வெறியாடல் ஆகும்.இது பற்றிக் குறுந்தொகையின் 111. 263 பாடல்களின் மூலம் அறியலாம்.இச் சடங்கினைக் கட்டுவிச்சியைக் (பெண் பூசாரி)கொண்டோ வேலனைக் (ஆண்பூசாரி)கொண்டோ நிகழ்த்துவர். இந்நிகழ்வின் இறுதியில் பலி கொடுத்து உள்ளனர்.

*"முருகு அயர்ந்து வந்த முதுவாய் வேல!*
*சிறுமறி கொன்று இவள் நறுநுதல் நீவி*
*வணங்கினை கொடுத்தி ஆயின் அணங்கிய*
*விண் தோய்"* (குறுந்தொகை.362)

என்ற பாடலின் வழி அகத்தில் வெறியாடலை அறிய முடிகின்றது.

திருமுருகாற்றுப்படையும் நக்கீரரும்

சங்க இலக்கியத் தொகைநூல்களுள் பத்துப்பாட்டில் முதல் நூலாகவும் சைவசமயத் திருமுறைகளுள் பதினோராம் திருமுறையாகவும் அமைந்தது திருமுருகாற்றுப்படையாகும். அகத்தியரிடம் இலக்கணம் பயின்று சங்கறுக்கும் அந்தணர் குலத்தைச் சேர்ந்த நக்கீரர் மதுரைத் தலைமைப் புலவராக இருந்து இத்திருமுருகாற்றுப் படையினை இயற்றியுள்ளார்.இவர் இறைவன் (சிவன்) பாட்டிலேயே பிழை கண்டு பொறாத திண்ணிய திறம் படைத்தவர். இதனால் இவர் சாபம் பெற்றுத் திருப்பரங்குன்றத் தீர்த்தக்கரையில் தவம் புரிகையில் இடையீடுபட்டு கற்கிமுகி என்னும் பூதத்தால் குகைக்குள் அடைக்கப்படுகிறார்.அங்கே முருகப்பெருமானிடம் காக்கவேண்டி எழுந்ததே திருமுருகு என்பர். இவர் கோபப்பிரசாதம் கைலைபாதி-காளத்திபாதி அந்தாதி முதலிய பிரபந்தங்களையும் பாடியுள்ளார்.

திருமுருகாற்றுப்படையில் ஆடைகள்

*"கோபத்து அன்ன தோயாப்பூந்துகில்"* (திருமுருகு-15)

முருகன் ஆட்சி செய்யக்கூடிய குறிஞ்சி நிலத்தில் சூரர மகளிரான தேவமகளிர் ஆடிப்பாடுகின்றனர். அவர்தம் ஆடை இந்திரக் கோபப் பூச்சியின் செம்மை

நிறமுடையது (தோயாப் பூந்துகில் என்றமையான் சாயம் தோய்க்கப் பெறாத மெல்லியல் உடைய ஆடை என்றறிக. சூரர மகளிருக்குப் பின்னாக நக்கீரர் கந்தருவர் ஆடையைப் பற்றிக் குறிப்பிடுகையில் சிறிதும் அப்பழுக்கில்லாத தூய ஆடை அணிந்ததாகக் குறிப்பிடுகிறார். நக்கீரர் பெருமான் பழமுதிர் சோலையின் பூசாரிச்சியாக இருக்கக்கூடிய குறமகளின் ஆடை அமைப்பைப்பற்றி இருவேறுபட்ட அதாவது ஒன்றோடு ஒன்று தொடர்பில்லா நிறங்களையுடைய ஆடைகளை அக்குறமகள் அணிந்திருப்பதாகக் குறிப்பிடுகிறார்.

**அணிகலன்கள்**

*"கிண்கிணி கவைஇய ஒண்செஞ் சீறடி*
*கணைக்கால் வாங்கிய நுசுப்பின் பணைத்தோள்*
*கோபத்து அன்ன தோயாப் பூந்துகில்*
*பல்காசு நிரைத்த சில்காழ் அல்குல்"* (திருமுருகு.13-16)

சூரர மகளிர் ஆடிப்பாடுகின்ற பொழுது அவர்களது அடிகள் அழகானதாகவும் சிவந்தாககவும் ஒளிவீசுகின்றன.

*"ஐவேறு உருவின் செய்வினை முற்றிய*
*முடியொடு விளங்கிய முரண்மிகு திருமணி*
*மின் உறழ் இமைப்பின் சென்னி பொற்ப*
*நகைதாழ்பு துயல் வருஉம் வகைஅமை பொலங்குழை"*
(திருமுருகு. 83-86)

முருகனின் திருச்சீரலைவாய் என்னும் படைவீட்டில் கோலப்பொலிவைக் கூறும் பொழுது அவை வெவ்வேறு உருவத்தில் ஐவகை கைத்தொழில் நுட்பம் நிரம்ப ஐந்து அடுக்குகளையுடையதாகக் குறிப்பிடுகிறது. திருமுருகாற்றுப்படை முருகனின் மடிதனில் இருக்கும் இவ்வைந்து மணிகளும் வானத்தில் இருக்கும் மின்னலைப்போலப் பொலிவூட்டக் கூடியவைகளாகும் அதே போல முருகப்பெருமானின் காதுமடல்களில் மிகப்பெரிய குழைகளால் செய்யப்பட்ட பல்வகை மணிகள் இருக்கின்றன. இவை சந்திரனை விட்டுப் பிரியாத விண்மீன்களைப் போன்ற பொலிவுமிக்கவையாகும். அதேபோல நக்கீரர் முருகனின் தோள் அழகைப் பதிவுசெய்யும் பொழுது சிவந்த மார்பின் ரேகைகள் மீது ஒளிபொருந்திய மாலைகளும் முத்தும் பொருத்தமாக அமைந்திருப்பதாகப் பதிவுசெய்கிறார். (ஆரம் தாழ்ந்த அம்பகட்டு மார்பின் திருமுருகு.104) அதேபோல முருகப்பெருமானின் கைகள் சிவன் கொண்டிருக்கும் முகத்திற்கு ஏற்ற வளைகள் நழுவி விழக்கூடிய கைகளாகவும் போர்முனையில் வெற்றியை எதிர்நோக்கிக் களப்பூசை செய்யக் காத்திருக்கும் கைகளாகவும் (கீழ் வீழத் தொடியொரு மீமிசைக்கோட்ப .114) இருப்பதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

**அலங்காரங்கள்**

*"விரல் உளர்ப்பு அவிழ்ந்த வேறுபடு நறுங்கால்*
*குண்டு சுனை பூத்த வண்டு படு கண்ணி*

*இணைந்த கோதை அணைந்த கூந்தல்"* (திருமுருகு.198-200)

முருகனை வணங்கக் கூட்டமாக வரும் பெண்கள் ஆழமான சுனைகளில் உள்ள நீர்ப்பூக்களை மலரும் முன்பாக எடுத்து அதன் இதழ்களைத் தன் விரல்களால் மலரச்செய்து அதனை ஓர் கண்ணியாகக் கட்டியுள்ளனர். இம்மலர்கள் வெவ்வேறு வகையான வண்டுகள் மொய்க்கும் நன்மை கொண்டவைகளாகும். இதனையே இணைத்த கோதை என்னும் சொற்றொடர் குறிப்பிடுகிறது.

*"பைங்கொடி நறைக்காய் இடை இடுபு வேலன்*
*அம் பொதிப் புட்டில் விரைஇக் குளவியொடு*
*வெண் கூதாளம் தொடுத்த கண்ணியன்*
*நறுஞ்சாந்து அணிந்த கேழ்கிளர் மார்பில்"* (திருமுருகு190-193)

குறிஞ்சி நிலத்தில் வாழும் முருகனின் தலைக்குக் கண்ணி தயாரிக்கப் பெறுகிறது. பச்சிலைக்கொடி மணம் பொருந்திய நறைக்காய் (சாதிக்காய்) பண்டங்கள் பொதிந்து வைக்கும் புட்டிலைப் போன்ற தக்கோலக்காய் காட்டுமல்லிகை வெண்ணிறமுடைய கூதாள மலர் முதலியவைகளை இணைத்துக் கண்ணியைக் கட்டுகின்றனர். அக்குன்றத்து வேடுவமக்கள் மார்பில் மணம் கமழும் சந்தனத்தைப் பூசியுள்ளனர் அப்பொழுது அதன் நிறம் கிளர்ந்து மின்னுகிறது.(திருமுருகு-24)அதோடு அம்மக்கள் தங்கள் நெற்றியை அலங்கரிக்கத் தேவையான வண்ணத்தோடு ஐவ்வாதைக் கலந்து பயன்படுத்துகின்றனர்.

முடிவுரை

குறிஞ்சி நில மக்களின் முழு முதற் கடவுளான முருகனின் திறமைகளையும் அழகினையும் செயல்பாடுகளையும் போற்றுவதற்கு வள்ளிக்கூத்துப் பயன்படுகின்றது. அது போன்று முருகனின் ஆலய பூசாரியான வேலன் அணங்கு மற்றும் சூரர பிடித்த பெண்களை முருகனின் வேலைக் கையில் கொண்டு அவர்களை அமைதிப்படுத்த வெறியாடல் ஆடினாள். குறிஞ்சி நில மக்களின் வழிபாட்டோடு தொடர்பு உடையதாக அவர்களின் கலைகள் காணப்படுகின்றன. பொதுவாக முருகு என்ற சொல்லே அழகு எனப் பொருள் படுவதாகும் ஆகையால் திருமுருகாற்றுப்படையில் சொல்லப்பட்ட ஆடை அணிகலன்களும் அலங்காரங்களும் அழகிற்கு அழகு சேர்ப்பவையாக அமைந்துள்ளன. இதில் திருமுருகாற்றுப்படையின் ஆசிரியரான நக்கீரர் குறிஞ்சி நில மக்களின் ஆடை அணிகலன்களையும் ஸ்ரீ முருகப்பெருமானின் ஆடை அணிகலன்களையும் எளிமைத் தன்மையின் கீழ் ஒன்றுபடுத்திக் காட்டுவது குறிப்பிடத்தக்கதாகிறது.

# முருகனைப் போற்றும் அருணகிரியார்

வே. ரேகா
முனைவர் பட்ட ஆய்வாளர்
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

அருணகிரிநாதருடைய பெற்றோர் பற்றிய குறிப்புகள் தெளிவாகத் தெரியவில்லை. கி.பி 15 ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர் இவருடைய தந்தை பெயர் அறியவில்லை, தாயார் பெயர் முத்தம்மை என்றும் கூறுவர். வேளாளர் குலத்தில் பிறந்தவர். இவர் ஊழ்வினை காரணமாக செல்வத்தை எல்லாம் பரத்தையர்களிடம் இழந்தார். தமக்கையர் இவர் செய்கையை வெறுக்கவே இவர் மனம் நொந்து உயிர்விடத் துணிந்தார். அருணைக் கோயிலின் வடபால் உள்ள கோபுரத்தின் மேல் ஏறிநின்று குதித்து உயிர்விடத் துணிந்தார். முருகன் குருவடிவாகத் தோன்றி கையில் தாங்கிப் பிடித்துக் கொண்டார். முருகனின் காட்சியைக் கண்டு சிலிர்த்து நிற்க முருகன் நாதன் எனும் பட்டத்தையளித்து அருணகிரிநாத எனப் பெயரிட்டு அழைத்தார். பின்னர் ஆறெழுத்து மந்திரத்தை இவர் நாவில் எழுதிவிட்டு மறைந்தார். சும்மா இரு சொல்லற என்ற உபதேசத்தைக் கூறிவிட்டு முருகன் மறைந்தார்.

முருகன் தன்னைப் பற்றிப் பாடுக எனக் கேட்ட பொழுது நான் எப்படிப் பாடுவேன் எனத் தயங்கி நிற்க, *முத்தைத்தரு பத்தித் திருநகை* என்ற அடியை எடுத்துக் கொடுத்தார். திருவண்ணாமலையிலேயே தவ நிலையில் இருக்கும் பொருட்டு ஒருநாள் அண்ணாமலையார் நின்துயர் ஒழிக உண்ணாமலை அம்மையார் நின் பிறப்பொழிக என்று அருள் வழங்கினர்.

திருவண்ணாமலைப் பகுதியில் அப்போது ஆண்ட மன்னன் பிரபுடதேவ மகராஜன் இதுவரை வாதுக்கு அழைத்தவன் சம்பந்தாண்டான். போட்டி இறைவனைக் கண்முன் காட்சிதர பாடி வெற்றி பெற வேண்டும். தோற்றவரை விட்டுச் சென்றுவிட வேண்டும். கம்பந்தாண்டன் தேவியை வேண்டிப் பாடினான். அருணகிரிநாதர் முருகனை வேண்டிப் பாடினனார். அருணகிரிநாதர் பாடியபோது முருகன் ஒருகல் கம்பத்திடை மயில் மீது காட்சி தந்தார். அத்தரிசனம் காட்டிய இடத்தினைக் கம்பத்திளையனார் என்று அண்ணாமலையில் போற்றி அழைக்கப்படுகிறது.

## பாததரிசனம் கிடைத்த இடம்

அருணகிரிநாதருக்கு முருகனின் பாத தரிசனம் கிடைத்த திருத்தலம் சுவாமிமலை. அருணகிரிநாதர் படிக்காசு பெற்ற தலம் சென்னிமலை. அருணகிரி நாதர் முருகனிடமிருந்து ஜெபமாலை பெற்ற திருத்தலம் பழனி. சும்மா இரு சொல்லற என்ற உபதேசமும் பெற்றார் முருகன். குழந்தை வடிவில்

அருணகிரிநாதருக்கும் காட்சி தந்த இடம் திருச்செந்தூர். வில்லிப்புத்தூராரோடு வாதிடும் பொழுது ஆசு கவியாக அருணகிரிநாதர் பாடிய நூல் கந்தரந்தாதி. கந்தரந்தாதியில் வரும் திதத்த என்ற செய்யுளுக்குப் பொருள் கூற முடியாமல் வில்லிப்புத்தூரார் தோற்றார். அருணகிரிநாதர் வில்லிப்புத்தூராரின் காதை அறுக்காமல் விட்டுவிட்டார். மேலும் இவ்வழக்கத்தை விட்டுவிடும்படி செய்தார். வில்லிப்புத்தூரார் தன்கையில் இருந்த குறடை வீசி எறிந்தார். இச்செயலால் எல்லோரும் அருணகிரிநாதரைக் கருணைக்கு அருணகிரி என்று புகழ்ந்தனர்.

முருகன் தன் தேவியர்களுடன் மயில்மீது அமர்ந்து அருணகிரி நாதருக்குக் காட்சியளித்த தலம் திருத்தணி. மன்னன் பிரபுதேவராஜனின் கண்ணொளி குறைந்திருந்த நேரத்தில் *சம்பந்தாண்டான்* என்பவன் சூழ்ச்சியால் அருணகிரிநாதர் முயன்றால் விண்ணுலகக் கற்பக மலரைக் கொண்டு வந்து உங்களுக்குப் பார்வை கொடுக்க முடியும் என்றான். விண்ணுலகம் செல்ல அருணகிரிநாதர் கிளி வடிவம் பெற்றார். கற்பக மலரைக் (பாரிஜாத மலர்) கொண்டு வருவதற்குள் இவர் உடல் எரிக்கப்பட்டு விடுகிறது. அருணகிரிநாதர் கிளி வடிவில் திருத்தணியில் முருகன் தணிகை நாதன் கையில் தங்கிவிட்டார். அருணகிரிநாதரை *ஐயா* அருணகிரி அப்பா, உனைப் போல மெய்யாக ஒருசொல் விளம்பினவர் யார் என்று கூறியவர் தாயுமானவர்.

அருணகிரிநாதரின் சிறப்புப் பெயர்கள்

1. சார்மபௌண்டிம கவி
2. அஷ்டபாஷா பரமேஸ்வரர்
3. சந்தப் பாவலப் பெருமான்
4. நாற்கவிராஜன்
5. முத்தமிழ் அரசர்
6. நவரச நாவலர்
7. சந்தக்கவித் தலைவர்
8. தாளச் செல்வர்
9. இசைஞானியார்
10. திருப்புகழ் பாவகை ஆதிகர்த்தா

அருணகிரிநாதர் எழுதியுள்ள நூல்கள்

1. திருப்புகழ்
2. திருவகுப்பு (மதுரைத்தலத்தின் பாடியது)
3. கந்தரந்தாதி (வில்லிபுத்துரதை வெல்லப் பாடியது)
4. கந்தரநுபூதி (5 பாடல்கள்) (மாத்ருகா மந்திரங்கள்)
5. கந்தர் அலங்காரம் (100 பாடல்கள்) (திருவாசகம் போன்றது)
6. வேல் விருத்தம்
7. முயில் விருத்தம் (12 பாடல்கள் மிகுதியான வடசொற்கலப்பு)
8. சேவல் விருத்தம் (12 பாடல்கள்)
9. திருவெழுக் கூற்றிருக்கை

அருணகிரிநாதருக்கு முருகன் அ்டமி சித்திகளை வழங்கிய இடம் - விராலிமலை. முருகன் அருணகிரிநாதரை நோக்கித் தன்மீது *திருப்புகழ்*

*பாடுக* என்று கேட்டுக் கொண்டதால இவர் பாடிய பாடல்களில் திருப்புகழ் முதன்மையானது. அருணகிரிநாதர் முதலில் பாடிய திருப்புகழ் பாடப்பட்டது திருவண்ணாமலை.

**திருவகுப்பு**

அருணகிரிநாதர் மதுரைத் தலத்தில் முருகனை நினைத்துப் பாடிய பாடல் திருவகுப்பு. திருவகுப்பு நூல், சீர்பாத வகுப்பு முதல் சிவலோக வகுப்பு ஈறாக 18 வகுப்புகளாகப் பாடப்பட்டுள்ளது.

**மயில் விருத்தம்**

செங்கழுநீர் மலர்கள் மிகுதியாக உடையதெனத் திருத்தணிக்குக் *கல்லாரகிரி என்று பெயர். திருத்தணி முருகப்பெருமானுக்குச்* செங்கல்வராயர் என்று பெயர்.

**யானைகள் மூன்று வகைப்படும்**

1. காட்டில் பிறந்தது - வனசரம்
2. மலைகளில் பிறந்தது - கிரிசரம்
3. ஆற்றங்கரைகளில் பிறந்தது - நதிசரம்

சேவல் விருத்தம் 12 பாடல்களைக் கொண்டுள்ளது. (1+11) ஒன்பதாம் பாடலில் முருகனின் அறுபடை வீடுகளைக் படுபவன் - முருகன். அருணகிரிநாதர் ஒப்பற்ற தமிழ்ப் புலவன் என்று யாரை அழைக்கின்றார் முருகன்.

முத்தமிழ் அரசு என்று போற்றப்படுவர் யார் - அருணகிரிநாதர்.
முத்தமிழப் புலவர் என்று போற்றப்பட்டவர் - அருணகிரிநாதர்.
தமிழ் முனிவன் என்று அழைக்கப்பட்டவர் - அகத்தியர்.

**அருணகிரிநாதரின் நாற்கவிப்புலமை**

1. வித்தாரகவி - திருப்புகழ்
2. மதுரகவி - சந்தப்பாடல்
3. சித்திரக்கவி - சித்தரக் கவிரைகளைப்படைத்தவர்
4. ஆசுகவி - திருப்புகழ் கந்தரந்தாதி

**முடிவுரை**

அருணகிரியார் வேளாண் குலத்தில் பிறந்தவர். இவர் ஊழ்வினை காரணமாக செல்வத்தையெல்லாம் பரத்தையர்களிடம் இழந்தார். தமக்கையர் இவர் செய்கையை வெறுக்கவே இவர் மனம் நொந்து உயிர்விடத் துணிந்தார். அப்பொழுது முருகன் குரு வடிவாகத் தோன்றி கையில் தாங்கிப் பிடித்துக் கொண்டார். முருகனின் காட்சியைக் கண்டு சிலிர்த்து நிற்க முருகநாதன் என்னும் பட்டத்தை அளித்து அருணகிரிநாதர் எனப் பெயரிட்டு அழைத்தார். இவ்வாறாக அருணகிரிநாதர் முருகனிடம் பெற்ற தரிசன சிறப்புகளையும் அவர் எழுதிய நூல்களின் சிறப்புகளையும் சொல்வதே இக்கட்டுரையில் கண்ட முடிபாகும்.

# தமிழ்க் கடவுள் முருகன்

முனைவர் க. லதா,
இணைப்பேராசிரியர்,
தமிழ் உயராய்வு மையம்,
பாத்திமா கல்லூரி, மதுரை.

தமிழரின் தனிப்பெருங்கடவுள் முருகன். தொன்மைத் தமிழுடன் முருகக் கடவுளின் காலமும் ஒப்ப வைத்து எண்ணத்தக்கது. முருகு, முருகியல் என்னும் சொற்கள் அழகு மற்றும் அழகியல் சார்ந்தது எனக் கூறப்பட்டாலும் சங்க இலக்கியம் வலிமை, சீற்றம், சினம், அழித்தல் எனப் பொருள் தருகிறது. எனவே முருகன் என்னும் சொல்லுக்கு வீரமிக்கவன், சீற்றமுடையவன், வலிமையுடையவன், அழிப்பவன், சிதைப்பவன் என்று பொருள் கொள்ள வேண்டும். ஏனெனில்,

*“புலிக்கணத்தன்ன நாய்த்தொடர்வீட்டு*
*முருகன் அன்ன சீற்றத்துக் கருந்திறல்*
*எந்தையும் இல்லன் ஆக”* (அகம் : 158)

என்ற தொடர்களும்,

*“முருகன் சீற்றத்துருகெழு குரிசி*
*தாய்வயிற் றிருந்து தாயமெய்தி”* *(பொருநர் : 131-132)*

*என்ற அடிகளும்,*

*“கார்நறுங் கடம்பின் பாசிலைத் தெரியல்*
*சூர்நவை முருகன் சுற்றத் தன்ன”* (புறம் : 23)

என்ற புறநானூற்று வரிகளும் முருகக் கடவுளைச் சீற்றம் கொண்டவன் என்றே சித்திரிக்கின்றன. அத்துடன் முருகன் போரில் சிறந்தவன் வெற்றிவாகை சூடுபவன் என்பதையும் அறியமுடிகிறது. இதனை,

*“அடியொதுங்கிப் பிற்பெயராப்*
*படையோர்க்கு முருகு அயர*
*அமர் கடக்கும் வியன் தானைத்*
*தென்னவர் பெயரிய துன்னருந்துப்பின்”* (மதுரைக்காஞ்சி 37-40)

என்ற தொடர்களும்,

*“முருகுறழப் பகைத்தலைச் சென்று*
*அகல்விசும்பின் ஆர்ப்பிமிழ”* (மதுரை.: 181-182)

என்ற தொடர்களும் உணர்த்தியமைகின்றன. எண்ணியதைத், தொடங்கியதை முடிக்கின்ற மன்னவர்களைப் புலவர்களும்,

*"முருகொத்தீயே முன்னியது முடித்தலின்"* (புறம் : 56)

என்று பாராட்டிப் பாடியுள்ளனர். பரிபாடலிலும், 'காய் கடவுள் சேய்' என்ற தொடர் காய்கின்ற (சினக்கின்ற) என்ற பொருளையே தருகிறது.

முருகன் என்ற பெயருக்கான காரணத்தை நோக்கினும் அது சினப்பவன் அழிப்பவன் எனும் பொருளையே தந்துநிற்கிறது. முருகன் என்ற பெயரின் வேர்ச்சொல் முரு என்கிறார் பி.எல். சாமி. (சங்க நூல்களில் முருகன், ப. 12)

*"ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி"*
*"மைந்துடை மல்லன் மதவலி முருக்கி"*
*"ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்நின்று"* (புறம். 18, 80, 262)

போன்ற புறநானூற்றுத் தொடர்களில் இடம்பெறும் 'முருக்கி' எனும் சொல் அழித்தல், சிதைத்தல், வெல்லுதல் என்ற பொருளில் வருவதைக் காணமுடிகிறது. அதுபோல, 'பொருந்தா மன்னர் அருஞ்சமம் முருக்கி' என்னும் தகடூர் யாத்திரை தொடரும்,

*"மூவெளியின் முருக்கி முரண்மிகு செல்வனும்"* (154)

என்ற திருமுருகாற்றுப்படையடியும் மேற்சுட்டிய பொருளையே கொண்டமைகிறது. இதன் வழி முருக்குதல் என்னும் வலிமை கொண்ட தெய்வமே தமிழ்க்கடவுள் முருகன் என்பது புலனாகிறது. அகத்தையும் புறத்தையும் (காதல், வீரம்) தம் இரு கண்களெனக் கொண்ட பண்டைத் தமிழர் வணங்கிய கடவுள் முருகன் என்பது அவனுடைய வலிமையை நோக்கியே என்பதும் இங்குக் குறிக்கத்தக்கது.

முருகு என்பது அழகு என்னும் கருத்து பிற்காலத்தில் தோன்றியதே. மேலும் சங்க நூல்களில் ஒருசில பாடல்களில் அச்சொல் நறுமணம் என்ற பொருளிலும் வழங்கியுள்ளது.

*"உருகெழுதிறல் உயர் கோட்டத்து*
*முருகமர் பூ முரண் கிடக்கை*
*வரியணி சுடர் வான் பொய்கை"* (37-39)

என்ற பட்டினப்பாலை தொடர்களிலும்

*"உருவ வெண்மணல் முருகு நாறு தண்பொழில்"* (137)

என்னும் அகநானூற்றடியிலும்,

*"முருகுவாய் முட்டாழை நீண் முகைப் பார்ப்பென்றே"* (46)

என்ற திணைமொழி ஐம்பது நூலில் இடம்பெறும் தொடரிலும்,

*"முருகுவிரி தாழைக் கோட்டு மிசையிருந்து"* (27 : 236)

என்ற சிலப்பதிகார வரியிலும் இடம்பெறும் 'முருகு' எனும் சொல் நறுமணம் என்ற பொருளில் இடம்பெறுகிறது. இதன்வழி இளமை அல்லது அழகு என்ற பொருளில் இச்சொல் சங்கப் பாடல்களில் வழங்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் முருகக்கடவுளை வணங்கிய விதம் குறித்த செய்திகள் திருமுருகாற்றுப்படையில் விரிவாக விளக்கப்படுகின்றன.

*"சிறுதினை மலரொடு விரைஇ மறியறுத்து*
*வாரணக் கொடியொடு வயிற்பட நிறீஇ*
*ஊருர் கொண்ட சீர்கெழு விழவினும்*
.............................................
*கோடுவாய் வைத்துக் கொடுமணி யியக்கி*
*யோடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி*
*வேண்டுநர் வேண்டியாங்கு எய்தினர் வழிபட"* (218-248)

என்று ஏறத்தாழ முப்பதடிகளில் வழிபாடு விளக்கப்படுகிறது.

மதுரைக் காஞ்சியிலும் 'முருகனால் நோய் வந்ததென்று வேலன் கூறி, தான் கூறிய சொற்களால் கேட்டாரை வளைத்துக் கொண்டு, வாத்தியங்கள் முழங்க, தார் மலர்க் குறிஞ்சிப்பூச் சூடி, கடம்பு சூடிய முருகனைத் தன் மெய்க்கண்ணே நிறுத்தி வழிபட்டான்' என்ற செய்தி இடம்பெறுகிறது. இதன்வழி குறிஞ்சி நிலத்தில் மட்டுமின்றி மருத நிலத்திலும் இவ்வழிபாடு இருந்தது என்பதை உணரமுடிகிறது. இவ்வழிபாட்டுக்காக, களம் அமைக்கப்படும் விதம் குறித்து,

*"வேலன் தைஇய வெறியயர் களனும்*
*காடும் காவும் கவின்பெறு துருத்தியும்*
*யாறும் குன்றும் வேறு பல வைப்பும்*
*சதுக்கமும் சந்தியும் புதுப்பூங்கடம்பும்*
*மன்றமும் பொதியிலும் கந்துடை நிலையினும்'*

எனத் திருமுருகாற்றுப்படை விவரிக்கிறது மேலும் முருகனின் அறுமுகங்களும் எவ்வாறு அருளுகின்றன என்பதையும் இந்நூல் பதிவு செய்கிறது.

"ஒருமுகம், இருள் கெடும்படி பல கிரணங்களைத் தோற்றுவித்தது, ஒரு முகம், தன்னிடம் வரம் வேண்டுவோருக்கு வரம் கொடுத்தது. ஒரு முகம், அந்தணருடைய யாகங்களைப் பாதுகாத்தது. ஒரு முகம், வேதங்களிலும் நூல்களிலும் உள்ள பொருள்களை ஆராய்ந்து, இருடிகள் இரட்சையடையும் திசைகளை எல்லாம் விளக்கியது. ஒரு முகம், அசுரர்களை அழித்துக் கள வேள்வியை விரும்பியது. ஒரு முகம், குறமகளான வள்ளியோடு மகிழ்ச்சியைக் காட்டியது." இவ்வாறாக முருகனுடைய அறுமுகங்களைக் குறிப்பிடுகின்றது திருமுருகாற்றுப்படை. மேலும் முருகனுடைய வாகனம் யானை என்ற செய்தியையும் பதிற்றுப்பத்தின் வழி அறியமுடிகிறது.

"சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறு ஊர்ந்தாங்கு" (11 : 5-6)

என்பவை அத்தொடர்கள். 'ஓடாப் பூட்கை பிணிமுகம் வாழ்த்தி (247) என்பது திருமுருகாற்றுப்படைத் தொடர். 'பிணிமுகம்' என்பதற்று 'பட்டத்திற்குரிய யானை' என்று பொருள் கூறி, 'மயிலுமாம்' என்று உரையாசிரியர் கூறுகிறார். எனினும் பதிற்றுப்பத்திலிருந்து பிணிமுகம் என்பது யானை என்பது புலனாகிறது.

அதுபோல முருகக் கடவுள் குடிகொண்ட கோயில்கள் எனத் திருச்செந்தூர் மற்றும் திருப்பரங்குன்றம் முதலிய திருத்தலங்கள் குறிப்பிடப்படுகின்றன. திருச்செந்தூர், செந்தில் என்றும் அலைவாய் என்றும் அழைக்கப்பட்டது. அச்சம் தரும் முருகன் வீற்றிருக்கும் அலைவாய் என்ற பொருள்படும்படி 'நாமனூர் அலைவாய்' என்ற தொடர் சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. அந்துவன் என்னும் புலவன் பாடிய அகநானூற்றுப் பாடலொன்றில் சந்தன மரங்கள் நிறைந்த திருப்பரங்குன்றத்தில் முருகக்கடவுள் வீற்றிருந்தான் என்ற செய்தி இடம்பெற்றுள்ளது. புறநானூற்றிலும் திருச்செந்தூர் 'செந்தில்' என அழைக்கப்படுகிறது.

திருமுருகாற்றுப்படையும் 'செந்திலில்,உழவர் செய்த, ஒலிக்கின்ற ஆரவாரத்தினை அஞ்சி மயில் பறந்து போய்த் தெய்வத்தன்மை வாய்ந்த திருச்சீரலைவாய் வரைப்புக்குள் வந்து தவழ்ந்தது' என்ற செய்தி காணப்படுகிறது. மேற்கண்ட சங்கச் சான்றுகள் வழி தமிழ்க்கடவுள் முருகன் என்பதும் தொல்தமிழரின் கடவுளும் முருகப்பெருமானே என்பதும் முருக வழிபாடு மிகத்தொன்மையான காலத்திலே தோன்றியிருக்க வேண்டும் என்பதும் புலனாகின்றது.

## தமிழர் தம்புசாமிப் பிள்ளையும் பத்துமலை கோயிலும்

கி. லதா,
ஆய்வியல் நிறைஞர்,
அயல்நாட்டுத் தமிழ்க் கல்வித்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 10.

ஆழ்வார்களும், நாயன்மார்களும் தமிழ்நாட்டில் பாடிய பாடல்கள் இந்தியா முழுவதும் பக்தி இலக்கியம் வளர்வதற்குக் காரணமாக அமைந்தன. தமிழ்நாட்டில் பக்தி இலக்கியங்கள் தொன்று தொட்டு இருந்து வருகின்றன. எனினும் இலக்கிய வரலாற்றில் பல்லவர் காலத்தில் தோன்றிய சமய இலக்கியங்களையே பக்தி இலக்கியங்கள் எனக் கூறுகின்றனர். 'நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் ஞான சம்பந்தன்' என்று திருஞான சம்பந்தரும், 'தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன்' என்று திருநாவுக்கரசரும், 'ஏழிசையாய் இசைப்பயனாய் உள்ளவன்' என்று சுந்தரரும் பக்தி இலக்கியங்களில் தமிழோடு தங்களை இணைத்துக்கொண்டு பாடுகின்றனர். அத்தகைய தமிழ் இலக்கியங்களைத் திணையின் அடிப்படையில் வகைப்படுத்தலாம். அவை: குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன. அத்திணையில் குறிஞ்சி நிலப் பகுதியில் இருப்பவர்கள் முருகனை வழிப்பட்டனர். 'சேயோன் மேய மைவரை யுலகமும்' என்பது இங்கு நோக்கத்தக்கது, அதன் அடிப்படையில் முருகனைச் சிலையாக வடித்து கோயிலில் வழிபடத் தொடங்கினர். சிலை எடுத்து வழிபடுவது உலகெங்கும் பரவி வருகிறது. தமிழர்கள் வசிக்கும் இடங்களில் இதனைக் காணலாம். இத்தகைய முருகன் வழிபாடு மலேசியாவிலும் காணப்படுகிறது. மலேசியாவில் உள்ள பத்துமலை முருகன் கோயில் சிறந்த வழிபாட்டுத் தலமாகத் திகழ்கிறது. அவற்றை எடுத்து இயம்புவதே இக்கட்டுரையின் பொருண்மையாகும்.

### முருகு சொல்லாடல்

"முருகு" என்ற சொல் "அழகு" என்ற பொருளில் கையாளப்படுகிறது. இயற்கையின் அழகைக் கண்டு "முருகு" என்றழைத்தனர். மலைப்பகுதியில் வாழ்ந்த மக்கள் "முருகு" என்ற சொல்லாடலைப் பயன்படுத்தினர். முருகு என்பது பலபொருள் குறிக்கும் ஒரு சொல். அவை மணம், இளமை, அழகு என்பதாகும். இந்நான்குப் பொருளையும் உள்ளடக்கி "முருகு" என்றழைத்தனர் தமிழ்மக்கள். மலைப்பகுதியில் வாழ்ந்த மக்கள் பிற நிலங்களுக்கு இடம்பெயரும்போது இத்தகைய பெயரையே கையாண்டனர். இயற்கை அழகையும் செல்வச் செழிப்பையும் ஒருமித்தமாகக் கொண்டு வழிபட "முருகன்" என்ற சொல்லாடலை மேற்கொள்கின்றனர். திரு.வி.க. இதனை, "முருகு அல்லது முருகன்" என்று கூறுவது குறிப்பிடத்தக்கது.

இயற்கையழகு காடாகப் பசுமைக்காட்சி வழங்கியது அவ்வழகை அல்லது முருகைத் தமிழ் மக்கள் திருமால் என்றார்கள், மற்ற நிலக்கடவுள் பெயர்களையும் இவ்வாறே கொள்க. தமிழ் மக்கள் அழகெனும் முருகைப் பொருளாகக் கொண்டதென்றே ஈண்டு கருதற்பாற்று தமிழ் மக்கள் வாழ்வு என்று மலை நிலத்தில் துவங்கப்பட்டதோ அன்று தொட்டு இன்று வரை முருகன் தமிழ் நாட்டுத்தெய்வமாகப் போற்றப்பட்டு வருகின்றான். தமிழ்நாட்டுப் பழங்கடவுள் முருகனே. (திரு.வி.க, முருகன் அல்லது முருகு, ப.30) என்று குறிப்பிடுகிறார். இதன் வழியாகத் தமிழ்நாட்டு மக்கள் கடவுளாக 'முருகனை' வழிப்பட்டனர் என்பது புலனாகிறது. 'முருகு' என்ற சொல்லாடல் முருகன் என்று கையாளப்பட்டதும் இங்கு வெளிப்படுகிறது.

**சங்க இலக்கியத்தில் முருகன்**

சங்க கால மக்களிடம் வழிபாடு குறித்த சிந்தனைகள் காணப்படுகின்றன. தொல்காப்பிய இலக்கணம் இதற்குச் சான்று பகர்கின்றது. "தெய்வம் உணாவே மாமரம் புட்பறை செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ அவ்வகை பிறவுங் கருவென மொழிப" என்ற நூற்பாவிலிருந்து கருப்பொருளாகத் தெய்வங்களையும் குறிப்பிடுவதை அறிய முடிகின்றது. மேலும் "மாயோன் மேய காடுறை உலகமும் சேயோன் மேய மைவரை உலகமும்" என்று திணைசார்ந்து குறிப்பிடும் இடத்திலும் வழிபாட்டுச் சிந்தனை வெளிப்படுகிறது. இதன் அடிப்படையில் நக்கீரனின் திருமுருகாற்றுப்படையும், பரிபாடலில் 5, 6, 9, 10, 17, 18, 19, 21 ஆகிய எண்களைக்கொண்ட பாடல்கள் முருகனைப் பற்றிப் பாடுகின்றன. குறுந்தொகையில்,

*செங்களம் படக்கொன்ற வுணர்த்தேய்த்த*
*செங்கோ லம்பின் செங்கோட்டு யானைக்*
*கழல் தொடிச் சேஎய் குன்றம்*

என்ற பாடலில் முருகனைப் பற்றி பாடியுள்ளனர். இப்பாடலைத் திப்புத்தோளார் என்னும் புலவர் பாடியுள்ளார். நக்கீரர்,

*நெடுவேள் மார்பினாராம் போலச்*
*செவ்வாய் வானத்தீண்டி மீனருந்தும்*

என்று பாடுவதில் 'நெடுவேள் மார்பினராம்' என்று முருகனைக் குறிப்பிடுகிறார். "யாஅம் இரப்பவை பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்" என்பது முருகனை நோக்கி வேண்டுவதாக அமைந்திருக்கிறது. இப்பாடல் பரிபாடலில் இடம் பெற்றுள்ளது.

**முருகனின் வேறு பெயர்கள்**

முருகனுக்கு வேறு பெயர்கள் இலக்கியங்களில் காணப்படுகின்றது. அகநானூறு, ஆற்றுப்படை நூல்கள், பரிபாடல் என அனைத்து இடங்களிலும் இதனை ஆழ்ந்து நோக்கலாம். செவ்வேள், நெடுவேள், விறல்வேள் செய்யோன், சேயோன், நெடியோன், முருகு, முருகன் என்பன அவை. மேலும் தெய்வம்,

இயவுள், கடவுள் என்ற பொதுப்பெயர்களும் காணப்படுகின்றன. கோபாலன் என்பவர், குறிஞ்சிக்கிழவனாக முருகன் கூறப்படுகின்றான். அவன் மயில் ஊர்தி, சேவற்கொடி, வேல் ஆகியவை கொண்டவன், ஆறுமுகன் உடையவன், செந்நிறம் உடையவன், சூரபதுமனைப்போரில் வென்று கருணைக் கடலாகத் திகழ்ந்தவன். (ப.கோபாலன், கந்தபுராணத்தில் பக்தி,ப.22) என்று தம் ஆய்வு நூலில் குறிப்பிடுகின்றார். மேலும் தமிழ்மொழி அகராதி முருகன் என்ற சொல்லுக்கு இளையோன், குமரன், வெறியாட்டாளன் என்று பொருள் தருகிறது.

**கோயில்கள்**

இறைவனிடத்தில் செலுத்தும் அன்பின் மிகுதியை அப்பர் பக்தி என்கிறார். "கரையா நினைந்துருகிக் கண்ணீர் மல்கிக் காதலித்து நின் கழலை ஏந்தும் அன்பர்" என்பதில் பக்தி நிலை தெளிவுப்படுத்தப்படுகிறது. பக்தி என்பது வரம்பில்லா அன்பினால் உண்டாவது (ப.கோபாலன், கந்தபுராணத்தில் பக்திநிலை,ப.77) என்று கோபாலன் குறிப்பிடுகிறார். அதன் அடிப்படையில், பல்லவர் காலத்தில் கலைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. பல்லவர் காலத்தைப் பக்தி இலக்கியக் காலம் எனவும் கூறுவர். பல்லவர் காலத்தில் கோயில்கள் நிரம்பக் கட்டப்பட்டன. மலைகளில் வாழ்ந்த மக்கள் கோயில்கள் கட்ட உருவ வழிபாட்டை மேற்கொண்டனர். இதனைத் தங்கராசு என்பவர், "மிகப் பழமையான காலந்தொட்டே முன்னோர்கள் கானகத்தை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தனர் அப்போது, இறைவனின் உருவங்களை எழுந்தருளச் செய்து வழிபாடு செய்தனர். பின்னர் நாகரீக வளர்ச்சியில் காடு சீர் செய்யப்பட்டு நாடாக்கப்பட்டபின் தெய்வங்களுக்குக் கோயில்கள் அமைத்து வழிபட்டனர்" (தங்கராசு, திருகோயில்கள்,ப.3) என்று கூறுவதிலிருந்து கோயில்கள் உருவாவதற்கான காரணங்களை அறிந்து கொள்ள முடிகிறது. அவ்வையார் தம் பாடல் ஒன்றில் "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று பாடுவதை இங்குப் பொருத்திப் பொருள் கொள்ளலாம்.

**தமிழர் தம்புசாமிப்பிள்ளை**

கயரோகனம் பிள்ளைக்கு மகனாக 1850 ஆம் ஆண்டு சிங்கப்பூரில் பிறந்தார். இவருடைய பெற்றோர் தமிழ்நாட்டிலிருந்து சிங்கப்பூருக்குச் சென்று குடியேறியவர்கள். தம்புசாமிப்பிள்ளை தன்னுடைய கல்வியைச் சிங்கப்பூரில் உள்ள ராபிள்ஸ் கல்லூாயில் பயின்றார். மொழிப்பெயர்ப்பாளராகப் பணிபுரிந்து துணை வழக்குரைஞராகப் பதவி உயர்வு பெற்றார். டேவிட்சன் என்பவருக்கு நெருக்கமானவர் என்பதால் அவருடைய அழைப்பின் பெயரில் 1875 ஆம் ஆண்டு தன்னுடைய 25 ஆம் வயதில் மலாயாவிற்குச் சென்றார். பின்னர் கோலாலம்பூருக்குக் கருவூலத்தின் தலைமைக் கணக்கராகப் பணியை மேற்கொண்டார். ஈயச்சுரங்க உரிமையாளராகவும் அரசாங்க குத்தகையாளராகவும் இருந்துள்ளார். தம்புசாமிப் பிள்ளை மலாயா அரசாங்கத்தால் ஒரு சமுதாய நீதிபதியாக நியமனம் செய்யப்பட்டார். நீதிபதியின் தகுதியுடைய விருதை மலாயா தமிழர்களில் முதன் முதலாகப் பெற்றவர் இவர் என்பது பெருமைக்குரியது. மலாயா ஈயச்சுரங்க

உரிமையாளர்களில் முதல் தமிழரும் இவர்தான். 1880 ஆம் ஆண்டு அரசாங்கப் பணியிலிருந்து விலகிக்கொண்டு சொந்தத் தொழிலை மேற்கொண்டார். ஈயச்சுரங்கத் தொழிலில் நிறுவனம் (New Tin Minning Company) என்ற தொழிலை லோக்இயூ என்பாருடன் இணைந்து தொடங்கினார். சுரங்கத் தொழிலில் மின் கம்பிகளைப் பயன்படுத்திய முதல் தமிழரும் இவர்தான்.

### பத்துமலை கோயில் வரலாறு

தம்புசாமிப்பிள்ளை மலாயா சுதந்திரம் அடைவதற்கு முன்னால் தமிழர்களிடையே உயர்ந்த மதிப்பைப் பெற்றவர். அப்பகுதியில் வசித்த தமிழர்களின் சமுதாய மக்களுக்குத் தலைவராக விளங்கினார். கோலாலம்பூரில் இந்தியர்கள் நிரம்ப குடியேறி இருப்பதை உணர்ந்த தம்புசாமிப் பிள்ளை அங்கு வாழும் தமிழர்களுக்கு ஒரு வழிப்பாட்டுத் தலத்தை உருவாக்க முனைந்தார் (அதன் அடிப்படையில் 1891ஆம் ஆண்டு புகழ்பெற்ற குகைக்கோயிலை உருவாக்கினாா) 1860ஆம் ஆண்டுகளில் பத்துமலை பகுதிகளில் வாழ்ந்த சீனர்கள் காய்கறி பயிரிட்டு வந்தனர். அவர்களுடைய விவசாயத்திற்கு உரம் தேவைப்பட்டது. ஆகவே அவர்கள் பத்துமலைக் குகைகளிலிருந்து வெளவால் சாணத்தைத் தோண்டி எடுத்துப் பயன்படுத்தி வந்துள்ளனர். அதற்கு முன்னர் இந்தக் குகைகளில் தெமுவான் எனும் மலேசியப் பழங்குடியினர் வாழ்ந்து வந்தனர் என்று வரலாற்றுச் சான்றுகள் கூறுகின்றன. 1878ஆம் ஆண்டு தாவரவியலாளர் பத்துமலையைப் பற்றி வெளியுலகத்திற்கு அறிவித்தனர். அதன் பின்னரே தம்புசாமிப்பிள்ளை முருகனுக்குக் கோயில் கட்ட முனைந்தார்.

### பத்துமலை முருகன் கோயில்

மலேசியாவின் தலைநகரமாக கோலாலம்பூர் திகழ்கிறது. இக்கோலாலம்பூரிலிருந்து பதிமூன்று கிலோமீட்டர் வடக்குப் பகுதியில் 'கோம்பாக்' என்ற மாவட்டத்தில் அமைந்துள்ளது இந்தப் பத்துமலை முருகன் கோயில். இது ஒரு குகைகோயில். இந்தக் குகைக்கோயிலின் உள்ளே பல குகைகள் உள்ளன. 'சுண்ணாம்புக் குன்று' என்று இதனை அழைப்பர். இச்சுண்ணாம்புக் குன்றின் அருகில் 'பத்து' என்ற ஆறு ஓடுகிறது. இவ்வாற்றின் பெயரைக்கொண்டே பத்துமலை என்று அழைக்கின்றனர். மலாய் மொழியில் (Sungal Batu) "சுங்கால்பட்டு" என்று கூறுவர். ஆங்கிலத்தில் Batu River என்பார்கள். இச்சுண்ணாம்புக் குன்றுகள் 40 கோடி ஆண்டுகள் பழமை வாய்ந்தவை. ஒரு காலத்தில் ஒற்றையடிப் பாதையில் சென்று மலையின் உச்சியில் இருக்கும் முருகனை வழிபட்டு வந்தனர். 1920 ஆம் ஆண்டு மரக்கட்டைகளால் படிகளை அமைத்து 272 படிகள் கட்டப்பட்டன. இக்குகை கோயில் 100 மீட்டர் உயரத்தில் அமைந்துள்ளது.

### பத்துமலை முருகன் சிலை

முருகனுக்குச் சிலை அமைத்து வழிபாடு செய்வது தமிழர்களிடையே மிகுந்து காணப்படுகிறது. இதனை அறிந்த தம்புசாமிப் பிள்ளை முருகன்

சிலையை அமைக்க ஏற்பாடு செய்தார். தமிழ் நாட்டில் திருவாரூரைச் சேர்ந்த சிற்பி ஆர்.தியாகராஜன் தலைமையில் முருகன் சிலை உருவாக்கப்பட்டது. அவருக்கு உதவியாக பதினான்கு சிற்பிகள் பணிபுரிந்தனர். இந்தச் சிலையை 1550 கன மீட்டர் சிமென்ட்டும் 250டன் எ.்.கு கம்பிகளும், தாய்லாந்திலிருந்து வரவழைக்கப்பட்டு 300லிட்டர் தங்கக் கலவையும் கொண்டு கட்டப்பட்டது. உலகிலேயே உயரமான முருகன் சிலை இதுவாகும். இதன் உயரம் 42.7 மீட்டர், அதாவது 140 அடியாகும்.

**பத்துமலையில் தைப்பூசம்**

முருகனுக்குத் தைப்பூசத்தன்று விழா எடுத்துக் கொண்டாடுவது வழக்கம். தமிழர்கள் தைப்பூசம் தினத்தைக் கொண்டாடுவது குறிப்பிடத்தக்கது. அவ்வகையில் 1891 ஆம் ஆண்டு நிறுவப்பட்ட ஸ்ரீ சுப்ரமணியர் சிலைக்கு 1892 ஆம் ஆண்டிலிருந்து தைப்பூசம் கொண்டாடப்பட்டு வருகிறது. இங்குள்ள தமிழர்கள் மட்டுமல்லாமல் அனைவரும் இத்தைப்பூச திருவிழாவைக் கொண்டாடி மகிழ்கின்றனர். ஆண்டுதோறும் மிகச் சிறப்பாகக் கொண்டாடப்படுகிறது.

**முடிவுரை**

முருகனைத் தமிழ்க்கடவுள் என்று அனைவரும் அழைக்கின்றனர். மலைப்பகுதியில் வசிக்கும் மக்கள் 'முருகு' என்று இயற்கை அழகைக் கண்டு கூறுவர். பின்னாளில் முருகு என்பது முருகன் என்றானது. உருவ வழிபாட்டைக் கொண்டு வழிபடத் தொடங்கியதிலிருந்து முருகனுக்கும் சிலை அமைத்து வழிபட்டனர். இது பரவலாக எங்கும் பரவியது. பெரும்பான்மையான மலைப்பகுதிகளில் முருகனுக்குக் கோயில்கள் கட்டி வழிபட்டனர். அதன் அடிப்படையில் தமிழர்கள் வாழும் கோலாலம்பூரில் பத்துமலை கோயிலும் கட்டப்பட்டது. இது இன்றளவும் தமிழர்களின் அடையாளத்தைப் பறைசாற்றுகிறது. பல்வேறு நாடுகளிலிருந்தும் இம்முருகனைக் காண வருகின்றனர். தமிழ் மொழியை மறந்து வருகின்ற இக்காலக்கட்டத்தில் தமிழுக்கும் தமிழ் மரபிற்கும் மிகச் சிறந்த அடையாளமாகத் தமிழக் கடவுள் முருகன் திகழ்வது பெருமைக்குரியது.

# வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் குன்றக்குடி கலம்பகத்தின் அமைப்பும் சிறப்பும்

சுப. லதா,
முனைவர்ப் பட்ட ஆய்வாளர், தமிழ்த்துறை
குந்தவை நாச்சியார் அரசு மகளிர் கல்லூரி
தஞ்சாவூர்

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும் கவிஞர்களுள் ஒருவர். தமிழ் இலக்கியத்தில் இவர் தொடாத துறையே இல்லை எனலாம். இவர் ஏராளமான சிற்றிலக்கிய வகைகளை இயற்றியுள்ளார். தமிழின் புகழ்சான்ற இலக்கிய வகையுள் ஒன்று கலம்பகம். விருந்தெனும் வனப்பிற்குப் "புதிதாக தொடக்கப்படும் தொடர்நிலைமேற்று" என்றுரை வரைந்த பேராசிரியர், கலம்பகம் முதலியனவும் சொல்லுப' என்று கலம்பகத்தைத் தமிழின் புதுவரவாகச் சுட்டியுரைக்கின்றார். கலம்பக நூல்களுள் நந்திக்கலம்பகம் காலத்தால் முந்தையது. நம்பியாண்டார் நம்பியின் ஆளுடைப்பிள்ளையார் திருக்கலம்பகம், பிள்ளைப்பெருமாள் ஐயங்காரின் திருவரங்கக் கலம்பகம், கந்தசாமி சுவாமிகளின் திருப்பேரூர்க்கலம்பகம் எனக் கலம்பக நூல்கள் 70க்கும் மேற்பட்டுத் தோன்றியுள்ளன. வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளே ஆறு கலம்பக நூல்களைப் பாடியுள்ளார்.

## வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள்

இலக்கிய உலகில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் என்றறியப்பெறும் இந்நூலாசிரியரின் இயற்பெயர் சங்கரலிங்கம். நெல்லை செந்தினாயகம்பிள்ளைக்கும் பேச்சிமுத்தம்மைக்கும் மகனாக அவதரித்த சுவாமிகள் வண்ணயாப்பில் சிறந்ததால் 'வண்ணச்சரபம்' என்னும் முருகக் கடவுளைப் போற்றியதால் 'முருகதாசர்' என்றும் முருகவேள் கடவுளைப் போற்றியதால் முருகதாசர் என்றும் முருகவேள் போன்று கையில் தண்டு கொண்டிருந்ததால் தண்டபாணி சுவாமிகள் என்றும் போற்றப்படுகின்றார். சமயப்பணியும் தமிழ்ப்பணியும் ஒருங்கே பூண்டவர். அறுவகை இலக்கணம், வண்ணத்தியல்பு, அருணகிரிநாதர் புராணம், புலவர் புராணம், குருபரத் தத்துவம், வருக்கக்குறள், அரசாட்சி, ஆங்கிலியர் அந்தாதி, மயிலாசலக் கலம்பகம், திருச்செந்தில் உலா, திருச்செந்தில் அகப்பொருட்கோவை, தமிழலங்காரம், பழனித்திருவாயிரம் முதலான பல நூல்களைப் படைத்தவர்.

## நூலமைப்பு

இந்நூலின் பாயிரப் பகுதி வெண்பா, கட்டளைக் கலித்துறை, அறுசீர் விருத்தம், கலித்தாழிசை, சந்தக்கவி, எண்சீர் விருத்தம் ஆகிய பாடலமைதிகளில் அமைந்துள்ளது. இப்பகுதியில் செந்தமிழ் உயர்வு, வேலைத் துதித்தல், மயிலைத் துதித்தல் ஆகியன இடம்பெற்றுள்ளன.

நூற்பகுதி கலம்பக அமைப்பிற்கேற்ப மயங்கிசைக் கொச்சகக்கலிப்பாவில் தொடங்குகின்றது. தொடர்ந்து வெண்பா, கட்டளைக் கலித்துறை அமைய ஏனைய பாக்களும் விரவியுள்ள இந்நூல் 100 பாடல்களையுடையது. இந்நூற்கண் அமைந்த பாக்கள் கட்டளைக்கலித்துறை, கலிநிலைத்துறை, அறுசீர்க்கழிநெடில், எழுசீர்க்கழிநெடில், எண்சீர்க்கழிநெடில், பதினான்குசீர்க் கழிநெடில், எண்சீர்த் தாழிசை, சந்தக்கவி ஆகிய யாப்பமைதிகளுடன் பாடப்பெற்றுள்ளன. இந்நூல் புயவகுப்பு, மேகவிடு தூது, அம்மானை, மடக்கு, மருட்பா, வண்டுவிடுதூது, பாண், கிள்ளைவிடுதூது, சித்து, இரங்கல், தழை, குறம், மறம், ஊசல், சம்பிரதம், வேனிற்காலம், பனிக்காலம், ஊர், கார்காலம் முதலிய கலம்பக உறுப்புக்களை உடையது.

### முருகனின் சிறப்பு

முருகன் திருக்கரங்களில் பல படைகளிருப்பினும் வேலணிந்த கரமே அன்பர்களுக்குத் துணை. வேலே விளங்கு கையான், வேலும் திருக்கையும் என்று கூறி மகிழ்வார் அருணகிரிநாதர். இத்தகு முருகனின் திருப்புயங்களின் பெருமையைப் புய வகுப்பு எடுத்துக் கூறும். வேல், சூலம் போன்ற ஆயுதங்களைத் தேவர்கட்காகத் தாங்கியிருப்பன; சூரியன் போன்ற ஒளியும் அழகுமுடைய தோளணி பூண்டிருப்பன. பரமனுக்கு உபதேசித்தபோது அவர் சிரத்தின் மீது இருந்தன. நாரதர் வேள்வியில் பலர் அஞ்சிட வந்த ஆட்டினை அடக்கிய பிரம்பினையுடையன. காளியின் சூலம் துணித்த வீரவாகு வணங்க அருள் செய்தன. வயிரவர் போன்ற வீரர் போற்றும் போர் வலிமையுடையன. கருமலை ஒத்த கிரவுஞ்சமும் அரக்கர் பலரும் அழியும்படி போர் புரிந்தன. சிங்கமுகன் கூறியபடி வச்சிரப்படையையேவி அவனுயிரை உண்டன. குவளைபோன்ற கண்ணுள்ள முருகம்மையின் வெட்டுப்பட்ட கைகளை முளைக்கச் செய்தன. பாலை நிலத்திற் பொய்யாமொழிப் புலவருக்காகக் கைத்தடியேந்திச் சென்றன. துதிப்பவர் நாவில் வாணியிருப்பாளென்பதை மறுப்பவரைக் கொல்லத் துணிவன. சைவநெறி இகழ்ந்த சமணர்களை வெல்லும்படி சம்பந்தராய் வந்தபோது தாளமொற்றிப் பாடின என்று முருகனின் சிறப்பை வர்ணித்துள்ளார்

### பதினெண் கண்கள்

முருகன் கண்கள் பன்னிரண்டும் அருள்தருவன. நெற்றிக்கண் ஆறும் அழிவுசெய்வன. ஆகவே அவை திறப்பதில்லை. ஆனால் குன்றக்குடியில் உலா வரும்சமயம் பதினெட்டுக் கண்களையும் திறந்த முருகன் வந்தாலும் திருவருளே பெருகுவதன்றித் தீமை தருவதேயில்லை என்பதால் முருகன் அருள் கோலத்துடன் குன்றக்குடியில் வீற்றிருக்கின்றான் என்பதை உணர்த்துகின்றார்.

### குருவின் விளக்கம்

ஆறுகோடுகள் உள்ள ஆறுமுகக்கண்டிகை மாலை, தண்டு முழுநீற்றுப் பூசிய திருமேனி இவை குருவடிவத்தைக் குறிப்பதாம். மூலவர் சண்முக

மூர்த்தியாயினும் "குருவருவாய்" என்ற கருத்திற் கூறினார் "தவம் புரிவார் தம் கருமம் செய்வார்" என்பதை விட்டுத் தானே பரமென்று உணர்த்தும் திருமேனி முருகனின் குருமூர்த்தம். சும்மா இருசொல் அற என்பது அருணகிரிக்கு அருளிய திருவாக்கு. தெய்வத்தை இகழ்பவரும் குருவை நிந்திக்கமாட்டார். தெய்வமில்லை என்ற நாத்திக நெறியைச் சொல்பவன் அதற்குக் குரு ஆவான். எனவே குருவே இகழ்ச்சிக்கு ஆளாகக் கூடாத பொருள். இதனைச் சுவாமிகள், 'தெய்வமின்றே யென்றெண்ணிச் சிறுமையுறு தீயோரும் வைவதற்குத் துணியாத மகத்தான பெருந் தெய்வம்' என்பதால் அறியலாம்.

"யானெனதென்றும் செருக்கறுப்பான்" என்பது குறட் கருத்தாகும். தானல்லாத உடலைத் தான் என்றும் தனக்கு அந்நியமான உலகப் பொருளைத் தனதென்றும் கொள்ளும் மயக்கநிலை ஆணவம். இது நீங்கி யாவும் இறைவன் ஒருவனே என்றறிவது உண்மைநிலை. இதுவே மெய்யறிவு. இதுவே குருவருளால் அறியக்கூடிய பேரறிவு. இதனை அறிவிக்கும் குருவாய். குன்றக்குடிப்பெருமான் ஆறுமுக வேலவரைக் கண்டு வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் தொழுகின்றார்.

மேகவிடு தூது

கலம்பக உறுப்புக்களில் ஒன்று தூது. இந்நூலில் மேகவிடு தூது இடம்பெற்றுள்ளது. மேகங்களே! எல்லா உயிர்களையும் காக்கும் இயல்புடைய நீங்கள் என்னை மட்டும் தலைவன் பிரிவால் வருந்தக் காண்பது நலமன்று. என்று தலைவி தலைவன் கார்காலத்து வாராமையால் வருந்திக் கூறக்காணலாம். இவை தவிர, கிள்ளை விடுதூது, வண்டு விடு தூது ஆகியனவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. கிளியைக் குறிக்கின்றபோது அருணகிரியையும் நினைந்து போற்றுகின்றார்.

தன்வரலாற்று நிகழ்வு

தாமிரபரணி ஆற்றில் திருக்குறுக்குத்துறைக் கோயிலில் சுவாமிகள் முருகன் காட்சிகாண விரும்பியும் பெறாத காரணத்தால் உச்சியிலிருந்து உருண்டார். உடல் ஊனமின்றி முருகனால் காக்கப்பெற்றார் என்பர். இதனை இந்த நூலிலும் எடுத்துக் கூறுகின்றார்.

இவ்வாறு சிறந்த கலம்பக அமைப்புடனும் யாப்பியல் சிறப்புடனும் விளங்குகின்ற குன்றக்குடிக் கலம்பகம் இலக்கியத்திற்கு இலக்கியமாகவும் பக்தியால் துதிக்க விரும்பும் அடியவர்க்குத் துதி நூலாகவும் ஒருசேர விளங்குகின்றது. தமிழ்க் கவியுலகில் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் படைப்பு நுட்பம், கவியாற்றல் ஆகியவற்றை உணர்ந்துகொள்ளவும் இந்நூல் அருஞ்சான்றாய் விளங்குகின்றது.

# சுப்பிரமணியர் ஞானத்தின் வழி முருகன் வரலாறு

முனைவர் சு. லோகிதா
உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை,
திருமுருகன் கலை மற்றும் அறிவியல் பெண்கள் கல்லூரி,
திருவள்ளூர்.

சித்தர்கள் அனைவரும் சிவபெருமானைத் தம் ஆதி குருவாகவும் ஆதி சித்தனாகவும் வணங்குகிறார்கள். அதே போல் சிவனின் மைந்தன் முருகனையும் சித்தர்கள் தம் குருவாகக் கொண்டு போற்றி ஒழுகுகிறார்கள். போகர் பழனிமலையில் முருகனுக்குச் சிலை சமைத்து, பூசித்து அங்கேயே சமாதிகொண்டதையும் சான்றாகக் கூறலாம். அதேபோல் சித்தர்கள் தம் இலக்கியத்திலும் முருகனைப்போற்றிப் பரவியுள்ளார்கள், அச்சித்த இலக்கியங்களுள் ஒன்றான சுப்பிரமணியர் ஞானம் எனும் நூலின் வழி முருகனின் வரலாற்றினைக் காண்பது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## 1. சுப்பிரமணியர் ஞானம்

சித்தர் பாடல்களின் தொகுதிக்குப் பெரிய ஞானக்கோவை என்று பெயர். இத்தொகுதி பல பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளது. இதில் பிரேமா பிரசுரத்தால் 12ஆம் பதிப்பாக மார்ச் 2004-இல் வெளியிடப்பட்ட ஞானக்கோவையென வழங்கும் சித்தர் பாடல்கள் எனும் நூலில் சித்தர் பாடல் வரிசையில் 20 ஆவதாக அமைவது சுப்பிரமணியர் ஞானம் என்பதாகும். இதை யாத்தவர் யார்? என்பது அறியுமாரில்லை. இதில் சுப்பிரமணியர் என்ற முருகனின் வரலாறு இடம் பெற்றுள்ளது.

### 1.1. முருகனின் தோற்றம்

பராபரத்திலிருந்து ஒலி தோன்றியது. அது பரசிவமானது. அது ஒளி மயமானது. அது சக்தியாகி ஏழுவிதமான உலகைத் தோற்றுவித்தது. அறிவுமயமான சக்திசிவம் அருளினால் தன்னாலே சண்முகனும் கணபதியும் தோன்றினர் என்கிறது சுப்பிரமணியர் ஞானம் இதை,

*'நீதியென்ற அறிவதனால் தானய் நின்று*
*நிறைந்த பரிபூரண நிட்களமுமாகிச்*
*சாதியென்ற சத்திசிவமருள் தன்னாலே*
*சண்முகனும் கணபதியும் தாமுண்டாச்சே"* (1)

என்ற பாடல் வரியால் அறிய இயலுகிறது.

### 1.2. மாங்கனி பெறுதல்

சக்தியும் சிவமும் ஒன்றாகி முருகனையும் கணபதியையும் பார்த்து கிரிவலம் வந்தோனுக்கு மாங்கனியை ஈவேன் என்றார். உடனே முருகன்

மறல் மீது ஏறி கிரிவலம் சென்றான். கணபதி ஆலோசித்து 'மேருமலையே நீர் தாம்! என்று கூறி சிவனுமையாளைச் சுற்றிவந்து கனியை வாங்கி ருசித்தான். அவ்வேளை மயில்வீரனான முருகன் எதிரில் வந்தான். அவனின் தவநிலை கண்டு அவனுக்கும் மாங்கனி ஒன்றை ஈந்தான் எனச் சுப்பிரமணியர் ஞானம் குறிப்பிடுகிறது.

சுப்பிரமணியர் ஞானம் குறிப்பிடும் இம்மாங்கனி கதையானது பிற இலக்கியங்களில் குறிக்கப்படும் மாங்கனி கதையிலிருந்து வேறுபட்டு காணப்படுகின்றது. மேலும் இது யோகம் சார்ந்த மறைபொருளுடனும் அமைந்துள்ளது.

**1. மாங்கனி – உள்நாக்கு :** சித்தர்கள் பரிபாசையில் மாங்கனி என்பது உள்நாக்கைக் குறிப்பிடுவது ஆகும். (அது மாங்கனி போன்ற அமைப்பில் இருப்பது கவனிக்கத்தக்கது) யோகத்தின் மூலம் அந்நாவுள்ளே அமைந்துள்ள மெய்ஞ்ஞான வாசலைத் திறந்து அதிலிருந்து வரும் சுரபியைப் பருகுவதே அமிர்தம் பருகுவது ஆகும். இதையே குதம்பைச் சித்தரும் தம் கண்ணியில்,

*மாங்காய்ப்பால் உண்டு மலைமேல் இருப்போருக்குத்*
*தேங்காய்ப்பால் குதம்பாய் ஏதுக்கடி* (28)

என வினவியுள்ளார். எனவே சிவனிடமிருந்து கணபதியும் முருகனும் மாங்கனியைப் பெற்றனர் என்பது யோகத்தீட்சை பெற்றனர் என்பதையே குறிக்கிறது எனத் தெளியலாம்.

**2. மயில் - ஒளி :** முருகன் மயிலேறிச் சென்றான் என்பதில் அமைந்துள்ள மயில் என்பது ஒளிநிலையின் குறியீட்டுச் சொல்லாகும். இதை வள்ளலாரின்,

*வானத்தின் மீது மயிலாடக் கண்டேன்*
*மயில் குயிலாச்சுதடி*

என்ற வரிகள் உணர்த்துகின்றன. எனவே முருகன் ஒளிநிலையில் இருந்தான் என்பதை அறியலாம்.

**3. மலை – துரியம் :** முருகனின் அருந்தவ நிலை கண்டு மாங்கனி தந்து மலைக்கு அரசாய் இருந்து வாழ் என இறை வாழ்த்தியதாகச் சுப்பிரமணியர் ஞானம் குறிக்கிறது. இதை,

*வருந்தியே மாங்கனி ஒன்றீந்து நல்ல மகத்தான*
*அண்டரண்ட வரைகள் சுற்றித்*
*திருந்தியே தீர்க்காயுள் பெற்று வாழ்ந்து*
*தீர்க்கமுடன் மலைக்கரசாய் இருந்து வாழே* (5)

என்ற வரிகள் இயம்புகின்றன. இதிலும் மலை என்பது துரிய நிலையைக் குறிப்பது ஆகும். துரியம் என்ற ஆதாரமே யோக நிலையின் உச்சம் ஆகும். இந்த ஆதாரத்தை அடைய முருகனை நாடவேண்டும் என்பதே இதன் மறைபொருள் ஆகும்.

**1.3. அசுரர்களை அழித்தல் :** மயில்வீரனான முருகன் கயிலையைச் சுற்றி வரும் போது அங்கு தவம் செய்த தபோதனர்களான ரிடிகள் முருகனின் அடிபணிந்து 'இங்கு வெகுநாட்கள் தவம் செய்து வாழ்ந்தோமையா தற்போது ராட்சதர்கள் வந்து அலங்கோலம் செய்து துரத்துகின்றனர். அவர்களிடமிருந்து எம் தவத்தைக் காவாய் என வேண்டினர். இதைக் கேட்ட முருகன் மயிலேறி செவ்வேல் கொண்டு தூல சூட்சுமகாரண ருபம் கொண்டு அசுரர்களை அழித்து பின் தவநிலை கொண்டான் எனச் சுப்பிரமணியர் ஞானம் தெரிவிக்கிறது. இதை,

*அறந்தழைக்க வேணுமென்று தூல சூட்சம் அருபம்*
*எனும் காரணமாய் ருபம் கொண்டு*
*நிரந்தரமாய் வந்தபொலா அசுரர் தம்மை*
*நிர்த்தூளி செய்து தவம்நிலை கொண்டானே"* (9)

என்ற பாடல் விளக்குகின்றது.

**1.4. அகத்தியர் சீடராதல் :** அகத்தியர் முருகனைப் பணிந்து "தூல சூட்சும காரணருபம் கொண்டு அசுரர்களைச் சங்காரம் செய்த சண்முகமே – என் குருவே சரணம்' என்றார். அகத்தியரை நோக்கிய முருகன் நீ யார்? என வினவ அதற்கு அகத்தியர் 'உன் திருவடியைப் பூசை செய்யும் சேயன்' என்றார் பின் அகத்தியரின் வேண்டுகோளுக்கினங்க தூலசூட்சும காரண ருபத்தின் உண்மையை உரை செய்தார்.

*செல்லென்று சங்காரம் செய்தாய் அந்தத்*
*திருவுருவாய் நின்ற காரணத்தைக் காட்டி*
*உள்ளென்ற ஆகார தூல சூட்சம் உண்மையென்ற*
*காரணம் உரை செய்வாயே* (18)

என்ற பாடல் அகத்தியரின் வேண்டுகோளை விளக்குகின்றது.

**1.5. அகத்தியருக்கு உபதேசித்தல்:** முருகன் அகத்தியரை மாணவராய் ஏற்றுக்கொண்டு தச தீட்சை, ஆராத தீட்சை, ஆதார சித்தி, சத்தி தியானம், மந்திர தீட்சை ஆகியவற்றைப் போதித்தார்

**1. தச தீட்சை:** மனதைக் குவித்து விண்ணென்று ஊணினால் உள்நாக்கின் மெய்ஞ்ஞான வாசல் திறக்கும். அப்போது வாசியினால் துரியத்தை நோக்கியும், மூலாதாரத்தில் வங்கென்று பூரித்தும், சமாதியில் சிங்கென்று ரேசித்தும் இருப்பது தசதீட்சை என்று முருகன் அகத்தியருக்குப் போதித்தார்.

*உன்னென்று மூலமதில் வங்கென்பூரி உறுதியென்ற*
*சமாதியிலே சிங்கென் வேசி*
*என்றென்றும் இப்படியே கொண்டு நின்றால்*
*ஏகமுள்ள தசதீட்சை உண்மை கேளே* (16)

**2. ஆராத தீட்சை:** சுழுமுனையில் மனம் வைத்து ஓங்ரீங்-அங்-உங் என்று பதினாறு முறை உருவேற்றினால் மூலாதாரம் செயல்படத் துவங்கும் ஓம் நமசிவாய என்றால் பிரம தரிசனம் கிட்டும் இதுவே ஆராத தீட்சை என்று முருகன் அகத்தியருக்குப் போதித்தார்.

*உண்மையுடன் சுழுமுனையில் விண்ணென்று ஊணி*
*உறுதியுடன் ஆராததீட்சை கேளு*
*நன்மையுடன் ஓங்-ரீங்-அங்-உங்கென்று ஓதி*
*நாட்டமுடன் பதினாறாம் உருவே செய்தால்* (17)

**3. ஆதார சித்தி:** சுழுமுனையில் காற்றை வைத்து முதலில் நமசிவாய நம என்றும் பின் நமசிவயநமசி என்றும் சொல்ல வேண்டும். பின் மூச்சுக்காற்றைத் தலைகால் கால் தலையாய் மாற்றி கொண்டு நமசிவய, சிவயநம என்றும் பின் சிவயநம, சிவநம, நமசிவய என்றும் செபிக்க வேண்டும். இவ்வாறு செபித்தால் ஆதாரம் சித்தியாகும் என்று முருகன் அகத்தியருக்குப் போதித்தார்.

*ஆமப்பா நமசிவய சிவயநம என்றும் அதன்பிறகு*
*சிவயநம சிவநம என்றும்*
*ஓமப்பா நமசிவய வென்று மாற உண்மையென்ற*
*ஆதாரம் சித்தியாமே* (18)

**4. சத்தி தியானம்:** சுழுமுனையில் மனதை வைத்து அங்சிங் என்று பதினாறுமுறை உருவேற்றுவது சத்தி தியானம் ஆகும். பஞ்சகர்த்தாள் என்ற சக்தியின் தியானத்தைப் பொதிகை மலையில் செய்து அமிர்தபானத்தைக் கைக்கொள் என அகத்தியருக்கு உபதேசித்தார் முருகன்.

*கருதிமனம் ஒன்றாகிச் சுழியில் நின்று*
*கலக்கமற்ற அமிர்தபானம் கைக்கொள்ளே* (29)

**5. மந்திர தீட்சை:** ஓம் கிலி அங், அங்கி நங், வங்கிலிசிங், சிங்கிலி வங், வங்கிலியங், அங்கிலிமங், மங்கிலிரீங், ரீங்கிலி ஓம், ஓங்கிலி ரீங், ரீங்கிலிமங், மங்கிலி சிங், மங்கிலிங், சிங்கிலி மங், மங்கிலிநங், நங்கிலியங், மங்கிலி ஓம் என்ற மந்திரங்களை உருவேற்றினால் வியாதி இல்லாத நிலைத்த தேகம் பெறலாம் என்று முருகப்பெருமான் அகத்தியருக்கு உபதேசித்தார்.

*நேரப்பா ஓம்கிலிஅங் என்றென்று ஓது நிலையறிந்தே*
*அங்கிலிநங் என்றென்று ஓது* (20)

சுப்பிரமணியர் ஞானம் எனும் 32 பாடல்கள் அடங்கிய சித்தர்நூல் முருகனின் வரலாற்றை மாறுபட்ட கோணத்தில் மறை பொருளுடன் விளக்குகிறது. இவ்வரலாற்றை உணர்ந்து தெளிந்தால் தமிழ்க்கடவுள் முருகனின் சிறப்பினை மேன்மேலும் அறிந்து கொள்ளலாம்.

## சங்க இலக்கியத்தில் முருகன்

வீ. வினோதா
முனைவர்பட்ட ஆய்வாளர்,
ஓலைச்சுவடித்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

சங்கக்காலம் தொடங்கி இக்காலம் வரை தமிழ்நாட்டில் முருக வழிபாடு வழிவழியாக எவ்வாறு பின்பற்றப் பெறுகிறது என்பதனை வரலாற்றுச் சான்றுகளோடும் இலக்கிய மேற்கோள்களுடனும் புராணக் கருத்துகளோடும் ஒப்பு நோக்கத்தக்க ஒன்றாகும். அந்த வகையில் தமிழ் மக்கள் தம் முதன்மைத் தெய்வமாக முருகக் கடவுளை வழிபடுகின்றனர். 'முருகு' என்பதற்கு அழகு, இளமை, ஆற்றல் என்று பல்வேறு பொருள்கள் உண்டு. அழகையும், ஆற்றலையும், இளமையையும் விரும்பியதால்தான் தமிழ் மக்கள் முருகப் பெருமானைத் தம் வழிபடு தெய்வமாகக் கொண்டனர். இவ்வாறு சங்க இலக்கியத்தில் முருகன் பற்றிய தகவல்களை அதிகம் காண முடிகின்றன. இவற்றைப் பின்வரும் கட்டுரையின் வழி அறியலாம்.

தமிழ் மக்கள் தொன்று தொட்டே கடவுள் கொள்கை உடையவராய் வாழ்ந்திருக்கின்றனர் என்பதற்குப் பழைய இலக்கண இலக்கியங்களில் சான்றுகள் பல உள்ளன. தொல்காப்பியம் கருப்பொருள்களுள் முதலாவதாகத் தெய்வத்தையே கூறுகின்றது.

*தெய்வம் உணாவே மாமரம் புட்பறை*
*செய்தி யாழின் பகுதியோடு தொகை,*
*அவ்வகை பிறவுங் கருவென மொழிப*

என்பது அந்நூற்பா. நானிலங்களுக்கும் உரிய தெய்களைப் பற்றியும் தொல்காப்பியம் பின்வருமாறு கூறுகின்றது.

*மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்*
*செல்லிய முறையாற் சொல்லவும் படுமே*

சங்க காலத் தமிழரிடம் கடவுளைப் பற்றிய சிந்தனைகளும் சமயக் கோட்பாடுகளும் சடங்குகளும் எழுந்திருகின்றன. சிலப்பதிகாரத்தில் குன்றக் குரவை முருக வழிப்பாட்டைச் சுட்டுகின்றது. குறிஞ்சிக் கிழவனாக முருகன் கூறப்படுகின்றான். அவன் மயில் ஊர்தி, சேவற் கொடி, வேல் ஆகியவை

கொண்டவன். ஆறுமுகம் உடையவன், செந்நிறம் உடையவன், சூரபதுமனைப் போரில் வென்றும் கருனைக் கடலாகத் திகழ்ந்தவன் கொற்றவையின் மகன் வள்ளியையும் தெய்வயானையும் இருபுறமும் கொண்டவன் என்றெல்லாம் கூறப்படுகின்றான். நக்கீரரின் திருமுருகாற்றுப்படையும் பரிபாடல் 5, 8, 9, 10, 17, 18, 19, 21, ஆகிய எண் கொண்ட எட்டுப் பாடல்களும் முருகனைப் பற்றியே பாடுகின்றன.

*"திருமாற் இருநான்கு செவ்வேட்கு முப்பத்*
*தொரு பாட்டுக் காடுகிழாட் கொன்று மருவினிய*
*வையை யிருபத்தாறு மாமதுரை நான்கென்ப*
*செய்ய பரிபாடல் திறம்"*

என்னும் பழஞ் செய்யுள் பரிபாடல் தொகுக்கப்பெற்ற காலத்தில் எழுபது பாடல்கள் இருந்தன எனச் சுட்டுகின்றது. இப்பொழுது கிடைத்திருப்பன 22 பாடல்களே சங்கப் பாடல்கள் பலவற்றில் முருகனைப் பற்றிய குறிப்புகள் பல வருகின்றன. இம்முருகனுக்குக் கடம்பமாலை அணிவித்து மறியறுத்து வெறியாடிய பூசாரியும் வேலன் எனப்பட்டான்.

*செங்களம் படக்கொன்ற வுணர்த் தேய்த்த*
*செங்கோ லம்பின் செங்கோட்டு யானைக்*
*கழல்தொடி சேஎய் குன்றம்.....*

என்ற குறுந்தொகையின் முதற்பாடலில் திப்புத் தோளார் என்னும் புலவர் முருகப்பெருமானைப் பற்றிய குறிப்பினைப் பேசுகின்றார்.

**முருகன் இயற்கைத் தெய்வம்**

இயற்கையெழில் தெய்வம் முருகன் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த தமிழர் முருகனை இயற்கையிலன் வாயிலாக இனிதறிந்து அவன்றன் மாட்சியை உள்ளுள் உணர்ந்து அனுபவித்தனர். முருகனின் உள்ளங்கவர் திருவுருவை மக்கள் இயற்கைக் காட்சியின் வாயிலாகக் கண்டு மகிழ்ந்தனர். நீலமாக் கடலில் காலையில் எழுஞ் செங்கதிரோன் எழில் மிகு காட்சியைக் கண்டு வந்த பண்டைத் தமிழ்ச் சான்றோர் அக்காட்சியின் வாயிலாக நீலமயில்மீது அமர்ந்து வரும் செந்நிறம் வாய்க்கப்பெற்ற கந்தனை நினையாமல் நினைத்து. வரலாற்றுக்காலம் முதலே வழிபடத் தொடங்கியிருப்பர் இவற்றை திருமுருகாற்றுப்படையில்,

*உலகம் உவப்ப வலன் ஏற்பு திரிதரு*
*பலர்புகழ் ஞாயிறு கடற்கண்டா அங்கு*
*ஓவற இமைக்கும் சேண்விளங் கவிரொளி*

எனக் குறிப்பிடுகின்றார் நக்கீரர். இவர் இளஞாயிற்றினொடு முருகப் பெருமானின் அழகொளியினை ஒப்பிட்டுரைத்துள்ளார். மேலும் காட்சிப் பொருளான செஞ்ஞாயிற்றின் எழில் கொண்டு கருத்துப் பொருளான முருகனின் இளமை,

அழகு, இனிமை, வனப்பு ஆகியவற்றையும் உணர்ந்து அனுபவிக்கத் தூண்டியுள்ளார்.

**தமிழ்க் கடவுள்**

கந்த புராணத்தில் சிறப்பிக்கப்பட்டுள்ள கடவுள் முருகன். தமிழ்க் கடவுள் தந்தை சிவபிரானுக்கும் பிரணவப் பொருளைப் பைந்தமிழில் முருகன் உபதேசித்தான் என்பதை அருணகிரியார் தம் திருப்புகழில்,

*"கொன்றைச் சடையர்க்கு ஒன்றைத் தெரியக்*
*கொஞ்சித் தமிழால் பகர்வோனே"*

எனச் சிறப்புறக்குறிப்பிடுகின்றார் மேலும் அவர்,

*முத்தமிழால் வைதாரையும்*
*வாழவைப்போன் முருகன்*

எனவும் சிறப்பிக்கின்றார். இவ்வாறு சங்க இலக்கியத்தில் பல்வேறு இடங்களில் முருகன் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

**முருகக் கடவுளின் பண்பு நலன்கள்**

ஆறுமுகத்து இறைவனின் பெயர்களே அத்தெய்வத்தின் அரிய நற்பண்புகளைப் புலப்படுத்தும். முருகன் மாசு மருவற்ற குழந்தைகளுக்குக் குழந்தை வேலனாகவும், கலைஞர்களுக்குக் கருனைகூர் முகமாறும் கொண்ட அண்ணலாகவும், மறம் போற்றும் வீரர்களுக்குச் சேனாதிபதியாகவும் மந்திர உபதேசம் பெற விரும்பி வழிபடும் அன்பர்களுக்குச் சுவாமி நாதனாகவும், இல்லற நிலையினருக்கு வள்ளி தெய்வயானையுடன் கூடிய சுப்பிரமணிய சுவாமியாகவும், பற்றற்ற ஞானத் துரவற நிலையினருக்குப் பழனியாண்டவராகவும் விளங்கி அருளிகின்றார். பன்னிரு தடந்தோள் வள்ளல் என்னும் நம்பிக்கை தமிழ் மக்களின் மனதில் வாழையடி வாழையெனக் கால் கொண்டுள்ளது. இன்றைய காலக்கட்டத்திலும் தமிழ் மக்கள் முருகனை வழிபட்டு வருகின்றனர்.

**வேலன் வெறியாட்டு**

வேலன் என்பான் முருகனை வழிபட்டும் அவன் வடிவம் கொண்டும் முருகனுக்கு வழிபாடு செய்வித்துத் தன் மகளின் வேறுபாடு செய்வித்து. தான் மகளின் வேறுபாடு எதனால் ஆயிற்று எனச் செவிலி வினவி நிற்பாள். இதனை வேலன் வெறியாட்டு என்று பண்டைத் தமிழ் நூல்கள் கூறும். இதனைத் தொல்காப்பியரும்,

*வெறியாட்டிடத்து வெருவன் கண்ணும்* (தொல்-களவியல்-20)

என்று குறிப்பிடுகின்றார். இங்ஙனம் களவுக் காலத்தில் தலைவியின் தன்மை அறிய வெறியாட்டு நிகழ்த்துவதுண்டு. இஃது அகப்பொருள் பற்றியது புறப்பொருள் நிலையிலும் வேலன் வெறியாட்டு நிகழும் இவ்வேலன் தன்

வேந்தருக்கு வெற்றி வேண்டித் தெய்வத்தைப் பரவி ஆகுதம் உண்டு. இதனைத் தொல்காப்பியர் 'காந்தள்' என்று குறிப்பர்.

*வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன்*
*வெறியாட்டு அயர்ந்த காந்தளும்* (தொல்-புறத்திணையியல்-5)

வேலன் என்னும் சொல் முருகனைக் குறிக்காது. முருகனை வழிபட்டும் அவன் வடிவங்கொண்டும் இருப்பவனைக் குறித்தே சங்க இலக்கியங்களில் பேசப்படுகிறது. அகப்பொருள் துறையிலும் புறப்பொருள் துறையிலும் வேலன் வெறியாட்டு என்ற நிகழ்வு குறிசொல்லும் (அருள்வாக்கு) நிகழ்வே வெறியாட்டு எனப்படுகிறது. இவ்வாறு சங்க இலக்கியத்தில் முருகனைப் பற்றியத் தகவல்கள் சிறப்பிக்கப்பட்டுள்ளது.

முடிவுரை

இறை உணர்வு என்பது மக்களுடைய வாழ்வில் இயைந்துவிட்ட ஒன்று நீண்ட நெடுங்காலத்திற்கு முன்பிருந்தே மக்கள் தெய்வ வழிபாட்டை மேற்கொண்டுள்ளனர். காலத்தால் முற்கட்ட நிலையில் இயற்கை வழிபாடே முதன்மை பெற்றிருந்தது. தமிழோடும் தமிழர் வாழ்வோடும் ஒனறிவிட்ட தெய்வமாக முருகன் கருதப்படுகிறான்.

முருக வழிபாட்டில் இடம் பெற்றுள்ள காய்திரி மந்திரங்கள் முருகனுக்குரியதாக நடைமுறை வழக்கில் காணப்படுகின்றன. தமிழ்த் தெய்வமாகக் கருதப்படுகின்ற முருகனுக்கு எழுந்த சிற்றிலக்கியங்களும் புராணங்களும் மிகப் பலவாகும்.

முருகனின் தெய்வத் தன்மையைப் புலப்படுத்துவனவாக முருகன் பற்றிய இலக்கியங்கள் விளங்குகின்றன என்பது குறிப்பிடத்தக்கது. இவ்வாறு முருகக் கடவுள் பற்றிய தகவல்கள் தமிழ் இலக்கியங்களின் வாயிலாக நாம் அறியமுடிகின்றது. அந்த வகையில் இன்றைய காலகட்டத்திலும் "முருகன் வழிபாடு" மிகச் சிறந்த முறையில் அனைவராலும் போற்றி வணங்கப்படுவதை அறியலாம்.

# சிலப்பதிகாரத்தில் முருகத் தொன்மம்

க. வெண்ணிலா
முனைவர்பட்ட ஆய்வாளர், அகராதியியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்-10

மாந்தன் விலங்கு நிலையினின்று மாந்த நிலையை எய்திக் குழுவாகத் திரண்டு நின்றபோது மெல்லச் சிந்திக்கத் தொடங்கியதன் வெளிப்பாடே வழிபாடாகும். வழிபாட்டின் தொடக்கம் அச்சமே. மாந்தனின் தொடக்கக் கால வாழ்வு ஆயிரக் கணக்கான அபாயங்களால் சூழப்பட்டிருந்தன. அவற்றிற்கான காரண காரியத் தொடர்புகளைப் புரிந்துகொள்ள முடியாதபோது அவன் தன் சொந்த உடலின் இயக்கத்தையே மாதிரியாகக் கொண்டு ஒவ்வோர் இயற்கைப் பொருளுக்குள்ளும் ஒரு சக்தி இருக்கிறது என்று எண்ணினான். இயற்கையை வழிபட்டால் அது தன்னை ஒன்றும் செய்யாது என்று நம்பினான். நன்மை செய்யும் என்று நம்பினான். அதன் விளைவாகக் காற்று, மலை, மழை, விலங்குகள், பெண் (உதிரப் போக்கு, தாய்மை), ஆன்மா என எவற்றையெல்லாம் கண்டு அஞ்சி வியந்தானோ அவற்றை எல்லாம் வழிபடத் தொடங்கினான். நடுகல் வழிபாடு என்ற வழிபாட்டுத் தொன்மையைக் கொண்டுள்ள சிலப்பதிகாரத்தில் பண்டைத் தமிழர்தம் தலைமுறை வழிபாடான முருகத் தொன்மத்தைச் சிலம்பின்வழிக் காண்பதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## தொன்மை-தொன்மம்

தொன்மை-பழமை, எண்வகை வனப்புகளில் ஒன்று. தொன்றுதொட்டு நடந்து வரும் பழக்கவழக்கங்கள். காலத்தால் மிகவும் முற்பட்டது.

*"வீரன் ஒருவனைத் தொன்மை சுட்டிய வண்மையோன்"* (புறம்.330:7)

எனச் சிறப்பிப்பார் மதுரைக் கணக்காயனார். உயர்ந்த செல்வர் இரப்போர்க்கு ஈயாததால் தொன்மை மாக்கள் (பழைய வண்மையுடைய மாக்கள்) போலப் பின்னும் தம் பெயரை உலகோடு ஒட்டி வாழ்தலை அறியார் (புறம்.165:3-5) இதன்வழித் தொன்மை என்பதைப் பழமை எனக் கருதலாம்.

## தொன்மம்

தொன்மம் என்பது அடிக்கருத்தாகவும் புராணமாகவும் இன்றைய கால கட்டத்தில் வெளிப்படுத்தப்படுகிறது. புராணம் என்பது (*Myth*) என்ற ஆங்கிலச் சொல்லுக்கு இணையாகப் பொருள் கொள்ளப்படுகிறது. கடவுள்கள் பற்றிய நம்பிக்கைகளை நம் புராணங்களாகக் காணலாம். அப்புராணச் செய்திகள் நம்ப முடியாத கதைகளாகக் கருதப்படுகின்றன. இந்தத் தொன்மங்கள் பிற்காலத்தில் இலக்கியங்களுக்கு அடிக்கருத்துக்களாக வழங்கி வருகின்றன.

எ-டு:- அகலிகை கதை, ஒரு முலை இழந்த திருமாவுண்ணி போன்றவை தமிழர் சமய வழிபாட்டில் முருக வழிபாடு இரண்டு தளங்களில் இயங்கியதை அறிய முடிகின்றது.

1. தமிழ் மரபிற்குட்பட்ட முருக வழிபாடு,

2. தமிழ் மரபும் வைதீக ஆரிய மரபும் இணைந்து செறிவுற்ற நிலையில் காணும் முருக வழிபாடாகும். (சுப்பிரமணியன், கந்தன், தெய்வானை திருமணம்)

தமிழ் மரபு முருகக் கூறுகள் கவனத்திற்குரியவை

1. இளமை, காதல் நோய் தருபவன், காதலரைச் சேர்ப்பவன், காதல் நோய் தீர்ப்பவன் - காதற் கடவுள்

2. சீற்றம், வலிமையுடையவன், போர்க்குணம் மிக்கவன் - போர்க்கடவுள்.

என்ற இருவேறு பண்புகளைக் கொண்டு அகக்கடவுளாகவும் புறக்கடவுளாகவும் சித்திரிக்கப்படுகிறான். தமிழர்தம் இலக்கணமான தொல்காப்பியத்தில் திணைப்பகுப்பின் கடவுள்களைக் கூறிய தொல்காப்பியர் சேயோன் என்று முருகனைக் குறிப்பிடுகின்றார்.

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணல் உலகமும்"* (தொல்.951)

வெறியாடல் நிகழ்ச்சியாக,

*"களவு அலராயினும் காமம் மெய்ப்படுப்பினும்*
*அளவுமிகத் தோன்றினும் தலைப்பெய்து காணினும்*
*கட்டினுங் கழங்கினும் வெறியென இருவரும்*
*ஒட்டிய திறத்தாற் செய்திக் கண்ணும்"* (தொல்.பொருள்.113:1-4)

என்று வெறியாட்டு நிகழ்ச்சியின் முருகனை வைத்துப் பின்புலத்தை விளக்குகின்றார். தலைவியின் களவுக் காதல் பலரால் அறியப்பட்டு அலர் உண்டாயினும் காமத்தால் தலைவியின் உடலில் வேறுபாடுகள் தோன்றினாலும் இது முருகனால் வந்தது என்று கட்டுவிச்சி மூலமும் குறிபார்த்து அறிந்து வெறியாட்டத்தை மேற்கொள்கின்றனர்.

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"* (தொல்.புறம்.27)

என்ற நூற்பா சுட்டும் கொடிநிலை, கந்தழி, வள்ளி ஆகிய மூன்றுமே முருக வழிபாட்டோடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது. (சிலம்பு நா.செல்வராசு-19994) முருக வழிபாட்டின் தோற்றம் மீட்டுருவாக்கம்).

சங்க கால ஆட்டங்களில் ஒன்றாகிய குரவையாடல் முருகன் வழிபாட்டோடு தொடர்புடையதாய்க் காணப்படுகிறது. 'குரவை என்றது காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுள் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது' என்று அடியார்க்கு நல்லார் சிலம்பில் விளக்கம் தந்துள்ளார்.

சிலப்பதிகாரத்துக் குன்றக் குரவை மிகத் தெளிவாக முருக வழிபாட்டில் குரவையாடல் இடம்பெறும் பாங்கை விளக்குகிறது.

*"சிறுகுடி யீரே சிறுகுடி யீரே*
*தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே*
*நிறங்கிளர் அருவிப் பறம்பின் தாழ்வரை*
*நறுஞ்சினை வேங்கை நன்னிழற் கீழோர்*
*தெய்வங் கொள்ளுமின் சிறுகுடி யீரே"*

எனத் தொடங்கும் குன்றக் குரவைப் பாடற் பகுதியில் நீராடும் மகளிர்தம் நிகழ்ச்சிகள் இடம்பெற்றுள்ளன. தலைவன் மலைமீது இருந்து கற்களைத் தீண்டி வந்த புதுப்புனலை நான் புலத்தலுக்கு ஏதொன்றும் காரணமில்லை. ஆயின் அப்புதுப்புனலில் ஏனைய மகளிர் நீராடும் போது என் நெஞ்சு நோகிறதே' எனும் அகப்பொருள் வாய்ந்த குரவைப் பாடற்பகுதி இடம் பெற்றுள்ளது. நீராடல் முடிந்த பின் 'முருகவேளை ஏத்திக் குரவை தொடுத்துப் பாடுகம் வா தோழி' என மகளிர் குரவையாடுகின்றனர். குரவைக் கூத்தின் முதற்பகுதி முருகனை வாழ்த்திப் பாடுவதாக அமைந்துள்ளது. அதற்கடுத்த பாட்டுமடை எனும் பகுதி அறத்தொடு நிற்றல் எனும் துறையிலமைந்த பாடல்களை உடையது.

*"இறைவளை நல்லா யிதுநகையா கின்றே*
*கறிவளர் தண்சிலம்பன் செய்தநோய் தீர்க்க*
*அறியாள்மற் றன்னை மலர்கடம்ப னென்றே*
*வெறியாட றான்விரும்பி வேலன் வருகென்றான்"* (சிலம்பு.24:பா.ம.10)

என வெறியாடல் நிகழ்ச்சி கூறப்படுகிறது.

*"வேலனார் வந்து வெறியாடும் வெங்களத்து*
*நீலப் பறவைமே னேரிழை தன்னோடும்*
*ஆலமர் செல்வன் புதல்வன் வரும் வந்தால்*
*மால்வரை வெற்பன் மணவணி வேண்டுதுமே"* (சிலம்பு.24:பா.ம.14)

என்ற பாடல் தவறாக உணர்ந்து நிகழ்த்தப்படுகின்ற வெறியாட்டத்தின்போது 'நேரிழை தன்னொடும் முருகன் தோன்றினால் அவனிடம் தலைவனோடு மணம் கூட வேண்டும்' என்ற தலைவியின் கூற்றை விவரிக்கிறது. குன்றக் குரவையின் முடிவில் தலைவனோடு மணவிழா நேர்ந்ததை எண்ணித் தலைவி மகிழ்ச்சி கொள்வதோடு முடிவடைகிறது.

சிலம்பில் செவ்வேள், வேலன் என்ற பெயர்களால் முருகன் சுட்டப்பட்டுள்ளான். அவன் ஆலமர்ச்செல்வன் புதல்வன் (24.12.4) 'கயிலை நன்மலை இறைமகன்' (24.16.1) 'மலைமகள் மகன் (24.16.1) 'ஆறுமுகன்' (24.17.2), வேலன் (25.25) என்ற பெயர்களில் அழைக்கப்பட்டுள்ளான்.

கடம்ப மலர் மாலை சூடிக் கையில் வேலேந்திச் சேவலைக் கொடியாகவும் மயிலை ஊர்தியாகவும் கொண்டு ஆறுமுகங்களுடன் காட்சி தருபவன் முருகன். குன்றக் குரவை முருகனின் தோற்றத்தை,

*"அணிமுகங்க ளோராறு மீராறு கையும்*
*இணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே*
*பிணிமுகமேற் கொண்டு அவுணர் பீடழியும் வண்ணம்*
*மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே"* (24.8)

எனச் சிலம்பு மொழியும். நீலப்பறவை மேல் நேரிழை த்ன்னோடும்' (24.14.2) என்றதனால் நேரிழையாள் வள்ளியுடன் மயில்மீது அமர்ந்தமையும் 'கோழிச் சேவற் கொடியோன்' (14.10) என்ற தொடரால் சேவற் கொடியினை உடையவன் முருகன் என்பதும் பெறப்படுகிறது. முருகன் தாய்மார் அறுவரின் முலைப்பாலுண்டமை (24.9.2) கிரவுஞ்ச மலையாக நின்ற அரக்கனை முருகன் வென்ற செய்தியைக் 'குருகுபெயர் குன்றம் கொன்றான்' (24.9.4) என்ற தொடரிலும் 'கடல் வயிறு கிழித்து மலை நெஞ்சு பிளந்தாங்கு அவுணரைக் கடந்த' (23.188-189) என்ற அடிகளிலும் முருகன் சூரபத்மனையும் பிற அரக்கர்களையும் வென்றமையைப் 'பண்டொரு நாள் சூர்மாதடிந்த' (24.7.3-4) எனவும் 'அவுணர் பீடழியும்' (24.8.3) எனவும் சிலம்பு குறிப்பிடக் காணலாம். இவற்றான் முருகன் போர்க்கடவுளாகக் காணப்படுகிறார்.

துடிகொட்டி ஆடிய கூத்து துடியாகும். அரக்கர்கள் தம் படைக்கலன்களை இழந்து வருந்தும்போது முருகன் தன் வெண்கொற்றக் குடையைச் சாய்த்து ஆடிய கூத்து குடைக்கூத்தாகும்.

சிலம்பின் மூன்று காண்டத்திலும் முருகனுக்குக் கோயில் இருந்த செய்தி பெறப்படுகிறது.

புகார் - *அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்* (5.170)
மதுரைக்காண்டம் - *'கோழிச் சேவற் கொடியோன் கோட்டமும்'* (14.10)
வஞ்சிக் காண்டம் - *'சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும் ஏரகமும்'* (24.7.1-2)

என்பனவும், முருகனின் படையென வேலுக்குப் புகாரில் கோயிலிருந்ததை 'வேற்கோட்டம்' (9.11) என்ற தொடரும் உணர்த்துகின்றன (சிலம்பில் மக்கள் வாழ்வும் வழிபாடும், ப.112, பெரி.அழகம்மை). முருக வழிபாடானது சிந்துவெளி நாகரிகத்தில் சடங்கு நிலையிலும் சங்க காலத்தில் சடங்குடன் கூடிய கலை நிலையிலும் சிலப்பதிகாரத்தில் மீண்டும் சடங்கு நிலையிலும் காணப்பட்டது.

தொகுப்புரை

1. முருகனின் பிறப்பு, வளர்ப்பு, அழகு, வீரம் முதலிய தொன்மங்கள் காணப்படுகின்றன.
2. முருகன் மகளிரை அணங்கிக் காதல் தருபவனாகவும் அந்நோய் தீர்க்கும் காதற் கடவுளாகவும் காணப்படுவது அகவாழ்க்கை முருகனைக் காட்டுகிறது.
3. அசுரர்களை அழிக்க அவன் கொண்ட வேலும் சூலமும் கோபமும் சிவந்த முகமும் போர்க்கடவுளாகப் புறவாழ்க்கை முருகனைக் காட்டுகிறது.
4. அகம், புறம் இருவாழ்விலும் முருகனைச் சிலப்பதிகாரம் காட்டி முருகத் தொன்மத்தையும் தொன்மையையும் நிலைநாட்டுகிறது.

பார்வை நூல்

1. தொல்காப்பியம்
2. சிலப்பதிகாரம் (ந.மு. வேங்கடசாமிநாட்டார் உரை)

## முருகன் வழிபாட்டில் நாட்டுப்புறக் கூறுகள்

மு. ஜமுனா,
முனைவர் பட்ட ஆய்வாளர்,
இலக்கியத்துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

இறைச் சிந்தனை தமிழர்தம் இலக்கியங்களில் அன்று தொட்டு இன்று வரை காணப்படுவதாகும். தொல்காப்பியத்தில் சேயோன் என்று முருகன் குறிப்பிடப்படுகிறார். சங்கப்பாடல்களில் திருமுருகாற்றுப்படை எனத் தனித்ததோர் ஆற்றுப்படையே முருகன் மீது பாடப்பெற்றதாகும். பரிபாடலில் செவ்வேள் குறித்த பாடல்கள் சில காணப்படுகின்றன. மேலும் புறநானூறு போன்று இலக்கியங்களிலும் உவமையாகக் கூறும் அளவுக்கு முருகப்பெருமானின் புகழ் மக்களிடையே வழங்கப்பட்டிருக்கிறது. முருகொத்தியே முன்னியது முடித்தலின் என்பதால் அறியலாம். காலந்தோறும் தோன்றிய இலக்கியங்கள் சமயங்களின் கருத்தியல்புகளையும் கடவுளர்களையும் தமிழால் இசையோடு பாடிப்பரவி நின்றன. முருகன் வழிபாட்டில் நாட்டுப்புறக்கூறுகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. திருவிழாக்களில் முருகன் வழிபட வரும் மக்களின் வழிபாட்டு முறைகள் உணர்ச்சிப்பூர்வமாக தோன்றுகிறது. மேலும் வழிபட வரும் பக்தர்களின் நம்பிக்கைகள், திருவிழாக் காலங்களில் இடம்பெறும் நிகழ்வுகளில் நாட்டுப்புறக் கூறுகள் பற்றி ஆராயப்படுகின்றன.

### வழிபாட்டில் நம்பிக்கை

மனிதன் தன் வாழ்வின் அனைத்துச் செயல்பாடுகளிலும் குறிப்பாக வழிபாட்டு நிகழ்வுகளில் நம்பிக்கை அடிப்படையில் வாழ்கிறான். கடவுளை வழிபடுவதன் மூலமாகவே நற்பலனைப்பெற இயலும் என்கிற நம்பிக்கை மனிதனை இறைவனுடன் தொடர்பை ஏற்படுத்துகிறது. பழைய வழிமுறைகளைப் பேணுவதுடன் முன்னோர் வாய்மொழிகளைப் பொன்போல் போற்றுவதும், கடைப்பிடிக்கப்பட்டு வருவதை, நாட்டுப்புற மரபுகள் மக்களினம் வாழும் அனைத்து இடங்களிலும் காணமுடிகிறது.

### வழிபாட்டு நிகழ்வுகள்

மொட்டை அடித்தல், காதுகுத்துதல், உருள்வலம் செய்தல், தீபம் ஏற்றுதல், கிரிவலம் வருதல், புனித நதியில் நீராடுதல், தொட்டிக்கட்டுதல், பாதயாத்திரை, அலகு குத்தி வருதல் என நம்பிக்கை தொடர்பான வழிபாட்டு நிகழ்வுகளை முருகன் வழிபாட்டில் காணமுடிகிறது.

நாட்டுப்புற மக்கள் சிலர் முருகப்பெருமானின் ஆலயத்திற்கு வந்து வணங்கிவிட்டு சில வேண்டுதல்களை வைத்துவிட்டு வேண்டுதல்

நிறைவேறியவுடன் நேர்த்திக்கடனைச் செலுத்துகின்றனர். கோயில் படிக்குச் சூடம் ஏற்றி வழிபடுவதுண்டு.

தை மாதத்திலும், பங்குனி மாதத்திலும் மாலை போட்டு விரதம் இருந்து முருகனை வணங்குவது கிராமப்புற மக்களிடையே தொன்றுதொட்டு இருந்து வருகிறது. காக்கின்ற கடவுளுக்கு நன்றி செலுத்துகின்ற முறையாக உருல்வலம் முறை உள்ளது.

கார்த்திகை மாதத்தில் விரதம் இருந்து கார்த்திகை நட்சத்திர முழுநிலவு உதிக்கும் நன்னாளில் தீபவிழா கொண்டாடப்படுகிறது. விளக்கின் ஒளி இருளை நீக்குவது போல மக்கள் தங்கள் வாழ்வில் துன்பம் நீங்கி தீப ஒளிபோல் இன்பமயமாக வாழ்க்கை அமையும் என்று நம்புகின்றனர்.

தங்கள் வேண்டுதல் நிறைவேற அல்லது நிறைவேறியதற்கு, ஆண்களும், பெண்களும் நாக்கில் அலகு குத்திக்கொண்டு முருகனை நாடி வருகின்றனர். காரைக்குடி - தேவகோட்டைப் பகுதிகளிலிருந்தும், கோவை பகுதியிலிருந்தும் வரும் பக்தர்களிடம் இப்பழக்கம் அதிகம் காணப்படுகிறது.

அலகு குத்திக்கொண்டு முருகனை நாடி வரும் பக்தர்களைத் திருவிழாக் காலங்களில் பெரிதும் காணலாம். உடம்பெல்லாம் வேல்களைக் குத்திக் கொண்டு வருவோர்களையும் முருகன் கோவில் வழிபாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றது. அலகு குத்தி வழிபாடு செய்தல் என்பது முன்னைய நாட்டுப்புற மரபாக இருந்து முருகன் வழிபாட்டில் இடம் பெற்றுள்ளது.

சித்திரை மாதத்தில் கடைசி ஏழு நாட்களும் வைகாசி மாதத்தில் முதல் ஏழு நாட்களும் மலையைச் சுற்றி கிரிவீதி வலம் வந்து வழிபாடு செய்தல் முருகன் வழிபாட்டில் தொன்றுதொட்டு இருந்து வருகின்ற நாட்டுப்புற வழக்காகும்.

முருக பக்தர்கள் பாதயாத்திரை செல்வதைப் புனிதமான பயணமாகக் கருதுகிறார்கள். நாம் வாழும் இடத்தில் இருந்து புண்ணியத்தலத்தை நோக்கிச் செல்வதை யாத்திரை எனக் குறிப்பிடுகிறார்கள். பாதயாத்திரை மேற்கொள்கின்ற பக்தர்கள் இறைவன் மீது இருக்கின்ற பக்தியை உடல் வருத்தத்தின் வழியாக வெளிப்படுத்துகின்றனர்.

**திருவிழாக்காலங்களில் நாட்டுப்புறக் கூறுகள்**

முருகன் வழிபாட்டில் திருவிழாக்கள் நடைபெறும் நாட்களில் நாட்டுப்புறக் கூறுகள் தெளிவாகப் புலப்படும். முருகன் வழிபாட்டில் திருவிழாக்களில் தமிழ் ஐப்பசி மாதத்தில் முருகனுக்குக் கந்தர் சஷ்டி திருவிழா முக்கிய இடம் வகிக்கிறது.

இத்திருவிழாவில் சூரன்வதை நிகழ்ச்சி நடைபெறும், இதில் கொடும்பாவி எரித்தல் என்பது நாட்டுப்புற வழக்கமாக விளங்குகிறது. நாட்டுப்புறத்துக் கூத்துக்கலை போன்ற சில பகுதிகளில் நடைபெறும்.

நாட்டுப்புற மரபுகளை உள்வாங்கிய வழிபாட்டு முறையாக இதனைக் காண முடிகிறது.

தைப்பூசத் திருவிழா தைமாதம் பிறந்துவிட்டால் கழுத்தில் உருத்திராட்ச மாலை அணிந்து பாதயாத்திரையாய்த் தோளில் காவடி சுமந்து வருகின்றனர். இவ்விழாவில் மயிலாட்டம், காவடியாட்டம் போன்ற நாட்டுப்புறக் கலைகள் இடம் பெறுகின்றன. இவை வழிபாட்டுடன் தொடர்புடையனவாக இருக்கின்றன. காவடி எடுத்து முருகனை தரிசிக்க வருபவர்கள் காவடியாட்டம் ஆடுவதும் பெருவழக்காக உள்ளது.

திருவிழா நேரங்களில் ஆடப்படும் நாட்டுப்புறக் கலையான காவடியாட்டமும், முருக வழிபாட்டின் பண்டையக் கால எச்சமாக உள்ளது. பால்காவடி எடுக்கும் வழக்கமும் பண்டையக் காலத்து தாந்திரிய வழிபாட்டில் காணப்படுவதாகும். நாட்டுப்புறச் சமயக் கூறுகள் திருவிழாவில் இடம்பெறும் வழிபாட்டோடு நாட்டுப்புறக் கலைகள் உட்பட இன்றும் தொடர்புடையதாக இருக்கின்றன.

முருகன் வழிபாட்டில் வாய்மொழிப் பாடல்களும் வாய்மொழி வழக்காறுகளும் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. காவடிப்பாடல்கள், கும்மிப் பாடல்கள், ஓயிலாட்டப் பாடல்கள் ஆகியன பாடப்பட்டு வருகின்றன. பாத யாத்திரை வரும் பக்தர்கள் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடி வருகின்றனர்.

**முடிவுரை**

முருக வழிபாடு தமிழகத்தில் பழங்காலத்தில் இருந்து இன்று வரை சிறப்புற்று விளங்கி வருகின்றது. நாட்டுப்புறச் சமய வழிபாட்டில் இருந்தே முருக வழிபாடு தோன்றியது என்ற கருத்து ஏற்றுக் கொள்ளக் கூடியதே. நாட்டுப்புற மக்கள் முருகன் வழிபாட்டைத் தங்கள் வாழ்வில் நெறிமுறைகளில் இருந்து பிரிக்க முடியாதவாறு வழிபட்டு வருகின்றனர்.

## மலேசியாவில் அருணகிரிநாதர் விழா

டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பன்
ஈப்போ, மலேசியா

உலகம் உவர்ப்ப என்று சங்கத் தமிழில் திருமுருகாற்றுப்படை பாடி முருகனின் அறுபடை வீடுகளை உலகத் தமிழர்களுக்குச் சங்க காலத்தில் ஆற்றுப்படுத்தினார் நக்கீரர். அவருக்குப் பிறகு முருகனையே முழுமுதல் கடவுளாக முதன்மைப்படுத்தி, அவன் புகழைச் சந்தத் தமிழில் பாடி; வாழையடி வாழை என அடுத்து வந்த முருகனடியார்களுக்கு எல்லாம் முன்னோடியாகத் தாய்வாழையாய்த் திகழுந்தவர் அருணகிரிநாதப் பெருமான்.

### அருணகிரிநாதர் விழாவின் தோற்றம்

இன்றைய நிலையில் மலேசிய நாட்டிலும் அருணகிரிநாதர் காலத்தில் இருந்த நிலையைப் போன்ற ஒரு சூழலில்தான் நம் தமிழர்கள் வாழ்ந்து வருகின்றார்கள். மலேசியாவின் ஆட்சி மொழியாக மலாயும், அதிகாரப்பூர்வச் சமயமாக இஸ்லாமும் இருக்கின்றன. இருப்பினும் அரசாங்கம் மற்ற இனத்தவரின் தாய்மொழி வளர்ச்சிக்கும், சமய நடவடிக்கைகளுக்கும் ஆதரவு அளிப்பதைத் தங்கள் கடப்பாடாகக் கொண்டுள்ளனர். ஆனால் நம் தமிழ் மக்கள் அதைச் சரியாகப் பயன்படுத்துவது இல்லை என்றே சொல்லலாம். சமயத்தைப் பற்றிய புரிதலும், சமய ஒற்றுமையும் குறைவு. சிறுதெய்வ வழிபாடுகள் அதிகம். தமிழ் அதிகம் தெரியாத காரணத்தால் திருமுறைகளும், திருப்புகழும் இளைஞர்களைச் சென்று அடைவதிலும் ஒரு தேக்க நிலை.

சைவ சமயத்தைப் போதிக்கின்றேன் என்று கூறும் ஒரு தரப்பினர், சிவபெருமானே முழு முதற்கடவுள்; முருக வழிபாடு உள்ளிட்ட ஏனைய வழிபாட்டு முறைகள் எல்லாம் சிறுதெய்வ வழிபாட்டில் அடக்கம்; இவை சமயக் குரவர்கள் நால்வரின் கொள்கைக்கு மாறானவை எனும் தவறான கருத்தை இந்துக்களிடையே பரப்பி வருகின்றனர். இதனால் சமயப் பற்றுள்ள சாதாரண மக்களிடையே தாங்கள் பின்பற்றும் வழிபாட்டு முறை சரிதானா என்ற குழப்பம். இந்தக் குழப்பத்தின் காரணமாக பிற சமயங்களை நாடிச் செல்லும் அவலநிலையும் ஏற்பட்டு உள்ளது. இந்த நிலை மாறுவதற்கு ஒரே வழி; அருணகிரிநாதரைப் பற்றிய சமய விழிப்புணர்வைப் பொது மக்களிடையே பரவச் செய்வதற்கு ஒரு இயக்கத்தை உருவாக்க வேண்டும். முருகன் அடியார்களுக்கு வேதம் போன்ற அருணகிரிநாதரின் திருப்புகழையும், ஏனைய முருக பக்தி இலக்கியங்களையும் முருகனடியார்கள் எல்லோரும் அறிந்து, அனுபவித்து, தெளிவுபெற வேண்டும் என்ற நோக்கத்தில் அருணகிரிநாதர் விழா முதன்முதலாக மலேசியாவில் உள்ள ஈப்போ மாநகரில், அருள்மிகு தண்டாயுதபாணி ஆலயத்தில் ஜனவரி 1-ஆம் தேதி 2010-இல் கொண்டாடப்பட்டது.

மலாயாப் பல்கலைக்கழகத்தின் இந்தியவியல் பேராசிரியர் முனைவர் சிங்காரவேலு சச்சிதானந்தம் அவர்களின் சிறப்புச் சொற்பொழிவுடன், டாக்டர் ஜெயபால் வள்ளியப்பன் தலைமையில் திருப்புகழ் விழாவாக இந்த விழா நடைபெற்றது. பேராசிரியர் முனைவர் சிங்காரவேலு எழுதிய கந்தரலங்காரம் - ஆங்கில மொழியாக்கம் என்ற நூல் இந்த விழாவில் வெளியிடப்பட்டது. 2010ஆம் வருடத்திற்கு முன்பு, சித்தியவான் முருகனடியார் மா. திருநாவுக்கரசு அவர்களின் முயற்சியால் சித்தியவான் என்ற சிறியதொரு நகரத்தில் 2004-2005ஆம் ஆண்டுகளில் அருணகிரிநாதர் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. ஆனால் தொடர்ந்து நடத்துவதற்கு முறையான ஓர் அமைப்பு இல்லாத காரணத்தால் சில வருடங்களில் இந்த விழாவைத் தொடர்ந்து நடத்த அவர்களால் இயலவில்லை. இதை உணர்ந்து முருகனடியார் மா. திருநாவுக்கரசு அவர்களின் உந்துதலால் மகப்பேறு நிபுணர் டாக்டர் ஜெயபாலன் வள்ளியப்பனின் பெருமுயற்சியில் 2011-இல் ஈப்போ அருணகிரிநாதர் மன்றம், ஆசிரியர் மணி இரா. மாணிக்கம், திரு. தமிழரசன், திரு. சம்பந்தம் செட்டியார், தொண்டர்மணி ருக்குமணி கிருஷ்ணசாமி போன்ற முருக பக்தர்களின் துணையோடு பதிவு இலாகாவில் முறையாகப் பதிவு செய்யப்பட்டு செயல்படத் தொடங்கியது.

### அருணகிரிநாதர் மன்றத்தின் வளர்ச்சி

சுமார் முப்பது அங்கத்தினர்களைக் கொண்டு 2011-இல் தொடங்கப்பட்ட இந்த மன்றம் இன்றைக்குச் சுமார் 200-க்கும் மேற்பட்ட அங்கத்தினர்களைக் கொண்டு சிறப்பாகச் செயலபட்டு வருகிறது. அருணகிரிநாதர் விழாவிற்காக அழகிய அருணகிரிநாதர் வெண்கல உருவச்சிலை 2012-ஆம் ஆண்டு சுவாமி மலையில் இருந்து நெஞ்சில் வாழும் வாரியர் அவர்களின் சீடர் சென்னையைச் சார்ந்த தவத்திரு வேணுகோபால் சுவாமிகள் மூலமாகத் தருவிக்கப் பெற்றது. மலேசியாவில் ஈப்போ நகரில் வருடா வருடம் ஜனவரி 1ஆம் தேதி நடக்கும் ஈப்போ அருணகிரிநாதர் விழாவில் சிறந்த ஆன்மீகச் சொற்பொழிவாளர்கள் திருப்புகழ் சொற்பொழிவுகள் ஆற்றி உள்ளார்கள். அவர்களில் சென்னையைச் சேர்ந்த பேராசிரியர் முனைவர் சாரதா நம்பி ஆருரன், புதுவை வை.நாராயணசாமி, புதுவை நீதியரசர் முருகபூபதி, வாரியார் சுவாமிகளின் சீடர் இளைய வாரியார் வேணுகோபால் சுவாமிகள் போன்றவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள்.

2013-ஆம் ஆண்டில் இருந்து மதுரையைச் சேர்ந்த பொற்கிழிக் கவிஞர் பேராசிரியர். சொ.சொ.மீ அவர்கள் அருணகிரிநாதர் விழாவில் சிறப்புச் சொற்பொழிவாற்ற தொடர்ந்து வருவதை வழக்கமாக்கிக் கொண்டு உள்ளார்கள். அவர்களுடைய தெவிட்டாத பேச்சு அருணகிரிநாதர் பாடல்களின்பால் மக்களுக்குப் பெரும் விழிப்புணர்வையும், தமிழின் மேல் உள்ள பற்றையும் அதிகப்படுத்தி உள்ளது என்றே கூறலாம். 2010-ஆம் ஆண்டு இருநூறு பேர் கொண்ட கூட்டமாக இருந்த அருணகிரிநாதர் விழா இன்றைக்கு ஆயிரம் பேர் கூடும் ஒரு பெரும் விழாவாக உருமாற்றம் கண்டு

உள்ளது என்றால் அதற்கு சொ.சொ.மீ போன்ற தமிழ் அறிஞர்களுடைய பேச்சும் சிறந்த கலைஞர்களின் திருப்புகழ் இசையும் தான் முக்கிய காரணம் என்பதில் ஐயமில்லை.

ஏழிசை ஏந்தல் ஐதராபாத் சிவா, ஓதுவாமூர்த்தி பொன்.முத்துக்குமரன், சிரவை ஆதின ஓதுவார் முருக. ஜெகன்னாதன், ஈப்போவைச் சேர்ந்த பண்ணிசைமணி பண்பரசி கோவிந்தசாமி சகோதரிகள் திருமதி ஷோபனா ஜெகதீசன் போன்ற மிகச் சிறந்த இசைக் கலைஞர்கள் இந்த விழாவைத் திருப்புகழ் மணம் வீசும் பெருவிழாவாக மாற்றி உள்ளார்கள். சிரவை ஆதின குருமகா சன்னிதானம் 2016-ஆம் ஆண்டு மன்றத்தின் அழைப்பினை ஏற்று அருணை முனிவரின் விழாவிற்குச் சிறப்பு வருகை புரிந்தார்கள். சுவாமிகளின் ஆசியுரையும், ஆலோசனைகளும் மலேசிய முருகனடியார்களின் மனங்களை ஈர்த்தன. 2016-ஆம் ஆண்டு முதல் இன்று வரை ஈப்போ அருணகிரிநாதர் விழா நிகழ்ச்சி நிரலில் முதல் அங்கமும், நிறைவு அங்கமும் சுவாமிகளின் ஆசியுரையும், நிறைவுரையும் அமைவது விழாவிற்குப் பெருமை சேர்க்கும் அருட்கொடைகளாகும்.

முதன் முதலில் மலேசிய மண்ணில் ஆற்றிய ஆசியுரையில் இனி வருங்காலங்களில் மலேசியா எங்கும் அருணகிரிநாதர் விழா சிறப்புற நடைபெற வேண்டும் என்று சுவாமிகள் ஆசி வழங்கினார். அன்னாரின் எண்ணங்களுக்கு ஏற்றவாறு மலேசியாவில் மூன்று நகரங்களில் மட்டுமே நடைபெற்று வந்த இந்த விழா இன்றைக்கு ஏழு நகரங்களில் ஆண்டு தோறும் டிசம்பர் 25-ஆம் தேதி முதல் ஜனவரி 5-ஆம் தேதி வரையில் மிகச் சிறப்பாக நடைபெற்று வருகின்றது. சிரவை ஆதினத் தொடர்பும், தமிழறிஞர் சைவச் செம்மல் சொ.சொ.மீ அவர்களின் வழிகாட்டுதலும், புதுவை மேனாள் சட்டத்துறைச் செயலாளர் வை.நாராயணசாமி அவர்களின் நட்புணர்வும் ஈப்போ அருணகிரிநாதர் மன்றத்தின் வளர்ச்சிக்கு முருகப் பெருமான் அருளிய வரப்பிரசாதம் என்றே சொல்ல வேண்டும்.

**விழா மலரும் முருக பக்தி இலக்கிய வெளியீடுகளும்**

முதலாம் ஆண்டு அருணகிரிநாதர் விழா தொடங்கி சமீபத்தில் நடந்த ஒன்பதாம் ஆண்டு விழா வரை வருடம் ஒரு சிறப்பு மலராக ஒன்பது விழா மலர்கள் வெளிவந்து உள்ளன. மன்றத்தின் செயல்பாடுகள், சிறப்புக் கட்டுரைகள், கவிதைகள் போன்ற பதிவுகள் இந்தச் சிறப்பு மலர்களில் இடம்பெற்று உள்ளன. மலேசியாவிலுள்ள திருவாக்குத் திருபீடம் தவத்திரு பாலயோகி சுவாமிகள்முருக பக்தி இலக்கிய வெளியீடுகள் ஒரு ஞான வேள்வியாக அமைவதற்குப் பல ஆலோசனைகள் வழிகாட்டியுள்ளார்கள். அருணகிரிநாதர் பாடல்களைப் பாமர மக்களும் அறியும் வண்ணம், ஓதுவா மூர்த்திகள் இசையுடன் பாடி, பொற்கிழிக் கவிஞர் சொ.சொ.மீ சுந்தரம் அவர்களின் விளக்கவுரையுடன் கூடிய திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம், காவடிச் சிந்து போன்ற பக்தி இலக்கியங்கள் குறுந்தட்டுகளாக

வெளிவந்து உள்ளன. இது போன்று வருடம் ஒரு முருக பக்திப் பதிப்பு எனும் நோக்கத்தில் பல புத்தகங்கள் மக்களிடையே முருகனின் பன்னிரு திருமுறைகளைப் பரப்புவதற்காக வெளியிடப்பட்டு உள்ளன.

### அமுதம் விடுமுறை கால சமய பண்பாட்டு வகுப்பு

2013-ஆம் ஆண்டு விடுமுறை நாட்களில் மாணவர்கள் நம் சமயம் மற்றும் பண்பாடு பற்றிய அடிப்படை பயற்சிகளைப் பெற வேண்டும் எனும் நோக்கத்தில் சுமார் 30 மாணவர்களுக்குப் பொற்கிழிக் கவிஞர் சொ.சொ.மீ அவர்களைப் பயிற்றுனராகக் கொண்டு ஆறு நாள் விடுமுறைக் கால வகுப்புகள் தொடங்கப்பட்டன. முறையான பாடத் திட்டங்களுடன் இளையோருக்கு ஏற்ற சில பல விளையாட்டு நிகழ்ச்சிகளுடன் நடைபெற்ற இந்தக் காலை - மாலை வகுப்புகள் சிறந்த வரவேற்பைப் பெற்றன. இந்த வகுப்புகளின் சிறப்பான பாடத் திட்டத்தையும், செயல்பாடுகளையும் கண்டு மகிழ்ச்சி அடைந்த பேராக் மாநில முதல்வரின் ஆலோசகர் டத்தோ இளங்கோ வடிவேலு அவர்கள் மாநில அரசின் சார்பில் ஆண்டு தோறும் மானியங்கள் வழங்கி சிறப்பு செய்து வருகின்றார். அந்த வகுப்புகளின் மாணவர் எண்ணிக்கை தற்பொழுது 230-ஆக உயர்ந்து நடுவண் அரசின் (SEDIC) உதவித் தொகையுடன் சிறப்பாக நடந்து வருகின்றது. திருப்புகழ், சமயச் சான்றோர் வரலாறு, நன்னெறிக் கதைகள், விளையாட்டு, சமயக் கல்விச் சுற்றுலா என்று மாணவர்களுக்கு ஏற்ற வகையில் சிறந்த பாடத்திட்டத்துடன் நடைபெற்று வரும் இந்த வகுப்புகளை முன்மாதிரியாகக் கொண்டு கடந்த சில வருடங்களாக மலேசியாவின் மற்ற மற்ற நகரங்களிலும் அத்தகைய வகுப்புகள் நடைபெற்று வருகின்றன.

### தேசிய அளவிலான திருப்புகழ் போட்டி

2016-ஆம் ஆண்டு முதன்முதலாக ஈப்போவில் உள்ள சமய இயக்கங்களின் ஆதரவுடன் நாத ஆராதனை என்ற பெயரில் தேசிய அளவிலான திருப்புகழ் மற்றும் பஜனைப் போட்டி நடத்தப்பட்டது. முதல் பரிசு மலேசிய ரிங்கிட் ஆயிரம் வெள்ளி என்ற முறையில் போட்டியாளர்களைக் கவரும் வகையில் ரொக்கப் பரிசுகளுடன் நடந்த இந்தத் திருப்புகழ் போட்டி ஈராண்டுகளுக்கு ஒருமுறை நடத்தப்படுகிறது.

### மாதாந்திர கந்தரனுபூதி பாராயணமும் சமயச் சொற்பொழிவுகளும்

கடந்த ஏழு வருடங்களாக மாதந்தோறும் நான்காவது வெள்ளிக் கிழமைகளில் ஈப்போ லகாட் ரோடு அருள்மிகு தண்டாயுதபாணி ஆலய மண்டபத்தில் கந்தரனுபூதி பாராயணுமும், இளைஞர்களைக் கவரும் வகையில் பஜனையும், மாதாந்திர சமயச் சொற்பொழிவுகளும் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு மாதமும், ஒரு மெய்யன்பரின் உபயத்துடன் நடைபெறும் இந்த நிகழ்வில் அந்த மாதம் பிறந்த நாள் கொண்டாடும் அன்பர்களின் நலன் வேண்டி சிறப்பு வழிபாடுகளும் செய்யப் படுகின்றன. இதனால் இந்தப் பகுதியில் உள்ள முருகனடியார்கள் ஒன்றுகூடி ஒற்றுமை உணர்வுடன் கருத்துகளைப்

பரிமாறிக் கொள்ளும் ஒரு வாய்ப்பும் நன்றாகவே உருவாகி வருகின்றது. மன்றத்தின் நிகழ்வுகளுக்கெல்லாம் தண்டாயுதபாணி மண்டபத்தை இலவசமாக அளித்து வரும் ஈப்போ நாட்டுக்கோட்டை நகரத்தார் தண்டாயுதபாணி ஆலய நிர்வாகத்தினரின் ஆதரவு அளப்பரியது.

காவடிச் சிந்து மற்றும் பண்பாட்டு நிகழ்வுகள்

அவ்வப்பொழுது தமிழகத்தில் இருந்து வரக் கூடிய இசைக் கலைஞர்களைக் கொண்டு திருப்புகழ் மற்றும் முருகபக்தி இசை நிகழ்ச்சிகள், திருப்புகழ் பட்டறைகள் மன்றத்தினரால் நடத்தப் படுகின்றன.

அரசாங்கத்தின் ஆதரவு

மன்றத்தின் நிர்வாகக் குழுவிற்கும், மாநில - மத்திய அரசாங்கத்திற்கும் உள்ள அணுக்கமான நல்லுறவின் பயனாக, மலேசிய அரசின் ஆதரவுடன் மன்றம் சிறப்புறச் செயல் படுகின்றது. குறிப்பாக இளைஞர் விளையாட்டுத் துறை துணையமைச்சர் டத்தோ சரவணன் அவர்கள்; மாநில முதலமைச்சரின் இந்தியர் விவகாரத் துறை சிறப்பு ஆலோசகர் டத்தோ இளங்கோ வடிவேலு; பிரதமர் துறை இந்தியர் பிரிவின் சிறப்பு அதிகாரி டத்தோ ே.ஜ. ராஜேந்திரன் போன்ற நல்லுள்ளங்கள் மன்றத்தின் செயல்பாடுகளை மனநிறைவுடன் அங்கீகரித்து உள்ளனர். அத்துடன் இந்த நாட்டில் முருக பக்தியையும், தமிழ் மொழியின் பண்பாட்டையும் வளம் பெறச் செய்வதற்கு தங்களால் இயன்ற உதவிகளையும் செய்து வருகின்றார்கள்.

இளைஞர்களின் ஈடுபாடு

அனுபவமிக்க மூத்தோரின் ஆலோசனைகளும், ஆற்றல்மிக்க இளைஞர்களின் செயல்பாடுகளும் சரிசமமாக இருந்தால் தான் ஓர் இயக்கம் வளர்ச்சிப் பாதையை நோக்கிச் செல்ல முடியும். அதற்கு அருணகிரிநாதர் விழா ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. மண்டபம் அலங்கரிப்பது முதல் நன்றியுரை சொல்வது வரை இளைஞர்களின் ஈடுபாடு போற்றுதலுக்கு உரியதாகும். அதற்குக் காரணம் அவர்களைக் கட்டுப் படுத்தாமல் அவர்கள் பாணியில் அவர்களுடன் கைகோர்த்து அனைவரும் ஒரு குழுவாய் இயங்கும் நிர்வாக முறைமையைச் சான்றாகக் கூற வேண்டும். இதைத் தவிர அருணகிரிநாதர் விழா இளைஞர்களின் விழா எனும் உணர்வை ஆரம்பம் முதலே விதைத்து இருப்பதால் விழா நடக்கும் டிசம்பர் 31 - ஜனவரி ஒன்றாம் தேதியை இந்த இளைஞர் அணியினர் எதிர்ப்பார்த்துக் காத்துக் கொண்டு இருப்பார்கள். விழா நிறைவுக்குப் பின் ஒரு நாள் இந்த இளைஞர் பணிப் படையினருக்காகச் சிறப்பு விருந்து நடைபெறுவதும் வழக்கமான நிகழ்வாக மாறிவிட்டது.

ஈப்போவைத் தவிர மற்ற நகரங்களில் அருணகிரிநாதர் விழா

2010-ஆம் ஆண்டில் ஈப்போவில் மட்டும் நடைபெற்ற இந்த விழா, 2013-ஆம் ஆண்டுக்குப் பிறகு கேமரன் மலை மற்றும் கோலகங்சார் போன்ற

நகரங்களிலும் 2015-ஆம் ஆண்டுக்குப் பிறகு பினாங்கு, அலோஸ்டார், கோலாலம்பூர், ஜோகூர் பாரு போன்ற நகரங்களிலும் நடைபெற்றது. இன்று மொத்தம் ஏழு நகரங்களில் டிசம்பர் இறுதி மற்றும் ஜனவரி முதல் வாரத்தை ஒட்டிய நாட்களில் நடந்து வருகின்றது. ஈப்போவில் ஜனவரி 1-ஆம் தேதி மட்டும், திருத்தணி திருப்படி விழாவை நினைவுறுத்தும் வகையில் நடைபெற்ற விழா இன்றைக்கு விடுமுறை கால வகுப்புக்களுடன் ஆரம்பித்து 26 டிசம்பர் முதல் 1-ஆம் தேதி ஜனவரி வரை ஏழு நாள் விழாவாக வளர்ச்சி கண்டுள்ளது. அருணகிரிநாதர் விழா கொண்டாடும் நகரங்களில் அருணகிரிநாதர் மன்றங்களும் அமைக்கப் பெற்றுள்ளன. அந்த மன்றங்கள் எல்லாம் ஒன்று இணைந்து மலேசியா முருக பக்திப் பேரவை என்ற ஒரு குடையின் கீழ் டாக்டர் ஜெயபால வள்ளியப்பன் தலைமையில் 2017-ஆம் ஆண்டு முதல் இயங்கி வருகின்றன. பினாங்கு, ஜொகூர்பாரு அருணகிரிநாதர் மன்றங்களும் ஈப்போவைப் போன்று திருப்புகழ் வகுப்புக்கள், சொற்பொழிவுகள் போன்றவற்றை வருடந்தோறும் சிறப்புற நடத்தி வருகின்றன.

**அடைவுநிலை**

ஒரு காலத்தில் அருணகிரிநாதர் என்ற சொல்லையே அறியாமல் இருந்த இளைஞர்களிடையே இன்றைக்கு அருணகிரிநாதரின் ஒரு திருப்புகழ், கந்தனுபூதி பாடலாவது அறியச் செய்து இருப்பது மன்றத்தின் பெருமைக்குரிய அடைவுநிலை ஆகும். முருக பக்தி இலக்கியங்களைப் பரிமாறிக் கொள்வதற்கும் அவற்றை மென்மேலும் வளர்ப்பதற்கும் நல்ல ஒரு வாய்ப்பை இந்த விழா ஏற்படுத்தித் தந்து இருக்கின்றது. முருக பக்தியின் மூலம் ஒரு சன்மார்க்கத் தெளிவு ஏற்பட்டு உள்ளது. சமய மறுமலர்ச்சிக்கான அடித் தளத்திற்கும் வித்திடப்பட்டு உள்ளது. அந்த வகையில் இந்த அருணகிரிநாதர் விழாவின் மூலமாக உதித்தது தான் முருக பக்திப் பேரவை அமைக்கும் முயற்சி. இந்த முயற்சி தான் அடைவு நிலைகளில் மிக மிக முக்கியமான ஒன்றாகும்.

**நிறைவுரை**

சித்தியவான் எனும் சிற்றூரில் முருகனடியார் மா.திருநாவுக்கரசு அவர்களால் வித்திடப்பட்டது. ஈப்போவில் வேரூன்றியது. மலேசியாவில் பரந்து விரிந்து கிளைகளைப் பரப்பியது. இன்று உலகளாவிய முருகப் பக்தர்களை இணைக்கும் பெருவிழாவாக ஒளிர்கின்றது. அதுதான் மலேசியப் புகழ் அருணகிரிநாதர் விழா. சிரவை ஆதீனம் குருமகா சன்னிதானம் தவத்திரு. குமரகுருபர சுவாமிகளின் ஆசிகளோடு அருணகிரிநாதர் விழா மலேசியாவெங்கும் தலை எடுத்திருப்பது முருகன் அருளின் வெளிப்பாடு. ஜனவரி முதல் தேதி என்றால் முத்தமிழும் முருக பக்தியால் சங்கமிக்கும் பெருவிழா என்று ஈப்போ நகர்வாழ் தமிழ் மக்கள் கொண்டாடும் இந்தத் திருவிழா இன்றைக்கு ஒரு வார காலத்திற்கு மலேசியாவின் பல நகரங்களிலும் கொண்டாடப்படும் தனிப் பெரும் திருப்புகழ் விழாவாகப் பரிணமிக்கின்றது.

## சிதம்பரம் சுவாமிகளின் அடியார் பாங்கு

முனைவர் ம. ஷீலா ஸ்ரீநிவாசன்
உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை
இராஜேஸ்வரி வேதாசலம் அரசு கலைக் கல்லூரி
செங்கல்பட்டு.

வாழ்க்கை ஒரு புரியாத புதிர் என்பர். காலந்தோறும் வாழ்வியல் பேசும் அறிஞர்கள் தோன்றி வழிகாட்டினும் அது புதிராகத்தான் உள்ளது. முன்வளம் எவ்வளவு இருப்பினும் தானே உணர்ந்து அனுபவம் பெற்றால்தான் மனம் தெளிகின்றது. 'பட்டால்தானே புத்தியும் வருகின்றது'. ஆயினும் வாழ்நெறி காட்டுவோர் வாழ்வாலும், மொழிகளாலும் காலந்தோறும் தோன்றிக் கொண்டே வழிகாட்டிக் கொண்டேதான் இருக்கின்றனர். தொடர் நிகழ்வாய் அது நடந்து கொண்டுமிருக்கின்றது. இவ்வகையில் திருப்போரூர் சிதம்பரம் சுவாமிகளைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். மீனாட்சியம்மன் அன்பராய் விளங்கியவர், முருகப் பெருமானின் அடியராய் வாழ்ந்து ஆலயம் புதுப்பித்துத் தம் அனுபவங்களைப் பாக்களாக்கியும் வாழ்ந்தும் காட்டியுள்ளார். இவர் திருப்போரூர் முருகன் மீது பாடியுள்ள 'மாலை' அவரின் வாழ்வியல் பாங்கை, அனுபவ வெளிப்பாட்டை, அடியாராம் பாங்கினை வெளிக்காட்டும் நிலையில் அமைவதால் அதனைப் பற்றி நாமிங்குக் காண்போம்.

### 1. சிதம்பரம் சுவாமிகள்

மதுரையில் பிறந்த சிதம்பரம் சுவாமிகள் கல்வி கேள்விகளில் புலமையராய், மீனாட்சியம்மையின் மீது பக்தியுடையவராக விளங்கினார். இவரின் 'மீனாட்சி கலிவென்பா' சிறந்த தோத்திர நூலாக உள்ளது. குமாரதேவரின் சீடராய இவரிடம் மீனாட்சியம்மை' வடக்கிலுள்ள யுத்தபுரி சென்று குமரன் ஆலயத்தை மீளுருவாக்குக' என்று கட்டளையிட அங்குச் செல்கின்றார். திருக்கழுக்குன்றம் அருகிலுள்ளது திருப்போரூர். இங்குள்ள மலையில் அரக்கர்கள் இருந்து மக்களைத் துன்புறுத்தியதாகவும், முருகப்பெருமான் அங்குள்ள அரக்கர்களை அழித்தமையால் இது யுத்தபுரியாயிற்று என்ப. இங்கு வந்து ஆலயம் தேடியும் கிடைக்கப் பெறாது வழிபட, அங்குள்ள பனங்காட்டில், பெண்பனையொன்றின் அருகில் முருகப்பெருமான் உரு கிடைக்க வழிபடலானார். ஆயின் ஆலயம் காணவில்லை. பின்பொருநாளில் முருகப்பெருமானே குருவின் வடிவில் வந்து காட்ட பழம் ஆலயம் காண்கிறார்; பின் ஆலயத் திருப்பணிகளில் ஈடுபடலானார்; இவ்வூர் பெருமான் மீது சிதம்பரம் சுவாமிகள் பாடிய பாக்களே 'திருப்போரூர் சந்நிதி முறையாம்'. அவற்றுள் 'மாலை'யால் விளங்கலாகும் சிதம்பரம் பிள்ளையின் இறை அடியார் நிலைகள் பற்றி நாமிங்குக் காணலாம்.

### 2. இறைவன்-அடியார் - சிதம்பரம் சுவாமிகள்

சாதாரண மனித வாழ்வினும் அடியார் வாழ்வு இயல்பினின்றும் மாறுபட்டதே. குறிக்கோள் வேறானதால், வாழ்வியல் நோக்குகளும் மாறுபட்டே காணப்படும். ஆயின் வாழ்வினின்றே வாழ்க்கையைக் கற்றுக்கொள்வதால்

வாழ்வின் சாயல் இருக்கும்; ஆயின் இலக்கு வேறாக இருக்கும். இறை வாழ்வில் ஈடுபட முயல்கையில், இறைவனே இலக்காதலின், பக்திப் பாக்களில் இறைவன் பற்றிய கூறுகள் இயல்பாக வருகின்றன. நாம் எங்கு, எதற்காக, ஏன் செல்கிறோம், அதன் விளைவுகள் என்னென்ன? என்பதை உணர்ந்தாலே அவ்வாழ்வில் இயல்பாய், விருப்புடன், விடாமுயல்வுடன் ஈடுபடமுடியுமாதலின், அவைகள் பற்றியும் பேசுதல் இயல்பாம்; அவ்வழி செல்கின்ற தன் அனுபவம், இயல்புகள் (தகைமை-இழிநிலை) பேசப்படுவதால், நாம் இதனை இறைவன் - அடியார்; அடியார் - அடியார்; சிதம்பரம் சுவாமிகளாம் அடியார் என்னும் நிலைகளில் காண்பது இன்னும் எளிதாக இவ்வியல்புகளை நன்கு புரிதற்கு உதவும் எனலாம்.

### 2.1 இறைவன் - அடியார்

திருப்போரூர் முருகப்பெருமான் ஆலயப் பணிக்காய் வந்தவர் முருகப்பெருமானே குருவாக வந்து வழிகாட்ட கண்ட சிதம்பரம் சுவாமிகளின் மாலை இலக்கியம் மொழிவன பலவாம்.

### 2.1.1 இறை வடிவம்

முருகன் என்றாலே அழகு என்பர். முருகப் பெருமானோ பேரழகன் மட்டுமல்ல அழகிற்கே இலக்கணம் எனக் கூறப்படும் மன்மதனே வணங்கும் அழகனுமாம். 'வேள் பணிந்த பேரழகா' (1:3); கரும்புச் சிலையானும் கைகூப் பழகாய் (85:1) விளங்குபவன், பன்னிரு வலிய தோள்களுடன் அருளுடைய ஆறுமுகங்கள் (49); புயல் போலும் கருணை பொழியும் விழிகள் (41:1); வேலேந்திய கைகள்; காதுகளில் அணிந்த குண்டலங்கள் 'பவளக் கொடியாம் பன்னிரு ஊசல்மேல் ஊரும் சூரியன் என அழகுற ஆடுகின்றன (66); சூலமலர்மாலை விளங்குகின்றான். அணிந்தவன்; மாணிக்க சதங்கைகள் அணிந்த கால்கள் (31); மயிலேறும் தாள்கள். அவன் மயிலேறும் அழகு தோற்றத்தை 'நீலக்கடலில் தோன்றும் சூரியன் போல மயிலாம் குதிரையேறுபவன் (30); மரகத மலையில் தோன்றும் மாணிக்க வெற்பு (59) என்றெல்லாம் அழகுற காட்சிப்படுத்த காணலாம்.

முருகனின் சேவல் கொடியோ உயிர்களின் அறியாமையை விலக்கி அறிவாம் சூரியன் மலர்வைக் குறிக்க, வாகனமாய மயிலோ விடமுள்ள பாம்பினையே அடக்கும் (தீமையடக்கல், அழிப்பு) பான்மையது என்பதைக் கொத்தி 'அரவமணிப் பைதூக்கி யாடுமயி லேறி' (77:2-3) என்பதனால் உணரலாம். தீமையழிப்பு, நல்லவர் காப்பென வேலும் கையில் திகழ்வதை அசுரர்களை அழிப்பதில் எமனாய், ஒளியில் (இருள் அறியாமை போக்குவதில்) சூரியனாய், குளிர் மதியாய் மதியாய் (அருள்வதில்), விரைந்து சென்று மீண்டு வருவதில் மனமாய் விளங்குகிறதாம் (71) என உறுப்புக்களின் வழி அழகை, அருளை மொழிந்தவர், அவன் உருவே அருளின், அன்பின் வடிவாம் என்றாற்போல் 'ஆணிப்பொன், அருள்கடல், மாணிக்கம், விரும்பி பணிவார்க்கு இருள் போக்கும் சூரியன், போரூர்க்கணியாம் தெய்வம், ஆனந்தமாகடல், ஆராத அமுதம், மோனசுடர், முத்தியின் வித்து (60-61); தேவர்களுக்கு இனிமையானதாய், அசுரர்களுக்குக் கசப்பானதாய், உமைகரத்தில் அடங்குவதாய், சமயத்தலைவர்களால் உணரத் (முகர) தக்கதாய், கலைவல்ல

அறிஞர்கள் போற்றும் கனியாய் விளங்குகிறான். அடியார்களுக்கு மன இருள் போக்கி ஒளி தரும் விளக்கு (3); மனக்கவலை மாற்றும் மாமருந்து (22); கரும்பு சாறு கட்டி (38); எங்கு இருந்தாலும் என் மனதுள் இனிமை தரும் செட்டியும் (77); போரூர் செட்டியும் அவனே. உயிர்களை மயக்கும் மாயையை அகற்றி அறிவளிப்பதில் தாயைப் போன்றவன். கேட்டதெல்லாம் தரும் கேடில்லாத தந்தை, வீட்டு நெறிகாட்டும் வியன்குரு கண்ணாக மனதில் தோன்று ஒளி காட்டும் சிற்பரனும் (இறையும்) அவனாம் (27). இத்தகையவன் துன்பந்தரும் சொற்களைக் கூறான்; வருந்தும்படி பாரான்; நலம் பெறவே நினைப்பான்; எம்மை சோர்வடைய செய்யான்; நல்வாய்மையன் (79); குறைகளைக் களையும் கோ; குணமளிக்கும் தெய்வம்; மறைகள் காட்டும் மணி; குற்றமில்லாத அறிவுக்கடல்; தெருள் ஒளி (96) விருப்புடன் தொடர்பவர்களுக்கு அவர்களைத் தொடரும் பிறவியை போக்குபவன்; அன்பும் இன்பும் உடையவன்; பிழையே செய்யினும் குணமாய் ஏற்கும் பரம் பொருளுமானவன் (48). அவன் காட்சி உண்டாயின் எமபயமும் இல்லை; வீட்டின்பமும் கிட்டும். அவன் தாள்களோ அடியார் கைகளில் ஏந்தும் தாமரையாம்; கண்களுக்கு இனிய காட்சியாம்; அடியார் தலைகளுக்குச் சிறந்த முடியாம்; (72); தாள் பணியின் இந்திரன் செல்வங்களும் பிறவும் தாமே வந்தடையும் (1); அது ஆனந்த கொழுந்தேனாம் (17); மலைக்குகையில் இருப்பினும், காயகல்பமே உண்டாலும், கலைகள் யாவும் முழுமையாகக் கற்றாலும் பயனின்று; ஆயின் அவன் பாதங்களைப் பணியின் நற்கதியாம்; தவம், அழியா மருந்து, கலைகள் போல்வ தராத நற்கதியை அவன் தாள்களே அளிக்கும் (37).

அவன் பெயரே மந்திரம். 'குமாரநம' எனக் கூறினால் தேவர் உலகையே ஆளலாம்; எமபயமும் இல்லை; பிறவியும் கிடையாது; அவன் தாள்களையே அடைவார் (47); அவன் வெண்ணீறணிபவர் பெறும் பயன்களும் மிகப்பலவாம். முத்துப்பல்லக்கேறும் பேறுடையவராய், மதயானையுடையவராய், தாவும் குதிரைகள் ஊரும் தேரில் செல்லும் சிறப்பினராய் அரியணை ஏறும் பேறுடையவராய் உலகாளுவராம் (45). முருகனின் போரூர் சன்னதி சேரின் பேய்களால் உண்டாகும் துன்பங்கள் போம்; பித்தம், தீராத நோயும் தீரும்; துன்பு போக நன்னிதியாய் நலமும் சேரும் (46).

திருஞான சம்பந்தராய் அவதரித்தவன் அக்காலத்தும் கணக்கில்லாத அடியவர்க்கு வீட்டின்பம் அருளியவன் (2:1-2)) அவனுடைய திருப்போரூரும் இயற்கை மற்றும் அருள் வளங்கள் நிரம்பிய ஊராம். நீர்வளம், சோலைகள் சூழ்ந்த ஊர்; நீதி தழைக்கும் அருட்போரூர்; அங்கு வர மனமும் மகிழும் (84); ஒண் போரூர், அப்போரூரின் அணியாம் தெய்வம் முருகன் (60) சுந்தரனுமாம்.

### 2.1.2 உறவுகள்

அடியார்க்குத் தாயாய், தந்தையாய், குருவாய், தெய்வமுமாய் விளங்கும் முருகப்பெருமானும் உறவுகளால் சூழப்பட்டவனே. அவன் உறவுகளை மொழிகையில் அவ்வுறவுகளின் உருவம், பண்பு, செயல், தனித்தன்மைகளையும் சேர்த்தே கூறுகின்றனர். உறவுகளால் பிணையப்பட்டவனே பிற மனிதர்களின் உணவர்வை, உறவைப் புரிந்து கொள்ள முடியும் என்பதாலும், இவ்வுறவு நிலை கூறல் பக்திப்பாக்களின் கூறாக

அமைந்துள்ளது எனலாம்; மட்டுமல்ல உறவுகளால் சூழப்படுபவருக்குத் தான் 'குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள் மிகை நாடத்' தெரியும் என்பதை உணர்வார் என்னும் மனித மனம் உணர்வதாயும் இதனைக் கொள்ளலாம்.

மலையரையன் மகள் உமா பெற்ற கன்றே முருகனாம். இவன் பொருப்புச் சிலையானாய் (மேருலை வில்லாக ஏந்தியவன்)மானை கையில் வைத்த சிவமகனுமாம்; காங்கேயன்; ஆனை முகத்தானுக்கு இளைய ஆறுமுகன்; திருமாலின் மகன் இதனை 'மூதண்ட கூட' முகடு தொட தாள் நீட்டுங் கோதண்ட பாணி குலமுருகன் (67:1-2); எனும் சொற்கள் காட்டும். வள்ளி, தெய்வானை என்னும் இருவரின் கணவனுமாம். உறவில் மகிழ்பவன் என்பதைக் கண்ணுதலான் தந்தகரும்பு; மையிட்ட கண்ணார் இருவர் கலந்த புயத்தழகன் (89:2-3) என்பதனாலும் உணரலாம்.

### 2.1.3 செயல்கள்

அடியவரைக்காத்தலும், தீயவர்களை அழித்தலும் இறைவனின் அருள் மற்றும் மறச்செயல்களாகக் கூறுவது வழக்கம். தீயவர்களை மட்டுமன்றி தீய பண்புகளைப் போக்குவதும், அழிப்பதும் அவன் இயல்புகளாம். இதனை இறைவனின் பேரருட் பெருங்கருணையாய், உயிர்களை, அடியார்களைக் காக்கும் கடனாகவும், அடியார்கள் உணர்தலுமுண்டாம். சிதம்பரமுனிவரிடமும் இத்தகைய உணர்வையே காண்கின்றோம். முருகன் செயலை அவன் கையிலிலுள்ள வேலுக்கு ஏற்றிக் கூறுதலும், அவற்றின் செயல் கூறுதலுமாய், 'கடலை உறிஞ்சும் வேல் (39); சூரியனாய், காலனாய், மதியமாய், மனமாய் செயல்படுத்தும் வேல்; விடமுடைய நாகத்தையே அடக்கும் மயில் வாகனம் போல்வ கருணை பொழியும் விழியான்; பொய்யாக கருணை காருமானவன் - அகத்தியருக்கு குருவாய் அமர்ந்து மும்மலங்களைப் போக்கி அருளியவன் (64); திருஞானசம்பந்தராய் எண்ணிலடங்காத அடியவர்க்கு 'வீட்டின்பம்' அருளியவன். கடலை கலக்கி, மலையைப் பொடித்து, வலிய சூரனை அழித்தவன் (431-3) என்னும் செயல்கள் காட்டக் காணலாம்.

### 2.2 அடியார் - அடியார்

தனிமரம் தோப்பாகாது: என்பார்கள். ஒத்த சிந்தனையுடைய பலர் சேர்ந்து இருக்கும் போது கொள்ளும் கருத்தும், செய்யும் செயலும், தெளியும் உறுதியும் படுமாதலின், அடியார்வர்ழவில் தொண்டருடன் பழகுதலைச் சிறப்பாக குறிப்பர். அடியாரைக்கண்டால் ஆண்டவனைக் கண்டது போல், தொண்டர் குலம் பெருமை பேசலும் அரிதே எனப் பலவாறாகக் கூறுப. சிதம்பரம் சுவாமிகளும் அடியார் பற்றி பலபட பேசுகின்றார். இறைவன்பால் அன்பு கொண்டு அவளிடம் தன்னை ஒப்புவித்தவர்கள். சரணடைந்தவர்கள், அடைக்கலம் அடைந்தவர்கள் அடியார்கள் எனப்படுவர். யாவும் இறையாய்க் காண்பவர், உணர்பவர், வாழ்பவர் அடியாராம்.

சிறந்த பொருளை இறைவனுக்குப் படைத்தல் இயல்பு, காணும் உலகும், பொருட்களும் உன்னால் இயன்றதன்றோ; நீ அறிந்ததன்றோ? அங்ஙனம் இருக்கும் போது அவற்றின் இயல்பை உணர்ந்து தான் உனக்குப் படைக்கின்றோம். ஆயின் இது எச்சிலாமோ எனும் ஐயம் எழுகின்றது என்றவர், (5:1-2) விருப்பமுடன் பணிபவரே மெய்யன்பர் (38:1); சரவணப் பொய்கை நீரில் மூழ்கி அன்புடன் குராமலர் அணிந்த பாதங்களை விரும்பி

கைக்கூப்பியவாறே பரகுருவே என்று வாழ்த்தி போரூர் வந்தவர் (50:1-3); உள்ளத்தில் உவமைகூற வியலா ஆனந்த வெள்ளமுடையவர், பொய்விட்ட புனிதர் (89:2) அடியராம். அடியாரை வணங்குவது ஆண்டவனை வணங்குவதாம் என்றாற் போல் இத்தகு அடியாரைப் புகழ்ந்துமனமே, நினைப்பாயாக என்கிறார்.

இறையடியார்களுக்குத் தொண்டு செயலும் இறை வழிபாடாகவே கருதப்பட்டு வந்தமையையே மெய்யடியார் கட்கு அடிமைத் தொண்டு செய்யவில்லை (91) எனும் முனிவர் துயராலும் உணரலாம். விருப்பமுடன் இறைவனை வணங்குபவரே மெய்யடியாராம் (38). இறைவனை நினைகையில் உள்ளத்தில் இன்பம் உருவாகும். அடியார்க்கே நினைக்க நினைக்க உள்ளத்தில் இன்பூறும் கரும்பு போரூரனாம். அவன் பரமாதலின் விண்ணவர்கள் போற்றி அடிபணிந்து நின்று தொழும் போரூரன் தாமரை புயங்களாம் (17:2-4). இந்திரன், சூரியன், சந்திரன் போன்றோர் பெற்ற சிறப்புக்கள் முருகனருளே; முத்துக்களை மழையாகப் பொழியும் இந்திரனுக்குக் கற்பக மரம் கீழ் வாழும் அரசுரிமை வழங்கியவன் (48), சூரியனின் இருளைப்போக்கும் தன்மைக்கும் (51), சந்திரனின் குளிர்ந்த இயல்புக்கும் (52), முருகன் அருளே காரணம். அவனை, வழிபட்டு அவர்கள் பெற்ற பேறுகளே இவைகளாம்.

## சிதம்பரம் சுவாமிகளின் அடியார்பாங்கு

உலக வாழ்வில் பற்றின்றி இறையடியாராய் வாழ்ந்தவர் சிதம்பரம் சுவாமிகள். அன்னையை வழிபட்டவர்; குமரனின் சமயத்தை ஆலயத்தை வழிபாட்டுக்குரியதாக்கும் முயல்வில் யுத்தபுரியாம் திருப்போரூர் வந்தவர்; தம் அன்பாலும், இறை வழிபாட்டுணர்வாலும், இறையருளாலும் திருப்போரூரை திரும்பிப் பார்க்க செய்தவர். ஒன்றன் இயல்பை முழுதாய் உணர அதைப்பற்றிய அறிவு, பழக்கம் தேவையாதலின், இவரும் இறையருள் பெற்றறமையால், அதற்கு முந்தைய நிலை பேசுவார்போல் பக்திபாக்களின் இயல்புக்கேற்ப தன்னிழிப்பு மொழிவதுடன் வலிமையுணர்வோடு வேட்பதுடன் அருள்வது கடனென அறிவுறுத்தவும் செய்கின்றார். முருகன் அழகு தோற்றத்துடன் அவனைச் சார்ந்தயாவுமே 'பூவோடு சேர்ந்த நாரேன விளங்குவதையும் (அருள்மறச் செயல்கள்) காட்டுகின்றார். அருட்மறச் செயல்கள் என்ப இறை கருணை வெளிப்பாடாகவே விளங்குவதால் இறை அவதாரமும், திருஞானசம்பந்தர் நிலையும் அடிப்படையாக அமைவதைச் சுட்டுவதுடன், உண்மை அடியார் இயல்புகள், அடைவார் அடையும் இகபர நலன்கள், வளங்கள், உறவுகளால் சூழப்படும் நிலைகளும் கூறுகின்றார். இயக்கமில் பேரானந்தம் அடையலாம் என்றவர் உலக பழிப்பு மொழியவில்லை.

## முடிவுரை

இறையடியாராய், மக்கள் வழிபாட்டின் ஆலயத்திப் புதுப்பிப்பவராய், சமய வாழ்வில் சாதாரணமக்களையும் ஈடுபடுத்துபவராய், அற்புதங்கள் செய்பவராய் வாழ்ந்து வழிகாட்டியவர் சிதம்பரம் சுவாமிகள். திருப்போரூர் முருகன் மீது பாடிய மாலை இலக்கியமாய இது அவரின் பக்தியுணர்வின் வெளிப்பாடாக மட்டும் அமையாமல், பயில்வார்க்கும், கேட்பார்க்கும் வாழ்வின் ஒளி விளக்காய், உற்றுழி உதவும் பாங்காய் அமைவதுடன் யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்றாற்போல் தம் சமய் வாழ்வையே மக்கள் வாழ்வியல் உணர்த்தும் வழித்துணையாகவும் விளங்குவது சிறப்பாம்.

